# श्री त्रिपुरारहस्यम्
## (ज्ञानखण्ड)



# ஸ்ரீ திரிபுரா ரகசியம்
## (ஞானகாண்டம்)

வெளியீடு : ஸ்ரீ தத்தாச்ரமம்
சேந்தமங்கலம்.

# त्रिपुरारहस्यम्

# திரிபுரா ரஹஸ்யம்

தமிழ் விரிவுரை :

**வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி**

**ஸ்ரீரங்கம்**

வெளியிட்டோர் :

**ஸ்ரீ தத்தாசிரமம்**

P.B. NO. 1, சேந்தமங்கலம் - *637 409.*

உ Ph: 22115

Sri Chandramouleeswaraya Namaha

Sri Sankara Bagavadpadacharya Paramparagatha

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi Jagadguru

**SRI SANKARACHARYA SWAMIGAL**

**SRIMATAM SAMSTHANAM**

1, Salai Street, Kancheepuram - 631 502.

CAMP : காஞ்சீபுரம் DATE ..................

நமது அத்யந்தப்ரிய சிஷ்யரான சிமிழி வைத்ய ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் விஷயமாக நாராயண ஸ்மரணம் செய்யப்படுகிறது.

ஸ்ரீ தத்தாத்ரேயர் பரசுராமருக்கு உபதேசித்த ஸ்ரீ திரிபுரா உபாஸனை என்ற சாக்த வழிபாட்டு முறையை ஹாரீத மஹர்ஷி திரிபுரா ரகஸ்யம் என்ற நூலாகத் தொகுத்துள்ளதில் ஜ்ஞானகண்டம் என்ற சாக்த தத்துவ விளக்கப் பகுதியை மூலத்துடன் தமிழில் மொழி பெயர்த்து விரிவான விளக்கமும் தந்து சேந்தமங்கலத்திலுள்ள ஸ்ரீ தத்தாசிரமம் மிகச் சிறந்த நூலாக வெளியிட்டுள்ளதை அறிந்து சந்தோஷிக்கிறோம்.

தேவியே பரப்பிரம்மம். அவளே உலகைப் படைத்துக் காத்துத் தன்னுள் லயமடையச் செய்கிறாள் என்று கண்டு, அவளையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு உபாசிப்பது ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் அமைத்துத் தந்த ஷண்மத வழிபாட்டு முறைகளில் ஒன்றான சாக்த சம்பிரதாயமாகும். திரிபுரோபநிஷத், பாவனோபநிஷத் முதலிய உபநிஷத்துக்களில் தனித்தும் கேனோபநிஷத்தில் சிறப்புடனும் தேவி உபாசனையின் தத்துவ விளக்கம் தரப்பட்டுள்ளது.

அகஸ்தியர் இயற்றிய சக்தி ஸூத்ரம், பரசுராமர் இயற்றிய கல்ப ஸூத்ரம், தேவீ பாகவதம், பிரம்மாண்ட புராணத்தின் லலிதோபாக்கியானம், மார்க்கண்டேய புராணம் இவற்றில் விரிவாகத் தேவியின் பெருமை விளக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ பகவத் பாதர்களின் பரமகுரு ஸ்ரீ கௌடபாதாசாரியார்களின் ஸ்ரீ வித்யா ரத்ன ஸூத்ரம், ஸுபகோதய ஸ்துதி, ஸ்ரீ பகவத் பாதர்களின் ப்ரபஞ்ச ஸாரம், ஸௌந்தர்ய லஹரி, ஸ்ரீலலிதாத்ரிசதி பாஷ்யம், ஸ்ரீ வித்யாரண்யர் எழுதிய ஸ்ரீ வித்யார்ணவம் முதலியவற்றில் தரப்பட்டுள்ள தத்துவங்களை புராண சைலியில் எளிதாக மனத்தில் பதியும்படி திரிபுரா ரகஸ்யம் சிறப்பாகவும், எளிதாகவும் விளக்குவதால் தேவியைப் பற்றிப் பாவனையுடன் கூடிய உபாசனை திடம் பெற இந்நூல் பெரிதும் உதவும்.

இதற்கு நமது பிரிய சிஷ்யரான சிமிழி வைத்ய ராதாகிருஷ்ண சாஸ்திரி தெளிவான தமிழாக்கமும் விளக்கமும் தந்திருப்பது மேலும் இதனை எளிதாக்கியுள்ளது. இதனைப் பிரசுரம் செய்கிற ஸ்ரீ தத்தாசிரமத்தின் முயற்சி மேலும் பல நூல்களை வெளியிட்டு உதவுமாறு வாழ்த்தி ஆசீர்வதிக்கிறோம்.

நாராயண ஸ்ம்ருதி:





# முன்னுரை

*ஸ்ரீ குருப்யோ நம :*

ஸ்ரீ தத்தபிரஸாத பத்திரிகையில் முன் தொடர்ந்து வெளியான ஸ்ரீ திரிபுரா ரஹஸ்யத்தின் ஞான கண்டப் பகுதி புத்தக உருவில் வெளியாகிறது. குருவரர் ஸ்ரீ கிருஷ்ணானந்தப்பிரம்மேந்திர ஸ்வாமிகளின் திருவருள் இதனை அமைத்துத் தந்துள்ளது. அவர்களுக்குத் திரிபுராரஹஸ்யத்தின் தத்துவ விளக்கத்தில் எல்லையற்ற ஈடுபாடு. ஒவ்வொரு அத்தியாயமும் வெளியானதும் அதிலுள்ள சாரத்தை விளக்குவதில் அவர்களுக்கு இருந்த ஆர்வம் அளவற்றது. அவர்கள் காணவிரும்பிய இந்த நூலமைப்பு, இன்று பிரம்ஹ பூதகர்களாக ஸ்ரீ தத்தாசிரமத்தில் அதிஷ்டானம் கொண்டுள்ள அவர்களது திருவடிகளில் ஸமர்பிக்கப் பெறுகின்றது. இது நம் அனைவரது மேன்மைக்கும் காரணமாகும்.

அத்வைதமான பரம்பொருளைப் பல கோணங்களில் விரித்துக் கூறுகின்ற புராண இதிஹாஸங்களிடையே திரிபுராதேவியின் பரம்பொருளியல்பை சாக்தாத்வைத முறையில் மிகத் தெளிவாக எளிய நடையில் கதைகளும் உபகதைகளுமாக, நேரிடையுபதேசமாக காட்டுகிற மாபெரும் நூல் இந்த திரிபுராரஹஸ்யம். இதன் மாஹாத்ம்யம், ஞானம், சரியை என்ற மூன்று கண்டங்களில் சரியாகண்டம் கிடைக்கப் பெறாதது பெருங்குறையே. மற்றிரு கண்டங்களில் காணப்பெறுகிற விளக்கங்களை அறிந்தவர் சரியை கண்டத்தில் ஞானம் பெறத்தக்க சரியை என்ற பயிற்சி முறை விளக்கங்களையும் பெற விரும்புவது இயல்பே எனினும், தேவியின் திருவருள் தான் அதை வெளிப்படுத்தவேண்டும். அதற்கான திருவருளை வேண்டி நிற்போம்.

திரிபுராரஹஸ்யம் - ஞானகண்டத்தைப் பற்றிய கண்ணோட்டம் பெறுவோம்.

“நான்” இருக்கும் வரை “உலகம்” உண்டு. “உலகம்” உள்ளவரை “நான்” உண்டு. இந்த “என்னை”யும் “உலகை”யும் பிணைக்கின்ற “ஒன்றும்” உண்டு. பிணைப்பதும் அதுவே! பிணைப்பை நீக்குவதும் அதுவே. இப்படி ஒரு புதிர் இங்கு விளக்கம் பெறுகிறது.

அது எது? அது ஒருமுகம் பார்க்கிற கண்ணாடி. அதில் ஈ எறும்பு போன்ற நுண்ணியதும், வானம் கடல்போன்ற மிகப்பெரிதும் பிரதிபலிக்கும். உலகமே தெரியும். வடிவம் இயக்கம் எண்ணம் என்ற மூன்றையும் முப்பரிணாமத்தில் காட்டும். வடிவில் அகலம் நீலம் கனம் என்று இயக்கத்தில் இயக்கம் இயக்குவது, இயக்கப்பெறுவது என்று, எண்ணத்தில் எண்ணம் எண்ணுவது எண்ணப்பெறுகிறது என முழுமையைக் காட்டுகிற முப்பரிணாமங்கள்.

கண்ணாடி தன்னுள் தெரிவது மெய்ப்பொருளே என நம்பச்செய்யும். பிரதிபிம்பம் எனத் தனித்துக் கண்டால் கண்ணாடி தெரியும். பிரதிபிம்பத்தையே கண்டால் கண்ணாடி தெரியாது. கண்ணாடி எனக் கண்டால் பிரதிபிம்பம் மறையும்.

பிரதிபிம்பம் காணவே கண்ணாடியிடம் செல்வான். கண்ணாடியைக் காண அல்ல. அங்கு பிரதி பிம்பம் கண்ணாடி என்று இரண்டு தெரிகிறது. பிரதிபிம்பத்திற்கு ஆதாரம் கண்ணாடி. அங்கு கண்ணாடி பிரதிபிம்பம் என இரண்டு பொருள்களில்லை. கண்ணாடி மட்டுமே உள்ளது. பிரதிபிம்பமின்றி கண்ணாடி உண்டு. கண்ணாடியின்றி பிரதிபிம்பம் தனித்தில்லை. உண்மையானது கண்ணாடி என்று புரிகிறது. கண்ணாடி தான் பிரதிபிம்பமாகத் தெரிகிறது.பிரதிபிம்பம் கண்ணாடியாகத் தெரியவில்லை.அப்படியாயின் கண்ணாடியும் பிரதிபிம்பமும் ஒன்றா?



உண்மையில் இரண்டாக இருந்து ஒன்றாகத் தெரிவதாகக் கூறமுடியாது. இருப்பது ஒன்று. இரண்டாகத் தெரிகிறது. இரண்டில் எது முழு உண்மை? கண்ணாடி தான். பிரதிபிம்பம் அதில் தெரியுமளவில் உண்மை எனக் கொள்ளலாம்.

கண்ணாடியில் தெரிகிற பிரதிபிம்பம் கண்ணாடியைப் பாதிப்பதில்லை. நெருப்பைப் பிரதிபலிக்கும் போது கண்ணாடியில் சூடில்லை. மகிழ்ச்சியும் துன்பமும் கோபமும் கொண்டவன் பிரதிபலிக்கக் கண்ணாடி அவற்றை உணரவில்லை. பிரதிபிம்ப ஆதாரமான கண்ணாடியின் நிலை உணராமல் மகிழ்ச்சியும் அழகும் ததும்புகிற தன் முகத்தை அதில் கண்டவன் மேலும் மகிழ்ச்சியுறுகிறான். தன் முகமாகவே கண்ணாடியைக் காண்பது தான் விந்தை.

பரம்பொருள் தேவி, சிவன், விஷ்ணு, எனப் பல பெயர்களில் அறிமுகமானது. அதுவே உலகின் ஆதாரம். அதில் அடங்கியுள்ளமையால் உலகம் ஆதேயம். ஆதாரமும் ஆதேயமும் வெவ்வேறாக இருப்பது உலகியல்பு. "வீட்டில் நான்" எனில் வீடு ஆதாரம், நான் ஆதேயம். "வெல்லத்தில் இனிப்பு" எனும் போது ஆதாரமான வெல்லமும், ஆதேயமான இனிப்பும் வெவ்வேறல்ல எனத் தோன்றும். இனிப்பற்ற வெல்லமோ, வெல்லத்தை விட்டுத் தனித்த இனிப்போ காணப்பெறாது. எனினும் வெல்லத்தைப் பார்த்தோ முகந்தோ வெல்லம் என உணர முடியும். இனிப்பைச் சுவைத்து மட்டுமே உணரமுடியும். இந்தப் பாகுபாடு ஆதாரமான வெல்லத்தையும் ஆதேயமான இனிப்பையும் தனித்துக்காட்டும். கண்ணாடியும் பிரதிபிம்பமும், பரம்பொருளும் உலகமும் காட்டுகிற ஆதார - ஆதேய நிலை எத்தகையது? சிறிது விளக்கம் தேவை.

பரம் பொருளை இனித் தேவி என்றே குறிப்பிடுவோம். தேவியே உலகின் ஆதாரம். இந்த ஆதாரநிலை சற்று விசித்திரமானது. தேவியைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அவளிடம் உலகம் தோன்றுகிறது. உலகின் மூல காரணம் அவளே! அவளே இந்த



உலகம். உலகைக்காட்டிலும் வேறுபட்ட நிலையிலும் அவள் இருப்பாள். இது முன்னுக்குப் பின் முரண்பட்டது - விசித்திரம் - ஆனால் மெய். முன் கூறிய 'வீடு - நான்' நிலையில் தனித்து உணரப்படுபவள் அல்ல. 'வெல்லம் - இனிப்பு' போன்று தனித்தும் ஒன்றாயும் நிலைமாறிக் காணப்படுபவளல்ல. கண்ணாடியும் பிரதிபிம்பமும் போன்ற ஆதார - ஆதேய நிலை கொண்டவள்.

நமக்குக் காட்சிப் பொருளாவது லோகம் - உலகம் (லோக்யதே - காட்சிப் பொருளாகிறது. அதனால் லோகம்.) காண்பவனிருந்தால் தான் உலகமாகிய காட்சிப் பொருள் இருக்கும். 'நான்' காண்பவன். 'நான்' உள்ளவரை காட்சிப்பொருளான உலகம் உண்டு. உலகம் என்று ஒன்று உணரப்பெறாவிடில் 'நான்' என்ற நிலையும் உணரப்பெறுவதில்லை. கண்ணாடியில் தெரிகிற என் முகம் முதலானதனைத்தும் அதனைப் பிரதிபிம்பமாகக் காண்கிற 'நான்' உள்ளபோது தான். நான் இல்லை எனில் உலகம் இல்லை. அந்நிலையில் 'நான்' ம் 'உலகம்' ம் எங்கு சென்று மறைந்தன? இவை இரண்டையும் தனித்ததாக உணர்த்திய - அவ்வுணர்விற்கு மூலமானதொன்றில் மறைந்துவிட்டன. அந்த மூலமே சித் சக்தி எனும் தேவி.

உலகத்தை உலகமாகப் பார்க்கிற நான் மறைந்தாலும் உலகமில்லை. நான் உலகமாக அதனைப் பார்க்காவிடினும் உலகமில்லை. கண்டதே காட்சி, கொண்டதே கோலம்.

கண்ணாடியில் என்னைப் பிரதிபிம்பமாகக் காண்கிறேன். என்னை அழகுபடுத்த அதில் காணப்படுகிற என்னை பிம்பமாக்கி, காண்கிற நான் பிரதிபிம்பமாக்கப்படுகிறேன். என்னை அலங்கரித்துக் கொள்ள அது தேவைப்படுகிறது. கண்ணாடியிலுள்ள நான், வெளியேயுள்ள நானை அலங்கரிக்க உதவுகின்றேன். வெளியேயுள்ள நான் என் முகத்தைக்காண கண்ணாடியினுள் தெரிகிற நானைக் காண வேண்டும். என்னைக் கண்டு மகிழ்ச்சியுறக் கண்ணாடி தேவை. கண்ணாடியினுள்



பிரதிபிம்பமாகக் காணப்பெறுகிற நான் தான் லோகம் - காட்சிப் பொருள். அதற்கு வெளியேயுள்ள நான் காட்சிப்பொருள். கண்ணாடியில் உள்ள என் பிரதிபிம்பத்தின் மூலம் என் நிலை காண்கிறேன். அப்போது அந்த பிரதிபிம்பத்திற்கு வெளியே உள்ள நான் காட்சிப்பொருள். ஆக வெளியே நிற்கிறவனும் கண்ணாடியினுள்ளிருப்பவனும் ஒருவனுக்கு மற்றவன் காட்சிப் பொருளாவதால் காண்பவனிருக்கும் வரை தான் காட்சிப்பொருள் நிலை என்பதால் இரண்டுமே மெய்யல்ல. இரண்டு நிலைகளையும் உணர்பவனே உண்மையான நான்.

தேவியை உணர இந்த நான் வேண்டும். இந்த என்னை உணரத் தேவியின் அருள் வேண்டும்.

நிர்மலமான கண்ணாடியில் பிரதிபிம்பத்தின் மூலமான பிம்பத்தின் முப்பரிமாணம் உணரப்பட்டாலும் அதில் மாற்றமில்லை. முப்பரிமாணத்தைக் காட்ட கண்ணாடி பருப்பதோ இளைப்பதோ இல்லை. பிரதிபிம்பத்தின் உணர்வில் முப்பரிமாணம் தெரிகிறது. சித்சக்தி கண்ணாடி போன்றது. ஒருவித மாறுபாடற்ற சித்சக்தியே வடிவானவர் ஆத்மா. ஆத்மாவிடத்தில் சித்தின் சிறப்பால் சித்சக்தியால் மட்டுமே உணரக்கூடிய சேத்யம் துலங்குகிறது. (சேத்யம் - பேரறிவால் உணரக் கூடிய பொருள்) சித்சக்தி கண்ணாடி. அதில் சேத்யமான உலகம் தென்படுகிறது. உலகம் பிரதிபிம்பம். அதற்கு பிம்பம் மூலமாகும். சித்தைக் காட்டிலும் சேத்யம் வேறுபட்டதல்ல. சேத்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட சித்சக்தி தனித்து உள்ளது.

கண்ணாடியில் பிரதிபிம்பமாக உள்ள நான் லோகம் (காட்சிப்பொருள்) ஆனேன். அதில் என்னைப் பார்க்கிற உணர்விற்கு வெளியில் நின்று காண்கிற நானே லோகமாக காட்சிப்பொருளாக ஆனேன். கண்ணாடிக்கு வெளியில் காண்பவனாக, கண்ணாடிக்குள் காட்சிப்பொருளாக, அதனால், என்னைக் காண்பவனாக ஆகக் காண்பவனே காட்சிப் பொருளாகவும் காண்பவனாகவுமாகத்



தோன்றுகையில் எது உண்மை 'நான்'? இரண்டிலும் காண்பவனே 'நான்'. காட்சிப்பொருள் 'உலகம்'. காண்பவன் மட்டுமே உண்மை. காட்சிப்பொருள் காணுமளவில் உண்மை. நானாக நின்று உலகையும் உலகமாகி என்னையும் உணர்த்துபவள் தேவி.

தேவியைக் காண, காண்பவனான நானை உணர்வதும், அந்த நானை உணரத் தேவியை உணர்வதும் அவசியம். இது ஒரு புதிர். 'நான்' காண்பவனானால் உலகம் தெரிகிறது. தேவி தெரிவதில்லை. உலகம் தெரியும் வரை தேவி உணரப் பெறுவதில்லை. 'நான்' உணரப்பெற்றால் காட்சிப்பொருளானால் தேவி தெரிவாள். தேவி, நான், உலகம் என்ற மூன்றையும் தற்போது உணர்வது போல் உணராமல் வேறு நோக்கில் காணவேண்டும். அது எப்படி? பரசுராமருக்குத் தத்த பகவான் காட்டிய விளக்கம். காட்டுகிற கண்ணோட்டம் இதனை விளக்குகிறது.

நான் உலகை நாடுகிறேன். அதனால் எனக்குச் சுகமும் துக்கமும் மாறி மாறி வருகின்றன. நான் விரும்புவது சுகம் மட்டுமே. துக்கத்தைத் தவிர்க்க முயல்கிறேன். உலகத்தில் தான் சுகம் உள்ளதென்று திடமாக நம்புகிறேன். தத்தாத்ரேயர் இங்கு ஒரு வேறு பாதை காட்டுகிறார்.

சுகம் என்பது என்ன? அது எங்கு உள்ளது? அதைப்பெறுவது எப்படி? சுகம், அதைப்பெற நான் நாடுகிற பொருளில் உள்ளதா? அது தான் சுகம் தருகிற பொருள் எனில் எப்போதும் சுகத்தை அது தருகிறதா? அப்படிக்கிடைக்கிற சுகம் துக்கக் கலப்பில்லாததா? துக்கம் என்பது என்ன? சுகமும் துக்கமும் கலந்தே கிடைத்தால் துக்கத்தைப் பிரிப்பது எப்படி? மற்ற உயிரினம் பெறாத - பெறமுடியாத - மனிதனால் மட்டும் பெறத்தக்க சுகம் உள்ளதா?



சுகம் என்பது சுகம் தருமென்று எதிர்பார்த்து நாடுகின்ற பொருளில் நிச்சயமாக நிலைத்திருக்கிறதா? அவ்வாறானால்,

எப்போதும் அது சுகம் தந்து கொண்டிருக்க வேண்டுமே? நேற்று சுகம் தந்தது இன்று சுகம் தருவதாகக் காணோமே ! குளிர்நேரத்தில் நெருப்பு சுகம் தருகிறது. கோடையில் அவ்வாறு இல்லையே ! அதனால் பொருளில் சுகமில்லை. வேறு எதனால் சுகம்?

சுகத்தின் பொருட்டு நான் விரும்பியது ஒன்றல்ல; இரண்டல்ல; பல உண்டு. எல்லாம் கிட்டினால் தான் சுகம்நிறைவு வருமா? விரும்பியது அனைத்தையும் பெறுவதோ, பெற்றதனைத்திலும் சுகம் காண்பதோ இடையில் தானே நேர்கிற துக்கத்தைத் தவிர்ப்பதோ, இயலாது. அப்போது சுகம் சுகம் எனக் கானல் நீரைக் குடிக்க ஓடுகின்ற மானைப் போன்று தவிக்கநேரும். அதுவே பெருந்துக்கம். துக்கத்தைத் தவிர்க்க எடுக்கிற முயற்சியும் துக்கமே.

சுகம் என்பது மனப்பால் குடிப்பது போன்று பிரமை. பேரின்பத்திற்குச் சமம் என்றோ பேரின்பமே என்றோ சிற்றின்பம் கருதப்படுகிறது. உடலால் பெறுமின்பமெனினும் மனமும் அறிவும் அதனால் நிறைவுறுகின்றன. அதில் துக்கக் கலப்பில்லையே என்று நினைக்கலாம். அதனை அனுபவிப்பதற்கு முன்னும் பின்னும், அனுபவிக்கிற கணத்திலும் காண்கின்ற துன்பம், சிற்றின்ப வெறியில் பொருட்படுத்தப்படுவதில்லை என்பதே மெய். காதலர் பெறுகின்ற இன்பமும் கற்பனையே. காதலுடன் பார்க்கப்பெறுகிற பெண் அல்லது ஆணின் பிரதிபிம்பம் மனத்தில் படிகிறது. அது கற்பனையால் அழகிய உருவமாகப் பதிகிறது. அதனால் விளைந்த உணர்ச்சிகள் சுகமாக உருவெடுக்கின்றன. மனமோ பொறியோ இப்படி உணர்ச்சி வசப்படாவிடில் அது விரஸமாகி பலவந்தமாகத் திணிக்கப்படுவதால் வெறுப்பிற்கும் காரணமாகிறது. அந்த அழகோ சுகமோ மனத்தின் கற்பனையின் விளைவே. சுகத்திற்கான மனிதனின் நாட்டமும் ஒரு பொருளில் நிலைத்ததல்ல. பொருளை அனுபவிக்கையில் பெறும் அனுபவமான சுகமும் நிலைத்ததல்ல. நிலையாச் சுகம் அழியும் போது பெறுவதும் துக்கம். அதனால் சுகத்திற்காகப் பொருளை நாடுவது வாழ்வின் இலக்காக முடியாது.



சுகம் பொருளில்லை எனில் அதனை நாடுகின்ற என்னிடமே உள்ளதா? என்னிடமுள்ளதாயின் அதனை ஏன் வெளியே தேடுகிறேன்? ஐம்புலன்களின் நுகர்ச்சி சுக உணர்வைத் தருகிறது. வெளிப்பொருளை நுகர்ந்தால் மட்டும் போதாது. அதனைச் சுகமாக உணர்வதும் இன்றியமையாதது. அந்த உணர்வு என்னிடமிருந்து வந்ததே. அதுவும் ஆத்ம ஒளியின் பிரதிபலிப்பே.

உலகெங்கும் நீக்கமற நிறைந்து எல்லாமாகி, எல்லா உணர்வுகளுக்கும் மூல உணர்வாகி நிற்கிற தேவிக்கு சித்சக்தி - ஸம்வித்சக்தி என்றோர் அறிமுகம் உண்டு. பேரொளி, பேராற்றல், பேரறிவு, பேருணர்வு, பேராநந்தம் என்ற பல இயல்புகளாகத் தன்னை விளக்கிக் கொள்கிற மஹாசக்தி அவள். காட்சி, மணம், சூடு, அழகு, ஸ்பர்சம், சப்தம், என்றவாறு பலவாறாகப் பெறுகிற ஒவ்வோர் உணர்வும், அவ்வுணர்வால் பெறுகின்ற சுகதுக்க உணர்வும், வேண்டியது - வேண்டாதது, தாழ்ந்தது - உயர்ந்தது போன்ற உணர்வு பலதும் கூட அந்தப் பேருணர்வான சித்சக்தியின் - ஆத்ம ஒளியின் வெளிப்பாடே. ஒளியால் துலங்குவதைக் கண்டே பழக்கப்பட்ட மனிதன் துலங்குகின்ற ஒளியைக் காண்பதில்லை. துலங்குகிற பொருளைக் காண்பதிலேயே நிறைவு கண்டு துலக்கம் தரும் ஒளியைக் காண விழையாதிருப்பதுபோல், சுகம் தருகிற பொருளுடன் தொடர்பு பெறுவதையே சுகமாகக் கண்டு, அவ்வுணர்ச்சிக்கு மூலமான உணர்வு எங்கு உள்ளதென்று எவரும் காண விழைவதில்லை. அறிவால் கண்டுணர்ந்த பொருளை நாடுவதை விட்டு, கண்டுணரச் செய்கிற மூல அறிவைக்காண விழையவில்லை. இது ஏன்?



இந்த மூல அறிவை. மூல உணர்வை வேறொன்றால் அறிய இயலாது. அறியப்படுவதையும், அறிபவனையும், உணரப்படுவதையும் உணர்பவனையும், கருத்தில் கொள்ளாமல் அறிவை, உணர்வைக்

காண முற்பட்டால் அது துலங்கும். எல்லா அறிவிற்கும் முப்பரிமாணம் உண்டு - அறிபவன், அறியப்படுவது, அறிவு என. இதில் அறிபவன் எனத் தன்னை முன் நிறுத்துபவன் அறிவல்ல. அறியப்படுகிற பொருள் என நாட்டம் செலுத்தப்பெறும் பொருளும் அறிவல்ல. இவ்விரண்டிற்கும் பாலமாய் - இவ்விரண்டிலும் அடங்காததாய் இவ்விரண்டின் இருக்கைக்கு முழு முதற்பயனாய் இருப்பது அறிவே. அறிவை வேறொன்றால் அறிய முடியாது. இது இன்னது என்ற உணர்விற்குப் பொருளாகாதது (இதம் ப்ரத்யயா விஷயம்) என்பர். இது அகண்டமானதால் இது எனத் தனித்துக் குறிப்பிட முடியாது. கூர்ந்து உணர்வை உணர்பவன் எங்கும் எப்போதும் நீக்கமற நிறைந்துள்ளதாக அதனை உணர்வான்.

இந்த உலகை ஜடம் சேதனம் என இருவகையில் பிரிப்பர். தேவிதான் இதனைப் படைத்தாள். தன்னிடமிருந்த பொருளைக்கொண்டே படைத்தாள். தேவி ஸத்-சித்-ஆனந்த வடிவினள். ஸத் - எப்போதும் இருக்கை - பேரிருக்கை. சித் - பேரறிவு. ஆனந்தம் - பேரானந்தம். நாமும் ஸத்-சித்-ஆனந்த வடிவினர் தாம். ஆனால் நமது ஸத்- நிலை தாய் தந்தையர் மூலம் பெற்றது, முடிவுடையது. நமது சித்-நிலை கல்வி மூலம் பெற்றது, வரையறைக்குட்பட்டது, நமது ஆனந்தம், பொருளால் பெறத்தக்கது, அளவுக்குட்பட்டது. இதனால் ஸத்-சித்-ஆனந்தநிலை தானே பெற்றதுமல்ல, நிலைத்ததுமல்ல. அதனால் கால-தேச-வஸ்துக்களால் கட்டுப்படுவதும் கூட. தேவிக்கு அம்மூன்றும் இயல்பு. வேறொன்றால் பெற்றதல்ல. அளவுக்குட்பட்டதல்ல. நம்மிடமுள்ள சித்தை உணர கண், காது முதலிய பொறிகள், மனம், அறிவு என்ற பல சூட்சும ஸாதனங்கள் பெற்றமையால் சேதனம் என்ற வகைப்படுவோம். கல், மண், மரம், செடி முதலியவை இந்த சித்தை உணர உதவுகிற பொறிகள் முதலிய சூட்சுமஸாதனங்களைப் பெறாததால் ஜடம் என்ற வகைப்படுகின்றன. ஸத் சித்தும் ஆனந்தமும் பெற்றும் உணராததால் அவை ஜடமெனில், அவற்றைப் பெற்று உணர்கிற



இயல்பு பெற்ற மனிதனும், முழுமையாக உணராததால் ஜடனாகிறான். முழுமையாக உணராதது மட்டுமல்ல, இருப்பதையும் தவறாக உணர்ந்து பிரமையால் கலங்குவதால் சேதனனிடம் குழப்பம் அதிகம் என்ற குறை ஜடத்தை விட இவனைத் தாழ்ந்தவனாக்கி விடுகிறது.

தேவியிடம் உள்ள சித்சக்தி அறிவிலியிடம் கூடப் பரவி நிற்கிறது. எந்த உணர்வும் சித் என்ற ஸம்வித்சக்தியின் விளைவே. ஆனால் உணர்வின் ஆழமும் தாக்கமும் மனிதனுக்கு மனிதன் மாறுபடும். ஞானியின் உணர்வும் அஞ்ஞானியின் உணர்வும் ஒரே தரத்திலுள்ளதல்ல.

நான் குடத்தைப் பார்க்கிறேன், குடத்தை அறிகிறேன், குடத்தைப் புரிந்து கொள்கிறேன். அதனை மறக்க முடியாதபடி மனத்தில் ஆழப்பதித்து விட்டேன். என் நினைவில் குடத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. குடமாகவே ஆகிவிட்டேன் என்றொரு அறிவலை வரிசை. நான் குழந்தையான தேவியைப் படத்தில் பார்க்கிறேன். தேவியின் உயிருடன் உள்ள பேசும் குழந்தையாக அவளைக் காண்கிறேன். அவளைப் புரிந்து கொண்டு மனத்தில் ஆழப்பதித்து, எப்போதும் என் நெஞ்சை விட்டகலாதபடி உள்வாங்கி, எந்நேரமும் அவளே நினைவாகி, நானும் அவளேயாகிவிட்டேன் என்றொரு உணர்வின் அலைவரிசை. இவ்விரு நிலைகளிலும் அந்தந்த நிலைக்கேற்ப பல்வேறு உணர்வுகள் ஏற்பட்டுள்ளன. எனினும் எல்லாவற்றிலும் ஊடுருவி எல்லா நிலைகளுக்கும் ஆதாரமான உணர்வென்பது ஒன்றே. இதை சேதநாசக்தி, சைதன்யம் என்பர். இப்படி உயிரினத்தில் அனைத்திலும் பிரதிபலிக்கிற உணர்வுகளின் மூலசக்தி சித்சக்தியாகும். அவளே தேவி.



உணர்வால் ஏற்படுகிற பல நிலைகளை உணருகிற நாம் அந்த உணர்வு இத்தகையது, இவ்வடிவிலுள்ளதென உணரமுடியவில்லை. வெளிச்சத்தால் புலப்படுகிற பொருளின் உணர்வால் வெளிச்சத்தை ஊகித்தறிவது

போன்ற நிலை. அதனால் இதம் பிரத்யய அவிஷயம் (நம் அறிவால் இது என உணர்கிற பொருளல்ல.) என்பர்.

நிர்மலமான கண்ணாடி. கோணல் மாணலற்றது. பிரதிபிம்பத்தைத் தெள்ளெனக் காட்டக் கூடியது. அதில் தெரிகின்ற பிரதிபிம்பம் கண்ணாடியுமல்ல, கண்ணாடியைக் காட்டிலும் வேறுபட்டதுமல்ல. கண்ணாடியின் பிரதிபிம்பிக்கிற தனிச்சிறப்பால் தோன்றி காண்பவன் உள்ளவரை நிலைத்துத் தனித்த உருவமாகக் காணப்படுவது. இதுபோல் எவ்வகை மாறுபாடுமற்றுத் தெளிவே தன் இயல்பாகக் கொண்ட சித் ஸ்வரூபமான ஆத்மாவிடத்தில் சித்சக்தியின் சிறப்பால், சித் சக்தியின் பிரதிபலிப்பைப் பெற்ற பொறி முதலியவற்றின் மூலம் உணர்வில் புலப்படுகிற (சேத்யப்) பொருள் துலங்குகிறது.

மங்கள சுலோகத்தில் தொடங்கி முடியும் வரை இந்த பிம்பபிரதி பிம்பவாதம், தர்பண - பிரதிபிம்பவாதம் என்ற பாதையில் தத்துவ விளக்கத்தைத் தத்தபகவான் பரசுராமருக்குப் பலகதைப் பாத்திரங்கள் மூலம் விளக்குகிறார். இந்த தத்துவ விளக்கத்தைப் புரிந்து கொண்டவனே தேவியை உண்மையான முறையில் வழிபடமுடியும். பலநாட்கள் பலதடவைகளாகத் திரும்பத் திரும்ப இந்தத் தத்துவங்களைப் பற்றிச் சிந்தித்துணர்வதே தேவியை நம்முன் தோன்றச் செய்யும்.

நம் குருநாதர் இந்நூலை வெளியிட முற்பட்டதன் முழுநோக்கமும் தெய்வத்தை உணர்ந்து தெய்வத்தை வழிபடவேண்டுமென்பதே. தெய்வத்தை உணர முற்படத் தெய்வம் நம்முன் துலங்கும். தெய்வத்தினுள் நாம் துலங்குவோம். குருநாதரின் திருவருள் இதற்கான வாய்ப்பை நமக்கு அருளட்டும்.

*22, வீரேசுவரம் அப்ரோச் ரோடு,* **ராதாகிருஷ்ண சாஸ்திரி**
*ஸ்ரீரங்கம்.* *தமிழுரையாளர்*
*24-9-1998*

|| श्री सद्गुरवे नमः ||

# FOREWORD

नमस्ते नाथ भगवन् शिवाय गुरुरुपिणे
विद्यावतारसंसिद्धयै स्वीकृतानेकविग्रह ||
नवाय नवरुपाय परमार्थैकरूपिणे
सर्वाज्ञानतमोभेद भानवे चिद्घनाय ते ||
स्वतन्त्राय दयाक्लुप्तविग्रहाय शिवात्मने
परतन्त्राय भक्तानां भव्यानां भव्यरूपिणे ||
विवेकिनां विवेकाय विमर्शाय विमर्शिनां
प्रकाशिनां प्रकाशाय ज्ञानिनां ज्ञानरूपिणे ||
पुरस्तात् पार्श्वयोः पृष्ठे नमस्कुर्यामुपर्यधः
सदा मच्चित्तरूपेण विधेहि भवदासनम् ||

The above stanzas in Guru Geetha set out the characteristics of Shiva the Guru. Sadguru Avadutha Sri Krishnananda Brihmendhra Saraswathi Maharaj was an embodiment of these characteristics.

The Sishyas of Sadguru Maharaj found in him a good host, a friend, a well wisher, a counsellor and a spiritual guide each according to his expectation. Sadguru Maharaj would come down to the level of Sishyas and elevate them to the plane that they desired. His campassion, grace and blessings were boundless and spontaneous. His was a unique persona-



lity with an individuality of his own. The activities he initiated in the Ashram - the Nithya Ganapathy Homa, Pushpanjali, Nama Sankeerthanam, the Sankatahara Chathurthi Homam and Puja bear testimony to this trait.

In consonance with this individuality Sadguru Maharaj set before his Sishyas the following as publications to be brought out by this Ashram - "Dakshina Moorthy Ashtakam, Thripura Rahasyam (Gnana Kandam) and Avadhuta Gita. This Trio was to be brought out as symbols of the philosophy & activities of this Ashram irrespective of the commercial feasibility. Dakshinamoorthy Ashtakam was published in the year 1988, when Sadguru Maharaj was physically with us. It is an edited compilation of the serial article in the Ashram periodical "Datta Prasadam" by Brahmasri K.S.Venkatarama Sastrigal.

The idea of plane foundation for the second publication "Thripura Rahasyam" was laid by Sadguru before his Maha Samadhi in 1990. For several reasons the publication of this work extended across a period of more than a decade. This too is an edited compilation of the serial article by Shri Dr. S.V.Radhakrishna Sastrigal in Dattaprasadam. The serial article has been polished in the editing process. Shri Dr.S.V.R has a passion and zeal for bringing out such compilations. We are highly grateful to him for sparing much of his valuable time in preparing and revising the material for publication.



We are much beholden to His Holiness Sri Jayendra Saraswathi Swamigal

of Sri Kanchi Kamakoti Peetam for blessing us with "Sri Mukham".

Prof. N. Chandrasekaran, Sri N.Sankaran and the Staff of Sri Kanchi Kamakshi Printers, Trichy, have put in considerable effort in bringing out the "Thripura Rahasyam".

On this occasion we remember with gratitude the spontaneity with which the late Sri S.Srinivasan of M/s. Bharath Motors Ltd.,gave a donation on the very day Sadguru Maharaj mentioned the idea of bringing out this publication.

This work "Thripura Rahasyam" is respectfully laid at the Lotus Feet of Sadguru Maharaj as a homage and humble contribution of the Sishyas.

अपराधसहश्राणि क्रियन्तेऽहर्निशं मया ।
दासोऽयमिति मां मत्वा क्षमस्व गुरु पुङ्गव ॥

*Dr. V.S. Padmanaban*
Administrator, Dattashramam



# பதிப்புரை

மனிதப்பிறவி கிடைத்ததன் பொருள்-பயன் பிரம்மஞானம் அடைவதே. ஜீவன்-ஜகத், ஈசுவரன் என்று திரிபுடியாக - மூன்று விதமாக தோன்றும் இவை அனைத்தும் ஒன்றேயான சச்சிதானந்த - ஆத்ம ஸ்வரூபமே என்ற ஞானம் அடைவதே பிரஹ்ம ஞானம். ஸதா வெளிப்பொருள்களிலேயே சுகத்தை இடைவிடாது தேடி முடிவற்ற பிறப்பு - இறப்புச் சுழல்களில் ஜீவனானவன் கலங்கி வருந்துகிறான். பிரம்மத்தின் செயல்படு சக்தியாகிய மாயையின் வசத்தில் ஆட்பட்டு தன் உண்மை ஸ்வரூபத்தை மறந்து நாம ரூப பிரபஞ்சத்தில் யான் - எனது என்ற அகங்கார - மமகாரங்களின் காரணமாக எல்லையற்ற துன்பம் அடைகிறான். இத்துன்பம் நீங்கி நேர்மாறான சாச்வதமான ஆனந்தாம்ருத நிலையை உணர வேதம் பல விதங்களிலும் பிரம்ம தத்வத்தை விளக்கி உபதேசிக்கிறது. உண்மையில் நிர்குண வஸ்துவான பிரம்மத்தை உணர்ந்து மாயையின் பிடியில் இருந்து விடுபட பல விதமான ஸகுண உபாசனைகளையும் வேதமாதாவே அனுக்ரஹிக்கிறாள்.பல புராண - இதிகாசங்களிலும் அத்யாத்ம ஞானம் பெற பல கீதைகளும் - வெளிப்படுத்தப்பட்டு உள்ளன. வேதத்தில் பற்பல இடங்களில் விளக்கப்பட்டுள்ள பிரம்ம தத்துவமானது புராண இதிகாசங்களில் ஒருங்கிணைத்தும் கூறப்பட்டுள்ளது.

வேதத்திலும், புராண இதிஹாஸங்களிலும் ஸ்ரீ மாதாவான பரமேச்வரியை பிரம்ம சக்தியாக அபேதமாகவே கூறப்பட்டுள்ளது. "பரப்பிரம்ம மஹிஷி" என்றே ஆதிசங்கரர் வ்யக்தமாக ஸ்தோத்திரம் செய்கிறார். பிரம்மமும் - அதன் மாயா சக்தியும் வேறு வேறல்ல. இவை இரண்டும் சேர்ந்ததாகவே அம்பாளின் ஸ்வரூபம். ஸனாதனமான நமது மதத்தில் எந்த ஒரு தெய்வத்தின் ஸகுண வழிபாடும் நிர்குணமான



பரம்பொருளின் ஞானப் ப்ராப்தியையே லக்ஷியமாகக் கொண்டது விசேஷமான ஒரு உண்மை ஆகும். இதில் சக்தி வழிபாடாகிய - சாக்தம் மிகவும் வெளிப்படையாகவே தேவியை பிரம்மஸ்வரூபமாகவும் உபாசன பலனை ஆத்ம ஞானமாகவும் விளக்கி உபதேசிக்கிறது.

தெய்வ உபாசனையின் பலன் பாபக்ஷயம், மற்றும் சித்த சுத்தியுமே ஆகும். இவை இரண்டும் வெகுவாக கிடைத்த பின்பே ஜீவனுக்கு ஆத்ம ஞானத்தைப் பற்றிய பேச்சாவது கிட்டுகிறது. உபாசனையின் போதே ஆத்ம ஞான லக்ஷ்யத்தை உள்ளடக்கி வெளி விஷயங் களினின்று மனதை திருப்பி அகண்ட ஞான போத ஸ்வரூபிணியாகிற பரதேவதையிடம் சேர்ப்பதே ஸ்ரீவித்யா க்ரமத்தின் தாத்பர்யம்.

இது திரிபுரா ரகசிய உபதேச வரலாற்றாலும் தெள்ளென விளங்கும். ஸ்ரீ ராமனிடம் கர்வபங்கம் அடைந்த பரசுராமரின் சித்தம் மிக அதிகமான ரஜோகுண - தமோ குணங்களினால் கலங்கி மலினமாக இருந்ததால் அவதூத மஹாத்மாவான ஸம்வர்த்தரின் உபதேசம் புரியவில்லை. ஆனால் அந்த ஸத்ஸங்க வைபவம் அவரை பகவான் ஸ்ரீ தத்தாத்ரேயரை குருவாக அடைய வைத்தது. பகவான் ஸ்ரீ தத்தர் பரசுராமரின் சித்தத்தில் உள்ள தோஷம் அறிந்து ஆத்ம ஞான உபதேசம் அளிக்காமல் ஸ்ரீ வித்யா மந்த்ர உபதேசம் அளித்து திரிபுரையாகிற - லலிதா பரமேச்வரியை வழிபடுமாறு பணிக்கிறார்.

இவ்வாறு பன்னிரண்டு ஆயிரம் வருஷங்கள் தொடர்ந்து கிரமமாக வழிபட்ட பின்பும் மனதில் பூரண சாந்தி கிடைக்காமல் மீண்டும் பகவான் ஸ்ரீ தத்தரை அணுகி உபதேசிக்க வேண்டுகிறார். நெடுங்காலம் செய்த தேவி உபாசனையினால் பக்குவமடைந்த பரசுராமரின் மனபரிபாகம் உணர்ந்து பகவான் அவர் இதுகாறும்



உபாசித்த திரிபுரையை - பிரம்ம ஸ்வரூபிணியாக விவரித்து சுத்தமான ஆத்ம ஞானம் கிடைக்க உபதேசிக்கிறார். நிர்குணமான சைதன்யமான பிரம்ம ஸ்வரூபத்தை பற்றி சாதாரணமாக அறிவது ச்ரவணம், பின்பு அதைப்பற்றி விவேக வைராக்யத்துடன் கூடிய புத்தியால் நன்கு தீர விசாரித்து - தெளிவாக புரிந்து கொள்வது மனனம், மேலும் நன்கு நிச்சயமாக தெரிந்து கொண்டபடி வெளிப் பொருட்களினின்று எண்ணங்களை விலக்கிட பூரண ஆத்ம சைதன்யத்தில் இருந்தும் முயற்சியே நிதித்யாஸனம். இவை ஒன்றன்பின் ஒன்றாக நடக்கவும் ஆத்ம சைதன்யத்தில் மனது கரைந்து கேவல ஸ்வரூபமாகவே நிலை பெறுகிறது. இம்மூன்று ஸாதக நிலைகளிலும் ஸத்குருவின் அவசியம் அடிப்படை தேவையாகிறது. உண்மையான ப்ரஹ்மஞானியாகிற ஸத்குரு கிடைத்து - அவரிடம் தொடர்ந்து இம்மூன்று சாதக நிலைகளிலும் தேவையான விளக்க உபதேசங்கள் கிடைக்க தெய்வ அனுக்ரஹமும், ஸத்ஸங்க பலமும் காரணமாகின்றன. ஆனால் எல்லோருக்கும் இந்த ஸத்குரு பிராப்தி ஆகிறதில்லை. அப்படியே கிடைப்பினும் சிஷ்யனின் ஜீவதசை குருவின் ஜீவதசை இவைகளின் வேறுபாடுகள் காரணமாக ஸாதக நிலைகளில் ஸத்குருவின் நேரடி உபதேசம் கிடைப்பதில்லை.

மேற்கூறியவாறு ஸத்குருவின் உபதேசம் போலவே சில அபூர்வமான சாஸ்த்திரங்களும் ஸாதகனுக்கு ஞான சாதனையில் உதவி செய்வதாக அமைந்துள்ளன. ஸாதகன் மனோ நிலைகளில் படிப்படியாக அறிந்து தீரவிசாரித்து நிலை பெற உதவியாக உபதேசக் கருத்துக்களை தொகுத்து வழங்குகின்றன. இத்தகைய அரிய பயன் உள்ளது இந்த திரிபுரா ரகசியம் என்றதொரு நூல் என்று இதனை மிகச் சிறப்பித்து அடிக்கடி மேற்கோள் காட்டி உபதேசிப்பார் நமது ஸத்குரு ஸ்ரீ கிருஷ்ணானந்த பிரம்மேந்திர அவதூத சரஸ்வதி மஹராஜ் அவர்கள். ஞான சாதக நிலையில் தோன்றும் சந்தேகங்களுக்கு கதைகள்



- அல்லது பொருத்தமான சம்பவங்களின் மூலம் தகுந்த விடைகளை அளித்து சாதகனை உத்தமஞான நிலையில் சேர்ப்பது திரிபுரா ரகசியம் என்றும் ஸத்குருநாதர் கூறுவார்.

இது பற்றி வட இந்தியாவில் புத்தகங்கள் பல இருந்தாலும் தமிழ் மொழி விளக்கத்துடன் கூடிய நூல் இல்லை எனும் குறை தீர "திரிபுரா ரகஸ்யத்தை" பெருமதிப்பிற்குரிய திருச்சி டாக்டர் ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களைக் கொண்டு "தத்தப்ரஸாதம்" பத்திரிகை ஆரம்பித்தது முதற்கொண்டு தொடர் கட்டுரைகளாக வெளியிடச் செய்தார்கள் நமது ஸத்குருநாதர். அவரது அபிலாஷைப்படியே இது புத்தக வடிவில் தற்சமயம் ஸ்ரீ தத்தாச்ரமத்தால் வெளியிடப்படுகிறது. மஹத்தான இந்த திரிபுரா ரகசியம் என்ற உபதேசத்தின் ஞான காண்டத்திற்கு நிறைவானதும் - எளிமையானதும் ஆன உரையை தந்துள்ள ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களுக்கு ஸ்ரீ தத்தாச்ரமத்தின் சார்பில் மனமுவந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். இதை அழகிய புத்தக வடிவில் வெளியிட்டுக் கொடுத்துள்ள ஸ்ரீ காஞ்சீ காமாக்ஷி பிரிண்டர்ஸ் நிறுவனத்தார்க்கும் எமது நன்றி. இந்த ஞான யக்ஞப் பணியில் உற்சாகத்துடன் துணை செய்த அனைவருக்கும் எமது நன்றி உரித்தாகுக. உத்தம அதிகாரிகளாகிற முமுக்ஷுக்களுக்கு இந்த புத்தகம் பயன் தந்து அவர்கள் ச்ரேயஸை அடைய ஸ்ரீ ஸத்குருநாதரைப் பிரார்த்திக்கிறோம்.

Dr. G. சந்திரமௌலி,
ஆசிரியர்,
தத்தப்ரஸாதம்.



இந்த சாக்த ஸம்பிரதாயத்தைத் தோற்றுவித்தவர்கள் 12 வித்யேச்வரர்கள் என்று திரிபுரா ரஹஸ்யம் கூறும்.

मनुश्चन्द्रः कुबेरश्च लोपामुद्रा च मन्मथः।
अगस्तिरग्निः सूर्यश्च इन्द्रः स्कन्दः शिवस्तथा॥
क्रोधभट्टारको देव्या द्वादशामी उपासकाः।
एतान् प्रातः स्मरन्नित्यं सर्वपापैः प्रमुच्यते॥

மாகாத்ம்யகண்டம் – 48, 59 – 60

**வைவஸ்வதமனு, சந்திரன், குபேரன், அகஸ்தியரின் மனைவி லோபாமுத்திரை, மன்மதன், அகஸ்தியர், அக்நிதேவன், ஸூரியன், இந்திரன், ஸ்கந்தன், சிவன், துர்வாஸர் என்ற பன்னிருவர் தேவியின் வித்யை எனப்படும் மந்திரங்களை தேவியிடமிருந்து பெற்றுத் தேவியை வழிபட்டவர்கள்.**

महेश-माधव-विधातृ-मन्मथ-स्कन्द-नन्दि-इन्द्र-मनु-चन्द्र-कुबेर-अगस्त्य-क्रोधभट्टारकविद्यात्मिके என்று ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரத்திலும் தேவிகட்கமாலையிலும் பன்னிரு உபாஸகர்கள் குறிப்பிடப்படுகிறார்கள். ஸ்ரீ மஹாவிஷ்ணு, பிரும்மா, நந்தி என்ற மூவரும் உபாஸகர்கள் இந்த வரிசையில் சேர்கிறார்கள்.

मनुविद्या (२३८) चन्द्रविद्या (२३९) हरि-ब्रह्म-इन्द्रसेविता (२९७) राजराजार्चिता (३०५) कामपूजिता (३७५) शिवाराध्या (४०६) कमलाक्षनिषेविता (५५८) कामसेविता (५८६) लोपामुद्रार्चिता (६४७) भगाराध्या (७१५). गुह्यकाराध्या (७२०) नन्दिविद्या (७३३) मार्तण्डभैरवाराध्या (७८५) என்ற ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்திலுள்ள நாமங்கள் இவ்வுபாஸகர்களை அறிமுகப்படுத்துகின்றன.

இவர்களில் ஸ்ரீ சிவபெருமானிடமிருந்து ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திருவவதாரமான ஸ்ரீதத்தாத்ரேயர் இந்த ஸம்பிரதாயத்தை உபதேசமாகப் பெற்றார். இவ்வுபதேசங்களை ஸ்ரீ தத்தாத்ரேயர் ஸ்ரீ தத்தாத்ரேய ஸம்ஹிதையில் தொகுத்து முதலில் ஸம்வர்த்தர் என்ற மகாயோகிக்கு உபதேசித்தார். ஸம்வர்த்தர் இதன் ஸாரத்தைப் பரசுராமருக்கு உபதேசித்துப்

அழைத்துச் செல்கின்றன. அவற்றில் சாக்தம் என்ற சமயத்தில் பராசக்தியான தேவியைப் பரம்பொருளாகக் கொண்டு தத்துவ விளக்கமும் வழிபாட்டு முறையும் விளக்கப்படுகின்றன. அந்த சாக்த சமயத்தின் மூல நூல்களுக்குள் ஸ்ரீ திரிபுரா ரஹஸ்யத்திற்கு ஒரு தனிச் சிறப்பும் இடமும் உண்டு

சாக்த சமயமானது ஸ்ரீதிரிபுரோபனிஷத்து, பாவநோபனிஷத் முதலிய உபனிஷத்துகளில் தனித்தும் கேநோபநிஷத்தில் சிறப்பாகவும் விளக்கப்பட்டுள்ளது. அகஸ்தியர் இயற்றிய சக்தி ஸூத்ரத்தில் தத்துவ விளக்கமும், பரசுராமர் இயற்றிய பரசுராம கல்பஸூத்ரத்தில் வழி பாட்டுமுறை விளக்கமும் தரப்பட்டுள்ளது. தேவீபாகவதத்திலும் பிரும்மாண்ட புராணத்தின் உத்தரகண்டத்தில் ஸ்ரீ லலிதோபாக்கியானத்திலும், மார்க்கண்டேய புராணத்திலும் தேவியின் பல தோற்றங்களின் பெருமைகளும், வழிபாட்டு முறைகளும், தேவியை வழிபட்டதால் பல பக்தர்கள் அடைந்த மேன்மைகளும் விளக்கப்பட்டுள்ளன. தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை, ஞானார்ணவம், தந்திரராஜம், லக்ஷ்மீதந்திரம், நித்யாஷோடசிகார்ணவம், முதலிய எண்ணற்ற தந்திர நூல்கள், மந்திர – தந்திர – யந்திர முறைகளை விரிவாகக் காட்டுகின்றன.

ஷண்மத ஸ்தாபகாசாரியவர்யரான ஜகத்குரு பரமஹம்ஸ ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் பரமகுரு கௌடபாதர் ஸ்ரீவித்யாரத்ந ஸூத்ரங்கள், ஸுபகோதயஸ்துதி முதலியவற்றால் சாக்த வழிக்கு ஒளியூட்டியுள்ளார்கள். ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களும், பிரபஞ்சஸாரம், ஸௌந்தரியலஹரீ, ஸ்ரீலலிதா திரிசதீ பாஷ்யம் முதலியவற்றால் மேலும் அதற்கு ஒளியூட்டியுள்ளார்கள். தக்ஷிண தேசத்தில் வேறு மதத்தினரால் வைதிக தர்மம் அடியோடு அழிந்துவிடத்தக்க நெருக்கடி தோன்றியபோது விஜயநகர ஸாம்ராஜ்யத்தைத் தோற்றுவித்து வைதிக தர்மத்தைக் கட்டிக்காத்த ஸ்ரீ வித்யாரண்யர் ஸ்ரீவித்யார்ணவம் என்ற நூலைக் கொண்டு சாக்த சமயத்திற்கு வழிகாட்டியுள்ளார்.

குஜராத்தில் தோன்றி பாரத தேசத்தின் எல்லாப் பகுதிகளிலும் தேவியின் வழிபாட்டு முறைகளைச் சீரமைத்துத் தந்து, தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் பாஸ்கரராயபுரத்திலும் திருவிடைமருதூரிலும் தன் வாழ்நாளின் இறுதியைக் கழித்த ஸ்ரீ பாஸ்கரராயர் ஸேதுபந்தம், ஸௌபாக்யபாஸ்கரம், வரிவஸ்யா ரஹஸ்யம் முதலிய பல நூல்களால் சாக்த சமயத்தை விளக்கியுள்ளார். இப்படிப் பலர் சாக்த ஸம்பிரதாயத்தை விளக்கியுள்ளனர்.

# திரிபுரா ரஹஸ்யம்

## அறிமுகம்

திரிபுரா ரஹஸ்யம் என்ற இந்த நூல் ஸுமேதர் என்ற முனிவரால் தொகுக்கப்பட்ட இதிஹாஸம். ஸுமேதர் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சாவதாரமான பரசுராமரின் சிஷ்யர். ஹாரித கோத்திரத்தில் தோன்றியது, ஹாரிதம் என்ற இடத்தில் வெகுநாட்கள் வசித்தது என்ற காரணங்களால் இவருக்கு ஹாரிதாயனர் என்று பெயர். பரசுராமர் தனது குரு தத்தாத்ரேயரிடம் தனக்கேற்பட்ட சந்தேகங்களைக் கேட்டார். தத்தாத்ரேயரின் உபதேசத்தால் பரசுராமர் ஸ்ரீ திரிபுரா உபாஸனை பற்றிய விளக்கங்களைப் பெற்றார். பரசுராமரிடமிருந்து ஸுமேதர் அவ்விளக்கங்களை அறிந்தார். பரசுராமரின் அருளாணையின்படி 34 நாட்களில், ஒரு நாளில் நான்கு அத்யாயங்களாக இந்த திரிபுரா ரஹஸ்யத்தை 12,000 சுலோகங்கள் கொண்டதாக அமைத்தார். இந்த இதிகாசத்தை நாரதர் ஸுமேதரிடமிருந்து கேட்டறிந்தார். ஹாரிதாயனர் எனும் ஸுமேதர் இயற்றியதால் இதற்கு ஹாரிதாயன ஸம்ஹிதை என்றும் பெயர் உண்டு.

இது மாஹாத்ம்ய கண்டம், ஜ்ஞான கண்டம், சரியா கண்டம் என்று மூன்று கண்டங்களில் அடங்கும். மாஹாத்ம்ய கண்டம் 80 அத்தியா–யங்களும் 6,687 சுலோகங்களும் கொண்டது. இதில் தேவியின் லீலாவதா–ரங்களைப் பற்றிய புராண வரலாறுகளும் தேவியின் பெருமைகளும் விளக்கப்பட்டுள்ளன. ஜ்ஞான கண்டம் 22 அத்தியாயங்களும், 2,163 சுலோகங்களும் கொண்டது. இதில் சக்தி தத்துவமும் அதனையொட்டிய தர்சனக்கொள்கைகளும் விளக்கப்படுகின்றன. இவ்விரண்டு பகுதிகள் மட்டுமே இன்று நமக்குக் கிடைப்பவை. மூன்றாவதான சரியா கண்டம் இதுவரை பலர் முயன்றும் கிடைக்கவில்லை. தேவியின் திருவருள் அப்பகுதியை எப்போது கிடைக்கச்செய்யுமோ?

காணபதம், சைவம், சாக்தம், வைஷ்ணவம், கௌமாரம், ஸௌரம் என ஆறுசமயங்கள் உண்டு. அவை முறையே கணபதி, சிவன், தேவி, விஷ்ணு, முருகன், சூரியன் இவர்களை முழு முதற் கடவுளாகக் கொண்டு வழிபாட்டு முறையையும் தத்துவ விளக்கத்தையும் வகுத்துக் கொடுத்து தெய்வநெறியில்

ॐ

॥ श्री महागणपतये नमः ॥

॥ त्रिपुरादेव्यै नमः ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम्।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः॥
दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम्।
वामकुचनिहितवीणां वरदां संगीतमातरं वन्दे॥
दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काऽप्यन्यतमिका।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया॥
कृष्णानन्दं भजे दत्तगिरिवासं गुरूत्तमम्।
अवधूतं सदा शिष्यगणावनपरायणम्॥
अंकाधिरूढया श्रीवल्लभयाश्लिष्टसुन्दरस्वांगम्।
कुंकुमपंकिलदेहं शंकरतनयं नमामि वाक्सिद्ध्यै॥

॥ श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः॥

பூர்ண உபதேசம் பெற அவரை ஸ்ரீதத்தாத்ரேயயோகியிடம் அனுப்பினார். ஸ்ரீதத்தாத்ரேயரிடம் தாம் பெற்ற உபதேசத்தை ஸுமேதருக்குப் பரசுராமர் உபதேசித்தார். இப்படி ஸம்பிரதாய வழியில் வந்த உபதேசத்தை நூல்வடிவில் அமைக்க பரசுராமர் ஆணையிட ஸுமேதர் தொகுத்ததே திரிபுராரஹஸ்யம் எனும் நூல்.

## திரிபுரா ரஹஸ்யத்தை அருளிய குரு பரம்பரை

## 1. ஸ்ரீ தத்தாத்ரேயர்

பிரும்மா சுவேத வராஹ கல்பத்தின் ஆரம்பத்தில் படைக்கத் தொடங்கு முன் பரம்பொருளின் சக்தியை மனத்தில் தியானம் செய்து கொண்டிருக்கும்போது, அவரது உடலின் பல பகுதிகளிலிருந்தும் 10 பிரஜாபதிகள் தோன்றினர். அவர்களில் ஒருவர் பிரும்மனின் கண்களிலிருந்து தோன்றிய அத்திரி முனிவர். ஸ்வாயம்புவ மனுவின் பெண்ணான தேவஹூதியிடம் கர்த்தம பிரஜாபதிக்குப் பிறந்த பெண் அனஸூயா. மஹாவிஷ்ணுவின் அவதாரமான கபிலரது சகோதரி. அனஸூயை அத்திரி முனிவரின் மனைவி.

தக்க புதல்வர்களைப் பெற அத்திரி முனிவர் அனஸூயையுடன் தவமிருந்தார். "ஜகத்தை ஆளும் ஈசுவரனைச் சரணடைகிறேன். தனக்கொப்பான ஒரு நல்ல பிரஜையை எனக்கு அவர் அருளட்டும் " என்று கோரினார். ஜகதீச்வரன் எனப் பொதுவாகக் குறிப்பிட்டதால், ஜகத்தைத் தோற்றுவிக்கின்ற பிரம்மதேவரும், அதனைக் காப்பாற்றுகின்ற மஹாவிஷ்ணுவும், அதனை ஒடுக்கிக் கொள்கின்ற பரமசிவனும் தவத்தில் மகிழ்ந்து எதிரில் தோன்றினர். மூவரும் அந்த தம்பதியருக்குப் புதல்வர்களாக வர இசைந்து அருளினர். பிரும்ம தேவனின் அம்சத்தில் சந்திரனும், விஷ்ணுவின் அம்சத்தில் தத்தரும், பரமேசுவரனின் அம்சத்தில் துர்வாஸரும் அவர்களுக்குப் புதல்வராகத் தோன்றினர். தானே தன்னைப் புதல்வனாகத் தந்தருளியதனால் தத்தர் என்ற பெயரும் அத்ரியின் புதல்வரானதால் ஆத்ரேயர் என்ற பெயரும் சேர்ந்து ஸ்ரீ தத்தாத்ரேயர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

ஹைஹய தேசத்தரசன் கிருதவீர்யனின் புதல்வன் அர்ஜுனன் (கார்த்தவீர்ய அர்ஜுனன்) ஸ்ரீ தத்தாத்ரேயரை வழிபட்டுப் பல வரங்களைப் பெற்றான்.

ஆயிரம் வலிவுள்ள கைகள், எதிரிகளால் தகர்க்கமுடியாத வீர்யம், யோகசக்தியில் நினைத்த அளவில் பல உருவங்களுடன் பல இடங்களிலிருந்துகொண்டு கொலை முதலிய பாதகங்கள் நடைபெறாமல் தடுத்து நாட்டைத் திறம்பட ஆளுதல், ஏழு துவீபங்களிலும் தடையுறாத எல்லையற்ற செல்வாக்கு முதலியவை தத்தரின் அருளால் அவன் பெற்றவை. சந்திர வம்சத்திலுதித்த யது மகாராஜனும் அலர்கர் என்ற அந்தணரும் இவரையண்டி ஆத்மவித்யையையும் வைராக்யத்தையும் பெற்றார்கள். ஸ்ரீ தத்தர் சிவபெருமானிடம் நேரிடையாக தேவி வழிபாட்டு முறைகளையும் தத்துவ விளக்கத்தையும் பற்றிய உபதேசங்களைப் பெற்று ஸம்வர்த்தர், பரசுராமர் முதலிய மகான்களுக்குக் குருவாக விளங்கி சாக்த சமயத்தின் சிறந்த குருவாக விளங்குகிறார். அவரது உபதேசங்கள் பரசுராமர் மூலம் ஸுமேதரை அடைந்து திரிபுரா ரஹஸ்யம் என்ற நூல் வடிவம் பெற்றது.

## 2. ஸம்வர்த்தர்

பிரும்மாவின் முகத்திலிருந்து தோன்றிய பிரஜாபதியான அங்கிரஸ் என்ற முனிவருக்கு கர்த்தமரின் புத்திரி சிரத்தை என்பவளிடம் இவர் பிறந்தார். தேவ குருவான பிருஹஸ்பதி இவரது மூத்த சகோதரர். ஸம்வர்த்தர் ஸ்ரீ தத்தரிடம் ஆத்மஞானமும் யோகவித்தையையும் கற்று அவதூத யோகியாகி காசி க்ஷேத்திரத்தில் யாவருமறியாதபடி பித்தர் போலும் பேய் பிடித்தவர் போலும் சுற்றி வந்தார். ஸூர்ய வம்சத்தில் உதித்த சக்கிரவர்த்தியான மருத்தர் வேள்வி புரிய எண்ணம் கொண்டார். அவரது குருவான பிருஹஸ்பதி தேவ குருவானதால், மனிதர்களுக்கு வேள்வியில் உதவ மறுத்தார். நாரதர் கூறியபடி ஸம்வர்த்தரைக் காசியில் மருத்தன் கண்டுபிடித்து அவர் மூலம் யாகத்தை நடத்திக்கொண்டான். தேவ குருவான பிருஹஸ்பதி பல இடையூறுகளைத் தந்தும் ஸம்வர்த்தர் யோக வலிமையால் தேவர்களை நேரிடையாக யாகத்தில் ஹவிஸ்ஸை ஏற்க வரச்செய்து யாகத்தை செவ்வனே நடத்தித் தந்தார். பின்னர் முற்றிலும் துறந்த யோகியாகச் சுற்றிவரும்போது பரசுராமரால் வேண்டப்பெற்று அவருக்கு ஞானஸாரத்தைப் போதித்து ஸ்ரீ தத்தரிடம் அவரை அனுப்பினார்.

## 3. பரசுராமர்

பிரும்மாவின் தோளிலிருந்து தோன்றிய பிருகு என்ற முனிவருக்குக் கர்த்தமரின் புதல்வியான கியாதி என்ற மனைவியிடம் தோன்றிய சியவனருக்கு ரிசீகர் என்ற புதல்வர். அவர் சந்திர வம்சத்திலுதித்த காதி என்பவரின் பெண் ஸத்யவதியை மணந்தார். ஸத்யவதியிடம் தன் வம்சம் வளராதிருப்பதை உணர்ந்த ரிசீகர் ஒரு குடுவையில் அன்னம் சமைத்து

அதனைச் சிறந்த அந்தணர் குணத்துடன் கூடிய புத்திரனை அருளும் மந்திரங்களால் மந்திரிக்கத் தொடங்கினார். காதிக்கும் வேறு புதல்வர் இல்லாததால் அவரது மனைவியும் புத்திர ஸந்தானம் பெற மந்திரஜபம் செய்து அன்னம் தரவேண்டுமென்று ரிசீகரிடம் வேண்டினாள். ரிசீகர் வேறு ஒரு குடுவையில் அன்னம் சமைத்து அதில் நல்ல க்ஷத்திரிய குணத்துடன் கூடிய புத்திரனை அருளவேண்டி மந்திரங்களை ஜபித்து வைத்தார்.

காதியின் மனைவி பேராசை வசப்பட்டாள். "ரிசீகர் தனக்குப் பிறக்கும் பிள்ளை மிகச் சிறப்புள்ளவனாக இருக்க மந்திரித்திருப்பார்; அதனைத் தான் பெற்றுவிட வேண்டும்" என்று நினைத்தாள். தன் பெண்ணை அதற்குச் சம்மதிக்கச் செய்தாள். மந்திரித்த அன்னத்தை உண்ணும் வேளையில் ஸத்யவதிக்காக மந்திரித்ததை அவளது தாயும், அவளது தாய்க்காக மந்திரித்ததை ஸத்யவதியும் உண்டார்கள்.

இதனை ரிசீகர் அறிந்தார். முனிவரான தனக்கு க்ஷத்திரிய குணத்துடனும், க்ஷத்திரியனான காதிக்கு அந்தண குணத்துடனும் புதல்வர்கள் பிறக்கவிருப்பதை உணர்ந்தார்.அவர் இதை ஸத்யவதியிடம் கூற, ஸத்யவதி இந்தத் தவற்றைப் பொறுத்துத் தனக்கு அந்தணப் பிள்ளையே பிறக்கும்படி செய்ய வேண்டினாள்.

ரிசீகர் மறுபடியும் மந்திரபலத்தால் இறைவனை வேண்டியதும் ஸத்யவதிக்குப் பிறக்கும் புதல்வன் அந்தணராகவே பிறப்பான் என்றும், ஆனால் அந்தப் புதல்வனுக்குப் பிறப்பவன் க்ஷத்திரிய தர்மத்துடன் தான் பிறப்பான் என்றும் உணர்ந்தார். ஈசுவரலீலை அது. ஸத்யவதியிடம் ஜமதக்னி என்ற முனிவர் தோன்றினார். அவருக்கு ரேணுகையிடம் பிறந்தவர் விஷ்ணுவின் அம்சத்துடன் கூடிய ராமர். காதிக்குப் பிறந்த பிள்ளை விசுவாமித்திரர்.

ஜமதக்னியிடமிருந்த பசுவை அவரது ஆசிரமத்திற்கு விருந்தினனாக வந்த ஸ்ரீ தத்தகுருவின் சீடனான கார்த்தவீர்ய அர்ஜுனன் விரும்பினான். தவத்தினால் உடைமையாகிவிட்ட அந்த பசுவை ஜமதக்னியால் தர இயலவில்லை. எல்லையற்ற செல்வாக்கும் செல்வமும் பெற்றிருந்தும் அர்ஜுனனுக்கு இந்தப் பசுவிடம் ஏற்பட்ட தகாத விருப்பம் காரணமாக அர்ஜுனனுக்கும் ஜமதக்னிக்கும் இடையே ஏற்பட்ட மோதலில் ஜமதக்னி தலை வெட்டப்பட்டு உயிரிழந்தார். இதனை அறிந்த ராமர் உள்வாஸனையாக அமைந்திருந்த க்ஷத்திரிய தர்மம் வலுத்துத் தூண்ட விஷ்ணுவின் அம்ச ஆவேசம் பெற்றவராகச் சிவபெருமானை வேண்டி மந்திரபலத்தால் யாவரையும் அழிக்கும் கோடாரியையும் வைஷ்ணவ தனுசையும் பெற்றார்.

கோடரியை ஆயுதமாகக் கொண்டதால் பரசுராமர் எனப்புகழ் பெற்றார். அதன் பலத்தால் கார்த்தவீர்ய அர்ஜுனனையும் அவனைத் தொடர்ந்து எதிர்த்த க்ஷத்திரியர்களையும் அழித்தார். திரும்பத் திரும்ப 21 தடவை க்ஷத்திரியப் பூண்டே இல்லாமல் அழித்த பரசுராமர், தன் தகப்பனாருக்கு ஏற்பட்ட குறைவிற்கு ஈடுசெய்துவிட்ட திருப்தியுடன் தகப்பனாருக்கு ஈமக்கடன்களைச் செய்து முடித்தார்.

பின்னர் தசரத குமாரனாக ராமர் அவதரித்து ஜனகரிடமிருந்த சிவதனுஸை வளைத்தொடித்து ஸீதாதேவியை மணந்த செய்தியறிந்த பரசுராமர் மறுபடியும் க்ஷத்திரியர்களிடம் கொண்ட த்வேஷத்தால் ராமரிடம் சென்று எதிர்க்கத் துணிந்தார். விஷ்ணுவின் அவதாரமான ராமரிடம் தன் தவச் சக்தியையும் அதனால் பெற்ற க்ஷத்திரியத் தன்மையையும் இழந்து ராமரை வணங்கி மஹேந்திர பர்வதம் சென்று மீண்டும் மன அமைதிக்கான தவத்தில் ஈடுபட்டார்.

கோபத்தாலும் த்வேஷத்தாலும் எதிர்ப்பு உணர்ச்சி மிகுந்து அதனால் தான் மன அமைதி இழந்துள்ளதை உணர்ந்த பரசுராமர், அமைதி பெற வழிஅறியாமல் க்ஷேத்திராடனம் செய்தார். வழி நடுவே ஒளிமிக்க ஒரு யோகியைப் பார்த்தார். வர்ண ஆசிரம தர்மங்கள் அனைத்தையும் துறந்து இன்னாரென இனம் கண்டுபிடிக்க முடியாத தோற்றத்துடன் ஆடையின்றி ஸ்நானம் முதலியவற்றில் ஈடுபாடில்லாததால் உடல் முழுவதும் புழுதிபடிந்த மேனியராக மதம் பிடித்த யானைபோல் எதனையும் பொருட்படுத்தாமல் செல்லும் அவரைப் பார்த்ததும், யாரோ பெரியவர் என அவரைப் பரசுராமர் நெருங்கினார். அந்தப் பித்தரோ அவரிடம் பிடிபடாமல் ஒடினார்; பரசுராமரைக் கற்களால் அடித்தார். புழுதியை அள்ளி அவர்மீது இறைத்தார், திட்டினார், பேய்ச் சிரிப்புச் சிரித்தார். இவைகளைப் பொருட்படுத்தாமல் பரசுராமர் அவரை அணுகி அவரது திருவடிகளைக் கைகளால் பிடித்துக்கொண்டு பக்தியுடன் நீர் யார் என வினவினார்.

தன்னை அண்டி வணங்கிய பரசுராமரிடம் அந்த யோகிக்கு ஏனோ கருணை வந்தது. புன்சிரிப்புடன் ராமரைக் கேலியுடன் கேள்வி கேட்டார்.

'त्वमित्यवगते प्रश्नः पिष्टपेषणवद् वृथा।
त्वया नावगतश्चेत्तवमिति वाक् स्यान्निरर्थिका।

"நீர் என்று ஒருவனைக் குறிப்பிடுமளவிற்கு அவனை அறிந்த பின் அவனை யார்? என்று கேட்பது பிசைந்த மாவைப் பிசைவது போல் வீண். நான் யார் என்பதை அறியாமலேயே இருந்தால் 'நீ' என்று என்னைக் குறிப்பிட்டது பொருளற்றது"

केनचिद् वपुषा ज्ञात इति चेत्तद्वदस्व मे।
न ज्ञातस्ते चिदात्मा तदज्ञेयत्वात्तथाविधः।
अन्नं चेदं त्वया दृष्टं साक्षादेव न संशयः।।

ஏதோ இந்த உடலளவில் அறியப்பட்டது என்று கூறலாம். உடலினுள் உறையும் பேரறிவுமயனான ஆத்மாவை நீ அறிந்திருக்கமாட்டாய். ஏனெனில் ஆத்மா அப்படிப்பட்டவன், (அறிவுச் சாதனங்களால் அறிய முடியாதவன். அறியமுடியாததை அறியாதது தவறல்ல.) அவனை நீ யார் எனக் கேட்கமாட்டாய். அன்ன மயமான இந்த உடலை நீ பார்த்துவிட்டாய். அதில் சந்தேகம் ஏற்பட ஏதுவில்லை.

तस्मात्पर्यनुयोगस्ते संज्ञायां सुव्यवस्थितः।
ज्ञातं कारणमप्येवं तस्मात्संज्ञैव न त्वया।।
ज्ञाता सा न स्वतः सिद्धा कल्पिता बहुधापि सा।
न संस्थिता साप्येकत्र संघातस्याश्रयत्वतः।
तस्मादहं त्वया राम सम्यक् पृष्टो वदामि ते।।

அதனால் நீ அறிய விரும்பியது பெயர். இதன் பெயரை இதுவரை நீ அறிந்துகொள்ளவில்லை. அதுதான் உன் கேள்விக்குக் காரணம் என்று புரிகிறது. அந்தப் பெயர் இதற்கு இயற்கையாக அமைந்ததல்ல. யாரோ கற்பனை செய்துவைத்தது, அதிலும் வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறு பெயர் மாறி மாறி அமையுமாதலால் நிலைத்ததும் அல்ல. இந்த உடலும் பலவற்றின் தொகுப்பே தவிர ஒரே முழுப்பொருளல்ல. அதில் எந்தப் பகுதிக்கு இந்தப்பெயர் பொருந்துகிறது என்பதையும் கூறமுடியாது. அதனால் ஒரு பெயரால் எதனைக் குறிப்பிடுகிறோம் என்றும் நிர்ணயமில்லை. அதனால் உன் கேள்வி பொருத்தமற்றது. நீ சற்று நல்ல கேள்வியாகக் கேட்டால் பதில் தருகிறேன்". (திரிபுரா ரஹஸ்யம் மாகாத்ம்ய கண்டம் 4, 29 – 33)

பரசுராமர் திகைத்து நின்றார். பேச்சு, புத்தி, திறமை அனைத்தும் மரத்துப்போயின. வெட்கத்தால் தலைகுனிந்து யோகீசனை வேண்டினார்.

"மஹாபுருஷரே! நான் தத்துவம் அறியாத சீடன். குருவாயிருந்து நீங்கள் விளக்கம் தரவேண்டும்" என்று கேட்டார். "நான் அங்கிரஸ் முனிவரின் புதல்வனான ஸம்வர்த்தன். என் சகோதரனான பிருஹஸ்பதியுடன் ஏற்பட்ட கலகத்தால் வைராக்கியமுற்று ஸ்ரீ தத்தாத்ரேயரைக் குருவாக அடைந்தேன். தோன்றுவதெல்லாம் ஆத்மாவின் தோற்றங்களே என்று குரு எனக்கு ஐயமறப் போதித்தார். பயம் நீங்கியவனாக இந்தப் பயமற்ற பாதையில் ஓரிடத்திலும் நிலைத்தில்லாமல் பரமன் ஆட்டுவித்தபடி ஆடும் பொம்மையாகச் சுற்றிவருகிறேன்." என்று கருணையால் தன்னைப் பரசுராமருக்குக் காட்டிக்கொடுத்தார்.

தன்னை நல்வழிப்படுத்த வேண்டுமென்று வேண்டி நிற்கும் ராமரிடம் ஸம்வர்த்தர் கூறினார். "ஒருவன் முன்வினையால் மயங்கி, திருடர்கள் உலாவும் பாதையை நல்லதென மதித்துப் பயமின்றி அவ்வழியே செல்கிறான். அறியாமையால் நடு நடுவே துன்பம் ஏற்பட்டாலும் இனி இன்பம் கிட்டும் என்ற எதிர்பார்வையுடன் சுற்றி சுற்றி வருகிறான். நடுவில் ஏனோ ஒரு நல்லவழி தெரிந்தவன் அவனை ஆட்கொண்டு நற்பாதைக்குத் திருப்பி அழைத்துச்சென்று இன்பமடையச் செய்கிறான். இப்படித் துன்பம் மிகுந்த பாதையில் சென்ற என்னை என் குருநாதர் நல்வழிப்படுத்தியதால் நான் அமைதியுடன் பயமின்றித் துன்பமின்றிச் சுற்றி வருகிறேன். வேறு சிலருக்கு இத்தகைய வாய்ப்பு கிட்டாததால் திரும்பத் திரும்பத் துன்பம் தரும் பாதையில் செல்பவர்களாகக் கஷ்டத்தையே அடைகிறார்கள்.

அதனால் நல்வழி காட்டும் குருநாதரைப் பெறுவது அவசியம். அவர் அருளால் தேவியை வழிபடும் முறை அறிந்து, தேவியை வழி பட வேண்டும். தேவியின் அருளால் ஆத்ம தத்துவத்தை உணரலாம். அப்போது பயம் துன்பம் அமைதியின்மை முதலியவை தானே விலகும். எதிலும் கலக்கமுறாமல் நிம்மதியுடன் என்னைப் போல் நீயும் ஆகலாம்.

स्वात्मानं सर्वभावस्थं स्वात्मस्थं सर्वभावकम्।
पिण्डाहंभावमुन्मूल्य वेत्तृभावासनस्थितः॥
वेद्यं स्वदेहं संबुध्य सदा वेत्त्रभिलक्षकः।
यश्चरेत्तस्य नो कार्यं विद्यते संसृतेः पथि॥
दोषं विभावयेदादौ भूयः संसृतिवर्त्मनि।
तेन तत्राशु वैराग्यं ततः सन्मार्गलक्षणम्॥

एतन्मयोक्तं संक्षेपात्सारं मर्त्यः सदाऽभ्यसन्।
अचिरेणैव संयाति शुभमार्गं परात्परम्।

"நான் " என்ற உணர்விற்கு ஆதாரமான ஆத்மாவானது தான் தோன்றும் அனைத்திலும் உள்ளது. தோன்றும் எல்லாப்பொருள்களும் இந்த ஆத்மாவையே ஆசிரயமாகக் கொண்டுள்ளன. உடலை 'நான்' எனக்கொள்வது தகாது. 'நான்' அறிபவன். உடல் அறியப்படும் பொருள். அதனால் உடலில் 'நான்' என்ற பாவனையை விடவேண்டும். அறிபவனாகத் தன்னை உணர வேண்டும். இந்த உணர்வுள்ளவன் "ஸம்ஸார மார்க்கத்தில் தனக்கு ஆகவேண்டியதொன்றுமில்லை" என்பதை உணர்வான். அவன் நல்வழிப் பட்டதன் அடையாளம் வைராக்கியம். நல்வழிப்பட்டவன் மேம்பட்ட ஆனந்தத்தை அடைவான். இதுதான் ஸாரம்"

(திரிபுரா ரஹஸ்யம் – மாகாத்ம்ய 4, 55, –58)

பரசுராமருக்கு இந்த ஸார உபதேசம் மனத்தில் பதியவில்லை. ஸம்வர்த்தர் தியானத்தில் ஆழ்ந்து நடக்கவிருப்பதை அறிந்தார். "ஸ்ரீதத்தாத்ரேயர் ஆத்மதத்துவத்தை விளக்கி உணரச்செய்ய வல்லவர். அவரது கிருபையால் தேவியின் அருள்பெறலாம்" எனக் கூறி ஸ்ரீ தத்தகுருவை அடைய வழிகாட்டி மறைந்தார்.

கந்தமாதன பர்வதத்தின் சிகரத்தில் அமைந்திருந்த ஆசிரமத்தினுள் அந்த அவதூத மஹாயோகி ஸ்ரீ தத்தர் வீற்றிருந்தார். ஒரே ஒளிக் குவியல். நடுவே மிக அழகிய குருநாதரின் வடிவம். கோடி மன்மதர்களுக்கு ஒப்பான அழகும் இளமையும் வடிவமைப்பும். அவர் எதிரே லக்ஷ்மி போன்ற அழகான பெண். மதுவருந்திக் கண்கள் சிவந்து கிறங்கி உட்கார்ந்திருக்கிறாள். அவள் எதிரே நிரம்பிய ஒரு மதுக்குடம், அதனை அவள் அணைத்திருக்கிறாள். பரசுராமருக்கு மதிமயக்கம் ஏற்பட்டது. "ஸம்வர்த்தர் தவறாக வழி காட்டியிருக்கமாட்டார். சூழ்ந்திருப்பவர்கள் மகா சாதுக்களாகத் தென்படுகிறார்கள். எப்படியாயினும் இவரே எனக்கு குரு. தோற்றத்தால் நல்லது நல்லதல்ல என்று மனம் காட்டும் பேதலிப்பிற்கு இடம் தரமாட்டேன்." என்ற நிச்சயபுத்தி ஏற்பட்டு வணங்கினார்.

'பிருகுவம்சத் தோன்றலே! வருக' என்று வரவேற்றார் குரு. இங்கு வந்த காரியத்தை வினவினார் " நான் ஒரு சமயம் அதிக வைராக்கியத்தால் எல்லாச் செயல்களையும் விட்டொழித்திருந்தேன். மனிதனுக்கு சத்துரு அவனது இந்திரியங்களே. அவற்றிலும் மிகக் கொடுமையான எதிரிகள் வாயும் குறியும். இரண்டையும் வென்றவன் எல்லாவற்றையும் வெல்வான். நான் எப்படி

இருக்கிறேன் என்று பார்த்தாயல்லவா? இவ்விரண்டும் என்னை வென்றுவிட்டன. புத்தியைக் கெடுக்கும் கள். நல்லோர்கள் வெறுக்கும் வேசி, இவ்விரண்டையும் நான் சார்ந்திருக்கிறேன். நல்லோர்கள் வெறுத்த பாதையில் செல்பவன். இந்த என்னிடத்தில் ஏன் வந்தாய்?' என்றார்.

பரசுராமருக்கு முதலில் அறிமுகமான ஸம்வர்த்தர் கண்முன் நின்றார். தன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொள்ள யோகிகள் இப்படித்தான் வேஷம் போடுவர் என உணர்ந்தார். ஸம்வர்த்தர் காட்டிய நல்வழியில் தீவிர ஈடுபாட்டுடன் வந்த தன்னைக் கருணையுடன் ஏற்குமாறு கண்ணீர்மல்கக் கோரினார். ஸ்ரீ தத்தாத்ரேயரும் அவரை ஏற்றுத் தேவி வழிபாட்டு முறைகளையும் ஆத்ம தத்துவத்தையும் விளக்கி உணரச்செய்து சிறந்த யோகியாகச் சிறந்த குருவாக அவரை ஆக்கினார்.

## 4. ஸுமேதர்

ஸுமேதர், ஸுமேதஸ், ஹாரிதாயனர் என்ற பெயர்களால் குறிப்பிடப்பெறும் இவர் பரசுராமரின் சீடர்.

ஸுமந்து என்ற முனிவரின் பிள்ளை அலர்க்கர். ஸரஸ்வதி நதிக்கரையில் தன் மனைவியுடன் வசித்து வந்தார். அவருக்கு ஒரு புதல்வன். அவனும் ஸுமந்து, அலர்க்கர் நல்ல தேவி உபாஸகர். தன் மனைவியைப் பெயரிட்டு அழைக்காமல் 'அயி' 'அயி' என்றே கூப்பிடுவார். பாலனான ஸுமந்துவிற்குத் தைவ வசமாக 'அயி' என்ற சொல்லில் ஒரு புதுமை உணர்வும் இணையற்ற ஈடுபாடும் ஏற்பட்டன. அவனும் எப்போதும் 'அயி' 'அயி' என்றே சொல்லிக்கொண்டு வந்தான். முன்வினைப் பயனாக வந்த கொடும் நோய் அவனை மரணத்திடம் இட்டுச்சென்றது. தாயிடம் அதிக அன்புகொண்ட சிறுவன் எப்போதும் ஐ ஐ என்று புலம்பிக் கொண்டே இறந்தான்.

ஐ என்பது ஸ்ரீ பாலா திரிபுரஸுந்தரி தேவியின் மூன்றெழுத்து மந்திரத்தின் முதல் எழுத்து. முன்பிறப்பில் எண்ணற்ற தடவைகள் ஐ என்ற பாலா மந்திரத்தின் வாக்பவ கூடத்தின் முற்பகுதியை உச்சரித்ததன் பயனாக மறு பிறப்பில் ஸுமேதராகப் பிறந்தவருக்குத் தேவி வழிபாட்டில் ஈடுபாடு தானே மலர்ந்தது. மலயமலையில் தவமிருந்த பரசுராமரை அண்டினார். அவரது சீடரானார். 16 ஆண்டுகள் பணிவிடை புரிந்து வாழ்வு மேன்மை பெற உபதேசம் புரிய வேண்டினார். அவரும் தன் குருவருளை நினைத்து வணங்கி சீடனுக்கு ஸ்ரீ பாலா மந்திரத்தை முறைப்படி உபதேசித்தார். ஸுமேதர் ஸ்ரீ சைலத்தில் பிரமராம்பிகை ஸந்நிதியில் ஜப ஸாதனை

செய்தார். ஸுமேதருக்கு முற்பிறவி வாஸனையும் குருநாதனின் அருளும் கூடி எளிதில் மந்திரசித்தி எற்பட்டது.

கனவில் பாலாதேவி தோன்றி மந்திரசித்தி ஏற்பட்டதை உணர்த்தினாள். அசரீரியாக நின்று நினைவிலும் அதனை உறுதிப் படுத்தினாள். ஸுமேதர் மறுபடி பரசுராமரை அடைந்து ஸ்ரீ வித்யா தீக்ஷை பெற்றார். ஸ்ரீ தத்தாத்ரேயர் உபதேசித்த திரிபுராதேவியின் இதிஹாஸத்தையும் ஸ்ரீ வித்யா தத்துவத்தையும் ஆத்ம தத்துவத்தையும் உள்ளடக்கிய திரிபுரா ரஹஸ்யம் என்ற நூலை உபதேசமாகப் பெற்றார். அதனை நூல் வடிவமாக்கி சீடர்கள் மூலம் பரப்புமாறு குருநாதர் ஆணையிட, அதனை நிறைவேற்ற மதுரையம்பதி வந்து சேர்ந்தார். ஐந்தாண்டுகள் மீனாக்ஷி தேவியை வழிபட்டு வந்தார். திரிபுரா ரஹஸ்யத்தை நூல் வடிவம்பெறச் செய்வதில் ஏதோ தடங்கல் இருந்து வந்தது. உபதேசம் கோர்வையாக மனதில் பதியாதது போன்ற உணர்ச்சி பாதித்தது.

நாரதர் ஸுமேதரின் ஆசிரமத்திற்கு வந்தார். ஸுமேதர் திரிபுரா ரஹஸ்யத்தை இயற்றுவதில் குருவருள் கூடிவராதிருப்பதை தெரிவித்து வழிகாட்டக் கோரினார். நாரதர் தியானத்தால் ஸ்ரீ பிரும்ம தேவனை ஸ்மரித்து இதற்கு வழிகாட்டி உதவக்கோரினார். பிரும்மதேவன் தோன்றி "முன்பிறவியில் பாலா மந்திரத்தின் குறை வடிவத்தைக் கூறியதால் உள்ள குறை இது. அதனால் உபதேசம் மனத்தில் நிலைக்கவில்லை. இந்தக் குறை இப்போது நீங்கிவிடும். உபதேசங்கள் அனைத்தும் பூர்ணமாகத் தாரணையில் நிற்கும்" என அருள்புரிந்து மறைந்தார். நாரதரின் உபதேசப்படி 36 நாட்களில் தினமும் 4 அத்யாயங்களாக 3 கண்டங்களில் திரிபுரா ரஹஸ்யத்தை இயற்றினார்.

நூலின் அரங்கேற்றத்திற்கு ஒரு மஹான் அதனை முதலில் கேட்டு ஸம்மதம் தருவது அவசியம். ஸுமேதர் நாரதரையே முதலில் அதனைக் கேட்கக் கோரினார். திரிபுரா ரஹஸ்யத்தை நாரதருக்கு முதலில் கூறினார் ஸுமேதர். இப்படி நாரதர் ஸுமேதர் ஸம்வாதமாக இந்த நூல் அமைந்துள்ளது.

மாஹாத்ம்ய கண்டத்தின் முதல் சுலோகம்

'ओं नमः कारणानन्दहृद्बीजाकाशगात्रिणे।
यल्लीलालेशलसिता लोकालोकाण्डरेणवः॥' என

மாஹாத்ம்ய கண்டத்தின் இறுதி சுலோகம்

' सर्वागमाब्धिमथनात् यद्भक्त्यमृतमाप्य तु।
अमृताः शिवमुख्याः स्युः सा माता त्रिपुरैव ह्रीम्।।' என

ஜ்ஞான கண்டத்தின் முதல் சுலோகம்

ओं नमः कारणानन्दरूपिणी परचिन्मयी।
विराजते जगच्चित्रचित्रदर्पणरूपिणी।। என

ஜ்ஞான கண்டத்தில் இறுதி சுலோகம்

सर्वात्मभूतं यद्रूपं विचार्यावगतं स्फुटम्।
मुक्तिः स्यादन्यथा बन्धः सा भवेत् त्रिपुरैव ह्रीम्।।' என

இப்படி ஒவ்வொரு கண்டமும் சிவப்பிரணவமான ஓங்காரத்தில் தொடங்கி சக்தி பிரணவமான ஹ்ரீங்காரத்துடன் நிறைவு பெறுகின்றது. சிவசக்தி ஐக்கிய அனுஸந்தானம் என்கிற சாக்த ஸமயத்தின் லக்ஷ்யமும் சிவசக்திகளுக்குள் எல்லாமடங்கி விடுவதன் தத்துவமும் இதன்மூலம் தெளிவுபடுத்தப் பெறுகின்றன.

# திரிபுரா ரஹஸ்யம்

## மாஹாத்ம்ய கண்டத்தின் சுருக்கம்

எல்லாப் பொருள்களின் ஆத்மா பரம்பொருளே. அறியாமையால் தன்னையே அறியாததால் ஆத்மாவின் எல்லையற்ற சக்திகள் குறுகி, ஆத்மாவும் குறுகியவன்போல் ஆகிவிட்டான். நித்யமாயும் ஒளி வடிவாயுமிருந்தும் ஆத்மா அறியப்படவில்லை. ஆத்மாவை நன்கு அறிந்தால் ஆத்மா குறுகியவன் என்ற மோகம் நீங்கும். அவனது அநந்தமான சக்திகள் வெளிப்படும். அந்த ஆத்மஜ்ஞானம் பராசக்தியின் கிருபையால் தான் பெறத்தக்கது. அதனால் முதலில் பராசக்தியான திரிபுரா தேவியை வழிபட வேண்டும். வழிபடுவதற்கு அவளிடம் பக்தி தோன்றவேண்டும். அவளது பெருமைகளை அறிந்தால் ஆழ்ந்த பக்தி ஏற்படும். அதனால் தேவியின் பெருமைகளை விளக்குகிறேன் என ஸ்ரீ தத்தர் பரசுராமருக்கு தேவியின் பற்பல தோற்றங்களைப் பற்றித் தந்த விளக்கங்களே மாஹாத்ம்யகண்டம். அத்தோற்றங்களைப் பற்றிய வரலாற்றுச் சுருக்கம் பின்வருமாறு.

## 1. குமாரீ

இந்திரன், அக்னி, சந்திரன், வாயு இவர்களிடையே யார் இவர்களுக்குள் பெரியவன் என்று கலகம். விஷ்ணுவிடம் நடுவர் தீர்ப்பிற்காகச் சென்றனர். விஷ்ணு சிவனைத் தியானித்தார். சிவன் தோன்றினார். அவர் தேவியைத் தியானித்தார். பேரொளி வெளிப்பட்டது. பாதாளத்திற்கும் விண்வெளிக்கும் அப்பாலும் விரிந்த ஒளி. தேவர்களின் பிரார்த்தனைக் கிணங்க 18 கைகளுடன் தேவி கன்னிகை வடிவில் தோன்றினாள். அவள் ஒரு சிறு புல்லைத் தந்து அக்னி, வாயு, சந்திரன், இந்திரன் இவர்களைத் தம் சக்தியைப் புல்லிடம் காட்டப் பணித்தாள். அக்னியால் புல்லை எரிக்கமுடியவில்லை. மாறாகக் புல்லின் குளிரினால் அவன் நடுங்கினான். சந்திரனிடம் காட்டிய புல் எரிந்தது. சந்திரனது குளிர்ச்சி அதனை அடக்கமுடியவில்லை. சந்திரனின் உடல் தீயில் வெந்தது. வாயுவால் அந்தப் புல்லை நகர்த்தமுடியவில்லை. வாயு தன் சலன சக்தி முடங்கியவனாக நகரும் சக்தி இழந்தான். இந்திரனது வஜ்ராயுதமும் அதனைத் தாங்கிய கரமும் ஸ்தம்பித்தன. தேவியே சராசரத்தை இயக்கி வைக்கும் சக்தி. அவளிடமிருந்து பெற்ற சக்தித் திவிலைகளே இந்திரர் சந்திரர் முதலான தேவதைகளின் சக்திகளாக விளங்குகின்றன என்பதனை அறிந்த தேவர்கள் மமதையும் மயக்கமும் நீங்கியவராயினர். ( 7-9 அத். )

## 2. திரிரூபா

தேவியே பரம்பொருள். தன்னுள் முன்னர் ஒடுங்கிய உலகை மீண்டும் படைக்கத் தேவி திருவுளம் கொண்டாள். தேவியின் விருப்பம் இச்சா சக்தியாயிற்று. அவ்விருப்பம் படைக்கவேண்டியதைப் பற்றிய ஞான வடிவம் பெற்று ஞான சக்தியாயிற்று. அதிலிருந்தும் செயல் பிறந்து கிரியா சக்தியா யிற்று. அவை முறையே சிவன், விஷ்ணு, பிரும்மன் என்ற மும்மூர்த்தி வடிவம் பெற்றன. ஒடுக்குதல், காத்தல், படைப்பு என்ற தொழில்களில் அவர்கள் தேவியின் பிரேரணையால் ஈடுபட்டனர். தேவி தன்னிடமிருந்து லக்ஷ்மீ, கௌரீ, ஸரஸ்வதி என்ற மூன்று சக்திகளை வெளிப்படுத்தி முறையே பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களது ஸகோதரியாக்கினாள். பிரும்மாவின் ஸகோதரியான லக்ஷ்மியை மஹாவிஷ்ணுவும், விஷ்ணுவின் சகோதரியான கௌரியை சிவனும், சிவனது சகோதரியான ஸரஸ்வதியை பிரும்மாவும் மணக்கும்படி தேவி பணித்தாள். மூன்று தேவிகளும் மும்மூர்த்திகளின் சக்திகள் ஆயினர். இப்படி திரிரூபா – மூன்று வடிவம் பெற்றவளாக முத்தொழில்களைப் புரியும் சக்தியாக விளங்கினாள். (10.அத்)

ஸ்ருஷ்டி தொடங்கிப் பல்லாயிர ஆண்டுகள் வரை ஆசையற்றுத் தேவையுணர்ச்சியின்மையால் தேவர்களை வேண்டி வேள்விகள் புரிவதில்

எவரும் ஈடுபடவில்லை. வேள்விகள் இல்லாததால் பூலோகவாசிகளிடையே தேவர்களுக்கு மதிப்பு ஏற்படவில்லை. தேவர்கள் அவர்களிடம் யாதொரு அதிகாரத்தையும் செலுத்த முடியவில்லை. ஆசையிருந்தால் தேவையுணர்ச்சி ஏற்படும். மனித முயற்சியால் சுயத் தேவை பூர்த்தி பெறாவிடில் தேவர்களின் உதவியை மனிதர் நாடுவர். வேள்விகள் நடக்கும். ஆக இத்தனைக்கும் அடிப்படைத் தேவை ஆசை. அந்த ஆசையைத் தேவர்களால் தூண்ட இயலவில்லை. அக்காலத்தில் ஆண்ட அரசர் வீரவிரதர். அவரது ஆட்சித் திறன் காரணமாக மக்களுக்கு எதிலும் ஆசைப்பட வாய்ப்பிராதபடி தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டன. அதனால் தேவர்கள் தம் மதிப்பைப் பெறவும் ஆசையைப் பூலோகவாசிகள் மனதில் தூண்டவும் வகைசெய்யும்படி காப்பு சக்தியும் திரிரூபாவில் ஒருவளுமான ஸ்ரீ லக்ஷ்மி தேவியிடம் வேண்டினர்.

லக்ஷ்மிதேவி காமனைப் படைத்தாள். சிவபக்தி மிக்க அந்த மக்களிடையே காமனது முயற்சியும் தோற்றது. அதனால் வெகுண்ட காமன் தேவர்களின் படை உதவி பெற்று அரசன் வீரவிரதனுடன் போரிட்டான். தன் பக்தனான அரசனுக்கு உதவ வந்த சிவபெருமான் தன்னை எதிர்த்த காமனை அழித்தார். புதல்வனை இழந்த லக்ஷ்மி பராசக்தியை வழிபட்டுக் காமனை உயிர்ப்பித்தாள். பிழைத்தெழுந்த காமன் தன்னை அழித்த சிவனை வென்றால் அன்றி உயிர்வாழேன் எனச் சூளுரைத்துத் தாயின் உதவியை வேண்டினான். அதற்கு உதவ கௌரியை லக்ஷ்மி வேண்டினாள். கௌரி சிவனை வழிபட்டால் அது எளிதாகும் என வழிகாட்டினாள். சிவ வழிபாட்டில் ஈடுபட மறுத்து சிவ துவேஷம் மிகுந்தவனாக சிவனோடு போரிடுவதிலேயே வெறிகொண்டிருந்த காமனை "சிவனுடன் போரிடுவாயாயின் சாம்பலாவாய்" என கௌரி சபித்தாள். பிள்ளைப்பாசம் மிக்க லக்ஷ்மியும் அதனால் வெகுண்டு "சிவனை அவமதிப்பதைப் பொறுக்காமல் நீயும் சாம்பலாவாய்" எனக் கௌரியைச் சபித்தாள். இருவருக்குமிடையே இப்படி வளர்ந்துவந்த கலகத்தை ஸரஸ்வதி இடைநின்று சமனப்படுத்தினாள். (11–21 அத்)

தக்ஷனுக்குப் பெண்ணாக ஸதீ என்ற பெயருடன் தோன்றிய கௌரி சிவனை மணந்தாள். சிவபெருமான் தன்னை மாமனாராக மதித்து வணங்காததால் தக்ஷன் சிவனிடம் துவேஷம் கொண்டு சிவனுக்கு வேள்வியில் உரிய பங்கை அளிக்காமல் வேள்வி புரிந்தான். அப்போது ஸதீதேவி அங்கு செல்ல, தக்ஷனது சிவநிந்தை பொறுக்காமல் யோகாக்னியால் தக்ஷன் கொடுத்த உடலைப் பொசுக்கிக் கொண்டாள்.

(22 அத்)

காமன் சிவனை வெல்வதற்காக லக்ஷ்மிதேவி கூறியபடி திரிபுரா தேவியை வழிபட்டான். தேவி தன் கரும்பு வில்லிலிருந்தும், புஷ்ப பாணங்களிலிருந்தும் வில்லையும் பாணங்களையும் படைத்துக் காமனிடம் தந்தாள். காமன் வழிபட்ட மந்திரமுறை காமராஜ வித்யையாயிற்று.

(23–25 அத்)

ஹிமவானின் பெண்ணாகக் கௌரி பிறந்தாள். சிவனை மணப்பதில் அவள் கொண்ட தீவிர ஈடுபாட்டை உணர்ந்த ஹிமவான் சிவனுக்கு அவளை மணம் செய்துவைத்தார். தாரகனும் சூரபத்மனும் தேவர்களைத் துன்புறுத்தினர். அவ்வசுரர்கள் "சிவபெருமானது குமாரனால் தான் அவர்களை மாய்க்கமுடியும்" என்று வரம் பெற்றவர்கள். சிவபெருமான் தவத்திலிருந்தார். தவத்தைக் கலைத்துச் சிவனைப் பார்வதியுடன் கூடியிருக்கச் செய்யத் தேவர்கள் காமனைத் தூண்டினர்.

காமனும் லக்ஷ்மியும் சிவனை வெல்வதற்கு அருளும்படி பராசக்தியை வழிபட்டனர். தேவி காமனைத் தன் கண்களுக்குள் ஆகர்ஷித்துக் கொண்டு காமாக்ஷியாக விளங்கினாள். "கௌரி தந்த சாபப்படி சிவனது பார்வையில் சாம்பலானாலும் மறுபடியும் தன் அருளால் வாழ்வுபெற்று ரதியை மகிழ்விப்பான்" என அருளினாள். சிவனது ஸமாதியைக் கலைத்த காமன் சிவனது கோபப் பார்வையில் சாம்பலானான். தேவர்களது வேண்டுகோளுக்கேற்ப சிவன் தனது தேஜஸ்ஸை பூமி அக்னி வாயு கங்கை முதலானவர்கள் மூலம் கௌரியின் மற்றோர் வடிவமான சரவணப் பொய்கையில் இட்டார். அதில் குமரன் தோன்றினார். தேவ ஸேநாபதியாகி அஸுரர்களை மாய்த்துத் தேவர்களுக்குச் செல்வத்தை மீட்டுத்தந்தார். இப்படி லக்ஷ்மீ கௌரி ஸரஸ்வதி என்ற மூன்று தோற்றங்களைக் கொண்டதால் தேவி திரிரூபா.

(26–41 அத்)

## 3. சண்டிகா

மது, கைடபன் என்ற இரு அஸுரர்கள், உலகைப் படைக்கத் தொடங்கிய பிரும்மதேவனைத் துன்புறுத்தினார்கள். யோக நித்திரையில் ஆழ்ந்திருந்த விஷ்ணுவை யோகமாயையான தேவி எழுப்பிப் போரிடச் செய்து அஸுரர்களை அழிக்கச் செய்தாள். அந்த அஸுரர்களின் வம்சத்தில் பிறந்த சும்பனையும் நிசும்பனையும் சண்டிகா என்ற தோற்றத்தில் அழித்தாள். அவர்களது சேனாவீரர்களான சண்டனையும் முண்டனையும் அழித்து 'சாமுண்டா'வானாள் (42–43 அத்)

## 4. காளீ

திதியின் பிள்ளைகள் காலகஞ்ஜர்கள் என்ற அஸுரர்கள். அவர்களை அழிக்கத் தேவர்களால் பிரார்த்திக்கப் பெற்ற தேவி ஹுங்காரமிட்டாள். அதிலிருந்து தோன்றியவள் காளீ. தேவியின் அருளால் மஹா காலனைக் கணவனாகப் பெற்றாள். அஸுரர்களை அழித்து உலகைக் காப்பாற்றினாள். (அத் 44)

## 5. துர்கா

பிராமணப் பெண்ணின் சாபத்தால் இந்திராணி பெண்ணெருமையானாள். அவளிடமிருந்து தோன்றியவன் மஹிஷாஸுரன். தேவர்களது சக்திகள் அனைத்தும் குவிந்து ஒருருவம் பெற்றன. அந்த சக்தி வடிவமே துர்க்கை, அவள் மஹிஷனை அழித்து உலகை வாழவைத்தாள். (அத் 45–46)

## 6. ஸ்ரீ லலிதா

இத்தோற்றம் பராசக்தியின் பூர்ணத்தோற்றம். காமனது சாம்பலைக் கணேசன் உருட்டி வடிவமைத்தார். பார்வதி தூண்ட சிவன் அதனை நோக்கி அதற்கு உயிரூட்டினார். அவனே பண்டன் என்ற அஸுரன், தவ வலிமைமிக்க அவன் முப்பது புத்திரர்களோடும், தன்னால் படைக்கப்பட்ட விஷங்கன் என்ற சேனாபதியுடனும், விசுக்ரன் என்ற மந்திரியுடனும் சூன்யகம் என்ற சோணிதபுரத்திலிருந்து கொண்டு மூவுலகையும் ஆண்டான். மேருவில் மாத்திரம் செல்ல முடியாதபடி சாபம் அவனைத் தடுத்தது. தேவர்கள் மேருவில் கூடித் தம்மையே சிதக்னி குண்டத்தில் ஹோமம் செய்தனர். தேவி அதிலிருந்தும் ஸ்ரீ லலிதாவாகத் தோன்றினாள். காமேசுவரரை மணந்து ஸ்ரீ நகரத்தில் மஹாராஜ்ஞியாகப் பட்டாபிஷேகம் ஏற்றாள். ஸ்ரீ சக்ரராஜ ரதத்தில் ஏறித் தன் சக்தி வடிவங்களான மந்திரிணீ, வாராஹீ, அச்வாரூடா, ஸம்பத்கரீ, நித்யா தேவிகள், புதல்வியான பாலா தேவி இவர்களுடன் கூடப் பண்டனுடன் போரிட்டுப் பண்டனையும் அவனைச் சார்ந்தவர்களையும் சூனிய நகரத்தையும் அழித்தாள். (அத் 47–78)

இப்படிப் பல தோற்றங்களைக் கொண்டு அஸுரர்களின் துன்புறுத்த லிலிருந்தும் உலகைக் காப்பாற்றி எல்லாப் பொருள்களின் சக்தியாகத் திகழ்ந்த திரிபுரா தேவியை வழிபடச் சிலமுறைகள் உண்டு. முறைப்படி தீக்ஷை முதலியவைகள் பெறாவிடில் தேவியின் அருளைப் பெற முடியாது. அகஸ்தியர் ஹயக்கிரீவரிடமிருந்து ஸ்ரீ லலிதா தேவியின் பெருமைகளை அறிந்து அவளிடத்தில் தீவிர பக்தி கொண்டவராகித் தம் மனைவியான

லோபாமுத்ரையிடமே மந்திர தீக்ஷை பெற்று வழிபட்டார். தக்க குருவையடைந்து தீக்ஷைகளை முறைப்படி பெற்று ஸ்ரீ வித்யா மந்திர உபதேசம் பெற்றுத் திரிபுரையை வழிபடவேண்டும்.

சக்திக்கு இருப்பிடம் சிவன். சிவனின்றி சக்தி இருக்க முடியாது. தனது ஆத்மசக்தி இல்லாமல் சிவனாலும் இருக்க முடியாது. ஒளியின்றி சூரியனும், சூரியனின்றி ஒளியும் இருக்கமுடியாதது போல் எது இருக்கிறதோ அதுவே சித்சக்தி. சித்சக்தி இருந்தால் தான் உலகமே உண்டு. புலனுக்கப்பாற்பட்ட அந்த பராசக்தியை வாக்கால் குறிப்பிட உதவுபவை அவளது பல வடிவங்கள். வேதம் புராணங்கள் அனைத்திலும் தேவியைப் பற்றி அறிய உதவும் தந்திர பாகங்கள் நிறைந்துள்ளன. அவைகளிலுள்ள ஸாரங்களைத் தனியே தொகுத்துத் தந்திரங்களாக்கினர். அவைகளிலுள்ள தீக்ஷை முறைப்படி மந்திர உபதேசம் பெற்றுத் தேவியை வழிபட வேண்டும். வழிபாட்டிற்கான தந்திரங்கள்(செய்முறைகள்) மந்திரங்கள், யந்திரங்கள் இவைகளைக் குரு உபதேசித்தபடி ஏற்று வழிபடுபவனே தேவியின் அருளை எளிதில் பெறுவான்.

(அத் 79-80)

இது மாஹாத்ம்ய கண்டத்தின் சுருக்கம். ஜ்ஞான கண்டத்தை விரிவாக இனிக் காண்போம்.

,,,,,,,,,,,,,,,,


பரமேஷ்டிகுரு
சதாசிவ பிரம்மேந்திரா
சரஸ்வதி ஸ்வாமிகள்
பரமகுரு
சுயம்பிரகாச பிரம்மேந்திரா
சரஸ்வதி சுவாமிகள்.
சத்குரு
கிருஷ்ணானந்த பிரம்மேந்திரா
சரஸ்வதி சுவாமிகள்.



ஸத்குரு ஸ்ரீ கிருஷ்ணானந்த பிரம்மேந்திர ஸரஸ்வதி
அவதூத ஸ்வாமிகள்

# त्रिपुरारहस्यम्

## ज्ञानखण्डः-प्रथमोऽध्यायः

# திரிபுரா ரஹஸ்யம்

## ஞானகண்டம்

## முதல் அத்தியாயம்

ओं श्रीत्रिपुरायै नमः

ओं नमः कारणानन्दरूपिणी परचिन्मयी।
विराजते जगच्चित्रनचित्रदर्पणरूपिणी॥ १ ॥

**ஓம் எனும் பிரணவத்தால் குறிப்பிடப் பெறுபவளும் அனைத்திற்கும் முதற்காரணமான பர ஆனந்த வடிவினளும் பேரறிவாயிருப்பவளும் உலகமாகிற அரிய சித்திரத் தோற்றத்திற்கு ஆதாரமான கண்ணாடியாயிருப்பவளுமான தேவிக்கு நமஸ்காரம்.**

***தேவி பரம்பொருள். தேவியே எல்லாவற்றிற்கும் மூல காரணம். அவள் ஸத்–சித்–ஆனந்த வடிவினள். நம் அனுபவத்தில் உணரப்படும் ஸத்–சித்–ஆனந்த நிலைகளுக்கு மூலகாரணமான ஸத் – சித்– ஆனந்த வடிவினள். நமது அனுபவத்தில் உணரப்படும் பொருள் அனைத்தும் காலம் தேசம் வடிவம் என்ற மூன்று வரையறைகளுக்கு உட்பட்டுக் குறுகி நிலையற்றிருப்பவை. அவை நித்யத் தன்மை பெறாமையால் ஸத் அல்ல. அவை உணர்பவன், உணரப்படும் பொருள், உணர்வு என்ற திரிபுடிக்கு உட்பட்டும் அந்த திரிபுடியை எதிர்பார்த்தும் உள்ள சித் அம்சம் கொண்டவை. அவை வேறொன்றை எதிர்பார்த்துப் பெறக்கூடிய ஆனந்த அம்சம் கொண்டவை. உலகில் காணும் இந்த ஸத் அம்சத்திற்கும், சித் அம்சத்திற்கும், ஆனந்த அம்சத்திற்கும் மூலகாரணம் தேவி. கால தேசவரை, உருவ வேற்றுமை, திரிபுடியின் எதிர்பார்வை, மற்றொன்றைச் சார்ந்து ஏற்படும் ஆனந்தம் என்று கூறுபோட முடியாத ஸத் சித் ஆனந்தங்களின் வடிவமானவள். அதனால் காரண ஆனந்த வடிவினள். திரிபுடிக்கு அப்பாற்பட்ட கூறுபோடப்படாத – துண்டாடப்படாத பரமான சித் (பேரறிவு) வடிவினள். தோன்றுமளவில் ஸத்தாக உள்ள இந்த உலகிற்கு ஆதாரமானவள். வடிவமைப்பிற்குள்ளும் காலதேச வரம்பிற்குள்ளும் அடங்காதவள், புலனுணர்விற்கும் அப்பாற்பட்டவள் (ஸத்–பேரிருக்கை, சித் – பேரறிவு***

ஆனந்தம் – பேரானந்தம். வரையறுக்கப்பட்ட இருக்கை, சிற்றறிவு, சிற்றின்பம் இதற்கு எதிரானவை) தேவி உலகிற்கு ஆதாரமாயிருப்பது விசித்திரமானது. தேவியைத் தவிர வேறொன்றும் எங்கும் என்றும் எந்த வடிவிலும் இல்லை. எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயிருக்கும் அவளே இந்த காரிய பிரபஞ்சமாகவும் தோன்றுகிறாள். ஆனால் உலகத் தோற்றம் பல பொருள் கொண்டதாகவும் ஆதாரமெனக் கொண்ட தேவியைக் காட்டிலும் வேறுபட்டதாகவும் தோன்றுகிறதே? ஆதாரத்தைக் காட்டிலும் அதனை ஆதாரமாகக் கொண்ட பொருள் வேறுபட்டதாக இருப்பது இயற்கைதானே? அந்நிலையில் தேவியே எல்லாம் என எப்படிக் கொள்வது? இந்த ஐயத்தை ஓர் உதாரணத்தின் மூலம் போக்கிக்கொள்ளலாம்.

ஓர் அழகிய முகம் பார்க்கும் கண்ணாடி. அளவில் மிகப் பெரியது. அதில் நகரில் உள்ள வீடுகள், வீடுகளில் உள்ள மனிதர்கள்,அவர்களின் நிறம், வடிவமைப்பு, சலனம் முதலிய எல்லா அம்சங்களும் பிரதிபிம்பங்களாகத் தெரிகின்றன. அவை மெய்ப்பொருளே என ஏமாறும் அளவு தோற்றப்பொலிவு காண்கிறது. அந்த அந்தப் பொருள்கள் தனிச்சிறப்புகளுடன் தத்ரூபமாகக் காண்கின்றன. அந்தப் பிரதிபிம்பப் பொருள்கள் கண்ணாடியில் தோன்றுவ-தால் அவற்றிற்குக் கண்ணாடி ஆதாரம். அந்த ஆதாரமான கண்ணாடியிலிருந்தும், அதில் தோன்றும் அவை வேறுபட்டவை அல்ல. அதாவது கண்ணாடியின் இருக்கை (ஸத்வம்)யைக் காட்டிலும் வேறுபட்டு அந்தப் பிரதிபிம்பத்திற்கு இருக்கை இல்லை. கண்ணாடியின் இருக்கையே அவற்றின் இருக்கையும். அதுமட்டுமல்ல. அங்கு கண்ணாடி மட்டும் ஸத். அதனுள் காணும் பிரதி பிம்பம் அதில் தோன்றும் அளவில் ஸத். தேவி 'தான்' ஆகிய ஆதாரத்தில் –கண்ணாடியில் இந்த உலகத்தைப் பிரதி பிம்பமாகப் பலவித விசித்திரத் தோற்றங்களுடன் காட்டுகிறாள். (ஜகத் –சித்ர – சித்ர – தர்பண – ரூபிணீ, ) அந்த உலகம் தேவியே. தேவியைக் காட்டிலும் தனித்த இருக்கை கொண்ட வேறு பொருள் அல்ல. அப்போது ஆதாரம், ஆதேயம் (ஆதாரமாக அதனைக் கொண்ட பொருள்) என்ற வேற்றுமை எதற்கு? எனில், கண்ணாடி, அதனுள் தெரியும் பிரதிபிம்பம் என்று இரண்டும் தனித்துத் தெரிகின்றன. இரண்டும் கண்ணாடி என்று அறிந்து பிரதிபிம்பத்தின் தோற்றத்தால் பாதிப்பு அடையாதவருக்கு வேற்றுமை இல்லை. கண்ணாடியைக் காணாத அளவிற்குப் பிரதிபிம்பத் தோற்றத்தால் ஈர்க்கப்பட்டவர்களுக்குப் பிரதிபிம்பமாகிய உலகம் மட்டுமே

*உண்டு. கண்ணாடியையும் பிரதிபிம்பத்தையும் பார்ப்பவர்கள் ஆதாரம் எது, ஆதேயம் எது என்று அறிவது அவசியம். ஆதாரத்தைத் தவிர்த்து ஆதேயத் திற்குத் தனித்து இருக்கை கிடையாது என்ற அறிவால் மூலகாரணப் பொருள் பற்றிய அறிவு திடப்படுகிறது. அப்படித் தேவி, உலகிற்கு ஆதாரமாக நின்று, உலகில் தனது ஸத்-சித்-ஆனந்த அம்சம் துலங்கும்படி காட்டுபவள். அப்படிப் பரமான ஸத் வடிவம் கொண்டவள்.*

*தனித்துக் குறிப்பிட உதவும் நாமம் ரூபம் முதலியவற்றிற்கு அப்பாற்பட்ட தேவியை எதனைக்கொண்டு குறிப்பிடுவது? தஸ்யவாசக: ப்ரணவ: என யோகஸூத்திரம் இதற்கு வழி காட்டுகிறது. பிரணவம் ஒன்றே தேவியைக் குறிப்பிடும் சொல். அந்த வடிவில் இருப்பவள் என்பதை முதலில் தியானித்துப் பின் அவளது ஸத்சிதானந்த வடிவைத் தியானிப்போம். அந்த தேவியிடம் நெருங்க விழைவோம். அதற்கு உதவுவது 'தன்'னை இழத்தல் என்பதன் வடிவமான நமஸ்காரம். இந்த மங்கள சுலோகத்துடன் ஸுமேதர் நாரதருக்கு மாஹாத்ம்ய கண்டத்தைத் தொடர்ந்து ஞான கண்டத்தைச் சொல்லத் தொடங்குகிறார்.*

श्रुतं कच्चिन्नारदैतत् सावधानेन चेतसा।
माहात्म्यं त्रिपुराख्यायाः यत्श्रुतिः परसाधनम्॥ २ ॥
अथ ते कथयाम्यद्य ज्ञानखण्डं महाद्भुतम्।
यत्श्रुत्वा न पुनः क्वापि मनुष्यः शोकमृच्छति॥ ३ ॥

நாரதரே! திரிபுராதேவியின் பெருமையை மன ஈடுபாட்டுடன் கேட்டீர்களா? அதனைக் கேட்பதே மேலான நிலைக்குச் சாதனமாக அமையும். அதனை அடுத்து நான் தங்களுக்கு மிகவும் வியப்பூட்டும் ஞான கண்டத்தைக் கூறுகிறேன். அதனைக் கேட்டால் மனிதன் எதிலும் மறுபடியும் சோகத்தை அடையமாட்டான்.

वैदिकं वैष्णवं शैवं शाक्तं पाशुपतं तथा।
विज्ञानं सम्यगालोच्य यदेतत् प्रविनिश्चितम्॥ ४ ॥
नैतद्विज्ञानसदृशं अन्यन्मानसमारुहेत्।
यथा श्रीदत्तगुरुणा भार्गवाय निरूपितम्॥ ५ ॥
उपपत्त्युपलब्धिभ्यां समेतं बहु चित्रितम्।

வேதத்தின் முடிவுரையான உபனிடதங்கள் கூறும் தத்துவ தர்சனமுறை, அவ்வாறே வைஷ்ணவ – சைவ–சாக்த – பாசுபத தத்துவ தர்சன முறைகள் இவைகளை நன்கு ஆராய்ந்து சிறந்ததெனத் தெளிவாகக்கண்டு நிர்ணயித்த தத்துவ தர்சன முறை இது. ஸ்ரீ தத்தகுரு பரசுராமருக்கு உபதேசித்தது. இந்த தத்துவதர்சன முறையைப்போல் எளிதில் வேறு ஒரு முறையும் மனதிற் பதியாது. யுக்தியுடனும் அனுபவத்துடனும் பல அழகிய கதைகள் மூலம் சித்தரிக்கப்பெற்றது.

अत्रोक्तेनापि नो वेद यदि कश्चिद्विमूढधीः ॥ ६ ॥
स केवलं दैवहतः स्थाणुरेव न संशयः ।
न तस्य स्यादपि ज्ञानं साक्षात् शिवनिरूपितम् ॥ ७ ॥
तत्ते शृणु समाख्यास्ये ज्ञानखण्डात्मना स्थितम् ।

இங்கு கூறப்பட்டதைக் கொண்டும் தத்துவத்தை ஒருவன் அறியாவிடில் அவன் ஒரு அறிவிலி. விதியால் அழிந்தவன். பட்டுப் போன மரக்கட்டை. சிவனே நேரிடையாக விளக்கினாலும் அவனுக்கு அது விளங்காது. அந்த தத்தரின் உபதேசம் ஞானகண்ட வடிவில் உள்ளது. அதனை விரித்துக் கூறுகிறேன். கேட்பீராக.

अहो सतामद्भुतं हि वृत्तं सर्वगुणोत्तरम् ॥ ८ ॥
यन्मत्तोऽप्येष देवर्षिः शुश्रूषत्यपि किञ्चन ।
अनुग्राहकता चैषा सतां सहजसंभवा ॥ ९ ॥
यथा घ्राणोल्लासकता मृगनाभेः स्वतःस्थिता ।

நல்லோர்களது நடவடிக்கைகளைப் பற்றி என்ன சொல்ல? அது மிக விசித்திரமானது. எல்லா சிறப்புகளுக்கும் மேம்பட்டது. இந்த தேவரிஷியான நாரதரே என்னிடமிருந்தும் எதனையோ அறிய விரும்புகிறாரே! நல்லோர்களுக்குத் தம்மை நாடி வந்தவர்களின் விருப்பம் கைகூடச் செய்கின்ற தன்மை இயற்கையாகவே அமைந்தது. மானின் தொப்புளில் தோன்றியதாயினும் கஸ்தூரிக்குத் தன்னை முகர்பவனின் மூக்கை மகிழ்விக்கச் செய்கின்ற தன்மை தானே அமைந்துள்ளதல்லவா? (என ஸுமேதர் நாரதரின் கருணையை நினைத்து மகிழ்கிறார். பின்னர் நாரதரிடம் கூறுகிறார்)

एवं दत्तात्रेयमुखात् श्रुत्वा माहात्म्यवैभवम् ॥ १० ॥

रामः सर्वजनारामः जामदग्न्यः शुभाशयः ।
भक्त्यापहृतसच्चित्तः तूष्णीं किञ्चिद्बभूव ह ।। ११ ।।

(நாரதரே!) இப்படி (மாஹாத்ம்ய கண்டத்தில் கூறியபடி) தத்தாத்ரேயரின் திருமுகத்திலிருந்து வந்த தேவியின் மாகாத்ம்யத்தை எல்லா மக்களுக்கும் அமைதி அளிக்கும் தன்மை படைத்தவரும், நல்லிதயம் படைத்தவரும் ஜமதக்னியின் புதல்வருமான ராமர் கேட்டு பக்தியால் தன் நல்மன இயக்கம் அடங்கியவராகச் சிறிதுநேரம் மௌனத்தில் அமர்ந்தார்.

अथासाद्य बहिर्वृत्तिं भरितानन्दलोचनः ।
रोमाञ्चपीवरवपुः स्वान्तरानन्दनिर्भरः ।। १२ ।।
हर्षोऽमायन् रोमकूपविभेदान्निर्गमन्निव ।
प्रणनाम दत्तगुरुं दण्डवच्चरणान्तिके ।। १३ ।।
उत्थाय हर्षभरितः प्राह गद्गदसुस्वरः ।

சிறிது நேரத்திற்குப்பின் அடங்கிய மனம் வெளிவரப் பெற்றார். அவருள் ஆனந்தம் நிறைந்தது. அந்த ஆனந்தம் உள்ளடங்காமல் பீறிட்டு மயிர்க்கால்களின் இடைவெளி வழியே வெளிப்பட்டது. அதனை உணர்த்துமாப்போல், உடலெங்கும் மயிர்க் கூச்செரிவதால் பருத்தவராகக் காணப்பட்டார். கண்களில் அந்த ஆனந்தம் பொங்கித் தத்தளித்துக் கொண்டிருந்தது. தத்தகுருவின் திருவடிகளின் அருகே தண்டம்போல் விழுந்து வணங்கி எழுந்து, ஆனந்தம் பொங்கக் குரல் தழுதழுக்கக் கூறினார்.

धन्योऽहं कृतकृत्योऽहं श्रीगुरो त्वत्प्रसादतः ।। १४ ।।
यस्य मे करुणासिन्धुस्तुष्टः साक्षाद्गुरुः शिवः ।
यस्मिंस्तुष्टे ब्रह्मपदमपि स्यात्तृणसंमितम् ।। १५ ।।
मृत्युरप्यात्मतां याति यस्मात्तुष्टाद्गुरोर्ननु ।
ममाकाण्डादेव गुरुः सोऽद्य तुष्टो महेश्वरः ।। १६ ।।

குருதேவ! தங்கள் அருளால் நான் செய்யவேண்டியதைச் செய்துமுடித்தவனானேன். கருணைக்கடலும் சிவவடிவினருமான குரு என்னிடத்தில் அருள்நோக்குடன் காணப்படுவதால் நான் பாக்கியசாலி. குரு மகிழ்ந்தால் பிரமனின் நிலைகூட புல்லுக்குச் சமமாகிவிடும்; மரணமும் தன்னிலையாகிவிடும். (தன் இயற்கையான கருணையால்) என்னிடத்தில் பரமசிவ ரூபரான குருதேவர் திருப்தி அடைந்தார்.

मन्ये सर्वं मया प्राप्तमित्येव कृपया गुरो।
नाथ माहात्म्यमखिलं श्रुतं त्वत्कृपयाऽधुना।। १७।।
तामुपासितुमिच्छामि त्रिपुरां परमेश्वरीम्।
तदुपास्तिक्रमं ब्रूहि मह्यं सुकृपया गुरो।। १८।।

குருவின் அருளால் நான் அடையவேண்டியதை அடைந்து விட்டதாகவே கருதுகிறேன். தங்கள் கிருபையால் இப்போது தேவியின் பெருமை அனைத்தையும் கேட்டுவிட்டேன். அந்த பரமேசுவரியை திரிபுரையை வழிபட விரும்புகிறேன். குருதேவ! அருள்கூர்ந்து அவளை வழிபடும் முறையை எனக்குக் கூறுக.

इति संप्रार्थितो दत्तगुरुरालक्ष्य भार्गवे।
योग्यतां त्रिपुरोपास्तौ सच्छ्रद्धाभक्तिबृंहिताम्।। १६।।
क्रमेण दीक्षयामास त्रिपुरोपास्तिहेतवे।

இவ்விதம் வேண்டப்பெற்ற தத்தகுரு பிருகுவம்சத்தோன்றலான ராமருக்கு தேவி திரிபுரையின் வழிபாட்டில் நல்ல சிரத்தையும், பக்தியும் ததும்பும் தகுதியை உணர்ந்து, முறைப்படி திரிபுரா தேவியின் வழிபாட்டிற்காக தீக்ஷை செய்துவைத்தார்.

*தீக்ஷை என்பது சிஷ்யனை மந்திர உபதேசம் பெறத்தக்கவனாக ஆக்குவதாகும். ஆணவம், மாயை, கர்மம் என்ற மும்மலங்களும், அவித்யா,அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேசம் என்ற ஐந்து பாசங்களும் ஜீவாத்மாவை ஒளியற்றதாகச் செய்யும் மறைப்புகள். இம்மறைப்புகளை அகற்ற வழிதெரிந்த குரு ஸத்-சித்- ஆனந்தமாகிய தன்னிலை மறைக்கப்பட்டுள்ள ஆத்மாவை சுத்திசெய்து ஒளியுள்ளதாக, தன்னொளி பரப்பவல்லதாக ஆக்கி மந்திர தேவதையாகிய பரம்பொருளுடன் இணைத்து ஸச்சிதானந்த நிலையை அடையச் செய்வதே தீக்ஷையின் லக்ஷ்யம். "தீயதே ஜ்ஞான ஸத்பாவ: க்ஷீயதே பசுவாஸநா. தாநக்ஷபண ஸம்யுக்தா தீக்ஷா தேநேஹ கத்த்யதே" ஜீவனிடத்திலுள்ள பசுவாஸனை மறைந்து ஆத்மஜ்ஞானம் அடைவதே தீக்ஷையின் பயன்.*

*மந்திரம் என்பது தியானமுறையில் மனனம் செய்யப்பெறும் தேவதையின் ஒலி வடிவம். ஆலமரமாக விரிந்து காண வேண்டிய மரத்தின் முழு உருவமும் அதன் விதையில் இன்னதெனப் பகுத்தறிய முடியாதபடி, ஆனால் எல்லா*

*அம்சங்களும் நிறைவுற்றதாக அடங்கியிருப்பதுபோல் தேவதையின் வடிவம் மந்திரம் எனும் அக்ஷர வரிசை அமைப்பில் அடங்கியுள்ளது. அந்த அக்ஷரங்களில் அடங்கியுள்ள தேவதாஸ்வரூபத்தை மந்திர உபதேசம் பெறுபவனின் அந்தக்கரணம் ஏற்றுக்கொள்ளவேண்டும். மாசுபடிந்த கண்ணாடி போன்றுள்ள சீடனின் அந்தக்கரணம் அதனை எளிதில் ஏற்காது. ஏற்கனவே மந்திரசித்தி பெற்றிருக்கும் குரு, சிஷ்யனது தகுதிக்கேற்பத் தீக்ஷை முறைகளை அமைத்துப் படிப்படியாக மந்திரம், மந்திரத்தின் மூலம் வழிபடும் தேவதை, உபதேசிக்கும் குரு, உபதேசம் பெறும் தான், இவற்றின் ஐக்கிய உணர்வு பெறும்படி சிஷ்யனை உருவாக்குதல் தீக்ஷையின் லட்சியமாகும்.*

*தீக்ஷை பொதுவாக மூன்று வகைப்படும். – 1.* **சாம்பவீ தீக்ஷை** *– சிஷ்யனது சிரத்தில் மந்திர தேவதையின் திருவடிகள் பதிவதாகவும், அந்த திருவடிகளிலிருந்தும் பெருகும் அம்ருததாரையால் சீடனது இதயத்திலிருந்த மலங்களும் பாசங்களும் அகன்று தூய்மை ஏற்படுவதாகவும், குரு தீவிரமான எண்ண வலிமைகொண்டு பாவித்துத் தூய்மை ஏற்படுத்துவதாகும். 2* **சாக்தீ தீக்ஷை** *– சீடனது மூலாதாரத்திலிருந்து பிரும்மமந்திரம் (உச்சிக்குழி) வரை பேரொளி வடிவில் பரவி நிற்கும் தேவதையின் சக்தி வெள்ளத்தில் சீடனது பாபங்கள் எரிந்து மந்திரசக்தி உட்புகுந்து விட்டதாகத் தீவிரமாக எண்ண வலிமை கொண்டு பாவித்துச் சீடனது உள்ளத்தில் மந்திரசக்தியை நிலைத்திருக்கச் செய்தலாகும். 3. மந்திர தீக்ஷை – குரு தான் சித்திபெற்ற மந்திர தேவதையைக் கலச நீரில் ஆவாஹனம் செய்து மந்திர ஜபத்தால் வழிபட்டு ஜலத்தில் மந்திர தேவதை சக்தியைப் பரவச்செய்து, அந்த மந்திரசக்திமிக்க ஜலத்தால் சீடனுக்கு அபிஷேகம் செய்வித்து மந்திரசக்தியை உட்புகச் செய்வதாகும்.*

*ஸமய தீக்ஷை, நிர்பீஜ தீக்ஷை, ஸபீஜ தீக்ஷை, அபிஷேக தீக்ஷை, கிரியா தீக்ஷை, தத்வ தீக்ஷை, கலா தீக்ஷை முதலிய கடுமையான தீக்ஷை முறைகள் மந்திர சாஸ்திரங்களில் பிரசித்தமானவை.*

जामदग्न्योऽपि संप्राप्य त्रैपुरं दीक्षणं शुभम् ।। २० ।।
सर्वदीक्षासमधिकं पूर्णतत्वप्रबोधनम् ।
मन्त्रयन्त्रवासनाभिरन्वितं निखिलं क्रमम् ।। २१ ।।
प्राप्य श्रीगुरुवक्त्राब्जात् रसं मधुकरो यथा ।

तृप्तान्तरंग आनन्दमादितो भार्गवस्तदा ॥ २२ ॥
श्रीनाथेनाभ्यनुज्ञातः त्रिपुरासाधनोद्यतः ।
परिक्रम्य गुरुं नत्वा महेन्द्राद्रिमुपाययौ ॥ २३ ॥

ஜமதக்னியின் புதல்வரான பரசுராமரும் திரிபுரை வழிபாட்டிற்குரிய மங்களமான தீக்ஷையைப் பெற்றார். எல்லா தீக்ஷ முறைகளுக்கும் மேம்பட்டவையும், முழு தத்துவத்தையும் தெளிவிப்பவையும், மந்திர யந்திரங்களின் வாஸனையுடன் கூடியவையுமான எல்லா முறைகளும், சிறப்புமிக்க குருவின் திருவாயாகிய தாமரையிலிருந்தும் தேன் போல் பெருகத் தான் வண்டாகி நின்று அதனை ஏற்று, உள்ளம் நிரம்பியவராய் ஆனந்தத்தில் திளைத்து மாந்தினார். குருவினது அனுமதி பெற்றுத் திரிபுரா மந்திரசித்தி பெறுவதில் முனைந்தவராகக் குருவை வலம் வந்து வணங்கிப் பரசுராமர் மஹேந்திர மலையை அடைந்தார்.

*வாஸனை – சாக்த ஸமயத்தில் வாஸநா என்பது தத்துவ விமர்சம் ரஹஸ்யார்த்தம் அந்தரார்த்தம் என்ற மாற்றுப் பெயர்களுடன் பயன்படுத்தப்பெறும் பரிபாஷைச் சொல். ஆவரண பூஜை, ஷோடசோபசார பூஜை முதலிய வெளிப்படையான வழிபாட்டு முறைகள் சில. இவை பாஹ்ய பூஜை - பஹிர்யாகம் எனப்படும். பிறர் அறியக் கூடிய வெளிப்படையான ஸாதனங்களைப் பயன்படுத்திக் கொள்ளாமல் உள்ளுணர்வுகளை தேவியிடம் அர்ப்பணம் செய்வது ரஹோயாகம்- அந்தர் யாகம் எனப்படும். மனத்திற்கும் வாக்குக்கும் செயலுக்கும் அகப்படாத தேவதா சக்தியை இந்த வழிபாட்டு முறைகளைக்கொண்டு வழிபடும்போது படிப்படியாக தேவதையுடன் ஐக்கிய உணர்வு ஏற்படுத்திக்கொள்ளுதல் தான் பரம லட்சியம். மந்திரத்துடன் தேவதையின் ஐக்கிய உணர்வு, யந்திரம், ஸ்ரீ சக்கிரம், மேரு, முதலியவற்றுடன் தேவதையின் ஐக்கிய உணர்வு, வழிபாட்டு முறைகளாகிய தந்திரத்துடன் தேவதையின் ஐக்கிய உணர்வு, குருவிற்கும் தேவதைக்கும் ஐக்கிய உணர்வு, தனக்கும் தேவதைக்கும் ஐக்கிய உணர்வு இவைகளைப் பெறுவதே வாஸனை – பராபூஜை எனப்படும்.*

*தேவியானவள் அக்ஷர வடிவினள். 1. அக்ஷரம் எப்படி தேவதையின் சக்தியைப் பிரதிபலிக்கிறது என்பதை மந்திரஸங்கேத முறைப்படி அறிந்து அப்படி மந்திராக்ஷரங்களைப் பாவனை செய்வது* **மந்த்ரவாஸனை** *2. யந்திரத்திலுள்ள திரிகோணங்களும் தாமரை தளங்களும் விருத்தங்களும்*

*பிந்துவும் மற்றதும் தேவதையின் எந்த எந்த சக்தியை விளக்குகின்றன என்பதனை யந்திர ஸங்கேத முறைப்படி அறிந்து (வெறும் கோடுகளாகப் பாவிக்காமல்) யந்திரத்தில் தேவியின் வடிவமாகிய சக்தி அலைகள் பரவி நிற்பதை உணர்வது யந்திரவாஸனை. 3. தேவதையின் சக்தி தன்னிடத்தில் (தனது ஸ்தூலஸூக்ஷ்ம காரண சரீரங்களில்)அக்ஷர வடிவிலும் சக்கிர வடிவிலும் எப்படிப் பரவி நிற்கிறது என்பதை உணர்ந்து தனது தனிப்பட்ட இருக்கையை அழித்துக்கொண்டு அதனுடன் இணைவதற்குத் தந்திரம் எனும் வழிபாட்டுமுறையைத் தந்திர ஸங்கேதப்படி உணர்ந்து அந்த பாவனையுடன் வழிபடுவது தந்திர வாஸனையாகும். இந்த விஷயங்களைப் பற்றி விரிவாக, பாவனோபநிஷத்து, யோகினீஹ்ருதயம் முதலியவைகளில் காணலாம்.*

तत्र निर्माय वसतिं शुभामतिसुखावहाम्।
अभूदुपासनपरो वर्षद्वादशकं तदा॥ २४॥
नित्यनैमित्तिकपरः पूजाजपपरायणः।
सदा श्रीत्रिपुरेशान्याः मूर्तिध्यानैकतत्परः॥ २५॥
एवं तस्यात्यगात्कालो द्वादशाब्दो निमेषवत्।

அங்கு மங்களமாயும் மிகவும் ஸுகமாயுமுள்ள ஒரு இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு பன்னிரண்டாண்டுகள் வழிபாட்டில் ஈடுபட்டிருந்தார். நித்தியமாயும் நைமித்திகமாயும் உள்ள விசேஷபூஜை மந்திரஜபம் முதலியவற்றில் முழுக்கருத்துடன் ஈடுபட்டார். எப்போதும் திரிபுரேச்வரியின் உருவை மனத்தில் தியானித்துவந்தார். இப்படிப் பன்னிரண்டாண்டுகாலமும் அவருக்கு நொடியாகக் கழிந்தது.

अथैकदा सुखासीनो जामदग्न्योऽन्वचिन्तयत्॥ २६॥
पुरा यत्प्राह संवर्तो मया स्वभ्यर्थितः पथि।
तन्मया नैव विदितमंशेनापि तदा ननु॥ २७॥
विस्मृतं च मया यस्मात् प्राङ् न पृष्टं गुरुं प्रति।
माहात्म्यं त्रिपुराशक्तेः श्रुतं श्रीगुरुवक्त्रतः॥ २८॥
परं तु तत्र विदितं यत्संवर्तः पुराऽब्रवीत्।

ஒருநாள் பரசுராமர் ஆசிரமத்தில் சுகமாக அமர்ந்துகொண்டிருந்தவர் முன் நடந்ததை நினைவிற்கொணர்ந்தார். "முன் வழியில் என்னால் நன்கு வேண்டப்பட்ட ஸம்வர்த்தர் எதனைக் கூறினாரோ அதனை நான்

சிறிதளவுகூட அப்போது அறியவில்லை. அதனை மறந்து விட்டபடியால் ஸ்ரீ தத்த குருவிடமும் அதனை நான் கேட்கவில்லை. ஸ்ரீ குருவின் முகமாக பராசக்தியான திரிபுரா தேவியின் பெருமையை மட்டும் கேட்டுத் தெரிந்துகொண்டேன். ஸம்வர்த்தர் எதனைக் கூறினாரோ அதனை நான் அறியவில்லையே!"

*ஸம்வர்த்தர் கூறியதன் சுருக்கம் அறிமுகத்தில் தரப்பட்டுள்ளது.*

मया सृष्टिप्रसंगेन पृष्टं किञ्चिद्गुरुं प्रति ।। २९ ।।
तदा कटकृदाख्यानं वर्णयित्वा च मे गुरुः ।
नाब्रवीदप्रकृततस्तन्मे तत्तादृशं स्थितम् ।। ३० ।।

ஸ்ருஷ்டி பற்றிக் கூறிவந்தபோது ஏற்பட்ட சில சந்தேகங்களை குரு தத்தரிடம் கேட்டேன், அப்போது பாய் முடைபவனின் கதையைக் கூறி, "இப்போது அது குறிப்பிட அவசியமில்லாதது" எனச் சொல்ல மறுத்தார். அந்த ஐயங்கள் அப்படியே உள்ளன.

*திரிபுராரஹஸ்யத்தின் மாஹாத்ம்ய கண்டத்தில் 10வது அத்தியாயத்தில் தேவி இச்சாசக்தி ஞானசக்தி கிரியா சக்தி என்ற மூன்று சக்தி வடிவங்களைப் பெற்று, திரிரூபாவாகத் தோன்றியபெருமைகளை தத்தர் விளக்கி வந்தார். "பிரும்மா தேவியின் ஆணையைப் பெற்று உலகைப் படைக்க முற்பட்டார். எங்கு உலகைப் படைப்பேன் என்று சிந்தித்தார். உடன் ஓர் எல்லையற்ற பெரும் பாழ்வெளி (ஆகாசம்) தென்பட்டது. இடம் கிடைத்து விட்டதென்ற மகிழ்ச்சியில் படைக்கத் தொடங்கினார். அந்த சலனத்தால் ஏற்படும் மோதலில் தொடு உணர்ச்சி உண்டானது. அதன் விரிவு வாயுவாகிற்று. வாயுவில் சலனம் மிகுந்து, உரசலால் சூடும் அக்கினியும், அக்கினியைச் சுற்றிக் குளிர்ச்சியும் ஜலமும்; அதனைத்தொடர்ந்து மணமும் பூமியும் என வரிசையாகத் தோன்றியதும் பூமியை ஆதாரமாக்கிப் படைப்பில் முற்பட்டார்' என தத்தர் கூறி வரும்போது பரசுராமர் ஒரு கேள்வி கேட்டார்.*

*" குருதேவ! பிரும்மாவின் முன் ஆகாயம் தோன்றிற்று; அதன் பின் தொடர்ந்து நான்கு பூதங்களும் தோன்றின என்றீர்கள். வேறு ஒருவரால் படைக்கப் பெறாதபடி பிரும்மாவின் முன் தானே அவை தோன்றினவல்லவா? அவைகளைப் படைத்தவர் யாவரையும் அந்நிலையில் காணோமே? அதனால் அவை நித்தியமான பொருள்களாக இருந்திருக்க வேண்டும். உலகைப் படைக்க முற்பட்ட பிரும்மா ஐந்து பூதங்கள் கிளம்பு முன் சப்தத்தைக்*

கண்டாரே! அதற்கான பொருளின்றி சப்தம் முதலில் எப்படி ஏற்பட்டது?" என்று தன் ஐயங்களைத் தெரிவித்தார்.

ஸ்ரீதத்தர் "பின்னர் சமயம் வரும்போது இதனை விளக்குகிறேன். சிஷ்யனது பக்குவமறிந்து தக்க சமயத்தில் விளக்கப் பெறும் விஷயமே நன்மை பயக்கும். அவசரப்பட்டு முறை தவறிப் பக்குவம் ஏற்படாதவனிடம் கூறினால் விபரீதம் விளையும்" எனக் கூறி பாய்முடைபவனின் கதையைக் கூறினார்.

கலிங்க தேசத்தில் யதுபுரத்தில் குவலன் என்ற பாய்முடைபவன் இருந்தான். அந்தப் பணியில் அவன் நன்கு தேர்ச்சி பெற்றவன். அழகான பொருள்களைப் படைக்கவல்லவன். நல்ல அழகான பாய்களை முடைந்து அரசரிடம் காணிக்கையாக முன் வைத்தான். அரசர் மகிழ்ந்து நிறையப் பணம் தந்தார். அதனால் செல்வந்தனாக ஆன அவன் நற்பணிகளில் தன் சொத்தைச் செலவிட்டான்.

ஓரிடத்தில் சில பெரியோர்கள் வேதாந்த விசாரம் செய்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு இவன் நன்கு பணிவிடை செய்தான். அதில் திருப்தியடைந்த பெரியோர்களிடத்தில் வேதாந்த ஸாரத்தைத் தனக்கு உபதேசிக்கும்படி கோரினான். அவர்களும் அப்படியே ஸாரத்தை உபதேசித்தார்கள்.

பொறிகள் உணர்த்தும் வெளிப் பொருள்களிலிருந்து மனத்தைத் திருப்பிக்கொள்ள வேண்டும். மனத்தை அடக்கிக்கொள்ள வேண்டும். பார்க்கப்படும் பொருளனைத்தும் பார்க்கும் தானே என்று உணரவேண்டும். எல்லாவற்றையும் ஸமமென அறிய வேண்டும். இந்நிலை ஏற்படுத்திக் கொண்டபின் வந்ததை விடக் கூடாது. வராததை விரும்பக்கூடாது. நிறைந்த மனத்துடன் பயமற்றுப் பற்றற்று வாழவேண்டும்."

தத்துவ அடிப்படை அறிவற்ற குவலன் வேதாந்த ஸாரத்தைக் கேட்டுக்கொண்டான். முன்னதாகக் கூறிய சமதர்மங்கள் ஏற்படுமுன்னரே பின்னர் கூறியவற்றைக் கடைப்பிடித்தான். தனக்குப் போதித்த அந்த அந்தணர்களும் தானும் ஸமமே என முதலில் உணர்ந்தான்; அவர்களிடத்தில் ஏற்பட்டிருந்த பக்தி தளர்ந்தது. செல்வந்தனானபடியால் பலவகைகளில் போகப் பொருள்கள் தானே கூடின. தானே கூடிவந்ததைத் தான் விடக்கூடாதே? அத்தனையையும் நுகர்ந்தான். இதுவரை சேராதவை தேவதை வழிபாடு முதலிய நற்பணிகளில் ஈடுபாடு முதலியவை. அவைகளைப் பேண

*வேண்டுமென்ற விருப்பத்தைத் தவிர்த்தான். வராததை விரும்பக் கூடாதே! பாபத்திலிருந்த பயத்தை விட்டான். நல்லோர்களிடம் பற்றைவிட்டான். நாஸ்திகனாகி நரகத்தைச் சேர்ந்தான்.*

*பரசுராமரே! எப்போது எவற்றைக் கேட்டால் புரியுமோ அத்தகைய பக்குவம் வந்தபின்தான் அவற்றை அறிய முற்பட வேண்டும். இந்நிலையில் உமக்கு அவை புரியாது' எனப் பகர்ந்தார். இன்றாவது தனக்கு அத்தகைய பக்குவம் வந்துள்ளதா? குரு அந்த ஐயங்களைத் தீர்ப்பாரா என்று பரசுராமர் ஏங்குகிறார்.*

लोकस्य मतिमेतां तु न जानाम्यपि लेशतः।
कस्मादिदं समुदितं जगदाडम्बरं महत्॥ ३१॥
कुत्र वा गच्छति पुनः कुत्र संस्थानमृच्छति।
अस्थिरं तु प्रपश्यामि सर्वं सर्वत्र किञ्चन॥ ३२॥
व्यवहारः स्थिरप्रायः कस्मादेतदपीदृशम्।

இவ்வுலகத்தின் நிலைபற்றிச் சிறிதும் அறியேன். எங்கிருந்து தோற்றத்தில் மிகப் பெரிதாகக் காட்டும் இவ்வுலகம் தோன்றிற்று? எதில் நிலைத்துள்ளது? எங்கு சென்று மறைகிறது? எங்கும் எல்லாவற்றையும் நிலையற்றவையாகவே பார்க்கிறேன். ஆனால் உலக வியவகாரமோ நிலைத்ததுபோல் காணப்பெறுகிறது. ஏனிப்படி?

चित्रां जगद्व्यवहृतिं प्रपश्याम्यविमर्शिनीम्॥ ३३॥
अहो यथान्धानुगतो ह्यन्धश्चेष्टति तादृशः।
लोकस्य व्यवहारो वै सर्वस्याप्यभिलक्षितः॥ ३४॥
निदर्शनं ह्यात्मकृतिरत्र मे सर्वथा भवेत्।

உலக நடவடிக்கை விசித்திரமானது, தீரயோசியாமல் நடப்பது என்பதை உணர்கிறேன். குருடனைப் பின்பற்றும் குருடனைப்போல் அல்லவா மனிதன் நடந்துகொள்கிறான்! எல்லோரது நடவடிக்கையும் அப்படியே காணப்படுகிறது. அதற்கு எல்லாவகையிலும் தக்க உதாரணம் என் செயல்களே ஆகும்.

नूनं मम शैशवे किं जातं तन्मे न भावितम्॥ ३५॥
कौमारे चान्यथा वृत्तं तारुण्येऽपि ततोऽन्यथा।

इदानीमन्यथैवास्ति व्यापारो मम सर्वथा ॥ ३६ ॥
किमभूत्फलमेतेषां तन्न वेद्मि कथंचन।

எனது குழந்தைப் பருவத்தில் நடந்ததை நான் அறியேன். இளமையிலும், யௌவனத்திலும் நடந்தது வேறு. தற்போது என் செயல்முறை முழுவதும் மாறுபட்டதே. இதற்கெல்லாம் என்ன பலன் கிட்டியது? அதனையும் அறியேன்.

यद्यत्काले यच्च यच्च क्रियते येन येन वै॥ ३७।
सम्यगेवेति तद्बुद्ध्वा फलावष्टंभपूर्वकम्।
फलं किं तत्र संप्राप्तं केन वा सुखमात्मनः॥ ३८॥

பலன் கிட்டுமென்று நம்பிக்கையுடன் நல்லதென நினைத்து அந்தந்த நேரத்தில் அத்தனைச் செய்தவர்களுக்கு என்ன பலன் கிட்டியது? எதனால் ஆத்மாவிற்குச் சுகம் கிடைத்தது?

यच्चापि लोके फलवदविमृश्य फलं हि तत्।
न फलं तदहं मन्ये पुनर्यस्मात् करोति सः॥ ३९॥
प्राप्ते फले फलेच्छावान् पुनर्भूयात् कथं वद।
यस्मान्नित्यं करोत्येव जनः सर्वः फलेहया॥ ४०॥

உலகத்தில் தீர யோசியாமல் ஒன்றைப் பயனாகக் கொள்ளப் படுகிறது. உண்மையில் அதனைப் பயனாக நான் கருதவில்லை. (அதுவே பயன் ஆக இருந்தால்) மறுபடி எதற்காகச் செயல்புரிகிறான்? ஒரு பயன் கிட்டின பிறகும் மறுபடி வேறு பயன் வேண்டுமென்று ஏன் ஆசை தோன்றுகிறது? (ஏன் நிறைவு ஏற்படவில்லை?) தினந்தோறும் பயனை விரும்பி எல்லா மனிதர்களும் எதனையாவது செய்கிறார்களே? (கிடைத்ததில் நிறைவு இல்லை என்றுதானே பொருள்?)

फलं तदेव संप्रोक्तं दुःखहानिः सुखं च वा।
कर्तव्यशेषे नो दुःखनाशो वा सुखमेव वा॥ ४१॥
कर्तव्यतैव दुःखानां परमं दुःखमुच्यते।
तत्सत्वे तु कथं ते स्तो दुःखाभावः सुखं च वा॥ ४२॥

அப்போது நாம் விரும்பும் பயன், துக்கம் நீங்குதல் அல்லது சுகம் என்பதாகும். மறுபடியும் ஒன்றை அடையவிரும்பிச் செயல்புரிய வேண்டியிருக்குமானால் முன் கிடைத்ததால் துக்கம் நீங்கவில்லை, சுகம்

கிட்டவில்லை எனப்பொருள். இன்னமும் (அடைய வேண்டியதிருப்பதாக நினைத்து அதற்காக) செயல்படுவதென்பதே துக்கத்திலும் பெரும் துக்கம். அந்த துக்கமிருக்கும்போது துக்கமின்மையோ சுகமோ எப்படி ஏற்படும்?

यथा दग्धाखिलांगस्य पादे पाटीरलेपनम् ।
तथा कर्तव्यशेषस्य सुखलाभ इहोच्यते ।। ४३ ।।
यथा शराविद्धहृदः परिष्वंगोऽप्सरोगणैः ।
तथा कर्तव्यशेषस्य सुखलाभ इहोच्यते ।। ४४ ।।
यथा क्षयामयाविष्टनरस्य गीतसंश्रुतिः ।
तथा कर्तव्यशेषस्य सुखलाभ इहोच्यते ।। ४५ ।।

உடல் முழுவதும் சுட்ட புண்ணால் வேதனைப்படுபவனுக்கு உள்ளங்காலில் சந்தனம் பூசுவதுபோலும் மார்பில் அம்பால் அடிபட்டவனுக்கு அப்ஸரஸ்"கள் கூட்டமாகச் சேர்ந்து அணைப்பதுபோலும் க்ஷய நோயால் துன்புறுபவனுக்கு நல்ல கானம் காதில் விழுவது போலும் தான், விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளச் செயல்புரிய வேண்டிய நிலையிலுள்ளவன் சுகத்தை அனுபவிப்பதும்.

*மனிதன் விரும்புவது துக்கமின்மை அல்லது சுகம் என்ற பயனைத்தான். அதனைப் பெற உதவக்கூடியதென ஒன்றை நினைத்து உழைக்கிறான். அதனால் சுகம் கிட்டிவிட்டால் அவன் மறுபடி உழைக்கத் தேவை இல்லை. ஆனால் மனிதன் உண்மையான சுகம் எது என்பதை அறிந்துகொள்ளாமல் சுகமெனப் போலியானதொன்றை நம்பி அதனை அடைந்தால் எல்லாம் பெற்றதாகிவிடும் என நினைத்துப் பாடுபடுகிறான். ஆனால் அந்தப் போலி சுகம் கிட்டிய பின்னர் தான், தான் விரும்பிய சுகம் அதுவல்ல என்ற அறிவு ஏற்படுகிறது. தான் சுகமென நினைத்ததை மறுபடியடையப் பாடுபடுகிறான். கிடைத்ததில் நிறைவு ஏற்பட்டிருந்தால் அதுதான் அவன் நாடிய உண்மை—யான சுகம் எனக் கருதலாம். கிடைத்ததில் நிறைவு காணாமல் மறுபடி ஆசை தூண்டச் செயல்படுபவனது செயலுக்கு முடிவேது? செயல் முடிந்தாலன்றோ சுகம்? "சுகம் கிட்டவில்லையே! இன்னம் என்ன செய்தால் சுகம் கிட்டும்!' என்ற சிந்தனையிலுள்ளவனுக்கு வேறு சுகம் எது கிடைத்தாலும், அதில் சுகம் உணரமுடிவதில்லை என்பது மட்டுமல்ல, அதுவே பெருந்துக்கமாகவும் கருதப்படும். உடலில் நெருப்பு பற்றி எரியும்போது காலில் சந்தனம் பூசுவதை ஒருவனால் சுகமென ஏற்றுக்கொள்ள முடியாது. மார்பில் அம்பால் அடிபட்டவன்*

*துடித்துக்கொண்டிருக்கையில் அப்ஸரஸ் பெண்கள் கூட்டமாக வந்து கட்டிக்கொண்டாலும் அது அம்பினால் ஏற்பட்ட வலியைவிட அதிக வேதனை தரும். அப்படி அடைய வேண்டிய தொன்று உண்டு என்ற ஏங்கி நிற்பவனுக்கு வலிய ஏதேனும் சுகம் தானே கிடைத்தாலும் அதுவும் வேதனை தருவதாகவே ஆகும். தேவை உணர்விருக்கும் வரை எதுவும் துக்கத்தைத்தான் தரும்.*

सुखिनस्ते हि लोकेषु येऽकर्तव्यतया स्थिताः।
पूर्णाशया महात्मानः सर्वदेहसुशीतलाः ॥ ४६ ॥
यदि कर्तव्यशेषेऽपि सुखं स्यात्केनचित् क्वचित्।
शूलप्रोतेऽपि च नरे स्यात्सुखं गन्धमाल्यजम् ॥ ४७ ॥

தேவையுணர்வில்லாதவர்களே உலகில் உண்மையில் சுகமனுபவிப்பவர்கள். அவர்களே மனம் நிரம்பியவர்கள், பெருமனம் படைத்தவர்கள், உடலனைத்தும் குளிர்ந்தவர்கள் (தாபமே இல்லாதவர்கள்). தேவையுணர்ச்சி இருந்தாலும், எதனாலாவது சுகமும் கிடைக்கும் என்றாலும் சூலத்தில் செருகப்பட்டவனுக்கும் சந்தனம் பூசினாலோ, மாலை போட்டாலோ சுகம் கிட்டக்கூடும்.

*தன் சுகத்திற்கு ஒரு பொருள் தேவை என்று நினைப்பவன் தேவைப்படும் பொருளைவிடத் தன்னைத் தாழ்ந்தவனாகச் செய்து விட்டான் எனப் பொருள். தலையில் அரசனுக்குரிய மகுடமிருந்தும் அரசுரிமையிருந்தாலும் கழுத்தில் ரத்தினஹாரம் இல்லையே என அரசன் ஏங்கினால் அவன் தன்னையும் அரச கிரீடத்தையும் அந்த விரிந்த அரசையும் அந்த கிடைக்காத ரத்தினஹாரத்தை விடத் தாழ்ந்ததாக்கிச் சிறுமைப்படுத்திவிட்டான் என்றுதானே பொருள்? அவன் மனத்தில் நிறைவுண்டா? தேவையுணர்ச்சி இல்லாதவனாயின் அவனுக்கு ஏது சிறுமை? உலகமே அவனுக்கு அடங்கிவிட்டதாக ஆனந்த மிதப்பில் பூர்ணனாகவல்லவோ அவன் இருப்பான்?*

अहो महच्चित्रमेतत् कर्तव्यशतसंकुले।
सुखमस्तीह यस्यार्थे करोत्येव सदा जनः ॥ ४८ ॥
अहोऽविचारमाहात्म्यं किं वदामि नृणामहम्।
अनन्तकर्तव्यशैलाक्रान्ताः सौख्यं लभन्ति च ॥ ४९ ॥
यथा सौख्याय यतते सार्वभौमस्तु सर्वदा।
तथैव यतते नित्यं अपि भिक्षाटने रतः ॥ ५० ॥

पृथक्तौ प्राप्नुतः सौख्यं मन्येते कृतकृत्यताम्।
तद्येन यान्ति सर्वेऽपि याम्यहंताननुक्रमात्॥ ५१॥
अनालोच्य फलं चापि यथाऽन्धोऽन्धानुगस्तथा।

செய்யவேண்டியது நூற்றுக்கணக்கிலிருப்பதால் குழம்பினாலும் இதுதான் சுகம்தரவல்லதென நினைத்து அதனையடையப் பாடுபடுகிறார்களே, இது விசித்திரமல்லவா? தேவை நிறைவேறச் செய்ய வேண்டியது மலைபோல் சுமையாக அழுத்திக்கொண்டிருக்கும்போதும் எதையோ செய்து சுகத்தை அடைந்ததாக நினைக்கிறார்களே இவர்களது அறிவீனத்தை என்னவென்று கூறுவேன். உலகத்தையே கட்டி ஆளும் அரசனும் தினமும் தன் சுகத்திற்காகப் பாடுபடுகிறான். அப்படியே பிச்சைக்காரனும் பாடுபடுகிறான். இவர்களிருவரும், தான் தான் சுகமடைந்திருப்பதாகவும், செய்யத் தக்கதைச் செய்துநிறைவுற்றிருப்பதாகவும் எண்ணிக்கொண்டு அதேசமயம் திரும்பத் திரும்ப சுகத்தை நாடிச் செல்கிறார்கள். நானும் சுகமெனும் பலனைக் குறித்து யோசியாமலேயே குருடனைப் பின்பற்றும் குருடனைப்போல் அவர்கள் சென்ற வழியிலேயே சென்றுவருகிறேன்.

तदलं मेधयाऽनेन भूयो गत्वा दयानिधिम्॥ ५२॥
विजिज्ञासितजिज्ञास्यो विचिकित्सांबुधेः परम्।
पारं प्रपत्स्ये सुशुभं गुरुवाक्प्लवमाश्रितः॥ ५३॥

இனி இது போதும். இப்போது ஏற்பட்டுள்ள இந்த அறிவுடனும் அதனால் ஏற்பட்ட தத்துவ விசாரத்துடனும் மறுபடியும் அந்த தயைக்கடலாகிய தத்தகுருவை அடைந்து அறிய விரும்பியதை அறிந்தவனாகக் குருவின் உபதேசமாகிற ஓடமேறி சந்தேகக் கடலின் அக்கரையை மங்களமாக அடைவேன்.

इति व्यवस्य सहसा जामदग्न्यः शुभाशयः।
प्रतस्थे तद्गिरिवरात् गुरुदर्शनकांक्षया॥ ५४॥
गन्धमादनशैलेन्द्रं प्राप्य शीघ्रमपश्यत।
गुरुं पद्मासनासीनं भूभास्वन्तमिव स्थितम्॥ ५५॥
प्रणनाम पादपीठपुरतो भुवि दण्डवत्।
शिरसाऽपीडयत् पादपद्मं निजकराश्रितम्॥ ५६॥

நல் மனம் கொண்ட பரசுராமர் இப்படித் திடீரெனத் தீர்மானித்து அம்மலையிலிருந்து கிளம்பி குருவைக் காணும் விருப்பத்துடன் கந்தமாதன மலையை

அடைந்து பத்மாஸனத்தில் அமர்ந்து பூமியை அடைந்த சூர்யனைப்போல் ஒளியுடன் கூடிய குருவைக் கண்டார். அவரது பாத பீடத்திற்கு முன் தண்டம்போல் விழுந்து வணங்கி தன் கையில் ஏந்திய குருவின் திருவடிகளை தலை அழுந்தப் பிடித்தார்.

अथैवं प्रणतं रामं दत्तात्रेयः प्रसन्नधीः।
आशीर्भिर्योजयामास समस्थापयदादरात्॥ ५७॥
वत्सोत्तिष्ठ चिरादद्य त्वां पश्यामि समागतम्।
ब्रूहि स्वात्मभवं वृत्तं निरामयतया स्थितम्॥ ५८॥

தெளிந்த கருத்துடைய தத்தாத்ரேயர் வணங்கியபடி இருக்கும் பரசுராமரைப் பரிவுடன் எழுப்பி ஆசிகள் வழங்கினார். "குழந்தாய்! எழுந்திரு. வெகுநாட்களுக்குப் பின் உன்னைக் காண்கிறேன். நோயற்றிருக்கிறாயா? உன்னைப்பற்றிச் சொல்வாயாக!" என்றார்.

अथोत्थाय गुरूक्त्या स गुर्वादिष्टाग्रयविष्टरः।
उपविश्य प्रसन्नात्मा बद्धाञ्जलिपुटोऽब्रवीत्॥ ५९॥

அதன் பின் குருவசனத்தைக் கேட்டெழுந்து குரு காட்டிய முன்னதாக உள்ள பலகையில் அமர்ந்து தெளிந்த மனத்தினராய் கைகூப்பி ராமர் கேட்டார்.

श्रीगुरो करुणासिन्धो त्वत्कृपामृत आप्लुतः।
कथं स परिभूयेत विधिसृष्टैरथामयैः॥ ६०॥
त्वत्कृपात्मामृतकरमण्डलान्तः स्थितं तु माम्।
सन्तापयेत्कथं व्याधिः चण्डांशुरतिभीषणः॥ ६१॥
आन्तरं बाह्यमपि ते कृपयाऽनन्दितं मम।
सदा स्थितं किन्तु भवत्पादाब्जवियुतिं विना॥ ६२॥
नान्यद्रुजावहं किञ्चिदासीन्मे लेशतः क्वचित्।
तद्भवच्चरणांभोजदर्शनादद्य वै पुनः॥ ६३॥
संपूर्णता समापन्ना सर्वथा श्रीगुरो ननु।

"கருணைக் கடலான ஸ்ரீகுருவே! தங்களது கருணையாகிய அமிருதத்தில் திளைத்திருக்கும் என்னை விதி படைக்கும் நோய்கள் எப்படி பீடிக்கும்? உங்கள் திருக்கைகளாகிற சந்திரமண்டலத்தினுள் இருக்கும் என்னை

நோயாகிய பயந்தரும் சூரியன் எப்படி வாட்டமுடியும்? தங்கள் கருணையால் உள்ளும் புறமும் எப்போதும் ஆனந்தம் நிரம்பியிருக்கிறது. தங்கள் திருவடிகளை விட்டுப் பிரிந்திருப்பதைத் தவிர வேறு மனக்கிலேசம் தரும் எதுவும் சிறிதும் ஏற்படவில்லை. அதனால் இன்று மறுபடி தங்கள் திருவடிகளைக் கண்டதும் எல்லா வகையிலும் நிறைவு ஏற்பட்டுவிட்டது.

तत्किञ्चिच्चिरसंवृत्तं हृदि मे परिवर्तते ।। ६४ ।।
तत्प्रष्टुं त्वाऽभिवाच्छामि चिरसंशयितान्तरः ।
आज्ञप्तो भवताऽद्याहं पृच्छामि विचिकित्सितम् ।। ६५ ।।

வெகுநாட்களுக்கு முன் நிகழ்ந்தது ஒன்று என் மனத்தில் சுற்றிச் சுற்றி வருகிறது. அதனால் வெகு நாட்களாக மனத்தில் சந்தேகம் கொண்ட நான் தங்களிடம் அதனைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன். தங்கள் உத்தரவு பெற்று அந்த சந்தேகங்களைப் பற்றிக் கேட்கிறேன்."

संश्रुत्यैवं भार्गवोक्तिं दत्तात्रेयो दयानिधिः ।
संप्रहृष्टमना राममूचे प्रीत्याथ भार्गवम् ।। ६६ ।।
पृच्छ भार्गव यत्तेऽद्य प्रष्टव्यं चिरसंभृतम् ।
तव भक्त्या प्रसन्नोऽस्मि प्रब्रवीमि तवेप्सितम् ।। ६७ ।।
इति श्रीमदितिहासोत्तमे त्रिपुरारहस्ये ज्ञानखण्डे
भार्गवप्रश्नो नाम प्रथमोऽध्यायः ।।

பரசுராமர் கூறியதைக் கேட்ட தயாநிதியான தத்தாத்ரேயர் மனம் மகிழ்ந்தவராக அன்புடன் ராமரிடம் கூறினார். "ராம! வெகு நாட்களாகக் கேட்க விரும்பியதைக் கேள். உன் பக்தியால் மகிழ்ந்தேன். நீ விரும்பியதை நான் உபதேசிப்பேன்".

*திரிபுராரஹஸ்யத்தில் ஞான கண்டத்தில்*
*ராமருடைய பிரச்னம் என்ற முதல் அத்தியாயம் .*

# द्वितीयोऽध्यायः

## இரண்டாம் அத்தியாயம்

इत्याज्ञप्तो जामदग्न्यः प्रणम्यात्रिसुतं मुनिम्
प्रश्रयावनतो भूत्वा संप्रष्टुमुपचक्रमे ॥ १ ॥

இப்படிக் கட்டளையிடப் பெற்ற பரசுராமர் ஆத்ரேய மஹரிஷியை வணங்கி அடக்கத்துடனிருந்து கேட்கத் தொடங்கினார்.

भगवन् गुरुनाथार्य सर्वज्ञ करुणानिधे ।
पुरा मे नृपवंशेषु क्रोधः कारणतो ह्यभूत् ॥ २ ॥
तद्भूयो निहितं क्षात्रं सगर्भं सस्तनन्धयम् ।
मया त्रिस्सप्तकृत्वो वै क्षत्रासृग्भरिते ह्रदे ॥ ३ ॥
सन्तर्पिताः पितृगणास्तुष्टा मद्भक्तिगौरवात् ।
मत्क्रोधं शमयामासुः शान्तः पित्राज्ञयाऽप्यहम् ॥ ४ ॥

எல்லாமறிந்த கருணைக் கடலான பெரியோரும் ஈசுவர ஸ்வரூபியுமான குருதேவ! முன்னர் அரசர் குலத்திடத்தில் ஒரு காரணத்தால் கோபம் ஏற்பட்டது. அதனால் க்ஷத்திரியர்களைக் கருவிலுள்ளவர், பால் குடிக்கும் சிசு உள்பட 27 தடவை அழித்து அந்த க்ஷத்திரிய ரத்தம் நிரம்பிய மடுவில் பித்ருக்களை திருப்தி செய்தேன். என் பக்தியின் பெருமையால் திருப்திபெற்ற அவர்கள் என் கோபத்தைத் தணித்தார்கள். நானும் பித்ருக்களின் கட்டளையால் கோபம் தணிந்தவனானேன்.

संप्रत्ययोध्यामध्यास्ते यः श्रीरामो हरिः स्वयम् ।
क्रोधान्धस्तेन भूयोऽहं संगतो बलदर्पितः ॥ ५ ॥
तेन दर्पाद्भगवता च्यावितश्च पराजितः ।
जीवन् कथञ्चिन्निर्यातः ब्रह्मण्येनानुकंपिना ॥ ६ ॥

மறுபடியும் கோபத்தால் குருடனாகி பலத் திமிர்பிடித்தவனாகத் தற்போது அயோத்யையில் ஆண்டுவரும் நாராயணனது அவதாரமான ஸ்ரீ ராமனுடன் போரில் கலந்தேன். அந்த பகவானால் தோற்கடிக்கப் பெற்றுத் திமிர் நீங்கியவனாகப் பரிவும் அந்தணர்களிடம் பக்தியுமுள்ள அவரால் எப்படியோ உயிருடன் விடுவிக்கப்பெற்றேன்.

अथ मामुपसंप्राप्तो निर्वेदः परिभावितम्।
ततोऽत्यन्तं पथि मया बहुधा परिदेवितम्॥ ७॥
संवर्तमवधूतेन्द्रं मार्गेऽकस्मात्समासदम्।
भस्मच्छन्नाग्निवद् गूढं कथञ्चिदविदं तदा॥ ८॥

அவமானமடைந்த எனக்கு நிராசை ஏற்பட்டது. வழிநெடுகப் புலம்பிக்கொண்டே சுற்றிவந்தேன். எதிர்பாராதவிதமாக வழியில் அவதூதர்களில் சிறந்த ஸம்வர்த்தரை அடைந்தேன். நீறுபூத்த நெருப்புபோல் இனங்காண முடியாதவாறு உள்ள அவரை எப்படியோ அப்போது இன்னார் எனக் கண்டுகொண்டேன்.

सन्तप्त इव नीहारं तं सर्वांगसुशीतलम्।
संगम्यैवातिशिशिरभावमासादयं तदा॥ ९॥
मया स्वस्थितिमापृष्टः प्राहामृतसुपेशलम्।
सुसारपिण्डवत्सर्वं निष्कृष्य प्रत्यपादयत्॥ १०॥

நெருப்பால் வாடியவன் பனிக்கட்டியை நெருங்கினாற்போல் எல்லா அங்கங்களும் குளிர்ந்த அவரை அடைந்து மனம் குளிர்ந்தேன். நான் அவரது நிலையைப்பற்றிக் கேட்டபோது அமுதம்போல் மனத்திற்கு இனிக்கும்படி எல்லா தத்துவங்களையும் ஸாரமான கையடங்கும் உருண்டையாக்கி விளக்கினார்.

नाहं तदशकं प्रष्टुं रंको राज्ञीं यथा तथा।
भूयः संप्रार्थितः सोऽथ भवन्तं मे व्यानिर्दिशत्॥ ११॥
तद्भवच्चरणद्वन्द्वं तत आसादितं मया।
अन्धो जनसमायोगमिवात्यन्तसुखावहम्॥ १२॥

தத்துவங்களுக்கான விளக்கங்களை அவரிடம் கேட்க என்னால் முடியவில்லை. பேரரசியிடம் தரித்திரன் போலப் பேசக் கூசி நிற்கும் நிலையில் இருந்தேன். மறுபடியும் நான் கோரி நின்றபோது அவர் தங்களைக் காட்டினார். அதனால் குருடன் நல்ல ஸங்கந்தரும் நன்மக்களின் கூட்டுறவைப் பெறுவதுபோல், தங்கள் திருவடிகளை அடைந்தேன்.

तन्मे न विदितं किञ्चित्संवर्तमुनिराह यत्।
श्रुतं माहात्म्यमखिलं त्रिपुराभक्तिकारकम्॥ १३॥

सा भवद्रूपिणी देवी हृदि नित्यं समाहिता।
एवं मे वर्तमानस्य किं फलं समवाप्यते॥ १४॥

ஸம்வர்த்த முனிவர் கூறியது எனக்குப் புரியவில்லை. திரிபுரா தேவியின் பெருமையனைத்தும் (மாகாத்ம்ய கண்டத்தில் உபதேசித்தபடி) கேட்டேன். அந்த தேவி தங்கள் வடிவில் என் இதயத்திருள் நன்கு நிலைத்துள்ளாள். இந்நிலையில் உள்ள எனக்கு என்ன பயன் கிட்டுமோ!

भगवन् कृपया ब्रूहि यत्संवर्तः पुरावदत्।
अविदित्वा च तन्नास्ति क्वचिच्च कृतकृत्यता॥ १५॥
तदुक्तमविदित्वा तु यद्यच्च क्रियते मया।
तद्बालक्रीडनमिव प्रतिभाति समन्ततः॥ १६॥

பகவானே! ஸம்வர்த்தர் கூறியதைக் கருணையுடன் விளக்கிக் கூறவேண்டும். அதனை அறியாதவரை நிறைவு ஏற்படாது. அதனை அறியாதபடி நான் செய்வதெல்லாம் குழந்தை விளையாட்டாகவே தோன்றுகிறது.

पुरा मया हि बहुशः क्रतुभिर्दक्षिणोच्छ्रयैः।
प्रभूतान्नगणैरिष्टा देवाः शक्रमुखा ननु॥ १७॥
तदल्पकालमेवेति श्रुतं संवर्तवक्त्रतः।
मन्ये तदहमल्पं यत् दुःखमेवेति सर्वथा॥ १८॥
असुखं नहि दुःखं स्याद्दुःखमल्पं सुखं स्मृतम्।
यतः सुखात्यये दुःखं भवेद् गुरुतरं किल॥ १९॥

வெகு நாட்களுக்கு முன்பு நிறைய தட்சிணையுடனும் அளவற்ற உணவு படைத்தலுடனும் யாகங்கள் செய்து இந்திரன் முதலான தேவர்களுக்குத் திருப்தி செய்வித்தேன். அவைகளால் கிடைக்கக் கூடிய பலன் மிகவும் அல்ப காலத்திற்கே பயன்படும் என்று ஸம்வர்த்தர் வாயிலாகக் கேட்டேன். எது அளவில் குறைவுள்ளதோ அது துக்கம் தருவதே என நினைக்கிறேன். சுகமின்மை துக்கமல்ல. அல்ப காலத்தில் குறையக்கூடிய சுகமே துக்கம். ஏனெனில் சுகம் மறையும்போது மிகப் பெருத்த துக்கம் ஏற்படுமல்லவா?

नैतावदेव चैतस्मादधिकं चास्ति वैभवम्।
मृत्यूपयोगो यद्भूयो न तन्न स्यात्कदाचन॥ २०॥

இது மட்டுமல்ல. இதைவிட அதிகமான துக்கம் மரணம் நெருங்குவது. அது எந்நிலையிலும் வராது என்பதில்லை. (வராமல் தடுக்க முடியாது)

एवमेव भवेद्यन्मे क्रियते त्रिपुराविधौ।
बालक्रीडेव मे भाति सर्वं तन्मानसं यतः ॥ २१॥
एतद्यदुक्तं भवता कर्तुं तत्स्यादितोऽन्यथा।
नियतं चाप्यन्यथा तद् वचोभेदसमाश्रयात् ॥ २२॥
आलंबभेदतश्चापि विविधं प्रतिपद्यते।
कथमेतत् क्रतुसममसत्यफलसंमितम् ॥ २३॥
अप्यसत्यात्मकं यस्मात्कथं सत्यसमं भवेत्।

இதே ரீதியில் திரிபுராதேவியின் வழிபாட்டிலும் நான் செய்வதனைத்தும் குழந்தை விளையாட்டாகவே தோன்றுகிறது. ஏனெனில் அவை அனைத்தும் மனச்சார்புள்ளவை. இந்த வழிபாட்டினைத் தாங்கள் கூறியவாறும் செய்ய முடியும். அல்லது சாஸ்திர வசனங்களையொட்டி வேறு வகையிலும் செய்ய முடியலாம். உபாசனைக்குகந்த (சக்கிரம், ஸாளக்கிராமம், தேவியின் வடிவம் முதலான) பிடிப்பாக நிற்கும் விக்கிரஹங்கள் முதலானதன் வேறுபாட்டால் பலனில் வேறுபாடு ஏற்படக்கூடும். அதனால் இந்த வழிபாடும் யாகத்தை ஒத்ததே. அப்போது நிலையற்ற (அஸத்யமான)பலனைத் தரத்தக்கதாகிறது. மனத்தளவில் செய்யப்படுவதால் வழிபாடும் நிலைத்ததல்ல, அதனால் நிலைத்த பலன் தர இயலாது.

*ஸத்யமானதொன்றே ஸத்யமான பலனைத்தரும். ஸத்யத்தைச் செயலால் உருவாக்க முடியாது. எது செயலால் உருவாகிறதோ அது நிலைத்ததாகாது. ஸத்யமாகாது. யாகத்தால் இந்திரன் முதலான தேவதைகளை மகிழ்வித்துப் பெறக்கூடிய ஸ்வர்க்கஸுகம் நிலைத்ததல்ல. ஏனெனில் அந்த சுகம் யாகம் எனும் செயலின் பலனாக விளைந்தது. யாகம் செய்துமுறை, செய்தவனது சிரத்தை, அதில் பயன்படுத்தப்பெற்ற பொருளின் தன்மை, கூட உதவிசெய்தவர்களின் தகுதி முதலிய பலவற்றிற்கேற்ப அந்தப் பலன் அமைவதால் அதன் தரம் முன் காரணங்களால் மாறுபடும். அதனால் ஒரேவிதமான சுகம் ஏற்படும் எனச் சொல்ல முடியாது. புண்ணியம் எத்தனை நாட்கள் தாங்குகிறதோ அத்தனை நாட்கள் தான் ஸ்வர்க்க ஸுகம். அதன் பிறகு மீதி உள்ள வினையின் பயனை அனுபவிக்கக் கீழுலகம் வரத்தான் நேரும்.*

*"ஸ்வர்க்க ஸுகம் இனிக் கிடையாது. வரப்போகும் பிறவி எப்படி அமையுமோ' என்று ஏற்படும் கவலை ஸ்வர்க்கத்திலிருக்கும்போதே ஸ்வர்க்க ஸுகத்தைத் துக்கமாக்கிவிடும். ஸுகத்தின் வரையறை தெரிந்தால் அதுவே துக்கம். செயற்கையாக அமைவது அநித்தியம். அநித்தியமெல்லாம் துக்கம். கணநேரத்துச் சுகத்திற்காகப் பெருமளவில் உழைப்பது குழந்தைகளின் விளையாட்டு போல் குறிக்கோளற்றது. பலனற்றதும் கூட.*

*கிடைக்கும் சுகமும் ஒரே தரமுள்ளதல்ல. செய்த நல்வினைக் கேற்பப் பலன் என்ற ரீதியில், அங்கும் ஒருவன் யஜமானன், ஒருவன் சேவகன், ஒருவன் உயர்ந்த ஸ்வர்க்க மாளிகையிலிருப்பவன், ஒருவன் ஸ்வர்க்கக் குடிசையிலிருப்பவன் என ஆனால் இந்தத் தராதரமே துக்கத்திற்குக் காரணமாகும். அவனுக்குக் கிடைத்தது நமக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம், கிடைக்கும் சுகத்தை அனுபவிக்கவிடாது.*

*செயற்கையாகக் கிடைக்கும் சுகமனைத்தும் அநித்தியமே எனில் தேவி வழிபாட்டினால் பெறும் சுகமும் அநித்தியமாகத் தானிருக்கும். வழிபாடு செயற்கையானது. மனம் ஈடுபடுமளவிற்குத்தான் பலன். அத்துடன் மேரு, ஸ்ரீசக்கிரம், தேவியின் விக்ரஹம், ஸாலக்கிராம சிலை என்ற வழிபாட்டிற்குரிய மூர்த்திகளின் வேற்றுமை, வழிபாட்டிற்குரிய முறை வேற்றுமை முதலியவற்றால் பலனில் வேற்றுமை இருக்குமே! பலனின் தராதரம், செயற்கையாகையால் செய்த வழிபாட்டிற்குப் பலன் என்ற அஸத்தியநிலை தேவி வழிபாட்டிலும் காணக்கூடுமே? தேவியின் வழிபாட்டினால் நிலைத்த பலன் கிட்டும் என்று ஸம்வர்த்தர் கூறினாரே. அந்த நிலைத்த பலனைப் பெறுவது எங்ஙனம் என்பதே பரசுராமரின் சந்தேகம்.*

अथापि नित्यं कर्तव्यमेतन्नास्यावधिः क्वचित् ।। २४ ।।
लक्षितो मे स भगवान् संवर्तः सर्वशीतलः ।
कर्तव्यलेशविषमविषज्वालाविनिर्गतः ।। २५ ।।
हसन्निव लोकतन्त्रं अभयं मार्गमाश्रितः ।
वने दावाग्निसंकीर्णे हिमांबुस्थगजोपमः ।। २६ ।।
सर्वकर्तव्यवैकल्यामृतसंस्वादनन्दितः ।
कथमेतां दशां प्राप्तो यच्च मामाह तत्पुरा ।। २७ ।।

தேவி வழிபாட்டை நித்யகர்மங்களைப்போல் உயிருள்ளவரைத் தொடர்ந்து செய்ய வேண்டுமெனில் அதற்கு ஓர் எல்லை கிடையாதென்று ஆகிறது. ஆனால் பகவான் ஸம்வர்த்தர் இந்த (கட்டாயம் இதனைச் செய், இதனைச் செய்யாதே என்று விதி நிஷேதங்களுக்கு உட்படாதவராக) செய்ய வேண்டிய கடமைகள் என்ற ஏற்றத் தாழ்வுள்ள விஷ ஜ்வாலையிலிருந்தும் விடுபட்டவராக, அதனால் எல்லாவிடமும் குளிர்ந்தவராகக் காணப்பட்டார். உலகின் நடவடிக்கைகளை அவர் பரிகசிப்பவர்போல் (எதிலும் தான் கட்டுப்படாமல்)பயமற்ற பாதையில் செல்பவராக இருந்தார். அவரைச் சுற்றிக் காட்டுத்தீ சூழ்ந்திருந்தும் (விதி நிஷேதங்கள் என்ற தீ நகரவிடாமல் சூழ்ந்து எரிந்துகொண்டிருந்தாலும்) குளிர்ந்த பனி நீரோடையில் ஆழ்ந்திருக்கும் யானை போல் (சிறிது கூடத்தாபத்தை உணராமல் சுகத்தையே உணர்பவராக) கடமைகளிலிருந்தும் விடுபட்டதையே அமிருதம்போல் பருகி அதனால் ஆநந்தமடைந்தவராகக் காணப்பட்டார். இந்த நிலையை அவர் எப்படி அடைந்தார்? இந்நிலை அடையத்தக்கது என அன்று என்னிடம் குறிப்பிட்டாரே!

*அவனவன் பிறப்பாலும் தான் ஏற்றுக்கொண்ட சில நியமங்களாலும் கட்டுப்பட்டுச் சில கருமங்களைச் செய்தேயாக வேண்டும். அதனை விட்டால் பாபம் உண்டு. அதிலும் சில, உடலில் உயிர் தங்கும் வரை செய்யத்தக்கவை. பலனை எதிர்பாராமல் செய்யத் தக்கவை. செய்யாவிடில் பாபமுண்டு. சில தம் தம் விருப்பம் நிறைவேறச் செய்யத்தக்கன. செய்த அளவிற்கு இவற்றால் லாபம். ஆனால் ஸம்வர்த்தர் இந்த கர்ம பந்தங்கள் சூழ வாழ்ந்தாலும் எந்த கருமத்தையும் அவர் செய்ததாகத் தெரியவில்லை. கருமங்களை விட்டதனால் ஏற்படும் எந்த துக்கத்தையும் பெற்றதாகத் தெரிய வில்லை. மற்றவர் அவரைத் தூஷித்தாலும் அவரைப் புறக்கணித்தாலும் அதனால் யாதொரு பாதிப்பும் அவரிடம் ஏற்பட்டதாகக் காணோம். கடமைகளாக மனிதனைக் கட்டுப்படுத்தும் கருமங்களை விடுவதாலேயே அவருக்கு க்ஷேமம் ஏற்படுவதாகத் தெரிகிறது. இப்படி உலகியலுக்கு மீறிய அவரது நிலையை எப்படி அவரால் அடைய முடிந்தது?*

सर्वमेतत्सुकृपया गुरो मे वक्तुमर्हसि।
कर्तव्यकालभुजगनिगीर्णं मां विमोचय॥ २८॥

குருவே ! இது அனைத்தையும் எனக்குத் தாங்கள் விளக்க வேண்டும். கடமையெனும் கரும்பாம்பு என்னை விழுங்கிவிட்டது. அதிலிருந்தும் என்னை விடுவிக்க வேண்டும்.

इत्युक्त्वा चरणौ मूर्ध्ना गृहीत्वा दण्डवन्नतः।
अथ दृष्ट्वा तथाभूतं भार्गवं मुक्तिभाजनम्॥ २९॥
दयमानस्वभावोऽथ दत्तो वक्तुमुपाक्रमत्।

என்று கூறி திருவடிகளைப் பற்றித் தலையால் தாங்கித் தண்டம் போல் வணங்கினார். அவ்விதம் முக்தியடையத்தக்கவரும் வணங்கி நிற்பவருமான அந்த பிருகு குலத்தோன்றலான பரசுராமரைக் கண்டு கருணை உள்ளம் படைத்த தத்தர் உபதேசிக்கத் தொடங்கினார்.

वत्स भार्गव धन्योऽसि यस्य ते बुद्धिरीदृशी॥ ३०॥
अब्धौ निमज्जतो नौकासंप्राप्तिरिव संगता।
एतावदेव सुकृतिः क्रियाभिरुपसंगतः॥ ३१॥
स्वात्मानमारोहयति पदे परमपावने।

குழந்தாய் பரசுராமா! நீ நல்வினைச் சேமிப்பு உள்ளவன். அந்த நல்வினையின் பயனாகத்தான் இத்தகைய (விருப்பம் நிறைவேறுவதற்கென கருமங்கள் புரிவது வீண் என்றவாறு) எண்ணம் உனக்கு ஏற்பட்டுள்ளது. ஆழந்தெரியாத நீர்த்தேக்கத்தில் மூழ்கியுள்ளவனுக்கு ஒடம் கிட்டியதுபோல் இது பொருத்தமான விளைவே. (தேவியின் வழிபாடு நீ நினைத்தபடி நிலையற்ற பலனைத் தருவது அல்ல.) புண்ணியம் செய்தவனே இத்தகைய வழிபாட்டுச் செயல்களில் ஈடுபடுவான். அந்த ஈடுபாட்டால் மிகத் தூயதான உயர்ந்த நிலையில் தன்னைத்தானே ஏற்றிவிடுகிறான்.

सा देवी त्रिपुरा सर्वहृदयाकाशरूपिणी॥ ३२॥
अनन्यशरणं भक्तं प्रत्येवंरूपिणी द्रुतम्।
हृदयान्तः परिणता मोचयेन्मृत्युजालतः॥ ३३॥

அந்த தேவி எல்லோருடைய இதய வெளியையே தன் வடிவமாக்கிக் கொள்கிறாள். தன்னையே அண்டி நிற்கும் பக்தன் விஷயத்தில் அவனது இதய வெளி வடிவினளான தேவி இத்தகைய புத்தி (செய்யத் தக்கது எது தகாதது எது என்று அறியத் தூண்டும் புத்தி) வடிவில் அவன் இதயத்தினுள் பூர்ணமாக நிறைந்தவளாக அவனை மரண வலையிலிருந்தும் விடுவிக்கிறாள்.

*வழிபாட்டினால் தேவியைச் சரணடையும் எண்ணம் வலிவடைகிறது. தேவி இவனைத் தன்னவனாக ஏற்கிறாள். எல்லோருடைய இதய வெளியிலும்*

*ஞானஸ்வரூபத்தில் இருப்பவள் பக்தனுடைய இதயத்திலும் பேரொளியுடன் விளங்குகிறாள். பக்தன் தான் என்ற அகங்கார உணர்வை இழந்து தேவியிடம் சரணமடைந்துவிட்டதால் தேவியே இவனது அஹந்தையாக நின்று புத்தியை விளக்கி அறியவேண்டியதைச் சரியாக அறிய உதவுகிறாள். அஞ்ஞானம் எனும் பந்தம் தானே விலகுகிறது. அதனால் மரண வலைக்குள் இவன் அகப்படுவதில்லை.*

यावत्कर्तव्यवेतालात् न बिभेति दृढं नरः ।
न तावत्सुखमाप्नोति वेतालाविष्टवत्सदा ।। ३४ ।।

இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும் என்ற ஆசை பிசாசுபோல் உள்ளது. அதனிடம் பயந்தவன் (அதற்கு அடங்கிச் செயல்படும்போது)அந்தப் பிசாசு உட்புகுந்தது போலாகி (நிம்மதியை இழப்பதால்) எப்போதும் அவன் சுகம் பெற முடியாது.

नृणां कर्तव्यकालाहिसंदष्टानां कथं शुभम् ।
करालगरलज्वालाक्रान्तांगानामिव क्वचित् ।। ३५ ।।

அந்தச் செயலைத் தூண்டும் ஆசை கொடிய விஷப் பாம்பு. அதனால் கடிபட்டு அதன் கொடிய விஷத்தால் உடல் முழுவதும் தீண்டப்பெற்ற மனிதர்கள் எங்கு சுகம் பெறப் போகின்றனர்?

कर्तव्यविषसंसर्गमूर्च्छितं पश्य वै जगत् ।
अन्धीभूतं न जानाति क्रियां स्वस्य हितात्मिकाम् ।। ३६ ।।
अन्यथा चेष्टते भूयो मोहमापद्यते पुनः ।
एवंविधो हि लोकोऽयं कर्तव्यविषमूर्च्छितः ।। ३७ ।।
अनादिकालतो भीमे पच्यते विषसागरे ।

செயலைத் தூண்டும் ஆசை ஒரு கொடிய விஷம். அதன் தீண்டலால் சுய நினைவிழந்த உலகைப்பார். கண்ணிழந்த அது தனக்கு எந்தச் செயல் ஹிதமானதென அறியவில்லை. அஹிதமான பாதையில் செயல் புரிகிறது. அதனால் மேலும் அறியாமையில் மூழ்கிறது. செயலைத் தூண்டும் ஆசையால் சுய நினைவிழந்தவன் ஆதியற்ற காலவரையிலிருந்தே இப்படிப் பயங்கரமான விஷக்கடலில் வேதனைப்படுகிறான்.

यथा हि केचित्पथिकाः प्राप्ता विन्ध्यमहानगम् ।। ३८ ।।

क्षुधाभरसमाक्रान्ताः फलानि ददृशुर्वने।
विषमुष्टिफलान्याशु तिन्दुकस्य फलेहया॥ ३९॥
भक्षयामासुरत्यन्तक्षुधानष्टरसेन्द्रियाः।

சில வழிப்போக்கர்கள் விந்தியப் பெருமலையை அடைந்தார்கள். பசி மிகுந்தவர்களாகக் காட்டில் பனிச்சப் பழத்தைத் தேடி அலைந்து (பசி மயக்கத்தால்) எட்டிப் பழத்தை பனிச்சம் பழமென நினைத்து உண்டார்கள். மிதமிஞ்சிய பசியால் அவர்களது நாக்கின் சுவை உணர்ச்சி கெட்டிருந்தது. அதனால் (எட்டிப்பழமென்ற உணர்வின்றி) அதனைச் சாப்பிட்டார்கள். (பனிச்சம்பழம் – மங்குஸ்தான் பழம்)

अथ ते तद्विषज्वालाज्वलितांगाः सुपीडिताः॥ ४०॥
अन्धीभूता विचिन्वन्तः तद्विषोष्णप्रशान्तये।
अविदित्वा मुष्टिफलं तिन्दूफलनिषेवणात्॥ ४१॥
मत्वा ज्वालां निजे देहे धत्तूरफलमासदुः।
भ्रान्त्या जंबीरबुद्धया तत् सर्वैरासीत् सुभक्षितम्॥ ४२॥

அதன் விஷவேகத்தால் உடல் பற்றி எரிய வேதனையுற்றுப் பார்வை இழந்தவர்களாய் அந்த விஷச்சூடு தணிய வகை தேடி அலைந்தார்கள். தாங்கள் உண்டது எட்டிப்பழம் (பனிச்சம்பழம் அல்ல) என்பதனை அவர்கள் அறியவில்லை. பனிச்சம்பழம் உண்டதால்தான் உடல் எரிவு ஏற்பட்டதாக நினைத்து அவர்கள் அலையும்போது ஊமத்தங்காய் அவர்களுக்குக் கிட்டியது. பிரமையால் எலுமிச்சம்பழம் என நினைத்து அனைவரும் அதனை உண்டனர்.

उन्मत्ताश्च ततोऽभूवन् मार्गभ्रष्टाश्च ते तदा।
अन्धीभूता अतिगहने पतन्तो निम्नभूमिषु॥ ४३॥
कण्टकैश्छन्नसर्वांगा भग्नबाहूरुपादकाः।
अधिक्षिपन्तश्चान्योन्यं कलहं चक्रुरुच्चकैः॥ ४४॥
मुष्टिभिश्च शिलाभिश्च काष्ठैर्जघ्नुः परस्परम्।

அதனால் பித்தர்களாகிப் பார்வை இழந்து வழி தவறி அடர்ந்த காட்டினுள் சிக்கியவர்களாகப் பள்ளத்தாக்குகளில் விழுந்து முட்கள் உடல் முழுவதும் தைக்க, கை, தொடை, கால்கள் முறிந்தவர்களாக ஆத்திரமுற்று இந்த நிலைக்குக் காரணம் நீதான் நீதான் என ஒருவரை ஒருவர் கூவி ஏசிக்கொண்டு கலகம் செய்தனர். கைமுட்டிகளாலும் கற்களாலும் தடிகளாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டனர்.

अथ ते दीर्णसर्वांगाः पुरं कच्चित्समासदुः ।। ४५ ।।
निशीथे दैववशतः पुरद्वारमुपाययुः ।
पुरद्वाराधिपालैस्ते प्रतिरुद्धाः प्रवेशने ।। ४६ ।।
देशकालानभिज्ञानात् कलहं चक्रुरुच्चकैः ।

உடல்நிலை தளர்ந்தவர்களாக அன்றிரவு எதேச்சையாக ஒரு தலைநகரை அடைந்து அதன் நுழைவாயிலை அடைந்தார்கள். வாயிற்காப்பவர்களால் உள்ளே செல்ல அனுமதிக்கப் பெறாத அவர்கள் தேசகாலநிலை அறிவின்மையால் அவர்களுடன் சண்டையிட்டார்கள்.

अथ ते प्रहृता द्वारपालैरतितरां यदा ।। ४७ ।।
तदा पलायनपरा बभूवुः परितस्तु ते ।
पतिताः परिखे केचिद् भक्षिता मकरादिभिः ।। ४८ ।।
केचित्खातेषु कूपेषु पतिताः प्राणमुत्सृजुः ।
अपरे तैर्विनिहताः केचिज्जीवग्रहं गताः ।। ४९ ।।

வாயிற்காப்பவர்களால் நன்கு அடிக்கப்பட்ட அவர்கள் சுற்றி ஓடுவதில் முனைந்தார்கள். சிலர் ஆழ்ந்த அகழியில் விழுந்து முதலை முதலியவற்றிற்கு உணவானார்கள். சிலர் ஆழத் தோண்டப்பெற்ற கிணறுகளில் விழுந்து உயிரைவிட்டனர். சிலர் வாயிற்காப்பவர்களால் கொல்லப்பட்டனர். சிலர் அவர்களால் உயிருடன் சிறைபிடிக்கப் பட்டனர்.

एवं जना हितेच्छाभिः कर्तव्यविषमूर्च्छिताः ।
अहो विनाशं यान्त्युच्चैः मोहेनान्धीकृताः खलु ।। ५० ।।

இப்படித்தான் இது ஹிதமென ஒன்றை விரும்பி அதனை அடையச் செயல்படுவதால் விஷத்தால் சுய நினைவிழந்தவர்கள் போல் பேராசையால் பார்வை இழந்தவர்களாக அழிவை அடைகிறார்களே! இது விந்தையல்லவா?

धन्योऽसि भार्गव त्वं तु यस्मादभ्युदयं गतः ।
विचारः सर्वमूलं हि सोपानं प्रथमं भवेत् ।। ५१ ।।
परश्रेयोमहासौधप्राप्तौ जानीहि सर्वथा ।

பிருகு குலத்தோன்றலே! நீர் அதிருஷ்டசாலி. நீர் க்ஷேமப் பாதையை அடைந்து விட்டீர். மிகமேம்பட்ட சிரேயஸ் எனும் உப்பரிகையை அடைய விசாரமே முதல் படி என்பதை அறிவீராக!

*தத்துவ விசாரம் என்பதே இங்கு விசாரம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. விசாரம் பல கோணங்களில் ஒன்றைப் பற்றி நிதானத்துடன் சிந்திப்பதாகும். (விசாரம் என்பது கவலைப்படுவது அல்ல.) சிந்திப்பவன் அதில் சார்பு கொள்ளக்கூடாது. அது நிச்சயம் நல்லதெனவோ கெட்டதெனவோ முன்கூட்டியே முடிவு செய்த பின், அந்த தன் நோக்கத்திற்கேற்ப விளக்கம் தேடுதல் விசாரமல்ல. ஒன்றைப் பற்றி நம்பிக்கையே இல்லாமல் அது பற்றிச் சிந்திப்பதும் முடிவுகாணச் செய்யாது. விதண்டாவாத முறையில் அமைந்த சிந்தனையும் பயன் தராது. வாதத்திற்கோர் எல்லை கிடையாது. தனி யுக்திகளால் மாத்திரம் ஒன்றை ஆராய்ந்து முடிவுகட்ட முடியாது. நிதானத்துடன் முறைப்படி அமைந்த சிந்தனையே உள்ளுணர்வின் ஒப்புதலைப் பெறும். கலக்கமுறாமல், தெளிந்த மனத்தால் கண்டதைப் பற்றற்ற உள்ளுணர்வு ஏற்றுக்கொள்ளுமேயாயின் அந்த விசாரம் நன்கு அமைந்ததாகும். அதனையே இங்கு தத்துவ விசாரம், விசாரம், ஸுவிசாரம் என்ற சொற்களால் குறிப்பிடுகிறார் ஸ்ரீ தத்தகுரு.*

सुविचारमृते क्षेमप्राप्तिः कस्य कदा भवेत् ॥ ५२ ॥
अविचारः परं मृत्युः अविचारहता जनाः ।
विमृश्यकारी जयति सर्वत्राभीष्टसंगमात् ॥ ५३ ॥

நல்ல விசாரமின்றி க்ஷேமம் அடைவது எங்ஙனம்? விசாரமின்மை அழிவைத்தரும். விசாரமின்மையாலேயே மக்கள் அழிகிறார்கள். நன்கு சிந்தித்துச் செயல்படுபவன் எங்கும் விரும்பியதை அடைந்து வெற்றி பெறுவான்.

अविचारहता दैत्या यातुधानाश्च सर्वशः ।
विचारपरमा देवाः सर्वतः सुखभागिनः ॥ ५४ ॥
विचाराद् विष्णुमाश्रित्य जयन्ति प्रत्यरीन् सदा ।

விசாரமின்மையால் அசுரர்களும் ராக்ஷஸர்களும் எங்கும் அழிந்தனர். விசாரத்தை முக்கியமெனக் கொண்ட தேவர்கள் நன்கு ஆராய்ந்து விஷ்ணுவை அண்டினவர்களாக எதிரிகளை எப்போதும் வென்றார்கள், ஸுகமுமடைந்தார்கள்.

विचारः सुखवृक्षस्य बीजमंकुरशक्तिकम् ॥ ५५ ॥
विराजते विचारेण पुरुषः सर्वतोऽधिकः ।

விசாரம் ஸுகமெனும் மரத்தின் விதை; முளைக்கும் சக்தி பெற்றது. விசாரத்தால் மனிதன் எல்லாவகையிலும் மேம்பட்டவனாகிறான்.

विचाराद्विधिरुत्कृष्टो विचारात्पूज्यते हरिः ।। ५६ ।।
सर्वज्ञस्तु विचारेण शिव आसीन्महेश्वरः ।

விசாரத்தால் பிரும்மா மேலானவர். விசாரத்தால் விஷ்ணு பூஜிக்கப்பெறுகிறார். விசாரத்தால் எல்லாமறிந்தவராகி சிவபெருமான் பேராண்மைபடைத்தவராக ஆனார்.

अविचारान्मृगासक्तो रामो बुद्धिमतां वरः ।। ५७ ।।
परमामपदं प्राप्तो विचारादथ वारिधिम् ।
बध्वा लंकापुरीं रक्षोगणाकीर्णां समाक्रमत् ।। ५८ ।।

விசாரமின்மையால் புத்திமான்களில் சிறந்தவரான ராமர் மானிடம் பற்று கொண்டுப் பெருத்த ஆபத்தை அடைந்தார். பிறகு தீர விசாரம் செய்து கடலுக்கு அணைகட்டி ராக்ஷஸப் பேரணியால் காக்கப் பெற்ற இலங்கையையும் முற்றுகையிட்டு வென்றார்.

अविचाराद्विधिरपि मूढो भूत्वाऽभिमानतः ।
शिरश्छेदं समगमदिति संश्रुतमेव ते ।। ५९ ।।

விசாரமின்மையால் மதியிழந்த பிரும்மா தற்பெருமை காரணமாக தலைகிள்ளி எறியப் பெற்றார் என்பதும் நீ அறிந்ததே.

महादेवोऽविचारेण वरं दत्वाऽसुराय वै ।
भस्मीभावात् स्वस्य भीतः पलायनपरोऽभवत् ।। ६० ।।

மகாதேவனும் விசாரமின்மையால் அஸுரனுக்கு வரமளித்துப்பின் தான் பஸ்மமாகக்கூடும் என்பதை அறிந்து பயந்து ஓட முற்பட்டார்.

अविचरादहरिः पूर्वं भृगुपत्नीं निहत्य तु ।
शापेन परमं दुःखमवापात्यन्तदुस्सहम् ।। ६१ ।।
एवमन्ये सुरा देवाः यातुधाना नरा मृगाः ।
अविचारवशादेव विपदं प्राप्नुवन्ति हि ।। ६२ ।।

நாராயணன் முன்னர் விசாரமின்மையால் பிருகுவின் மனைவியைக் கொன்று, அதன் விளைவாக (பிருகு முனிவரின்)சாபம் பெற்றதனால் தாங்கவொணாத கஷ்டத்தை அனுபவித்தார். இப்படியே மற்ற தேவர்களும் ராக்ஷஸர்களும் மனிதர்களும் பிராணிகளும் விசாரமின்மை காரணமாக ஆபத்தை அடைந்தனர் அல்லவா?

महाभागास्ते हि धीराः यान् कुत्रापि च भार्गव।
विजहाति विचारो नो नमस्तेभ्यो निरन्तरम्॥ ६३॥

மிகுந்த பாக்யசாலிகளான தீரர்களை என்றும் விசாரம் கை விடுவதில்லை. அவர்களை என்றும் வணங்குவோம்.

कर्तव्यमविचारेण प्राप्य मुह्यन्ति सर्वतः।
विचार्य कृत्वा सर्वेभ्यो मुच्यतेऽपारसंकटैः॥ ६४॥
एवं लोकांश्चिरादेषोऽविचारः संगतोऽभवत्।

விசாரமின்மையால் செயல் புரிபவர் எங்கும் கலக்கமுள்ளவர்களாகிறார்கள். தீர விசாரித்துச் செயல்படுபவர் தாண்ட முடியாத சங்கடங்களிலிருந்தும் கூட விடுபடுகிறார்கள். இப்படி மக்களை இந்த விசாரமின்மை பற்றிக்கொண்டுள்ளது.

यस्याविचारो यावत्स्यात् कुतस्तावद्विमर्शनम्॥ ६५॥
ग्रीष्मभीष्मकरातप्ते मरौ क्व शिशिरं जलम्।
एवं चिरविचाराग्निज्वालामालापरीवृते॥ ६६॥
विचारशीतलस्पर्शः कथं स्यात्साधनं विना।

விசாரமின்மை திடமாக இருக்கும்போது தீர சிந்திப்பது எங்ஙனம் ஸாத்தியமாகும்? பயங்கரமான கோடையின் தாபத்தால் வாடும் பாலை-வனத்தில் குளிர்ந்த நீர் எங்கு கிடைக்கக்கூடும்? இப்படி வெகுநாட்களாகத் தொடர்ந்துள்ள விசாரமின்மையாகிற தீநாக்குகளின் வரிசையால் சூழப்பட்டவனுக்கு விசாரமெனும் குளிர்ந்த ஸ்பரிசம் தக்க ஸாதனமின்றி எப்படி கிட்டும்?

साधनं त्वेकमेवात्र परमं सर्वतोऽधिकम्॥ ६७॥
सर्वहृत्पद्मनिलयदेवतायाः परा कृपा।

तां विना स्यात्कथं कस्य महाश्रेयः सुसाधनम् ।। ६८ ।।
विचारार्कोऽविचारान्धमहाध्वान्तनिबर्हणः ।
तत्र मूलं भवेद्भक्त्या देवतापरिराधनम् ।। ६९ ।।

இதற்கு ஏற்ற உயர்ந்த ஸாதனம் ஒன்றே. அதுவே மற்றவற்றைவிடச் சிறந்தது. அது எல்லோருடைய இதயத்தாமரையிலும் பிரகாசிக்கின்ற தேவியின் பெருங்கருணை. அதனையன்றி வேறு எதனால் எவனுக்கு அந்த உயர்ந்த மேன்மை எளிதில் பெறத்தக்கதாக முடியும்? விசாரம் என்பது கதிரவன். விசாரமின்மையாகிற பார்வையை மறைக்கும் பேரிருளைப் போக்கவல்லது. அதற்கும் காரணம் பக்தியுடன் தேவியை வழிபடுவதே.

राधिता परमा देवी सम्यक् तुष्टा सती तदा ।
विचाररूपतां याति चित्ताकाशे रविर्यथा ।। ७० ।।
तस्मान्निजात्मरूपां तां त्रिपुरां परमेश्वरीम् ।
सर्वान्तरनिकेतां श्रीमहेशीं चिन्मयीं शिवाम् ।। ७१ ।।
आराधयेदकापट्यात् सद्गुरुद्वारतः क्रमात् ।

நன்கு வழிபடப் பெற்ற தேவி மகிழ்ச்சியுற்றவளாகச் சித்தமெனும் ஆகாசத்தில் கதிரவனைப்போன்று விசாரமெனும் உருக்கொள்கிறாள். அதனால் தன் ஆத்மாவாக இருப்பவளும் எல்லாவற்றினுள்ளும் உறைந்திருப்பவளும் பேராண்மை பெற்றவளும் பேரறிவு வடிவினளும் மங்களவடிவினளுமான திரிபுரா பரமேச்வரியைக் கபடமின்றி முறைப்படி நல்ல குரு காட்டிய வழியில் வழிபட வேண்டும்.

आराधनेऽपि मूलं स्यात् भक्तिः श्रद्धा च निर्मला ।। ७२ ।।
तत्रापि मूलं माहात्म्यश्रवणं परिकीर्तितम् ।
अतस्ते प्रथमं राम माहात्म्यं संप्रवर्तितम् ।। ७३ ।।
तेन श्रुतेनाधुना त्वं प्राप्तवानसि मंगलम् ।

பரசுராமரே! வழிபாட்டிற்கு அவசியத் தேவை பக்தியும் அப்பழுக்கற்ற நம்பிக்கையும். அதற்கும் தேவியின் பெருமைகளைக் கேட்பது அவசியம். அதனால் தான் முதலில் தேவியின் பெருமை பற்றி விளக்கம் தொடங்கப்பெற்றது. அதனைக் கேட்டதால் தான் மங்களங்களை பெற்றுள்ளீர்.

विचारः श्रेयसो मूलं यस्मात्ते न हि भीरितः ।। ७४ ।।

विचारोदयपर्यन्तं भयमस्ति महत्तरम्।
अविचारात्मदोषेण ग्रस्तस्य प्रतिवासरम्॥ ७५॥
यथा हि सन्निपातेन ग्रस्तस्यौषधसेवनात्।
अपि तावद्भवेद्भीतिर्यावद्धातोरशुद्धता॥ ७६॥

விசாரம் தான் மேம்பாட்டிற்கான ஸாதனம். அதனைப் பெற்று விட்டபடியால் இனி பயமில்லை. விசாரமின்மை எனும் மனத்தின் தோஷத்தால் பீடிக்கப்பட்டவனுக்குத் தினமும் பெருத்த பயமுண்டு. அந்த பயம் விசாரம் தோன்றும் வரையில் தான். (தாதுக்களில் கடுமையான மலச் சேர்க்கையால் ஏற்படும்) ஜன்னியில் (ஸந்நிபாதஜ்வரத்தில்) மருந்தைச் சாப்பிட்டு தாதுக்களில் உள்ள அழுக்கு அகலும் வரை பயம் இருக்குமாப்போல் தான் இந்த பயமும்.

प्राप्ते विचारे परमे फलितं जीवितं नृणाम्।
यावत्सु जन्मसु नृणां विचारो न भवेत्परः॥ ७७॥
तावन्तो जन्मतरवो वन्ध्या विफलहेतवः।
स एव सफलो जन्मवृक्षो यत्र विमर्शनम्॥ ७८॥

விசாரம் செய்வதுதான் வாழ்வின் முக்கியப் பயனாகும். எத்தனை பிறவிகளில் விசாரமே ஏற்படவில்லையோ அத்தனை பிறவிகளாகிய மரங்கள் காய்க்காமல் வீணாகின்றன. எந்தப் பிறவியில் விசாரம் தோன்றிற்றோ அப்பிறவியே பழம் தரவல்லது.

कूपमण्डूकसदृशा ये नरा निर्विमर्शनाः।
यथा कूपे समुत्पन्नो भेको नो वेद किञ्चन॥ ७९॥
शुभं वाप्यशुभं वापि कूप एव विनश्यति।
तथा जना अपि वृथोत्पन्ना ब्रह्माण्डकूपके॥ ८०॥
शुभं वाप्यशुभं वापि न विदुः स्वात्मनः क्वचित्।
उत्पद्योत्पद्य नश्यन्ति न जानन्ति स्वकं हितम्॥ ८१॥

கிணற்றுத் தவளையை ஒத்தவர்கள் அந்த விசாரமற்றவர்கள். கிணற்றில் தோன்றிய தவளை அதனைத் தவிர சுபமாயினும் அசுபமாயினும் வேறொன்றை அறியாது. கிணற்றிலேயே அழிந்து விடும். அப்படி இந்த பிரம்மாண்டமெனும் கிணற்றில் தோன்றிய மக்களும் தனக்கு சுபத்தையோ அசுபத்தையோ சிறிதும் அறியாமல் வீணாக வாழ்ந்து பிறந்து அழிகிறார்கள். தனக்கு ஹிதமானதை அறிவதில்லை.

सुखबुद्धिं च दुःखेषु सुखे दुःखविनिश्चयम्।
प्राप्याविचारमाहात्म्यात् पच्यन्ते सृतिपावके॥ ८२॥
दुःखेन क्लिश्यमानाश्च न कथञ्चित्त्यजन्ति तत्।
यथा पादशताघातैस्ताडितोऽपि महाखरः॥ ८३॥
रासभीमनुयात्येव तथा संसरणं जनः।
त्वं तु राम विचारात्मा पारं दुःखस्य संगतः॥ ८४।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे विचारमाहात्म्यं नाम
द्वितीयोऽध्यायः।

துக்கம் தருபவைகளில் சுகம் தருபவை என்ற நோக்கும்,சுகம் தருபவைகளில் துக்கம் தருபவை என்ற நிச்சயமும் கொண்டு விசாரமின்மையின் பளுவால் ஸம்ஸாரமெனும் தீயில் வாட்டப் பெறுகிறார்கள். துக்கத்தால் துன்பறுத்தப்பட்டாலும் அதனை எவ்வகையிலும் விட்டு ஒதுங்குவதில்லை. கால்களால் பலதடவை உதைக்கப் பட்டாலும் ஆண் கழுதை பெண் கழுதையை விடாமல் தொடர்வது போல் மக்கள் ஸம்ஸாரத்தைத் தொடர்கின்றனர். ராமரே! நீர் மட்டும் விசாரமுள்ள மனத்தினராய் துக்கத்தின் எல்லையைக் கடந்து விட்டீர்.

***ஸ்ரீ திரிபுரா ரஹஸ்யத்தில் ஞான கண்டத்தில் விசாரத்தின் பெருமை என்ற இரண்டாம் அத்தியாயம் .***

# तृतीयोऽध्यायः

## மூன்றாம் அத்தியாயம்

दत्तात्रेयप्रोक्तवचः श्रुत्वाऽत्यन्तसुकौतुकी।
जामदग्न्यः पुनरपि पप्रच्छ विनयान्वितः ॥ १ ॥

தத்தாத்ரேயர் கூறிய வார்த்தையைக் கேட்டதும் மிகுந்த குதூகலத்துடன் ஜமதக்னி குமாரரான பரசுராமர் வணக்கத்துடன் மறுபடி கேட்டார்.

भगवन्गुरुनाथोक्तं भवता यत्तथैव तत्।
अविचारात्परो नाशः संप्राप्तः सर्वथा जनैः ॥ २ ॥
विचारेण भवेच्छ्रेयस्तन्निदानमपि श्रुतम्।
माहात्म्यश्रुतिरित्येवं तत्र मे संशयो महान् ॥ ३ ॥

"குருநாதனே! தாங்கள் கூறியது சரியே. விசாரமின்மையால் பெரும் இழப்பு மக்களுக்கு எப்போதும் கிட்டியுள்ளது. விசாரத்தால் மேன்மை ஏற்படும். அந்த விசாரமும் அம்பிகையின் பெருமை பற்றிக் கேட்பதால் கிட்டும். அதில் எனக்குப் பெரும் ஐயம் ஏற்படுகிறது.

कथं वा तदपि प्राप्यं साधनं तत्र किं भवेत्।
स्वाभाविकं तद्यदि स्यात् तत् सर्वैर्न कुतः श्रुतम् ॥ ४ ॥
अहं वाऽद्यावधि कुतः प्रवृत्तिं नाप्तवानिह।
दुःखं मत्तोऽधिकं प्राप्ता विहताश्च पदे पदे ॥ ५ ॥
न कुतः साधनं प्राप्ता एतन्मे कृपया वद।

அம்பாளின் பெருமையைக் கேட்பதும் எங்ஙனம் கிட்டும்? அதற்குரிய சாதனம் எது? எல்லோருக்கும் எளிதில் தானே கிட்டக் கூடியதென்றால் ஏன் எல்லோரும் அதனைக் கேட்கவில்லை? நானும் இதில் எதனால் இதுவரை ஈடுபடவில்லை? என்னைவிட மிகுந்த துயரை அடைந்தவர்கள், இடையிடையே பெரும் இழப்பையடைந்தவர்கள் ஏன் அந்த ஸாதனத்தைக் கையாளவில்லை? இதனைக் கருணையுடன் கூறுவீராக!"

इत्यापृष्टः प्राह भूयो हृष्टो दत्तो दयानिधिः ॥ ६ ॥
शृणु राम प्रवक्ष्यामि निदानं श्रेयसः परम्।

सद्भिः संगः परं मूलं सर्वदुःखनिबर्हणम् ।। ७ ।।
परमार्थफलप्राप्तौ बीजं सत्संग उच्यते।
त्वं चापि तेन हि सता संवर्तेन महात्मना ।। ८ ।।
संगतः सन्निमां प्राप्तः दशां श्रेयःफलोदयाम्।

இப்படிக் கேட்கப்பட்ட தத்தர் மிகுந்த மகிழ்ச்சியுள்ளவராக தயைக் கடலாகக் கூறினார். "ராமரே! கேளும்.. மேன்மையடையச் சிறந்த ஸாதனத்தைக் கூறுகிறேன். நல்லோர்களுடன் சேர்வது அதற்குச் சிறந்த ஸாதனம். எல்லாத் துயரங்களையும் போக்க வல்லது. பரம தத்துவ அறிவெனும் பழத்தைப் பெற ஸத்ஸங்கம் (நல்லோர் இணக்கம்) விதை போன்றது. நீரும் அந்த நல்ல மகாத்மாவான ஸம்வர்த்தருடன் கூடினதால் இந்த மேன்மையாகிய நற்பயனைப் பெறும் நிலையை அடைந்தீர்.

सन्त एव हि संयाता दिशन्ति परमं सुखम् ।। ९ ।।
विना सत्संगतः केन प्राप्तं श्रेयः परं कदा।
लोकेऽपि यादृशं संगं यो यः प्राप्नोति मानवः ।। १० ।।
तत्फलं स समाप्नोति सर्वथा न हि संशयः।

ஸாதுக்கள் அணுகப்பட்டார்களேயானால் உயர்ந்த நிலையைக் காட்டுவார்கள். ஸாதுக்களோடு சேராமல் எவரால் எப்போது நன்மை அடையப்பட்டிருக்கிறது? உலகில் எவனெவன் எத்தகைய கூட்டுறவைப் பெறுகிறானோ அதற்கேற்ற பலனைத் தான் பெறுவான். ஐயமில்லை.

अत्र ते कीर्तयिष्यामि शृणु राम कथामिमाम् ।। ११ ।।
पुरा दशार्णाधिपतिर्मुक्ताचूड इतीरितः।
तस्य पुत्रौ हेमचूडमणिचूडो बभूवतुः ।। १२ ।।
सुरूपौ सुगुणौ चौभौ सर्वविद्याविशारदौ।

ராமரே! இங்கு ஒரு கதை கூறுகிறேன். முன்பு தசார்ண தேசத்தின் அரசராக முக்தாசூடர் என்பவரிருந்தார். அவருக்கு இரு குமாரர்கள் ஹேமசூடன், மணிசூடன் என. அவர்கள் இருவரும் நல்ல அழகுள்ளவர்கள், நற்குணமுள்ளவர்கள். எல்லா கல்வித்துறைகளிலும் தேர்ந்தவர்கள்.

कदाचिन्मृगयोत्साहात् सेनाभिः परिवारितौ ।। १३ ।।
सह्याचलवनं भीमं सिंहव्याघ्रादिसंकुलम्।

महाबलौ विविशतुः धनुर्बाणधरौ किल॥ १४॥
अथ तत्र मृगान् सिंहान् वराहान् महिषान् वृकान्।
जघ्नतुः निशितैर्बाणैः लाघवात् कार्मुकच्युतैः॥ १५॥

ஒரு சமயம் வேட்டையில் உற்சாகத்துடன் படைகள் சூழ ஸஹ்ய மலையைச் சேர்ந்த சிங்கம், புலி முதலியவைககளால் சூழப்பட்ட பயங்கரமான காட்டை அடைந்து பெருத்த பலசாலிகளான அவர்கள் வில்லும் அம்பும் ஏந்தி அங்கு மான், சிங்கம், பன்றி, எருமை, ஓநாய் முதலியவற்றை லாகவத்துடன் வில்லிலிருந்து எறியப்பட்ட அம்புகளால் கொன்றார்கள்.

एवं विनिघ्नतोर्वन्यान् मृगान् राजकुमारयोः।
चण्डवायुः प्रादुरासीत् शर्कराश्मप्रवर्षणः॥ १६॥
पांशुभिर्नभ आक्रान्तं अभूत् दर्शनिशोपमम्।
न दृश्यते तत्र शिला वृक्षः पुरुष एव वा॥ १७॥

இப்படிக் காட்டு விலங்குகளை அரச குமாரர்கள் வேட்டையாடிக் கொண்டிருக்கும் போது பெருத்த சுழற் காற்று மணலையும் கல்லையும் வாரியிறைப்பதாக ஏற்பட்டது. புழுதியால் வானம் மறைக்கப்பட்டு அமாவாசை இரவு போல் இருள் சூழ அங்கு பாறையோ மரமோ மனிதனோ புலப்படவில்லை.

कुतो नीचोच्चतां पश्येत् एवं ध्वान्तावृतो गिरिः।
निहता शर्करावर्षैः सेनाऽत्यन्तं पलायिता॥ १८॥
वृक्षान् केचित् शिलाः केचित् गुहाः केचिदुपासदुः।
अश्वारूढौ राजपुत्रौ अपि दूरं पलायितौ॥ १६॥

மேட்டையும் பள்ளத்தையும் எப்படி அறிவது? மலையை இருள் சூழ்ந்துவிட்டது. மணல் மாரியால் படை அடிக்கப்பட்டு விரட்டப்பட்டது. சிலர் மரத்திலும் சிலர் பாறையிலும் ஏறினர். சிலர் குகையை அடைந்தனர். குதிரைகளில் ஏறியிருந்த அரச குமாரர்களும் வெகுதூரம் விரட்டப்பட்டனர்.

हेमचूडः क्वचित्तत्र प्रपेदे तापसाश्रमम्।
कदलीखर्जूरवनैः आक्रान्तमतिसुन्दरम्॥ २०॥

ஹேமசூடன் அங்கு ஓரிடத்தில் வாழை பேரீச்சை இவைகள் அடர்ந்த அழகிய முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான்.

तत्रापश्यच्छुभां काञ्चित् कन्यामग्निशिखामिव।
प्रद्योतमानां वपुषा तप्तहेमसुवर्चसाहम्॥ २१॥
तां दृष्ट्वा राजपुत्रोऽपि पद्मामिव सुरूपिणीम्।
स्मयमान इवापृच्छत् का त्वं पद्मानने वने॥ २२॥
निर्जने भीतिजनने निर्भयेव समास्थिता।
कस्य त्वमपि केनात्र निवसस्येकला कथम्॥ २३॥

அங்கு உருக்கிய தங்கம் போன்ற மேனி ஒளி உள்ளவளும் தீப்பிழம்புபோல் ஒளிமிக்கவளுமான அழகான பெண்ணைப் பார்த்தான். அரசகுமாரன் அழகிய லக்ஷ்மீ போன்ற அந்தப் பெண்ணைப் பார்த்துப் புன்சிரிப்புடன் கேட்டான். "தாமரை போன்ற முகம் உள்ளவளே! நீ யார்? பயங்கரமான மனித சஞ்சார மற்ற காட்டில் பயமில்லாதவள் போல் இருக்கிறாய். யாருடையவள் நீ? எதற்காக எப்படி இவ்விதம் தனித்து இருக்கிறாய்?

पृष्टैवं प्राह सा कन्या राजपुत्रमनिन्दिता।
स्वागतं ते राजपुत्र विष्टरं प्रतिपद्यताम्॥ २४॥
तपस्विनामयं धर्मः पूजनं ह्यतिथेस्तु यत्।
श्रान्तं त्वामभिपश्यामि व्यथितं चण्डवायुना॥ २५॥
बध्वा खर्जूरवृक्षेऽश्वमत्रासीनो गतश्रमः।
मद्वृत्तमर्हसि श्रोतुं इत्युक्तः स तथाऽकरोत्॥ २६॥

இப்படிக் கேட்கப்பட்ட அந்த குறைவற்ற பெண் அரச குமாரனிடம் சொன்னாள் – "அரசகுமாரரே, உமக்கு நல்வரவாகுக! இந்தப் பலகையில் அமருங்கள் ! விருந்தாளியை வழிபடுவது தவசிகளின் கடமை. பேய்க்காற்றால் துன்புற்ற தாங்கள் களைத்திருப்பதை உணர்கிறேன். இந்தப் பேரீச்சை மரத்தில் குதிரையைக் கட்டி இங்கு அமர்ந்து களைப்பு நீங்கியவராக என்னைப்பற்றி கேட்கலாம்". இவ்வாறு கூறப்பட்ட அவன் அவ்விதமே செய்தான்.

फलानि भोजयामास पाययामास सद्रसम्।
एवं तं विश्रमं प्राप्तं राजपुत्रमनिन्दिता॥ २७॥
प्राह सा मधुसंस्रावपेशलाकारया गिरा।

அந்தப் பெண் அவரைப் பழங்களை ஏற்கச் செய்தாள். நல்ல இனிய கனிரஸத்தை அருந்தச் செய்தாள். இவ்விதம் களைப்பு நீங்கிய அரசகுமா-ரனிடம் குறைவற்ற அவள் தேன் ஒழுகும் இனிய குரலுடன் கூறினாள்.

राजपुत्र व्याघ्रपादो मुनिः शिवपदाश्रयः ।। २८ ।।
येन लोकाः पुण्यतमा जिताः स्वतपसो बलात् ।
परावरज्ञो ह्यनिशं पूजितो मुनिनायकैः ।। २६ ।।
तस्याहं धर्मतः पुत्री हेमलेखेति विश्रुता ।

அரசகுமாரரே! சிவபெருமானது திருக்கோயிலைத் தன்னிருப்பிடமாகக் கொண்ட வியாக்ரபாதர் என்ற முனிவர் இருக்கிறார். அவர் தம் தவ வலிமையால் எல்லா புண்யலோகங்களையும் வென்றவர். பெரிதும் சிறிதுமாயுள்ளதனைத்தையும் அறிந்தவர். சிறந்த முனிவர்களால் வழிபடப் பெற்றவர். அவருக்கு ஹேமலேகை என்ற பெயருள்ள நான் வளர்ப்புப்பெண்.

विद्युत्प्रभाख्या विद्याध्री सा सर्वांगमनोहरा ।। ३० ।।
इमां वेणामनु नदीं स्नातुमभ्याययौ क्वचित् ।
तदा तत्राजगामार्थात् सुषेणो वंगभूपतिः ।। ३१ ।।
स ददर्श विगाहन्तीं नदीं तां लोकसुन्दरीम् ।
क्लिन्नांशुकान्तरत्यन्तव्यक्तपीनकुचद्वयीम् ।। ३२ ।।

வித்யுத்பிரபா என்ற வித்யாதரப்பெண் மிகுந்த அழகி. அவள் வேணா எனும் ஆற்றில் ஸ்நானம் செய்ய வந்தாள். அங்கு வங்கத் தரசன் ஸுஷேணன் எதிர்பாராதவகையில் வந்தான். ஆற்று நீரில் மூழ்கி எழும் இந்த மிக அழகிய பெண்ணைப் பார்த்தான்.

कामबाणहतस्तत्र तां प्रार्थयदथापि सा ।
सौन्दर्यमोहिता तस्य तदुक्तिं सममंसत ।। ३३ ।।
संगम्याथ तया राजा ययौ स्वनगरं प्रति ।
दधार सापि विद्याध्री गर्भं राजर्षिवीर्यतः ।। ३४ ।।
भीताऽपचारात्पत्युः सा गर्भं त्यक्त्वाऽत्र संययौ ।
अमोघवीर्याद् राजर्षेर्जाताहं कन्यका ततः ।। ३५ ।।

காமனது அம்பால் அடிபட்ட அரசன் அவளை வேண்டினான். அவன் அழகில் மயங்கிய அவளும் அதற்கு ஒத்துக்கொண்டாள். அவளுடன் கூடி இருந்துவிட்டு அரசன் தன் தலைநகருக்குச் சென்றான். அந்த வித்யாதரப் பெண்ணும் ராஜரிஷியின் வீர்யத்தில் கருத்தரித்தாள். தன் கணவனுக்குத் தான் செய்த அபசாரத்திலிருந்து பயந்த அவள் கருவை இங்கேயே விட்டுச் சென்றாள். ராஜரிஷியின் வீரியம் சக்திமிக்கதாகையால் அந்தக் கருவிலிருந்து நான் பெண்ணாக உண்டானேன்.

मां ददर्श व्याघ्रपादः सन्ध्योपास्त्यर्थमागतः।
दयया मामुपादायापालयज्जननी यथा॥ ३६॥
धर्मेण यः पालयिता प्रोच्यते हि पितैव सः।
अहं तस्य धर्मपुत्री पितृसेवापरायणा॥ ३७॥

ஸந்தியாகாலவழிபாட்டிற்கு அங்குவந்த வியாக்ரபாதர் என்னைக் கண்டார். பரிவுடன் என்னை எடுத்துத் தாயைப்போல் வளர்த்தார். கடமையுணர்வுடன் காப்பாற்றுபவரே தந்தை. அவருக்கு நான் தர்மப்படி பெண். அவரது சுசுரூஷையில் ஈடுபட்டவள்.

तस्य माहात्म्यतो मेऽत्र भयं नास्त्येव कुत्रचित्।
नायं सुरासुरैर्वापि कदाचिद्दुष्टबुद्धिभिः॥ ३८॥
प्रवेष्टुमाश्रमोऽर्हः स्यात् प्रविशन्नाशमाप्नुयात्।
एतन्मेऽभिहितं वृत्तं तिष्ठ किञ्चिन्नृपात्मज॥ ३६॥
आयास्यति स भगवान् पिता मे तं निशामय।
प्रणम्य तं प्राप्य चेष्टं ततः कल्ये प्रयास्यसि॥ ४०॥

அவரது சக்தி மகிமையால் எனக்கு இங்கு எதிலிருந்தும் பயமில்லை. தேவர் அஸுரர் எவராயினும் கெட்ட எண்ணமுள்ளவர்களானால் இந்த ஆசிரமத்தில் நுழையமுடியாது. நுழைந்தவன் அழிவான். இது என்னைப்பற்றிக் கொஞ்சம் தெரிவிக்கப்பட்டது. அரசகுமாரரே! என் தந்தை அந்தப் பெரியவர் இப்போது வருவார். அவரைக் காணுங்கள். தங்கள் விருப்பத்தைப் பெற்று நாளை விடியற்காலை செல்லுங்கள்.

हेमलेखावचः श्रुत्वा तत्सौन्दर्येण मोहितः।
भीतः किंचित्प्रवक्तुं तां विमना इव चाभवत्॥ ४१॥

अथालक्ष्य राजपुत्रं कामस्य वशमागतम्।
प्राह सा विदुषी भूयो राजपुत्र धृतिं भज॥ ४२॥
आगच्छति पिता सद्यः ततोऽभिलषितं भज।

ஹேமலேகையின் வார்த்தையைக் கேட்ட அவன் அவள் அழகில் தன்னை இழந்தவனாக அவளிடம் அதைத் தெரிவிக்கப் பயந்தவனாகத் தடுமாறினான். அரசகுமாரன் காமவசமடைந்துள்ளதை அறிந்த அவள் மறுபடியும் சொன்னாள் – "அரசகுமாரரே! மனத்தைத் தளர விடாதீர்கள். என் தந்தை உடன் வருவார். தங்கள் விருப்பத்தைப் பெறலாம்". என.

एवं वदन्त्यां तस्यां स व्याघ्रपादो महामुनिः॥ ४३॥
आजगाम वनात् पत्रपुष्पादेः कृतसञ्चयः।
मुनिं समागतं दृष्ट्वा राजपुत्रः समुत्थितः॥ ४४॥
प्रणम्य नाम संश्राव्योपविष्टस्तेन देशितः।

இப்படி அவள் சொல்லிக்கொண்டிருக்கும்போதே காட்டிலிருந்து இலை பூ முதலியவைகளைச் சேகரித்துகொண்ட வியாக்ரபாதமுனிவர் அங்கு வந்தார். முனிவர் வந்ததை நோக்கிய அரசகுமாரன் எழுந்து வணங்கிப் பெயர் கூறி அவரால் அனுமதிக்கப்பட்டு உட்கார்ந்தான்.

अथ दृष्ट्वा राजपुत्रं कामेन विकृताकृतिम्॥ ४५॥
ज्ञात्वा योगदृशा सर्वं मत्वा युक्तं च तत्तदा।
दारक्रियार्थं तस्मै तां हेमलेखां ददौ मुनिः॥ ४६॥
तुष्टो राजकुमारोऽपि तामादाय पुरं ययौ।
मुक्ताचूडोऽतिसन्तुष्टो महोत्सवविधानतः॥ ४७॥
विवाहमकरोत्तस्य विधानेन क्षितीश्वरः।

முனிவர் யோகதிருஷ்டியால் ராஜகுமாரன் காமத்தால் உருமாறியிருப்பதை உணர்ந்து, அது தகுந்ததென உணர்ந்து மணப்பதற்காக அந்த ஹேமலேகையை அவனிடம் தந்தார். மகிழ்ச்சியுற்ற அரசகுமாரனும் அவளை ஏற்று நகரம் சென்றான். முக்தாசூடனும் மிகவும் மகிழ்ச்சியுற்றவனாக பெருவிழாவாகத் திருமணத்தை முறைப்படி செய்வித்தான்.

अथ राजकुमारोऽपि तया क्रीडापरः सदा॥ ४८॥
सौधेषु वनराजीषु पुलिनादिषु संबभौ।

हेमलेखां राजपुत्रो भोगेष्वनतिकामिनीम् ॥ ६६ ॥
उदासीनां सदा दृष्ट्वा पप्रच्छ रहसि कचित्।

பிறகு அரசகுமாரனும் அவளுடன் உல்லாசமாக மாளிகைகளின் உப்பரிகைகளிலும் காடுகளிலும் ஆற்றுத் திடல்களிலும் மகிழ்ந்திருந்தான். ஆனால் ஹேமலேகை போகவாழ்வில் அதிக ஈடுபாடில்லாதவளாகவும் ஒதுங்கும் மனப்பான்மை கொண்டவளாகவும் எப்போதும் இருப்பதைப் பார்த்துத் தனிமையில் ஒரு நாள் அவளைக் கேட்டான்.

किं प्रिये नानुरक्तासि प्रिये मय्यनुरागिणि ॥ ५० ॥
कुतो भोगेषु नात्यन्तमासक्तासि शुचिस्मिते।
किं भोगास्ते मनोयोग्या न सन्त्यत्र कुतस्त्विदम् ॥ ५१ ॥
अत्युत्तमेषु भोगेषु नासक्तेव विभासि मे।
त्वय्यासक्तिविहीनायां कथं मे सुखदा रतिः ॥ ५२ ॥

"அன்பே ! நான் அன்புடன் உன்னிடம் ஈடுபடும்போது நீ ஏன் என்னிடம் பிரியமாக இல்லை? கள்ளமற்ற சிரிப்பு உள்ளவளே! ஏன் போகப் பொருள்களில் நாட்டமே இல்லாதிருக்கிறாய்? உன் மனத்திற்கு உவப்பான போகப்பொருள் இங்கு இல்லையா? ஏன் இப்படி? மிகச் சிறந்த பொருளிலும் உனக்கு நாட்டமில்லையே? நீ இப்படி ஈடுபாடற்றிருந்தால் எனக்கு சுகத்தால் ஏற்படும் நிம்மதி எப்படி அமையும்?

आसक्ते मयि चापि त्वं भास्यन्यगतमानसा।
भाषितापि मया भूयो न शृणोष्येव किञ्चन ॥ ५३ ॥
आगतं कण्ठसंलग्नं चिरादपि विभाव्य च।
कदा नाथागतं चेति पृच्छस्यविदिता यथा ॥ ५४ ॥

நான் உன்னிடத்தில் ஈடுபடும்போது நீ வேறிடத்தில் மனம் செலுத்தி யவளாய் காண்கிறாய். நான் உன்னிடம் பேசிக் கொண்டிருக்கையில் நீ காது கொடுத்துக் கேட்பதில்லை. உன்னிடம் வந்து உன்னை அணைத்துக்கொண்டபின் நீ என்னை வெகுநேரம் உற்றுப் பார்த்து ஒன்றும் அறியாதவள் போல் எப்பொழுது வந்தீர் எனக் கேட்கிறாய்!

पेशलेषूपभोगेषु दुर्लभेषु क्वचिन्न ते।
मन आसज्जते कस्मात् न किञ्चिदनुमोदसि ॥ ५५ ॥

मया विरहितां त्वां वै निमील्य नयने स्थिताम्।
यदा यदोपगच्छामि पश्यामि च तदा तदा॥ ५६॥
विमुखां त्वयि भोगेषु विषयेषु सुखं मम।
कथं भवेद्दारुयोषासङ्गतस्येव तद्वद॥ ५७॥

எளிதில் கிடைக்காத ரஸமுள்ள போகப்பொருள்களில் கூட உன் மனம் ஈடுபடுவதில்லை. ஏன் நீ அவைகளை ஏற்கவில்லை? நானில்லாத போது கண்களை மூடி அமர்ந்துள்ள உன்னை எவ்வெப்போது நெருங்குகின்றேனோ அவ்வப்போது நீ ஆர்வமற்றவளாக இருப்பதைப்பார்க்கிறேன். மரத்தாலான பெண்ணைத் தழுவுவது போன்று எனக்கு அதில் எப்படி சுகம் கிட்டும் ? சொல்.

न तवाभिमतं त्यक्त्वा किञ्चिन्मम समीहितम्।
सर्वथा त्वामनुगतो ज्योत्स्नां कुमुदवत् किल॥ ५८॥
तदेवं ते कुतश्चित्तं ब्रूहि प्राणाधिकप्रिये।
येन शुध्येत्तु मच्चित्तं शापितासि मया प्रिये॥ ५९॥
इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
सत्सङ्गमाहात्म्यं नाम तृतीयोऽध्यायः।

உனது விருப்பத்தை மீறி எதனையும் செய்யமுடியவில்லை. எப்போதும் உன்னையே பின் தொடர்கிறேன், நிலவை அல்லி தொடர்வதுபோல். உனக்கேன் மனம் இப்படி ஆனது? பிராணனைவிட பிரியமானவளே! உன்மேல் ஆணை, என் மனம் தெளியும்படி விடை தருவாயாக".

***திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் நல்லோர் இணக்கத்தின் பெருமை என்ற மூன்றாவது அத்தியாயம்.***

# चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்தியாயம்

प्रियस्य कण्ठासक्तस्य निशम्यैवं वचो हि सा।
ईषत्स्मितानना प्राह राजपुत्रमनिन्दिता॥ १॥
बुबोधयिषती राजपुत्रं युक्त्याऽब्रवीदिदम्।

கழுத்தை அணைத்திருக்கும் அன்பரின் வார்த்தையைக் கேட்ட குறையற்ற அவள், சிறிது புன்சிரிப்புடன் அரசகுமாரனுக்கு அறிவூட்ட விரும்புபவளாக யுக்தியுடன் பேசினாள்.

राजपुत्र शृणु वचो नाहं त्वयि विरागिणी॥ २॥
किं स्यात्प्रियतमं लोके किन्तु स्यादप्रियं त्विति।
विचारपरमा नित्यं नान्तमेत्यत्र मे मतिः॥ ३॥
ध्यायाम्येतच्चिरान्नित्यं स्त्रीस्वभाववशादहम्।
नैतज्ज्ञानामि तत्त्वं मे वक्तुमर्हसि तत्वतः॥ ४॥

அரசகுமாரரே! என் வார்த்தையைக் கேளும். நான் தங்களிடம் அன்பற்றவள் அல்ல. உலகில் எது மிகச்சிறந்த அன்புக்குரியது? எது அன்புக்கு உரியதல்ல? என எப்போதும் யோசிப்பதிலேயே ஈடுபட்ட என் புத்தி ஒரு முடிவையும் அடையவில்லை. பெண் ஸ்வபாவத்தால் அதனையே வெகுநேரம் தினமும் யோசிப்பதில் ஆழ்ந்து விடுகிறேன். இதன் உண்மை நிலையை நான் அறியமுடியவில்லை. இதனைத் தத்துவ ரீதியாக எனக்கு நீங்கள் கூறவேண்டும்.

एवं प्रोक्तो हेमचूडः प्रहस्य प्राह तां प्रियाम्।
नूनं स्त्रियो मूढधिय इति सत्यं न संशयः॥ ५॥
प्रियाप्रिये हि जानन्ति पशुपक्षिसरीसृपाः।
यतस्तेषां दृश्यते हि प्रियेष्वप्रियकेषु च॥ ६॥
प्रवृत्तिश्च निवृत्तिश्च किमत्र बहु चिन्तनम्।
सुखं यस्मात्तत् प्रियं स्यात् दुःखं यस्मात्तदप्रियम्॥ ७॥
किमत्र मुग्धभावेन नित्यं चिन्तयसि प्रिये।

இவ்வாறு கூறப்பட்ட ஹேமசூடன் பரிகசித்துக்கொண்டே அந்த அன்புக்குரியவளிடம் சொன்னான் - " பெண்கள் அறிவு மயக்க முள்ளவர்கள் என்பது உண்மையே. இதில் ஐயம் இல்லை. கால் நடைகளும் பட்சிகளும் ஊர்வனவும் கூட எது பிரியம் எது பிரியமற்ற தென்பதை அறிவார்கள். பிரியமானவற்றில் ஈடுபாடும் பிரியமற்றதில் வெறுப்பும் அங்கு காணப்படுகிறதல்லவா? இதைப்பற்றி எதற்கு அதிகமாகச் சிந்திப்பது? ஸுகம் எதனால் ஏற்படுகிறதோ அது பிரியமாகும். எதனால் துக்கம் ஏற்படுகிறதோ அது பிரியமற்றதாகும். இதில் எதற்காகச் சிறு குழந்தைபோல் தினமும் யோசிக்கிறாய்?

श्रुत्वा प्रियवचः प्राह हेमलेखा पुनः प्रियम् ॥ ८ ॥
सत्यं स्त्रियो मुग्धभावाः नास्त्यासां सद्विमर्शनम् ।
तथाऽप्यहं बोधनीया त्वया सम्यग्विमर्शिना ॥ ९ ॥
सुबोधिता त्वया चाहं चिन्तामेतां विसृज्य तु ।
त्वया भोगेषु सततं भवाम्यनुदिनं ततः ॥ १० ॥

தன் அன்பரின் வார்த்தையைக் கேட்ட ஹேமலேகை மறுபடியும் பிரியமாகப் பேசினாள் - "பெண்கள் சிறுபிள்ளைத்தனமுள்ளவர்கள், அவர்களுக்கு நல்ல பகுத்தறிவு இருப்பதில்லை என்பது உண்மையே. நன்கு பகுத்தறியும் பழக்கமுள்ள நீங்கள் தான் எனக்கு அறிவுறுத்த வேண்டும். அப்படி நன்கு அறிவுறுத்தப்பெற்ற நான் இந்தக் கவலையை விட்டுவிட்டு உங்களுடன் தினமும் உல்லாசமாக வாழ்வேன்."

राजन् सुखं च दुःखं च याभ्यां भवति ते ननु ।
प्रियाप्रिये विनिर्दिष्टे त्वया सूक्ष्मविमर्शिना ॥ ११ ॥
एकमेव सुखं दुःखं कालदेशाकृतेर्भिदा ।
जनयेदत्र तत्कस्मात्प्रतिष्ठाऽध्यवसायिनी ॥ १२ ॥

அரசே! ஸுகமும் துக்கமும் எதனால் ஏற்படுகின்றனவோ அவை பிரியமும் பிரியமற்றதும் என நுண்ணிய தத்துவ விசாரமுள்ள தங்களால் குறிப்பிடப் பெற்றது. ஒரே பொருள் காலம், தேசம் உருவமைப்பு இவற்றில் ஏற்படும் மாறுதலால் ஸுகத்தையோ துக்கத்தையோ தருகிறது. இது ஸுகத்தைத்தான் தரும். இது துக்கத்தை தான் தரும் என்று ஏன் நிச்சயமாகக் கூறமுடிவதில்லை!

यतो वह्निः कालभेदात् पृथगेव फलप्रदः।
तथा देशविभेदेनाप्याकारस्य विभेदतः॥ १३॥
शीतकाले प्रियो वह्निरूष्मे त्वप्रिय एव हि।
हिमोष्णदेशभेदेन प्रियश्चाप्रिय एव च॥ १४॥
शीतप्रकृतिजीवानां प्रियोऽन्येषां तथेतरः।
अथाप्यधिकभावेनाल्पभावेनैवमीरितः॥ १५॥

ஒரே நெருப்பு கால மாறுதலாலும் தேச மாறுதலாலும் உருவ மாறுதலாலும் தனித்தனி பயனைத் தருகிறது. குளிர்காலத்தில் அது விருப்பிற்குகந்தது. கோடையில் வெறுப்புக்குரியது. குளிர்தேசத்தில் விருப்பிற்கும் உஷ்ண தேசத்தில் வெறுப்பிற்கும் குளிர்ந்த தேகவாகுள்ளவரது விருப்பிற்கும் உஷ்ண தேகவாகுள்ளவரது வெறுப்பிற்கும் உரித்தாகிறது. அப்படியே அதிகமிருந்தாலும் அல்பமாக இருந்தாலும் மாறுபடுகிறது.

एवं शीतं धनं दाराः पुत्रा राज्यं तथेतरत्।
अथाप्येवं महाराजो दारपुत्रधनैर्वृतः॥ १६॥
शोचत्यनुदिनं कस्मान्न शोचन्तीतरे कुतः।

இப்படியே குளிரும் பொருளும் மனைவிமக்களும் அரசும் மற்றதும் தேசகால உருவமைப்பு மாறுபாட்டிற்கேற்ப பலன் தருகின்றன. பேரரசன், மனைவி மக்களுடன் கூடியவன், செல்வம் நிரம்பியவன் அவன் ஏன் தினமும் வருத்தப்படவேண்டும்? இவ்வகை வசதியில்லாதவர்கள் ஏன் வருத்தப் படுவதில்லை?

योऽयं भोगः सुखार्थोऽस्ति सोऽप्यनन्तो भवेन्ननु॥ १७॥
न केनचित् तदखिलं प्राप्तं यस्मात्सुखं भवेत्।
यत्किञ्चिल्लाभतो यत्स्यात्सुखं तत्रापि संशृणु॥ १८॥
न तत्सुखं भवेन्नाथ यतो दुःखविमिश्रितम्।

நாத! ஸுகத்திற்காக ஏற்படும் போகப் பொருள்கள் எண்ணற்றவை. அவை அனைத்தையும் ஒருவனாலும் அடையமுடியாது. அப்படி அடைந்தாலன்றோ ஸுகம் கிட்டும்? ஏதேனும் சிலவற்றைப் பெற்றாலும் போதுமான ஸுகம் கிட்டுமென்றால் ஒன்றுசொல்வேன் "துக்கத்துடன் கலந்து கிடைப்பது ஸுகமாக ஆகாது."

दुःखं तु द्विविधं प्रोक्तं बाह्यमान्तरमित्यपि ।। १९ ।।
बाह्यं शरीरसंभूतं धातुदोषादिसंभवम् ।
आन्तरं मानसं प्रोक्तं तच्च वाञ्छासमुद्भवम् ।। २० ।।
महत्तरं मानसं स्याद्येन ग्रस्तमिदं जगत् ।
वाञ्छैव दुःखविटपिबीजं सुदृढशक्तिकम् ।। २१ ।।
यया किंकरतां प्राप्ताः कुर्वन्त्येव दिवानिशम् ।
इन्द्रादयोऽपि विबुधाः स्वर्निवासाः सदोदिताः ।। २२ ।।

துக்கம் என்பது இரு வகைப்படும். வெளிப்படையானது, உள்ளத்திலுள்ளது என. உடலில் ஏற்படுவதும் (ரஸம் ரக்தம் தசை முதலிய) தாதுக்களையும், வாதம், பித்தம், கபம் எனும் தோஷத்தையும் கொண்டு ஏற்படுவதும் வெளிப்படையானது. மனத்தால் ஆசையால் ஏற்படுவது உள்ளத்திலுள்ளதாகும். உள்ளத்தின் துக்கமே மிகப் பெரும் துக்கம். அது இந்த உலகத்தையே விழுங்கி விட்டது. ஆசையே துக்கம் எனும் மரத்தின் விதை. மிகத்திடமான சக்தி வாய்ந்தது. ஸ்வர்க்கத்தில் வசிப்பவராயினும் எப்போதும் விழித்திருப்பவராயினும் இந்திரன் முதலான தேவர்கள் ஆசைக்கு அடிமையாகி இராப்பகலாக உழைக்கிறார்கள்.

सुखं वाञ्छावशेषेऽपि यदस्ति नृपसंभव ।
तद्दुःखमेव जानीहि यत्कृमिष्वपि संभवेत् ।। २३ ।।
वरं तिर्यक्कीटकृमिप्रभृतीनां सुखं तु यत् ।
स्वल्पवाञ्छासंमिलितं नृणां किं स्यात्सुखं वद ।। २४ ।।

முழுவதும் ஆசை நிறைவேறாமல் நிற்கும்போது கிட்டிய சுகமும் துக்கமே. அப்படி துக்கம் கலந்த சுகம் புழுக்களிடம் கூட காணப்படும். கால்நடைகளுக்கும் புழுக்களுக்கும் பூச்சிகளுக்கும் மற்றதற்கும் கிட்டும் சுகம் சிறிதளவு எதிர்பார்வையின் பயனாகக் கிட்டியது. (எதிர்பார்வையும் குறைவு. கிட்டியதும் குறைவு. அதனால் பாதகமில்லை.) மனிதனுக்கு (எதிர்பார்வை அதிகம், கிட்டியது குறைவு என்றால்) அது எப்படி சுகமாகும்?

वाञ्छाशतसमाविष्टो यदि किञ्चिदुपेत्य तु ।
सुखी भवेदिह तदा को हि न स्यात् सुखी वद ।। २५ ।।
अखिलांगे वह्निदग्धे सूक्ष्मपाटीरबिन्दुना ।
यदि शीतलदेहः स्यात् तदा सोऽपि सुखी भवेत् ।। २६ ।।

நூற்றுக்கணக்கான எதிர்பார்வைகள் நிரம்பியவன் ஏதோ சிலவற்றை அடைந்ததால் ஸுகமடைந்தால் எல்லோருமே ஸுகியாக ஆகிவிடலாம் அல்லவா? உடல் முழுவதும் நெருப்பால் சுடப்பட்டு எரியும் போது சிறு சந்தனப்பொட்டு சரீரத்தில் பட்டவுடன் எரிவு நீங்கி குளிர்ச்சி ஏற்பட்டால் முன் குறிப்பிட்டபடி சுகியாக ஆகலாம்.

प्रियायाः संपरिष्वंगात् सुखं प्राप्नोति वै नरः।
तत्रैवांगस्य विषमबन्धात् दुःखं भवेन्ननु ॥ २७ ॥
रत्यावेशात् परिश्रान्तिः सर्वेषां जायते किल।
अनन्तरं भारवाहपशोरिव परिश्रमः ॥ २८ ॥
कथं पश्यति तत्सौख्यं नाथैतन्मे समुच्यताम्।

ஆசை நாயகியை இறுக அணைத்துப்படுப்பதிலே சுகம் பெறும் மனிதன் உடலை இயற்கைக்கு மாறுதலாக இறுகக் கட்டுவதால் துக்கம் ஏற்படக்கூடுமே? உடலுறவு முடிந்ததும் எல்லோருக்கும் களைப்பு ஏற்படுகிறதல்லவா? அதன் பிறகு பொதி சுமந்த கால்நடைப்பிராணிபோல் திணறுதலும் உண்டு. இப்படி துக்கம் கலந்த இந்த உணர்ச்சியை சுகம் என எப்படி உணர்வது? நாத ! தாங்கள் விளக்கவேண்டும்?

यावत्सुखं प्रियासंगे नाडीसंघट्टसंभवम् ॥ २९ ॥
तवास्ति तावन्न किमु शुनामस्तीह तद्वद।
यत्ततो ह्यतिरिक्तं ते दृष्टसौन्दर्यसम्भवम् ॥ ३० ॥
तत्केवलाभिमानोत्थं स्वाप्नस्त्रीसंगमे यथा।

காதலியின் இணைப்பில் நரம்புகளின் உரைதலால் ஏற்படும் சுகம் மனிதனுக்கு எவ்வளவு கிடைக்குமோ அந்த அளவு தானே நாய்க்கும் கிடைக்கும்? மனிதனுக்கு உடலழகைக் காண்பதால் ஏற்படும் சுகம் அதிகம் என்றால் அது சுகமில்லாததை சுகமென நினைப்பதால் – அபிமானத்தால் ஏற்படுவதுதான். அது கனவில் பெண்ணுடன் உறவு கொள்வதால் ஏற்படும் சுகத்திற்கு ஈடானது.

*ஹேமலேகை ரதி கேளிக்கைகளில் தனக்கு இணையாக ஈடுபடவில்லை என்று அரசகுமாரனுக்குக் குறை. சுகத்தில் ஈடுபாடில்லாதவர் இருக்கமுடியுமா? ஹேமசூடனுக்கு ஹேமரேகையை அடைவதால் சுகம் என்றால் ஹேமலேகைக்கு ஹேமசூடனை அடைவதால் சுகம் இருக்கவேண்டுமே! என்ற பல எண்ணங்கள் மனத்தைக் குழப்ப அரசகுமாரன்*

*ஹேமலேகையை அணுகுகிறான். ஹேமரேகை அறிவாளி. அதனால் அரசகுமாரனுக்கு சுகத்திலிருந்து மோகத்தை நீக்க சுகத்தின் தன்மையை விளக்குகிறாள்.*

*சுகம் என்பது என்ன? அதனை எதனால் பெறலாம்? சுகத்திற்காக நாம் நாடும் பொருளில் தான் அது இருக்கிறதா? துக்கக் கலப்பின்றி சுகம் கிட்டுமா? துக்கம் கலந்தே சுகம் கிட்டுமாயின் அது சுகமாகுமா? அப்போது சுகமும், துக்கமும் கலந்தே எல்லோருக்கும் கிட்டுவதால் எல்லோருமே சுகமுள்ளவர்களாக இருக்க முடியுமே? சுகத்தில் மனிதசுகம், கால்நடைசுகம் என்ற வேற்றுமை உண்டா? பேரின்பம் என நினைத்து மனிதன் மிகவும் எதிர்பார்க்கின்ற உடலுறவால் ஏற்படும் சுகம் நாய்கூடப் பெறுவதுதானே? இதில் என்ன தனிச் சிறப்பு? என்றவாறு பலகோணங்களில் சிந்திக்கத் தூண்டுகிறாள்.*

*சுகம் என்பது சுகத்திற்காக நாம் நாடும் பொருளில் இல்லை. அப்படியிருக்குமேயாயின் அந்தப் பொருள் எப்போதும் சுகத்தையே தந்துகொண்டிருக்கவேண்டும். குளிர்காலத்தில் நெருப்பு சுகம் தருகிறது. அதுவும் அளவுடன் இருந்தால்; நம் தேகத்தைச் சுடாமல் இருக்கப் பாதுகாப்பு கிட்டினால். அதனால் சுகம் தரும் நெருப்பு சுகத்தைத் தரவில்லை. காலம் தேசம் அதன் அளவு என்ற பல சூழ்நிலைகளும் சேரவேண்டி நேர்கிறது. எல்லாவற்றையும் விட நெருப்பின் அருகே குளிர்காயும் மனிதனின் மனப்போக்கும் அது சுகமானதற்கு முக்கியக் காரணம். அதனால் சுகம் தருவது பொருள் அல்ல. மனிதனின் விருப்பு வெறுப்புகளே சுகதுக்க உணர்வுகளுக்குக் காரணம். விருப்பு வெறுப்புகளைக் கட்டுப் படுத்தியவன் எதிலும் சுகம் பெறலாம். அதனால் சுகம் மனத்திற்கு அதீனமே தவிர சுகம் தரும் பொருளின் வசமானதல்ல.*

*சுகம் தரக்கூடியதென நாடப்பெறும் பொருள் சுகம் தருவது மெய்யானால் அது எந்நிலையிலும் சுகம் தரவேண்டும். சுகம் அனுபவிக்கத்தகாத சூழ்நிலையிலும் சுகம் தரவேண்டும். அப்படி அனுபவத்தில் காணமுடிவதில்லை. விரும்புவது சுகம், வெறுப்பது துக்கம் எனில் விரும்புவது ஒன்றல்லவே? பலவற்றை விரும்புபவன் எல்லாவற்றையும் பெற்றபிறகுதான் சுகமா? அப்படியாயினும் யாராலும் விரும்புவதனைத்தையும் பெறமுடியாதே? விரும்பாததைத் தவிர்க்கவும் முடியாதே! அப்படியாயின் சுகம் என்பது மனப்பால் குடிப்பதாகும். அனுபவத்தில் வரக்கூடியதல்ல.*

*பேரின்பத்திற்குச் சமம் என்றோ பேரின்பமேயென்றோ கொள்ளப்படும் சிற்றின்பத்தை அனுபவிப்பதற்கு முன்னும் பின்னும் அனுபவிக்கும் கணத்தி லும் துக்கக் கலப்பில்லையா? அதை ஏன் பொருட்படுத்துவதில்லை? சிற்றின்பத்திற்கு சாதனம் எனக் கொள்ளும் ஆண் அல்லது பெண்ணிடம் உண்மையான சுகத்தைக் கண்டு ஈடுபடுகிறோமா? அல்லது அறியாமை யாலும், வெறியாலும் அதில் சுகத்தில் நுகர்வதாக எண்ணுகிறோமா? இதெல்லாம் தீர விசாரியாமல் சுகம் என ஒன்றை நாடுவது அறிவீனம் அல்லவா? இந்தக் கருத்துக்களைப் பல கோணங்களில் சித்தரிக்கிறாள் ஹேமலேகை.*

पुरा कश्चिद्राजसुतो मन्मथाधिकसुन्दरः ।। ३१ ।।
कांचित्सुरूपिणीं प्राप्तः स्त्रियं सर्वमनोहराम् ।
अत्यन्तमनुरक्तः स तस्यां राजकुमारकः ।। ३२ ।।
सा त्वन्यस्मिन् राजसुतभृत्ये संसक्तमानसा ।
स भृत्यो राजपुत्रं तं वंचयामास युक्तितः ।। ३३ ।।
मदिरां मोहनार्थाय तस्मै दत्वाऽतिमात्रकम् ।
ततो मदान्धाय चेटीं कांचित् प्रेष्य कुरूपिणीम् ।। ३४ ।।
बुभुजे तां तस्य पत्नीं सर्वलोकैकसुन्दरीम् ।

முன்பு மன்மதனை விட அழகான அரசகுமாரன் ஒருவன் மிக அழகியவளும் எல்லோருடைய மனத்தை ஈர்ப்பவளுமான பெண்ணை மனைவியாக அடைந்தான். அவளிடத்தில் அவனுக்கு அளவற்ற காதல், அவளோ அரசகுமாரனின் வேலையாளிடத்தில் மனமிழந்தாள். அந்த வேலையாள் அரசகுமாரனுக்கு மயக்கம் தரும் மதுவை அதிகமாகத் தந்தான். குரூபியான ஒரு சேடிப் (வேலைக்காரி) பெண்ணை அவனிடம் அனுப்பினான். தான் அரசகுமாரனின் மனைவியை அனுபவித்தான்.

एवमेव चिरं तत्र मदान्धो नृपतेः सुतः ।। ३५ ।।
प्रत्यहं चेटिकां गच्छन् स्वात्मानं सममंसत ।
धन्योऽहमीदृशीं लोकसुन्दरीं प्राणप्रेयसीम् ।। ३६ ।।
उपगच्छाम्यहं नित्यं न मेऽस्ति सदृशः क्वचित् ।

இவ்வாறு வெகுநாட்கள் போதையால் மதியிழந்த அரசகுமாரன் சேடியுடன் வாழ்பவனாக, "நான் மிகவும் பாக்கியசாலி; இத்தகைய உலக சுந்தரியான பிராண நாயகியை அடைந்திருக்கிறேன். எனக்கு ஈடு எங்கும் இல்லை" எனத்

தன்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தான்.

एवं वृत्ते चिरे काले कदाचिद् दैवयोगतः ॥ ३७ ॥
भृत्यो निधाय पानं स कार्ये चात्यन्तिके ययौ।
अथ राजकुमारस्तत्पानं नात्यन्तिकं पपौ ॥ ३८ ॥
निमित्ततो ययौ शीघ्रं रत्युत्सुकितमानसः।
शयनीयं मनःकान्तं सर्वभोगाधिसंयुतम् ॥ ३९ ॥
शचीगृहं देवपतिरिव नन्दनसंस्थितम्।
पराध्यर्पर्यंकगतां तां चेटीमुपसंगतः ॥ ४० ॥
कामवेगेन विवशो बुभुजेऽत्यन्तहर्षितः।

இவ்வாறு வெகுநாட்கள் கழிந்தபின் ஒரு நாள் விதிவசத்தால் வேலையாள் மதுவை வைத்துவிட்டு, வேறு அவசர வேலை காரணமாக வெளியே சென்றான். அரசகுமாரன் அந்த மதுவை முழுவதையும் குடிக்காமல், விதி வசத்தால் ரதிகேளிக்கையில் மனம் சென்றவனாக மிக அழகானதும் எல்லாப் போகப்பொருளும் நிரம்பியதுமான பள்ளியறையை அடைந்தான், தேவேந்திரன் நந்தன வனத்திலுள்ள இந்திராணியின் வீட்டை அடைந்ததுபோல். மிகமிக உயர்ந்த பள்ளியறையில் உள்ள அந்தச் சேடிப்பெண்ணுடன் காம வேகத்தால் மிக உற்சாகம் கொண்டவனாக ரமித்திருந்தான்.

उपलभ्याथ रत्यन्ते चेटीं तां विकृताकृतिम् ॥ ४१ ॥
शंकितोऽमर्षितश्चापि किमेतदिति चिन्तयन्।
क्व सा मम प्रियतमेत्येवं तामन्वपृच्छत ॥ ४२ ॥
पृष्टैवं तेन सा चेटी विमदं तं निशाम्य तु।
भीता न किञ्चित्तं प्राह वेपमाना तदा ततः ॥ ४३ ॥

ரதிக்கேளிக்கையின் இறுதியில் அவன் விகாரமான உருவமுள்ள அந்தச் சேடியை உற்று நோக்கினான். ஐயமுற்றான். இதென்ன எனச் சிந்தித்தான். கோபப்பட்டான். என் காதலி எங்கே என அவளைக் கேட்டான். போதை நீங்கிய அவனைக் கண்டு நடுங்கி அவள் பயத்தால் பதில் அளிக்கவில்லை.

आलक्ष्य राजपुत्रोऽपि वैषम्यं चात्मवंचनम्।
वामेन जग्राह कचे चेटीं क्रोधारुणेक्षणः ॥ ४४ ॥

कृपाणमाददे दक्षहस्तेन नृपसंभवः।
तर्जयंस्तां प्रत्युवाच वद वृत्तं यथातथम्॥ ४५॥
नो चेन्न स्यात् जीवितं ते क्षणमात्रमपि द्रुतम्।
सैवं निशम्य तद्वाक्यं भीता प्राणपरीप्सया॥ ४६॥
जगौ यथावत्तत्सर्वं चिरादवृत्तं समास्थितम्।
प्रादर्शयच्चापि तस्मै तां भृत्येन सुसंगताम्॥ ४७॥

அரசகுமாரன் தனது நிலைமை மாறியுள்ளதையும் தனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் உணர்ந்து சேடியின் கேசங்களை இடது கையால் பிடித்துக் கோபத்தால் கண்கள் சிவந்தவனாக வலது கையில் கத்தியைத் தூக்கினான். அவளைப் பயமுறுத்திக்கொண்டே கூறினான். "நடந்ததை நடந்தபடி சொல். இல்லாவிட்டால் உன் உயிர் ஒரு நொடிகூட உடலில் தங்காது". இதனைக் கேட்ட அவள், உயிரை மீட்கும் ஆசையால் நடந்ததனைத்தையும் கூறி வேலையாளுடன் இணைந்துள்ள அவனது மனைவியையும் காண்பித்தாள்.

क्वचिद्भूमौ कटे भृत्यं कृष्णं पिंगललोचनम्।
प्रांशुं मलिनसर्वांगं रूक्षवक्त्रं जुगुप्सितम्॥ ४८॥
समाश्लिष्य रतिश्रान्तां सर्वांगैः प्रेमभावतः।
मृदुबाहुलतावृत्तग्रीवस्य वदने स्वकम्॥ ४६॥
निवेश्य वक्त्रकमलं पद्भ्यामाश्लिष्य गाढतः।
तस्योरुयुग्मं तद्वस्तसंसक्तगुरुसुस्तनीम्॥ ५०॥
वासन्तिकामिव लतां वृतां कुसुमकोरकैः।
रोहिणीं राहुणोपेतां इवापश्यन्नृपात्मजः॥ ५१॥

ஓரிடத்தில் தரையில் பாயின்மேல் அந்த வேலையாள் கரிய உருவம், சிவந்த கண்கள், அளவிற்கு மீறிய பருமனும் உயரமும், உடல் முழுவதும் அழுக்கு, வரண்ட முகம், அருவருப்பூட்டும் உடலமைப்பு, இவன் தன் மனைவியை முழுவதும் அணைத்துப் படுத்திருக்கிறான். அவள் கேளிக்கையில் களைத்தவளாக முகத்தோடு முகமும், உடலோடு உடலும் ஒட்டிப் படுத்திருக்கிறாள். பூத்த மல்லிக்கொடி போன்ற அவள், ரோகிணி (சந்திரனின் நாயகி) ராகுவுடன் இணைந்திருப்பதுபோல் இருக்கிறாள். அப்படி அவளை அரசகுமாரன் பார்த்தான்.

एवंविधां समालोक्य निद्रयाऽपगतस्मृतिम्।
मोमुह्यमानश्चात्यन्तं क्षणं पश्चात् धृतिं भजन्॥ ५२॥

यत्प्राह राजतनयस्तन्मत्तः श्रूयतां ननु।
धिङ् मामनार्यमत्यन्तं मूढं मदविमोहितम्॥ ५३॥

இப்படி தூக்கத்தால் நினைவிழந்த அவளைப் பார்த்து முதலில் கலக்கமுற்றாலும் ஒரு நொடி நிதானித்துத் தைரியமடைந்து தனக்குள் கூறிக்கொண்டான். "சே! நான் நல்லவழி செல்லாதவன், மதி கெட்டவன், போதையால் கலங்கியவன்."

धिग्ये स्त्रीष्वभिसंप्रीताः धिक् तांश्च पुरुषाधमान्।
न कामिन्यः कस्यचित्स्युर्वृक्षस्येव च शारिकाः॥ ५४॥
किमहं मां प्रवक्ष्यामि मुग्धं महिषपोतवत्।
जानन्तमेनां प्राणेभ्यः प्रेष्ठां सुचिरकालतः॥ ५५॥

பெண்களிடம் அதிக ஈடுபாடு கொண்டவர்கள் மனிதர்களா? காதலி ஒருவனுக்கே உரிமைப் பொருளல்ல. மரத்திற்குக் கிளிகள் போல் தான் இது. என்னைப்பற்றி என்ன சொல்ல? எருமைக்கடா போல் பேதையாக இந்தப் பெண்ணை பிராணனைவிட மேம்பட்டவளாக வெகுநாட்களாக மதித்துவந்திருக்கிறேனே!

न स्त्रियः कस्यचिद्वा स्युर्वेश्या इव विटस्य हि।
यः स्त्रीषु विश्रब्धमनाः स एव वनगर्दभः॥ ५६॥
या स्थितिः शारदाभ्रस्य क्षणिका ह्यनवस्थिता।
ततोऽपि पेलवा स्त्रीणां स्थितिरत्यन्तचञ्चला॥ ५७॥

காமுகனுக்கு வேசிபோல் பெண் ஒருவனுடையவளல்ல. பெண்களிடம் நம்பிக்கையுள்ளவன் காட்டுக்கழுதை. (நாட்டிலுள்ள கழுதை ஜனப்பழக்கத்தால் பிறரது கருத்தை அறியும் திறன் பெறலாம்.) சரத் காலத்து (மழை முடிந்த பின்னுள்ள பருவ) மேகம் போல் நொடிப் பொழுது தோன்றி மறையக்கூடியதும் நிலைத்ததல்லாததுமான பெண்களின் மென்மையான மனநிலை மிகவும் சபலத்திற்குள்ளாகக் கூடியது.

नाहमद्यावधि ह्येवं स्त्रीस्वभावमहोऽविदम्।
यन्मां सर्वात्मना सक्तं त्यक्त्वा भृत्यमनुव्रता॥ ५८॥
अन्यासक्ता गूढभावा मयि छद्मानुरागिणी।
प्रदर्शयन्ती भक्तिं स्वां नटीव विटमण्डले॥ ५९॥

नाविदं लेशतोऽप्येनां मदिरामत्तमानसः।
छायेव मां संगतेति मत्वा विश्रब्धमानसः॥ ६०॥

நான் இன்றுவரை பெண்களின் சுபாவம் இப்படி என அறியவில்லை. இது விந்தையே. தன்னிடத்தில் முழுமையாக ஈடுபட்டிருக்கின்ற என்னை ஒதுக்கிவிட்டு வேலைக்காரனைப் பின் தொடர்ந்திருக்கிறாள். தன் எண்ணங்களை மறைத்து என்னிடத்தில் அன்புள்ளவள்போல் வேஷமிட்டவளாக என்னிடம் பக்தியைக் காட்டி, காமுகனிடம் வேசி போல் நடித்து மற்றொருவனிடம் தன் மனத்தைச் செலுத்தியுள்ளாள். கள் குடியால் மெய்மறந்த நான் நிழல்போல் என்னைத் தொடர்பவள் என இவளை நம்பினேன்.

अप्रेक्षणीयां चेटीं तां वंचितश्चिरसंगतः।
नूनं मत्तो मूढतमः को भवेज्जगतीतले॥ ६१॥
य एवं विश्रंभपूर्वमनया चिरवंचितः।

ஏமாற்றப்பட்ட நான் பார்க்கச் சகிக்கமுடியாத அந்த சேடியுடன் வெகுநாட்களாகக் கூடி இருந்தேன். என்னைக்காட்டிலும் உணர்விழந்தவன் உலகில் எவன் இருப்பான்? இவளை நம்பி வெகுநாட்கள் ஏமாற்றப்பட்டுவிட்டேனே!

अहोऽयं भृत्यहतकः सर्वांगविकृताकृतिः॥ ६२॥
किमस्मिन्ननया दृष्टं सौन्दर्यं सर्वतोऽधिकम्।
यतो मां निजसौन्दर्याहृतालोकावलोकनम्। ६३॥
अनुरक्तं सर्वथैव त्यक्त्वैनमुपसंगता।

இந்தப்பாவி வேலைக்காரன் உடல் முழுவதும் விகாரமுடையவன். அந்தோ ! இவனிடம் இவள் என்னைவிடச் சிறந்த எந்த அழகைக் கண்டாள்? எல்லோருடைய பார்வையையும் இழுக்கத்தக்க அழகுள்ளவனும் பிரியமுள்ளவனுமான என்னை முழுவதும் ஒதுக்கி விட்டு அவனை அடைந்துள்ளாளே! இது எதனால்?

एवं प्रलप्य बहुधा निर्विण्णोऽतितरां तदा॥ ६४॥
राजपुत्रो वनं प्रागात् सर्वसङ्गविवर्जितः।

இப்படிப் பலவிதமாகப் புலம்பிக்கொண்டே மிகவும் வெறுப்புற்றவனாக அரசகுமாரன் எல்லாப்பற்றுகளையும் விட்டவனாகக் காட்டை அடைந்தான்.

तस्माद्राजकुमारैतत्सौन्दर्यं मनसोत्थितम् ॥ ६५ ॥
यथा त्वं मयि चात्यन्तसौभगेक्षणपूर्वकम् ।
रतिं विन्दस्यतितरां तथा वा तद्विशेषतः ॥ ६६ ॥
विन्दन्ति रतिमत्यन्तं योषित्सु विकृतास्वपि ।

அரசகுமாரரே! அதனால் அழகு என்பது மனத்தால் எழுப்பப் பட்டது. (உண்மையல்ல.) நீர் எப்படி என்னிடம் மிகுந்த அழகைக் கண்டு அதன் விளைவாக ஈடுபடுகிறீரோ, அப்படியே அல்லது அதைவிட அதிகமாக விகாரமான பெண்களிடமும் பலர் மிகவும் ஈடுபடுகிறார்கள்.

अत्र ते प्रत्ययं वक्ष्ये शृणु प्रिय समाहितः ॥ ६७ ॥
विलोक्यते या हि योषित् सा बहिः सुव्यवस्थिता ।
या च तत्प्रतिबिंबात्मरूपिणी चित्तसंश्रया ॥ ६८ ॥
संकल्परूपिणी तस्याः सौष्ठवं मनसोल्लिखत् ।
पौनःपुन्येन तदनु वाञ्छामुपसमागतः ॥ ६९ ॥
क्षुब्धेन्द्रियो नरस्तस्यां रतिमाप्नोति सर्वतः ।

இதனை மறுபடி விளக்கிக் கூறுகிறேன். நீர் உற்றுக் கவனத்துடன் கேட்பீராக! எந்தப் பெண் பார்க்கப்படுகிறாளோ அவள் வெளியே இருக்கிறாள். அவளது பிரதிபிம்பம் பார்ப்பவனின் மனத்தினுள் படிந்துள்ளது. அந்த பிரதிபிம்பமாகப் பதிந்த பெண் எண்ண வடிவில் தோன்றுகிறாள். அவளின் அழகை மனம் கற்பனையால் அடிக்கடி முன் நிறுத்துகிறது. அதனால் மனிதனுக்கு அவளை அடைய ஆசை எழுகிறது. அதனால் ஏற்பட்ட உணர்ச்சிகள் வசப்பட்டவனாக மனிதன் அவளிடத்தில் முழுவதும் ஈடுபடுகிறான்.

अक्षुब्धे त्विन्द्रिये न स्यात् सुन्दर्यामपि वै रतिः ॥ ७० ॥
तत्र मूलं समुल्लेखः सौष्ठवस्य पुनः पुनः ।
अतः क्षोभो नैव दृष्टो बालानां योगिनामपि ॥ ७१ ॥

மனமும் பொறிகளும் உணர்ச்சிவசப்படாவிடில் அழகியிடத்திலும் கூட ஈடுபாடு ஏற்படாது. அந்த போக உணர்ச்சிக்குக் காரணம் அழகைப்பற்றி

அடிக்கடி எழும் கற்பனையே. அதனால்தான் சிறுவர்களிடத்திலும் யோகிகளிடத்திலும் அந்த போக உணர்ச்சி காணப்படுவதில்லை.

ततश्च यो यो यस्यां तु रतिं विन्दति मानवः।
सुन्दर्यां वापि चान्यस्यां तत्र सौष्ठवमुल्लिखेत्॥ ७२॥
दृश्यन्ते योषितोऽत्यन्तबीभत्साकारविग्रहाः।
तरुणैः संगतास्ताश्च दृश्यन्तेऽपत्यहेतुतः॥ ७३॥
विरूपतोल्लेखनं वाऽप्यनुल्लेखस्तु सौष्ठवे।
यदि स्यात्तत् कथं नृणां रतिस्तासु हि संभवेत्॥ ७४॥

அழகியோ அழகில்லாதவளோ, யாரிடம் போகத்தைப் பெற விழைகிறானோ, அவளிடம் அழகைக் கற்பனையால் காணவேண்டும். மிகவும் பயங்கரமான வடிவழகு கொண்ட பெண்கள் கூட சந்ததி பெறுவதற்காக மிக அழகான ஆண்களால் கூடப்பெறுகிறார்களே! அவர்களிடத்தில் குரூபியாயிருப்பதாக நினைப்போ, அழகைப்பற்றிய கற்பனையின்மையோ இருந்தால் அவர்களிடத்தில் போக உணர்ச்சி எப்படி எழும்?

किं वक्तव्यमहो नृणां कामिनां क्षिप्तचेतसाम्।
जघन्यांगेऽपि सौन्दर्यं भासते सर्वतोऽधिकम्॥ ७५॥
मलमूत्रपरिक्लिन्नं यदंगं तत्र सौभगम्।
पश्येच्चेत् कुत्र नो पश्येत् सौन्दर्यं तन्ममेरय॥ ७६॥

காமவசப்பட்டுப் புத்தி இழந்தவர்களைப் பற்றி என்ன கூறுவது? அவர்களுக்கு மிக இழிவான அங்கத்திலும் அழகு புலப்படுகிறது. மலமும் மூத்திரமும் கசிந்துள்ள அங்கத்திலேயே அவர்கள் அழகைக் கண்டார்களேயானால் வேறு எங்குதான் அழகைக் காணமாட்டார்? நீர் சொல்லும்.

तस्मात्सौन्दर्यमेतद्वै राजपुत्र निशामय।
अभिमानमृते नैष सुखहेतुर्भवेत् क्वचित्॥ ७७॥
क्षौद्रमाधुर्यवत् देहे सौन्दर्यं सहजं यदि।
तद्बालानां कुमाराणां कुतो नो भाति तद्वद॥ ७८॥

அதனால் அழகென்பது கற்பனையால் எழுந்த எண்ணத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அதனால் அது சுகத்திற்கு எங்கும் காரணமாகாது. தேனின் இனிப்புப்போல் அழகு இயற்கையாக ஏற்பட்டதெனில், சிசுக்களுக்கும் சிறுவர்களுக்கும் அது ஏன் புலப்படவில்லை? அதைச் சொல்லும்?

देशभेदेषु दृश्यन्ते विविधाकृतयो नराः।
एकपादैकनयना लंबकर्णा हयाननाः॥ ७६॥
कर्णप्रावरणाः फालवक्त्रा निर्गतदंष्ट्रकाः।
विनसा दीर्घनासाश्च लोमच्छन्ना विलोमकाः॥ ८०॥
पिंगकेशाः श्वेतकेशाः विकेशाः स्थूलकेशकाः।
श्वित्रवर्णाः काकवर्णाः पिंगलाः लोहितांगकाः॥ ८१॥
एवं बहुविधा मर्त्याः सजातवनितासु ते।
रतिं विन्दन्ति त्वमिव राजपुत्र निशामय॥ ८२॥

வெவ்வேறு தேசங்களில் பற்பல வடிவமைப்பு கொண்ட மனிதர்கள் காணப்படுகிறார்கள். ஒருகால் உள்ளவர், ஒரு கண் உள்ளவர், தொங்கும் காதுள்ளவர், குதிரை முகமுள்ளவர், காது மடல் தொங்கி மூடிக்கொண்டிருப்பவர், நெற்றியில் வாய் உள்ளவர், பற்கள் வெளிவந்துள்ளவர், மூக்கில்லாதவர், நீண்ட மூக்குள்ளவர், உடல்முழுவதும் ரோமம் மூடியிருப்பவர், ரோமமே முளைக்காதவர், செம்பட்டை கேசமுள்ளவர், வெண்ணிறக் கேசமுள்ளவர், கேசமில்லாதவர், தடித்த கேசமுள்ளவர், வெண்குஷ்ட நிறமுள்ளவர், காக்கை நிறமுள்ளவர், கருஞ்சிகப்பு நிறமுள்ளவர், சிவந்தவர், இப்படிப் பலவகைகளில் காணப்படும் மனிதர் தன்னினத்தில் தோன்றிய பெண்களிடத்தில் உம்மைப்போல் காம உணர்வுடன் ஈடுபடுவதைக் காண்பீர்.

सुखसाधनभूतेषु मुख्यं यत्स्त्रीवपुः स्थितम्।
सर्वप्रियं यत्र सर्वे मुह्यन्ति विबुधा अपि॥ ८३॥
पुंसां वपुस्तथा स्त्रीणां प्रियमत्यन्तसुन्दरम्।
विमर्शय स्वबुद्ध्या त्वं राजपुत्र यथास्थितम्॥ ८४॥

ஸுகத்தின் ஸாதனமானவற்றில் பெண்ணின் உடல் மிகவும் முக்கியமானது. எல்லோரும் விரும்புவது, மிக புத்திமான்களும் இதில் மயங்குகிறார்கள். அதேவகையில் ஆண்களின் உடலும் எல்லாப் பெண்களுக்கும் பிரியமானது. அவர்களால் அழகானதென மதிக்கப்பெற்றது.

அரசகுமாரரே! இதனைப் பற்றி இருப்பது இருக்கிறபடி உமது நல்ல புத்தியால் தீர விசாரித்துப் பாருங்கள்.

मांसलिप्तमसृक्क्लिन्नं शिराबद्धं त्वगाततम्।
अस्थिपञ्जरकं लोमच्छन्नं पित्तकफाहितम्॥ ८५॥
मलमूत्रकुसूलं तच्छुक्रशोणितसंभवम्।
मूत्रद्वारसमुद्भूतमहो प्रियमिहेष्यते॥ ८६॥
य एवमतिबीभत्से वितन्वन्ति रतिं नराः।
विट्कृमिभ्यः कुतस्तेषां भवेदन्तरमीरय॥ ८७॥

இந்த உடல் என்பது தசைகளால் மூடப்பட்டது, ரத்தக்கசிவுள்ளது, ரத்தக்குழாய்களால் பிணைக்கப்பெற்றது, தோலால் இழுத்துப் போர்த்தப்பட்டது, எலும்பின் கூடு, ரோமங்களால், மறைந்திருப்பது, பித்தகபங்கள் நிறைந்தது. மலம் மூத்திரம் வைக்கும் குதிர். சுக்கிலமும் சோணிதமும் கூடி உண்டானது, மூத்திரத்துவாரம் வழியே தோன்றியது, இதுவா பிரியமானது? இவ்வளவு அருவருப்புக்குள்ளதானதில் மனிதர் போக உணர்வைக் கொண்டால் மலத்தில் உண்டான புழுவிற்கும் இவர்களுக்கும் ஏது வேற்றுமை? கூறும்.

राजपुत्र तनुरियं प्रिया हि नितरां तव।
विभावय विवेकेन धातूनां च पृथक् स्थितिम्॥ ८८॥
एवमन्यत्रोपयोज्ये मधुराम्लादिषड्रसे।
परिणामस्वभावं तु सूक्ष्मदृष्ट्या विभावय॥ ८९॥
भक्षितस्यापि सर्वस्य विड्भावः परिणामके।
सर्वथा नात्र सन्देहः सर्वैरेव विभावितः॥ ९०॥
वदैवं संस्थिते लोके किं प्रियं स्यात्किमप्रियम्।

அரசகுமாரரே, இந்த உடல் உமக்கு மிகவும் பிரியமானதல்லவா? இதனைக் கூர்ந்து பாரும்! ஒவ்வொரு தாதுவின் தனித்த நிலையையும் காண்பீர். இப்படியே உணவாக உபயோகப்படுவதும் இனிப்பு புளிப்பு முதலிய அறுசுவை உள்ளதுமான உணவின் மாறுபாடு ஏற்படுவதைக் கூர்ந்துபாரும்! உண்டதனைத்தும் பரிணாமம் அடையும்போது மலமாவதை எல்லோரும் கண்டிருப்பார்கள். அதில் ஐயமில்லை. இப்படி அழியும் உலகில் எது பிரியம்? எது பிரிய மற்றது?"

इत्युक्तो हेमचूडोऽथ वैरस्यं विषये विदन्॥ ६१॥
श्रुत्वाऽपूर्वं वाक्यजालं विस्मितोऽभवदञ्जसा।
विचार्य भूयस्तत्सर्वं यदुक्तं हेमलेखया॥ ६२॥
भोगेषु जातनिर्वेदः परं वैराग्यमाप्तवान्।

இப்படிக் கூறப்பட்ட ஹேமசூடன் போகப் பொருள்களில் ஆர்வமிழந்தான். இதற்குமுன் கேட்டறியாத வாக்கியக்கோர்வைகளைக் கேட்டு வியப்படைந்தான், ஹேமலேகையால் கூறப்பட்டதனைத்தையும் நன்கு யோசித்து போகப்பொருள்களில் நாட்டம் குன்றியவனாக உயர்ந்த வைராக்கியத்தைப் பெற்றான்.

अथ क्रमेण पृष्ट्वा तां प्रियां ज्ञात्वा च तत्पदम्॥ ६३॥
केवलां चितिमात्मस्थां त्रिपुरामात्मरूपिणीम्।
बुध्वाऽभवद्विमुक्तात्मा स्वात्मभूताखिलेक्षणः॥ ६४॥
जीवन्मुक्तः समभवत् ततस्तस्यानुजोऽपि हि।
मणिचूडोऽविदत् भ्रातुर्मुक्ताचूडोऽपि पुत्रतः॥ ६५॥
मुक्ताचूडप्रिया चापि स्नुषया ज्ञानमासदत्।

அதன்பின் முறைப்படி அந்த மனைவியிடமிருந்து ஆத்மநிலையை உணர்ந்து, அந்தராத்மாவாக உள்ள தனித்த பேரறிவு வடிவாகவும் வெளித் தொடர்பற்ற நிலையில் தனித்து உணரக்கூடிய ஆத்ம வடிவினளுமான திரிபுராதேவியை உணர்ந்து உலகனைத்தையும் தன் ஆத்மாவாகவே உணர்ந்தவனாக, பந்தம் நீங்கினவனாக ஆனான். ஜீவன்முக்தனாக விளங்கினான். அவனது தம்பியான மணிசூடனும் அவனிடமிருந்து ஆத்ம தத்துவத்தை அறிந்தான். தந்தையான முக்தாசூடரும் தனயனிடமிருந்து ஆத்ம ஞானத்தை பெற்றார். முக்தாசூடரின் மனைவியும் தன் மருமகளிடமிருந்து அதனை அறிந்தாள்.

मन्त्रिणश्चापि पौराश्च बभूवुर्ज्ञानशालिनः॥ ६६॥
न तत्र नगरे कश्चिदविद्वान् समजायत।
आसीद् ब्रह्मपुरप्रख्यं शान्तसंसृतिवासनम्॥ ६७॥
विशालनगरं तच्च जगत्यत्युत्तमं बभौ।

மந்திரிகளும் நகரவாசிகளும் ஆத்மஞானம் பெற்றனர். அந்த நகரில் இதனை அறியாதவர் ஒருவருமில்லை. பிரும்மாவின் நகரம் போல் ஸம்ஸாரவாசனை அடங்கியதாக அந்தப் பரந்த நகரம் உலகில் மிகச் சிறந்ததாக விளங்கிற்று.

यत्र कीराः शारिकाश्च पञ्जरस्थाः पठन्ति वै ।। ९८ ।।
चितिरूपं स्वमात्मानं भजध्वं चेत्यवर्जितम् ।
नास्ति चेत्यं चितेरन्यत् दर्पणप्रतिबिंबवत् ।। ९९ ।।
चितिश्चेत्यं चितिरहं चितिः सर्वं चराचरम् ।
यतः सर्वं चितिमनु भाति सा तु स्वतन्त्रतः ।। १०० ।।
अतश्चितिं जनाः सर्वे भासिनीं सर्वसंश्रयाम् ।
भजध्वं भ्रान्तिमुत्सृज्य चितिमात्रसुदृष्टयः ।। १०१ ।।

அங்கு கூட்டிலுள்ள ஆண் கிளிகளும் பெண் கிளிகளும் இப்படிப் பேசுகின்றன. "மக்களே, சித் எனப்படும் பேரறிவு வடிவமான 'தான்' ஆக விளங்குகிற ஆத்மாவையே நாடுங்கள். அந்தப் பேரறிவைக் காணும்போது சிற்றறிவால் துலங்குகின்ற இந்த உலகம் மறைந்துவிடும். சிற்றறிவால் துலங்குகின்றதனைத்தும் அந்தப் பேரறிவைக் காட்டிலும் வேறு பட்டதல்ல. கண்ணாடியில் துலங்கும் பிரதிபிம்பம் போன்றது உலகம். (பிரதி பிம்பம் கண்ணாடியைக் காட்டிலும் வேறுபட்டதல்ல.)சித்தே இவ்வுலகம். சித்தே நான். அசைவதும் அசையாததுமானதனைத்தும் சித்தே. எல்லாவற்றின் ஊடே பரவி நிற்கும் பேரறிவின் பேரொளியாலேயே அவை தோற்றத்தைப் பெறுகின்றன. தனித்து ஸ்வதந்திரமாக யாதொன்றுமில்லை. எல்லாவற்றையும் துலங்க வைப்பதும் எல்லாவற்றிற்கும் ஆதாரமானதுமான அந்தப் பேரறிவை, அதனை மட்டும் காணும் நோக்கமுள்ளவர்களாகப் பிரமை நீங்கியவர்களாக நாடுங்கள்"

***வெளிப்பொருள் நாட்டம் பிரமையால் ஏற்பட்டது. வெளிப் பொருள் நாட்டத்தின் காரணமான ஸுக உணர்ச்சியும் பிரமையே. இவ்வுணர்ச்சிகள் நிலைத்தவையல்ல. வாழ்வின் இலக்காகக் கொள்ளத்தக்கவையல்ல. இந்த உணர்ச்சிகள் அனைத்தும் உள்ளே உள்ள ஆத்ம ஒளியின் பிரதிபலிப்பே. ஐம்புலன் நுகர்ச்சிகளுக்கும் ஆதாரமான உணர்வு அந்த ஆத்ம ஒளியிலிருந்தும் பெறப்படுகின்றது. அந்த ஒளியைப் புலப்படுத்த வேறு ஒளி பயன்படுவதில்லை. அதனை நாடும்போது அது தன் ஒளியாலேயே தன்னைக் காட்டித் தருகிறது. வெளிப்பற்று குறைந்தால் உள்ளறிவைப் பற்றிய சிந்தனை தோன்றும். இத்தனை வகைப்பட்ட அறிவுகளுக்கும் மூல அறிவாகப் பேரறிவாக உள்ளது துலங்கும். அந்த அறிவின் ஒளியில் அறியப்படும் பொருள், அறிபவன், அறிவு என்ற திரிபுடி மறைந்துவிடும். அந்தப் பேரறிவே எல்லாம் என்று உணரமுடியும்.***

***எல்லாமே அந்தப் பேரறிவுதான் எனில் அறிவில்லாத ஜடமாயும் அறிவுள்ள சேதனமாயும் பல்வேறு நிலைகளைப் பெற்றதாயும், பல்வேறானதாயும்***

*உள்ள இந்த உலகம் எப்படி இப்படி விரிந்தது? ஒரே சித்தின் விரிவு சித்தாகத்தானே இருக்கமுடியும்? அசித்தாயும் சித்தாயும் எப்படிக் காணப்படுகிறது? என்ற கேள்வி எழும். அதன் விடையைக் கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிரதிபிம்பத்தை உதாரணமாக்கிக் கிளிகள் விளக்குகின்றன.*

*ஆத்மா பேரொளி வடிவினன். பேரறிவு வடிவினன். ஒளியால் மற்றதைக் காணலாம். மற்றதைக் காண ஒளி உதவும். ஒளியைக் காணமுடியாது. நாம் பார்ப்பது ஒளியால் புலப்படுவதைத் தான். ஒளியால் மற்றதைக் காண்பதால் ஒளி இருப்பதை உணர முடியும். அறிவால் மற்றதை அறியமுடியும். அந்த அறிவை வேறொன்றால் அறிய முடியாது. மற்றவற்றை அறிய உதவும் அது இருப்பதை மற்றவைகளை அறிவதன்மூலம் உணரமுடியும். அதனால் அந்தப் பேரொளியை, பேரறிவை இதுதான் அது என்று சுட்டிக்காட்டிட முடியாது. (இதம்– பிரத்யய – அவிஷயம்) கூர்ந்து பார்க்கும்போது எல்லாவற்றிலும் எப்போதும் தொடர்ந்து இடைவிடாமல் எங்கும் பரவி நிற்பது அந்தப் பேரொளி – பேரறிவு என்பதனை உணரலாம். பார்க்கப்படுவதும் உணரப்படுவதுமானதனைத்தும் நிலைத்தல்ல. ஆனால் அந்தப் பொருள்கள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் அந்தப் பேரொளி அந்தப் பேரறிவு முன்னும் பின்னும் இடையிலும் காணப்படுவதால் நித்யம். (ஸர்வாஸு அவஸ்தாஸு அநுகதம்)*

*வளை சங்கிலி மோதிரம் என்ற பல நிலைகளில் வேறுபட்டதாகத் தோன்றும் பொருள்களில் வளை என்ற நிலை மற்ற இரண்டிலும் காணோம். அதனால் மற்ற இரண்டைக் காட்டிலும் வளை வேறுபட்டது. வளை நேற்றில்லை. நாளை அழிக்கப்பெறும். காணப்படுகின்ற இந்த ஒரு பொழுதில் மட்டும் அது உள்ளது. அதனால் நிலைத்ததல்ல – நித்யமல்ல. ஆனால் அந்த மூன்றிலும் தொடர்ந்து எங்கும் எப்போதும் இருப்பது ஒன்று. அது தங்கம், வளையாகத் தோன்றும்போதும் அது தங்கம். வளையாகத் தோன்றுவதற்கு முன்னும் அது தங்கம், வளையாக இருப்பது அழிந்த பின்னும் அது தங்கம். வளை சங்கிலி மோதிரம் என்ற தோற்றம் மெய்யானதல்ல. தங்கம் என்பதே மெய். தங்கம் என்று அறிந்தவுடன் வளை மோதிரம் என்ற பேத உணர்ச்சி மறைகிறது. ஆனால் வளை மோதிரம் என்று தனித்துத் தோன்றுவதும் மாறுபட்டிருப்பதும் உண்மைதானே! ஆனால் அதேசமயத்தில் தங்கம் எனக் கண்டதும் இந்த மாறுபாடு தானே மறைகிறதல்லவா?*

*மனிதன் தேவன் என்றவாறு பாகுபாடு நிறைந்த உலகில் எங்கும் எதிலும் எப்போதும் ஊடுருவி நிற்கின்ற அந்தப் பரம்பொருளை உணரும்போது பிரிவினைக்குட்படுத்துகின்ற தன்மைகள் உணரப்படாததால் அதுஒன்றே*

என்ற உணர்வு ஏற்படுகிறது. அத்தகைய ஆத்ம தத்துவம்தான் பரம்பொருள். அதன் தனிப்பட்ட சக்தி மாயை. அது ஆத்மாவை மறைத்து ஆத்மாவிற்கு வேறுபட்ட உலகனைத்தையும் காட்டுகிறது. அப்படிக்காட்ட அது போடும் திரை அவித்யை. அதனால் ஆத்மா வேறு உலகம் வேறு என்ற துவைத உணர்வு.

இந்த துவைத உணர்வால் துலங்கும் இந்த உலகம் பரம்பொருளிலிருந்து விதையிலிருந்து முளைபோல் தோன்றியதா? (பீஜாங்குர ந்யாயம் இது) இல்லை. முளை தோன்றியதும் விதை மறைந்து அழிந்துவிடுமே. இங்கு மரமான உலகமாகத் தோன்றும் போதும் விதையாகிய தத்துவமும் தோன்றுவதால் அது பொருந்தாது.

மண் குடமானது போல் பரிணாமமடைந்திருக்குமோ? (பரிணமவாதம் இது) இல்லை. பரிணாமமடையும் பொருள் மாறுபடும். இங்கு பரம்பொருள் மாறுபாட்டிற்குட்படாததல்லவா?

பழுதில் பாம்பைப்போல் காணுமளவில் உண்மையாகவும் உண்மையை உணரும்போது பழுதைத் தவிர பாம்பென்பது வேறு பட்டதல்ல என்பதுபோல் மெய்யற்றதாகவும் காணக்கூடியதோ? (இது விவர்த்த வாதம்). இல்லை. அப்படியாயின் அறிவும் அறியப்படும் பொருளுமென இரண்டும் எப்போதும் காணப்படுகிறதே! விவர்த்தத்தில் முன் நிலையிலும் பின் நிலையிலும் ஒன்றுதான் காணப்படும்.

நிர்மலமான கண்ணாடி, கோணல் மாணலற்றது. ப்ரதிபிம்பத்தை தெள்ளெனக் காட்டக்கூடியது. அதில் ப்ரதிபிம்பம் தெரிகிறது. ப்ரதிபிம்பத்திற்கும் கண்ணாடிக்கும் உள்ள தொடர்பு எத்தகையது? கண்ணாடி நிலைத்தது. அதில் தோன்றும் ப்ரதிபிம்பம் தோற்ற அளவில் உண்மை. ப்ரதிபிம்பமாகத் தோன்றும் பொருளால் கண்ணாடியின் நெருக்கத்திலோ பரப்பிலோ யாதொரு மாறுபாடுமில்லை. கண்ணாடியின் தனிச் சிறப்பால் ப்ரதிபிம்பம் தோன்றுகிறதே தவிர வேறு காரணமில்லை. அதுபோல் மாறுபாடற்ற (அவிக்ருதமான) சித்ஸ்வரூபமான ஆத்மாவிடத்தில் சித்சக்தியின் சிறப்பால் சித்சக்தியால் உணரக்கூடிய (சேத்யம்) பொருள் துலங்குகிறது.

ஆனால் இங்கு ஒரு சந்தேகம் எழக்கூடும். கண்ணாடிக்குள் ப்ரதிபிம்பம் தோன்ற அதனுடன் ஒத்த உருவமைப்புள்ள வெளிப் பொருள் (பிம்பம்) தேவை. அதுபோல் சித்திலும் ப்ரதிபிம்பமாகக் காணப்பெறும் உலகிற்கு ஒத்த வடிவமைப்புள்ள உலகம் ஒன்று வெளியில் இருக்கவேண்டும்! அப்போது சித் வேறு, பிம்பமான உலகம் வேறு என்றாகுமே? இதனைச் சிந்திப்போம்.

*கண்ணாடியில் காணும் பிரதிபிம்பத்திற்கு வெளியிலுள்ள அதனையொத்த பிம்பம் எப்படிக் காரணமாகிறது? உபாதான காரணமாகவா? நிமித்த காரணமாகவா? (உபாதானம் – அதனை எடுத்து – அதிலிருந்து மற்றொன்று ஏற்படக் காரணமாவது). குடமான காரியத்திலும் காரணமான மண் இருப்பதால் மண் உபாதான காரணமாகிறது. பிரதிபிம்பத்தில் பிம்பம் அப்படி இல்லை. பிம்பம் கண்ணாடிக்குள் நுழையவில்லை. கண்ணாடியைத் தவிர பிரதிபிம்பம் என்று ஒன்றில்லை. கண்ணாடியில் பிம்பமில்லை. பிம்பம் நிமித்த காரணமாகலாம். குடத்திற்குக் குயவன் கையிலுள்ள தடிபோல், குயவன் தன் கையிலுள்ளதடியால் சக்கிரத்தைச் சுழற்றிவிட்டு அது சுற்றும் வேகத்தில் மண்ணிலிருந்து குடத்தை அமைக்கிறான். தடிதான் வேண்டு மென்பதில்லை. எந்த நிமித்த காரணமும் அவசியத் தேவையில்லை. கையால் சுழற்றியும் குடம் செய்யலாம் அல்லவா? இங்கு சித்ஸ்வரூபமான ஆத்மாவில் உலகம் பிரதி பிம்பமாகக் காண்பதற்கு மாயைஎனும் பரம்பொருளின் ஸ்வதந்திர சக்திதான் நிமித்த காரணம். பிம்பமான வேறொன்றல்ல. மாயைக்கு இல்லாததை இருப்பதாகக் காட்டும் திறமை உண்டு.*

*இந்த பிரதிபிம்பவாதம் தான் உலகத்தோற்றத்தை விளக்க ஏற்றது. சித்தைவிட்டு வெளியே உலகம் இருந்தால் அது புலப்படாது. அத்துடன் சித்தின் தொடர்பை ஏற்படுத்த முடியாது. சித்தின் தொடர்பின்றி உலகம் தோன்றக்கூடுமானால், உலகம் சித்தின் உதவியின்றி எப்போதுமே பிரகாசிக்கக் கூடும். அல்லது உலகம் எப்போதுமே புலப்படாதிருக்கும். அதனால் சித்தினுள் பிரதிபிம்பமாக உலகம் தோன்றுகிறது என்பதே அதிகம் பொருந்தும். தனித்துப் பிரதிபிம்பமாகவும் இரண்டறக் கலந்து கண்ணாடியுமாக இருப்பது உலகம்.*

*இந்தக் கண்ணாடியைவிட சித்சக்தி உலகை அதிகத் திறமையுடன் வெளிப்படுத்துகிறது. கண்ணாடி பிரதிபிம்பத்திற்கு ஆதாரம். பிரதிபிம்பத்தை அதனால் துலக்கமுடியாது. அதற்கு வெளியொளி தேவை. வெளியொளியின்றி கண்ணாடியில் பிரதிபிம்பம் துலங்காது. இங்கோ வெளியொளித் தேவை இல்லை. எல்லா வெளியொளிகளுக்கும் ஒளியூட்டும் சித்சக்தி ஸ்வயம் பிரகாசமானது – தானே தன்னைத்தானே துலக்கிக்கொள்ளும் திறமை படைத்தது. இதனையே*

*யத: ஸர்வம் சிதிமனு பாதி ஸாது ஸ்வதந்த்ரத:!*

*எனக் கிளிகள் விளக்குகின்றன. இதனை மேலும் நிரூபணங்கள் மூலம் தெளிவுபடுத்துகிறார் ஸ்ரீதத்த குரு.*

कदाचिदेवं कीराणां श्रुत्वा वाक्यं महोदयम्।
ब्राह्मणा वामदेवाद्या नामाचख्युः पुरस्य तु।। १०२।।
यतोऽत्र विद्यां तिर्यञ्चोऽप्याहुः तस्मादिदं पुरम्।
प्रसिद्धविद्यानगरमिति नाम्ना प्रसिध्यतु।। १०३।।
तदद्यापि च तेनैव नाम्ना तन्नगरं स्थितम्।

இப்படிக் கிளிகளின் மேன்மை தரும் சொற்களைக் கேட்டு வாமதேவர் முதலிய முனிவர்கள் இந்நகரத்திற்கு வித்யா நகரம் என்ற புகழ் பெற்ற பெயரை அளித்தார்கள். இங்கு கிளிகளும் ஆத்மதத்துவத்தை விளக்குகின்றனவல்லவா? அந்தப் பெயரால் அந்நகரம் இன்னும் புகழ் பெற்றுள்ளது.

राम तस्मात्तु सत्संगो मूलं सर्वशुभोदये।। १०४।।
संगेन हेमलेखायाः सर्वे विद्याविदोऽभवन्।
तस्मात्संगः परं मूलं राम जानीहि श्रेयसः।। १०५।।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे सत्सङ्गमाहात्म्यं नाम चतुर्थोऽध्यायः।

பரசுராமரே ! அதனால் நல்லோருடன் கூடியிருப்பதுதான் எல்லா மேன்மைகளைப் பெறவும் காரணமாகிறது. ஹேமலேகையின் ஸங்கத்தால் எல்லோரும் ஆத்ம தத்துவமறிந்தவர்கள் ஆனார்கள். அதனால் மேன்மைக்கு ஸத்ஸங்கம் காரணம் என்பதை அறிவீராக.

*ஸ்ரீ திரிபுரா ரஹஸ்யம் ஞானகண்டத்தில் ஹேமசூடனின் கதையில் ஸத்ஸங்கத்தின் பலனைப் பற்றிய நான்காம் அத்தியாயம்.*

# पञ्चमोऽध्यायः

## ஐந்தாம் அத்தியாயம்

एवं सत्सङ्गमाहात्म्यं श्रुत्वाऽत्रिसुतभाषितम्।
प्रहृष्टमानसो भूयः प्रष्टुमेवोपचक्रमे॥ १॥

இவ்வாறு நல்லோருடன் கூடி வாழ்வதன் பெருமை பற்றி அத்திரி முனிவரின் குமாரராகிய ஸ்ரீதத்தகுரு கூறியதைக் கேட்டு ராமர் மனம் மகிழ்ந்தவராக மறுபடியும் கேட்கத் தொடங்கினார்.

सत्यं प्रोक्तमिदं नाथ भवता शुभकारणम्।
सत्सङ्गरूपमेतच्च प्रत्यक्षेणैव भावितम्॥ २॥
यो यथा सङ्गमाप्नोति फलं तस्य तथा भवेत्।
स्त्रियोऽपि हेमलेखायाः सङ्गात्सर्वे महाफलाः॥ ३॥
भूय इच्छाम्यहं श्रोतुं हेमचूडस्तया कथम्।
बोधितस्तन्ममाचक्ष्व विस्तरेण दयानिधे॥ ४॥

குருதேவ! நன்மைக்குக் காரணமான நல்லோரிணக்கத்தைப் பற்றித் தாங்கள் கூறியதனைத்தும் உண்மையே. அது நேரிடையாக உணரப்பட்டதே. எவர் எத்தகைய ஸங்கம் அடைகிறார்களோ அதற்கேற்ற பலன் கிடைக்கிறது. பெண்ணான ஹேமலேகையின் சேர்க்கையால் எல்லோரும் பெரும் பயனைப் பெற்றார்கள். ஹேமலேகையால் அந்த அரசகுமாரன் போதிக்கப்பெற்றது பற்றி மேலும் அறிய விரும்புகிறேன். தயாநிதியே, விரிவுடன் விளக்குவீர்களாக!

एवं रामेणानुयुक्तो दत्तात्रेय उवाच तम्।
शृणु भार्गव वक्ष्यामि कथां परमपावनीम्॥ ५॥

இப்படி ராமரால் வினயத்துடன் கேட்கப்பட்ட ஸ்ரீதத்தாத்ரேயர் அவரிடம் கூறினார். "பிருகுவம்சத்தோன்றலே! கேளும். மிகவும் புனிதமான அந்தக் கதையைக் கூறுகிறேன்.

एवं तस्या वचः श्रुत्वा विषयान् विरसान् विदन्।
तेषु सञ्जातनिर्वेदो विमना इव संबभौ॥ ६॥

चिरस्थितविषयजवासनानां वशं गतः।
त्यक्तुं वा संग्रहीतुं वा नाशकत् सहसा हि सः ॥ ७॥

இவ்வாறு அவள் கூறியதைக்கேட்டு போகப் பொருள்கள் சுவையற்றவை என உணர்ந்து அவற்றில் வெறுப்பு ஏற்பட்டு மனமிழந்தவன் ஆனான். ஆனால் வெகுநாட்களாக உள்ள விஷய வாஸனைகளின் வசப்பட்டவனாக உடன் போகப்பொருளை விடவோ ஏற்கவோ முடியாதவனானான்.

प्रियां न किञ्चित्प्रोवाच राजपुत्रोऽतिलज्जितः।
कांश्चिच्च दिवसानेवं अनयच्चिन्तयाऽऽकुलः ॥ ८॥
विषयेषु प्रसक्तेषु स्मृत्वा तत्प्रिययोदितम्।
विगर्हन्नेव स्वात्मानं बुभुजे वासनावशः ॥ ९॥
वासनावेगवशतो विषयाननुगच्छति।
दृष्ट्वैव विषयान् दोषान् प्रियाप्रोक्तान्विचिन्तयन् ॥ १०॥
शोकसंविग्नहृदयो विषीदति मुहुर्मुहुः।

அரசகுமாரன் மிகவும் வெட்கமடைந்தவனாக மனைவியிடம் ஏதும் சொல்லாதிருந்தான். கவலையால் கலங்கியவனாகச் சில நாட்களை இப்படிக் கழித்தான். போகப்பொருள்கள் நெருங்கி வரும்போது விஷய வாஸனைக்கு வசப்பட்டவனாக – அதே சமயத்தில் மனைவி கூறியதை நினைத்து தன்னையே நொந்துகொள்பவனாக அவைகளைச் சுவைத்தான். வாஸனையின் வேகத்தால் ஈர்க்கப்பட்டு போகப் பொருள்களை அடைந்ததும் அவற்றிலுள்ள குறைகளைச் சிந்தித்து உணர்ந்து தன்னிலைபற்றி வருந்துபவனுமாகி அடிக்கடி சோர்ந்துபோனான்.

एवं तस्याभवच्चित्तं चलद्दोलास्थितं यथा ॥ ११॥
भोज्यं वस्त्रं भूषणं वा योषिद्वाहनमेव वा।
मित्राणि वापि सुहृदो नेषत्तं सुखयन्ति वै ॥ १२॥
नष्टाखिलार्थ इव स शोचत्येव निरन्तरम्।
वासनाविवशः सर्वं त्यक्तुं नाशकदञ्जसा ॥ १३॥
नोपभोक्तुं तथा शक्तो दोषदृष्टियुतस्ततः।

ஆடுகின்ற ஊஞ்சலிலுள்ளதுபோல் அவனது மனம் சஞ்சலத்துடனிருந்தது, உணவோ, ஆடையோ, அணிகளோ, பெண்ணோ, வாகனமோ, நண்பர்களோ, சுற்றமோ எதுவும் சிறிதுகூட அவனுக்கு சுகம் தரவில்லை. எல்லா செல்வங்களையும் இழந்தவன்போல் அவன் இடைவிடாமல்

வேதனைப்பட்டான். விஷய வாஸனையின் வசப்பட்டவனாக எல்லாவற்றையும் முழுமையாக விடவோ அனுபவிக்கவோ இல்லாமல் எதிலும் குறைகாண்பவனாக இருந்தான்.

एवं तं शोकवशतो विवर्णवदनेक्षणम् ॥ १४ ॥
हेमलेखा समालक्ष्य कदाचित्सङ्गता रहः ।
किं नाथ पूर्ववत् त्वं नो लक्ष्यसेऽत्यन्तहर्षितः ॥ १५ ॥
शोचन्तमिव पश्यामि कुत एवं तव स्थितिः ।
कच्चिच्छरीर आत्मा ते नामयैर्बाध्यते सदा ॥ १६ ॥

இப்படி சோக வசப்பட்டதால் முகத்திலும் கண்களிலும் ஒளி மங்கிய அவனைக் கண்டு ஒருநாள் தனிமையில் அவனை அடைந்த ஹேமலேகை கூறினாள். நாதரே! நீர் முன்போல் மகிழ்ச்சி மிக்கவராக இப்போது காணப்படவில்லையே. ஏன்! எப்போதும் வேதனைப்படுபவராகக் காண்கிறீர். ஏன் இந்த நிலை? தங்கள் உடல்நிலை எப்போதும் நோய்களால் பாதிக்கப்பட்டுள்ளதா?

भोगेषु रोगभीतिं वै प्रवदन्ति मनीषिणः ।
त्रिदोषसंभवे देहे दोषवैषम्यसंभवाः ॥ १७ ॥
आमयाः प्रायशः सर्वदेहान् व्याप्यैव संस्थिताः ।

போகங்களை அனுபவிக்கையில் ரோகங்களிலிருந்து பயமுண்டு எனச் சிந்தனையாளர் கூறுவர். உடலானது வாயு, பித்தம், கபம் என்ற மூன்று தோஷங்களால் அமைந்தது. அவைகளின் தன்னிலை சீர்கெடுவதால் ஏற்படுபவை நோய்கள். (போக நாட்டமுள்ளவர்களுக்கு முத்தோஷச் சீர்கேடு இயற்கையாகவே அமையுமாதலால்) எல்லோரும் நோய்வாய்ப்படுபவர்களே.

सर्वथा ह्यप्रतीकार्यं वैषम्यं दोषजं ननु ॥ १८ ॥
अशनाद् वसनाद् वाचो दर्शनात् स्पर्शनादपि ।
कालाद् देशात् कर्मतश्च दोषा वैषम्यमापप्नुयुः ॥ १९ ॥
अतस्तस्योद्भवो लोके सर्वथाऽलक्ष्यतां गतः ।

தோஷங்கள் தன்னிலை விட்டு மாறுவது தவிர்க்க முடியாததொன்று. உணவு, உடை, பேச்சு பார்வை, அனுபவம், காலம், தேசம், செயல்முறை, இவைகளால் தோஷங்கள் சமநிலையிலிருந்து மாறும். எப்போது சமநிலை மாறிற்று என்பது முன்னதாக உணரமுடியாது.

इत्यतः सति वैषम्ये चिकित्सा संप्रकीर्तिता ॥ २० ॥
नोक्ता चिकित्साऽनुत्पत्तौ वैषम्ये केनचित् क्वचित् ।
तद्वद प्रिय कस्माद्धि शोकस्य तव संभवः ॥ २१ ॥

அதனால் சமநிலை கெட்டு நோய் தோன்றிய பின் மருத்துவம் கூறப்பட்டுள்ளது. நோய் வராமலிருக்க உதவும் மருத்துவத்தை யாரும் எங்கும் கூறியிருக்கக்காணோம். அதனால் கூறுங்கள் – தங்களது வேதனை எதனால் உண்டானது என.

इति श्रुत्वा हेमलेखां प्राह राजसुतस्ततः ।
प्रिये शृणु प्रवक्ष्यामि यन्मे शोकस्य कारणम् ॥ २२ ॥
त्वदुक्तया यत्पुरा मेऽभूत् सुखदं तध्दतं ननु ।
न पश्याम्यधुना किञ्चिदपि मे सुखवर्धनम् ॥ २३ ॥

இதனைக்கேட்ட அரசகுமாரன் ஹேமலேகையிடம் கூறினான். "பிரியே! என் சோகத்தின் காரணத்தைச் சொல்கிறேன் கேள். இதற்கு முன் எது சுகமளித்ததோ அது உன் சொல்லைக் கேட்டபின் மாறிவிட்டது. (சுகமளிப்பதாக இல்லை) தற்போது எனக்கு எதுவும் சுகமளிப்பதாக இல்லை.

राज्ञा वितीर्णो विषयः सुखदोऽपि समन्ततः ।
वध्यं न सुखयेद्यद्वत् तथा तस्मान्न मे सुखम् ॥ २४ ॥
विषयान्सेवमानोऽहं सदा विष्टिगृहीतवत् ।
तत्पृच्छामि प्रिये ब्रूहि किं कृत्वा सुखमेम्यहम् ॥ २५ ॥

கொலை தண்டனை பெற்றவனிடம் அரசனே போகப்பொருளைத் தந்தாலும் அது அவனுக்கு எப்படி சுகம் தராதோ, அப்படியே சுகம் தரக்கூடியதும் எனக்குக் சுகமளிக்கவில்லை. அரசனின் ஏவலாளர்களால் ஏவப்பட்ட மக்கள் எப்படி அந்த ஆணையை மீறமுடியாமல் செயல்புரிகிறார்களோ, அதுபோல் நிர்பந்தத்தால் (வாஸனையின் ஆணைக்கு உட்பட்டு) போகப்பொருளை நாடுகிறேன். (அதனால் நிர்பந்தம் காரணமாக சுக உணர்வில்லை) எதனைச் செய்து சுக மடைவேன் என்பதை நீதான் கூறவேண்டும்.

एवं तेन समापृष्टा हेमलेखा तदाऽब्रवीत् ।
नूनमेष सुनिर्वेदमागतो मद्वचःश्रुतेः ॥ २६ ॥
अस्ति बीजं श्रेयसोऽस्मिन् यत एवंविधो भवान् ।

येषु श्रेयो ह्यसंभाव्यं त एवं वाक्यगुम्फनैः ॥ २७ ॥
न ह्यण्वपि विशेषेण विशिष्यन्ते कदाचन।
चिरं संराधिता हृत्स्था प्रसन्ना स्वात्मदेवता ॥ २८ ॥
त्रिपुरा येन तस्यैव भवेदेवंविधा स्थितिः।

இப்படி கேட்கப்பெற்ற ஹேமலேகை அப்போது தனக்குள் கூறிக்கொண்டாள். "என் வார்த்தையைக் கேட்டதால் இவர் நல்ல வைராக்கியத்தை அடைந்துள்ளார். இவர் இப்படி வைராக்கிய–மடைந்தமையால் மேன்மைக்கிடமுள்ளது. மேன்மை ஏற்பட வாய்ப்பில்லாதவர்களிடத்தில் இத்தகைய பேச்சு மட்டும் அணுவளவு கூட மாறுதலை ஏற்படுத்தாது. வெகுநாட்களாக நன்கு வழிபடப் பெற்ற இதயத்திலுள்ள ஆத்ம தேவதையான திரிபுராதேவி இன்று அருள்புரிகிறாள். அதனால் இந்த நிலை (வைராக்கியம்) ஏற்பட்டுள்ளது.

इत्यालोच्यातिविदुषी बुबोधयिषती प्रियम् ॥ २९ ॥
गोपायन्ती स्ववैदुष्यं प्राहान्यव्यपदेशतः।

என்று நன்கு யோசித்து அந்த சிறந்த விதுஷியான அவள் தன் நாயகனுக்கு இதத்தைப் போதிக்க விரும்பி, அதே சமயத்தில் தன் கல்வித் திறனை மறைத்துக்கொண்டவளாக புதிர்போல் தன் அனுபவத்தை வெளிப்படுத்தினாள்.

(ஸ்ரீமத்பாகவதத்தில் உள்ள புரஞ்ஜன உபாக்கியானம் போல் இந்தக் கதை அமைந்துள்ளது.)

शृणु राजकुमारेदं यन्मे वृत्तं पुरातनम् ॥ ३० ॥
पुरा मे जननी काञ्चित् क्रीडनाय सखीं ददौ।
सा स्वभावसती कांचिदसतीमनुसङ्गता ॥ ३१ ॥
सा विचित्रविधाश्चर्यसृष्टिसामर्थ्यसंयुता।
अलक्षिता मे जनन्या सख्या मे सङ्गताऽभवत् ॥ ३२ ॥

அரசகுமாரரே! இதனைக்கேளும். இது முன் நடந்தது. முன்பு என் தாய் என்னுடன் விளையாட ஒரு தோழியைத் தந்தாள். அவள் தன்னளவில் நல்லவள். ஆனால் யாரோ ஒரு கெட்டவள் என் தாய் அறியாதபடி என் தோழியுடன் சேர்ந்தாள். அந்தக் கெட்டவள் பலதரப்பட்ட விந்தைப் பொருள்களைப் படைப்பதில் திறமை படைத்தவள்.

असच्चारित्रयाऽत्यन्तं सङ्गता मम सा सखी ।
प्राणेभ्योऽपि प्रियतमा सदा तद्वशगा ह्यहम् ।। ३३ ।।
न तां विहाय मे संस्था क्षणार्धं वा क्वचिद्भवेत् ।
सा निर्मलस्वभावेन मां वशीकृत्य संस्थिता । ३४ ।।
निरन्तरं तद्गतात्मस्वभावाऽभवमञ्जसा ।

கெட்ட நடத்தையுள்ள அந்தப் பெண்ணுடன் நட்புறவு கொண்ட என் தோழி எனக்கு உயிரைக்காட்டிலும் பிரியமானவள். அதனால் எப்போதும் அவள் வசத்தில் நான் இருந்தேன். ஒருக்கணம் அவளைவிட்டுப் பிரிந்திருந்ததில்லை. அவள் தன் அப்பழுக்கற்ற தனது இயல்பால் என்னை ஆட்கொண்டாள். அதனால் நான் சிறிது சிறிதாக அவளது மனோநிலையை ஒட்டி நடப்பவளானேன்.

सा तया दुष्टया युक्ता नट्या चित्रस्वभावया ।। ३५ ।।
परोक्षवृत्तिमानीता स्वपुत्रेणाभियोजिता ।
तस्याः पुत्रोऽतिमूढात्मा मदिराघूर्णितक्षणः ।। ३६ ।।
बुभुजे तां समाक्रम्य सर्वदा मत्समक्षतः ।
सा तेनाक्रान्तसर्वांगी भुज्यमानाऽनुवासरम् ।। ३७ ।।
न मां जहौ कदाचिच्च तत्स्पृष्टा तेन चाप्यहम् ।

அந்த என் தோழி வியப்பிற்குரிய நடத்தையுடையவளும் நடிக்கும் திறமை பெற்றவளுமான அந்த கெட்ட பெண்ணுடன் சேர்ந்தாள். அதனால் வெளிப்படையாக உணரமுடியாத ரகசிய நடவடிக்கைகளில் ஈடுபட்டாள். கெட்ட தோழி என் தோழியைத் தன் பிள்ளையுடன் உறவு கொள்ளச் செய்தாள். கெட்ட தோழியின் பிள்ளை மிகவும் முட்டாள். மூடன் எனப் பெயர். எப்போதும் கட்குடியால் கண்கள் கலங்கி இருப்பவன். அவன் என் தோழியை என் எதிரிலேயே உறவு கொண்டான். அவனால் முழுவதும் கவரப்பட்ட என் தோழி அவனுடன் தினமும் கூடுவாள். ஆனால் அப்போதும் என்னை அவள் விடவில்லை. அதனால் அவன் என்னையும் தீண்டி விட்டான்.

*இந்தப்புதிர்க்கதையின் பாத்திரங்களை 8வது அத்தியாயத்தில் 23–33 சுலோகங்களில் ஹேமலேகை அறிமுகப்படுத்த இருக்கிறாள். ஆனால் புதிரை நாம் அவ்வப்போது விளக்கிக்கொள்வது இந்த விரஸமான கதைப்போக்கில் மனம் கலங்காமல் கதையின் தத்துவத்தை அறிய உதவும். இங்கு 'நான்'*

*எனக் குறிப்பிடப்படுவது ஜீவனிடமுள்ள சித்சக்தி. ஜீவனுக்குத் தாய் பேரறிவு வடிவினளான தேவி பர–சித்– சக்தி. அவள் கொடுத்த தோழி புத்தி. அந்த புத்தியின் தோழி பல்வேறு பிறவிகளிலும் தொடரும் அறியாமையாகிய துஷ்டை – அவித்யா. அவளது பிள்ளை மோஹம். இந்த விளக்கத்தின் அடிப்படையில் இந்தப் புதிர்க்கதையை விளக்கிக்கொள்வோம்.*

*முன்பு – ஏதோ ஒரு படைப்பு தொடங்குகையில் பரம் பொருளின் சுத்த சித்சக்தி ஜீவனுக்குப் புத்தியைத் தோழியாக அளித்தது. இது என்று நேர்ந்தது எனத்தெரியாது. ஸம்ஸாரபந்தம் அநாதி. என்று தொடங்கிற்று என்று அறியவொண்ணாதது. அந்த புத்தியும் லிங்க சரீரத்தைச் சேர்ந்ததால் அதுவும் அனாதி. சுத்த சித்சக்தி எல்லாவற்றிற்கும் தாய். ஜீவனிடமுள்ள சித்சக்தி அந்த பராசக்தியின் அம்சமானதால் பெண் நிலையில் உள்ளவள். புத்தியைத் தோழியாக்கியது வினைப்பயனாகப் பெறவிருக்கும் சுகதுக்கங்களை அனுபவிப்பதற்காக, அதுதான் ஜீவனின் விளையாட்டு. அதற்கு ஏற்ற தோழி புத்தி. முன் நிகழ்ந்த பிரளயத்தில் புத்தி அதன் மூல தத்துவமான மஹத் தத்துவத்தில் ஒடுங்கிவிட்டதால், மறுபடி படைப்பின் தொடக்கத்தில் கர்ம பரிபாகத்தை அனுபவிக்கக் காரணமான புத்தியைத் திருப்பித் தந்தாள் பராசக்தி. அந்த புத்தி தன் நிலையில் மிக நல்லவள். புத்தி ஸத்துவ குணம் பிரதானமாகக் கொண்ட படைப்பு. ஒளி வடிவமுள்ளது. அது தன் பணியில் பிறரை எதிர்பாராது செயல்படக்கூடியது. அது அப்படிச் செயல்படுமானால் தனக்கு ஒளிதரும் ஆத்மாவின் வடிவைக் கண்டு நிர்மலமாக இருக்கலாம். ஆனால் ஏதோ காரணத்தால் கெட்ட தோழியின் சகவாசம் ஏற்பட்டது. அந்தத் தோழி – அஜ்ஞானம், அவித்யை என்ற பெயருள்ளவள். இவளும் அநாதி. (அநாதி அவித்யாவாஸநயா என்பர்.) அவளையும் இனம் கண்டறியமுடியாது. அஜ்ஞானத்தோடு தொடர்பு கொண்டால் எளிதில் அதிலிருந்தும் பிரியமுடியாது. அதன் சக்தியும் அளவிற்கடங்காதது என்பர்.*

*புத்திக்கு அஞ்ஞானத்தோடு ஏற்பட்ட தொடர்பு ஞானஸ்வரூபமான பரசித்சக்தியின் தொடர்பில்லாத சமயத்தில் நிகழக்கூடியது. இருட்டும் வெளிச்சமும் ஒரே இடத்தில் இருக்கமுடியாதல்லவா? தாய் அறியாதபடி ஏற்பட்ட தொடர்பு என இதனை விளக்குகிறாள் ஹேமலேகை. அஞ்ஞானத்தின் நட்பு அதிலேயே மயங்கச்செய்யும். புத்தி தன் வசமிழந்தது. அஞ்ஞானத்தின் வசத்தில் ஆழ்ந்த புத்தி தாய் கண்படாத விஷயத்தில்– வெளிப்பொருளின் நாட்டத்தில் ஈடுபட்டது. அஜ்ஞானம் அதற்குப் பல விந்தைக் காக்ஷிகளைக்*

*காட்டி நடித்துப் புத்தியை வெளிப்பொருளில் ஈடுபடச் செய்தது. வெளிப்பொருள் நாட்டம் மோஹமாகும். சுகம் வெளியிலிருக்கிறது என்ற எண்ணத்துடன் – மோஹத்துடன் புத்திக்குச் சேர்க்கை ஏற்பட்டது.*

*புத்தி முழுவதும் மோஹத்தின் வசப்பட்டது. ஜீவ சித்சக்தி ஒளியின் உதவியால்தான் புத்தி செயல் புரியும். அதனால் ஜீவன் எதிரிலேயே புத்தி மோஹத்துடன் இணைகிறது. அந்த மோஹம் சிறுகச் சிறுக ஜீவனையும் பற்றிவிட்டது. சுத்த சித்ஸ்வபாவமுள்ள ஜீவன் அஜ்ஞானத்திடம் தன் சித்ஸ்வரூபத்தை இழந்து தான் பெயர் வடிவம் ஆசை உள்ளவனாக மாறிவிட்டான். இனிப் புதிர்கதையைத் தொடருவோம்.*

ततः पुत्रः समुत्पन्नो मूढस्य सदृशाकृतिः ।। ३८ ।।
तरुणः सोऽभवत्तूर्णं अतिचंचलसंस्थितिः ।
पितुर्मौढ्येन संयुक्तः पितामह्या गुणेन च ।। ३९ ।।
अनेकचित्रनिर्माणसामर्थ्येन समावृतः ।
पितामह्या शून्यनाम्न्या पित्रा मूढाभिधेन च ।। ४० ।।
अस्थिराह्वः शिक्षितोऽभूत् स्वयं चातिविशारदः ।
गतिमप्रतिबद्धां वै शीघ्रात् शीघ्रं समासदत् ।। ४१ ।।

உடன் மூடனை ஒத்த ஒரு பிள்ளை உண்டானான். வெகு விரைவில் யுவனானான். மிகவும் சஞ்சலமான மனப்போக்கு உள்ளவன். தந்தையின் முட்டாள் தனமும், தந்தையைப் பெற்றவளின் குணச் சிறப்பான பல தரப்பட்ட விந்தைப் பொருள்களை உற்பத்தி செய்யும் திறமையும் அவனிடம் காணப்பட்டன. சூன்யம் என்ற பெயருள்ள பாட்டியாலும் மூடன் என்ற தந்தையாலும் அஸ்திரன் என்ற பெயர்பெற்ற இந்த பிள்ளை நன்கு கல்வி புகட்டப்பட்டுத் தேர்ந்தவனானான். எதிலும் மிக விரைவுடனியங்குகின்ற தடையற்ற போக்கையும் பெற்றான்.

*அஜ்ஞானத்துடன் இணைந்த புத்தி மோஹத்துடன் சேர மனம் சக்திமிக்கதாகத் தோன்றுகிறது. மோஹத்தின் விளைவே மனச்சஞ்சலம். சஞ்சலமுற்ற மனம் அஸ்திரம்– நிலையற்றது. மனம் புத்தியின் விவேகத்திற்கு வெளிபட்டு வெகு விரைவாக வளர்ச்சி பெறுகிறது. அதற்கு அஜ்ஞானமும் மோகமும் வழிகாட்டுகின்றன. ஸங்கல்பம் – விகல்பம் என்ற இரு குணச்சிறப்பு கொண்டமையால் சஞ்சலம் வளர்கிறது. அஜ்ஞானம் சூனியம் இருட்டைப்போல். தங்கு தடையற்று மனம் இயங்கத்*

*தொடங்குகிறது.*

एवं मम सखी स्वच्छस्वभावा जन्मतः सती।
असतीसङ्गतोऽत्यन्तं मालिन्यं समुपागता॥ ४२॥
सख्या प्रियेण पुत्रेणासत्स्वभावयुतेन सा।
चिरसङ्गात्तेषु दृढानुरागेण समायुता॥ ४३॥
जहौ मय्यनुरागं तु सर्वथा क्रमतः सखी।

இப்படி என் தோழி பிறவியில் நல்ல குணமுள்ளவளாயினும் கெட்டவளின் சேர்க்கையால் மிகவும் தாழ்வை அடைந்தாள். அந்தக் கெட்ட தோழியின் சேர்க்கையாலும் கெட்ட தன்மை படைத்த கணவனுடனும் பிள்ளையுடனும் நாட்பட்ட தொடர்பாலும் அவர்களிடத்திலுள்ள நிலைத்த அன்பாலும் காலம் செல்லச் செல்ல என்னிடத்திலிருந்த பற்றை விட்டுவிட்டாள்.

*ஜீவனின் தோழியான புத்தி கெட்டதான அவித்யை (அஞ்ஞானம்) யின் சேர்க்கையால் வாட்டமுற்றது. மோஹமும் மோஹத்தால் சஞ்சலத்துடனுள்ள மனமும் சேர்ந்ததால் தன்னிலையான 'ஸத்' உருவத்தை விட்டு 'அஸத்' உருவத்தை அடைந்து ஜீவனின் சுய நிலை பற்றிச் சிந்திக்காமலேயே இருந்துவிட்டது. முன்னர் ஜீவனின் பிரும்ம நிலையை மறந்தது. இப்போது சரீரத்திற்குக் கட்டுப்பட்டவனாக நான் அதைச் செய்தேன், இதைச் சாப்பிட்டேன் என்றளவிலாவது உணர்ந்த ஜீவ நிலையையும் மறந்து ஜீவன் என்ற ஒன்றே இல்லை எனக் கருதுமளவிற்கு மோகம் ஏற்பட்டுவிட்டது.*

अहं स्वभावसरला हातुं तत्संगमञ्जसा॥ ४४॥
अनीशा तत्परैवासं सर्वथा तामनुव्रता।

நானோ இயற்கையாக நேர்மையானவள். திடீரென அவளது தொடர்பை விட முடியாதவளாக அவளையே முக்கியப் பற்றுக் கோடாகக் கொண்டு அவளைப் பின் தொடர்பவளாக ஆனேன்.

*ஜீவன் புத்தியிடம் வைத்த பற்று யாதொரு எதிர்பார்வையுமற்றது. அதனால் பிரியத்தை உடன் குறைத்துக்கொள்ள முடிவதில்லை. ஒரு பலனை எதிர்பார்த்து வைத்த அன்பாயிருந்திருந்தால், எதிர்பார்த்த பலன் கிட்டாவிட்டாலோ, "கிட்டவேண்டியது கிட்டி விட்டது, இனி ஒன்றும் அதனிடமில்லை' என்ற அறிவாலோ அன்பை முறித்துக்கொண்டுவிடலாம். சித்ரூபமான ஜீவன் எதனிடம் பிரதிபலிக்கிறானோ அந்த வடிவாக ஆகிவிடுகிறான். புத்தியில் பிரதிபலித்த ஜீவன் புத்திவடிவினனானான். அப்போது புத்தியே எல்லாவற்றையும் செய்தது. ஆத்மாவில் அந்தச் செயலின்*

*பொறுப்பை ஏற்றிவைத்தது.*

अथ तस्याः प्रियो मूढः भुञ्जानस्तां तु सर्वदा ॥ ४५ ॥
प्रसह्य मां समाक्रान्तुमुद्युक्तः सर्वथाऽभवत् ।
नाहं स्वभावसंशुद्धा वस्तुतस्तद्वशं गता ॥ ४६ ॥
तथाऽपि लोके मेऽत्यन्तं परीवादो महानभूत् ।
मूढेन सर्वथेयं च भुज्यते इति सर्वतः ॥ ४७ ॥

பிறகு அந்தத் தோழியின் கணவன் அவளை எப்போதும் அனுபவித்துக்கொண்டிருந்தவன், என்னை பலாத்காரமாகத் தன்வசப்படுத்த முனைந்தான். இயற்கையில் தூய்மையுள்ளவளான நான் அவன் வசப்படவில்லை. இருந்தும், உலகில் எனக்கு, "அந்த முட்டாள் இவளையும் அனுபவிக்கிறான்", என்ற அளவற்ற கெட்ட பெயர் உண்டானது.

*அவித்யையால் புத்தி கெட்டுப் போனது. பிம்பம் கண்ணாடியினுள் தன் உருவத்தைப் பதிப்பது போல், ஆத்மா புத்திக்கு சித்சக்தியை அளித்தது. கண்ணாடியிலுள்ள அழுக்கும் கோணலும் பிம்பத்தில் ஒட்டாதல்லவா? அதுபோல் புத்தியின் செயலுக்கு அடங்கினது போன்றிருந்த ஜீவனை அவித்யை தன் வசமாக்கத் துணிந்தது. சித் (பேரறிவு) ரூபனான ஜீவனை அறிவின்மையால் அடக்க முடியவில்லை. ஆனால் உலகம், புத்தியினுள் பிரதிபலித்துள்ள ஜீவ சைதன்யத்தை உண்மையான ஜீவ சைதன்யமாக மதித்து ஜீவனும் அறிவின்மைக்குள் அடங்கினவன் என நினைத்தது. ஜீவனிடம் அவித்யையால் மயங்கிய புத்தியின் செயல்கள் யாதொரு விளைவையும் ஏற்படுத்தாது என்பதை உலகம் அறிவதில்லை.*

अस्थिराख्यं स्वपुत्रं सा मयि न्यस्य सखी मम ।
प्रियेण संपरिष्वक्ता सर्वथा तत्पराऽभवत् ॥ ४८ ॥
अथास्थिरो मया सम्यक् लालितः पोषितस्ततः ।
प्रौढस्त्रियं पितामह्या अनुमत्योपसंगतः ॥ ४९ ॥
सा प्रिया तस्य चपलाभिधाना हि प्रतिक्षणम् ।
प्रियस्य संमतं रूपं भिन्नं भिन्नं मनोहरम् ॥ ५० ॥
गृह्णात्याश्चर्यजननं प्रियमेवं स्वकं वशे ।
चक्रे सात्यन्तनिपुणा स्वनैपुण्यवशात् खलु ॥ ५१ ॥

அஸ்திரன் என்ற தன் பிள்ளையை அந்த என் தோழி என்னிடம் ஒப்படைத்துவிட்டு, தன் கணவனுடன் இணைந்து எப்போதும் அவனையே முக்கியமாகக் கருதினாள். அஸ்திரன் என்னால் லாலனையுடன் வளர்க்கப்பெற்றான். தன் பாட்டியின் அனுமதியுடன் வயதான பெண்ணை மணந்தான். அவள் பெயர் சபலா. அவள் தன் அன்புக் கணவன் விருப்பத்திற் கேற்றபடி மாறி மாறிப் பல அழகான உருவங்களை எடுப்பாள். அவை வியக்கத்தக்கதாயிருக்கும். இதனால் அவள் தன் நாயகனைத் திறமையால் தன் வசப்படுத்திக்கொண்டாள்.

*புத்தி தன் வசமிழந்தது. மோகத்தின் வசப்பட்டது. மனத்தால் கற்பனை செய்ததை உறுதி செய்யும் திறனை இழந்தது. புத்தி மனத்தின் அடிமை—யானது. மனம் அஜ்ஞானத்தின் துணை கொண்டு சபலத்தன்மையை விரும்பி ஏற்றது. சபலத்தன்மை நொடிக்கு ஒன்றை விரும்பத்தக்கதாக்கியது.*

अस्थिरोऽपि क्षणेनैव त्वसंख्यशतयोजनम् ।
प्रयात्यायाति च सदा न श्रान्तिमुपगच्छति । ५२ ॥
समीहते यत्र गन्तुमस्थिरश्च यदा यदा ।
तस्येष्टं च स्वरूपं तु कृत्वा सा चपलाऽपि हि ॥ ५३ ॥
तत्र तत्र स्थिता भूत्वा रमयत्येव स्वं प्रियम् ।

அஸ்திரன் நொடியில் எண்ணற்ற நூற்றுக்கணக்கான யோஜனை தூரம் சென்று திரும்புவான். அதனால் களைப்புறமாட்டான். எங்கு எப்போதெப்போது அஸ்திரன் செல்ல விரும்புகிறானோ, அங்கு அவன் விரும்பும் உருவம் எடுத்து சபலையும் ஆங்காங்கிருந்து அவனை மகிழ்விப்பாள்.

*மனம் தடங்கலின்றி எங்கும் செல்லும். மனம் செல்லும் பாதையில் சபலத்தன்மை கல்பனை வடிவில் நொடிக்கொரு வண்ணமாக எழும். அந்தக் கற்பனைகளை மனம் மிகவும் விரும்பும்.*

एवं सा चपला सम्यगस्थिरेण युता सती ॥ ५४ ॥
सुषुवे पञ्च तनयान् मातापितृपरायणान् ।
ते समर्थाः पञ्चविधाः मयि सख्या निवेशिताः ॥ ५५ ॥
अहं सख्यनुरक्ता तान् अकुर्वं बलवत्तरान् ।

இப்படி சபலை அஸ்திரனுடன் சேர்ந்து பெற்றோரை மட்டுமே நம்பியுள்ள ஐந்து புதல்வர்களைப் பெற்றாள். அவர்கள் ஐவரும் திறமையுள்ளவர்கள்.

தோழி என்னிடம் அவர்களை ஒப்படைத்தாள். நான் தோழியிடம் உள்ள அன்பால் அவர்களை வலிமைமிக்கவர்களாக்கினேன்.

अथ ते पञ्च तनयाश्चपलायाः पृथक्पृथक् ।। ५६ ।।
चक्रुरायतनं श्रेष्ठं विचित्रमतिविस्तृतम् ।
पितरं स्ववशे चक्रुः मात्रा सम्यग्विभाविताः ।। ५७ ।।
आनयन्ति स्वायतनं पितरं तं क्षणे क्षणे ।

சபலையின் அந்த ஐந்து பிள்ளைகளும் தனித்தனியே அழகிய வீடுகளைக் கட்டிக் கொண்டார்கள். தாயால் நன்கு சீராட்டபெற்ற அவர்கள் தந்தையைத் தன் வசமாக்கிக் கொண்டார்கள். அடிக்கடி நொடிக்கொருதரம் தந்தையைத் தம் தம் வீட்டிற்கு அழைத்துச் செல்வர்.

*பொறிகள் தம் தமக்குரிய இடமாகிய கண், காது, மூக்கு போன்றவாறு இருப்பிடத்தில் அமர்ந்து கற்பனையால் வளம் மிக்கவைகளாக மனத்தைத் தம் தம் இருப்பிடத்திற்கு இழுத்தன.*

तत्रास्थिरो ज्येष्ठसुतायतनं विनिविश्य तु ।। ५८ ।।
अशृणोद्विविधान् शब्दान् सुस्वरानितरानपि ।
क्वचिन्मधुरसंगीतं क्वचिद्वाद्यं सुमञ्जुलम् ।। ५६ ।।
ऋचो यजूंषि सामानि मन्त्रानाथर्वणानपि ।
शास्त्रागमेतिहासांश्च भूषणानां च शिञ्जितम् ।। ६० ।।
भृंगसंघस्य गीतं च पिकपञ्चमसुस्वरम् ।

அஸ்திரன் அங்கிருந்த மூத்த பிள்ளையின் இருப்பிடத்தில் நுழைந்து இனிய ஸ்வரமுள்ளவைகளும் மாறுபட்டவைகளுமான பலதரப்பட்ட ஒலிகளைக் கேட்டான். ஒருபுறம் இனிய கீதம், மறுபுறம் அழகிய வாத்ய ஒலி, ருக், யஜுஸ், ஸாம, அதர்வணம் என்ற நான்கு வேத மந்திரங்களின் ஒலி, சாஸ்திரம், இதிஹாஸம், ஆகமங்கள் இவைகளின் பிரவசனம், நகைகளின் ஒலி, வண்டினத்தின் கீதம், குயிலின் பஞ்சமஸ்வர ஒலி இப்படிப் பலவற்றைக் கேட்டான்.

एवं मनोहरान् शब्दान् शृण्वन् पुत्रनिदेशतः ।। ६१ ।।
प्रीतः पुत्रवशं प्रागादथ पुत्रोऽन्यथाऽदिशत् ।
विरुद्धान् कर्णकटुकानशृणोद् भैरवान् रवान् ।। ६२ ।।
सिंहादिगर्जितं मेघनिर्घोषमशनेस्तथा ।

ब्रह्माण्डभेदनं गर्भस्रावणं सुभयङ्करम् ।। ६३ ।।
एवं श्रुत्वा सुचकितश्चान्यत्राप्यशृणोत्तथा ।
रुदितं विप्रलपितं शोचितादिविचित्रितम् ।। ६४ ।।

இப்படி காதுக்கினிய ஒலிகளைப் பிள்ளை காட்டியபடி கேட்டு மகிழ்ந்தவனாகப் பிள்ளைக்கு வசமானான். அதன் பின் அந்தப் பிள்ளை வேறுவித ஒலிகளைக் காட்டினான். காதிற்குக் கடூரமானவையும் பயம் தருபவையுமான ஒலியை (அஸ்திரன்) கேட்டான். சிங்கங்களின் கர்ஜனை, மேகத்தின் குமுறல், உலகையே பிளக்கவல்லதும் கர்ப்பத்தைக் கலக்க வல்லதும், பயங்கரமானதுமான இடி ஒலி முதலியவற்றைக் கேட்டுப் பயந்த அவன் வேறொரு இடத்தில் அழுகை புலம்பல் வேதனையுடன் குமுறுதல் முதலிய விசித்திரமான ஒலிகளைக் கேட்டான்.

*மூத்தபிள்ளை காது என்ற பொறி. பஞ்சபூதங்களில் முதலில் தோன்றியது ஆகாசம் என்ற பூதம். அதன் தனித்த குணம் சப்தம். அதற்கான பொறி காது. அதனால் பொறிகளில் மூத்தது காது, மனம் கல்பனை வசப்பட்டு காது காட்டிய வழியே வெளிப் பட்டது. முதலில் இனியதைக் கேட்டது. மனம் குளிர்ந்தது. பின் தன் வசமிழந்த மனம் கடூரமானதையும் வேதனையளிப்பதையும் கேட்க நேர்ந்தது. அவைகளைத் தவிர்க்கமுடியவில்லை.*

द्वितीयसुतनीतोऽथास्थिरः तद्भवनं ययौ ।
तत्रापश्यत् मृदुस्पर्शान्यासनानि शुभानि च ।। ६५ ।।
शयनानि च वासांसि कठिनस्पर्शकान्यपि ।
शीतस्पर्शानि वस्तूनि तथोष्णस्पर्शकानि च ।। ६६ ।।
अनुष्णाशीतस्पर्शानि विचित्राण्यभिवीक्ष्य तु ।
हितान् दृष्ट्वा प्रमुदितः विषण्णस्त्वहितानपि ।। ६७ ।।

அஸ்திரன் இரண்டாவது பிள்ளையால் அழைத்துச் செல்லப்பட்டவனாக அவனது வீட்டை அடைந்தான். அங்கு மெதுவான ஆஸனங்கள், நல்ல படுக்கைகள், ஆடைகள் இவைகளைக் கண்டான். பின் தொடு உணர்ச்சியில் கடினமானவற்றையும் குளிர்ந்தவற்றையும் சூடானவற்றையும் குளிர்ச்சியும் சூடுமற்றவையையும் கண்டான். வியக்கத்தக்க அவற்றைக் கண்டு அவைகள் தனக்கு இதமானதாயின் அவற்றில் சந்தோஷப்பட்டான். ஒவ்வாததாயின் அவற்றில் வேதனைப் பட்டான்.

*பஞ்சபூதங்களில் இரண்டாவது வாயு. அதன் தனிச் சிறப்பான குணம் தொடு உணர்ச்சி. அதன் இருப்பிடம் தோல், மென்மை, கடினத்தன்மை, குளிர்ச்சி, சூடு என்ற மாறுபட்ட உணர்ச்சிகளும் அவற்றால் சுக – துக்க உணர்ச்சிகளும்*

*இந்தப் பொறியால் கிடைக்கும் அனுபவங்கள். அவற்றை மனம் பெற்றது.*

अथ तृतीयतनयभवनं प्राप्य सोऽस्थिरः।
अपश्यद्रुचिराकारान् भावान् विविधवर्णकान् ॥ ६८ ॥
रक्तान् श्वेतान् पीतनीलान् हरितान् पाटलानपि।
धूम्रान् कडारान् कपिशान् मेचकान् कर्बुरांस्तथा ॥ ६९ ॥
स्थूलान् कृशानणून् दीर्घानायतान् वर्तुलांस्तथा।
अर्धवृत्तान् दीर्घवृत्तान् सुन्दरांश्च विभीषणान् ॥ ७० ॥
बीभत्सान् भास्वरान् रौद्राननालोकांश्च दृङ्मुषः।
क्वचिद्धितं ततोऽन्यच्च पश्यन्तं पितरं पुनः ॥ ७१ ॥
अनयत्तुर्यतनयो भवनं स्वं विचित्रितम्।

பிறகு அஸ்திரன் மூன்றாவது பிள்ளையின் வீட்டை அடைந்து, மிகவும் கவர்ச்சியூட்டுகின்ற பல நிறமுள்ள பொருள்களைப் பார்த்தான். சிவப்பு, வெண்மை, மஞ்சள், நீலம், பச்சை, பாதிரி நிறம், புகைநிறம், கருஞ்சிவப்பு, கருமை கலந்த மஞ்சள், கருப்பு என தனித்தனி நிறம் கொண்டதும் பல நிறங்கள் கொண்டதும், பருத்தது, இளைத்தது அணுவளவில் உள்ளது, நீண்டது, அகன்றது, வட்டமானது, அரைவட்டமுள்ளது நீண்ட வட்டமுள்ளது, அழகானது, பயங்கரமானது அருவருக்கத்தக்கது ஒளியுள்ளது, பெருமுருவம் படைத்தது, பார்க்க முடியாதது, பார்வையைக் கவர்வது, இதமானது, இதமல்லாதது என்று பலவிதமானவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கும் தந்தையை நான்காவது பிள்ளை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

*மூன்றாவது பூதம் அக்னி. அதன் சிறப்பு குணம் உருவத்தைப் பார்த்தல். அதற்கான பொறி கண்கள். அவற்றால் கிடைக்கும் அனுபவம் வடிவத்தைக் காண்பதால் ஏற்படும் உணர்ச்சிகள், அவற்றை மனம் பெற்றது.*

तत्राससाद पुष्पाणि फलान्यन्नानि च क्रमात् ॥ ७२ ॥
पेयानि लेह्यचोष्याणि भक्ष्याणि रसवन्ति वै।
सुधास्वादूनि मधुराण्यन्यान्यम्लरसानि च ॥ ७३ ॥
कटुकानि च तिक्तानि कषायाण्यपि कानिचित्।
क्षाराणि मधुराम्लानि कट्वम्ललवणानि च ॥ ७४ ॥
कटुतिक्तानि चित्रात्मरसानि विविधान्यपि।

அங்கு (அஸ்திரன்) பூக்கள், பழங்கள், மென்று உண்ணக் கூடியவை, குடிக்கத்தக்கவை, நக்கிச் சாப்பிடக்கூடியவை, உறிஞ்சிக் குடிக்கக் கூடியவை. சுவையுள்ளவை, அமிருதம்போல் இனிப்பவை, இனிப்பு, புளிப்பு, காரம், கசப்பு, துவர்ப்பு, கார்ப்பு, எனத் தனித்த சுவையுள்ளவை, தித்திப்பும் காரமுமுள்ளவை, காரமும் புளிப்பும் உப்புமுள்ளவை, காரமும் கசப்பு முள்ளவை, இவ்வாறு பல விசித்திரச் சுவையுள்ள உணவு வகைகளைப் பெற்றான்.

आस्वादयन्नात्मजेन समेतोऽथान्तिमः सुतः ।। ७५ ।।
निनाय पितरं स्थाने स्वीयेऽत्यन्तविचित्रिते।

இப்படித் தன் பிள்ளையுடன் அந்த ஸுகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தவனை கடைசிப்பிள்ளை தனது மிக விசித்திரமான வீட்டுற்குக் கொணர்ந்தான்.

तत्रोपालभतानेकपुष्पाणि च फलानि च ।। ७६ ।।
तृणान्यन्नान्योषधीश्च भावानन्यांश्च सर्वतः।
सुगन्धान् पूतिगन्धांश्च मृदुगन्धोग्रगन्धकान् ।। ७७ ।।
मोहगन्धान् ज्ञानगन्धान् मूर्च्छागन्धान् विचित्रितान्।

அங்கு நறுமணம், கெட்டமணம், மென்மையான மணம், கடுமணம், கலக்கம் தருவதும், அறிவையூட்டுவதும் மயக்கம் தருவதுமான மணங்கள் இவைகளுடன் கூடிய பூக்கள், பழங்கள், புற்கள், உணவுப் பொருள்கள், மருந்துகள் மற்றும் பல பொருள்கள் இவைகளை முகர்ந்து அனுபவித்தான்.

நான்காவது பூதம் ஜலம். அதன் சிறப்புக் குணம் சுவை. அதற்கான பொறி நாக்கு. நாக்கால் கிடைக்கும் அனுபவத்தை மனம் பெற்றது. பின் ஐந்தாவது பூதமான பிருதிவியின் சிறப்புக் குணமான மணத்தை உணரும் மூக்கால் பலதரப்பட்ட மணங்களை முகர்ந்தது.

पुत्राणां भवने चैवं प्रविशन् निविशन्नपि ।। ७८ ।।
हितेषु रमते क्वापि विषीदत्यहिते क्वचित्।
सदा गमागमपरः पुत्राणां भवने बभौ ।। ७६ ।।

இப்படிப் புத்திரர்களின் வீட்டில் நுழைந்தும் வெளிவந்தும் இதமாயின் களித்தும் இதமற்றதாயின் வருந்தியும் எப்போதும் போக்குவரத்து உள்ளவனாக விளங்கினான்.

ते पुत्राः पितृवात्सल्यात् पितृहीना न च क्वचित्।
स्पृशन्ति विषयांश्चित्रान् स्वल्पं वापि कदाचन।। ८०।।
अस्थिरस्तु पुत्रगृहे भुक्त्वा तान् विषयान् बहून्।
मुषित्वाऽन्यांश्च विषयान् गुप्त्या नयति स्वं पदम्।। ८१।।
भुनक्त्यतितरां नित्यं-अथान्या चपलास्वसा ।। ८२।।
महाशना पतिं वव्रे मनःकान्तं तमस्थिरम्।
तस्यामतितरां सक्तो यदाऽभूदस्थिरोऽपि वै।। ८३।।
तदा तस्याः प्रीतये स भोगाहरणतत्परः।

அந்த பிள்ளைகள் தந்தையிடமுள்ள அன்பால் தகப்பனில்லாமல் எங்கும் செல்வதில்லை. எதனையும் சிறிதும் அனுபவிப்பதில்லை. அஸ்திரனோ பிள்ளைகளின் வீட்டில் அந்த பல விஷயங்களை அனுபவித்து விட்டுத் திருட்டுத்தனமாக வேறு சிலவற்றைத் தன்னிருப்பிடத்திற்குக் கொணர்ந்து மறைவில் அவற்றை நன்கு தினமும் அனுபவித்தான்.

சபலா என்ற அஸ்திரனின் மனைவிக்கு மற்றொரு தங்கை, மஹாசனா (பெருந்தீனி கொள்பவள்) என அவளுக்குப் பெயர், அவள் அஸ்திரனை மனத்திற்குப் பிடித்தவனாகத் தானே வரித்தாள். அஸ்திரன் அவளிடத்தில் மிகுந்த ஈடுபாடுகொண்டு அவளது திருப்திக்குப் போகப் பொருள்களைக் கொணர்வதில் ஈடுபட்டவனானான்.

*மனமின்றி கண் காது முதலியவை இயங்காது. ஆனால் மனம் மட்டும் கண் காது முதலியதன் உதவியின்றியே பழைய வாசனையால் தூண்டப்பெற்று, ஞாபகம் முதலிய தன் தனிச்சிறப்புக் குணங்களால் கனவு மூலம் விஷய ஸுகம் அனுபவிக்கும்.*

तेनानीतं बह्वपि च भक्षित्वा क्षणमात्रतः।। ८४।।
पुनर्बुभुक्षयाक्रान्ता भोगाहरणहेतवे।
सदा प्रियं सन्दिशति सोऽप्याहर्तुं सदेक्षते।। ८५।।
पुत्रैःपञ्चभिरानीतं प्रियेणापि सुसंभृतम्।
भुक्त्वा क्षणेन भूयोऽपि सा बुभुक्षाप्रपीडिता।। ८६।।
भोगाहृतौ सन्दिशति प्रियं पुत्रांश्च सर्वदा।

அவன் கொணர்ந்த பலவற்றையும் நொடியில் உண்டு மறுபடியும் பசியால் துன்புறுபவளாக போகப்பொருளைக் கொணர்வதற்காக எப்போதும் தன் கணவனைத் தூண்டுவாள். அவனும் அவள் விரும்பியதைக்கொணர எப்போதும் கவனத்துடன் இருப்பான். ஐந்து பிள்ளைகளால் கொணரப்

பெற்றதும் கணவனால் சேமிக்கப்பெற்றுமானதனைத்தையும் நொடியில் உண்டு மறுபடி பசியால் துன்புறுபவளாகத் தன் போகப் பொருளைக் கொணரக் கணவனையும் பிள்ளைகளையும் தூண்டிவிடுவாள்.

*மனத்தின் சபலத்தன்மையுடன் கூடப்பிறந்தது காமம்... ஆசை. சபலத்தால் விஷய சுகத்தில் ஈடுபட்டவன் அனுபவித்து போதுமென்ற வைராக்கியம் கொள்ளாமல் மேலும் மேலும் ஆசை வசப்படுவான். ஆசைக்குரிய பொருளை எத்தனை அனுபவித்தும் ஆசை அடங்காது. அதனால் காமம் பெருந்தீனியை எதிர்பார்க்கும். நிரப்ப நிரப்ப அத்தனையையும் நொடியில் அனுபவித்துப் பின்னும் ஆசை மட்டும் வளர்கிறது. உடன் மனம் பொறிகளைத்தூண்டுகிறது. அனுபவங்களைச் சேமிக்கிறது. அப்போதும் ஆசை அடங்குவதில்லை.*

ततः सा स्वल्पकालेन सुषुवे पुत्रयोर्युगम् ।। ८७ ।।
ज्वालामुखस्तयोर्ज्येष्ठो निन्द्यवृत्तस्तथापरः ।
सदा मातुः प्रियतमौ तौ पुत्रौ संबभूवतुः ।। ८८ ।।

மஹாசனா சில நாட்களில் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களில் மூத்தவன் ஜ்வாலாமுகன். மற்றொருவன் நிந்த்யவிருத்தன். அவர்களிருவரும் தாய்க்கு மிகப் பிரியமுள்ள பிள்ளைகளானார்கள்.

*ஜ்வாலாமுகன் – கொழுந்துவிட்டெரியும் நெருப்பு போன்ற முகமுள்ளவன் – கோபம். நிந்த்யவ்ருத்தன் – நிந்திக்கத்தக்க நடத்தையுள்ளவன் – பேராசை. ஆசையின் பின் விளைவு கோபமும் பேராசையும், ஆசை தடைபட்டால் கோபம், நிறைவேறினால் பேராசை.*

महाशनायामासक्तः संश्लिष्यति यदाऽस्थिरः ।
तदा ज्वालामुखज्वालालीढसर्वकलेवरः ।। ८९ ।।
अस्थिरः पीडितोऽत्यन्तं गाढमूर्च्छामुपैति हि ।
कदाचिन्निन्द्यवृत्तेन संगतः प्रियसूनुना ।। ९० ।।
सर्वैर्विनिन्द्यतामेति मृततुल्यो हि जायते ।

மஹாசனையிடம் ஈடுபட்டவனாக அவளை அஸ்திரன் அணைத்துக் கொள்ளும்போது ஜ்வாலாமுகனின் தீக்கொழுந்தால் உடல் முழுவதும் சூழப்பட்டவனாக கடும் வேதனையை அடைந்து ஆழ்ந்த மயக்கத்திற் குள்ளாகிறான். ஒரு சமயம் நிந்த்ய விருத்தன் என்ற அன்புக்குரிய மகனுடன்

சேர்ந்தவனாக எல்லோராலும் நிந்திக்கப்பெற்று உயிருடனிருந்தும் செத்தவன் போலாகிறான்.

ஆசைக்கு வசப்படும் மனம் கோபத்திற்கும் லோபத்திற்கும் ஆளாகிக் தன்னிலை இழந்து பலராலும் தூற்றப்படுகிறது.

एवं यदाऽस्थिरो जातो दुःखभोगैकतत्परः ।। ६१ ।।
तदा सखी मे स्वभावसती पुत्रेऽस्थिराह्वये ।
अतिवात्सल्यतस्तेन संगता तस्य दुःखतः ।। ६२ ।।
दुःखभारसमाक्रान्ता निन्द्यवृत्तेन सङ्गता ।
ज्वालामुखेन च तथा पौत्रेणाश्लेषिता सती ।। ६३ ।।
सुदग्धा निन्दिता लोकैर्मृतप्राया बभूव ह ।

இப்படி அஸ்திரன் துக்கத்தை அனுபவிப்பதிலேயே மூழ்கியவனாக ஆனபோது அவனது தாயான என் தோழி நல்லியல்புள்ளவளாயினும் தன் பிள்ளையான அஸ்திரனிடம் அதிகப் பிரியத்தால் அவனுடன் சேர்ந்து அவனது துக்கத்தால் தான் துக்கச்சுமையால் அழுத்தப்பெற்றவளாக, பேரர்களான நிந்தியவிருத்தனுடனும் ஜ்வாலாமுகனுடனும் தான் கூடி இணைந்து நன்கு எரிக்கப்பட்டும் நிந்திக்கப்பட்டும் பிணம் போலானாள்.

*மனம் வேதனைப்படும்போது அடுத்துள்ள புத்தியும் வேதனைப்படுகிறது. விவேகம் அழிந்து கோபமும் லோபமும் கொண்டு அதுவும் வாடி வதங்கிவிடுகிறது.*

तां सदाऽनुगता चाहं लुप्तप्रायाऽभवं प्रिय ।। ६४ ।।
एवं बहूनि वर्षाणि सख्या दुःखेन दुःखिता ।

அந்தத் தோழியைப் பின்பற்றும் நானும் பல ஆண்டுகளாக அவளது துக்கத்தால் துக்கமடைந்தவளாகி அழிந்தவள் போலாகி விட்டேன்.

*மனம் பொருளைச் சுக ஆசையால் நாடிற்று, சுகம் பெறத் தடங்கல் ஏற்பட்டால் கோபமடைந்தது. ஆசைப்பட்டது கிட்டினால் பேராசைப்பட்டது. ஆகையால் மனம் தீய்ந்தது. உலகில் அதனால் அவமதிப்பு ஏற்பட்டது. மனத்தை அடக்கும் சக்தி படைத்த புத்தி மனத்தின் வழி சென்றதால் விவேகத்தை இழந்தது. மனத்தின் ஆசை (காமம்) கோபம் லோபம் என்ற மூன்றின் வசப்பட்டுத் தன்னை இழந்து அதுவும் தீய்ந்தது. புத்தியிடம் பிரதிபலித்த ஜீவனும், தானும் புத்தியும்*

*ஒன்றென பிரமையில் ஆழ்ந்தது. மனத்தின் ரஜோகுணத்தால் விக்ஷேபமும் தமோ குணத்தால் ஆவரணமும் அடைந்த புத்தி தெளிவற்றதாகிவிட்ட படியால் தெளிவற்ற கண்ணாடியில் பிம்பம் பிரதிபலிக்காதது போல் தெளிவற்ற புத்தியில் ஜீவசைதன்யம் நன்கு துலங்கவில்லை. அதனால் ஜீவசைதன்யமே இல்லாமல் மறைந்துவிட்டதுபோல் ஆகி, புத்தியே எல்லாவற்றையும் நடத்துவதாகிவிட்டது. ஜீவனின் ஸத்–சித்–ஆனந்தஸ்வரூபம் துலங்காமல் அழிவும் அறிவின்மையும் துக்கமுமே ஜீவனின் இயல்புபோல் தோன்றத் தொடங்கியது.*

अस्थिरोऽभूदस्वतन्त्रो महाशनापरिग्रहात् ॥ ६५ ॥
पुरं प्राप दशद्वारं केनचित्कर्मणा क्वचित् ।

அஸ்திரன் மஹாசனையின் பிடிப்பால் தன் வசமிழந்தான். ஏதோ ஒரு செயலின் விளைவாகப் பத்து வாயில்கள் கொண்ட நகரத்தை அடைந்தான்.

*மனம் புத்தி பொறிகள் இவை அனைத்தும் ஸூக்ஷ்ம சரீரமாகும். இவை ஒன்றோடொன்றிணைந்தவை. உடல் அழியும் போதும் தாம் அழியாதவை. உடல் எனும் வீட்டில் ஸூக்ஷ்மசரீரம் கொட்டமடித்தது. உடல் அழிந்தது. ஸூக்ஷ்ம சரீரம், தான் புரிந்த வினைகளுக்கேற்ப மறுபடி ஓர் உடலினுள் புகவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. உடலில் புகுவது என்ற பிறப்பைத் தடுக்க அதனால் இயலாது. மறுபிறப்பும் அதற்கான உடலும் ஸூக்ஷ்ம சரீரத்தின் விருப்பிற்கேற்ப அமையக்கூடியவையல்ல. ஸூக்ஷ்மசரீரம் புரிந்த வினைக்கேற்ப அவை அமையும். இப்படி மறு பிறப்பிற்குள்ளானதற்கு முக்கியக் காரணம் மனம் ஆசைவசப்பட்டிருந்ததே.*

तस्मिन् महाशनायुक्तः पुत्रैर्मात्रादिभिर्युतः ॥ ६६ ॥
न्यवसत्स सुखप्रेप्सुः दुःखं भुञ्जन् दिवाऽनिशम् ।
पुत्राभ्यां दग्धसर्वांगः निन्दितश्चानुवासरम् ॥ ६७ ॥
इतस्ततः समाकृष्टः प्रियाभ्यां सर्वदा हि सः ।
पुत्राणां पञ्चभवनं प्रविशन् निविशन्नपि ॥ ६८ ॥
अत्यन्तं श्रान्तिमायाति न सुखं लभते क्वचित् ।

அந்த நகரத்தில் மஹாசனையுடன் கூடிப் பிள்ளைகளும் தாயும் சூழச் சுகத்தில் நாட்டம் கொண்டவனாக ஆனான். பகலிலும் இரவிலும் துக்கத்தையே அனுபவிப்பவனாக வாழ்ந்தான். இரு பிள்ளைகளாலும் அவன்

உடல் தீய்ந்தது. தினமும் நிந்தைக்குட்பட்டான். அன்புக்குரிய அவர்களால் எப்போதும் இங்குமங்கும் அலைக்கழிக்கப்பட்டான். பிள்ளைகளின் ஐந்து வீடுகளில் நுழைந்தும் அவைகளிலிருந்து வெளியேறியும் களைப்புற்றவனாக எதிலும் சுகம் பெறவில்லை.

*புதிய உடலிலும் அதே பொறிகள், அவை அமைந்த கூடுகள். அதே விஷய வாசனை, சுகத்தில் நாட்டம், ஆசையால் மயங்கியவனுக்கு துக்கமே சுகமாகக் காட்சி தருகிறது. அதில் மனம் தாவிப்பெற்றது துக்கத்தை. மறுபடியும் அதே காமம், அதன் பின் விளைவான கோபம், பேராசை, அவற்றின் பின் விளைவான உடல் தேய்வு, முதுமை, எதிலும், அமைதி இல்லை.*

एवं पुत्रस्य दुःखेन सखी मेऽत्यन्तदुःखिता ।। ९९ ।।
अभून्मूर्च्छितकल्पा सा एवं तत्पुर आवसत् ।।
ज्वालामुखनिन्द्यवृत्तयुता या सा महाशना ।। १०० ।।
शून्याख्यया पोषिता च मूढेन श्वशुरेण च ।
तथा सपत्न्या चपलाख्ययाऽत्यन्तं समेधिता ।। १०१ ।।
अस्थिरं स्ववशे चक्रे पतिं तत्पुरसंस्थिता ।

இப்படிப்புத்திரனது வாட்டத்தால் என் தோழியும் மிகவும் வாட்டமுற்றாள். மயங்கியவள்போல் அந்த நகரத்தில் வசித்தாள். ஜ்வாலாமுகன் நிந்தியவிருத்தன் என்ற இரு புதல்வரோடு கூடிய மஹாசனை சூன்யா என்ற தன் கணவனின் பாட்டியாலும் மூடன் என்ற தன் மாமனாராலும் போஷிக்கப்பட்டவளாக, சக்களத்தியான சபலையால் தூண்டப்பட்டவளாக அந்த நகரத்தில் ஆழ்ந்த நிலை கொண்டவளாகத் தன் கணவனான அஸ்திரனைத் தனக்கடிமையாக்கிக் கொண்டாள்.

*மனம் துக்க வசப்படும்போது புத்தியும் துக்க வசப்படுகிறது. புத்தி பேதலித்து மதிமயக்கம் ஏற்படுகிறது. ஆனால் காமமோ, மனத்தின்மீது தன் ஆதிக்கத்தைச் செலுத்துகிறது. கோபம், பேராசை, அறியாமை, தன்னிலை உணராமை, சபலத்தன்மை முதலியவற்றால் வலிவுள்ளதாகி மனத்தைத் தன் வசமாக்கிவிடுகிறது.*

सखीप्रीत्या तत्र चाहमवसं तत्परा सती ।। १०२ ।।
सखीदुःखद्रतप्राया सर्वेषां रक्षणोद्यता ।
यद्यहं तत्र न स्यां वै क्षणमात्रमपि प्रिय ।। १०३ ।।
न भवेत्तत्र चैकोऽपि मया सर्वं हि रक्षितम् ।

शून्यया शून्यतां प्राप्ता मूढेन मूढतामपि ॥ १०४ ॥
अस्थिरेणास्थिरत्वं च चापल्यं चपलायुता ।
ज्वालामुखाज्ज्वलत्तां च निन्द्यवृत्तात्तदात्मताम् ॥ १०५ ॥
सखीसंयोगतश्चैवमभवं तत्तदाकृतिः ।

தோழியிடமுள்ள பிரியத்தால் நானும் அங்கேயே அவர்களையே முக்கியமாகக் கருதியவளாக வசித்தேன். தோழியின் துக்கத்தால் என் சுய நிலையையே இழந்தவள் போலாகிவிட்டேன். எல்லோரையும் காப்பாற்ற முனைந்தேன். நான் சிறிதுநேரம் அங்கில்லாவிடில் ஒரு நொடி கூட யாரும் வாழமுடியாது. என்னால்தான் எல்லாம் காப்பாற்றப்பட்டுள்ளது. சூன்யையுடன் சேர்ந்து சூன்யையானேன். மூடனுடன் சேர்ந்து முட்டாளாக மாறினேன். அஸ்திரனுடன் சேர்ந்து நிலையற்றவளானேன். சபலையுடன் இணைந்து சபலையானேன். ஜ்வாலாமுகனுடன் சேர்ந்து கொழுந்துவிட்டெறிபவளானேன். நிந்தியவிருத்தனுடன் சேர்ந்து எல்லோராலும் நிந்திக்கப்பட்டேன். என் தோழியுடன் கூடியிருந்தததால் அவளது அந்த அந்த நிலை கொண்டவள் ஆனேன்.

*ஆத்மாவிற்கெனத் தனிப்பட்ட இயல்பு ஒன்றும் கிடையாது. இலக்கணமாக எதனையாவது கொள்ளவேண்டுமானால் ஸத்–முக்காலும் அழிவற்ற நிலை, சித் – பேரறிவு, ஆனந்தம் – பேரானந்தம் என்ற மூன்றையும் கொள்ளலாம். இந்த நிலையை எப்போதும் மறக்காதிருக்க அவனுக்குத் தோழியாக இயற்கையாக ஸத்வகுணம் கொண்ட புத்தியை தேவி அளித்தாள். புத்தியின் நாட்டம் தன் தோழனான ஆத்மாவிடம் செல்லாமல் அதற்குப் புறம்பட்டவற்றில் சென்றது. ஆனால் ஆத்மா தான் புத்தியிடம் பிரதிபலிப்பதை நிறுத்தவில்லை. ஆத்ம ஒளிஇன்றி புத்தியோ மனமோ இயங்கக்கூட முடியாது. தன் ஒளிகொண்டு அவை இயங்குகின்றன என்ற அபிமானம் (அஹங்காரம்) ஆத்மாவிற்கு அவற்றில் பற்றை வளர்த்தது. அதனால் பூர்ணனான அவன் சூன்யனாகத் தன்னைப் பாவித்தான். பேரறிவு வடிவினனான அவன் தன்னை மூடனாக்கிக் கொண்டான். முக்காலும் நிலைத்த அவன் தன்னை நிலையற்றவனாக மதித்தான். எல்லாம் நிரம்பிய அவன் தனக்குக் குறை ஏற்பட்டதாக நினைத்துச் சபலத்திற்கு வசப்பட்டான். எப்போதும் ஆனந்தத்தால் மேகம்போல் குளிர்ந்த அவன் கோபவசப்பட்டு எரிந்தான். பிறர் குறைகாண முடியாத பூர்ணன் பலர் குறைகூறுமளவு மாறினான். இத்தனையும் புத்தியிடம் " தன்னைத் சார்ந்தவன், தான் அவளிடம் பிரதிபலிக்கவேண்டும். தன் ஒளியால் அவள் ஒளியிடவேண்டும்'.*

*என்று ஆத்மா கொண்ட பற்றால் விளைந்தது.*

सखीं यदि विमुञ्चामि सा नश्येत्क्षणमात्रतः ।। १०६ ।।
मां संगतेन तेषां वै समाहुर्व्यभिचारिणीम् ।
जना मूढाः सर्व एव कुशला निर्मलां विदुः ।। १०७ ।।

தோழியை நான் கைவிட்டால் அவள் நொடியில் அழிந்து விடுவாள். அவளுடன் சேர்ந்ததால் என்னையும் நடத்தை கெட்டவள் என மூட உலகம் கூறும். ஆனால் அறிவாளிகள் நான் தூயவள், அப்பழுக்கற்றவள் என்பதை அறிவர்.

*ஆத்மா புத்தியிடம் கொண்ட பற்று உண்மையானதல்ல. ஆத்மா ஒளி வடிவினன். அவனது ஒளியைப் பரவாமல் தடுக்க முடியாது, அந்த ஒளியில் துலங்கும் புத்தி மற்றவற்றைத் துலக்குகிறது. ஆத்ம ஸந்நிதானத்தால் அவை இயங்குவதை அறியாதவர் ஆத்மாவே புத்தியினுள் அடங்கி (அவச்சின்னனாகி)அறிகிறான், பார்க்கிறான், கேட்கிறான் என அவனிடமில்லாததொன்றை அவன்மேல் ஏற்றிக் குறைகாண்பர். ஆத்மாவின் சுயநிலை, அறிந்தவர் அவனது பேரொளி - பேரானந்த வடிவை அறிந்தவர், புத்தியினுள் புத்திநிலைக் கேற்பப் பிரதிபலிக்கும் ஆத்ம வடிவை உண்மையெனக் கூறமாட்டார்.*

महासती मे जननी विशुद्धा निर्मलाकृतिः ।
आकाशादपि विस्तीर्णा सूक्ष्मा च परमाणुतः ।। १०८ ।।

என் தாய் மஹாஸதீ மிகத் தூயமனமுள்ளவள். உடலால் எவ்வித அழுக்குமடையாதவள். (புகழால்) வானத்தையும்விட விரிவுள்ளவள். பரமாணுவைவிட நுண்ணிய உருவம் படைத்தவள்.

सर्वज्ञानाप्यकिंचिज्ज्ञा सर्वकर्त्र्यपि निष्क्रिया ।
सर्वाश्रयाऽप्यनाधारा सर्वाधाराऽप्यनाश्रिता ।। १०६ ।।

(இயற்கையில்) எல்லாமறிந்தவளாயினும் (தான் எல்லாமறிந்தவள் என்ற அபிமானமற்றவளானதால்) ஒன்றுமறியாதவள். எல்லாவற்றையும் இயக்கிவைப்பவளாயினும் ஒரு செயலுமில்லாதவள். எல்லாவற்றிற்கும் ஆசிரயமாயினும் ஒன்றிற்கும் ஆதாரமாக இல்லாதவள். எல்லாவற்றிற்கும் ஆதாரமாயினும் ஒன்றையும் அண்டி நிற்பவளல்ல.

सर्वरूपाऽप्यरूपा सा सर्वयुक्ताऽप्यसंयुता।
सर्वत्र भासमानापि न ज्ञेया केनचित् क्वचित्॥ ११०॥

எல்லாவற்றின் வடிவமும் அவளுடையதேயெனினும் ஒரு வடிவமைப்புமில்லாதவள். எல்லாவற்றுடன் இணைந்திருப்பவளாயினும் யாராலும் எங்கும் அறியமுடியாதவள்.

महानन्दाऽप्यनानन्दा मातापितृविवर्जिता।
मादृश्यस्तनयास्तस्याः सन्ति संख्याविवर्जिताः॥ १११॥
यथा तरंगा जलधेरसंख्याः सोदरीगणः।
सर्वास्ता मत्समाचारा राजपुत्र भवन्ति वै॥ ११२॥

பேரானந்தம் படைத்தவளாயினும் ஆனந்தமற்றவள். தாய் தந்தையற்றவள். என்னைப்போன்ற எண்ணற்ற பெண்கள் அவளுக்கு உண்டு. கடலில் அலைகள்போல் எண்ணற்ற என் சகோதரிக் கூட்டம். எல்லோரும் என்னைப்போன்ற நடைமுறையுள்ளவர்கள்.

महामन्त्रवती चाहं सर्वैरेतैः सखीगणैः।
संगता तत्परा चापि मातृतुल्या स्वरूपतः॥ ११३॥

மஹா மந்திரசக்தி கொண்டவளானதால் நான் இந்தத் தோழிக் கூட்டத்துடன் சேர்ந்து அவர்களுடைய யோக க்ஷேமத்திலேயே ஈடுபட்டவளாயினும் நான் தாயைப் போன்று தோஷமற்றவள். (மஹாஸதீ – மிக நல்லவள்.)

*ஹேமசூடை தனது புதிர்க்கதையில் தனது தாயாகக் குறிப்பிட்ட சுத்த சித்சக்தி பற்றி விளக்குகிறாள். புத்தி மனம் போன்றவற்றுடன் சேர்க்கை பெற்றாலும் ஜீவன் நிர்மலன் என்பது எப்படி என்று ஐயம் எழும். ஜீவன் சுத்தசித்சக்தியின் அம்சமானதால் ஜீவனது நிர்மலத்தன்மை பாதிப்புற வில்லை என நிரூபிக்கிறார்.*

*ஜீவனின் மூலகாரணமான தாய் சுத்த சித்சக்தி. மஹாஸதீ முக்காலும் எங்கு நிலைத்த ஸத்ஸ்வரூபமாயுள்ள்வள். கலப்பற்றிருப்பதால் சுத்தமான வள். அஜ்ஞானம் முதலியவற்றால் மறைவுறாதபடியால் அப்பழுக்கற்றவள். எல்லாவற்றிற்கும் காரணமானபடியால் எங்கும் ஆகாயம்போல் நீக்கமற நிறைந்திருப்பவள். பரமாணுவின் உள்ளும் பரவிநிற்பதால் அதி ஸூக்ஷ்மமானவள். பேரறிவுவடிவினள். அதில் பார்ப்பவன். பார்வை,*

*பார்க்கப்பெறுவது என்ற திரிபுடி கிடையாது. இந்த திரிபுடியிருந்தால்தான் இதனை அறிந்தவன், அதனை அறிந்தவன், எல்லாம் அறிந்தவன் என்று பகுத்துக் கூறமுடியும். அது இது எல்லாம் என்ற பாகுபாடற்ற பூர்ண ஞான நிலையில் ஸர்வஜ்ஞா என்பதும் பொருந்தாது.*

*தோன்றுமனைத்தும் குறிப்பிட்ட ஓரிடத்தில் மட்டும் இருப்பவை. அவள் எங்கும் இருப்பவள். அப்போது தோன்றுவதனைத்தும் அவளிடத்தில் தான் தோன்றியிருக்கவேண்டும். அதனால் எல்லாவற்றிற்கும் அவள்தான் ஆதாரம். ஆனால் அவளைக் காட்டிலும் வேறுபட்டதொன்றிருந்தால் அதனை இவள் தாங்குகிறாள் என்று கூற இயலும். இவளைக்காட்டிலும் வேறொன்றில்லையே. அதனால் அவள் எதற்கும் ஆதாரமாயிருப்பதென்பது இயலாது. ஆசிரயம் என்பது உட்கார்பவனுக்குச் சாய்வதற்கு இடமளிக்கும் சுவர்போல், குடியிருக்க வீடுபோல் உதவுவது. எல்லாவற்றிற்கும் அவள் ஆசிரயம். ஆனால் அவளைத் தவிர வேறொன்றில்லாததால் அவள் எதற்கும் ஆசிரயமும் ஆகவில்லை.*

*எல்லாபொருளும் கண்ணாடியில் பிரதிபிம்பமாகத் தோன்றுவதால் அவற்றிற்குக் கண்ணாடி ஆதாரமும் ஆசிரயமுமாகும். தோன்றும் பலவடிவங்களும் கண்ணாடியின் வடிவங்களே. ஆனால் அவையனைத்தும் கண்ணாடியைத்தவிர வேறுபட்டதல்ல. அதனால் ஆதாரம், ஆசிரயம், உருவம், சேர்க்கை முதலியவை தோற்ற அளவில்தான் உண்மை. எங்கும் பற்பல வடிவங்களில் தோன்றுவதால் அவளைப் புலப்படுகிறவளாகக் கொள்ள முடியுமோ? முடியாது. அவள் புலப்படுவதில்லை. அவள் பேரானந்த வடிவினள். ஆனால் நாம் ஆனந்தமெனக் கொள்வது ஆனந்தத்தை அனுபவிப்பவனைக் காட்டிலும் வேறுபட்டதெனவும் அவனால் அடையத்தக்கதெனவும் பிரித்துப் பார்க்கக் கூடியதாகும். அங்கு அனுபவிப்பவன், அனுபவம் என்ற வேறுபாடு இல்லாமையால் ஆனந்தம் என்ற நிலையாகக்கொள்ளவும் முடியாது. அவள் நித்தியமானவள். அதனால் தோற்றுவாயான பெற்றோர் இல்லை.*

*ஜீவசித்சக்திக்கு ஜீவசித்சக்திகள் ஸஹோதரிகள் பலர் உண்டு. எல்லாம் கடலின் அலைபோல் தனித்த தோற்றமுள்ளவை. உண்மையில் கடலைவிட்டு அலை வேறு ஒரு பொருளில்லை. அது போல எண்ணற்ற ஜீவசித்சக்திகளும் மஹா சுத்தசித்சக்தியைக் காட்டிலும் வேறுபட்டவை அல்ல. அதனால் அந்த சுத்தசித்தின் தன்மையான அப்பழுக்கற்ற நிலை ஜீவசித்சக்தியிலும் பரவி நிற்பதால் புத்தி மனம் முதலியவற்றால் பாதிப்புறவில்லை. ஜீவனும் மாயாசக்தி படைத்தவன், அதுவே மந்திரசக்தி. அதனால் ஜீவனிடத்தில்*

*பொருந்தாத ஸம்ஸார பந்தம் அதனிடமுள்ளதாகத் தோன்றுகிறது.*

अस्मिन् पुरे सखीपुत्रः यदा श्रान्तो भवत्यलम्।
तदा मातुः समुत्संगेऽस्थिरः शेते सुनिर्भरम्॥ ११४॥
अस्थिरस्तु यदा सुप्तः तदा तस्य सुतादयः।
स्वापं समधिगच्छन्ति नान्यो जागर्ति कश्चन॥ ११५॥

இந்த நகரில் என் தோழியின் புதல்வனான அஸ்திரன் எப்போது களைப்புறுகிறனோ, அப்போது, தாயின் மடியில் நிம்மதியாகத் தூங்குகிறான். அஸ்திரன் தூங்கியதும் அவனது புதல்வர்களும் தூங்கிவிடுகின்றனர். யாரும் விழித்திருப்பதில்லை.

तदा तद्रक्षति पुरमस्थिरस्य प्रियः सखा।
प्रचाराख्यः प्रतिचरन् पूर्वद्वारयुगे मुहुः॥ ११६॥
अस्थिरस्यापि या माता सखी मे तनयेन सा।
तस्याः सखी च या श्वश्रूरसती च स्वभावतः॥ ११७॥
सा समाच्छाद्य तान् सर्वान् पुत्रेण सह रक्षति।

அந்த நிலையில் அஸ்திரனின் நண்பன் பிரசாரன் என்பவன் முன்பக்கத்திலுள்ள இரு வாயில்கள் வழியே இடைவிடாமல் போக்குவரத்து உள்ளவனாக அவனைக் காக்கிறான். அஸ்திரனது தாயும் என் தோழியும் தூங்கிவிடுவாள். அவளையும் சேர்ந்து அஸ்திரனது மாமியாரான சூன்யா என்பவள், எல்லோரையும் போர்த்திப் பாதுகாத்து வருவாள்.

*பெருந்தீனிக்காரியான மஹாசனா என்ற மனைவியின் ஆசையை நிறைவேற்றி ஓடியாடிக் களைத்த மனம் புத்தியின் அணைப்பில் அடங்கிவிடும். அதனையொட்டிப் பொறிகளும் அடங்கிவிடும். இதுவே தூக்கம். அப்போது பிராணவாயு மூக்கின் வழியே உட்சென்று வெளியாகி உயிர் இருப்பதன் அடையாளமாகிப் பாதுகாக்கிறது. அந்நிலையில் புத்தியும் சூன்யம்– அவித்யை என்ற மறைப்பில் அடங்கிவிடும். இது தூக்கம் – ஸுஷுப்தி என்ற சூன்ய நிலை, மறைப்பு நிலை, மோஹம் – அறியாமை, ஒன்றும் உணராமை. இதுவே ஆழ்ந்த தூக்கத்தின் (ஸுஷுப்தியின்) அடையாளம்.*

एवं सर्वेषु सुप्तेषु प्राप्य स्वां मातरं तदा॥ ११८॥
आनन्दिताऽहं भवामि मायाश्लिष्टा चिरं ननु।

पुनस्तान् उत्थितान् शीघ्रमनुसंयामि चान्वहम् ।। ११६ ।।

இப்படித் தன் தாயை அடைந்து எல்லோரும் தூங்கிக்கொண்டிருக்கையில் நானும் என் தாயால் அணைக்கப்பெற்றவளாக ஆனந்தமடைந்தவளாகிறேன். மறுபடி அவர்கள் துயில் எழுந்ததும் அவர்களை நான் தினமும் பின் தொடர்கிறேன்.

*ஆழ்ந்த தூக்கம் ஏற்படும்போது புத்திவரை உள்ளதனைத்தும் அஜ்ஞானத்தினுள் அடங்கிவிடுகின்றன. ஜீவனும் பரசித் சக்தியால் அணைக்கப்பெற்றுச் சித் சக்தியின் ஆனந்த வடிவினைப் பெற்று ஆனந்தத்தில் மூழ்கிவிடுகிறான். மறுபடி விழிப்பு ஏற்பட்டதும் ஜீவனின் ஆனந்த நிலையிலிருந்தும் விடுபட்டு, சரீரம் பொறிகள் மனம் புத்தி இவர்களைத் தொடர்வதால் இவர்களுடன் ஒன்றித் தன்னிலை மறந்துவிடுகிறான்.*

अस्थिरस्य सखा योऽयं प्रचाराख्यो महाबलः ।
स सर्वानस्थिरमुखान् पोषयत्यनुवासरम् ।। १२० ।।
स एको बहुधा भूत्वा पुरं च पुरवासिनः ।
व्याप्य रक्षत्यनुदिनं सर्वान् संश्लेषयत्यपि ।। १२१ ।।
तं विना ते हि विश्लिष्टा नष्टाःस्युरपि सर्वथा ।
सूत्रेण हीना मणयो मालाबघ्दा यथा पृथक् ।। १२२ ।।

அஸ்திரனது நண்பன் பிரசாரன் மிகவும் பலமுள்ளவன். அவன் அஸ்திரன் முதலான அனைவரையும் தினமும் போஷிக்கிறான். அவன் ஒருவனே பல உருவங்களில் இருந்துகொண்டு அந்த நகரையும் நகரவாசிகளையும் காப்பாற்றுகிறான். எப்போதும் எங்கும் பரவிநின்று எல்லாவற்றையும் அதது விரும்பும் பொருள்களுடன் இணைத்து வைக்கிறான். நூலால் மாலையாக இணைக்கப்பெற்ற ரத்தினமணிகள் நூலைவிட்டுப் பிரிந்த நிலையில் தனித்தனியாக உதிர்ந்து வீணாகி விடுவதைப்போல் அவனின்றி அனைத்தும் கலகலத்து இணைப்பின்றி உருவிழந்துவிடும்.

स एवं मां च संगम्य सर्वैः संयोजयन् परम् ।
मया संजीवितोऽत्यन्तं सूत्रधारो हि तत्पुरे ।। १२३ ।।

அந்த பிரசாரன் என்னுடன் இணைந்து எல்லாவற்றுடன் என்னையும் இணைக்கிறான். அந்த நகரில் நாடகத்தில் ஸூத்ரதாரன் போன்று அவன்

துலங்குகிறான்.

जीर्णे च तत्पुरे चान्यत् पुरं तान् नयति द्रुतम्।
एवं प्रचारं संश्रित्य पुराणामधिपोऽभवत्॥ १२४॥
बहूनामस्थिरो नूनं विचित्राणां क्रमेण वै।

அந்த நகரம் இடிந்து மறையும்போது அவர்களை (அஸ்திரன் முதலானோரை) பிரசாரன் மற்றோர் ஊரில் விரைவில் கொண்டு சேர்க்கிறான். இப்படி அஸ்திரன் பிரசாரனைச் சார்ந்திருப்பதால் தொடர்ந்து பல விசித்திரமான நகரங்களுக்குத் தலைவனாக ஆனான்.

*புத்தி மனம் முதலியவற்றிற்கு உறுதுணையாக நிற்பது பிராணவாயு. (எப்போதும் சுற்றிக்கொண்டேயிருப்பதால் ப்ரசாரன்) இதன்மூலம் மனம் புத்தி பொறிகள் முதலியவை ஊட்டம் பெறுகின்றன. பிராணவாயு ஒன்றேயானாலும் அது செயலாற்றும் இடத்தையும் செயல்முறையையும் ஒட்டி பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் எனப் பல பெயர்கள், மனம் முதலியவற்றை ஒருங்கிணைத்துச் செயல்புரியச் செய்வது பிராணனே. பிராணனின்மூலம் கிடைக்கும் இணைப்பு இல்லாவிடில் அவை தனித்துப் பயனற்றுவிடும்.*

*இந்த உடல் தேய்ந்து பயனற்றுவிட்டாலும் திடீரென இதனைப்பிரிய நேரிட்டாலும் மற்றோர் உடலில் ஸூக்ஷ்ம சரீரத்தைக் கொண்டு சேர்த்து இயங்கவைப்பது பிராணனே. இதன் உதவியால்தான் ஸூக்ஷ்ம சரீரம் பல சரீரங்களின் தொடர்பைப் பெறுகிறது.*

सतीपुत्रोऽप्यस्थिरः स संश्रितोऽपि महाबलम्॥ १२५॥
मया च भावितोऽत्यन्तं सर्वथा दुःखभागभूत्।
चपलामहाशनाभ्यां पत्नीभ्यां सुसमागमात्॥ १२६॥
ज्वालामुखनिन्द्यवृत्ताभिधपुत्रयुगेन च।
अन्यैः पुत्रैः पञ्चभिः स सर्वत्राभिविकर्षितः॥ १२७॥
महाक्लेश परीतात्मा सुखलेशविवर्जितः।

ஸதியின் புத்திரனாயிருந்தும், பெருவலிவு பெற்றிருந்தும், எனது துணை பெற்றிருந்தும் எப்போதும் அஸ்திரன் துக்கமுள்ளவனாகவே இருந்தான். சபலா மஹாசனை என்ற இரு மனைவிகளின் சேர்க்கையாலும் ஜ்வாலா

முகன், நிந்த்யவிருத்தன் என்ற இரு குமாரர்களின் சேர்க்கையாலும் மற்ற ஐந்து பிள்ளைகளால் பலவாறு இழுக்கப் பட்டமையாலும் கிலேசம் மிக்கவனாகவும் சுகலேசமும் அற்றவனாகவும் இருந்தான்.

மனம் பற்பல எண்ணங்களால் நிலையற்று, வேண்டியது வேண்டாத தென்று பாகுபாடின்றிக் கிடைத்ததையெல்லாம் விரும்பி ஏற்று, கோபத்தாலும் உலோபித்தன்மையாலும் வாட்டப் பெற்று சுகமின்றி துக்கமொன்றையே கண்டது.

इतस्ततः क्वचित् पुत्रैः पञ्चभिः स विकर्षितः ।। १२८ ।।
क्वचिच्चपलयाऽत्यन्त चलितः खेदमेयिवान् ।
क्वचिन्महाशनाहेतोरशनार्थं प्रधावति ।। १२६ ।।
क्वचित् ज्वालामुखाक्षिप्तो निर्दग्धापादमस्तकः ।
महामूर्च्छां समायाति चाविदंस्तत्प्रतिक्रियाम् ।। १३० ।।

அஸ்திரன் இங்குமங்குமா ஐந்து பிள்ளைகளால் அலைக்கழிக்கப் பெற்றான். ஒரிடத்தில் சப ா என்ற மனைவியால் அலைக்கழிக்கப்பட்டு வாடினான். ஒரிடத்தில் ம றாசனாவிற்காக உணவு தேடுவதற்கு ஒடுவான், ஒரிடத்தில் ஜ்வாலாமுகனால் இழுக்கப்பெற்று கால் முதல் தலைவரை எரிக்கப்பெற்று அந்தத் தாபத்தைப் போக்க வழியறியாமல் மயக்கமுற்றான்.

निन्द्यवृत्तं क्वचित्प्राप्य गर्हितो भर्त्सितः परैः ।
मृततुल्यं स्वमात्मानं मन्यते शोकसन्ततः ।। १३१ ।।

நிந்தியவிருத்தனது இடத்தை அடைந்து பலரால் அவமதிக்கப்பெற்றவனாகவும் மிரட்டப்பட்டவனாகவும் சோக மிகுதியால் நடைப்பிணமாகத் தான் ஆனதை உணர்ந்தான்.

*ஐந்து பொறிகள் மனத்தை அலைக்கழிக்கின்றன. சபலம் ஒருபுறம், ஆசையை நிறைவேற்றும் வெறியில் ஏற்பட்ட பேராசை ஒருபுறம். இவைகளின் பின் விளைவாக வந்த கோபம். லோபம் ஒருபுறம் வாட்ட, மனிதன் பலரது அவதூறுக்கு ஆட்பட்டு நடைப்பிணமாகிறான்.*

दुष्पत्नीपुत्रसहितो मोहितो दुष्कुलोद्भवः ।
पत्नीपुत्रैः समाक्रान्तः नीयमानस्तु तैः सदा ।। १३२ ।।
उवास तैर्विचित्रेषु पुरेषूच्चावचेषु हि ।

क्वचित्कान्तारकीर्णेषु क्रव्यादकुलभूमिषु ।। १३३ ।।
क्वचिदत्यन्ततप्तेषु क्वचित् शीतजडेषु च ।
क्वचित् पूतिवहास्थेषु क्वचित् गाढतमस्सु च ।। १३४ ।।

அஸ்திரன் கெட்டமனைவியாலும், கெட்ட பிள்ளைகளாலும் கெட்ட சுற்றத்தாலும் சூழப்பட்டு, அவர்களால் எப்போதும் அலைக்கழிக்கப்பட்டு, அந்தந்த விசித்திரமான ஏற்றத் தாழ்வுள்ள பல நகரங்களில் வசித்தான். இவற்றில் சில காடுகளால் சூழப்பெற்றவை. சில கொடும் விலங்கினங்கள் தங்குமிடம். சில மிகுந்த வெப்பமுள்ளவை. சில மிகுந்த குளிரால் உணர்விழக்கச் செய்பவை. சில கெட்ட நாற்றமுள்ள நீரோட்டத்தின் அருகில் இருப்பவை. சில கடும் இருள் சூழ்ந்தவை. இப்படிப் பல நகரங்களில் (நரகங்களில்) வசிக்க நேர்ந்தது.

एवं भूयोऽतिदुःखेन दुःखिते तनयेऽस्थिरे ।
सखी च मे दुःखमूढाऽभवत् दुःसंगतः सदा ।। १३५ ।।
स्वभावसत्यपि मुधा तामन्वहमपि प्रिय ।
मूढेवात्यन्तमभवं तत्कुटुंबपरायणा ।। १३६ ।।

இப்படி அஸ்திரன் எனும் பிள்ளை மிகவும் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது என் தோழி ஸ்வபாவஸதீ (இயற்கையாக நல்லவளாயினும்) வீணாக துஷ்ட ஸஹவாஸத்தால் ஏற்பட்ட துக்கத்தால் மதிமயங்கி நின்றாள். அவளையொட்டி நானும் மதிமயக்கமுற்றவள் போலானேன். அவள் குடும்பத்தையே சார்ந்து நின்றேன்.

को हि दुःसंगतः सौख्यं प्राप्नुयात् लेशतः क्वचित् ।
गच्छन् मरुस्थले ग्रीष्मे तृष्णाशान्तिं यथा नरः ।। १३७ ।।

கெட்ட ஸஹவாஸத்தால் யாரேனும் சுகமடைந்ததுண்டா? பாலைவனத்தில் கோடையில் செல்லும் மனிதன் நாவரட்சி நீங்கப் பெறுவதுண்டா?

एवं चिरतरे काले संवृत्ते मम सा सखी ।
महिताऽत्यन्तखेदेन मया रहसि संगता ।। १३८ ।।
मदेकसंगात् युक्तिं सा प्राप्यासाद्य च सत्पतिम् ।
जित्वा स्वतनयं हत्वा बध्वा तत्तनयादिकम् ।। १३६ ।।
मया संगम्य मन्मातृपुरमासादयद् द्रुतम् ।

இப்படி நீண்டகாலம் கழிந்தது. என் அந்தத் தோழி மிகுந்த துக்கத்தால் மயங்கியவளாகத் தனித்து என்னிடம் வந்து சேர்ந்தாள். என்னுடன் மட்டும் தொடர்புகொண்டாள். அதனால் அவள் தனித்த செயல்திறனைப்பெற்று நல்ல கணவனைப் பெற்றாள். முன்பெற்ற தன் பிள்ளையை வென்று அவன் புதல்வர்களைக் கட்டி அடக்கி என்னுடன் கூடி என் தாயின் இருப்பிடத்தை விரைவில் அடைந்தாள்.

मन्मातरं परिष्वज्य मुहुर्मुहुरकल्मषा।
आनन्दार्णवनिर्मग्नस्वभावाऽभवदञ्जसा ।। १४०

என் தாயை அடிக்கடி அணைத்துக்கொண்டவளாக எல்லா பாபங்களும் நீங்கி ஆனந்தக்கடலில் ஆழ்ந்தவளானாள்.

एवं त्वमपि दुर्वृत्तं निगृह्य सखिसंभवम् ।। १४१ ।।
प्राप्य स्वमातरं नाथ सुखं नित्यं समाप्नुहि।
एतत्ते कथितं नाथ स्वानुभूतं सुखास्पदम् ।। १४२ ।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे सत्सङ्गमाहात्म्यं नाम पञ्चमोऽध्यायः

நாதரே! அதேபோல் நீங்களும் நண்பர்களின் கூட்டுறவால் ஏற்பட்ட கெட்ட நடவடிக்கைகளைக் கைவிட்டு உமது தாயை அடைந்து நித்யமான சுகத்தைப் பெறுவீராக! இது என் அனுபவத்தால் உணர்ந்தது. ஸுகத்தைத் தருவது. உமக்குக் கூறினேன்.

*பல பிறவிகளுக்குப் பிறகு எப்படியோ இறைவனின் அருளால் ஸம்ஸாரத் தொடரின் துக்க உணர்வு பற்றிய சிந்தை ஏற்பட்டு வைராக்கியம் உதித்தது. ஆத்மாவின் சுத்த சித் உருவம் மனத்தில் நிலைத்தது. மற்றவற்றில் தொடர்பு அறுந்தது. வைராக்கியத்தின் விளைவாக அஜ்ஞானம் என்ற கெட்ட கணவன் மறைந்தான். விவேகம் என்ற நல்ல கணவன் துணைவனானான். மனம் வசப்பட்டது. கோபமும் லோபமும் அழிந்தன. பொறிகள் வசப்பட்டன. ஆத்ம ஸாதனத்தில் முனைப்பு ஏற்பட்டு, பரசித்ஸ்வரூபமான பரம்பொருளுடன் இணைந்து தியானத்தாலும் ஸமாதியாலும் அடிக்கடி பிரும்மானுபவம் ஏற்பட்டது. பாசங்களும் பாபங்களும் பந்தங்களும் அகன்றன. தான் என்ற அபிமானம் அகன்றதால் துக்கத் தொடர்பு நீங்கித் தன் இயற்கை நிலையாகிய ஆனந்தானுபவமே உள்ளும் புறமும் சூழ்ந்து நின்றது. இதனை ஒவ்வொரு-*

*வரும் அடையலாம். அதனால் அரசகுமாரனும் அடையக்கூடியதே என ஹேமசூடை குறிப்பிடுகிறாள்.*

***திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் ஹேமசூடையின் கதையில் பந்தவரலாறு பற்றிய ஐந்தாம் அத்தியாயம்.***

## षष्ठोऽध्यायः

## ஆறாம் அத்தியாயம்

एवं प्रियावचः श्रुत्वा हेमचूडोऽतिविस्मितः।
हसन् पप्रच्छ तां कान्तां अविद्वान् विदुषीं तदा॥ १॥

இப்படித் தன் அன்புள்ள மனைவியின் வார்த்தையைக் கேட்டு மிகவும் வியப்புற்ற ஹேமசூடன் ஒன்றும் அறியப்பெறாதவனாக எல்லா மறிந்த தன் மனைவியிடம் சிரித்துக்கொண்டே கேட்டான்.

प्रिये प्रोक्तं यदेतत्ते खचित्रमिव भाति मे।
निरालंबं वचस्तेऽद्य जानाम्येतदशेषतः॥ २॥
नूनं त्वमप्सरोद्भूता ऋषिणा वर्धिता वने।
संस्पृष्टयौवनाऽद्यापि न तारुण्यमलं गता॥ ३॥
वक्ष्यस्यनेकसाहस्रवर्षाणामिव संस्थितिम्।
भूतग्रस्तोक्तिसदृशवचसा तेऽतिमात्रतः॥ ४॥
असन्दर्भेण किमहं विबुद्ध्यामि यथार्थतः।

பிரியே! இதுவரை கூறியதனைத்தும் ஆகாயத்தில் வரைந்த படம்போல் பிடிப்பில்லாத ஆதாரமற்ற பேச்சாகவே அறிகிறேன். நீ அப்ஸரஸின் பெண். ரிஷியால் காட்டில் வளர்க்கப் பெற்றவள். இன்னம் யௌவனம் உன்னிடம் உள்ளது. முழு முதிர்ச்சியும் அடையாதவள். இந்த நீ பல்லாயிர ஆண்டுகள் வாழ்ந்தது போலப் பேசுகிறாய். பேய் பிடித்தவள் பேச்சுபோல் அளவுக்குமீறிய பொருந்தாத பேச்சால் உண்மையாக எந்தப் பொருளை அறிவேன்?

वद ते सा सखी क्वास्ते बद्धश्च सखिपुत्रकः॥ ५॥
पुराणि तानि वा कुत्र संस्थितानि तदीरय।
अस्तु किं तेन वृत्तेन वद मे क्व च सा सखी॥ ६॥
सखीं न प्राप्तवान् मातुरहं तत्प्रविचारय।

आर्यास्ति मेऽवरोधे स्वे पितुर्मेऽन्या नहि प्रिया।। ७।।
सा वा सखी मे कुत्रास्ते तत्पुत्रो वा वद द्रुतम्।

அந்த உன் தோழி எங்கிருக்கிறாள்? சிறைப்பட்ட அந்த உன் தோழியின் புதல்வன் யார்? அந்த நகரங்கள் எங்கு உள்ளன? அதனைச் சொல். அல்லது அந்தக்கதை இருக்கட்டும். அந்தத் தோழி எங்கு உள்ளாள்? என் தாய்க்கும் தோழி ஒருவளை நான் கண்டதில்லை. அதனையும் விசாரித்துப்பார். என் தாய் அந்தப்புரத்தில் இருக்கிறாள். என் தந்தைக்கு வேறு மனைவி கிடையாது. எனக்கும் தோழியோ தோழியின் பிள்ளையோ இல்லை. சீக்கிரம் சொல்.

मन्येऽहं ते वचो लोके वन्ध्यापुत्रसमाश्रयम्।। ८।।
यथाऽह कश्चिन्नटिको विदूषकवचोविधौ।
वन्ध्यापुत्रः समारूढः प्रतिबिंबमहारथम्।। ९।।
शुक्त्यारोपितहैरण्यभूषणैर्भूषितांगकः।
आयुधैर्नरशृङ्गोत्थैः युध्वा गगनकानने।। १०।।
हत्वा भविष्यद्राजानं जित्वा गन्धर्वपत्तनम्।
मरीचिस्रोतसि स्वप्नकामिनीभिः सह खेलति।। ११।।
तथा तव वचो मन्ये सर्वथाऽसंगतं ननु।

உன் பேச்சு உலகில் மலடி பிள்ளை பற்றிய கதைபோல் உள்ளது. ஒரு நடிகன் விதூஷகன் பேசுவதுபோல் கதை சொன்னான். "மலடியின் பிள்ளை. பிரதிபிம்பமாகிய பெருந்தேரில் ஏறினான். சிப்பியில் பார்வை தோஷத்தால் தோன்றும் தங்கத்தாலான அணிகளால் தன் உடலை அலங்கரித்துக் கொண்டான். மனிதக் கொம்பாலான ஆயுதம் தரித்து ஆகாயக் காட்டில் போர் புரிந்து, இனித் தோன்றவிருக்கும் அரசனைக்கொன்று, ஆகாயக் கோட்டையை வென்று, கானல் நீரில் கனவுக்கன்னிகளுடன் விளையாடுகிறான்" என. அதுபோல் எவ்வகையிலும் உன் பேச்சு பொருந்தாமல் உள்ளது.

श्रुत्वैवं प्रियवाक्यं सा चतुरा प्राह तं पुनः।। १२।।
नाथ प्रोक्तं मया यत्ते तत्कथं स्यादपार्थकम्।
न मादृशानां वचनं निरालंबं क्वचिद्भवेत्।। १३।।

मृषा हि तपसां हन्त्री सत्यशीलेषु सा कुतः।
तपस्विनां कुले कस्मात् श्वित्रे सौन्दर्यवत् भवेत्॥ १४॥

இப்படிக் கணவனின் பேச்சைக்கேட்ட அந்தத் திறமையுள்ளவள் அவனிடம் மறுபடியும் கூறினாள். "நாதரே" ! நான் கூறியதனைத்தும் எப்படிப் பொருளற்றதாகும்"? என் போன்றவளின் வார்த்தை ஆதாரமற்றதாக எந்நிலையிலும் ஆகாது. பொய் தவத்தை அழித்துவிடும். ஸத்தியத்தையே வாழ்க்கை முறையாகக் கொண்ட தவம் புரிபவர்களின் குலத்தில் பொய்க்கு இடமேது? வெண் குஷ்டத்தில் அழகுக்கு இடமேது?

यो योजयति जिज्ञासुमन्यार्थेन ह्यसत्यतः।
तस्य नोर्ध्वं न चाधस्तात् लोकोऽस्ति सुखसाधनम्॥ १५॥
शृणु राजसुतोक्तिं मे लोके तैमिरिकः क्वचित्।
समदृष्टिं नैति शीघ्रमञ्जनानां वचोगणैः॥ १६॥
असत्यमेव जानाति हितप्रोक्तं च मूढधीः।
तत्त्वां प्रियाहं जिज्ञासुमसत्यैर्योजयामि किम्॥ १७॥

தத்துவமறிய ஆவலுடன் உள்ளவனிடம் பொய்யான அர்த்தமற்ற போதனை புரிபவனுக்கு மேல்உலகமும் இவ்வுலகமும் கீழுலகமும் சுகவாழ்வு தராது. அரசகுமாரரே! என் பேச்சைக் கேளும். கண்ணில் திமிரநோய் (திரைபோல் பார்வையை மறைக்கும் நோய்) ஏற்பட்டவன் எங்கும் பார்ப்பவற்றின் உண்மையான தோற்றத்தைப் பார்க்கமாட்டான். கண்ணிற்கு அஞ்சனமிட்டாலும் அதே நிலைதான். (அது அஞ்சனத்தின் குறையல்ல) அதேபோல் ஆப்தர்களான நல்லோரால் கூறப்பட்டதாயினும் மூடன் பொய்யானதையே அறிவான். ஆனால் நான் தங்களிடத்தில் பிரியமுள்ளவள். நீங்களும் அறிய ஆவல் கொண்டவர். தங்களிடம் பொய்யானவற்றைக் கூறுவேனா?

अप्यसत्यं मयोक्तं यत्तद्विमर्शय सद्धिया।
लोके हि कुशलो मर्त्यः सर्वव्यवहृतौ ननु॥ १८॥
परीक्ष्यैकांशतः सर्वामभिजानाति संस्थितिम्।
निदर्शनं प्रदास्यामि तुभ्यमत्र समीक्षय॥ १९॥

ஒருக்கால் நான் கூறியதே மெய்யல்லாதது என்றால் அதனை நல்ல புத்திகொண்டு விளக்கிப் பார்ப்பீர். உலகில் மற்ற எல்லா உலக

நடவடிக்கைகளிலும் தேர்ந்த மனிதன் ஒன்றை ஓரம்சத்தில் பரீக்ஷித்துப் பார்த்து முழு நிலையை அறிய முடியும். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு கூறுகிறேன். சிந்தித்துப்பாரும்.

यः पुरा विषयः सर्वो बभूवाभीष्टसाधनम्।
चिरान्मद्वचनात् सोऽद्य कुतो न सुखसाधनम्॥ २०॥
स एवाद्य साधयति सुखमन्येषु वै कुतः।
एतन्निदर्शनेनैव स्वमतं वेत्तुमर्हसि॥ २१॥

எந்தப் பொருள் முன்னர் விரும்பிய சுகத்தை நிறைவேற்றுவதாக இருந்ததோ, அது இன்று நான் கூறுவதனால் சுகம் தருவதாக ஆகாதோ? கட்டாயம் அது சுகம் தருவதாகும். மற்றவற்றிலும் இந்த முறையையே பின்பற்றித் தன் கருத்தை உருவாக்கிக்கொள்ளவேண்டும்.

ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம். இதுவரை நான் கூறிவந்தது உண்மையானால் இப்போது கூறுவதும் உண்மையாகத்தானிருக்கமுடியும். ஒரு பொருளின் உண்மை நிலையை மனிதன் பரிசோதித்து அறியமுடியும். அப்படி உண்மையென அறிந்த ஒன்று இன்னார் கூறியதனால் பொய்யாகும் என நினைப்பதும் தவறே. ஒருவருடைய சொல்லால் உண்மையைப் பொய்யாகவோ, பொய்யை உண்மையாக்கவோ முடியாது. "ஹேமலேகை கூறியதால் இது மெய்" என்று கொள்ளுதல் சரியல்ல.

शृणु राजन् यद्ब्रवीमि ऋज्व्या निर्मलया धिया।
अनाश्वासो रिपुर्लोके भवेदाप्तोक्तिषु स्थिरः॥ २२॥
श्रद्धा माता प्रपन्नं सा वत्सलेव सुतं सदा।
रक्षति प्रौढभीतिभ्यः सर्वथा न हि संशयः॥ २३॥
आप्तेष्वश्रध्दिनं मूढं जहाति श्रीः सुखं यशः।
स भवेत् सर्वतो हीनः यः श्रध्दारहितो नरः॥ २४॥

நேர்மையான அப்பழுக்கற்ற எண்ணத்துடன் கூறுகிறேன். உலகில் ஆப்தர்களின் சொல்லில் திடமான நம்பிக்கையின்மை கேடு தரும். நம்பிக்கை தாய்போல் தன்னை அண்டினவனைப் பிள்ளையைப் போல் எப்போதும் காப்பாற்றும். பெரும் பயத்திலிருந்தும் எப்போதும் காப்பாற்றும். ஐயமில்லை. ஆப்தர்களிடத்தில் நம்பிக்கை இல்லாத மூடனைவிட்டுச் செல்வமும் சுகமும் புகழும் விலகும். நம்பிக்கையற்ற மனிதன் எல்லாவற்றையும் இழப்பான்.

ஆப்தன் – உண்மையைக் கூறுபவன், இடம் பொருள் ஏவலுக்கேற்றபடி மாறிமாறி நடக்காதவன், நேர்மையுள்ளவன், தன்னிடம் உதவிதேடி வருபவரிடம் பரிவுடன் நடப்பவன். உண்மையாக நடப்பவன்,

श्रद्धा हि जगतां धात्री श्रद्धा सर्वस्य जीवनम्।
अश्रद्धो मातृविषये बालो जीवेत् कथं वद॥ २५॥
अश्रद्धस्तरुणः पत्न्यां कथं स सुखमेधते।
तथाऽपत्येषु स्थविरः कथमीयात्सतीं गतिम्॥ २६॥
अश्रद्धो वा भुवं कस्मात् विकर्षेत् कर्षकः किल।

நம்பிக்கை மக்களை வளர்க்கும் அன்னை. எல்லோருக்கும் வாழ்வளிக்கும் சாதனம். சிசுவாயிருக்கும்போது தாயிடத்தில் நம்பிக்கையின்றி உயிர்வாழ்வது எப்படி? யுவனாயிருக்கும்போது மனைவியிடத்தில் நம்பிக்கை இல்லாதவன் சுகம் எப்படிப்பெறுவான்? வயது முதிர்ந்தவனானபோது தான் பெற்ற பிள்ளைகளிடத்தில் நம்பிக்கை இல்லாதவன் நற்கதி எப்படி அடைவான்? நம்பிக்கையின்றி உழவன் பூமியை எப்படி உழுவான்?

न प्रवृत्तिर्भवेत्क्वापि त्यागे वा संग्रहेऽपि वा॥ २७॥
श्रद्धावैधुर्ययोगेन विनश्येज्जगतां स्थितिः।

நம்பிக்கையின்றிப் பொருளைத் தியாகம் செய்யவோ, சேர்க்கவோ முனையமாட்டான். நம்பிக்கை இல்லாவிடில் உலகத்தின் நிலைப்பு அழிந்துவிடும்.

एकान्तग्रहणात् लोकप्रवृत्तिरिति चेच्छृणु॥ २८॥
एकान्ताग्रहणे वापि श्रद्धा कस्मात्प्रतिष्ठिता।
तत्राप्येकान्तशरणः श्रद्धाशरण एव हि॥ २९॥
तस्मात् श्रद्धामृते लोकेऽवसीदेदश्वसन् ध्रुवम्।
तस्मात् श्रद्धां दृढां प्राप्य सुखमात्यन्तिकं व्रज॥ ३०॥

"இதனால் அது ஏற்படுகிறது. இது இல்லாவிடில் அது ஏற்படாது" என்ற காரிய காரணத் தொடர்பை புரிந்துகொள்வதால் மனிதன் செயலில் ஈடுபடுகிறான். அப்போது (இதனைச் செய்தால் அது ஏற்படும் என்ற) காரிய காரணத் தொடர்புபற்றிய அறிவிருப்பவனுக்கு நம்பிக்கை எதற்கு? என்ற சந்தேகம் வரலாம். நான் கூறுகிறேன் கேளும். காரிய காரணத் தொடர்பு

பற்றிய அறிவிற்கே நம்பிக்கை மூலம். நம்பிக்கையின்மையால் உலகம் அழியும். அதனால் திட நம்பிக்கைகொண்டு நிலைத்த சுகத்தை பெறுவீராக.

பயறு போட்டால் பயற்றஞ்செடி முளைக்கிறது. விதை விதைத்தால் செடி முளைக்கிறது. இப்படி காரிய காரணத் தொடர்பு பற்றிய அனுபவமே செயலாற்றத் தூண்டுகிறது. இங்கு நம்பிக்கைக்கு ஏது இடம்? இதற்கு என்ன அவசியம்? என்ற ஐயத்திற்கு ஹேம லேகையின் பதில் – விதை விதைத்து வெகுநாட்களுக்குப் பிறகு அது முளைக்கிறது. அது முளைக்கும் என்ற நம்பிக்கை இல்லாதவன் விதை விதைப்பானா?

श्रद्धाऽवरे न कार्येति मन्यसे यदि चेत् शृणु।
इयं च श्रद्धयैवास्ते प्रवृत्तिर्नृपतेः सुत॥ ३१॥
तत्कथं ते प्रवृत्तिः स्यादिति श्रुत्वा प्रियावचः।
हेमचूडः पुनः प्राह प्रियां कुशलभाषिणीम्॥ ३२॥

(உயர்ந்தவனது சொல்லில் நம்பிக்கை கொள்ளலாம்) தன்னை விடத் தாழ்ந்தவனிடத்தில் (மனைவி, பிள்ளை முதலானோரிடத்தில்) நம்பிக்கை அவசியமில்லை என்று நினைப்பீரேயாகில் ஒன்று கூறுவேன். தாழ்ந்தவனிடத்தில் நம்பிக்கை கொள்ளக்கூடாது என்பதும், நம்பிக்கையால் விளைவதே. நம்பிக்கையின்றி செயலாற்றுவது எங்ஙனம்? இவ்வாறு திறமையுடன் விளக்கும் மனைவியைப் பார்த்து ஹேமசூடன் கூறினான்.

नूनं प्रिये सर्वथैव श्रद्धातव्यं यदा भवेत्।
श्रद्धा सत्सु विधातव्या यया श्रेयः समाप्नुयात्॥ ३३॥
असत्सु नो विधातव्या श्रद्धा श्रेयोऽभिवाञ्छिना।
अन्यथाऽन्तः सुनिशिते कुटिले बडिशे यथा॥ ३४॥
बहिः समे सुपिष्टेन मीनानां नाशमाप्नुयात्।

எங்கும் நம்பிக்கை தேவையானால் நல்லோர்களிடத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும். அதனால் நன்மை பெறலாம். நன்மையை விரும்புபவன் நல்லோரல்லாதவரிடத்தில் நம்பிக்கைவைக்கக்கூடாது. அதனால் உள்ளே கூரான வளைந்த முள்ளிருக்கும்போது வெளித் தோற்றத்தில் மாப்பண்டத்தால் மூடி நல்ல பொருள்போன்றிருக்கும் தூண்டிலில் மீன்களுக்கு அழிவு ஏற்படுவதுபோல் நாசம் ஏற்படும்.

तस्मात्सत्स्वेव कर्तव्या श्रद्धा नासत्सु कुत्रचित्॥ ३५॥

असत्सु कृत्वा श्रद्धां ये नाशमीयुः परेऽपि च।
सत्सु श्रेयोयुजः श्रद्धावशतस्ते निदर्शनम्॥ ३६॥
अतः प्रतीत्यैव युक्ता कर्तुं श्रद्धा न चान्यथा।
तत् कथं ते प्रवृत्तिः स्यादिति प्रश्नः कथं तव॥ ३७॥

அதனால் நல்லோரிடத்தில் மட்டும் நம்பிக்கை வைக்கத்தக்கது. நல்லோரல்லாதவரிடத்தில் எங்கும் நம்பிக்கை கூடாது. நல்லோரல்லாதவரிடத்தில் நம்பிக்கையால் அழிபவரும், நல்லோரிடத்தில் நம்பிக்கையால் நன்மை பெறுபவரும் இந்த என் கூற்றுக்கு உதாரணம். அதனால் நல்லோரென நன்கு அறிந்த பின்னரே நம்பிக்கைவைக்கத் தக்கது. அதனால் நம்பிக்கையின்றி செயலாற்றுவது எங்ஙனம் என்ற கேள்வி எப்படி எழும்?

इत्युक्ता हेमलेखा सा पुनराह पतिं प्रियम्।
शृणु राजकुमारेदं प्रोच्यमानं मया वचः॥ ३८॥
यदात्थ त्वं कथं प्रश्न इति तत्र ब्रवीमि ते।

இப்படிக் கணவனால் கூறப்பட்ட ஹேமலேகை மறுபடித் தன் கணவனிடம் கூறினாள். "அரசகுமாரரே! நான் கூறுவதைக் கேளும். கேள்வி எப்படி எழும் என்று கேட்டீரல்லவா? அதற்கு விடை கூறுகிறேன்.

अयं सन् वा ह्यसन् वायमिति ते निश्चयः कुतः॥ ३९॥
सत्यस्मिन् निश्चये भूयाच्छुभं सच्छ्रद्धयेह वै।
सोऽपि लक्षणतः स्याच्चेत् श्रद्धा लक्षणसंगता॥ ४०॥

இவன் நல்லவன், இவன் கெட்டவன் என்ற நிச்சயம் எதனால் ஏற்படுகிறது? இந்த நிச்சயம் ஏற்பட்டபின் தானே நல்லவரிடத்தில் நம்பிக்கைகொள்ள இயலும்? அதனால் நன்மை ஏற்படும். நல்லவனுக்குரிய லக்ஷணங்களைக்கொண்டு நிச்சயிப்பதானால் அந்த லக்ஷணத்தை நம்பிக்கை எதிர்பார்க்கிறது என ஆகும்.

प्रमाणात् लक्षणज्ञानमिति चेत्तत्र संशृणु।
अश्रद्धस्य प्रमाणं किं भवेत्तत् सुनिरूप्यताम्॥ ४१॥
अन्यथा हि प्रमाता नो विसंवाद्येत कुत्रचित्।
तस्मात् श्रद्धां समाश्रित्य लोकः सर्वः प्रवर्तते॥ ४२॥

அந்த லக்ஷணங்களை அறிவது வேதம் முதலிய பிரமாண நூல்களின்மூலமாக. அப்போது நம்பிக்கையற்றவனுக்கு வேதம் முதலியவை எப்படிப் பிரமாணமாகும்? ஒன்றுக்கொன்று முரணான கருத்து. வேறுபாடின்றி நிர்ணயிக்கப்பட்டுள்ள விஷயங்களைக் கூறும்) பிரமாணங்களின் உதவியின்றி (நல்லது கெட்டதைத்) தீர்மானிப்பவன் கலக்கமுறாமலிருப்பது எங்ஙனம்? அதனால் நம்பிக்கையால்தான் மக்கள் அனைவரும் செயல்படுகின்றனர்.

நல்லது கெட்டது எது என அறிய வேதம் முதலிய நூல்கள் உதவும். வேத வாக்கியத்தில் நம்பிக்கை இன்றி நல்லது கெட்டது எது என நிர்ணயிக்கமுடியாது. நல்லதா கெட்டதா எனப் பகுத்தறிந்து செயல்படக்கூடாதா? வேத வாக்கியங்கள் எதற்கு? அவற்றை நம்புவது எதற்கு? என்ற கேள்வி எழும். பகுத்தறிவு எங்கும் பயன்படாது. உளி எல்லாவற்றையும் பிளந்துவிடும். கடின இரும்பாலானதால் அதற்கு வெட்டும் சக்தி இயற்கையாக அமைந்துள்ளது வாஸ்தவமே. ஆனால் அதே உளி வைரக் கல்லிடம் தன் பிளக்கும் சக்தியைக் காட்டமுடியாது. இங்கு பகுத்தறிவுமட்டும் பயன்தராது. பகுத்தறிவு பயன்படாத இடமும் உண்டு. அங்கு வேதம்போன்ற ஆப்தவாக்கியம் பிரமாணமாகிறது. அது எப்போதும் காலத்தாலோ தேசத்தாலோ மற்றதாலோ முரண்படுவதில்ல. அவற்றைப் பிரமாணமாக ஏற்பது நம்பிக்கையால் தான். இதனை மேலும் விளக்குகிறாள்.

तत्प्रकारं प्रवक्ष्यामि शृणु निश्चलचेतसा।
अनवस्थिततर्को वा ह्यतर्को वापि सर्वथा॥ ४३॥
श्रेयो न प्राप्नुयात् लोके इह वापि परत्र वा।
तत्र तर्कस्य कालेन भवेत् श्रेयः कदाचन॥ ४४॥
अनवस्थिततर्कस्य न श्रेयः स्यात्कथंचन।

நம்பிக்கை பலன்தருவதன் முறையை விளக்குகிறேன். சலனமற்ற மனத்துடன் கேளும். முடிவின்றி வீணாகப் பகுத்தறிய முற்படுபவனும் பகுத்தறிவே இல்லாதவனும் எப்போதும் இம்மையிலும், மறுமையிலும் நன்மைபெறமுடியாது. பகுத்தறிவே இல்லாதவனுக்கு (நம்பிக்கையால் மட்டும் செயல்புரிபவனுக்கு) வெகுநாட்களுக்குப் பிறகாவது பலன் கிட்டும். முடிவின்றி வீண் தர்க்கத்தால் பகுத்தறிய முற்படுபவனுக்கு ஒருநாளும் நன்மை கிட்டாது.

மனிதனுக்குப் பகுத்தறிவு அவசியமே. அது நம்பிக்கையின் அடிப்படையில் அமையவேண்டும். வரட்டு வாதத்திற்காகப் பகுத்தறிவைப் பயன்படுத்துவது தீமை தரும். பகுத்தறிவின்றிக்காட்டும் நம்பிக்கை மூடநம்பிக்கை ஆகும். அதுவும் பயன்தராது. மூடநம்பிக்கையால் செயல்முறையில் உள்ள குறைபாடுகளை உணர்ந்துதிருத்தியமைத்திச் செயல்பட வாய்ப்பில்லை. மூட நம்பிக்கையுள்ளவன் செயல்முறையைத் தீர யோசித்துத் தக்கமுறையில் செயல்படுவதைக் கைக்கொள்ளமாட்டான். அதனால் அவனுக்குப் பலன் ஏற்படாது. ஆனால் சிலசமயம் ஏதோ அதிருஷ்டவசத்தால் இவனது செயல்முறையும் சரியாக அமைந்துவிட்டால், பலன் கிட்டக்கூடும். நம்பிக்கையின்றி வரட்டுவாதத்தில் ஈடுபடுபவன் செயலில் ஈடுபடமாட்டான். வாதத்திலேயே அவன் மனம் செல்லும். செயலில் ஈடுபட நேர்ந்தாலும் இந்தமுறை நல்லதா கெட்டதா எனத் தடுமாற்றம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். முடிவை அவனால் நெருங்கமுடியாது. அதனால் நம்பிக்கையின் அடிப்படையில் பகுத்தறிந்து செயல்படுவது அவசியம் என்பதை இனி ஒரு கதைமூலம் நிரூபிக்கிறாள் ஹேமலேகை.

पुरा सह्यगिरौ गोदावरीतीरे हि कौशिकः ।। ४५ ।।
न्यवसत् शान्तसुमतिः ज्ञातलोकसतत्वकः ।
तस्य शिष्यास्तु शतशः स्थिता गुरुसमाश्रयात् ।। ४६ ।।

முன்னர் ஸஹ்ய மலையில் கோதாவரியின் கரையில் உலக தத்துவமறிந்தவரும் அடக்கமுள்ளவருமான கௌசிகர் வாழ்ந்து வந்தார். அவருக்கு நூற்றுக்கணக்கான சீடர்கள், குருவை அவர்கள் அண்டியிருந்தனர்.

त एकदा गुरुमनु गता लोकस्य संस्थितिम् ।
निर्णेतुं बुद्ध्यनुगुणं तदा प्रोचुः परस्परम् ।। ४७ ।।

ஒரு சமயம் அவர்கள் குருவின் பின்னரிருந்து (குருவின் நோக்கில் அகப்படாமல்) அவரவர் பகுத்தறிவிற்கேற்ப உலகநிலை பற்றி ஒருவருக்கொருவர் விவாதித்தனர்.

तत्राजगाम शुंगाख्यः विप्रः कश्चिन्महाबुधः ।
स सर्वेषां मतं प्रोक्तं दूषयन् बुद्धिलाघवात् ।। ४८ ।।
अश्रद्धया हतप्रज्ञो विवादनिपुणस्तदा ।
प्रमाणात् प्रमितं सत्यमित्युक्तेषु द्विजेष्वथ ।। ४६ ।।

अनवस्थिततर्को वै प्राह तर्कैकसंश्रयः।

शुंगाख्य आक्षिपन् सर्वान् तत्र वादकथान्तरे ॥ ५० ॥

அங்கு சுங்கர் என்ற அந்தணர் ஒருவர் வந்தார். அவர் மாபெரும் வித்வான். அவர் தம் வாதத் திறமையால் முன்கூறிய கருத்துக்களையெல்லாம் கண்டித்தார். நம்பிக்கையின்மையால் ஆழ்மனத்தின் செயலை அழித்துக்கொண்டவர். விவாதத்தில் நிபுணர். நல்ல பிரமாணங்களால் தெரிந்து எடுக்கப்பட்ட பொருளே ஸத்தியம் என மற்ற அந்தணர்கள் கூறி நிற்கும்போது சுங்கர் என்பவர் முடிவற்றவரட்டு வாதத்துடன் கூடியவராக வரட்டுத் தர்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு எல்லோரையும் தத்துவ வாதப் பேச்சுகளினிடையே எதிர்த்துப் பேசினார்.

विप्राः शृणुध्वं मद्वाक्यं सत्यं न क्वापि सिध्यति।
प्रमितं यत् प्रमाणेन तत्सत्यमिति हीरितम् ॥ ५१ ॥
तत्र तेन दोषयुजा भवेदप्रमितं ननु।
निश्चेतव्या ततस्त्वादौ प्रमाणानामदुष्टता ॥ ५२ ॥
सा प्रमाणान्तरकृता तत्राप्येवं विचिन्त्यताम्।
इत्येवमनवस्थानात् न किञ्चित्प्रमितं भवेत् ॥ ५३ ॥

அந்தணர்களே! எனது சொல்லைக் கேளுங்கள். ஸத்தியம் என்பது என்றும் பிரமாணங்களால் தேறாது. பிரமாணத்தால் நன்கு அறியப்பட்டாலல்லவா அது ஸத்தியம்? அந்தப் பிரமாணம் தோஷமுள்ளதாயின் அப்போது சரியாக அறிய இயலாது. அதனால் முதலில் பிரமாணங்கள் தோஷமில்லாதிருப்பதைக் கண்டறிய வேண்டும். அதனை அறிய வேறு பிரமாணங்கள் தேவை. அதற்கும் பிரமாணம் தேவை என்று முடிவுறாத சிக்கல் நிலை ஏற்படும். இதனைச் சிந்தியுங்கள். எதனையும் பிரமாணங்களால் அறிய முடியாமல் போகும்.

अतः प्रमाता प्रमितं प्रमाणं वा न सिध्यति।

तस्माच्छून्याश्रयो ह्येष विकल्पो विविधः स्थितः ॥ ५४ ॥

सोऽपि शून्यात्मतां प्राप्तः प्रमाणाविषयत्वतः।

तस्माच्छून्यं, न किञ्चित् सत् इत्येव प्रविनिर्णयः ॥ ५५ ॥

அதனால் அறிபவன், அறியப்பட்டது, அறிவதற்கு உதவிய பிரமாணம் என்ற மூன்றுமே தேறமாட்டாது. அதனால் (நான் இதனைக் கண்களால்

பார்க்கிறேன் என்றவாறு)பலவாறாக உள்ள எல்லா அறிவும் பிரமாணத்திற்கு விஷயமாகாமையால் சூன்யத்தை ஆதாரமாகக்கொண்டு நிற்கின்றன. அந்த சூன்யமும் ஒரு பொருளல்ல – எதனாலும் அறிய முடியாமையால். அதனால் ஸத் என ஒன்று இல்லை என்றே தேறுகிறது.

*பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற பிரமாணங்களைக் கொண்டு ஒன்றை அறிகிறோம். கண்ணால் ஒன்றைப் பார்க்கிறோம். அது `ஸத் ' ஆகும். பிரத்யக்ஷப் பிரமாணத்தால் தேறியது அது. மலைமேல் புகை தெரிகிறது. நெருப்பு நம் கண்ணில் படவில்லை. ஆயினும் புகையிருப்பதால் நெருப்பு இருப்பதாக அனுமானம் செய்கிறோம். இந்த அறிவு அனுமானத்தால் தேறியது. வெளிநாடுகள் பற்றி நாம் நேரில் கண்டறிய முடியாதிருந்தாலும் பத்திரிகைகள் ஆப்தர்களின் வசனம் முதலியவற்றால் அதன் இருக்கையை உணர்கிறோம். இது சப்தப் பிரமாணத்தால் தேறியது. பிரத்யக்ஷமும் அனுமானமும் சப்தமும் தவறானதாக இல்லாதிருக்க வேண்டும். அப்போது தான் ஸத்யமான ஞானம் ஏற்படும். இது பொதுவானது. ஸத்தியம் என ஒன்றைக் கண்டுகொள்ள தோஷமற்ற பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்கல் தேவை என்று தேறுகிறது. இதனை மற்ற சிஷ்யர்கள் வலியுறுத்தும்போது சுங்கன் இதனை தடலடியாக மறுத்துப் பேசுகிறான்.*

*ஸத்தியம் என்ற ஒன்றே கிடையாது. ஸத்தியமாக ஒன்றை அறியப் பிரமாணங்கள் தேவை அல்லவா? அவை தோஷமற்றதாக இருக்கவேண்டுமெ ல்லவா? அவை தோஷமற்றதென எப்படி அறிவது? தோஷமுள்ளதாக இருந்தால் அதனால் ஏற்படும் அறிவு ஸத்தியமல்லவே? நான் கண்களால் மானைப் பார்த்தேன். அது மானெனச் சொல்கிறேன். என் கண்களில் கோளாறிருந்து ஆட்டை மான் எனக் கண்டறிந்திருந்தால்? கண்களில் கோளாறில்லை என்பதை எதனைக் கொண்டு அறிவது? இதற்கு முன்னும் இப்போதும் மாட்டைக் கண்டு மாடு எனச் சரியாகக் கண்டதால் கூறுகிறேன் என்றால் நீ மாட்டைத்தான் மாடாகப் பார்த்தாய் என எப்படி நம்புவது? அவனும் அதனை மாடு என்றுதான் கூறுகிறான் என்றால், அவன் கண்களும் தோஷமுற்றிருந்தால்? இப்படிக் கண் முதலிய பிரமாணங்களால் பெற்ற ஒரு பொருள் பற்றிய அறிவைக் கொண்டு இது இதுதான் என நிர்ணயித்துக் கூற முடியாததாகையால் மானைக் கண்டு மான் என்று அறிவு பெற்றேன் எனக் கூற இயலாது. எதனையோ கண்டு மான் என அறிவு பெற்றிருக்கலாம். இந்த "எதனையோ" ஒரு சூன்யமானது. சூன்யம் என்றால் அப்படியாவது ஒரு பொருளா? சூன்யம் பொருளுமல்ல. திட்ட வட்டமாக அதனை அறிய*

*முடியாதாகையால் எல்லாமே சூன்யம்தான். அதனால் சூன்யம் பற்றிய அறிவும் சூன்யம்தான். ஸத் எனவும் ஸத்தியம் எனவும் எதனைக் கூறுவது? என்று விதண்டாவாதம் எழுப்புகிறான் சுங்கன்.*

इति शुंगवचः श्रुत्वा तेषु केचिद्द्विजाधमाः ।
तं श्रिता निश्चयाभासं बभूवुः शून्यवादिनः ॥ ५६ ॥
विनाशमीयुस्तन्निष्ठाः शून्यभावं परं गताः ।

இவ்வாறு சுங்கனின் வார்த்தையைக் கேட்டு அவர்களில் அறிவு வலிவுற்ற அந்தணர்கள் அவனது வழியைப் பின்பற்றி எல்லாம் சூன்யம், தானும் சூன்யம் என்ற போலித் தீர்மானத்தை அடைந்தவர்களாக, அதையே உண்மை எனப் பேசுபவர்களாக, அதிலேயே தீவிரமான ஈடுபாடு கொண்டவர்களாக, முடிவில் அறிவிலிகளாகச் சூன்ய நிலையை அடைந்து (செயல் புரியாமல் சோம்பி நின்று) அழிந்தார்கள்.

ये द्विजाः सारहृदयाः ते शुंगस्य प्रभाषितम् ॥ ५७ ॥
निरूप्य कौशिके तेन समाहितहृदोऽभवन् ।

அவர்களில் வலிவுள்ள இதயம் படைத்த அந்தணர்கள் சுங்கனின் பேச்சை (தங்கள் குருவான)கௌசிகரிடம் கூறி (அவரது விளக்கத்தைப் பெற்று) அதனால் ஸந்தேகம் நீங்கி அமைதி பெற்றனர்.

तस्मात्सर्वात्मना त्यक्त्वा तर्कं तमनवस्थितम् ॥ ५८ ॥
सदा सदागमायत्ततर्कः श्रेयः समाप्नुयात् ।

அதனால் முடிவுறாத வீண் குதர்க்கத்தை முழுவதும் கைவிட்டு, எப்போதும், நல்ல சாஸ்திர நூல்களின் அடிப்படையில் அமைந்த யுக்தி வாதத்தால் மேன்மையை அடையவேண்டும்.

इति प्रोक्तो हेमचूडः प्रिययाऽत्यन्तधीरया ॥ ५९ ॥
पुनः पप्रच्छ चात्यन्तविस्मितस्तां महाशयाम् ।

இவ்விதம் மிகுந்த தைர்யமுள்ள மனைவி கூறியதும் ஹேமசூடன் மிகவும் ஆச்சரியமடைந்தவனாக அந்த பெருமனமுள்ளவளை மறுபடி கேட்டான்.

अहो प्रिये ते वैदुष्यं ईदृशं नाविदं पुरा ॥ ६० ॥
धन्यासि त्वमहं चापि धन्यो यस्त्वामुपागतः ।

ब्रवीषि श्रद्धया सर्वश्रेयःसिद्धिं हि तत्कथम् ।। ६१ ।।
कुत्र श्रद्धा विधातव्या कुत्र वा सा न शस्यते ।
आनन्त्यादागमानां वै विरुद्धार्थसमाश्रयात् ।। ६२ ।।
आचार्यमतभेदाच्च व्याख्यातृमतभेदतः ।
स्वबुद्धेरनवस्थानात् किमादेयं न वापि किम् ।। ६३ ।।

*பிரியே ! உனது இத்தகைய கல்வித் திறமை பற்றி இதற்குமுன் நான் அறியவில்லை. நீ மிகவும் புண்யம் செய்தவள், உன்னை அடைந்த நானும் புண்யசாலியே! நம்பிக்கையால் எல்லா நன்மைகளும் கிடைப்பதைப்பற்றிக் கூறுகிறாய். அது எங்ஙனம் அமையும்? எங்கு நம்பிக்கை வைப்பது? எங்கு நம்பிக்கை நல்லதல்ல? சாஸ்த்ர நூல்கள் எண்ணற்றவை. அவை ஒன்றுக்கொன்று முரண்படும் வழிகளைப் பின்பற்றுபவை. அதனைக் கூறும் ஆசிரியர்களின் கருத்துக்களும் வேறுபட்டவை. விளக்கம் தருபவரின் கருத்துக்களும் மாறு பட்டவை. நம் புத்தியால் நிலைத்திருக்காதது. இந்நிலையில் எதனை ஏற்பது? எதனை மறுப்பது?*

यद्यस्याभिमतं तत् स वदत्येव सुनिश्चितम् ।
अन्यच्चाप्यव्यवसितं हानिप्रदमपि प्रिये ।। ६४ ।।
तत्रैवं सति नैवान्तं कश्चिदत्रापि गच्छति ।
यः शून्यमाह तत्वं सोऽप्यशून्यं दूषयेत्परम् ।। ६५ ।।
अश्रद्धेयं कुतो वा तत् संगतं चागमेन हि ।
एतद् ब्रूहि प्रिये सम्यक् न ह्येतत्तेऽस्त्यचिन्तितम् ।। ६६ ।।
इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे यं नाम सत्सङ्गमाहात्मयं नाम षष्ठोऽध्यायः ।

*எது விருப்பத்திற்குகந்ததோ, அதனையே ஒருவர் நிச்சயத்துடன் கூறுவார். அவருக்குப் பிடிக்காததைக் கேடு விளைவிப்பதாயும் கூறுவார். இந்த நிலையில் எவரும் இவ்விஷயத்தில் ஒரு முடிவிற்கு வர முடியாதே! சூன்யத்தைத் தத்துவம் எனக் கூறியவன் அசூன்யத்தை –உலகம் சூன்யம் அல்ல – ஸத்தே என்ற வாதத்தைக்கண்டிப்பான். அது எதனால் ஏற்கத் தக்கதல்ல? அதுவும் யுக்தியுடன் பொருந்துவது தானே! இதனை நன்கு விவரித்துக் கூறுவாய். நீ சிந்திக்காதது ஒன்றுமில்லை.*

***இவ்வாறு திரிபுராரஹஸ்யத்தில் ஞான கண்டத்தில் ஹேமசூடனின் கதையில் நம்பிக்கையின் சிறப்பு பற்றிய ஆறாவது அத்தியாயம்.***

# सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்தியாயம்

इति पृष्टा हेमलेखा भर्त्रा प्रियतरेण सा।
प्रोवाच विदुषी सम्यक् विज्ञातलोकसंस्थितिः ॥ १ ॥

இவ்வாறு அன்புமிக்க கணவனால் கேட்கப்பட்ட ஹேமலேகை எல்லாவற்றையும் நன்கு அறிந்தவளாக, உலகின் இயல்பை அறிந்தவளாகக் கூறினாள்.'

शृणु वक्ष्ये प्रियतम स्थिरस्वान्तः समादरात्।
मनो हि मर्कटप्रायमस्थिरं सर्वदैव तत् ॥ २ ॥
यत एवं महानर्थं प्राप्तवान् प्राकृतो जनः।

அன்பிற்குகந்தவரே! திடசித்தமுள்ளவராக நம்பிக்கையுடன் கேளும். மனம் குரங்கு போல் எப்போதும் நிலையற்றது. அதனால் பாமர மக்கள் பெருங்கேட்டை அடைகிறார்கள்.

चलन्मनः सर्वदुःखनिदानं दुष्टमेव हि ॥ ३ ॥
यतः सुषुप्तौ चलनाभावात् विन्दति वै सुखम्।
तस्मान्मनः स्थिरीकृत्य शृणु यत्ते ब्रवीम्यहम् ॥ ४ ॥
अनादरेण श्रुतं च भवेदश्रुतसंमितम्।
अफलं स्यात्तदत्यन्तं यथा चित्रतरुश्रयः ॥ ५ ॥

சஞ்சலப்படும் மனம் எல்லா துக்கங்களுக்கும் காரணம் என்பது எங்கும் காணக் கிடைப்பதே. நல்ல தூக்கத்தில் சலனமில்லாமையால் சுகம் பெறுகிறானல்லவா? அதனால் மனத்தை நிலைக்கச் செய்து நான் சொல்வதைக் கேட்பீர். நம்பிக்கையின்றிக் கேட்டது கேட்காததை ஒத்ததே. அது சித்திரத்திலுள்ள மரத்தை அண்டுவது போல் ஒரு பயனையும் தராததே.

अनवस्थिततर्कं तमपहाय विनाशनम्।
सत्तर्कमाश्रित्य जनः प्राप्नुयात् सुफलं द्रुतम् ॥ ६ ॥

सत्तर्कसंश्रयेणाशु साधनैकपरो भवेत्।
सत्तर्कजनितां श्रद्धां प्राप्येह फलभाक् नरः ।। ७ ।।
अनवस्थिततर्कं तं विहायालोकय प्रिय।
प्रवृत्तिमेतां जगतः श्रद्धया फलशालिनीम् ।। ८ ।।

நாசத்தை விளைவிக்கும் முடிவற்ற குதர்க்கத்தைக் கைவிட்டு நல்லயுக்திகளுடன் சிந்திப்பதை ஏற்று நல்ல பலனை விரைவில் பெறலாம். நல்ல பகுத்தறிவுடன் சிந்திப்பதுடன் உடன் செயலாற்றுவதில் முக்யக்கருத்துடன் இருக்க வேண்டும். நல்ல பகுத்தறிவால் ஏற்பட்ட நம்பிக்கையைப் பெற்ற மனிதன் விரும்பிய பயனை அடைகிறான். அதனால் நிலையற்ற குதர்க்கத்தை விட்டு நம்பிக்கையால் நற்பயனை வழங்கும் உலகின் நன்முயற்சிகளைக் கவனியுங்கள்.

सुतर्कितेन कालेन कर्षकः क्ष्मां विकर्षति।
श्रद्धयैव तथा रूप्य स्वर्णरत्नौषधादिकम् ।। ९ ।।
व्यवस्यन्ति सुतर्केण त्यक्त्वा तर्कानवस्थितिम्।
तस्मात्सुतर्कश्रद्धाभ्यां व्यवस्य श्रेय आत्मनः ।। १० ।।
प्रयतेत् तत्साधनाय न हि तर्कानवस्थितेः।
विरमेत् पौरुषाद्यत्नात् शुंगानुगनरा इव ।। ११ ।।

நன்கு யுக்தியுடன் பகுத்தறிந்துத் தேர்ந்தெடுத்த வேளையில் உழவன் பூமியை சிரத்தையுடன் உழுகிறான். முடிவற்ற குதர்க்கத்தை விட்டு, வெள்ளி, தங்கம், ரத்னங்கள், மருந்து முதலியவற்றைப் பற்றி யுக்தியுடன் தீரவிசாரித்து பூமியைத்தோண்ட முடிவெடுக்கிறார்கள். அதனால் பகுத்தறிவு – டனும் சிரத்தையுடனும் முடிவெடுத்துத் தனது மேன்மையைப் பெறுவதற்கே மனிதன் முயலவேண்டும். குதர்க்கம் எல்லையற்றுப் போகக் கூடுமானதால் சுங்கனைப் பின்பற்றியவர்கள் போல் மனிதயத்தினத்தை மனிதன் விட்டுவிடக் கூடாது.

श्रद्धया पौरुषपरो न विहन्येत सर्वथा।
दृढं पौरुषमाश्रित्य न प्राप्येत कथं फलम् ।। १२ ।।
पौरुषात् कर्षका धान्यं वणिजो धनमेव च।

राज्यलक्ष्मीं नृपा विप्रा विद्यां सर्वसुखाश्रयाम् ।। १३ ।।
शूद्रा भृतिं सुधां देवास्तापसा लोकमुत्तमम् ।
प्रापुरन्येऽप्यभिमतं पौरुषेणैव कर्मणा ।। १४ ।।

சிரத்தையுடன் மனிதயத்தினத்தை முக்கியமாகக் கொண்டவன் எப்போதும் தடங்கல் அடைவதில்லை. வலிவான மனிதயத்தினத்தை ஏற்றபின் விரும்பிய பயன் எப்படிக் கிட்டாமல் போகும்? மனிதயத் தினத்தால் உழவன் தானியத்தையும், வியாபாரிகள் செல்வத்தையும், அரசர்கள் ராஜ்யத்தையும், அந்தணர்கள் எல்லா சுகங்களுக்கும் ஆதாரமான கல்வியையும், சூத்திரர்கள் தொழிலையும், தேவர்கள் அமிருதத்தையும், தவசிகள் மேலுலகையும் மற்றவர்கள் அவரவர்கள் விரும்பியதையும் பெற்றார்கள்.

अनवस्थिततर्केणाश्रद्धेन पुरुषेण किम् ।
कदा किंचित् कथं प्राप्तं फलं वद विमृश्य तत् ।। १५ ।।

நிலையற்ற யுக்தி வாதத்தில் ஈடுபட்டவனும் செய்யும் பணியில் சிரத்தை இல்லாதவனுமான மனிதன் எப்பொழுது எங்கு எப்படி என்ன பலனை அடைந்திருக்கிறான்? யோசித்துக் கூறுங்கள்.

क्वचित्फलविसंवादात् सर्वत्राश्वासवर्जने ।
विजानीयात् दैवहतं तं स्वात्मरिपुरूपिणम् ।। १६ ।।
अतः पौरुषमाश्रित्य श्रद्धासत्तर्कपोषितम् ।
श्रेयसां यन्मुख्यतमं साधनं तत्समाश्रयेत् ।। १७ ।।

எங்கேனும் ஓரிடத்தில் பலன் கூடாதிருப்பதனைக் காரணம் காட்டி எங்கும் சிரத்தையைத் தவிர்ப்பவன் தனக்குத்தானே சத்ருவாகிறான். விதி அவனை அழித்துவிட்டதெனக் கொள்ளலாம். அதனால் சிரத்தையும் நல்யுக்தியு—டனுள்ள சிந்தனையும் கொண்டு போஷிக்கப்பெற்றதும் மேன்மைக்கு மிக முக்கியமான ஸாதனமுமான மனிதயத்தினத்தைக் கையாள வேண்டும்.

तत्र दृष्टं साधनानां वैचित्र्यं च पृथग्विधम् ।
तेषु यत्सर्वथा साध्यं साधयेत्तद्धि मुख्यकम् ।। १८ ।।
तत्सुतर्कानुभूतिभ्यां व्यवस्याशु समारभेत् ।
तत्ते सर्वं प्रवक्ष्यामि सावधानः शृणुष्व तत् ।। १६ ।।

பலனை அடைவதில் உதவும் ஸாதனங்கள் பல தரப்பட்டவை. விசித்திரமானவை. அவைகளில் ஸாதிக்க முற்பட்டதை எது ஸாதிக்கிறதோ அதுவே முக்கியமானது. அதனை நல்ல யுக்தியாலும் அனுபவத்தாலும் தீர்மானித்து விரைவில் செயலைத் தொடங்கவேண்டும். அதனைத்தையும் கூறுகிறேன். கருத்துடன் கேட்பீர்.

श्रेयस्तद्धि विजानीयात् यस्माद्भूयो न शोचति।
शोकः सर्वत एव स्यात् दृश्यते सूक्ष्मया दृशा।। २०।।

எதனால் மறுபடி வருந்த நேராதோ அதுவே மேன்மை தருவது. ஆனால் சூட்சுமமான அறிவுடன் நோக்கும்போது எல்லாவற்றிலிருந்தும் துக்கம் நேருகிறது.

यच्छोकैरनु संभिन्नं न तच्छ्रेयो हि सर्वथा।
धनं पुत्रास्तथा दारा राज्यं कोशो बलं यशः।। २१।।
विद्या बुद्धिर्दर्शनं च देहः सौन्दर्यसंपदः।
सर्वमेतदस्थिरत्वात् कालसर्पमुखस्थितम्।। २२।।
शोकांकुरमहाशक्तिबीजात्मकतया स्थितम्
कुत आत्यन्तिकश्रेयःसाधनत्वं समर्हति।। २३।।

சோகத்துடன் கலந்தது மேன்மை தருவதாகாது. செல்வம், மக்கள், மனைவி, அரசு, பொக்கிஷம், வலிவு, புகழ், கல்வியறிவு, புத்தி சக்தி, ஸாதனங்கள், அழகுச் சாதனங்கள் இவையனைத்தும் நிலையற்றதானதால், காலமாகிற ஸர்ப்பத்தின் வாயில் உள்ளவை. சோகத்தின் முளை கிளம்பப் பெரும் சக்தி படைத்த விதையாக நிற்பவை. இவை எப்படி துக்க கலப்பற்ற மேன்மையைப் பெற உதவ முடியும்?

अतः परमकं श्रेयः एतद्वै मुख्यतो भवेत्।
एवं धनादिविषये यदादेयत्वविभ्रमः।। २४।।
मोहादेव समुद्भूतो मोहको हि महेश्वरः।
यो हि सर्वजगत्कर्ता तस्मात्सर्वे हि मोहिताः।। २५।।

அதனால் மிகச் சிறந்த முக்கியமான மேன்மை ஸாதனம் இனிக்கூறவிருப்பதே (தேவதாராதனம்). செல்வம் முதலியவற்றில் அவைகள் விரும்பத்தக்கவை என்ற பிரமை அறியாமையால் ஏற்பட்ட மோகத்தால் ஏற்பட்டது. மோஹத்தை ஏற்படுத்துபவன் மஹேச்வரனே. எல்லா உலகையும்

படைத்தவன் அவன். அதனால் (அவரது மோஹனசக்தியால்) எல்லோரும் மோஹமடைந்துவிட்டார்கள்.

मोहयत्यल्पकोऽपीह विद्याभागसमाश्रयात् ।
कांश्चिदेव न सर्वान् स यस्माद्विद्या हि सा मिता ।। २६ ।।
अल्पविद्यं मायिनं चाप्यनुत्क्रान्ता जना यतः ।
महादेवं महामायं कः समुत्क्रान्तुमर्हति ।। २७ ।।

மிகவும் அல்பனான இந்திரஜால வித்தைக்காரன், வித்யையின் ஒரம்சத்தைக் கையாள்வதால் சிலரை மயக்குகிறான். எல்லோரையும் மயக்குவதில்லை. ஏனெனில் அவனது வித்தை அளவிற்குட்பட்டது. குறைந்த வித்யாசக்தி படைத்த இந்திரஜால மாயாவியையே மக்கள் மீறமுடியவில்லை. (அவன் வசப்பட்டு மயக்கமடைகிறார்கள்) எனில் மஹாமாயா சக்திபடைத்த மகாதேவனை யார் மீறமுடியும்?

यो हि लोकेऽल्पमायां च जानाति प्रतिविद्यया ।
स मोहान्निर्गतः स्वस्थः सुखमाप्रोत्यनश्वरम् ।। २८ ।।
एवंविधापि विद्या तमनाश्रित्य तु मायिनम् ।
न लभ्या सर्वथा यावदप्रसाद्य तु सर्वथा ।। २६ ।।
तस्मान्महामायिनं तं अप्रसाद्य कथं भवेत् ।
महामोहस्य तरणं तस्मात्तं सर्वथा श्रयेत् ।। ३० ।।

இந்த அல்பமான இந்திரஜால மாயையை எதிர்விதியால் தடைசெய்ய எவன் அறிவானோ அவன் மயக்கத்திலிருந்து விடுபட்டு ஸ்வஸ்தனாக அழியாச் சுகத்தை அடைகிறான். இத்தகைய எதிர்விதியையும் அந்த மாயாவியான ஒருவனைச் சரணடையாமல் அவனை மகிழ்விக்காமல் எப்போதும் பெறமுடியாது. அதனால் மகாமாயாவியான மகேசனை வழிபடாமல் மஹாமோஹத்தைத் தாண்டுவது எங்ஙனம்? அதனால் அவனைச் சரணடைய வேண்டும்.

*மாயை நீங்க ஒரே உபாயம் ஞானம். ஞானம் மாயைக்கு அறியாமைக்கு ஒரே எதிரி. மற்றவற்றால் மாயை நீங்காது. மாயையை அடக்க வல்லவன் மகேசனே. அவன் அருள் பெற அவனை வழிபடுதல் அவசியம். பக்தியுடனுள்ள வழிபாடு ஞானத்தைத் தரும் என்கிறாள் ஹேமலேகை.*

यस्तं प्रसादयेत्सम्यक् प्राप्य तस्य प्रसादतः ।
महाविद्यां स तन्मोहात् ध्रुवमुत्क्रान्तिमेष्यति ॥ ३१ ॥
अन्येपि योगाः कथिताः श्रेयःसाधनकर्मणि ।
महेश्वरप्रसादात्ते विना न स्युः फलाप्तये ॥ ३२ ॥
तस्मादाराधयेदादौ महेशं विश्वकारणम् ।
भक्त्या स साधयेदाशु योगान्मोहविनाशनान् ॥ ३३ ॥

இறைவனைக் கபடமின்றி வழிபடுபவன் அவர் அருளால் பேரறிவைப் பெற்று மாயையின் மோகத்திலிருந்து கட்டாயம் விடுதலை பெறுவான். ஆத்ம சிரேயஸைப்பெற வேறு முறைகளும் கூறப்பட்டுள்ளன. அவை மகேசனின் திருவருளின்றி பலன்தர உதவாது. அதனால் உலகியக்கத்தின் காரணமான மகேசனை முதலில் பக்தியுடன் வழிபடவேண்டும். அதனால் விரைவில் மோகத்தைப் போக்கவல்ல முறைகளை பக்தியுடன் செய்யமுடியும்.

एतज्जगत् कार्यभूतं प्रत्यक्षं परिदृश्यते ।
सांशमेवं पृथिव्याद्यं अदृष्टारंभमप्यलम् ॥ ३४ ॥
कार्यं स्यादिति तर्केण बह्वागमदृढेन तु ।
व्यवस्येत्तत्र कर्तारं सर्वकर्तृविलक्षणम् ॥ ३५ ॥

நம் கண்முன் தோன்றும் இவ்வுலகம் ஒரு செயலின் விளைவாக (காரியமாக) ஏற்பட்டது. பலபகுதிகள் உள்ளதாக பிருதிவீ முதலிய ஐந்து பூதங்களும் அவற்றின் உற்பத்தியும் அறியப்படாமலிருந்தாலும் ஒருவரின் செயலின் விளைவே. இந்த யுக்திமுறை (தர்க்கம்) பல வேதவாக்கியங்களால் திடப்பட்டுள்ளது. அதனால் இந்த செயலைப் புரிந்தவர் ஒருவர் இருக்கவேண்டுமென்று நம்புகிறோம். ஆனால் அவர் மற்ற எல்லா செயலாளர்களைக் காட்டிலும் மாறுபட்டவர் – தனிச் சிறப்புள்ளவர்.

*மாயையைத் தாண்ட மகேசன் அருள் தேவை. அவர்தான் எல்லா உலகங்களையும் படைத்தவர். அவர்தான் உலகைப் படைத்தவர் என எப்படி அறிவது என்ற ஐயம் ஏற்படும். இதனை யுக்திகளால் ஹேமலேகை நிரூபிக்கிறாள். ஒவ்வொரு பொருளுக்கும் அது தோன்ற ஒரு காரணம் உண்டு. குடத்திற்கு மண், வளைக்குத் தங்கம் என்பதுபோல். மண் தானே குடமாகாது. குடமாக ஆக்கியவன் ஒருவன் உண்டு. அவன் கர்த்தா, மண் காரணம், குடம் காரியம் ஒவ்வொரு பொருளும் சிறிதும் பெரிதுமான பகுதிகள் கொண்டதே.*

*பகுதிகள் கொண்டதனைத்தும் முன்னர் இல்லாமலிருந்து பின் தோன்றியவைகளே. அவைகளின் தோற்றத்திற்குக் காரணமும் கர்த்தாவும் உண்டு. எல்லாப் பொருள்களுக்கும் மூலகாரணமான பரமாணுக்களையும், அவைகளுக்கும் காரணமானவற்றையும் படைத்தவர் இறைவன் என தைத்திரீய உபனிடதம் கூறுகிறது – "ஆத்மந ஆகாச: ஸம்பூத:, ஆகாசாத் வாயு:, வாயோரக்னி:, அக்னே: ஆப: அத்ப்ய: பிருதிவீ;" என. தோன்றும் உலகம், பொறிகளுக்ககப்படாத அதன் மூல தத்துவங்கள் அனைத்தும் ஒருவரால் படைக்கப்பட்டுத்தான் தோன்றியிருக்கமுடியும். அப்படித்தான் அனுபவத்தில்காண்கிறது. அப்படிப் படைத்தவன் இறைவன். ஆனால் மற்ற குயவன், தட்டான் போன்ற படைப்பாளர்களைக் காட்டிலும் இறைவன் என்ற படைப்பாளரிடம் ஒரு தனிச் சிறப்பு உள்ளது. மற்றவர்களுக்கு குடம் வளை முதலியவற்றை உண்டாக்க மண், தங்கம் போன்ற காரணப்பொருள் அவசியத் தேவை. இறைவன் முதன்முதலில் படைக்கும்போதும் அவரைத் தவிர வேறு பொருளில்லை. கர்த்தாவைத்தவிர வேறு பொருளில்லா நிலையில் தன்னையே காரணப் பொருளாக்கி உலகைப் படைத்தவன் என்பது இறைவனின் அந்தத் தனிச் சிறப்பு.*

यद्यप्यकर्तृकं लोकमाह कश्चिदिहागमः।
तदनेकैरागमैस्तु तर्करूढैः सुबाधितम्॥ ३६॥
यत्रात्मनाश एवार्थः प्रत्यक्षैकसमाश्रयात्।
तदागमाभासमेव न तद्धि महदाश्रयम्॥ ३७॥
शुष्कतर्कैकसंक्लृप्तं शास्त्रं तत्त्याज्यमेव हि।

ஒருவர் இவ்வுலகத்திற்குக் கர்த்தா கிடையாது என்பார். குற்றமுள்ள அவரது வாதம் யுக்திமிக்க பல பிரமாண வசனங்களால் கண்டிக்கப்பட்டுவிட்டது. அந்த வாதியின் கருத்துப்படி உடலாகிய ஆத்மா அழிந்துவிடும். அதுதான் மனிதன் அடைய விரும்பும் புருஷார்த்தம். அத்துடன் பிரத்தியட்சப் பிரமாணம் (காட்சி) மட்டும் அதற்கு ஆதாரம். (மற்ற பிரமாணங்களை ஏற்காததால்) அந்த வாதம் போலியானதே. அதனால் பெரியோர்கள் அதனை ஏற்பதில்லை. வரட்டு வாதத்தின் அடிப்படையில் அமைந்த அந்த சாஸ்திரம் தள்ளத் தக்கதே.

*வேதத்தை முக்கியப் பிரமாணமாகக் கொண்டு அதன் வசனங்களின் ஆதாரத்திலும் ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு கர்த்தா உண்டு என்ற அனுமானத்தின் ஆதாரத்திலும் இறைவன் ஒருவர் உண்டு எனச் சாதித்தோம்.*

*"வேதவசனம் ஏமாற்றுபவரின் கூற்று, கண்டதே காட்சி. அனுமானம் பிரமாணமல்ல' என வரட்டு வாதத்தால் சாதிப்பவர் சார்வாகர் முதலிய லோகாயதர்கள். அவர்களது வாதம் பின்வருமாறு – " ஆத்மா என்று ஒன்று தனித்துக் கிடையாது. உடல்தான் ஆத்மா. உடல் அழிந்தால் அத்துடன் அது முடிந்தது. மறுபிறப்பில்லை. புண்யம் பாபம் என்ற வினைத்தொடர்பில்லை. படைப்பவனின்றியே உலகம் தோன்றக் கூடும். வெல்லமும் ஜலமும் சில நாட்கள் சேர்த்து வைக்க அது இவ்விரண்டிற்கும் மாறுபட்ட இயல்புள்ள போதை தரும் மதுவாகிறது. ஒரு தனி மனிதன் – கர்த்தா தேவை இல்லை. சுக்கிலமும் சோணிதமும் தாயின் கருவறையில் கூடின. குழந்தை தோன்றியது. தாயோ தந்தையோ குழந்தைக்குக் காரணமல்ல. இயற்கை தானே தோன்றும், மறையும். உற்பத்திக்கோ அழிவிற்கோ காரணமான ஒருவன் இருக்கத் தேவை இல்லை. உடலின்பமே புருஷார்த்தம். அதுவே ஸ்வர்க்கம். உடலுக்கு துன்பம் தருவதே நரகம். செத்தபின் ஸ்வர்க்கமோ நரகமோ இல்லை."*

*இந்த சார்வாகர் அனுமானத்தையோ சப்தத்தையோ ஏற்கவில்லை. எல்லாவற்றையும் பிரத்யக்ஷமாக அறிய முடியாது. பிரத்தியக்ஷமானவை மிகச் சிலதே. பெரும்பாலானவை பிரத்யக்ஷத்திற்கு உட்படாததே. அதனால் பிரத்யக்ஷத்தை மட்டும் கொண்டு பூர்ண அறிவைப் பெற முடியாது. வாழ்வின் லக்ஷயம் சுகம் என்பதால் நேர்மையின்மை தவிர்க்க முடியாதது. வினைப்பயனை மதிக்காததால் செயல்களில் பொறுப்பின்மை கண்கூடு. அழியும் இவ்வுடலுடன் எல்லாம் அழியும் என்றால் மதிக்கத்தக்க வாழ்க்கை முறைக்கு அவசியமில்லை. வரட்டு வாதத்தால் தற்காலிக வெற்றி காணும் இவர்களது பாதை, தக்கது தகாதது பற்றிச் சிந்தித்து வாழ்க்கை முறையை வகுக்க விரும்பும் பெரியோர்களால் வெறுக்கப்பட்டது.*

*" வாழ்வின் லட்சியம் சுகம். இறந்துவிடுவதே பெருத்த சுகமாகும். ஏனெனில் எந்த சுகமும் தனித்திராது. துக்கத்துடன் கலந்தே நிற்கும். துக்கக்கலப்பற்ற நிலை இறப்பேயாகும். அதுவே புருஷார்த்தம் என்பர் சார்வாக மதத்தினர், அது பயனற்ற சுகம், ஏனெனில் அதனை அனுபவிப்பவர் இல்லை. தானே அது அடையப்பெறும் சுகமாயிருக்கலாம். அடையவேண்டிய சுகமல்ல. அதனை அடைவதற்கும் எவரும் முயல்வதுமில்லை. வெல்லமும் சர்க்கரையும் கூடி மது உண்டாகலாம். ஜடத்திலிருந்து மற்றோர் ஜடம் உண்டாகிறது. இது இயற்கையை ஒட்டியதே. ஆனால் ஜடத்திலிருந்து*

*சேதனம் உண்டாகாது, இயற்கை ஜடம், அதிலிருந்து சேதனமானதும் ஜடத்தைக் காட்டிலும் வேறுபட்டதுமான "நான்" "நீ" என்பது எப்படித் தோன்றும்? அதனால் அது வீண்வாதக் கோலம். நம்பத்தகுந்ததல்ல என்கிறாள் ஹேமலேகை.*

अन्यैरप्युच्यते कैश्चित् जगदेतत् सनातनम् ।। ३८ ।।
अबुद्धिमत्कर्तृकं चेत्येतच्चाप्यसमञ्जसम् ।
क्रियाया बुद्धिपूर्वत्वात् अबुद्धौ तददर्शनात् ।। ३९ ।।
बह्वागमोपष्टंभाच्च कर्ताऽत्र स्याद्धि बुद्धिमान् ।
बुद्धिमत्कर्तृकं कार्यं सर्वत्रैवं हि दर्शनात् ।। ४० ।।
एवं सत्तर्कागमाभ्यां जगदेतत् सकर्तृकम् ।

வேறுசிலரும் இப்படி கூறுவர் - "இந்த உலகம் ஸத் - நிலைத் திருப்பது. இதனைப் படைத்தது புத்தியற்ற ஜடம்" (இயற்கை - ப்ரகிருதி) என்பர். இதுவும் பொருந்தாததே. செயல் எங்கும் அறிவால் ஏற்படுகிறது. அறிவற்றதில் செயலில்லை. பல ஆகமங்கள் ("மிக்க அறிவுள்ளதொன்றே உலகைப் படைத்தது" என்று)திடமாக நிரூபிக்கின்றன. அதனால் உலகைப் படைத்தவன் அறிவுள்ளவனே. எங்கும் இப்படியே காண்பதனால் ஒவ்வொரு செயலும் ஒரு அறிவாளியைச் செயலாளனாகக் கொண்டுள்ளது என்ற நல்ல யுக்தி, வேத வாக்கியம் முதலிய சான்றோர் கூற்று. இவற்றின் ஆதாரத்தால் இந்த உலகத்திற்கு ஒரு கர்த்தா உண்டு என்று தேறுகிறது.

स कर्ता लौकिकेभ्यस्तु कर्तृभ्यः स्याद्विलक्षणः ।। ४१ ।।
कार्यस्याचिन्त्यरूपत्वात् अचिन्त्यानन्तशक्तिकः ।
अपरिच्छिन्नसामर्थ्यः कार्यस्यानुगुणत्वतः ।। ४२ ।।

உலகைப் படைத்தவன் மற்ற உலகிலுள்ள படைப்பாளர்களைவிட வேறுபட்டவன் - தனிச் சிறப்பு பெற்றவன். அவனது எல்லையற்ற செயல் திறன் மனத்தாலும் உருவகபடுத்த முடியாதது. அவனது செயலால் விளைந்தவைகளும் அப்படியே மனத்தால் உருவகப்படுத்த முடியாதவை. காரியமான உலகிற்கேற்ப அவனது செயல் திறனும் இன்னதெனக் குறிப்பிட முடியாதது. அளவாலும், காலத்தாலும், எல்லையாலும், வேறு பொருளாலும் கட்டுப்படுத்த முடியாதது.

*ஸாங்கியருடைய கருத்தைக் கூறி கண்டிக்கிறாள் ஹேமலேகை. " ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் சமநிலை பிரகிருதி எனும் தத்துவம். இது ஜகத்தின் மூலகாரணம். இது அறிவற்றது – ஜடம். மண் குடமாகக் குயவனை எதிர்பார்ப்பது போல், பிரகிருதி உலகமாக மாற, தன்னைத் தவிர வேறொரு கர்த்தாவை – ஈசுவரனை எதிர்பார்ப்பதில்லை. பிரகிருதியின் ஒரு பகுதியான ஸத்வம் கண்ணாடிபோல் ஆத்மாவையும் உலகையும் தன்னுள் பிரதிபிம்பமாக ஏற்கிறது. பிரதிபிம்பமாயுள்ள ஆத்மாவிற்கும் பொறிகளால் உணரக்கூடிய உலகிற்கும் உள்ள நெருக்கத்தால் பிரகிருதியின் தனி உருவத்தை அறியாத மனிதன் நான் இதனைப் பார்க்கிறேன் என்ற அனுபவம் பெறுகிறான். பிரகிருதிதான் சேதனப் பொருள் போல் வளர்கிறது. செயல் புரிகிறது. ஆத்மாவின் ஸந்நிதானத்தில் இந்த சேதனத் தன்மை பிரகிருதியின் மேல் படிந்துள்ளது' என்பது ஸாங்கியர்களின் கொள்கை.*

*இதுவும் சரியான வாதமல்ல. செயலாற்றல் சேதனனால் மட்டுமே முடியும். அறிவற்ற ஜடப் பொருள் தானே இயங்காது. ஜடமும் இயங்குமானால் சித்திரத்தில் எழுதப்பட்ட குயவனது உருவமும் தனித்துப் பானை வனையும். ஜடம் இயங்காது, சேதனம்தான் இயங்கும் என்பதற்குப் பல பிரமாணங்கள் வேதம் ஸ்மிருதி முதலானவற்றில் காண்கின்றன. உலகிலும் அனுபவத்தில் அப்படியே. ஸாங்கிய மதத்தில் கூறும் ஜடத்தின் செயல்முறை எங்கும் அனுவபத்திற்கும் ஒவ்வாதது.*

*உலகத்தின் விசித்திர நிலையை நோக்கும்போது அதனைப் படைத்தவனும் அத்தகைய விசித்திரசக்தி படைத்தவனாக இருத்தல் வேண்டும். அவனது சக்தி காலத்தாலோ, தேசத்தாலோ மற்றொரு சக்தியாலோ கட்டுப்படுத்த முடியாததாக இருக்கவேண்டும்.*

स प्रपन्नान् समुद्धर्तुं प्रभवत्येव सर्वथा।
अतस्तं सर्वभावेन शरणीकुरु सर्वदा।। ४३।।

இறைவன் தன்னை அண்டியவர்களைத் தூக்கிவிட எவ்வகையிலும் சக்தி படைத்தவரே. அதனால் அவரை முழுக் கருத்துடன் சரணமடைவீராக.

निदर्शनं तेऽभिधास्ये शृणु प्रत्ययकारणम्।
मितेश्वरोऽप्यत्र लोके चाकापट्यात्प्रसादितः।। ४४।।

सर्वात्मना योजयति स्वेष्टार्थैः श्रेयसे नरम्।

एष लोकेश्वरो देवः सम्यग्येन प्रसादितः॥ ४५॥

तस्मै किं न दिशेद् ब्रूहि भक्तलोकैकवत्सलः।

அவ்விஷயத்தில் உமக்கு நம்பிக்கை வரும்படி நிரூபிக்கிறேன். அளவுக்குட்பட்ட மிதமான சக்திபடைத்தவனே கபடமின்றி வழிபடப் பெற்றால் வழிபடுபவனுக்கு எல்லா நன்மைகளும் கிடைக்க அவனால் விரும்பப்பட்டதுடன் கூட்டிவைக்கிறான். இவரோ உலகிற்கே தலைவர். சக்தி மிக்கவர். பக்த உலகிடம் தனிப்பட்ட பரிவுள்ளவர். தன்னை நன்கு வழிபட்டவருக்கு ஏன் விரும்பியதைத் தரமாட்டார்?

पुरुषा ईश्वरा लोके चानवस्था अवत्सलाः ॥४६॥

निर्दयाश्च कृतघ्नाश्च तस्मात्तत्फलमस्थिरम्।

परमेशो दयासिन्धुः कृतज्ञः सुव्यवास्थितः॥ ४७॥

अन्यथाऽनादिसंसारे कुतोऽनिन्द्यत्वमाप्नुयात्।

व्यवास्थिता जगद्धात्रा चापि वा स्यात्कथंवद॥ ४८॥

अनावस्थस्य राज्यं तु नष्टमालोक्यते यतः।

तस्मादेष दयासिन्धुः सुव्यवस्थश्च कीर्तितः॥ ४९॥

மனிதன் ஆளுமை பெற்றால் நிலை தடுமாறிப் பரிவற்றவராக செய்நன்றி கொன்றவராகக் காண்கின்றனர். அதனால் அவனது செயல் நிலை பெறாது. பரமேச்வரன் பரிவுக் கடல். செய்நன்றி உணர்ந்தவன். நிலை தடுமாறாதவன். அதனால் அவர் எங்கும் அவதூறுக்கு உட்படுவதில்லை. அப்படியிராவிடில் உலக இயக்கம் எப்படி ஒரே சீருடன் இருக்கும்? நிலை குலைந்தவனின் ஆட்சி அழியும். ஈசன் நிலை நிற்பவன்.

तमेव सर्वभावेन भक्त्याशु शरणीकुरु।

श्रेयसित्वां योजयेत्स त्वं न तत्परतां व्रज॥ ५०॥

उपासनं बहुविधं आर्त्तार्थार्थित्वादितोऽपि च।

निर्हेतुकं च क्वाचित्कं तत्सत्योपासनं भवेत्॥ ५१॥

दृष्टमेवं सर्वतो वै चार्तेनोपासितः प्रभुः।

कदाचिद् दययाविष्टः आर्तिं तस्य विमोचयेत्॥ ५२॥

उपेक्षेत कदाचिद्वोपास्तेस्तारतम्यतः।
एवमेवार्थार्थिनोऽपि मितं चानियतं फलम्॥ ५३॥
निर्हेतुकस्योपासकस्य ज्ञात्वा निर्हेतुतां चिरात्।
मितेश्वरोऽप्य व्यवस्थः तदधीनो भवत्यलम् ॥५४॥
निर्हेतुकत्व ज्ञानाय चिरं स्यादज्ञभावतः॥

அதனால் அந்த ஈசனையே முழு உள்ளத்துடன் சரணடைவாய். அவர் மேன்மையுடன் கூட்டுவிப்பார். நீ மேன்மையை நாடாதே. அவரை உபாசிப்பது பலநோக்குள்ளது. துயருற்றவன் துயர்நீங்கும் பொருளை நாடுபவன் பொருளுக்காகவும் நாடுபவன். வேறெந்த எதிர்பார்வையின்றியும் வழிபடலாம். எதிர்பார்வையற்ற வழிபாடே உண்மையானது. மிக அரிதானது. துயர்நீங்க வழிபடும் போது துயரை இறைவன் நீக்குவதுண்டு. சிலசமயம் வழிபாட்டுமுறையின் ஏற்றத்தாழ்வு காரணமாக துயரை முழுதும் நீக்காமலுமிருக்கலாம். பொருளை நாடுபவனுக்கும் இவ்வாறே நேரும். எதிர் பார்வையின்றி வழிபடுபவனிடம், அளவிற் குறைந்த ஆளுமையுள்ளவனும் வசமாவான். ஆனால் எதிர்பார்வை இல்லை என்பதை உணர அவனுக்குத் தாமதமாகலாம். இறைவனுக்கோ அந்தத் தாமதமும் நேராது.

एष सर्वेश्वरो देवः हृदयेशोऽखिलस्य तु॥ ५५॥
सर्वं जानाति तत्काले फलं दद्याच्च सत्वरम्।
आर्तमर्थार्थिनं देवः तदर्थेनाभियोजितुम्॥ ५६॥
स्वनियत्या कर्मपाकं प्रतीक्ष्य फलमादिशेत्।
निर्हेतुकोपासकं स्वं अनन्यशरणं विभुः॥ ५७॥
ज्ञात्वा सर्वात्मना तस्य योगक्षेमवहो भवेत्।
अप्रतीक्ष्य कर्मपाकं नियतिं स्वां विधूय च॥ ५८॥
तत्साधनं संप्रसाध्य द्रुतं संयोजयेत्फले।
एतदेव महेशत्वं स्वातन्त्र्यमहतं तु यत्॥ ५९॥

இறைவனோ பேராற்றல் படைத்தவர். எல்லோருடைய உள்ளத்தையும் ஆட்டுவிப்பவர். நடப்பதனைத்தையும் அவர் அறிவார். உரிய நேரத்தில் தாமதமின்றி பலன் தருவார். நோய் முதலியவற்றால் பீடிக்கப்பட்டவனையும் பொருள் நாட்டமுள்ளவனையும் அவரவர் விருப்பத்துடன் கூட்டுவிக்கத் தான் வகுத்துள்ள நன்னெறிப்படி வினை பக்குவப்படுவதை எதிர்பார்த்துப் பலனைத் தருவார். ஒருவித எதிர் பார்வையுமின்றி வழிபடுபவன், தன்னைச் சார்ந்தவன், வேறொன்றையும் சரணடையாதவன் என அறிந்த ஆண்டவன் அவனது யோக க்ஷேமங்களின் பொறுப்பு முழுவதையும் தானே சுமக்கிறார். அவனது வினை பக்குவமடையும் நிலையை அவர் எதிர்பார்ப்பதில்லை.

தனது உலகியல் கட்டுப்பாட்டிற்கான வழிமுறைகளையும் உதறிவிடுகிறார். அவனது சிரேயஸிற்கான உபாயத்தைத் தானே அமைத்துத் தந்து விரைவில் பலனைக் கூட்டுவிக்கிறார். இப்படி தடைபெறாத சுதந்திரம் பெற்றுள்ளதே அவரது மகேசத் தன்மையைக் காட்டும்.

प्रारब्धं नियतिर्वापि महेशविमुखे भवेत्।
एतन्मृकण्डुतनये अत्यन्तमीश्वरतत्परे॥ ६०॥
सर्वैर्ज्ञातं महेशस्य नियत्यारब्धलंघनम्।

பிராரப்த வினைப்பயனோ விதியோ ஆண்டவனிடம் சாராதவனிடத்தில் தலையிடும். இதனை ஆண்டவனிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட மிருகண்டு முனிவரின் புதல்வர் (மார்க்கண்டேயர்) விஷயத்தில் காணலாம். விதியால் தொடங்கப்பட்ட செயலை மீறுவதாக உள்ள இந்த மகேசனின் செயல் யாவருமறிந்ததே.

अत्रोपपत्तिं ते वक्ष्ये शृणु प्राणप्रियेरिताम्॥ ६१॥
यद्यप्यनुल्लंघनीये प्रारब्धनियती खलु।
तथाऽप्यपौरुषाणां तत् प्रारब्धमनपोहनम्॥ ६२॥
अत एव प्राणयमैः प्रारब्धं परिजीयते।
न तान् दृष्टेषु दुःखेषु प्रारब्धं योजयत्यलम्॥ ६३॥
प्रारब्धाहिनिगीर्णास्ते ये पौरुषपराङ्मुखाः।
एतन्नियतिसंक्लृप्तं तथैवानुभवान्ननु॥ ६४॥

உயிர் அன்பரே! இங்கு இதற்கான காரண காரியப் பொருத்தத்தைத் கூறுகிறேன், கேளும். விதியும் அது தொடங்கிய செயல்முறையும் (பிராரப்தமும்) மீறமுடியாதவையல்லவா? ஆனால் மனித முயற்சி அற்றவர்களுக்குத்தான் பிராரப்தம் மீறமுடியாதது. பிராண சக்தியைக் கட்டுப்படுத்திய முனிவர்களால் பிராரப்தம் வெல்லப்படுகிறது. பிராரப்தம் அவர்களுக்குக் கஷ்டம் தருகிற துக்கத்தைத்தர இயலுவதில்லை. தன் முயற்சி இல்லாதவர்கள் பிராரப்தம் எனும் பாம்பால் விழுங்கப்பட்டவர்கள். வினையின் செயல் முறை அப்படி. இதையே அனுபவம் புகட்டுகிறது.

नियतिः स्यादीशशक्तिः संकल्पैकस्वरूपिणी।
सत्यसंकल्प एवेशोऽनुल्लंघ्या ह्यत एव सा॥ ६५॥
कुण्ठिता सापि भवति परमेशपरायणे।
अकुण्ठितापि भवति यतः सा तादृशी भवेत्॥ ६६॥
तस्मात्कुतर्कं सन्त्यज्य महेशं शरणीकुरु।

अहेतुकतया स त्वां नियोजयति श्रेयसि ॥ ६७ ॥
एतावदेव सोपानं प्रथमं क्षेमसौधके ।
एतद्विहाय चान्यत्र नास्तीषत् फलसंभवः ॥ ६८ ॥

விதி என்பது ஆண்டவனது சக்தி, அவரது செயல் திட்டத்தின் வடிவம். ஆண்டவன் உண்மையான வீணாகாத செயல் திட்டமுள்ளவர், அதனால் அதை மீற இயலாது. ஆனால் அந்த விதியும் மற்ற இடங்களில் தடையுறாதிருப்பினும், பரமேசுவரனிடம் ஈடுபட்டுள்ளவனிடத்தில் மழுங்கிவிடுகிறது. அதன் தன்மை அத்தகையது. அதனால் குதர்க்கத்தை விட்டு மகேசனைச் சரணடைவீராக. ஒருவித பலன் எதிர்பார்வையு–மற்றிருப்பதால் உம்மை அவர் சிரேயஸ்ஸுக்கான வழியில் சேர்ப்பிப்பார். இதுதான் க்ஷேமம் எனும் உப்பரிகையில் ஏறுவதற்கு முதல்படி. இதனை விட்டால் வேறு எதனாலும் சிறிதும் பலன் உண்டாகாது.

*இறைவனது வழிபாடு எதற்கு? இறைவனிடத்தில் அன்பு கொள்ளவும் இறைவனது அருளுக்குத் தகுதி பெறவும்தான். இறைவனின் அருள் தானே இப்படி வழிபடுபவனின் யோக க்ஷேமத்தை அமைத்துக் கொடுக்கும். (நல்வினைப் பயனால் பெறத்தக்க செல்வம் முதலியவற்றைக் கூட்டுவிப்பது யோகமாகும். அப்படிக் கிட்டியதை அழிவுறாமலும் வீணாகாமலும் பாதுகாப்பது க்ஷேமமாகும்.) இப்படி ஈசனிடத்தில் தன் பொறுப்பை ஒப்படைத்து அவனது அன்பிற்குகந்தவனாக ஆவதையே வாழ்வின் இலக்காகக் கொள்பவர் மிக அரிது.*

*பொதுவாக இறைவனை வழிபடுவது தமக்கு வந்துள்ள துக்கத்தைப் போக்கவும், இதுவரை பெற்றிராத செல்வத்தைப் பெறவும் தான். இத்தகைய வழிபாடு எதிர்பார்வையுள்ளது. எதிர்பார்க்கப்பெறும் நன்மை விதியால் தடைபட்டுள்ளது. அந்த விதியை மாற்றிக்கொடுக்க இறைவனை வழி படுகிறோம். நமது வழிபாட்டின் தீவிரத்திற்கேற்ப விதியின் கடுமை குறையும். இந்த தீவிரத்தின் ஏற்றத்தாழ்விற்கேற்ப விதி மாறுவது இயற்கை. அதனால் ஒரேவிதமான செயலால் மட்டும் ஒரே சீரான விளைவு ஏற்படுவதில்லை. அதனால் இத்தகைய வழிபாடுகளில் கிடைக்கும் பலன் ஒரே சீரானதல்ல, நிலைத்ததுமல்ல, நிலைத்ததொன்றையும் தான் நாம் கோரவில்லையே!*

*நாம் புரிந்த வினைகளின் பின் விளைவு புண்யமும் பாபமும். அதன் காரணமாக வினைபுரிந்த அப்பிறவியிலோ பின் வரும் பிறவிகளிலேயோ அனுபவிக்கவிருப்பது சுகமும் துக்கமும். முன் புரிந்த வினைகளனைத்தும் ஒரே சமயத்தில் பலன் தருவதில்லை. அவைகள் மூட்டையாகப் பல*

*பிறவிகளில் தொடர்ந்து அனுபவிக்கத்தக்கவைகளாகக் குவிந்துள்ளன. அவை ஸஞ்சிதம் எனப்படும். அவற்றில் சிலவற்றைப் பொறுக்கி எடுத்துத் தற்போது கிடைத்துள்ள பிறவியில் அனுபவிக்கத்தக்கதாக இறைவன் ஒதுக்குகிறார். அதற்கேற்ற சூழ்நிலை, உடல் அமைப்பு முதலியவற்றைத் தருகிறார். இந்தப் பிறவியில் பலன் கொடுக்கத் துவங்கியுள்ளமையால் இந்த வினைகள் பிராரப்தம் (பலன் கொடுக்கத் துவங்கியுள்ளது) எனப்படும். அந்தந்த வினைகள் பக்குவப்படும்போது அதற்கேற்ற பலன் மாறி மாறி வரும். இது ஈசனின் நியதி – மாற்றமுடியாத செயல்முறை –விதி– தைவம் எனப்படுவது. அதனைப் பெறவேண்டும், இதனை விலக்க வேண்டுமென்று விதியை மாற்ற விரும்புபவர்களால் இதனை எளிதில் மாற்றமுடியாது.*

*விதியை மாற்றவும் முடியும்; கடுமையான வினைப்பயனைக் கடுமை குறைந்ததாகச் செய்யலாம்; மிகவும் குறைவான புண்யவினையைப் பலமடங்காகப் பெருக்கிக்கொள்ளலாம்; இப்படி மாற்றும் உபாயம், எடுத்த பிறவியில் நேரத்தை வீணாக்காமல் நற்பணிகளில் ஈடுபடுத்திக்கொள்வதே. இந்த சாதனை, பாபத்தின் கூர்மையை மழுங்கச் செய்யும். புண்ணியத்தின் சிறு துளியைப் பெரு வெள்ளமாக்கும். இதனைப் பௌருஷம் – விடாமுயற்சி என்பர். இது விதிக்கு எதிரான செயல், இது விதியை அழித்துவிடாது. எனினும் விதியின் பாதிப்பைக் குறைத்துவிடும். விதியை மதியால் வெல்லலாம் என்பர் பெரியோர்.*

*நற்பணிகளில் மிகச் சிறந்தது இறைவனை ஒருவித பலன் எதிர்பார்வையின்றி வழிபடுவது. இப்படி வழிபடும்போது வழிபடுபவனின் யோக க்ஷேமப் பொறுப்பை இறைவன் ஏற்கிறான். வினைக்கான விதி அவனது திட்டம் எனினும் அதுவும் அவனால் மீறப்படுகிறது. விதி இப்போது குறுக்கிடாது. உண்மையில் இறைவன் அத்தகைய பக்தர்களின் விதியுடன் குறுக்கிடுவதில்லை. விதியின் பாதிப்பை இறைவன் அ.., ..சார்ந்தார் உணர்வதில்லை என்பதே இங்கு தத்துவம். நம் வாழ்வி.. பொறுப்பை இறைவனிடம் ஒப்படைத்துவிட்டு ஆட்டுவித்தபடி ஆ..ம உணர்வைப் பெற்றுத் தன்னை ஆட்டுவிக்கும் இறைவனிடம் குன்ற த அன்பைப் பேணி வளர்ப்பவன் விதியின் பிடியில் அகப்படமாட்டான். வி.தி கஷ்டத்தைத் தரும். ஆனால் அதனை உணர்வதும் உணராதிருப்பதும் நம் செயல். எறும்பு கடித்தது. அது வலிக்கிறது. அதனைப் பெரிதாக்கி அழுவதும் உண்டு. அதனைப் பொருட்படுத்தாமலும் உணராமலும் வேலையில் ஈடுபடுவதும்*

*உண்டு. அவருக்கு அந்த எறும்பு கடித்ததால் வலி ஏற்படவில்லை என்றில்லை. வலி இருந்தது. அதனை அவர் பொருட்படுத்தவில்லை. பொருட்படுத்தாததற்குக் காரணம் உடல் பெறும் வேதனையைக்கூட மறக்கச் செய்யும் உயர்ந்த உணர்வில் உள்ள ஈடுபாடு. இறைவனிடத்தில் உள்ள ஈடுபாடு உலகியலை மறக்கச் செய்யும். உலகியலால் ஏற்படும் சுக துக்கம் அவனைப் பாதிப்பதில்லை. இதனால் விதியையே வென்றுவிடுகிறான். விதியும் தன் செயலை நிகழ்த்தித் தனது தடைபெறாத சக்தியை நிறைவேற்றியுள்ளபடியால் அதுவும் வீணாகவில்லை. இதுவே இறைவனின் தடைபெறாத செயல் சுதந்திரம், அஹதஸ்வாதந்திரியம் – என்பர் இதை.*

*இப்படி வழிபாட்டின் தன்மைக்கேற்ப பலனில் மாறுபாட்டை உணர்த்தி இறைவனிடம் பக்திகொள்ளும் முறையை உணர்த்துகிறாள் ஹேமலேகை.*

श्रुत्वेत्थं वचनं राम हेमचूडः प्रियोदितम्।
पप्रच्छ भूयस्तां कान्तां अतिहृष्टमनास्तदा॥ ६९॥
प्रिये महेश्वरं ब्रूहि यः शरण्यो भवेन्मम।
सर्वकर्ता स्वतन्त्रात्मा यच्छक्त्या नियतं जगत्॥ ७०॥

பரசுராமரே! ஹேமசூடன் தன் அன்புக்கினியாள் சொன்னதைக் கேட்டு மகிழ்ந்தவனாக மறுபடியும் அவளைக் கேட்டான். "பிரியே! நான் சரணடைய வேண்டியவரும் எல்லாவற்றையும் படைப்பவரும், தன்னிச்சைப்படி செயலாற்றுபவரும், உலகத்தைத் தன் சக்தியால் கட்டுப்படுத்துபவருமான அந்த மகேச்வரன் யார்? கூறுவாயாக.

तं विष्णुमाहुः केचिद्वै शिवमन्ये गणेश्वरम्।
तथा सूर्यं नृसिंहादीन् बुद्धं सुगतमेव च॥ ७१॥
अर्हन्तं वासुदेवं च प्राणं सोमं च पावकम्।
कर्म प्रधानमणवः इत्यादि बहुधा जगुः॥ ७२॥
जगत्कारणरूपं वै विचित्रमतभेदितम्।

உலகின் மூலகாரணப் பொருள் விஷ்ணுவெனச் சிலர், சிவன், கணபதி, ஸூர்யன், நரஸிம்மன், புத்தர், ஸுகதர், ஜினர், வாஸுதேவன், பிராணன்,

சந்திரன், அக்னி, வினை, பிரதானம், அணு என விசித்திரமான கொள்கைகளின் வேறுபாட்டால் பலவிதமாகக் கூறுகிறார்கள்.

तत्र क्वेश्वरबुद्धिस्तु कर्तव्या तत् समीरय ।। ७३ ।।
न ते ह्यविदितं किञ्चित् भवेदिति हि निश्चयः ।
यतः स भगवान् व्याघ्रपादो दृष्टपरावरः ।। ७४ ।।
अतस्ते योषितोऽप्येवं ज्ञानमेतद्विराजते ।
ब्रूहि मे श्रद्दधानाय प्रियायामृतभाषिणि ।। ७५ ।।
पृष्टैवं सा हेमलेखा प्रियेण प्राह हर्षिता ।

அந்த விஷயத்தில் எவரிடம் ஈசுவரன் என்ற எண்ணத்தைக் கொள்ள வேண்டுமென்பதை எனக்கு நன்கு விளக்குவாயாக! உனக்குத் தெரியாத பொருள் ஒன்றில்லை என எனக்கு நிச்சயம் உண்டு. (உனது தந்தை) வியாக்கிரபாதர் அறிவிற்குட்பட்டதையும் அப்பாற்பட்டதையும் அறிந்தவர். ஈச சக்தி பெற்றவர். அதனால் தான் பெண்ணாயிருந்தும் உனக்கு இந்த அறிவு துலங்குகிறது. அமிருதம் போன்று இனிய பேச்சுள்ளவளே! சிரத்தையுடனுள்ள உன் கணவனுக்கு இதனைக் கூறுவாயாக! இப்படிக் கணவனால் கேட்கப்பட்ட ஹேமலேகை மகிழ்ச்சியுடன் கூறினாள்.

नाथ ते संप्रवक्ष्यामि शृण्वीश्वरविनिर्णयम् ।। ७६ ।।
ईश्वरो हि जगज्जालप्रलयोत्पादकृद् भवेत् ।
स विष्णुः स शिवो धाता स सूर्यः सोम एव च ।। ७७ ।।
स एव सर्वथा सर्वः सर्वैरपि निरूपितः ।
न शिवो नापि विष्णुर्वा न धाता नान्य एव च ।। ७८ ।।

நாதரே! ஈசுவரனைப்பற்றிய நிர்ணயத்தை உமக்குக் கூறுகிறேன். பரமேசுவரன் ஒருவரே உலகக் கூட்டத்தின் அழிவையும், படைப்பையும் செய்பவர். அவரே விஷ்ணு, சிவன், பிரம்மா, ஸூர்யன், சந்திரன். அவரே எல்லாம் என எல்லோராலும் நிரூபிக்கப்பட்டுள்ளது. அவர் சிவனுமல்ல, விஷ்ணுவுமல்ல, பிரும்மாவுமல்ல, மற்றவருமல்ல.

*விஷ்ணு, சிவன் என்றவாறு பலதரப்பட்ட மூர்த்திகளில் எல்லாவற்றிலும் தொடர்ந்து அந்தந்த மூர்த்தியாய் விளங்குவது ஸ்வதந்திரமான சித்ஸ்வரூபமான பரம்பொருள் - பரமேச்வரன்- பரப்பிரும்மம் என்று பலவாறு குறிப்பிடப்படுவதே. ஒன்றோடொன்று*

*வேறுபட்ட வடிவமைப்பும், சக்தியும், மற்றதும் கொண்டதாகக் குறிப்பிடப்படும் விஷ்ணு, சிவன் முதலிய ஸ்தூல உருவங்கள் உண்மையில் வேறுபட்டவை அல்ல. எல்லாம் அந்த பரம்பொருளின் வேறுபட்ட தோற்றங்களே. அதனால் அவரைச் சிவனெனவோ, விஷ்ணுவெனவோ, மற்றவரெனவோ மட்டும் குறிப்பிடமுடியாது. அவர் சிவன்தான் விஷ்ணு அல்ல என்றோ, விஷ்ணு தான், சிவன் அல்ல என்றோ பிரித்துக் கூறமுடியாது.*

एतत्ते संप्रवक्ष्यामि शृण्वत्यन्तसमाहितः।
कर्तारं शिवमाहुस्ते पञ्चवक्त्रं त्रिलोचनम्॥ ७९॥
स कर्ता घटकर्तेव चेतनः सशरीरकः।
लोकेऽपि चेतनः कर्ता सशरीरो हि दृश्यते॥ ८०॥
अशरीरोऽचेतनो वा न कर्ता क्वचिदीक्षितः।

இதனை விளக்கிக் கூறுகிறேன். மிக்கக் கவனமுள்ளவராகக் கேளும். அவர்கள்(சைவர்கள்) சிவன் ஐந்துமுகமுள்ளவர், முக்கண்களுள்ளவர் என்பர். அவர் குயவனைப்போல் உலகைப் படைத்தவர், அறிவாளி, உடலமைந்தவர். எந்த கர்த்தாவும் உலகில் உடல் உள்ளவராகவும், சேதனனாகவும் காணப்படுகிறார். உடலில்லாதவரும் அறிவில்லாதவரும் கர்த்தாவாக இருப்பதை எங்கும் காணமுடியாது.

तत्र मुख्यं हि कर्तृत्वं चेतनस्यैव संभवेत्॥ ८१॥
यतः स्वप्नेष्वयं जीवः हित्वा स्थूलं शरीरकम्।
चैतन्यमयदेहेन सर्वानभिमतान् सृजेत्॥ ८२॥
अतः शरीरं करणं कार्ये कर्तुश्चिदात्मनः।

(உடல், அறிவுள்ள சேதனன் இவ்விரண்டுக்குமிடையே) இங்கு சேதனனே பிரதானமான கர்த்தாவாக முடியும். (உடல் அவ்வளவு அவசியமில்லை)ஏனெனில் கனவில் இந்த ஜீவன் இந்த ஸ்தூல உடலை விட்டுவிட்டு தனித்துச் சைதன்யமயமாக மட்டும் இருந்துகொண்டே விரும்பியதைப் படைத்துக் கொள்கிறான். அதனால் சேதனனான ஜீவனுக்குச் செயலாற்ற உடல் ஸாதனமாகமட்டுமே ஆகிறது.

जीवानां करणापेक्षा यतोऽपूर्णा स्वतन्त्रता ।। ८३ ।।
भगवांस्तु जगत्कर्ता पूर्णस्वातन्त्र्ययोगतः ।
अनपेक्ष्यैव यत्किंचित् सृजत्यविकलं जगत् ।। ८४ ।।

ஜீவனுக்கு செயல் சுதந்திரம் பூர்ணமானதல்ல. அதனால் ஸாதனத்தின் எதிர்பார்வை உள்ளது. உலகைப் படைக்கும் பகவானோ பூர்ண செயல் சுதந்திரமுள்ளவரானதால் எதனையும் எதிர்பாராமல் உலகைக் குறையின்றி படைக்கிறார்.

अतः शरीरं नास्त्येव ह्येष मुख्यविनिश्चयः ।
अन्यथा लोकवत्कर्तुः उपादानाश्रयो भवेत् ।। ८५ ।।
तथा च देशकालादिकारणप्रचयैर्युतः ।
जगत् सृजन्महेशानो जीव एव भवेत्तथा ।। ८६ ।।
पूर्णैश्वर्यं विहन्येत जगत्सृष्टे पुराऽपि च ।
सिद्ध्येत्तत्सर्वकर्तृत्वं विहतं स्यान्न संशयः ।। ८७ ।।

அதனால் (பரமேசுவரனுக்கு) உடலமைப்பே இல்லை என்று முக்கியமான கொள்கை. (உடலமைப்பு அவசியமாயின்) உலகத்திலுள்ளதுபோல் கர்த்தாவிற்கு ஸாதனத்தின் எதிர்பார்வை அவசியமானதாகிவிடும். அப்போது தேசம், காலம் முதலிய பல காரணங்களுடன் கூடியவராகவே பரமேசுவரன் உலகைப் படைப்பவரானால் அவரும் ஜீவனாகிவிடுவார். அவரது பூர்ணமான ஈச்வரத் தன்மை பாதிப்புறும். படைப்பிற்கு முன்பே (மற்ற சாதனங்களின் தேவை இருக்குமானதால்)ஸாதனங்கள் இருத்தல் அவசியம். அப்போது ஸர்வ கர்த்தா என்ற தன்மையும் பாதிப்புறும்.

*பரமேச்வரன் சிவனே, அவர் ஐந்துமுகம் கொண்டவர். முக்கண்கள் கொண்டவர். இவரே உலகைப் படைத்தவர் என்பார்கள் சைவர்கள். சிவன் என்பது அவரது உடலமைப்பா? அல்லது அந்த உடலினுள் உள்ள சேதனனா? (அறிவாற்றல் பெற்றவன் சேதனன்) என்றொரு கேள்வி எழும். உடலமைப்பும் அதனுள் அமைந்த சேதனனும் சேர்ந்தேதான் சிவன். உலகப் படைப்பில் இரண்டுமே செயல்புரிகின்றன என்று இதற்குப் பதில் கூறலாம். உலகில் உடலமைப்பும், சேதனனும் சேர்ந்தே தான் செயல்புரிவதைக் காண்கிறோம். சேதனனின்றி தனி உடலும் செயல்புரிவதில்லை. சேதனனும் உடலின்றி செயல்புரிய முடிவதில்லை என்பது நாம் பொதுவாக அறிந்த*

*விஷயம். அதன்படி முக்கண்களும், ஐந்துதலைகளுமுள்ள உடலும், அதனுள் ஸர்வஜ்ஞனான சேதனனும் கூடியவரே சிவன் என்று கூறுவதாகக்கொள்ளலாம்.*

*ஆனால் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் இது தவறென்று புலப்படும். கனவில் இந்த ஸ்தூல உடலின் தொடர்பின்றி ஜீவன் செயலாற்றுவதை உணர்கிறோம். அதன் அடிப்படையில் விழிப்பில் உள்ள ஸ்தூல உடல் ஜீவனுக்கு செயல்புரியச் சாதனம், உடலே ஜீவனல்ல. அதுபோல் முக்கண்கள், ஐந்து தலைகள் என்ற சிவனின் உடலமைப்பு சிவனது உலகப் படைப்புப் பணியில் சாதனமாகும் எனக்கொள்ளத்தகும்.*

*அதுவும் சற்றுத் சிந்தித்துப் பார்க்கும்போது தவறெனப் படுகிறது. ஜீவன் வரையறுக்கப்பட்ட செயல் திறமை படைத்தவன். இறைவனைப்போல் ஸர்வஜ்ஞனும் அல்ல, ஸர்வசக்தனுமல்ல. அவனுக்கே கனவில் உடலின்றி செயலாற்ற முடிகிறது. விழிப்பு நிலையில் மட்டும் செயலாற்றும்போது உடலாகிய சாதனம் அவசியத் தேவையாகின்றது. இறைவன் பூர்ண சுதந்திரர், ஸர்வஜ்ஞர், ஸர்வசக்தர். எதனையும் எதிர்பாராமல் செயலாற்றும் வல்லமை படைத்தவர். அதனால் அவர் இந்த ஸ்தூல உடலமைப்பின்றியே செயலாற்றுவார் என்பதில் விந்தைக்கு இடமில்லை. அது மட்டுமல்ல. ஜீவன் பார்ப்பதானால் கண் தேவை. பார்க்கப்படும் பொருள் தேவை. இவையின்றி பார்ப்பது நடைபெறாது. ஜீவன் கேட்பதானால் காது தேவை. கேட்கப்படும் பொருள் தேவை, இவை இன்றிக் கேட்பது முடியாது. அதுபோல் தேசம் காலம் போன்ற பல சூழ்நிலைகளின் உதவி தேவை. இந்தத் தேவைகள் ஈசுவரனுக்கு இல்லை. குயவனுக்கு மண்போல் இறைவனுக்கும் உலகைப் படைப்பதற்கு உபாதானப் பொருள் தேவைப்படின் அவர் எல்லாம் வல்லவர் என்பது பொய்யாகும். தேசமும் காலமும் சூழ்நிலையும் அவரைக் கட்டுப்படுத்துமாயின் அவர் முழு ஈசுவரனல்ல. (ஈச்வரன் – தன்னிஷ்டப்படி செயலாற்றும் வல்லமை படைத்தவர்.)*

*படைப்பதற்குமுன் இவ்வுலகின் மூலகாரணப் பொருள் ஒன்று அவரைவிட வேறுபட்டதாக இருக்கவேண்டும். அதைக்கொண்டு தானே உலகைப் படைத்திருக்கமுடியும்? அப்போது மூலகாரணப் பொருளின்றி அவரால் படைக்கமுடியாது எனத் தேறும். அந்த மூலகாரணப் பொருளைப் படைத்தவர் யார்? அவற்றிற்கு மூலப் பொருள் எது? இது முடிவற்ற கேள்வி, அப்போது எல்லாம்வல்ல இறைவன் என்பதும் தேறாது. அதனால் அந்தப்*

*பரம்பொருளுக்கு ஸ்தூல உடல் இல்லை. அவரைத் தவிர உலக மூல காரணமான பொருளும் இல்லை. அவரே தன்னையே உலகின் மூலகாரணப் பொருளாகவும் ஆக்கிக்கொண்டு படைப்பாளருமாகி அவற்றினுள் நின்று ஆட்டுவிப்பவராகவும் விளங்கித் தனித்தும் ஸ்வயம்ஜோதி வடிவில் நிற்கிறார் – ஸர்வனாகவும் ஏகனாகவும் என்பதே தத்துவம்.*

*இந்த தத்துவ அடிப்படையில் சைவர்களைப்போல் மற்றவர் கூறுவதும் முழுவதும் சரியானதாகத் தேறாது. ஸ்தூல உடல் தொடர்பினால் விஷ்ணு, சிவன் ஸூர்யன், புத்தன், ஜினன் என்ற பல்வேறு தோற்றங்கள் வழிபாட்டிற்குரியவையாகின்றன. உண்மை நோக்கில் வேறுபட்ட இத்தோற்றங்கள் தோன்றுமளவில் உண்மை. பரமார்த்த நிலையில் பரம்பொருளைத்தவிர வேறு பட்டவை அல்ல என்று தத்துவவிளக்கம் தருகிறாள் ஹேமலேகை.*

अतो हि दृश्यदेहाद्यमनपेक्ष्य जगत्सृजेत्।
नास्ति तस्मात्स्थूलदेहो वस्तुतः प्राणवल्लभ।। ८८ ।।

அதனால் தோன்றும் உடலமைப்பு முதலியவற்றை எதிர்பாராமல் இறைவன் உலகைப் படைப்பார். உண்மையில் அவருக்கு ஸ்தூல உடலமைப்பு இல்லை.

पररूपे ह्यदेहेऽस्मिन् मुह्यन्ति स्थूलबुद्धयः।
भक्तियुक्ताश्च तैर्ध्यातो यत्र यत्र यथा यथा।। ८९ ।।
तथा धत्तेऽनेकरूपं भक्तचिन्तामणिः स्वयम्।
अतश्चेतन एवेशस्तद्देहः स्याच्चितिः परा।। ९० ।।

உடல் தொடர்பற்றதும் அதற்கப்பாற்பட்டதுமான சைதன்ய வடிவுகொண்ட பரம்பொருள் விஷயத்தில் ஸ்தூலமான அறிவுள்ளவர் கலங்கி நிற்பர். பக்தியுள்ளவர்களும் அப்படியே. ஆனால் அந்த பக்தியுள்ளவர்களால் எங்கெங்கு எவ்வெவ்வகையில் தியானிக்கப்பட்டாலும் அவ்வாறே அநேக வடிவங்களைத் தாங்கி பக்தர்களின் எண்ணத்தை நிறைவேற்றும் சிந்தா-ாமணியாகத்தானே தோன்றுகிறார். அதனால் (இந்த வேறுபட்ட உடலமைப்பு. தன்னிஷ்டப்படி அமைத்துக்கொண்டது. ஆனதால்) இறைவன் பேரறிவு வடிவினரே. அவரது இஷ்டப்படி அமைந்துள்ள உடலமைப்பும் (ஜீவனது உடலமைப்பைப்போல் ஜடமாக இல்லாமல்) பேரறிவு வடிவமே.

चितिरेव महासत्ता सम्राज्ञी परमेश्वरी।

त्रिपुरा भासते यस्यां अविभिन्नं विभिन्नवत् ।। ६१ ।।
आदर्शनगरप्रख्यं जगदेतच्चराचरम् ।

சைதன்ய சக்தியே மேம்பட்ட ஸத்ஸ்வரூபம். அது தன்னிஷ்டப்படி செயலாற்றும் பேரரசி. இணையற்ற மேம்பட்ட வல்லமைபடைத்தது. (விழிப்பு, கனவு, துக்கம் என்ற மூன்று நிலைகள், படைப்பு, காத்தல், அழித்தல் என்று முச்செயல்கள், ஸ்தூலதேகம், ஸூக்ஷ்மதேகம், காரணதேகம் என்ற மூன்று தேகங்கள் என்றவாறுள்ள) முப்புரங்களுக்கு அப்பாற்பட்டவள். அவளிடத்தில் (அவளை அதிர்ஷ்டானமாகக் கொண்டு) அசைவதும் அசைவற்றதுமான இவ்வுலகம் அவளைக்காட்டிலும் வேறுபட்டதல்லவாயினும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் நகரத்தைப் போல் வேறுபட்டதாகத் தோன்றுகிறது.

तद्रूपैकत्वतस्तत्र नोत्तमाधमभावना ।। ६२ ।।
अपरे तु स्वरूपे हि कल्पितं मुख्यतादि हि ।
तस्मात्प्राज्ञ उपासीत परं रूपं हि निष्कलम् ।। ६३ ।।
असमर्थः स्थूलरूपं यद्बुद्धौ संगतं दृढम् ।
तदुपास्याहेतुतस्तु श्रेयः प्राप्नोत्यनुत्तमम् ।। ६४ ।।
नान्यथास्य गतिः क्वापि भवेद्वै कोटिजन्मभिः ।
इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे सत्सङ्गमाहात्म्यं
नाम सप्तमोऽध्यायः ।

அதனால் (பரம்பொருளுக்குச் சிவன், விஷ்ணு முதலிய தோற்றங்களுக்கும் வேறுபாடின்மையால்) அவை ஒன்றே ஆனதால் ஒன்று உயர்ந்தது ஒன்று தாழ்ந்தது என்று எண்ணத்தகாது. ஸ்தூல உருவில் ஏற்றத்தாழ்வு கற்பனை-யால் விளைந்தது. அதனால் அறிவாளி வேறுபாடற்ற பரம்பொருளை வழிபடவேண்டும். அப்படி வழிபடமுடியாதவன் மனத்தில் நன்கு பதிந்த ஸ்தூல வடிவைப் பலன் எதிர்பாராமல் வழிபட்டு மிகச் சிறந்த மேன்மையை அடைகிறான். ஈசனை வழிபடாமல் கோடிப்பிறவிகளிலும் அடைய வேண்டியதை அவனால் அடையமுடியாது.

***திரிபுராரஹஸ்யத்தின் ஞானகண்டத்தில் ஈசனின் ஸ்வரூபத்தை நிரூபணம் செய்யும் ஏழாம் அத்தியாயம்.***

# अष्टमोध्यायः

## எட்டாவது அத்தியாயம்

एवं प्रियावचः श्रुत्वा तत्वं महेशितुः।
त्रैपुरं चिन्मयं हेमलेखावक्येन निश्चितम्॥ १॥
आश्वस्ताचित्तचित्तरिस्त्रिपुरां गुणरूपां महेश्वरीम्।
ज्ञात्वा गुरुभ्यः परमां माहैश्वर्यविभावितः॥ २॥
तामेक भावानुगतः हेमचूडोऽभवत् दृढम्।

"இப்படி தன் மனைவியின் வார்த்தையைக்கேட்டு முப்புரங்களுக்கு அப்பாற்பட்டதும் பேரறிவு மயமாக உள்ளதுமான மகேசனின் உண்மை நிலையை நன்கு அறிந்து தெளிந்த மனத்தினனாக ஸகுண வடிவில் உள்ள தேவியைப்பற்றி குருமூலம் அறிந்து பரமேசுவரனின் சக்தியால் ஆட்படுத்தப்பட்டவனாகத் தேவியையே நன்கு ஒரே நோக்குடன் வழிபடுபவனாக ஆனான்.

एवं परोपासनेन व्यतीयुः केऽपि मासकाः॥ ३॥
त्रिपुरा परमेशानी प्रसादमकरोद् हृदि।
विषयाद् विमुखं चितं विचारापरमं बभौ॥ ४॥

இப்படிப் பராசக்தியின் வழிபாட்டில் சில மாதங்கள் கழிந்தன. மனத்தில் திரிபுராதேவி தோன்றி அருளினாள். மனம் பொருளாசையை விட்டுத் திரும்பியது. எப்போதும் தத்துவ விசாரத்திலேயே ஈடுபட்டதாக விளங்கிற்று.

एतावद् दुर्लभं लोके परानुग्रहमन्तरा।
विचाराप्रवणं चितं यन्मुख्यं मोक्षकारणम्॥ ५॥
राम यावन्न जायेत विचारपरमं मनः।
न तावछ्रेयसा योगः उपायानां शतैः क्वचित्॥ ६॥

பரசுராமரே! இந்த தத்துவ விசாரத்தில் ஈடுபட்ட மனோநிலை தேவியின் அருளின்றிக் கிடைக்காதது. அதுவே முக்கியமான மோக்ஷ காரணம். தத்துவவிசாரத்தில் மனம் ஈடுபடாதவரை நூற்றுக்கணக்கான உபாயங்களாலும் மேன்மை கிட்டாது.

अथ भूयः स कस्मिश्चित् दिने रहसि वै तया।

संगतः प्रियया़ऽत्यन्तविचारपरमानसः ॥ ७ ॥
आयान्तं स्वनिकेतं तं दूरात्कान्तं ददर्श सा।
उत्थाय तं समानीय स्वासने विनिवेश्य च ॥ ८ ॥
पादप्रक्षालनाद्यैस्तं पूजयित्वा यथाविधि।
प्रोवाचामृतनिष्यन्दसुन्दरं परमं वचः ॥ ९ ॥

ஒருநாள் தனிமையில் முடிவற்ற தத்துவ விசாரத்தில் ஈடுபட்ட மனத்தினனாயிருந்த அரசனை அவனது மனைவி நெருங்கினாள். தன் வீட்டை நோக்கித் தூரத்திலிருந்து வரும் தன் காந்தனை அவள் பார்த்தாள். எழுந்து அழைத்துத் தன் இடத்தில் உட்காரவைத்துக் கால் அலம்புதல் முதலிய உபசாரங்களால் முறைப்படி வழிபட்டுப்பின் அமுத தாரை போன்ற இனியதான வார்த்தைகளுடன் பேசினாள்.

प्रेष्ठ त्वामद्य पश्यामि चिराय ननु ते वपुः।
नीरूजं कच्चिदासीद्वै यतो रोगास्पदं वपुः ॥ १० ॥
तन्ममाचक्ष्व वृत्तान्तं यतो नाहं स्मृता त्वया।
ननु मामसमालोक्य चाप्रभाष कदापि ते ॥ ११ ॥
नात्यगाद्दिनभागोऽपि तदेवं कुत आस्थितम्।
मन्येऽहं तेऽनभिमते वर्तनं नहि वर्त्मनि ॥ १२ ॥
स्वप्नेऽपि वा कुतोऽन्यत्र कुत एवमभूद्वद।
कथं रात्रिस्त्वया नीता चैकापि युगसंमिता ॥ १३ ॥
मां विना प्राक् क्षणोऽप्येकः युगकल्पः सुदुःसहः।
इयुक्त्वा सा समाश्लिष्य खिन्नेवाभूत् क्षणं ततः ॥ १४ ॥

மிகவும் பிரியமானவரே! வெகுநாட்கள் கழித்து உம்மைப் பார்க்கிறேன். உமது உடல்நிலை நோயுற்றுள்ளதா? உடல் நோய்வாய்ப் படுவது இயற்கையாயிற்றே. ஏன் என்னை நீங்கள் நினைக்க வில்லை என்பதைக் கூறுவீர். என்னைப் பார்க்காமலோ, என்னுடன் பேசாமலோ எப்போதும் ஒருநாளின் ஒருநாளின் பகுதிகூடச் சென்றதில்லை. ஏன் இப்படி ஆயிற்று? கனவில்கூடத் தங்களுக்கு விருப்பமில்லாத வழியில் நான் செல்லவில்லை என்றே நினைக்கிறேன். மற்ற நேரத்தில் அப்படி நடப்பேனா? ஏன் இப்படியாயிற்று? நானின்றி ஒரு ராத்திரிகூட யுகப்பொழுதாயிருக்குமே எப்படி அதனைக் கழித்தீர். முன்பு நானின்றிக் கணநேரமும் யுகப்பொழுதுபோல் மிகவும் பொறுக்க முடியாததாக இருந்ததே என அவள் அவனை அணைத்துக் கொண்டவளாக வேதனைப்படுபவள் போலானாள்.

सोऽपि प्रियासमाश्लिष्टो नेषद्विकृतिमाययौ।
प्राह प्रिये न मामेवं विमोहयितुमर्हसि॥ १५॥
ज्ञाता मयासि सुदृढं नास्ति ते शोककारणम्।
परावरज्ञा त्वं धीरा मोहस्त्वां वै कथं स्पृशेत्॥ १६॥
तच्वां प्रष्टुं समायातो यत्तद्वक्ष्यामि संशृणु।
यत्प्राक् स्ववृत्तं कथितं तत्स्फुटं मे समीरय॥ १७॥

மனைவியால் இப்படி அணைக்கப்பெற்ற அரசன் சிறிதும் மாறுபாடடையவில்லை. அவன் மனைவியிடம் கூறினான். பிரியே நீ என்னை இப்படி மயக்கக்கூடாது. உன்னை நான் அறிவேன். உனக்கு வருத்தத்திற்குச் சிறிதும் காரணமில்லை. நீ பரம்பொருளையும் மற்றவற்றையும் நன்கு அறிந்தவள். தைரியமுள்ளவள். உனக்கு கலக்கம் ஏற்படாது. நான் உன்னிடம் கேட்க வந்துள்ளதைப்பற்றிக் கூறுகிறேன். அதனை விளக்கிக் கூறுவாயாக. முன் உன்னைப்பற்றிய கதை ஒன்றைக் கூறினாய்.

का सा ते जननी प्रोक्ता सखी वा तत्पतिश्च कः।
तत्पुत्राद्या अपि च के मम वा ते क्व सवद॥ १८॥
न तन्मया सुविदितं न तन्मन्ये मृषोदितम्।
किन्तु त्वया निगदितं व्यपदेशेन सर्वथा॥ १९॥
तद्विविच्य प्रकथय यथा ज्ञास्ये त्वहं स्फुटम्।
अहं त्वां सुप्रपन्नोऽस्मि छिन्धि मे हृदि संशयम्॥ २०॥

அந்த உன் தாய் யார்? அந்தத் தோழி, அவளது கணவர், அவர்களது பிள்ளைகள் முதலியவர்கள் இவர்கள் யார்? எனக்குச் சொல். அவற்றை நான் நன்கு அறியமுடியவில்லை. அவை பொய்யாகக் கூறியவையல்ல என்றே நம்புகிறேன். ஆனால் நீ அவற்றைப் பொருள் மறைத்துப் பேசியுள்ளாய். அவற்றை விளக்கி நான் நன்கு அறியும்படி கூறுவாயாக நான் உன்னை நம்பியுள்ளேன். என் மனத்திலுள்ள ஐயத்தைக் களைவாய்.

(5வது அத்தியாயத்தில் கூறப்பட்ட புதிரைப்பற்றி விளக்கத்தை அரசன் கேட்கிறான்.)

एवमुक्ता हेमलेखा प्रसन्नवदनेक्षण।
मत्वा सुनिर्मलधियं परानुग्रहसंयुतम्॥ २१॥
नूनमेषोऽतिविमुखः विषयेभ्योऽति धैर्यतः।
विद्धः शक्त्या महेशान्या फलितः पुण्यसंचयः॥ २२॥
कालः प्रबौधने चायं बोधयामि ततस्त्विव्रमम्।

இப்படிக் கூறப்பட்ட ஹேமலகை மலர்ந்த முகமும், கண்களும் உள்ளவளாக தேவியின் அனுக்ரகம் பெற்று அப்பழுக்கற்ற புத்தியுள்ள அரசனைக்கண்டு "இவர் பொருளாசையிலிருந்து மிகவும் விடுபட்டவராகத் தைரியத்துடன் உள்ளார். தேவியின் அருட்சக்தி நன்கு பதிந்தவராகக் காணப்படுகிறார். இவரது புண்ணியச் சேமிப்பு பக்குவ நிலையில் உள்ளது. இது தெளிவுபடுத்த உரியநேரம். அதனால் இவருக்கு விளக்குகிறேன்." என்று எண்ணிப் பேசினாள்.

नाथ तेऽहो महाभाग्यं प्राप्तमीशकृपावशात् ।। २३ ।।
अन्यथा नैव विषयवैरस्यं पश्यति क्वचित् ।
एतल्लक्षणमीशस्यानुग्रहे ज्ञेयमादितः ।। २४ ।।
भोगवैरस्यमपरं विचारप्रवणं मनः ।

நாதரே! தங்களுக்கு தெய்வ அருளால் பெரும்பாக்கியம் கிட்டியுள்ளது. இல்லாவிடில் பொருளில் நாட்டமின்மை ஏற்பட்டிருக்காது. இதுவே தெய்வ அருளின் அடையாளம் - ஒன்று போகப்பொருளில் நாட்டமின்மை, மற்றொன்று தத்துவ விசாரத்தில் மனத்தின் நாட்டம்.

हन्त ते संप्रवक्ष्यामि वृत्तिं प्रोक्तां सदाऽऽत्मनः ।। २५ ।।
परा चितिर्मे जननी सखी बुद्धिर्मता मम ।
अविद्या त्वसती सोक्ता यया बुद्धिः सुसंगता ।। २६ ।।
अविद्यायास्तु सामर्थ्यं लोके स्पष्टं विचित्रितम् ।
यद्रज्जौ सर्पमाभास्य महाभीतिं प्रयच्छति ।। २७ ।।

நான் உமக்கு ஜீவனின் நிலையைப்பற்றி முன் கூறியதை விளக்குகிறேன். பரசித் வடிவான தேவியே என் தாய். புத்தி என் தோழி. அவித்யையே அவளுக்குத் தோழியான அஸதீ. அவளுடன் புத்தி நட்புகொண்டாள். அவித்யையின் திறமை உலகமறிந்ததே. கயிற்றில் பாம்பைத் தோன்றவைத்துப் பெரும் திகிலை ஏற்படுத்துவது அவளது ஆச்சரியமான செயல்முறை.

महामोहस्तु तत्पुत्रो मनस्तस्य सुतोऽभवत् ।
तस्य पत्नी कल्पना स्यात् तत्सुताः पञ्च येऽभवन् ।। २८ ।।
ज्ञानेन्द्रियाणि ते पञ्च तत्स्थानं गोलकं भवेत् ।
विषयाणां प्रमोषस्तु संस्कारो मनसो भवेत् ।। २९ ।।
तद्भोगः स्वप्नभोगः स्यात्कल्पनायाः स्वसा तु या ।

महाशना भवेदाशा तस्या यौ तनुजावुभौ ।। ३० ।।
क्रोधो लोभश्च तावुक्तौ तत्पुरं तु शरीरकम् ।

அஸதியின் பிள்ளை மஹாமோஹம். அவனது பிள்ளை மனம். மனத்தின் மனைவி (விஷய சுகம் விரும்பத்தக்கதென்ற) கல்பனை, அவளது ஐந்து பிள்ளைகள் ஞானேந்திரியங்கள். அவைகளின் இருப்பிடமான (கண், காது, மூக்கு முதலிய) உறுப்புகள் அவர்களின் வீடுகள். வெளிப் பொருள்களால் மனம் திருடப்படுகின்றது. அது மனத்தில் ஸம்ஸ்காரமாகப் பதிகின்றது. அங்கு ஏற்படும் அனுபவம் கனவில் ஏற்படும் சுகம் போன்றது (பொய்யானது). கல்பனையின் சகோதரி பேராசை, மகாசனை என்பவள். அவளது பிள்ளைகள் கோபமும், லோபமும். அவர்கள் நகரம் இந்த உடல்.

मम यस्तु महामन्त्रः स्वरूपस्फुरणं हि तत् ।। ३१ ।।
प्राणः प्रचारः संप्रोक्तः मनसस्तु प्रियः सखा ।
कान्ताराद्यास्तु नरकाः एवं सर्वं प्रकीर्तितम् ।। ३२ ।।

நான் பெற்ற மஹாமந்திரம் தன்னிலையான ஆத்ம தத்துவத்தின் ஞானம். அஸ்திரனது நண்பனான ப்ரசாரன் என்பது மனத்தின் உதவியாளனான பிராணன். நரகமே, காடு முதலியவை. இவ்வாறு எல்லாம் சொல்லப்பட்டது.

मया बुद्धेः सङ्गमस्तु समाधिरभिधीयते ।
मन्मातृलोकसंप्राप्तिः मोक्षः प्रिय उदाहृतः ।। ३३ ।।
एवं प्रोक्तः स्ववृत्तान्तः त्वमप्येवंविधो ननु ।
तद्युक्त्यैतत् सुविज्ञाय परं श्रेयः समाप्नुहि ।। ३४ ।।
इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
संसाराख्यायिकाविवरणं नाम अष्टमोध्यायः ।

புத்தி என்னுடன் கூடியதென்பது ஸமாதி. அதனால் தாயின் உலகை அடைந்ததென்பது மோக்ஷம். இவ்வாறு கதையை விளக்கினேன். நீங்களும் இப்படித்தானே இருக்கிறீர்கள்! நீங்களே இதனை நன்கு சிந்தித்து மேம்பட்டசிரேயஸ்ஸை அடைவீர்களாக.

*திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் ஸம்ஸாரக் கதை பற்றிய விளக்கமாகிய எட்டாம் அத்தியாயம்.*

# नवमोध्यायः

## ஒன்பதாவது அத்தியாயம்

श्रुत्वेत्थं प्रियया प्रोक्तं हेमचूडोऽतिविस्मितः।
हर्षगद्गदया वाचा पुनर्वक्तुं प्रचक्रमे॥ १॥

ஹேமசூடன் இவ்விதம் மனைவி கூறியதைக் கேட்டு மிகுந்த வியப்படைந்தவனாக மகிழ்ச்சியால் தழதழத்த குரலுடன் பேசத் தொடங்கினான்.

धन्या प्रियेऽसि निपुणा अहो ते ज्ञानवैभवम्।
किं वर्णयामि यत्प्रोक्तमाख्यारूपतयाऽखिलम्॥ २॥
एवंविधं स्ववृत्तं मे नाभवद्विदितं क्वचित्।
त्वदुक्त्याहं संप्रति तत्करामलकवत्स्फुटम्॥ ३॥
स्मराम्यनुभवाम्यन्तरहो लोकक्रियाऽद्भुता।

" நீ மிகவும் புண்ணியம் செய்தவள். அறிவில் தேர்ந்தவள். உன் அறிவின் விரிவு வியக்கத்தக்கது. நீ கதையுருவில் கூறியதனைத்தையும்பற்றி என்ன சொல்வேன்? இத்தகைய ஜீவனது நிலை இதுவரை எவ்வகையிலும் என்னால் அறிந்துகொள்ளப்பெறவில்லை. உனது பேச்சால் அது உள்ளங்கை நெல்லிக்கனிபோன்று தெளிவாகி விட்டது. நன்கு முன் நடந்தவற்றை நினைவில் கொள்கிறேன். தற்போது நடப்பதை அனுபவிக்கிறேன். உலகின் செயல்முறை மிகவும் விந்தையானது.

का सा परा चितिर्माता कथं तस्यास्तु नो जनिः॥ ४॥
के वा वयं स्वरूपं किं अस्माकं तद् ब्रवीहि मे।
इति पृष्टा हेमलेखा रामोवाच प्रियं प्रति॥ ५॥

(அந்தக் கதையில் வந்த) அந்த பரசித் எனும் தாய் யார்? அவளிடமிருந்து நமது தோற்றம் எப்படி ஏற்பட்டது? நாம் யார்? நமது உண்மை நிலை என்ன? இதனைக் கூறுவாய்" இப்படிக் கேட்கப்பட்ட ஹேமலேகை கணவரைப் பார்த்துக் கூறினாள்.

नाथ शृणु प्रवक्ष्यामि गूढार्थमिदमादरात्।
विचारयात्मनो रूपं बुद्ध्याऽत्यन्तविशुद्धया॥ ६॥
न दृश्यं नापि तद्वाच्यं अतो वक्ष्यामि तत्कथम्।

நாதரே! மிகவும் ரகசியமான பொருளைக் கூறுகிறேன். கருத்துடன் கேளுங்கள். மிகத் தெளிந்த தூய அறிவால் ஆத்மாவின் நிலை பற்றிச் சிந்தியுங்கள். அது காட்சிப் பொருளுமல்ல, சொல்லால் விளக்கக்கூடியதுமல்ல. அதனால் எப்படி அதனை விளக்குவேன்?

*தெளிந்த அறிவு தூய்மையானது. புறப் பொருளை நோக்கிப் பொறிகளின் வழியே செல்லும்போது அறிவின் தூய்மை கெட்டு விடுகிறது. புறப்பொருள் நாட்டமில்லாத அறிவே தூய அறிவு, தெளிந்த அறிவு. ஆத்ம தத்துவம் பிறர் சுட்டிக்காட்டி விளக்கப் பெறுவதல்ல. தன் அனுபவத்தால் மட்டுமே உணரக்கூடியது.*

ज्ञाते स्वात्मस्वरूपे वै ततो ज्ञास्यसि मातरम् ।। ७ ।।
न ह्यादेशः स्वरूपेऽस्ति तत आदेष्टृवर्जितम् ।
स्वं रूपं स्वात्मना पश्य शुद्धबुद्धिसमाश्रयम् ।। ८ ।।

தனது ஆத்ம நிலை நன்கு உணரப்பெற்றதும் பின்னர் தாயை நன்கு அறிந்துகொள்வீர்கள். ஆத்ம நிலைபற்றி உபதேசமென்பது இயலாதது. அதனால் உபதேசிக்க வல்லவரின் உதவி இன்றியே தெளிந்த அறிவின் உதவிகொண்டு தானே தன் நிலைபற்றி உணர்வீர்.

*'தான்' ஆக இருப்பதைப் பிறர் சுட்டிக்காட்ட முடியாது. புறப்பொருள் நாட்டமில்லாத புத்தி இதனைக் கண்டுகொள்ளும். புறப்பொருள் எனச் சுட்டிக்காட்டக் கூடிய பொருள்களனைத்தும் ஆத்மாவல்ல. காட்சிப் பொருள்களனைத்தும் ஆத்மாவல்ல. அத்தகைய ஆத்மாவல்லாத பொருளாக – காட்சிப் பொருளல்லாத – காணும் தன்மை கொண்டதொன்றே ஆத்மா.*

देवादितिर्यगन्तानां भान्तं भानैरभासितम् ।
भान्तं सर्वत्र सर्वस्य सर्वदा मानवर्जितम् ।। ९ ।।
कथं कुत्र कदा केन निरूप्येतापि लेशतः ।
मन्नेत्रं दर्शयेत्येवमुक्तमेतत् प्रियाधुना ।। १० ।।
नात्राचार्यस्योपयोगो यथा नयनदर्शने ।
निपुणोऽपि महाचार्यः कथं नेत्रं प्रदर्शयेत् ।। ११ ।।

பிரும்மா முதலிய தேவர் முதலாகப் புழு ஈறாக எல்லாவற்றுள்ளும் ஆத்மாவாக விளங்குவதும், சிற்றறிவிற்ககப்படாத்தும், எங்கும் எக்காலும் விளங்கிக்கொண்டிருப்பதும், காலம், தேசம், பொருள் முதலியவற்றிற் கடங்காததும் (பொறிகளுக்குப் புலப்படாததும்) ஆனதொன்றை எப்படி எவ்வகையில் எப்போது சிறிதளவாவது யாரால்தான் இதுதான் ஆத்மாவென குறிப்பிட்டுக் காட்டமுடியும்? இது என் கண்ணைக் காட்டு என்பதுபோலாகும்.

நாதரே! தன் கண்ணைத் தானறிய ஆசிரியரின் உதவி தேவை இல்லை. (பயன்படாது) மிகவும் கல்வியில் வல்லுனரான பேராசிரியரும் கண்ணை எப்படிக் காட்டுவார்?

*ஆத்மா என்பது என்ன? ப்ரும்மா முதல் புழுவரை உள்ள அனைத்து சரீரத்திலும் அது நிறைந்துள்ளது. சரீரமெனக் குறிப்பிடப்பெறாத உருக்கொண்ட மலையும், மணலும் ஆத்மவஸ்து நிரம்பியதே. பிரும்மா சரீரத்தில் உள்ள ஆத்மா பெருமையுள்ளது, புழு சரீரத்திலுள்ளது தாழ்ந்ததென்றோ, யானை சரீரத்திலுள்ளது பெரிது, புழு சரீரத்தில் உள்ளது சிறிதென்றோ பேதம் கிடையாது. அந்தந்த சரீரத்தினுள் மட்டும் ஆத்மா அடங்கியுள்ளது, வெளியில் ஆத்மா இல்லை என்பதும் இல்லை. எங்கும் நீக்கமற அது நிரம்பி உள்ளது. அதனால் ஏற்றத்தாழ்வோ இல்லாத இடமோ பெரிது சிறிது என்ற தன்மையோ கிடையாது. எங்கேனும் ஒன்றினுள் அடங்கியிருந்தாலும், குறிப்பிட்ட இடத்திலோ, காலத்திலோ, இருந்தாலும், அதனைக்காட்டிலும் வேற்றுப்பொருள் ஒன்றிருந்து அதனிடமிருந்து இதனைப் பாகுபடுத்திக் காட்டமுடிந்தாலும் இது தான் ஆத்மா என்று குறிப்பிடமுடியும். நமது கண்கள் பார்க்கின்றன. அந்த கண்கள் அமர்ந்த கோளகங்களை – கண்ணெனும் அவயவத்தைத்தான் நாம் பார்க்கமுடியும். பிறர் அதனைச் சுட்டிக்காட்டமுடியும். ஆனால் அவை கண்கள் அல்ல, அதனுள் அமைந்த பொறி (இந்திரியம்) கண்கள், பிறர் அதனைக் காட்டமுடியாது. நாமும் பார்க்க முடியாது. நாம் ஒன்றைப் பார்ப்பதால் அதற்குரிய இந்திரியமான கண்கள் இருப்பதை உணர்கிறோம். இந்த உணர்வை வேறொருவர் ஏற்படுத்தமுடியாது. ஆத்மா இருப்பதையும் இப்படித்தான் தானே உணரமுடியும். இதனைப் பிறர் சுட்டிக்காட்ட முடியாது, சுட்டிக் காட்டக்கூடியதனைத்தும் ஆத்மாவல்லாததே, எத்தனை தவவலிவும், கல்வியறிவும், திறமையுமிருந்தாலும் ஆத்மாவைப் பிறருக்கு விளக்க யாராலும் முடியாது. அப்படியாயின் ஆத்மாவைப்பற்றி அறியக் குருவை நாடவேண்டுமென்று உபனிடதம் கூறுவது தவறா என்ற கேள்வி எழும். ஆத்ம விஷயத்தில் குருவின் உதவி எத்தகையது என்பதை ஹேமலேகை விளக்குகிறாள்.*

अतो गुरुरुपायोऽत्र तदुपायप्रदर्शनात्।

அதனால் குருவானவர் நம்மை அதனை அறியும் வழியைக் காட்டி அதனருகே அழைத்துச் செல்பவராகிறார்.

*ஆத்மாவை நாமே உணரவேண்டும். நமக்கு உணரத் தெரிய வில்லை. உணர்வது எப்படி என்பதனைக் கோடிகாட்டுகிறார். அதற்கான வழியைக் காட்டுகிறார். அப்படி நம்மை ஆத்மாவின் அருகே அழைத்துச் செல்கிறார். அவர் காட்டிய வழியில் நாம் ஆத்மாவை உணர முற்பட்டு உணர்கிறோம்.*

*ஆத்மாவாகவே ஆகிறோம். இந்த வகையில் அருகாமைக்கு அழைத்துச்செல்வதால் குரு உபாயம் (உப – அருகில் ஆயம் – செல்வது) ஆகிறார். உபாயத்தை – அருகில் செல்லும் வழியைக் காட்டுகிறார்.*

तत्ते वक्ष्याम्युपायं तत् शृणु संयतमानसः ॥ १२ ॥
यावत् त्वमात्मनि ममेत्येवं तु प्रतिपश्यसि।
ततः परं निजं रूपं यन्ममेति न भातिते ॥ १३ ॥
गत्वैकान्ते विविच्यैतत् यद्यद् भाति ममत्वतः।
तत्तत् परित्यज्य परं स्वात्मानमभिलक्षय ॥ १४ ॥

அதனால் ஆத்மாவைக் கண்டறிவதற்கான உபாயமொன்றைக் கூறுவேன். மனத்தைக் கட்டுப்படுத்தியவராக அதனைக் கேளுங்கள். ஆத்மா என்று அறிந்த ஒன்றில் என்னுடையது என்று எதனைக் கருதுகிறீர்களோ அதனைத் தாண்டியதும் என்னுடையதாகக் காணப்படாததும் தான் ஆத்மா. தனிமையைச் சென்றடைந்து இதனைப் பகுத்தறிந்து எது எது என்னுடையது என்று தோன்றுகிறதோ அதிலிருந்து பிரித்துத் தன் ஆத்மாவை உணர்வீர்.

यथाऽहं ते ममत्वेन भासनान्नात्मता मयि।
संबन्धमात्रादात्मीया न स्वरूपगता ह्यहम् ॥ १५ ॥
ममार्थमखिलं त्यक्त्वा यत्त्यक्तुं नैव शक्यते।
तमात्मानं समालक्ष्य परं श्रेयः समाप्नुहि ॥ १६ ॥

(தங்களுடைய மனைவியாகிய) நான் எப்படி "என்னுடையவள்" என்று தோன்றுவதால் என்னிடத்தில் தங்களுக்கு 'ஆத்மா' என்ற எண்ணம் தோன்றுவதில்லையோ, தங்களைச் சேர்ந்தவளே தவிர தங்களது ஸ்வரூபமாக ஆனவள் அல்லவே, அதுபோல் 'என்னுடையது' என்று தோன்றும் பொருளனைத்தையும் நீக்கிவிட்டு எதனை அப்படி நீக்க இயலவில்லையோ அதனை ஆத்மாவாகக் கண்டு மேன்மையான சிரேயஸ்ஸை அடைவீராக.

*ஆத்மாவும், ஆத்மாவல்லாததும் இனம் பிரிக்க முடியாதபடி பின்னிக்கிடக்கின்றன. அவற்றில் ஆத்மாவையும், ஆத்மா வல்லாததையும் பிரித்துப் பார்ப்பது எப்படி? இதற்கு ஹேமலேகை உபாயம் கூறுகிறாள். உடல், மனம் முதலிய பல ஆத்மாவாகத் தோன்றுகின்றன. இதில் எது ஆத்மா? எது ஆத்மா அல்ல? நான் எது? எனது என எதனைக் கருதுகிறானோ அது நான் அல்ல. அது என்னைக் காட்டிலும் வேறுபட்டதே. என் வீடு எனும்போது வீட்டில் எனது என்ற எண்ணம் தோன்றுகிறது. அது நான் அல்ல. வீடு வேறு, நான் வேறு. என் மனைவி எனும்போது என்னுடன் எத்தனை நெருக்கமிருந்தாலும் ஒருயிர் எனக் கருதினாலும் அவள் வேறு நான் வேறு. அப்படியே இவ்வுடலை 'நான்' எனக் கருதினாலும் என் உடல்*

*எனக் கூறுகிறேன். அப்போது என்னைக்காட்டிலும் அது வேறுபட்டதாகத்தானே இருக்க வேண்டும்? அப்படி என் கண், என் மனம், என் புத்தி என்றவாறு எதையெல்லாம் 'எனது' எனக்கொள்கிறேனோ அதுவெல்லாம் 'நான்' ஆக இருக்கமுடியாதே? 'நான்' வேறு 'எனது' வேறு. நானாக இருப்பதை எனது எனக் கூறமாட்டேன். எனது நான் என்று குறிப்பிடுவது உண்டா? இப்படிப் பகுத்தறியும்போது எதனை எனது என்று உணர முடியவில்லையோ, எதனை என்னைக் காட்டிலும் வேறுபட்டதாகப் பிரிக்கமுடியவில்லையோ அதுவே ஆத்மா. இதனைத் தனிமையிலிருந்து பகுத்தறிவால் பார்க்கத் தூண்டுகிறாள்.*

इत्युक्तः प्रियया हेमचूड उत्थाय वै द्रुतम्।
ययावश्वं समारुह्य तत्क्षणे नगराद्बहिः ॥ १७॥

இப்படி அன்புக்கினியாளால் கூறப்பட்ட ஹேமசூடன் உடன் வேகமாக எழுந்து குதிரையில் ஏறி நகரத்திற்கு வெளியே சென்றான்.

उद्यानं नन्दनसमं प्रविश्य क्षणमात्रतः।
वनान्तः सौधमुन्नम्रं स्फाटिकं प्रविवेश ह ॥ १८॥

கணநேரத்திற்குள் காட்டினிடையே உள்ள நந்தனவனத்திற்கொப்பான தன்தோட்டத்தினுள் நுழைந்து மிகவும் உயர்ந்துள்ள மாளிகையின் ஸ்படிகக்கற்களால் அமைந்த உப்பரிகையை அடைந்தான்.

*தத்துவ விசாரத்திற்குத் தனிமையும் அமைதியும் தேவை. புத்தி தெளிவதற்கான சூழ்நிலைதேவை. காட்டினிடையே அழகாகத் தனிமைக்கென்றே பூர்ணப் பாதுகாப்புடன் அமைந்திருந்த தோட்டம். உலகை மறந்து சிந்திக்க நெடிதுயர்ந்த மாளிகை. மனத்தெளிவு தரக் குளிர்ந்த நீரோட்டமுள்ள ஸ்படிகக் கற்களால் ஆன உப்பரிகை, இதனைச் சென்றடைந்தான்.*

विसृज्यानुचरान् सर्वान् द्वारपालानशासयत्।
न कोऽप्यत्र प्रविशतु मय्येकान्तविचारणे ॥ १९॥
राजामात्याश्च गुरवो राजा वाऽप्यत्र संगतः।
अप्रवेश्या एव यावदहमाज्ञां दिशामि वः ॥ २०॥
इत्युक्त्वारुह्य सौधाग्र्यं नवमीं भूमिमाविशत्।

(ஹேம சூடன்) தன் பணியாளர் அனைவரையும் விலக்கிவிட்டு வாயிற்காப்பவர்களுக்கு உத்தரவிட்டான். – 'நான் தனித்து தத்துவ விசாரத்தில் உள்ளபோது யாரும் இங்கு நுழையக்கூடாது. அரசரின்

மந்திரிகளோ ராஜகுருக்களோ, அரசரோ இங்கு வந்தவர் யாராயினும் அவர்களை நான் உத்தரவிடும்வரை உள்ளே அனுமதிக்கக்கூடாது". இவ்வாறு கூறிவிட்டு மாளிகையின் ஒன்பதாவது தளத்தில் ஏறினான்.

तत्र वातायने चित्रे सर्वलोकावलोकने ।। २१ ।।
आसने मृदुतूलाढये विवेशान्यविवर्जितः ।
मनः समाधाय दृढं विचारमकरोत्तदा ।। २२ ।।

அங்கு உலகனைத்தையும் பார்க்கத்தக்க அழகான காற்றோட்டமுள்ள பலகணிக்கருகே மென்மையுள்ள ஆஸனத்தில் தனித்து உட்கார்ந்தான். மனத்தை நிலை நிறுத்தித் திடமாகத் தத்துவ விசாரம் செய்தான்.

नूनमेते जनाः सर्वे कथमेवं विमोहिताः ।
नैकोऽप्यत्र विजानाति स्वात्मानं लेशतोऽपि वै ।। २३ ।।

இந்த மக்கள் அனைவரும் ஏன் இவ்வாறு மயங்கியுள்ளனர்? ஒருவரும் சிறிதும் தன்னைப் பற்றி அறியவில்லையே!

सर्वोऽपि स्वात्मनो हेतोः करोति विविधाः क्रियाः ।
केचित् पठन्ति शास्त्राणि साम्नायांगानि नित्यशः ।। २४ ।।
केचिध्दनान्या र्जयन्ति केचिच्छासति चावनिम् ।
अन्ये युध्यन्ति रिपुभिः अन्ये भोगैकलंपटाः ।२५ ।।
कुर्वन्त्येतत् स्वार्थमेते स स्वात्मा कतमो भवेत् ।
नैनं जानाति कोऽप्यत्र कुत एवमयं भ्रमः ।। २६ ।।

அவரவர் தன் தனக்காகப் பல பணிகளைப் புரிகின்றனர். சிலர் சாஸ்திரங்களையும் வேதங்களையும் வேதாந்தங்களையும் தினமும் படிக்கின்றனர். சிலர் செல்வத்தைச் சம்பாதிக்கின்றனர். சிலர் பூமியை ஆள்கின்றனர். சிலர் எதிரிகளுடன் போரிடுகின்றனர். சிலர் போகங்களை அனுபவிப்பதிலேயே மெய்மறந்துள்ளனர். இவர்கள் அனைவரும் "தனக்காகவே" இப்படிச் செய்கின்றனர். எனினும் அந்தத் "தான்" எப்படிப்பட்டவன் என்பதை யாரும் அறியவில்லையே! ஏன் இந்த அறியாமை?

अहो यथावदात्मानं अविदित्वैव वै कृतम् ।
व्यर्थं स्वप्ने कृतमिव तदद्य विमृशामि तम् ।। २७ ।।
गृहधान्यराज्यधनयोषित्पश्वादि किञ्चन ।
न मे स्वरूपं भवति त्वनहन्ताश्रयत्वतः ।। २८ ।।
मदर्थभूतताहेतोः देहोऽहं स्यां हि सर्वथा ।

நன்கு தன்னை அறிந்துகொள்ளாமல் செய்ததனைத்தும் கனவில் செய்ததுபோல் பொருளற்றதல்லவா? அதனால் இதுபற்றிச் சிந்திக்கிறேன். வீடு, தானியம், செல்வம், மனைவி, கால்நடைகள் முதலியவை ஏதாயினும் அவற்றில் நான் என்ற எண்ணம் ஏற்படாததாலும் என்னுடையதாக இருப்பதாலும் அவை என் ஸ்வரூபம் அல்ல. (அவை 'நான்"அல்ல) இந்த உடல் நானாக இருக்கலாம்.

नूनं क्षत्रियदायादो गौरागोऽहं न संशयः ।। २६ ।।
अहन्तया समाक्रान्ताः तथैतेऽपि जनाः परे ।

நான் க்ஷத்திரியர் பிரிவைச் சார்ந்தவன். வெண்ணிறமுள்ள மேனிவண்ணம் படைத்தவன். இதில் ஐயமில்லை. இதேபோல் மற்றவர்களும் (அவரவரது உடலில்) தான் தான் என்ற எண்ணமுள்ளவர்களாகவே காணப்படுகிறார்கள்.

इति निश्चित्य दध्यौ तं देहं राजकुमारकः ।। ३० ।।
अथ देहस्य चात्मत्वं प्रतिषेद्धुं प्रचक्रमे ।

அரசகுமாரன் இப்பம ், தீர்மானித்து தன் உடலைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்தான். பின் அந்த உ ல் 'தான்' என்பதனை மறுக்கத் தொடங்கினான்.

अहो कथं देह एष ममतायाः समाश्रयः ।। ३१ ।।
रुधिरास्थ्यादिसंघातः प्रतिक्षणविकारवान् ।
मम रूपं भवेन्नूनं छिन्नमेतत्तु लक्ष्यते ।। ३२ ।।
काष्ठलोष्टसमत्वेन स्वप्रादौ चान्यथा स्थितः ।
नाहं देहोऽन्य एव स्यां प्राणोऽप्येष तथाविधः ।। ३३ ।।
मनो बुद्धिश्च नाहं स्यां यत एतन्ममेरितम् ।
अतो देहादिबुद्ध्यन्तात् अन्य एव न संशयः ।। ३४ ।।

'ரத்தம் எலும்பு முதலியதின் கூட்டமானதும் கணந்தோறும் மாறக்கூடியதும் என்னுடையது என்ற எண்ணத்திற்கு இடம் தருவதுமான இந்த உடல் எப்படி எனது வடிவமாயிருக்கும்? உடலின் பகுதி வெட்டப்பட்டதாயின் விறகுபோல் ஒட்டாஞ்சல்லிபோல் (உயிரற்று) காணப்படுகிறது. கனவு முதலிய நிலைகளில் உடல் வேறுபட்டதாகக் காணப்படுகிறது. அதனால் இந்த உடல் நான் அல்ல. வேறானதே, ஏனெனில் உடல் என்னுடையதெனக் கூறப்படுகிறது. அப்படியே பிராணனும் மனமும் புத்தியும்கூட நான் அல்ல. அதனால் உடல்முதல் புத்தி ஈறானதிலிருந்தும் நான் வேறுபட்டவனே. இதில் சந்தேகமில்லை.

अहं कदाचिन्नास्मीति भासनाभावहेतुतः।
सर्वदाऽहं भासमानः स्थित एव न संशयः॥ ३५॥

எந்நிலையிலும் 'நான்' இல்லையென்று உணர்வு இல்லாத காரணத்தால் 'நான்' என்பது எப்போதும் விளங்கிக்கொண்டே இருக்கிறது. ஐயமில்லை.

भासमानस्य तु मम केन भानमिति स्फुटम्।
न हि जानामि तत्कसमादेतन्न विदितं मया॥ ३६॥

அப்படி விளங்கும் 'நான்" எதனால் அறியப்படுகின்றதென்பதை மட்டும் ஏன் அறியவில்லை?

घटादिकं चक्षुराद्यैर्भासते भुवि नान्यतः।
प्राणस्त्वचा विभात्येष मनो ज्ञानेन चोहितम्॥ ३७॥
एवं बुद्धिः, केन च मे भासनं, नाविदं त्विदम्।
अथैषां भासनादेव नात्मा भासेत मे यदि॥ ३८॥
तर्हि नो विमृशाम्येतान् ततो मे भासनं भवेत्।
इति निश्चित्य मनसा जहौ मानसगोचरम्॥ ३६॥

குடம் முதலியவை கண்களால் உணரப்படுகின்றன. வேறு வகையில் உணரப்படுவதில்லை. பிராணன் தோலில் ஸ்பர்ச உணர்ச்சியால் உணரப்படுகிறது. அறிவால் மனமிருப்பது ஊகிக்கப்படுகிறது. அப்படியே புத்தியும். எதனால் 'நான்' உணரப்படுகிறேன்? இதனை நான் அறியவில்லையே! இவை உணரப்படுவதாலேயே ஆத்மா உணரப் படுவதில்லையாயின் நான் இவற்றைப் பற்றிச் சிந்திக்கமாட்டேன். அதனால் ஆத்மாவின் உணர்வு எனக்கு ஏற்படும்." என எண்ணி மனத்தில் பதிவதை விட்டான்.

*ஹேமலேகை கூறியபடி ஹேமசூடன் தனித்திருந்து தத்துவ விசாரம் செய்கிறான். மேலெழுந்தவாரியாக நான் என்று உணரப்பட்டிருந்தும் நன்கு சிந்திக்கையில் என்னுடையது என்ற உணர்விற்கு இடம் தருவதாயிருந்தால் அது ஆத்மா அல்ல. எதனிடம் நான் என்ற எண்ணம் மட்டும் ஏற்படுமோ என்னுடையது என்ற எண்ணமே ஏற்படாதோ அது ஆத்மா. இது ஹேமலேகையின் சிந்தனை அளவுகோல்.*

*நான் ஒருவன். உடல் பலவற்றின் கூட்டு. நான் எந்நிலையிலும் மாறாதவன். உடல் ஒவ்வொருகணத்திலும் மாறிக்கொண்டேயிருப்பது. நான் எனது நான் அல்ல. உடல் எனது உடல், என்னை வெட்டிப் பிரிக்கமுடியாது. உடலை வெட்டிப் பிரிக்கலாம். நான் எங்கும் எப்போதும் சேதனன். வெட்டியகற்றப்பட்ட கைகால் முதலியவை கட்டைபோல் கிடக்கும். விழிப்பு,*

*கனவு, தூக்கம் என்ற மூன்று நிலையிலும் நான் மாறுவதில்லை. விழிப்பில் உணர்ந்து கொண்டிருந்த உடல் தூக்கத்தில் கட்டையாக இருக்கிறது. அதனால் இந்த உடல் நான் அல்ல.*

*பிராணனும் மனமும் புத்தியும் இப்படி என்னுடையது என்ற உணர்விற்கு உட்படுபவையாதலால் 'நான் " அல்ல.*

*இங்கு ஒரு சந்தேகம் எழலாம்– உடல் முதலியவை ஆத்மா அல்ல என்பதை ஏற்றுக்கொள்வோம். உடல் முதலியவற்றைத் தவிர ஆத்மா எனத்தனித்துப் பொருளைக் காணோமே! அதனால் அதுவும் தவறு. ஆத்மா என்பது சுட்டிக்காட்ட முடியாதிருக்கலாம். விழிப்பு முதலிய மூன்று நிலைகளிலும் "நான்" என்ற உணர்ச்சி மறைவதில்லையே! அதனால் ஆத்மா என்பது சூன்யமல்ல. "ஸத்" ஆனதுதான். எந்நிலையிலும் "நான் இல்லை. உடலோ மற்றதோ தான் உள்ளது." என்ற உணர்வு ஏற்படுவதில்லையே! மேகத்தில் மறைந்த சூரியனைப்போல் புலப்படும் மேகத்தில் உள்ள ஒளியைக் கொண்டு சூரியனை அனுமானம் செய்வதுபோல் ஆத்மா இருப்பதாக வாதிக்க முடிகிறதே தவிர ஆத்மா தனித்து உணரப்படவில்லையே ஏன்?*

*ஒன்றை உணர்வதற்குத் தகுந்த பொறிதேவை. உடலைக் கண்களால் உணர்கிறோம். உடற்கூட்டைக்கொண்டு பிராணனை உணர்கிறோம். எண்ணங்களைக்கொண்டு மனத்தை உணர்கிறோம். ஆத்மாவை எதனால் உணர்வது? இது புரியவில்லையே என்று இப்படிச் சிந்தனையில் ஆழ்ந்த ஹேமசூடனுக்கு ஒருவழி புலப்படுகிறது.*

*கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பத்தைக் கருத்தூன்றிப் பார்ப்பவனுக்குக் கண்ணாடி தெரிவதில்லை. கண்ணாடியைக் கருத்தூன்றிப் பார்ப்பவனுக்கு பிரதிபிம்பம் தெரிவதில்லை. அப்படி வெளியிலுள்ளவை உணர்வில் படுவதாலேயே ஆத்மா தெரிவதில்லையோ? அப்படியாயின் இனி வெளிப்பொருளைப்பற்றிச் சிந்திக்கமாட்டேன். அப்போதுதான் ஆத்மா உணரப்படும் என்று தீர்மானித்துத் திட நிச்சயத்துடன் மேல் விசாரம் செய்கிறான்.*

अथापश्यदन्धकारं गाढं तत्क्षणमात्रतः ।
इदं ममात्मनो रूपमिति निश्चितमानसः ।। ४० ।।
प्रहर्षमतुलं लेभे चाथ भूयो व्यचिन्तयत् ।
नूनं पुनः प्रपश्यामीत्येवं चित्तं रुरोध वै ।। ४१ ।।
चंचलं हठयोगेन निरुद्धं समवैक्षत ।
तेजःपुञ्जमनाद्यन्तं भास्वरं क्षणमात्रत ः ।। ४२ ।।

(மற்றதை எண்ணாமலிருந்ததும்) எங்கும் கனத்த இருளைக் கண்டான். அந்த கனத்த இருளே எனது வடிவம் எனத் தீர்மானித்தவனாக மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். மறுபடியும் சிந்தித்தான். மறுபடியும் அதனை உற்றுநோக்குவேன் என்று மனத்தை வெளியே போகாமல் அடைத்தான். சஞ்சலமான மனம் ஹடயோகத்தால் கட்டுப்பட்டது. கண நேரத்தில் ஆதியும் அந்தமுமற்ற பேரொளிக்குவியலைக் கண்டான்.

प्रबुद्धश्चिन्तयामास किमेतदिति विस्मितः।
अहो पश्यामि विविधं किमात्मानं कथं त्विदम्।४३॥
भूयः पश्यामि चेत्येवं रुरोध स्वमनस्तदा।
विलीनं निद्रया चित्तं बभौ चिरतरं दृढम्॥४४॥
तत्रापश्यत् स्वप्नजालं विचित्रानेकदर्शनम्।

மனத்தைத் தளர்த்திச் சிந்திக்கும் நிலைக்குக் கொணர்ந்து வியப்புடன் இதென்ன என்று சிந்தித்தான். "(இருட்டும் ஒளியுமாக) மாறிவரும் ஆத்மாவைக் காண்கிறேனே! இதெப்படி நேரும்? மறுபடியும் ஊன்றிப் பார்ப்பேன்" என நினைத்து மறுபடி மனத்தைக் கட்டுப்படுத்தினான். தூக்கம் ஏற்பட்டு அதில் மனம் மறைந்தது. அங்கு பல விசித்திரத் தோற்றங்கள் கொண்ட பல கனவுகளைக் கண்டான்.

अथ प्रबुद्धोऽत्यन्तं वै चिन्तां प्राप महत्तराम्॥४५॥
किमहं निद्रयाच्छन्नः स्वप्नान् समवलोकयम्।
तमस्तेजश्चापि दृष्टमहो स्वप्नात्मकं भवेत्॥४६॥
स्वप्नस्तु मानसोल्लासः तदेतं वर्जये कथम्।
भूयो निगृह्य पश्यामीत्येवं निश्चित्य वै दृढम्॥४७॥
रुरोध चित्तं तु हठात्तदेतदभवत् स्थिरम्।

மறுபடியும் மனத்தைத் தளர்த்தி வெளியுணர்விற்கு வந்த அவன் பெரும் சிந்தனையில் ஆழ்ந்தான். "நான் தூக்கத்தினால் மறைக்கப்பட்டுக் கனவு கண்டேன். (இதனைக் கவனிக்கும்போது முன் கண்ட) இருளும் ஒளியும் கனவாகத் தானிருக்குமோ? கனவாயின் அது மனத்தின் களியாட்டத்தின் விளைவுதானே! இதனை எப்படித் தவிர்ப்பேன்? மறுபடி மனத்தை அடக்கிப் பார்க்கிறேன்" எனத் தீர்மானித்து மனத்தை ஹடயோகத்தின் மூலம் கட்டுப்படுத்தினான். அது அடங்கி நிலைத்து நின்றது.

तदाऽऽनन्दसमुद्रान्तर्निमग्न इव सोऽभमत्॥४८॥
पुनश्चित्तप्रचलनात् प्रबुद्धोऽभवदञ्जसा।

அப்போது ஆனந்தக் கடலினுள் ஆழ்ந்து மூழ்கியிருப்பவனாக அவன் ஆனான். மறுபடியும் மனம் சலித்ததும் விழித்தெழுந்தான்.

किमेष मेऽभवत्स्वप्नश्चाथवा चित्तविभ्रमः ॥ ४९ ॥
आहोस्वित् सत्य एष स्यात् अविचिन्त्यं विभाति मे।
नान्वभूवं किंचिदपि सुखमाप्तं कथं मया ॥ ५० ॥
अहोऽस्य सुखलेशस्य तुल्यं नास्त्यत्र किंचन।
अहं सुषुप्तवन्मूढः कथमेतत् सुखं स्थितम् ॥ ५१ ॥
नात्र हेतुं कञ्चिदपि लक्षये तत्कथं भवेत्।

'இது கனவா! மனக் கலக்கமா? அல்லது உண்மையா? அனுபவிக்கவில்லை. ஆனால் எப்படி எனக்கு சுகம் கிட்டியது? இந்த சுகத்தின் லேசத்திற்கும் ஈடானது ஒன்றும் இல்லை. நான் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்தவன்போல் வேறு ஒன்றையுமறியவில்லை. எப்படி ஸுகம் நிலைத்து ஏற்பட்டது? இதற்கான காரணம் ஒன்றையும் காணேனே! இது எப்படி ஏற்பட்டது?

*எங்கும் ஸுகத்தை அனுபவிக்க வேண்டுமாயின் அதன் ஸாதனமான ஏதோ ஒன்று வேண்டும். அதில்லாமல் ஸுகம்பெற முடியாது. ஆனால் ஹேமசூடன் நிலைத்த ஸுகத்தை அனுபவிக்கிறான். ஸுகத்திற்கு ஸாதனமான பொருள் ஒன்றும் அனுபவிக்கப்படவில்லை. விஷயத் தொடர்பின்றி ஸுகம் எப்படி ஏற்பட்டது? இது ஹேமசூடனின் சந்தேகம்.*

आत्मावगमनायाहं प्रवृत्तोऽप्यद्य नाविदम् ॥ ५२ ॥
आत्मानमन्यच्चान्यच्च पश्यामि किमिदं भवेत्।
प्रकाशो वान्धकारो वा सुखं वान्यदथापि वा ॥ ५३ ॥
आत्मा भवेन्मम तथा क्रमिकैतत्स्वरूपकः।
नान्तमेम्यत्र भूयस्तां पृच्छामि विदुषीं प्रियाम् ॥ ५४ ॥

ஆத்மாவைப்பற்றி அறிய (ஆத்மாவை உணர) முயன்ற நான் இன்னமும் ஆத்மாவை அறியவில்லை. வேறு எதையோ காண்கிறேன். இது என்னவாயிருக்கும்? ஆத்மா ஒளியா, இருளா, ஆனந்தமா அல்லது வேறுபட்டதா? அல்லது இருள், ஒளி, ஆனந்தம் என்ற வரிசையில் அமையத்தக்க வடிவமுள்ளதா? இதன் முடிவு தெரியவில்லையே! மறுபடியும் அந்த அறிவாளியான மனைவியைக் கேட்கிறேன்."

इति निश्चित्य द्वारेशमाहूयाज्ञां समादिशत्।
स्वसन्निधानमानेतुं हेमलेखां नृपात्मजः॥ ५५॥
अथ प्राप्ता मुहूर्तेन द्वारिकस्य निदेशतः।
आरुरोह महासौधं मेरुमिन्दुप्रभेव सा॥ ५६॥

இவ்வாறு தீர்மானித்து வாயிற்காப்போனை அழைத்து ஹேமலேகையைத் தன்னிருக்கைக்கு அழைத்துவர அரசகுமாரன் உத்தரவிட்டான். வாயிற்காப்போன் குறிப்பிட்டபடி அவள் சிறிதுநேரத்தில் மாளிகையை அடைந்தவளாக அந்த உயர்ந்த உப்பரிகையில் மேருவின் மேல் சந்திரனின் ஒளி ஏறுவது போல் ஏறினாள்.

अथापश्यद्राजसुतं प्रियं शान्तात्ममानसम्।
निश्चलं निर्विकारं च संहृतेन्द्रियमण्डलम्॥ ५७॥
समीपमुपसृत्याशु तद्विष्टरमुपारुहत्।
एकासनोपविष्टायां तस्यां स निमिषार्धतः॥ ५८॥
उन्मील्य नयने पार्श्वे समालोकयदास्थिताम्।
आलोकिता प्रियं शीघ्रं प्रणयात्परिषस्वजे॥ ५९॥
ततः प्राहामृतस्यन्दि सुन्दरं वचनं प्रिया।

தனது பிரியரும், அடங்கிய மனமுள்ளவரும் சலனமும் மாறுபாடுகளும் அற்றவரும், பொறிகளை விஷயத்திலிருந்து இழுத்துத் தன் வசத்தில் கொண்டவருமான அரசகுமாரரை அடைந்து அருகில் சென்று அவரது ஆஸனத்தில் ஏறி அமர்ந்தாள். ஒரே ஆஸனத்தில் அமர்ந்ததும் அவன் அரைநொடிப்பொழுது கண்களைத் திறந்து பக்கத்திலுள்ளவளைப் பார்த்தான். அப்படிப் பார்க்கப்பட்ட அவள் கணவரை அன்புடன் கட்டிக்கொண்டாள். தன் அழகிய கணவனைப் பார்த்து அமுதம் கசியும் இனிமையுடன் பேசினாள்.

नाथ किं भवताऽऽहूता कच्चित्ते नीरुजं तनौ॥ ६०॥
वदाहूतौ कारणं मे यदर्थमहमागता।
एवं प्रियानुयुक्तः स बभाषे स्वात्मनः प्रियाम्॥ ६१॥

நாதரே! எதற்காக நான் அழைக்கப்பட்டேன்? தங்கள் உடலில் ஆரோக்கியம் உள்ளதா? அழைத்ததின் காரணத்தைக் சொல்லுங்கள். தங்கள் அழைப்பிற்கிணங்கவே நான் வந்துள்ளேன் என்று அன்பு மனையாளால் கேட்கப்பட்ட அவன் தன் மனைவியைப் பார்த்துக் கூறினான்.

प्रिये त्वयाऽनुशिष्टोऽहं विविक्तेऽत्र समास्थितः ।
विचारपरमः स्वात्मरूपलक्षणहेतवे ॥ ६२ ॥
तत्परेणापि चित्रं तु लक्षितं तत्पृथक् किमु ।

அன்புக்குரியவளே! உன்னால் வழிகாட்டப்பெற்ற நான் இங்கு தனிமையில் எனது ஆத்ம வடிவை உணரும் பொருட்டு தத்துவ விசாரத்திலேயே ஈடுபட்டவனாக அமர்ந்தேன். அதிலேயே பதிந்த மனத்தினனாயிருந்தும் என்னால் பலவிதமாக வெவ்வேறுபட்டதாக அது காணப்பட்டது. அது வேறுபட்டதா?

आत्मनः सर्वदा प्राप्तेः भासमानत्वतोऽपि च ॥ ६३ ॥
असम्यग्भासनं चान्यथाभासनस्य निमित्ततः ।
इति मत्वा निरुध्यान्यभासनं सुव्यवस्थितः ॥ ६४ ॥

ஆத்மா எப்போதும் அடையப்பட்டிருந்தாலும் ஒளியுடனிருந்தாலும் அதனைச் சரியாக உணரமுடியாதிருப்பது, மற்றவை உணரப்படுவதால்தான் என நினைத்து மற்றவற்றின் தோற்றத்தைத் தடுத்து மனத்தை நிலைக்கவைத்தேன்.

*இதுவரை அடையப்பெறாத பொருளாயின் அதனை அடைவதில் சிரமம் உண்டாகலாம். நானே ஆத்மா. என்னை நான் மறுபடிப் புதிதாக எப்போதும் அடையவேண்டியதில்லை. ஒரு பொருள் இருட்டிலிருந்தால் அதுதானே புலப்படாது. அதற்கு ஒரு வெளிச்சம் தேவை. ஆத்மா தானே ஒளியுடன் விளங்குவதாகும். அதனை விளக்க மற்றொரு வெளிச்சம் தேவையில்லை. அதன் வெளிச்சத்தைக் கொண்டுதான் மற்றதை உணர்கிறோம். எந்த உணர்ச்சிக்கும் ஆதாரம் நான் எனும் உணர்வுதான். 'நான்' இல்லை எனில் உலகமில்லை. ஆனால் அதனை நன்கு அறியமுடியவில்லை என்பதுதான் விந்தை. முழுவதும் அது தெரியாதிருந்தால், அது ஒன்றிருப்பதையே அறியாததால் அதனை அறிய ஆவல் ஏற்படாது. அதனை உணர்கிறோம். அதன் முழுவடிவம் புலப்பட வில்லை. அதற்குக் காரணம் என்ன? அதனால் அறியும் ஆவல் ஏற்படுகிறது. அதனை ஏன் முழுவதும் அறியமுடியவில்லை? ஸூரியனின் வெளிச்சத்தில் உலகைப் பார்க்கிறோம். அந்த வெளிச்சத்தையும் அதற்கு ஆதாரமான சூரியனையும் பற்றி முழுவதும் அறியவிரும்பினால் வெளிச்சத்தால் தோன்றும் உலகை மறந்து வெளிச்சத்தையும் அதன் ஆதாரத்தையும் உற்றுநோக்கவேண்டும். உலக வியவகாரத்திற்கு வெளிச்சத்தைப்பற்றி அறியத் தேவைஇல்லை. வெளிச்சத்தால் தெரியும் உலகம்போதும், வெளிச்சத்தைப் பற்றிய அறிவிற்கு உலகம் தேவை இல்லை. உலகத்தைப் பார்க்காத கண்களே வெளிச்சத்தைப் பார்க்கும் அதுபோல், ஆத்ம வெளிச்சத்தில் உலகை*

*அறிகிறோம். வியவஹாரதசையில் இது போதுமானது. பரமார்த்தமான பரம்பொருளை அறிய முதலில் வெளிச்சத்தைப் பற்றவேண்டும். அதன் வழியே அந்த வெளிச்சத்தின் ஆதாரமான ஆத்மாவை அறியவேண்டும். அப்போது அந்த வெளிச்சம் கூடத் தேவை இல்லை. வெளிச்சத்தால் தெரியும் உலகம் மறைந்தேபோய்விடும். மற்றவை தெரியும்வரை ஆத்மா தெரியாது. ஆத்மா தெரிந்தால் மற்றவை தெரியாது. இப்படி அரசகுமாரரின் யுக்திப்பாதை.*

अपश्यमन्धकारं च प्रकाशमन्यदेव च।
क्वचित्सुखं महत्प्राप्तं किमेतद्वद मे प्रिये॥ ६५ ॥
इदमेवात्मनो रूपमथवाऽन्यद्भवेत्क्वचित्।
सम्यग्विविच्य कथय यथा तमभिलक्षये॥ ६६ ॥

(ஸமாதி நிலையில்) இருளைப் பார்த்தேன். இதற்கு முற்றிலும் மாறுபட்ட ஒளியைப் பார்த்தேன். மறுபடியும் பேரானந்தத்தை அடைந்தேன். இது என்ன? சொல்! இதுதான் ஆத்மாவின் நிலையா? அல்லது வேறு இருக்கமுடியுமா? இதனை விவரித்துக் கூறுவாய். அதனால் அதனை நன்கு மனக்கண்ணால் காண்பேன்.

इत्युक्ता साब्रवीत् हेमलेखा ज्ञातपरावरा।
शृणु प्रिय प्रवक्ष्यामि समाहितधियाऽखिलम्॥ ६७ ॥
यस्त्वया बाह्यसंरोधे व्यवसायः समेधितः।
स शुभः संमतः सर्वैः सुमुख्यश्चात्मवेदिभिः॥ ६८ ॥
विना तेन न तत् प्राप्तं केनापि कुत्रचित् क्वचित्।

பரம்பொருளையும் உலகியலையும்பற்றி அறிந்த ஹேமலேகை இப்படிக்கேட்கப்பட்டவளாகக்கூறினாள் "அன்பானவரே! கூறுகிறேன். ஒன்றிய மனத்தினராக எல்லாவற்றையும் கேளும். புறப்பொருளில் செல்லாமல் (மனத்தை) கட்டுப்படுத்துவதில் உள்ள முயற்சி நன்கு வளர்ந்துள்ளது. அது ஆத்மாவைப்பற்றி அறிந்தவர் அனைவராலும் முக்கியமானதென ஏற்றுக்கொள்ளப்பட்டதே. அது தவிர வேறுவழியில் எங்கும் யாராலும் ஆத்மாவைப்பற்றிய அறிவுபெறப்படவில்லை.

न तत्कारणतामेति तत्प्राप्तौ प्राप्तभावतः॥ ६९ ॥
अप्राप्तावात्मता न स्यात् आत्मत्वेऽनाप्तता कुतः।
अप्राप्यः सर्वथैवात्मा प्राप्तिस्तस्य न विद्यते॥ ७० ॥

அது (மனக் கட்டுப்பாடு) ஆத்மாவை அடையக் காரணமாகாது, ஆத்மாவை ஏற்கனவே அடைந்து விட்டபடியால். தான் என்பது இனித்தான் அடையவேண்டியதெனில் அது 'தான்' அல்ல. 'தான்' ஆன ஒன்று இதுவரை அடையாததாக எப்படி இருக்கமுடியும்?

अप्राप्तस्य भवेत्प्राप्तिः आत्मत्वान्नाप्तिरस्त्यतः ।
तन्निरोधोऽपि नाप्त्यर्थः त्वत्र पश्य निदर्शनम् ।। ७१ ।।

இதுவரை அடையாததாயின் அதனை அடையலாம். 'தான்' ஆகவே உள்ள ஒன்றை அடையவேண்டியதில்லை. அதனால் மனக் கட்டுப்பாடு ஆத்மாவை அடைவதற்காக அல்ல. இங்கு தக்க சான்று காட்டுகிறேன்.

*ஹேமசூடன் மனத்தை வெளியில் செல்லாமல் தடுத்ததும் மனம் அந்தர் முகமாக – உள்நோக்கிச் செல்வதாக ஆனது. அந்நிலையில் கண்டது இருள் வெளிச்சம் முதலியவற்றின் வரிசை. இதில் எது ஆத்மா என்று ஐயம் ஏற்பட்டது. மற்றொரு எண்ணம் "ஆத்மாவை இனித்தான் காணப் போகிறோம் (அடையப்போகிறோம்) என்பதும் அதனை அடைய மனத்தை வெளிநாட்டத்திலிருந்தும் அடக்குவதொன்றே ஸாதனம் என்பதும்'. முன் எழுந்த ஐயத்தைத் தீர்க்கும்முன் இந்த இரண்டாவதான எண்ணம் தவறான தென்பதை வற்புறுத்துகிறாள் ஹேமலேகை. ஆத்மா என்பது அடையத்தக்க பொருள் அல்ல. ஒன்றை அடைவதென்றால், இது வரை அதனைப் பெற்றிராதிருக்கவேண்டும்; அல்லது அது இது வரை இல்லாதிருக்கவேண்டும்; அல்லது தான் இருக்குமிடத்தில் அல்லது வேளையில் அது இல்லாதிருக்கவேண்டும். அப்படியுள்ள பொருளைத்தான் "இனி அடைவதற்கு" முயற்சியும் ஸாதனமும் தேவை. ஆத்மா எங்கும் எப்போதும் உள்ள 'ஸித்த வஸ்து'. அடையமுயலும் "தானே" ஆத்மாதான். நானே என்னை அடைய முயற்சி செய்வதோ, அதற்கு இது ஸாதனமாகும் என்பதோ பொருந்தாது.*

अन्धकारसमाच्छन्नं किञ्चित्, तस्य निरोधतः ।
दीपाद्यैराप्यते प्राप्तमिव लोके यथा तथा ।। ७२ ।।
यथा कश्चित् भ्रान्तचित्तः क्वचित् विस्मृतनिष्ककः ।
अन्यचिन्तानुरोधेन समाहिततया पुनः ।। ७३ ।।
आसादयति तन्निष्कं नष्टं प्राप्तं यथा तथा ।
न निरोधोऽत्र हेतुः स्यात् निष्काप्तौ तु यथा तथा ।। ७४ ।।
आत्मलाभे न हेतुः स्यात् निरोधो बाह्यवस्तुनः ।

ஒரு பொருள் இருட்டில் மறைந்திருந்தது. அந்த இருட்டை தீபம் முதலியவற்றால் கட்டுப்படுத்தியதும் அந்தப் பொருள் புதிதாகப் பெறப்பட்டதுபோல் உலகில் நினைக்கப்படுகிறது. அதுபோல்தான் இதுவும். ஒருவன் மனக் கலக்கமடைந்ததனால் தனது தங்க நாணயம் வைத்த இடத்தை மறந்துவிட்டான். பின்னர் மற்ற எண்ணங்களைக் கட்டுப்படுத்தி மனத்தை ஒருமுகப்படுத்தியதும் அதனைப் பெறுகிறான். கெட்டுப்போயிருந்ததைத் திரும்பப் பெற்றதாக நினைக்கிறான். மற்ற எண்ணங்களைக் கட்டுப்படுத்தியது நாணயத்தைப் பெற நேரிடைக் காரணமாகாது. அதுபோல் மனத்தில் மற்ற வெளிப் பொருள் படாமல் தடுத்தது ஆத்மாவை அடையக் காரணமாகாது.

*ஆத்மா என்று ஒன்று புதிதாக அடையவேண்டியதல்ல. இருப்பது புலப்படாதிருக்க ஒரு தடை இருந்தது. அந்தத் தடையை மனவடக்கம் நீக்கியது. ஆத்மா தானே புலப்பட்டது. தனது அறையில் உள்ள தனது பொருள் இருள் மூடியதால் புலப்படவில்லை. புலப்படவில்லையே தவிர, இல்லாமல் போய்விடவில்லை. வெளிச்சத்தால் இருள் அகன்றதும் முன் வைத்திருந்த இடத்தில் அந்தப் பொருள் இருப்பதை உணர்கிறான். புதிதாக அதனைப் பெறவில்லை. முன்பிருந்ததையே முன்பிருந்தபடியே காண்கிறான். மறைந்ததும் அடைந்ததும் பிரமை.*

*தங்க நாணயத்தை ஒருவன் இடுப்பில் செருகிக்கொண்டான். பின் பல பணிகளின் குழப்பத்தால் தானே இடுப்பில் செருகிக் கொண்டதை மறந்துவிட்டான். அதனைத் தேடினான். வைத்த இடம் ஞாபகத்திற்கு வரவில்லை. அதனை இழந்துவிட்டதாக எண்ணினான். இழந்திருக்க முடியாது, என ஓர் எண்ணம் உதித்தது. தனது அன்றையச் செயல்களை வரிசைப்படுத்தி நினைவிற்கொணர்ந்தான். அந்த வரிசையில் அதனை இடுப்பில் செருகிக்கொண்டதும் நினைவில் வந்தது. இடுப்பிலிருந்து திரும்ப எடுத்துக் கொண்டான். நாணயத்தை அவன் இழக்கவும் இல்லை. திரும்பப்பெறவுமில்லை. இழந்துவிட்டதாக நினைத்தான். பின்னர் திரும்பப் பெற்றுவிட்டதாக நினைத்தான். இழந்ததும் பெற்றதும் அப்படியே தொடர்ந்திருக்கிறது என்பதுதான் கண்டதாகும். இந்த இரு நிகழ்ச்சிகளில் புதிதாகப் பெற்றது எதனை? தடை இருந்தது. தடை நீங்க வெளிச்சமும் மனத்தை ஒருமுகப்படுத்திச் சிந்தித்ததும் பயன்பட்டது. அது மறைத்திருந்தன. பகுத்தறிந்து மறைத்திருப்பவை ஆத்மாவல்ல எனக்கண்டோம். தானே அந்த சுத்த ஆத்மா தன்னை வெளிப்படுத்திக் கொண்டது. அது எப்போதும் இருந்ததே. அதனை நான் புதிதாக அடையவில்லை.*

*ஆனால் இப்போதும் ஆத்மா அந்த இருளா வெளிச்சமா கனவா சுகமா இவை எல்லாமா என்பது புரியவில்லை! என்ற கேள்விக்கு அதனால் பதில் கிடைக்கவில்லை. அதற்குப் பதில் கூறுகிறாள் ஹேமலேகை.*

त्वया न लक्षितस्त्वात्मा तत्र व्युत्पत्तिवर्जनात् ।। ७५ ।।
यथा प्रकाशेऽव्युत्पन्नः रात्रौ राजसभां गतः ।
पश्यन् सभ्यांश्च दीपांश्च न जानाति प्रकाशकम् ।। ७६ ।।

ஆத்மா இன்னதென நீ கண்டுகொள்ளாததற்குக் காரணம் அதனைப்பற்றிய அறிமுகமில்லாமையால்தான். ஒருவன் ஒளியைப்பற்றி அறியாதவன். இரவில் அரச சபைக்குச் சென்றான். அங்கு ஸபையில் இருந்தவர்களையும், தீபங்களையும் பார்த்தான். அவன் அங்கு ஒளி இருந்ததைமட்டும் அறியவில்லை. அதுபோல் தான் இதுவும்.

*இரவில் இருள் கவ்வியிருக்குமாதலால் ஒளியிருந்தாலன்றிப் பொருள் தெரியாது. ஆனால் இரவில் பொருள்களைப் பார்க்கிறான். ஆனால் அப்படிப் பார்க்க இன்றியமையாததான ஒளி அங்கிருப்பதாக அவன் அறியவில்லை. ஏன்? ஒளி என்ன என்பதைப் பற்றி அவன் இதுவரை அறியாதவன். பகலில் தெரிவதுபோல் இரவிலும் தெரிகிறது என்பான் அவன். பகலிலும் சூரியனின் ஒளியால்தான் பார்க்கிறோம் என்பதனையும் அவன் அறியாதவன். ஒருபொருளைப் பற்றி அறிமுகமின்மை, அது நேராகக் காணப்பட்டாலும் அது இருப்பதாக அறிவதைத் தடுக்கும். அது போல் ஆத்மா என்ன என்பதைப் பற்றி இதுகாறும் அறிந்திராமையால் ஆத்மாவல்லாத பொருளை அதிலிருந்தும் பிரித்த பின்னரும் அதனை உணரமுடியவில்லை. அதனால் ஆத்மாவின் பரிசயத்தை உணர்த்துகிறாள்.*

शृणु प्रिय निरोधान्ते ह्यन्धकारो विलोकितः ।
अन्धकारावलोकादौ शेषभावस्तव स्थितः ।। ७७ ।।
तं भावं भावय सदा परमानन्ददायकम् ।

அன்பரே! மனம் வெளி விஷயங்களிலிருந்து திரும்பிக் கட்டுப் பட்டதும் இருள் காணப்பட்டதல்லவா? மனக் கட்டுப்பாட்டைத் தொடர்ந்து இருள் காணுமுன் உள்ள இடைநிலையே உமது ஆத்மநிலை. அந்த நிலையையே தொடர்ந்திருக்கச் செய்வீர். அது பேரானந்தத்தைத் தரும்.

*மனம் அடங்கியதற்கும் இருள் தோன்றியதற்கும் இடையே கொடிமின்னல் தோன்றுமளவிற்குள்ள கால இடைவெளி உண்டு. அந்த*

*நிலையில் வெளிப்பொருளும் மனதிற்படவில்லை. உள்ளிருளும் தோன்றத் தொடங்கவில்லை. மனம் ஒருபொருளையும் காணாததால் அதனை ஆராய்ந்து அது என்ன எனக் கண்டுகொள்ளும் செயலான விகல்பம் ஏற்படவில்லை. அதுவே நிர்விகல்பநிலை. அது நொடிப்பொழுதிற்கும் குறைந்த இடைவெளியாக இருந்திருக்கலாம். இந்த நிலையில் நீடித்திருக்கப் பழகுவதே நிர்விகல்பஸமாதி. இது பழக்கத்தால் அமையக்கூடியது. அந்த நிர்விகல்ப நிலையே, ஆத்மாவானது மனம் புத்தி போன்றவற்றைச் சாராமல் மீதமான (சேஷனான) ஸ்வயம் பிரகாசமாக – மற்றவற்றால் மறைக்கப்படாத மற்றவற்றின் சார்புள்ள சிற்றறிவாக இராத – சார்பற்ற பேரறிவாக – பேரொளியாக – பேரானந்தமாக இருக்கும்நிலை. இந்த நிலையில் மனமிருந்தும் விகல்பம் ஏற்படாமையால் எதுவும் எண்ணமாகப் பதிவதில்லை. இந்நிலையிலிருந்து எழுந்தவன் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து எழுந்தவனுக்கு ஒப்பாக எதனையும் நான் அறிய வில்லை என்பான். அறிவாகவே இருந்ததனால் அறிபவனாக இருந்து ஒன்றை அறியமுடியவில்லை. அதில் விகல்பமில்லாததால் விகல்பத்தால் ஏற்படும் சுகதுக்கங்கள் போன்ற துவந்துவக் கலப்பில்லை. அதனால் பேரானந்தமாக அது இருக்கும்.*

अत्र सर्वे महामोहग्रहग्रस्ताः पराग्दृशः ।। ७८ ।।
अन्विष्यान्विष्य विहताः न तां प्रापुश्च भावनाम् ।
सन्ति लोके शास्त्रविदः कुशलाश्च सुतार्किकाः ।। ७९ ।।
अविदित्वा भावममुं शोचन्त्येव दिवानिशम् ।

இவ்விஷயத்தில் வெளி நோக்குள்ளவர் அனைவரும் பெருத்த மோகத்தின் பிடியில் அகப்பட்டவர்களாகத் தேடித் தேடி அலைந்தும் அடையாமல் அந்த நிர்விகல்ப நிலையில் பெறத்தக்க ஆத்மானுஸந்தானத்தைப் பெறுவதில்லை. உலகில் சாஸ்திரமறிந்தவர் பலர் உண்டு. அவர்கள் திறமையுள்ளவர்களே. யுக்தியால் விஷயத்தை ஆராய்ந்தறிய வல்லவர்களே. எனினும் இந்நிலையை உணராமல் இரவும் பகலும் வீணே கஷ்டப்படுகிறார்கள்.

शब्दार्थशिल्पमात्रेण न हि तत्पदमाप्यते ।। ८० ।।
यावदन्वेषणं कुर्यात् विचारं वापि पण्डितः ।
तावन्न प्राप्यते तद्वै यतो न ग्राह्यमेव तत् ।।। ८१ ।।

(உபநிடதங்கள் முதலியவற்றிலிருந்து) சொற்களில் பொருளை மனனம் செய்வதால் மட்டும் இந்நிலையை அடையமுடியாது. நூல் தேடிப்

பொருள் கேட்டோ, பலருடன் கருத்தூன்றிச் சிந்தித்தோ பெறக்கூடியதும் இல்லை. ஏனென்றால் இது தனிப்பட்டு மனம் முதலியவற்றால் கிரஹிக்கக் கூடியதல்ல.

गत्वा दूरं न तत्प्राप्यं स्थित्वा प्राप्तं हि सर्वदा।
न तद्विचार्य विज्ञेयं अविचारात् विभासते॥ ८२॥

வேற்றிடம் சென்றுப் பெறத்தக்கதல்ல. இருக்கிறபடி இருந்தே இருப்பதாக எப்போதும் உணரக்கூடியது. அதுவா இதுவா என பகுத்தறிந்து அறியத்தக்கதல்ல. அது இது என மனத்தில் பல பொருள்கள் பதியாமல் செய்த நிலையில் தானே தோன்றக்கூடியது.

धावन् स्वमूर्धच्छायेव न प्राप्यं क्रियया क्वचित्।
यथा हि निर्मलादर्शे प्रतिबिंबसहस्रकम्॥ ८३॥
पश्यन् बालोऽपि नादर्शं पश्यत्येवं जनः खलु।
पश्यन् स्वात्ममहादर्शे प्रतिबिंबं हि जागतम्॥ ८४॥
स्वात्मानं न विजानाति तद्व्युत्पत्तिविवर्जनात्।

(1) ஓடிக்கொண்டிருப்பவன் தன் தலை நிழலைப் பிடிக்க விரும்பினால் எப்படியோ அப்படி எந்த செயலாலும் இதனை அடையமுடியாது. (2) அழுக்கற்றகண்ணாடியில் ஆயிரம் பிரதிபிம்பங்கைளைக்காணும் சிறுவன் (அந்த பிரதிபிம்பம் தோன்றக் காரணமான) கண்ணாடியைக் காண்பதில்லை. அதுபோல் தன் ஆத்மாவாகிற சிறந்த பெருங் கண்ணாடியில் உலகமாகிற பிரதிபிம்பத்தைக் காண்பவனும் அப்படிக் காணும் தன்னை உணர்வதில்லை. தானாகிய ஆத்மாவை அறிமுகப்படுத்திக் கொள்ளாததனால்.

यथाऽपरिचिताकाशः पश्यन्नाकाशसंश्रितम्॥ ८५॥
जगन्नावैति चाकाशं तथा स्वात्मस्वरूपकम्।

(3) ஆகாசத்தைப்பற்றி அறியாதவன் ஆகாசத்தில் அமைந்துள்ள உலகைப் பார்ப்பவனாயினும் அந்த ஆகாசத்தை உணராததுபோல் ஆத்ம ஸ்வரூபத்தை அறியமாட்டான்.

*ஆத்மா வெளியில் இல்லை. மனமும் இந்திரியங்களும் வெளியிலுள்ள பொருள்களையே உணர்த்துபவை. ஆத்மாவை வெளியில் தேடுவது தன் தலை நிழலைப்பிடிக்க ஓடுவதுபோல் வீண். நாம் ஓட, ஓட, அது நமக்கு முன் ஓடிக்கொண்டிருக்கும். ஆத்மாவை அறிய ஒரேவழி இந்த வெளி அறிவு*

*எங்கிருந்து தோன்றுகிறது என்ற ஆதாரத்தை நோக்கி எண்ணத்தைத் திருப்புவதுதான். அறிவின் இருப்பிடம் மனம் இந்திரியம் முதலியவற்றிற்கும் உள்ளே உள்ள வெளிதான். கண்ணாடியில் பிரதிபிம்பங்களைப் பார்க்கும் சிறுவன் அவற்றைப் பிம்பங்களாகவே உணர்கிறான். அதற்குக் காரணம் அந்தப் பிரதிபிம்பத்திற்கு ஆதாரமான கண்ணாடி இருப்பதையே உணராததுதான். கண்ணாடியை உணர்ந்தால் அதில் தோன்றுவது பிரதிபிம்பம் என்று உணரலாம். உலகம் அதற்கு ஆதாரமான பெருவெளியில் அமைந்துள்ளது. அதுவே ஆகாசம். ஆகாசம் என்பது உருவகப்படுத்தக்கூடிய பொருள் அல்ல. உருவகப்படுத்த முடியாததால் சூனியமுமாகிவிடாது. குடம் முதலியவற்றினுள் காணும் இடைவெளியை ஆகாசம் என அறிமுகப்படுத்திக்கொண்டுவிட்டால், குடத்தின் உள்ளும் புறமும் உள்ள ஆகாசத்தை உணர்ந்தால், அந்த அடிப்படையில் இந்தப் பெருவெளியான மஹாகாசத்தையும் அறியமுடியும். ஆகாசத்தில் தோன்றும் ஆகாசத்தைமட்டும் பார்ப்பவன் உலகை உணரமாட்டான். உலகைப் பொருட்படுத்தாமல் அது அமைந்துள்ள பெருவெளியைக்காண்பவனே ஆகாசத்தைக் காணமுடியும். ஆத்ம ஒளி படுவதால் தான் மனமும், இந்திரியங்களும் அறிவைத் தருகின்றன. அந்த ஒளியே அறிவு எனப் புரிந்துகொண்டால், அது இந்த உடல் முழுவதும் வியாபித்து நிற்பதை உணரலாம். இந்த உடல் முழுவதும் வியாபித்து நிற்கும் ஆத்மாதான் நம்மைச் சூழ்ந்தும் மற்ற பொருளிலும் வியாபித்து நிற்கும் பரமாத்மா என்பதைக் கண்டுகொள்ளமுடியும்.*

नाथ सूक्ष्मदृशा पश्य ज्ञानज्ञेयात्मकं जगत् ।। ८६ ।।
तत्र ज्ञानं स्वतःसिद्धं तदभावे न किञ्चन ।
प्रमाणानां प्रमाणं तत् अप्रमाणं स्वतो भवेत् ।। ८७ ।।
यतः प्रमाणानपेक्षमादिसिद्धं अतस्तु तत् ।

அன்பரே! நுட்பத்தைக் காணும் நோக்குடன் கவனியுங்கள். உலகம் இரண்டுவகை, அறிவு (ஞானம்) அறியப்படுவது என. அந்த அறிவு தானே (முன்னதாகவே) அமைந்தது. அது இல்லாவிடில் ஒன்றுமே இல்லை. (கண் முதலிய) அறிவூட்டுபவைகளுக்கெல்லாம் அறிவூட்டும் தன்மையைத் தருவது அது. தன்னை அறிமுகப்படுத்த வேறொன்றை எதிர்பாராதது அது. அறிவூட்டுபவைகள் தோன்று முன்னரே நிலைத்திருப்பது அது. அதனால் அதனை அறிமுகப்படுத்துபவை கிடையாது.

सिद्धसाधकभावेन न तत्सिद्धिः कदाचन॥ ८८॥
तत्र विप्रतिपन्नस्य न प्रश्नो नापि चोत्तरम्।
अनपह्नवनीयं तत् महादर्शतलं भवेत्॥ ८९॥

அந்த அறிவு எதிலிருந்து தோன்றியது என்பதையோ எதனால் வெளிப்படுகிறதென்பதையோ எப்போதும் கண்டுபிடிக்கமுடியாது. அறிவு என ஒன்று இருக்க முடியாதெனக் கருதுபவனுக்கு கேள்வி கேட்கவும், விடை கூறவும் முடியாது. அறிவு இருப்பதை யாரும் மறுக்கமுடியாது. அந்த அறிவுதான் உலகத்தில் உணரப்படுகின்ற பொருள் அனைத்தும் பிரதி பிம்பமாகத் தோன்றும் பெருங் கண்ணாடி.

*ஆத்மாவை வேறுவகையில் அறிமுகப்படுத்துகிறாள். உலகில் பல வற்றைக் காண்கிறோம். பார்க்கப்படும் உலகை மனமும், கண்களும் நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. அதன்மூலம் உலகத்தைக் கண்டதாக உணர்கிறோம். இந்த உலகத்தைக் காணுதல் அறிவு. அந்த அறிவால் உணரப்படுவது உலகம். இதில் உணரப்படுவது உணர்வு என்று இரண்டு உள்ளன. உணரப்படும் வெளி உலகமானது 'தான்' - ஆத்மா அல்ல. அப்போது மீதமாயுள்ள அறிவு என்ன என்பதைச் சிந்திப்போம். இந்த அறிவில் மனமும் கண்களும் ஜன்னல்களே தவிர இவையே (தனித்தும், சேர்ந்தும்) அறிவில்லை. மனமும், கண்களுமிருந்தும் தூக்கத்தில் பொருள்கள் உணரப்பெறவில்லையே? அப்போது இவற்றிற்கும் அப்பாற்பட்டு ஒன்று இருக்கவேண்டும். மனமும் கண்களும் விழித்தெழு முன்னரே அது விழித்துக்கொண்டிருக்கவேண்டும். அது கண்ணோ மனமோ உதவாமலிருந்தாலும் தானே அறியும் தகுதி பெற்றிருக்க வேண்டும். கண்களும், மனமும் பார்வைக்கு உதவுவதே அதன் சக்தியால் இயங்குவதால் தான். அந்த அறிவு எனும் மூலப்பொருள் கண், மனம் வழியே வெளியாவதால், தன் பெருமையில் குறுகிவிடுகிறது, சிற்றறிவாகிவிடுகிறது. சிற்றறிவாயினும் அது அறிவே.*

*மனத்தாலும், கண்களாலும் தான் அறிவு ஏற்படுகிறது எனக் கூறமுடியாது. அறிவால்தான் மனமும், கண்களும் பார்வைக்கு உதவ முடிகிறது எனக் கூறுவதுதான் சரியானது. கோடரி பிளக்கிறது. அப்படி பிளப்பது கோடரியைக் கையில் ஏந்தியவன் செயல்படும்போதுதான். அப்போது கோடரியைக் கையில் ஏந்தியவனின் செயலே பிளக்கிறது, கோடரி பிளக்கவில்லை என்று ஆகிறது. அதுபோல் அறிவுதான் பார்வை அறிவாகிறது. அந்த அறிவிருப்பதை எதனால் உணர்வது? அறிவேற்படுவதால் தான் அதனை உணரமுடியும். வேறு எதுவும் அதனை உணர்த்த முடியாது.*

*வெளிச்சத்தைக்கொண்டு மற்றவற்றைப் பிரகாசமாகப் புலப்படுத்தச்செய்து அவற்றை உணரலாம். வெளிச்சத்தை எதனால் உணரலாம்? எதனால் பிரகாசப்படுத்தலாம்? அது மற்றவற்றைப் புலப்படுத்துவதன் மூலம்தான் உணரலாம். அறிவு என்று தனித்துப் பிரித்துக் காண முடியாததால் அப்படி ஒன்று இல்லை என்றே கொள்ளலாமே எனில், அப்படியொரு எண்ணம் எங்கிருந்து தோன்றிற்று? அப்படிக் கேட்பது எது? அதுதான் அறிவு. வெளியே துலங்கும் உலகம் ஜடப்பொருள். அது மற்றொன்றைத் துலக்காது. அறிவின் ஆதாரத்திலேயே உலகம் தோன்றுகிறது 'பிரதிபிம்பம் மட்டும்' உண்டு. அதற்காதாரமான கண்ணாடி இருப்பதற்தில்லை என்று வாதிப்பதுபோல் ஆகும், அறிவு என்று ஒன்றில்லை என வாதிப்பது, எனக் கூறிக் கண்ணாடியின் உவமையைக்கொண்டு அறிவை மேலும் விளக்குகிறாள்.*

तत्र सर्वं भासते वै दर्पणप्रतिबिंबवत्।
देशेन वापि कालेन परिच्छित्तिर्न विद्यते।। ६०।।
तदन्तर्भासमानत्वात् कथं ताभ्यां परिच्छिदिः।
परिच्छेदस्य भानं तु गगने वस्तुभिर्यथा।। ६१।।

அந்தப் பெருங் கண்ணாடி போன்ற அறிவில் பிரதிபிம்பம்போல் உலகம் தோன்றுகிறது. தேசத்தாலோ, காலத்தாலோ அதனைப் பிரித்துக்காட்ட முடியாது. அந்தக் காலமும், தேசமும் அதனுள் அடங்கும்போது அவை எப்படி அறிவைப் பிரித்துக்காட்டமுடியும்? பிரிவினை இருப்பதாகத் தோன்றுவதும் ஆகாசத்தில் பொருள்களால் ஏற்படும் பிரிவினைபோல் பிரமையே.

*சிறப்புமிக்க கண்ணாடியில் அறையிலுள்ள ஒவ்வொன்றும் நுணுக்கத்துடன் தெளிவாகப் புலப்படுகின்றன. அறையின் பரப்பைவிடக் கண்ணாடி சிறியதாயினும், அந்த அறையையும் அதுபோன்ற பல அறைகளையும் தன்னுள் பிரதிபிம்பமாகக் காட்டவல்லது. அதனைப்போல் இந்த அறிவும் அறிவைத் தாங்கும் கோசம் சிறிய தாயினும், தன்னைவிடப் பலமடங்கு பரப்பளவால் விரிந்த பொருளையும் காணும். கண்ணாடியில் நேற்று நடந்ததும், நாளை நடக்க விருப்பதும் தெரியாது. அறிவில், அதுவும் துலங்கும். தேசத்திற்கும், காலத்திற்கும், எதற்கும் அடங்காத தன்மை அறிவிற்கு உண்டு.*

*இங்கு ஒரு விளக்கம் தேவை. நான் குடத்தைப் பார்க்கிறேன். குடத்தைப் பார்த்த அறிவு எனக்கு ஏற்பட்டது. நான் கண்ணாடியில் பார்த்த*

குடம் வெளியே உள்ளது. நான் அறிவால் உணர்ந்த குடம் என் உள்ளே உள்ளது. பொதுவாக அந்த இரண்டும் (விஷயமும் ஜ்ஞேயமும் – ஜ்ஞேயம் அறிவால் உணரத்தக்கது) ஒன்றே என்று தோன்றும், ஆனால் உண்மை நிலையில் வேறுபடவாய்ப்புண்டு. மனம் கண்ணைக் பார்க்கத் தூண்டிக் கண்ணின் மேல் சவாரிசெய்து பொருளிருக்குமிடத்திற்குச் சென்று பொருளைத் (பொருளைப்பற்றிய அறிவை) தன்னுள் சுமந்து அந்தக் கரணத்தில் பதித்துவிடுகிறது. 'குடத்தைப் பார்க்கிறேன்' என்று கூறும் அந்தக்குடம் தான் நான் பார்வையால் அறிந்த குடம். என் அந்தக் கரணத்தில் (எனது மூன்றாவது தேகமாக காரண சரீரமாக பதிந்திருக்கும்) முன்வினை வாஸனைகள், மனம், காலம் என்ற மூன்றும் சேர்ந்து பார்த்து உருவகப்படுத்திய உருவம் இது. அதன் விளைவாகத்தான், வெளியில் தெரிந்த குடம் என்பதைக்காட்டிலும் வெறுத்தது. சுகம் தருவது, துக்கம் தருவது என்றவாறு பல உருவங்களும் சேர்ந்த குடம் என்னுள் உருவகப்பட்டுள்ளது. ஆகவே ஜ்ஞேயமான குடம்தான் எனது அறிவில் முக்கியம், வெளியில் உள்ள குடம் அல்ல. ஜ்ஞேயமான குடம் (அறிவால் உணர்ந்த குடம்.) கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம்போல் உள்ளது. இந்த ஜ்ஞேயமான குடம் எனது அறிவினுள் அடங்கியதே. அறிவால் உணர்ந்த குடம் எனில் அறிவைவிடப் பரப்பில் அடங்கியதே.

விளக்கின் வெளிச்சம் அறைமுழுவதும் பரவியுள்ளது. அந்த வெளிச்சத்தால் துலங்கும் பொருள் அனைத்தும் அந்த வெளிச்சத்தின் உள் அடங்குபவையே. அந்த வெளிச்சத்தின் தோற்றுவாயான விளக்கின் உருவம். சிறிதென்பது இதனைப் பாதிப்பதில்லை. அதுபோல் அறிவால் உணரப்படும் பொருளனைத்தும் அறிவினுள் அடங்குபவையே. வெளிச்சம் தேசத்தால் விரிந்ததையும் தன்னுள் அடக்கவல்லது. தேசமும், காலமும் அறிவால் பகுத்தறியக்கூடிய பொருள்தானே. குறுகிய தேசவரையும், காலவரையும் சிற்றறிவிற்கு எட்டும். அந்தச் சிற்றறிவிற்கும் மூலப்பொருளான பேரறிவில் தேசகாலவரையின்றி அகண்டமான பொருள்கள் துலங்கும்.

அறிவில்லாத நிலையில் பொருள் வெளியில் இருந்தும் இல்லாததற்குச் சமமே. அறிவின் ஏதேனும் ஒரு பகுதி செயற்பட்டாலும் உலகின் ஏதேனும் ஒரு பகுதியையாவது அறியமுடியும். அந்த அளவில்தான் அவருக்கு உலகம் உள்ளது. அதனால் அறிவால் அறியுமளவே உலகம்.

இதனை மேலும் விளக்குகிறாள்.

राजपुत्र सूक्ष्मदृशा तल्लक्षय निजं वपुः।
यत्र सामान्यचैतन्ये जगदेतद् विराजते॥ ६२॥
तत्समावेशसंसिद्ध्या सर्वकर्तृत्वमाप्नुयात्।
तस्योपलब्धिं वक्ष्यामि यतः प्राप्नोषि तत्पदम्॥ ६३॥

அரசகுமாரரே! நுட்பமானதைக் காணும் நோக்குடன் அந்த ஞானமேதான் உமது சொந்தமான வடிவம் என்பதைக் காண்பீர். அந்த ஸாமான்ய சைதன்யமாகிய ஆதாரத்தில்தான் உலகம் தோன்றுகிறது. அந்த ஸாமான்ய சைதன்ய வடிவினனாகத் தானிருப்பதை அறிந்து விடலாம். அப்படி அதனை அறியும் வகையைக் கூறுகிறேன். அதன் மூலம் அதன் நிலையை அடைந்துவிடலாம்.

*விழித்திருக்கும்போது ஸ்தூலமாகக் கண்ணில்படும் மண்குடத்தைப்பற்றி ஆராயும்போது அதன் ஸ்தூலத் தன்மைக்கு ஆதாரமாயுள்ள ஸூக்ஷ்மமான பிருதிவி என்ற தத்துவம்தான் இப்படிக் குடமாகத் தோன்றுகிறது என்பதைக் காணமுடிகிறது. அப்போது அந்தக் குடம் பிருதிவி தத்துவத்தைக்காட்டிலும் வேறுபட்டதல்ல என்பதை அறியலாம். இப்படி ஸ்தூலத்தின் ஆதாரமாயுள்ள ஸூக்ஷ்மத்தைக் காணும் மனநிலை ஸமாதியாகும். இந்த ஸூக்ஷ்ம நோக்குடன் தனது அறிவைப்பற்றி ஆராயுங்கால், பார்வை, கேட்டல், தொடுதல் போன்ற பல்வேறு தனித்த (விசேஷமுள்ள) ஸ்தூல அறிவுகளுக்கும் ஆதாரமாக ஸூக்ஷ்மமான ஸாமான்ய சைதன்யம் எனும் ஸாமான்ய ஞானம் இருப்பது புலப்படும். அந்த ஸூக்ஷ்ம ஞானமே (ஸாமான்ய சைதன்யமே) ஆத்மநிலை. தனித்த ஸ்தூல அறிவுகள்மூலம் இயங்கும்போது சில செயல்களைமட்டும் தேச காலங்களை ஒட்டியவாறு செய்யமுடிவதால் மனிதன் எல்லாம் வல்லவனாக ஆகமுடியவில்லை. அவனது அறிவு வரையறுக்கப்பட்டுள்ளதைப்போல் அவனது செயல்திறனும் வரையறுக்கப்பட்டுள்ளது.*

*ஸமாதியில் காணும் பேரறிவே, கலைந்ததும் விழிப்பு நிலையில் உலகின் ஆதாரமாகிறது. உலகின் ஆதாரமான பல்வேறு தோற்றங்களால் மயக்குகின்ற சிற்றறிவுக்கு ஆட்படாமல் ஸமாதி நிலையில் கண்டறிந்த பேரறிவு வடிவமாகவே தன்னைத் தொடர்ந்த தியானத்தின்மூலம் (நிதித்தியாஸனம் வழியாக) உணர்ந்தவன் பிறகு இதற்கென தனிப்பட்ட முயற்சியின்றி நிதித்தியாஸனம் இல்லாத விழிப்பு நிலையிலும் தன்னை அவ்வாறு உணர்வான். அப்போது அவனது அறிவு கட்டுக்குட்படாத*

*தாகையால் அவன் ஸர்வஜ்ஞனான ஈசனுக்கு ஒப்பாக எல்லாம் வல்லவனாகிறான்.*

*ஸமாதி நிலையில்மட்டும் உணரப்படுவதெனக் குறிப்பிடப் பெறும் ஸாமான்யசைதன்யமானது விழிப்பு, கனவு, தூக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் உணரப்படுமா? எல்லா நிலைகளிலும் உணரப் படக்கூடியதாயின் ஏன் எல்லோராலும் உணரப்பெறவில்லை? ஸமாதியைத்தவிர மற்ற நிலைகளில் அதனை எப்படி உணர்வது? என்ற ஐயத்திற்கு விடை காண்கிறாள் ஹேமலேகை.*

निद्राजाग्रन्मध्यभागे सविद्वेदान्तरे तथा।
मध्ये संविद्वेद्ययोश्च सूक्ष्मबुद्ध्याभिलक्षय॥ ६४॥

தூக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையேயும், இரு தனிப்பட்ட அறிவுகளின் இடையேயும் அறிவிற்கும் அறியப்படும் பொருளிற்கும் இடையேயும் சிறிது ஸூட்சும நிலைநோக்குடன் உற்றுப்பார்.

एतत्पदं निजं रूपं यत्प्राप्य न विमुह्यति।
एतदज्ञानमात्रेण प्रवृत्तं जगदीदृशम्॥ ६५॥

இதுதான் ஆத்மாவைக் காணுமிடம். இதனைக் கண்டுகொண்டால் மனக்கலக்கமடையமாட்டான். இதனை அறியாததால்தான் இத்தகைய உலகம் செயல்படுகிறது.

*கேட்டல், பார்த்தல் முதலிய விசேஷஞானங்கள், பொறிகள், மனம் இவற்றால் பெறப்பட்டவை. இவை கேட்கப்படும் அல்லது பார்க்கப்படும் பொருள் வடிவில் பதிபவை. இதனை ஸாகார (வடிவமுள்ள) ஞானம் என்பர். இந்த விசேஷ ஞானங்களுக்கு ஆதாரமான ஸாமான்ய ஞானம் நிராகார ஞானமாகும். இது கேட்டல், பார்த்தல் போன்ற விசேஷ அறிவாகஇல்லாததால் பொருள் வடிவில் அமையாதது. குடத்தைப் பார்த்தேன் எனும்போது ஏற்படும் குட அறிவு குடவடிவில் அந்தக்கரணத்தில் பதிகிறது. அதனால் அது ஸாகாரஞானம். மூல அறிவு நிராகாரம். இதனை நிர்விகல்பம் என்றும் கூறுவர். பேத உணர்வற்றது நிர்விகல்பமாகும். இதனை உணர்வது எப்போது?*

*தூக்கத்தில் பொறிகளுடன் மனம் தன் மூலகாரணமான பிரகிருதியில் மறைகிறது. விழிப்பில் பிரகிருதியிடமிருந்து மனம் பிரிந்து, மனத்திடமிருந்து*

பொறிகள் பிரிந்து பொறிகள் தனித்தனியே மனத்தின்மூலம் வெளிப்பொருள் வடிவில் அமைந்த அறிவைப் பதிக்கின்றன. கனவில் பொறிகள் மனத்தினுள் லயமடைந்தவைகளாக ஜலத்தினுள் மறைந்த பனிக்கட்டிபோல் தனித்து இயங்கும் சக்தியை இழக்கின்றன. மனமே இந்திரியமாகவுமாகி பொருளறிவைத் தருகிறது. மனம் மாத்திரம் இயங்க, முன் ஸம்ஸ்காரத்தால் ஏற்பட்ட வாஸனையின் விளைவான மானஸ விஷயங்கள் பற்றிய அறிவு ஏற்படுகிறது. மூன்று நிலைகளிலும் ஏற்படும் அறிவு இத்தகையது.

ஸுஷுப்தி எனும் தூக்கநிலையில் பிரகிருதி தனது முக்குணங்களில் தமோ குணம் வலுக்க ஸத்வ – ரஜஸ் குணங்களை மறைத்துவிடுகிறது. அந்நிலையில் ஆத்மா பிரகாசிப்பவனாக இருந்தும் மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியனைப்போல் தமோ குணத்தால் ஆவரணம் (மறைப்பு) பெற்று ஒளி மங்கியவனாகவே காணப்படுகிறான். விழிப்பில் ஆத்மா நன்கு பிரகாசிப்பவனாக இருந்தாலும் அவன் ஒளியால் புலப்படும் வெளிப்பொருள்களை மட்டும் அந்தக்கரணம் அறியமுற்படுவதால் ஆத்மாவின் இருக்கை உணரப் படவில்லை. சூரியனின் ஒளியால் துலங்கும் உலகைப் பார்ப்பவன் சூரியனைப் பார்க்காததுபோல்.

இந்த ஸுஷுப்திக்கும் விழிப்பிற்கும் இடையே ஒருநிலை உள்ளது. அந்நிலை நொடிப்பொழுது மட்டும். அதனை உற்றுக் கவனித்தால் மட்டும் உணரப்படுவதாகும். இந்த இடைநிலையில் மனம் இன்னமும் வெளிப்பொருளை நாடி வெளியிற் செல்லவில்லை. அதனால் விஷய ஞானம் பதியவில்லை. பிரகிருதியின் தமோகுணம் விலகி ஸத்வ குணம் தோன்றும் வேளை. தமோகுணம் விலகிவிட்டதால் ஆத்மாவிற்கு மறைப்புமில்லை. இந்நிலையில் சித்வடிவினனான ஆத்மா விஷய ஞானவடிவை அடையாமல் ஸாமான்ய ஞான நிலையில் புலப்படுகிறான். தூக்கத்திலிருந்து விழிப்பிற்குச் செல்லும் இடையிலும் விழிப்பிலிருந்து தூக்கத்திற்குச் செல்லும் இடையிலும் இதனை அறியலாம். இது ஸாமான்யசைதன்யமாகிற ஆத்மாவை தனித்து உணரக்கூடிய ஒருநிலை.

ஆத்மாவின் ஒளியானது மனம் பொறிகள் இவற்றின் வழியே சென்று குடம் துணி என்று பலவகை விஷய அறிவுகளை வரிசையாக உணரச்செய்கிறது. குடமாக அந்தக்கரணத்தினுள் பதிந்த குட அறிவைத் தொடர்ந்து துணி அறிவும் பதிகிறது. இந்த விசேஷ அறிவு ஸம்வித் எனப்படும். ஒரு ஸம்வித்திற்கும் மற்றொரு ஸம்வித்திற்கும் இடையே ஸாமான்ய சைதன்யத்தை உணரலாம். சினிமா அரங்கில் திரையில் ஒளி

*பதிகிறது. அந்த ஒளிதான் பற்பல நடிகர்களாகவும் தோட்டம் முதலியவைகளாகவும் தோன்றுகிறது. அந்த ஒளியைத் தவிர நடிகர்களோ தோட்டம் முதலியவைகளோ தனித்தில்லை. இப்படி நடிகர்களாகவும் தோட்டமாகவும் தோன்றும் ஒளி சில சமயங்களில் அந்த விஷயங்களைக் காட்டாமல், ஒரு நொடிப்பொழுது தனி ஒளியாக மட்டும் திரையில் பதிவதுண்டு. அந்நிலையில் ஒளியைத் தவிர மற்றொன்றையும் உணர்வதில்லை. அதனைப்போல் அந்தக்கரண அரங்கில் எப்போதும் வெளிப்பொருள் வடிவில் பதியும் ஆத்மஒளியானது இரு விசேஷ அறிவுகளின் இடையே ஒளியாக – நிர்விகல்பமாக (பேதமற்றதாக) நிராகாரமாக (வடிவமற்றதாக) மட்டும் உணரப்படும். இதனை உற்றுக் கவனித்து உணரவேண்டும். இதுவும் ஒரு ஸாமான்ய ஞான வடிவினனான ஆத்மாவின் ஒரு அனுபவநிலையாகும்.*

*ஒரு குளத்தில் நீர் தேங்கி நிற்கிறது. அது வடிகால்வாய் வழியே வெளிப்பட்டு வாய்க்கால் வழியே வயலைச் சென்றடைந்து வயல் நீராக வடிவெடுக்கிறது. அதுபோல் உணர்பவனான ஆத்மாவின் வடிவிலிருந்த சுத்த சைதன்யம் மனம் வழியே வெளிப்பட்டுப் பொறிகள் மூலம் பாய்ந்து வெளிப்பொருளை அடைந்து அதன் வடிவினைப் பெறுகிறது. ஒவ்வொரு பொருளைப் பற்றிய அறிவும் இப்படித்தான் ஏற்படுகிறது. எனக்குள் த்ரஷ்டா (பார்ப்பவன்) வாக இருந்த சைதன்யம் வெளிப்பட்டு பார்க்கப்படும் பொருளை அடைந்து த்ருச்யமாக (பார்க்கப்படும் பொருளாக) மாறுமுன் த்ரஷ்டா த்ருச்யம் என்ற இரு நிலைகளுக்கிடையே நிராகாரமாக (வாய்க்கால் வழியே ஓடும் ஜலம் போல்) இருக்கிறது. இந்த நிராகார ஞானமே ஆத்ம ஸ்வரூபம். இது மூன்றாவது ஆத்மானுபவநிலை. இந்த மூன்று நிலைகளிலும் உற்றுப்பார்த்து இதனை உணர முற்படும்படி ஹேமலேகைதன் கணவனுக்கு வழிகாட்டுகிறாள். வெளிப்பொருள் வடிவமடையாத சுத்த சைதன்யமே ஆத்மா. அதனை அப்படி உணராமல் வெளிப்பொருள் வடிவில் உணர்வதால் மனம் கலங்கி துக்கமடைகிறது. ஆத்மாவை உணர்ந்தால் பிரதி பிம்பமாகத் தோன்றும் புலிபோல் உலகம் நம்மை பயமுறுத்தாது என்கிறாள்.*

नात्र रूपं रसो वापि न गन्धस्पर्शशब्दनम् ।
न दुःखं न सुखं वा तु न ग्राह्यं ग्राहकं च न ॥ ६६ ॥
सर्वाश्रयं सर्वरूपं अपि सर्वविवर्जितम् ।
एष सर्वेश्वरो धाता विष्णुरीशः सदाशिवः ॥ ६७ ॥

இந்த (ஸாமான்ய சைதன்யம் உணரப்படும்) நிலையில் உருவமோ சுவையோ மணமோ தொடு உணர்ச்சியோ சொல் கேட்டலோ (அவைகளின் விளைவாகப் பெறும்) சுகதுக்க உணர்வோ உணர்வைப்பெறும் அந்தக்கரணமோ உணர்வாக வடிவுபெறும் வெளிப் பொருளோ எதுவுமே இல்லை. அவை அனைத்திற்கும் இதுவே ஆதாரம். அத்தனை வடிவங்களையும் இதுவே தாங்குகிறது. இவை அனைத்தும் இல்லாமலுமுள்ளது. இதுதான் பரம்பொருள். (படைக்கும்) பிரம்மாவும் (காக்கும்) விஷ்ணுவும் (அழிக்கும்) சிவனும் (லயப்படுத்தும்) ஈச்வரனும் (அனுக்ரஹம் செய்யும்) ஸதாசிவனும் இதுவே.

*கண்ணாடியினுள் தோன்றும் ஒளியே பல வடிவங்களைப் பெறுகின்றது. சில அறிவுவடிவிலும் சில அறியப்படுபவைகளின் வடிவிலும் தோன்றுகின்றன. அறியப்படும் வடிவில் தோன்றுபவைகளில் புழு பூச்சி முதல் பிரம்ம – விஷ்ணு – ருத்ரா – ஈச்வர – ஸதாசிவர்களாகிய பஞ்ச பிரம்ம வடிவினர்கள்வரை யாவரும் அடங்கியவரே. இவற்றை உபதேசத்தால் தெளிந்து தானே உணர்ந்து அனுபவிக்க வேண்டும் என்கிறாள்.*

पश्येषदन्तः संरुध्य स्वात्मानं स्वात्मना सता।
त्यक्त्वा बहिः प्रसरतां अन्तः प्रसरणोद्यतः॥ ९८॥
त्यक्त्वा पश्यामीति भावं अन्धवत् निश्चलात्मना।
दर्शनादर्शने त्यक्त्वा योऽसि सोऽसि द्रुतं भज॥ ९९॥

சிறிதுநேரம் தானாகவே இருக்கும் உணர்வால் மனத்தின் வெளிப்போக்கைத் தடுத்து வெளிச்செல்லும் நோக்கத்தையும் தடுத்து உள்நோக்கில் ஈடுபட்டவராக இருந்து உற்றுக்கவனிப்பீர்களாக. நான் பார்க்கிறேன் என்ற நினைவை அகற்றிக் குருடன்போல் தன்னை மதித்து வெளிப்பொருள் வடிவம்பெறாத உணர்வாக நின்று விழிப்பும் தூக்கமும் இல்லாத இடைநிலையில் நின்று எந்த ஸாமான்ய சைதன்யத்தை உணர் கிறீரோ அதுவே உங்கள் சுயவடிவம், அதனையே ஆத்மாவென அடைவீர்.

*இந்த இடைநிலைஉணர்விற்குத் தேவை மனவடக்கம். வெளிப்பொருளை அது நாடுவதைத் தடைசெய்வதே அடக்கம். மற்றொன்று நான் அடக்குகிறேன். நான் உள்ளே உள்ளபொருளை நாடுகிறேன், என்று தனித்து உணராத – அகங்காரமற்ற –நிலை. கண்ணில்லாதவன் எப்படிக் காண்பது என்பதையே உணரமாட்டானோ, செவிடன் கேட்பது என்பதையே உணரமாட்டானோ அப்படி விசேஷ அறிவுபெற முயலக்கூடாது. விசேஷ அறிவுபெற முனையும்போது அறிபவனும் அறியப்படும் பொருளும் அந்த விசேஷ அறிவும் முக்கோணமாக உருவமைந்து விடுகின்றது. இந்த*

*அகந்தையை இழந்தபின்னர் விழிப்பில் காணும் உலகமும் தூக்கத்தில் காணும் உலகப் பிரளயமும் இருக்காது. சுத்தசைதன்யம் துலங்கும்.*

इत्युक्तः प्रियया हेमचूडः आलक्ष्य तत्पदम्।
चिरं विश्रान्तिमालभ्य बहिर्विस्मरणं ययौ॥ १००॥

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे हेमचूडविश्रान्तिर्नाम नवमोध्यायः।

இவ்வாறு மனைவியால் போதிக்கப்பெற்ற ஹேமசூடன் அந்நிலையைப் பெற்று நிர்விகல்ப ஸமாதியில் ஆழ்ந்தவனாக வெளியுலகை மறந்து நின்றான்.

*திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் ஹேமசூடனது ஸமாதிநிலை பற்றிய ஒன்பதாவது அத்தியாயம்.*

# दशमोऽध्यायः

## பத்தாவது அத்தியாயம்

अथापश्यद् हेमलेखा प्रियं प्राप्तपरस्थितिम्।
न चालयत् परपदात् ततः सोऽपि मुहूर्ततः॥ १॥
प्रबुद्ध उन्मील्य नेत्रे अपश्यत्सप्रियं जगत्।
भूयस्तत्पदविश्रान्तिं ईहमानोऽतिवेगतः॥ २॥
नेत्रे न्यमीलयद्यावत् अब्रवीत्तावदेव सा।
प्रियं हस्ते समादाय सुधासुन्दरभाषिणी॥ ३॥

இதன்பிறகு ஹேமலேகை தன் கணவர் மேல்நிலையை அடைந்திருப்பதைக் கண்டாள். அந்த மேல்நிலையிலிருந்தும் அவரை அவள் அசைக்கவில்லை. சிறிதுநேரத்திற்குள் விழித்தெழுந்த அவன் தன் மனைவியுடன் உலகையும் கண்டான். அவன் மறுபடியும் அந்நிலையில் அமைதிபெற விரும்பியவனாக விரைவுடன் கண்களை மூடிக்கொண்டான். அதற்குள் கணவரைக் கையில் ஏந்தி அமுதினும் இனிதாகப் பேசுபவளாக அவரிடம் அவள் கூறினாள்.

नाथ किं ते वयवसितं ब्रूहि नेत्रनिमीलनात्।
उन्मीलनाद्वा किं स्यात्ते लाभालाभौ समीरय॥ ४॥
उन्मील्य न प्राप्यते किं निमील्य प्राप्यते च किम्।
तन्मे ब्रूहि प्रियतम श्रोतुमिच्छामि ते स्थितिम्॥ ५॥

நாதரே! கண்களை மூடி என்னசெய்ய முயல்கிறீர்? திறந்திருந்தால் என்ன ஆகிவிடும்? அவைகளில் வரும் லாப நஷ்டங்கள் என்ன? திறந்திருந்தால் எது கிட்டாது? கண் மூடினால் எது கிட்டும்? தங்கள் நிலையை விளக்குங்கள். அன்பரே! நான் அதனைக் கேட்க விரும்புகிறேன்.

एवं पृष्टस्तया प्राह मदमत्त इवालसः।
अनिच्छन्नपि वक्तुं तां आलस्यभरमन्थरः॥ ६॥

இப்படி அவளால் கேட்கப்பட்ட அவன் மதத்தால் மயங்கியவன் போல் தெளிவற்றவனாக பதில்கூற விரும்பாதவனாக சோம்பல் மிகுதியால் செயல் மந்தித்தவனாகக் கூறினான்.

प्रिये विश्रान्तिं अत्यन्तं प्राप्तवानस्मि वै चिरात्।
न बाह्ये दुःखभूयिष्ठे विश्रमोऽस्ति क्वचिन्मम ॥ ७ ॥
अलमृजीषररोमन्थप्रायव्यवहृतैर्बहिः।
दौर्भाग्यान्धो नाद्य यावत् अविदं स्वात्मसत्सुखम् ॥ ८ ॥

பிரியே! வெகுநாட்களுக்குப்பிறகு மிகவும் சிறந்த நிம்மதியை (துக்கக் கலப்பில்லாத சுகத்தை) இப்போதுதான் பெற்றுள்ளேன். துக்கம் மிகுந்த வெளி நடப்பில் எனக்கு எங்கும் நிம்மதி கிட்டவில்லை. சத்தெடுத்த கரும்புச் சக்கையை மென்று அசைபோடுவது போன்ற வெளி வியவகாரங்கள் இனிப் போதும். பாக்கியக் குறைவால் இன்றுவரை ஆத்மஞான சுகத்தை அறிந்தேனில்லை.

यथा कश्चिदटन् भिक्षां विधानं स्वं न वेद वै।
तथाऽहं स्वसुखांभोधिं अविदित्वा पुनः पुनः ॥ ९ ॥
सुखं वैषयिकं श्रेष्ठं दुःखसंघाभिसंप्लुतम्।
विद्युद्विलयनं मत्वा स्थिरं तत्परतावशात् ॥ १० ॥
दुःखैरभिहतो नूनं विश्रान्तिं न तु लब्धवान्।

பிச்சை எடுத்துத் திரியும் ஒருவன் தன்னிடத்தில் மறைந்துள்ள பெருநிதிப் புதையலை அறியாதிருப்பதுபோல் நான் ஆத்மசுகக் கடலை அறியாமல், மீண்டும் மீண்டும் துக்கக் குவியலால் மூடப்பட்ட விஷய சுகத்தையே பெரிதெனவும், மின்னல்போல் மறையக்கூடியதை அதில் உள்ள ஈடுபாட்டின் காரணமாக நிலைத்ததெனவும் மதித்துத் துக்கங்களால் வாட்டப்பட்டவனாக இதுவரை நிம்மதியைப் பெற்றேனில்லை.

अहो जना दुःखसुखविवेकज्ञानवर्जिताः ॥ ११ ॥
सुखार्थिनो दुःखसंघं संचिन्वन्ति मुधा सदा।
तदलं दुःखभोगेन स्वयत्नासादितेन वै ॥ १२ ॥
प्रिये कृपां मयि कुरु प्रार्थयामि कृताञ्जलिः।
विश्रान्तिमभिवाञ्छामि चिरं स्वस्मिन् सुखात्मनि ॥ १३ ॥

சுகத்தையும், துக்கத்தையும் பகுத்தறிய அறிவில்லாதவர்களாக மக்கள் இருப்பது விந்தையே! ஸுகத்தை நாடுபவர்களாயினும் அறியாமையால் துக்கக் குவியலையே எப்போதும் சேர்க்கிறார்கள். முயன்று பெற்ற துக்க அனுபவம் இனிப்போதும். பிரியே என்னிடத்தில் தயைபுரிவாய். கைகூப்பி வேண்டிக்கொள்கிறேன். வெகுகாலம் ஸுக வடிவுள்ள

ஆத்மாவிடத்தில் நிம்மதியை அடையவிரும்புகிறேன்.

अहो दैवहता भासि ज्ञात्वाऽपि त्वमिदं पदम्।
तद्विश्रान्तिं परित्यज्य मुधा दुःखाय चेष्टसे॥ १४॥

நீ இந்த நிலையை அறிந்திருந்தும் விதியால் அடிபட்டவளாக அந்த நிம்மதியைவிட்டு வீணே அறியாமையால் துக்கத்தை அடைவதற்கே செயல்புரிகிறாய். இது விந்தையே!

इत्युक्ता सा प्रियं प्राह स्मयित्वेषन्मनीषिणी।
नाथ ते तन्न विदितं पदं परमपावनम्॥ १५॥
यत्र स्थिता न मुह्यन्ति पण्डिताः पावनाशयाः।
तत्पदं दूरतस्तेऽस्ति भूस्थस्येव नभस्तलम्॥ १६॥

இப்படிக் கூறப்பட்ட புத்திசாலியான அவள் சிறிது புன்சிரிப்புடன் அவனிடம் கூறினாள். "நாதரே! அந்த மிகப் புனிதமாக்கும் பெருநிலை தங்களுக்குப் புரியவில்லை. அங்கு நிலைத்தவர்கள் உள்ளத் தூய்மை பெற்றவர்களாகப் பின் கலங்குவதில்லை. பூமியில் இருப்பவனுக்கு ஆகாயம்போல் அந்நிலை தங்களுக்கு வெகுதூரத்தில் உள்ளது.

त्वया किञ्चित्सुविदितं भवेदविदितोपम्।
निमील्योन्मील्य वा नेत्रे तत्पदं न समीक्ष्यते॥ १७॥
अकृत्वा वापि कृत्वा वा न तल्लभ्येत कर्हिचित्।
अगत्वा चापि वा गत्वा न तदासादयेत्पदम्॥ १८॥
निमील्य कृत्वा गत्वा वा प्राप्तं पूर्णं कथं भवेत्।

தாங்கள் இதனைப்பற்றிச் சிறிதளவே அறிந்துள்ளீர்கள். அந்தக் குறுகிய அறிவு அறியாமைக் கொப்பானதே. கண்களை மூடுவதாலோ திறந்துவைத்துக் கொள்வதாலோ அந்நிலையைக் காணமுடியாது. செயலாற்றாமல் சும்மா இருப்பதாலோ செயலாற்றியோ அந்த நிலையை அடையமுடியாது. அப்படியே வெளியே செல்லாமல் ஒரிடத்தில் இருந்தோ, வெளியில் சென்றோ அதனை அடையமுடியாது. கண்களை மூடியும், ஒரு செயலைப் புரிந்தும் ஒரிடத்தை அடைந்தும் பெறுவது எப்படிப் பூர்ணமாக இருக்கும்?

यवाष्टकमितेनैव पक्ष्मणोन्मीलितेन तु ॥ १९ ॥
अन्तर्हितं यदि तदा ननु पूर्णं भवेत्पदम्।
अहो ते मोहमाहात्म्यं आश्चर्यं किमहं ब्रुवे ॥ २० ॥
यस्मिन् ब्रह्माण्डकोटीनां कोटयः कोणसंस्थिताः।
पक्ष्मणोऽङ्गुलिमानस्य उन्मीलनात् तत् तिरोहितम् ॥ २१ ॥

எட்டுயவையரிசி (ஒரு அங்குல) அளவுள்ள இமையைத் திறந்ததும் அது மறைந்துவிடுமானால் அந்நிலை எப்படிப் பூர்ணமாகும்? உமது புத்தித் தெளிவின்மை மிகப் பெரிது, மிகவும் விந்தையானது. என்ன சொல்வேன்? எதன் ஒரு ஓரத்தில் கோடிகோடி பிரும்மாண்டங்கள் அமைந்துள்ளனவோ, அது ஒரு இமையைத் திறந்ததும் மறைந்து விடுகிறதே.

शृणु राजकुमारैतत् तत्वसारं वदामि यत्।
यावद् ग्रन्थिविभेदो न न तावत् सुखमृच्छति ॥ २२ ॥
ग्रन्थयः कोटिशः सन्ति मोहरज्जुविवर्तिताः।
तत्र स्वरूपासंवित्तिः मोहरज्जुरुदीरिता ॥ २३ ॥
यत्र ता ग्रन्थयः सन्ति विपरीतग्रहात्मिकाः।

அரசகுமாரரே! ஆத்ம தத்துவத்தின் ஸாரத்தை உமக்குக் கூறுகிறேன். இந்த இறுகிய முடிப்பு அவிழாதவரை அந்த சுக நிலையை அடையமுடியாது. மோகமெனும் கயிற்றின் சுருக்கால் ஏற்பட்ட முடிப்புகள் கோடிக்கணக்கில் உள்ளன. தன் நிலைபற்றிய அறியாமையே அந்த மோகமெனும் கயிறு. அந்த கயிற்றில்தான் தன் நிலைக்கு மாறுபட்டதாகத் தன்னை அறிவதாகிய விபரீத ஞானம் எனும் முடிப்புகள் ஏற்பட்டுள்ளன.

तत्राद्या देहमुख्येषु भवेदात्मत्वनिश्चयः ॥ २४ ॥
यद्वशादेष संसार आततो दुष्प्रतिक्रयः।
तथा जगत्यनात्मत्वबुद्धिः भानसमाश्रये ॥ २५ ॥

அம்முடிப்புகளில் முதன்மையானது தேகம் முதலியவற்றில் தான் என்ற தீர்மானமாகும். அதனை ஒட்டியே இந்த நீண்டதும் எதிர் நடவடிக்கை எடுக்க முடியாதிருப்பதுமான ஸம்ஸாரம். அடுத்தது (ஸாமான்ய ஞானத்தில்) தோன்றுவதையே தன் ஆதாரமாக்கொண்ட உலகம் தன்னைக்காட்டிலும் வேறுபட்டதென்ற எண்ணம்.

एवं जीवेशभेदादिनिश्चया ग्रन्थयो मताः।
एतच्चिरात्समुद्भूतं भूयः संवर्तितं च वै ॥ २६ ॥

ग्रन्थिरूपं समापन्नं पुरुषः पाशितस्ततः।
तद्ग्रन्थिविस्रंसनतो बन्धान्मुक्तिः समीरिता॥ २७॥

இப்படியே ஜீவன் வேறு, ஈசன் வேறு என்ற எண்ணம் முதலிய வகைகளும் முடிப்புகளே. இது அநாதியான வரையற்ற காலம்தொட்டுத் தொடர்ந்துவந்துள்ளது. மீண்டும் சுருட்டப்பட்டு முடிப்பாகிவிட்டது. அந்த முடிப்பில் ஜீவன் பிணைக்கப்பட்டுவிட்டான். அந்த முடிப்பு கழன்றால்தான் ஜீவன் விடுபடுவான் எனக் கூறப்பட்டுள்ளது.

*கண்களை இறுக மூடியதும் வெளிப் பொருளின் நாட்டம் மறைந்தது, மனம் அடங்கியது. அரசகுமாரன் நிம்மதி பெற்றான். இந்த நிம்மதியே ஆத்மநிலை என எண்ணினான். இந்த மனவடக்கம் சிறந்ததே எனினும் இது ஆத்மநிலை அறிவல்ல. இதனை ஹேமலேகை சுட்டிக் காட்டுகிறாள். நான் கண்களை மூடிக்கொள்கிறேன். அதனால் திறந்திருந்தபோது உள்ள "நான்" கண்களை மூடிக்கொண்டதும் உள்ள "என்னை"க் காட்டிலும் வேறுபடவில்லை. அதனால் நான் இருப்பதை உணரக் கண்களை மூடிக்கொள்ளத் தேவையில்லை. தேகத்தில் நான் என்ற பிடிமானம் உள்ள 'நான்' ஐப் போலவே அநாத்மப் பொருள் சம்பந்தப்படாத 'நான்' ஐ உணரவும் கண்களை மூடத் தேவை இல்லை. கண்களை மூடுவதால் ஆத்மாவல்லாத பொருளை மறைத்துவிடலாம் என நினைப்பது மதியீனம். கண்களை மூடுவதால் மட்டும் தனி ஆத்மா உள்ளே துலங்கப்போவதில்லை. கண்களைத் திறந்ததால் வெளிப் பொருள் தெரிகிறதே, அந்தப் பொருளும் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. வெளியில் ஒருபொருள் இருப்பதால்மட்டும் அது 'என்' அளவில் இருப்பதில்லை. அந்தப்பொருள் என் அறிவால் அறியப்பட்டபின்னர் அந்த அறிவாகி உள்ளே பதிந்த பின்னரே அது இருக்கிறதென்பதை முன் அத்தியாயத்தில் விளக்கினோம். என் அறிவால் உணரப்பட்டதே வெளி உலகம். அந்த அறிவில் உணரப்படும் உலகம் அறிவைக்காட்டிலும் வேறுபட்டதல்ல. கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம்போல் அது தனித்துத் தெரிகிறது. அந்த அறிவெனும் உள்ளொளி கண்கள் மூடியிருந்தாலும், திறந்திருந்தாலும் செயலாற்றினாலும், செயலற்றிருந்தாலும் வேறுபடுவதில்லை. இருந்து இல்லாமற்போவதோ, இல்லாமலிருந்து தோன்றுவதோ இல்லை. எங்கும் நீக்கமற நிறைந்த பூர்ணப் பொருள் எந்நிலையிலும் இல்லாமற்போகாது. அப்போது கண்மூடி மட்டும் பெறுவது பொருந்தாது.*

*கயிறு எத்தனை நீண்டிருந்தாலும் அது ஒன்றைக் கட்டுவதில்லை, அதே கயிறு முனை திரும்பி முடிப்பாகி இறுகினால் ஒன்றைக் கட்டிவிடும்.*

*முடிப்பு விழுந்தவுடன் அதன் நேர்ப்பயணம் தடையுறும். உள்ளொளியாக வந்த அறிவெனும் கயிறானது உடல், பொறிகள் தனதென ஆக்கிக்கொண்ட பொருள்கள் இவைகளைச் சுற்றிவரும்போது அதுவே முடிப்பாகி அங்கேயே சிக்கிவிட்டபடியால் உடலை எண்ணத்தால் சுற்றிவரும். அதன் பிறகு அந்த அறிவு இந்த வட்டத்திலேயே சுற்றிச் சிக்கிச் சுழலும். அதன் நேர்ப்பாதை நேர் நோக்கு தடைபட்டுவிடும். அறிவு குறுகியதாகிவிடும். இதுவே ஸம்ஸார பந்தம் – பிறப்பிறப்புச் சங்கிலியால் பிணைப்பு, உடலுடன் இணைப்பு என்ற வரிசையில் சிக்கல்கள் – கிரந்திகள் உண்டாகின்றன. இந்த முடிப்பு எப்போது ஏற்பட்டது என அறிய இயலாது. அநாதி அவித்யா வாஸனயா ப்ரவர்த்தமானே அஸ்மிந் மஹதி ஸம்ஸாரசக்ரே என்று தினமும் ஸங்கல்பத்தில் கூறுவதுண்டு. அறிவே சிக்கலுறும்போது அறியாமையாகி விடுகிறது. அது ஒவ்வொரு பிறவியிலும் ஒவ்வொரு செயலிலும் மீண்டும் சிக்கலுறுகிறது. தொடக்கமறியாத இந்த சிக்கல் காரணமாக வந்த அஞ்ஞானமெனும் கிரந்தி பந்தமாகிக் கட்டுகிறது. பல காலத்திய சடை போன்ற சிக்கலானதால் இதைக் கழற்றிவிடுவது எளிதல்ல. வேருடன் தொடர்பற வெட்டிவிடுவதே எளிது. இதனை விளக்குகிறாள் ஹேமலேகை.*

यत् त्वं निमील्य नेत्रे स्वे पदमासादयस्यलम्।
तत् पदं निजरूपं ते शुद्धसंविदनुत्तरम्॥ २८॥
तदेवाखिलसंसारचित्रादर्शतलं महत्।
कदा क्व केन रूपेण नास्ति तन्मे निरूपय॥ २९॥

தன் கண்களை மூடி எந்த நிலையை நீர் அடைய விரும்புகிறீரோ, அது உம்முடைய சுய வடிவம். அது சுத்தஞானம். எந்த நிலையிலும் மறுப்பிற்கப்பாற்பட்டது. அது இந்த விசித்திரமான ஸம்ஸாரமாகிய படத்திற்கு பின் உள்ள திரைச்சீலை, மிகப்பெரியது (எதிலும் அடங்காதது). அது எப்போது எங்கு எந்த வடிவில் இல்லை என்பதை எனக்குக் கூறும்.

यदा यद्रूपतो यस्मिन् नेति ब्रूयाः स्वसंविदम्।
तर्हि तत्कालदेशादेः वन्ध्यापुत्रत्वमेव हि॥ ३०॥

எந்நேரத்தில் எந்த வடிவில் எந்த இடத்தில் உம் ஞானஸ்வரூபம் இல்லை என்பீரோ அந்த இடமும் நேரமும் வடிவும் மலடி பிள்ளைபோல் என்றுமே இருக்காதவையே.

प्रतिबिम्बो निरादर्शो यथा नाथ तथैव तत्।
तस्मात्तत्पदसन्त्यागात् नास्ति कुत्रापि किञ्चन॥ ३१॥

நாதரே, கண்ணாடியில்லாமல் பிரதிபிம்பம் என்பதுபோல் ஸாமான்ய ஞானமின்றி எதுவும் எங்கும் இருக்க இயலாது.

तत्र नेत्रोन्मीलनेन किमन्तरिततामियात्।
यावदेवं विजानामीत्येवं ग्रन्थिर्दृढा भवेत्॥ ३२॥
तावन्न तत्पदं प्राप्तं यत्प्राप्तं स्यान्न तद्भवेत्।
निमील्योन्मील्य वा नेत्रे यत्प्राप्तं मन्यसे पदम्॥ ३३॥
तन्न पूर्णपदं यस्मात्परिच्छेदात् क्रियादितः।

அதனால் (ஞானத்தைக் காலத்தாலோ தேசத்தாலோ மற்றவற்றாலோ அடக்கமுடியாதபடியால்) கண்களை மூடிக்கொள்வதால் எது மறையும்? நான் கண்களை மூடிக்கொள்வதால்தான் ஆத்மாவை அறிவேன் என்று எண்ணமே முடிச்சாகி வலிவடைந்து ஆத்மாவை அறியமுடியாதபடி செய்யும். கண்களை மூடிய நிலையில் உணர்ந்த ஆத்மா நிலையாகவும் இருக்காது. கண்களை மூடியோ திறந்தோ தான் பெறும் நிலை பூர்ணமாக இருக்காது, அடக்கும் செயலால் அதனைக் கட்டுப்படுத்துவதால்.

कुत्र नाथ महासंवित् नास्ति कालानलप्रभा॥ ३४॥
स्वात्मीकरोति या अनल्पकल्पनेन्धनसंचयम्।
न ते कर्तव्यसंशेषो विज्ञाय परमं पदम्॥ ३५॥
त्यज ग्रन्थिं सन्निरुध्य पश्यामीति हृदि स्थिताम्।

நாதரே பிரளயகாலத்து நெருப்புபோல் உள்ள பேரறிவு எங்கு தான் இல்லை? அந்தப் பேரறிவு எனும் பெருநெருப்பு எண்ணற்ற உணர்வுகளை எரிபொருளாக்கித் தன்மயமாக்கிவிடும். (நெருப்பில் போட்ட கட்டையை நெருப்பாக்கிவிடுவதுபோல்)அந்த உயர்ந்த நிலையாகிய பேரறிவை உணர்ந்தபின் (கண்மூடுதல் போன்ற) செயல்களுக்குத் தேவையிராது. (கண்களை மூடித்தான்) இதயத்தினுள் துலங்கும் அந்த பேரறிவை உணர்வேன் என்ற முடிப்பையும் விட்டுவிடுவீர்.

इदं नाहमिति ग्रन्थिमुन्मूलय परां दृढाम्॥ ३६॥
पश्य सर्वत्र चात्मानं अखण्डानन्दबृंहितम्।
पश्यात्मन्यखिलं लोकं दर्पणप्रतिबिम्बवत्॥ ३७॥
सर्वत्राखिलमात्मानमिति भूयो न भावयन्।
शेषमभ्युपगम्यान्तः स्वस्थो भव निजात्मना॥ ३८॥

(கண்களைத் திறந்த நிலையில்) தோன்றும் பொருள் தானல்ல என்ற வலிவுள்ள பெருமுடிப்பையும் அகற்றிவிடுவீர். எங்கும் துண்டாடப்பெறாத முழு ஆனந்தம் தளும்பி நிரம்பி நிற்கும் ஆத்மாவைக் காண்பீர். ஆத்மாவில் உலகமனைத்தும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிரதி பிம்பம்போல் புலப்படுவதை உணர்வீர். இப்படி வெளியில் தோன்றுமனைத்தையும் ஆத்மாவாகக் காணும்போதே எண்ணத்தைக் காணும்பொருளில்லாமல் காண்பவராகிய ஆத்மாவிடத்தில் செலுத்தி ஆத்மநிலை அனுபவத்தில் வரப்பெற்றவராகத் தன்னிலை பெறுவீர்.

*ஆத்மாவையும் அனாத்மாவான மற்றவற்றையும் பிணைத்து முடிப்பு ஏற்படுத்திக்கொண்டதால் தான் துண்டாடப்பெறாத எங்கும் நீக்கமற நிறைந்த ஆத்மஸ்வரூபத்தை அறியாமை உடலளவில் குறுக்கியது. இந்த முடிப்பே பந்தமாகி ஸம்ஸாரத்தில் ஜீவனைப் பிணைத்துவிட்டது. ஆத்மாவின் பூர்ண ஸ்வரூபத்தை சுருதி யுக்திகளால் அறிந்தபிறகும் ஆத்மாவை உணரத் தனித்தநிலை என்று ஒன்று உண்டு எனக் கருதி கண்களை மூடி மனத்தை அடக்கவேண்டுமென்பதில் தீவிர ஈடுபாடு கொள்வது அத்தகைய முடிப்புகளில் ஒன்றாகவே அமையும். உலகமனைத்தும், அதிலடங்கிய தன்னுடைய உடலும் பொறிகளும், பேரறிவில் பிரதிபிம்பமாகக் கூடியவையே. ஆத்மா இந்த நேரத்தில் இந்த வடிவில் இந்த இடத்தில்தான் துலங்கும் என்றால் அதனை காலம் ஸ்வரூபம் தேசம் முதலியவற்றால் குறுகியதாகக் கொள்கிறோம். அந்தக்காலமும் ஸ்வரூபமும் தேசமுமே ஆத்மாவில் பிரதிபிம்பமாகத்தோன்றுபவையாதலால் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதல்ல.*

*"மனத்தை அடக்கிக் கண்களை மூடி இருத்தலால் ஆத்மாவை உன்னிப்புடன் உணரமுடியும். கண்களைத் திறந்தால் வெளிப் பொருளுடன் பின்னிப் பிணைந்திருக்கும் ஆத்மஸ்வரூபம் தான் தெரியும். அது தெளிவாக ஆத்மஸ்வரூபத்தை அறியத் தடையல்லவா? என்ற ஒருஐயம் எழும். கண்களைத் திறந்ததும் உள்ளே உள்ள பேரொளி மனம் –கண்கள் இவைகளின் வழியே வெளியே சென்று அத்தனை பொருள்களின் வடிவை புத்தியெனும் திரையில் பிரதிபிம்பமாகக் காட்டுகிறது. ஆத்மா அந்த பிரதிபிம்பத்திற்கு ஆதாரமான ஒளி வடிவினன் என்பதை உணர்ந்தவன், ஒளியால் தெரியும் பிரதிபிம்பங்களைக் கண்டாலும் அந்த பிரதி பிம்பத்தோற்றத்தை ஒதுக்கி அதற்கான ஆதாரத்தில் – ஆத்மா எனும் பேரறிவுப் பேரொளியில் எண்ணத்தைச் செலுத்தலாமே! கண்ணாடியில் பிரதிபிம்பமாகத் தோன்றுபவை கண்ணாடியே, அதனைத்தவிர வேறு அவற்றிற்கு இருக்கை கிடையாது என்று உணர்வதுபோல், பேரறிவான*

*ஆத்மப் பேரொளியில் பிரதிபிம்பமாகத் தோன்றும் உலகமனைத்தும் அந்தப் பேரொளியைத் தவிர வேறில்லை என உணர்ந்து, தோன்றும் அந்த வெளி உலகத்தில் ஆத்மாவைக் காணலாம்.*

*ஆத்மா பேரறிவு வடிவினன், ஆனந்த வடிவினன், ஜடமாக இருந்தால் துக்கக் கலப்பு இருக்கும். ஞானம் எப்போதும் ஆனந்த வடிவே. மனத்தைக் கட்டுப்படுத்திய நிலையில் ஜடப்பொருள் கலப்பில்லாததால் ஆத்மஸ்வரூபம் ஆனந்தமாக பெருநிம்மதியாக உணரப்பட்டது. கண்களைத் திறந்தபோது ஜட உலகக் கலப்பால் அது பூர்ண ஆனந்தமாக இருக்காதோ என்ற ஐயம் எழும். அறிவு "தன்னிடம் சுகமில்லை, சுகம் வெளியே உள்ளது" என்று எண்ணி வெளிப்பொருளை நாடும்போது அறிவு வெளிப்பொருள் வடிவை அடைந்து சுக துக்கங்களை அடைகிறது. ஞானியின் அறிவு வெளிப் பொருளின் வடிவை அடைவதில்லை, ஆசையின்மையால், ஞானியின் அறிவில் வெளிப் பொருள் கண்ணாடியில் பொருள் பிரதிபிம்பமாகத் துலங்குவதுபோல் துலங்குகிறது. அப்போது வெளியே உள்ள பொருள் –சுகம்தரும் பொருள் என்ற துவைத உணர்வில்லை. பொருள் தனித்துத் தெரிந்தாலும் பிரதிபிம்ப உணர்வால் துவைத உணர்வின்றி அதில் இச்சா த்வேஷங்கள் ஏற்படாத தெளிந்தநிலை ஏற்படுகிறது. காம வாஸனை இல்லாததால் துக்கமுமில்லை.*

*கண்ணாடியில் துலங்கும் பொருள் கண்ணாடியே. அதுபோல் ஆத்மா எனும் பேரறிவில் துலங்குவதும் பேரறிவே. அதனால் பார்க்கப்படும் உலகமனைத்தும் ஆத்மாவே என்ற உணர்வு முதலில் ஏற்படும். இது ஆத்ம ஞானப்பாதையில் முதற்படி. பிற்பாடு "பார்க்கப்படும் உலகம்" என்ற தனிப்பட்ட தன்மையை உணராமல் அனைத்தும் ஆத்மாவே என்ற உணர்வாக நிற்கும். அதனைத் தொடர்ந்து உணரும் ஆத்மா உணரப்பெறும் அனைத்துமாகிய ஆத்மா, உணர்வு என்ற திரிபுடி மறைந்து கேவலனான ஆத்மா (திருச்யம் மறைந்து த்ரஷ்டாவான ஆத்மா) தான் என்ற போலியல்லாத – பேதமற்ற – ஆத்ம நிலையில் நிற்பீராக என்று வழி காட்டுகிறாள் ஹேமலேகை.*

इति प्रियोदितं श्रुत्वा हेमचूडः सिताशयः ।
विदित्वा पूर्णमात्मानं सर्वत्र भ्रान्तिवर्जितः ।। ३९ ।।
क्रमात्पूर्णसमावेशासादनात् स्थिरभावनः ।
विहरन् सर्वदा हेमलेखादियुवतीगणैः ।। ४० ।।
शासन् राज्यं समृद्धं स्वं जित्वा शत्रुगणं रणे।

शास्त्राणि भावयन् शृण्वन्नार्जयन् धनसंचयम् ॥ ४१ ॥
अश्वमेधराजसूयाद्यैः यजन् क्रतुमुख्यकैः ।
वर्षाणामयुते द्वे वै जीवन्मुक्तो भुवि स्थितः ॥ ४२ ॥

இப்படி இனிய மனைவியின் சொல்லைக்கேட்டு எண்ணத்தூய்மை யடைந்தவனாக (எல்லா நிலையிலும், ஸமாதியிலும் வெளிநினைவுள்ள நிலையிலும்)தன்னை பூர்ண ஆத்மாவாக உணர்ந்து பிரமை நீங்கியவனாக, பூர்ண ஆத்ம நிலையில் அசைக்கமுடியாத பதிந்த நிலை பெற்றதால் ஆத்மபாவனை நிலைத்தவனாக, ஹேமலேகை முதலிய யுவதிகளுடன் கூடி மகிழ்ந்தும், செழிப்புள்ள தன் அரசை ஆண்டும், போரில் எதிரிகளை வென்றும் தத்வ நூல்களை கற்பித்தும் கேட்டும் பொருள் குவியலைச் சேமித்தும், அசுவமேதம் ராஜஸூயம் முதலிய முக்கிய வேள்விகளால் இறைவனை வழிபட்டும் இருபதினாயிரம் ஆண்டுகள் ஜீவன்முக்தனாக உலகில் வாழ்ந்தான்.

जीवन्मुक्तदशासंस्थं निशाम्य तनयं नृपः ।
मुक्ताचूडश्च तद्भ्राता मणिचूडोऽप्यचिन्तयत् ॥ ४३ ॥

ஜீவன் முக்த நிலையில் நிற்கும் தன் குமாரனைக் கண்ட அரசன் முக்தாசூடனும் ஹேமசூடனது தம்பி மணிசூடனும் பின்வருமாறு யோசித்தார்கள்.

किमयं पूर्ववन्नेह लक्ष्यते सर्वथा किल ।
सुखे न हृष्यत्यत्यन्तं दुःखे नोद्विजते तथा ॥ ४४ ॥
लाभालाभे शत्रुमित्रे साम्यात्पश्यति वै कुतः ।

"இவன் முன்போல் எப்போதும் காணப்படவில்லையல்லவா? சுகம் தருபவைகளை அடைந்தும் மகிழ்ச்சியடையவில்லை. கஷ்டம் தருபவைகளாலும் வேதனைப்படவில்லை. லாபம் – நஷ்டம், எதிரி –நண்பன், இவற்றை ஒரே நோக்கில் காண்கிறான். இது எப்படி?

करोति राजकार्याणि नटवद् रंगमण्डले ॥ ४५ ॥
कापिशायनपायीव सदा मत्तोऽभिलक्ष्यते ।
सदाऽन्यत्र गतस्वान्त इव कृत्यं करोत्यलम् ॥ ४६ ॥

அரங்கில் நடிகனைப்போல் அரசுப்பணிகளைச் செய்கிறான். மது அருந்தியவனைப்போல் தன்னிலை உணராதவனாகக் காணப்படுகிறான். எப்போதும் எண்ணம் வேறெங்கோ சென்றிருப்பவன்போல் செயல்களை ஏதோ செய்கிறான்.

तत्केन हेतुना चेति तमासाद्य रहः क्वचित्।
अपृच्छतां हेमचूडं कुत एवं भवानिति॥ ४७॥

இது என்ன காரணத்தால் ஏற்பட்டுள்ளதென்பதைத் தனிமையில் எங்கோ அவனைச் சந்தித்து ஏன் இப்படி இருக்கிறாய் என ஹேமசூடனைக் கேட்டனர்.

ततः स्वस्थितिमाचख्यौ हेमचूडस्तयोः क्रमात्।
तावुभौ भ्रातृपितरौ हेमचूडेन बोधितौ॥ ४८॥
आसादितपरतत्वौ जीवन्मुक्तौ बभूवतुः।

அதன்பிறகு ஹேமசூடன் அவர்களுக்கு ஆரம்பத்திலிருந்து தான் பெற்றுள்ள நிலையைத் தெரிவித்தான். ஹேமசூடனது ஸகோதரனும் தந்தையும் ஹேமசூடனால் வழிகாட்டப் பெற்றவர்களாக பரதத்வ நிலையை அடைந்தவர்களாக ஜீவன் முக்தர்களாக ஆனார்கள்.

अथ मन्त्रिगणोऽप्येवं राज्ञः श्रुत्वा जगद्गतिम्॥ ४९॥
विचार्य स्वात्मनो भावं ज्ञातज्ञेयोऽभवत्तदा।
एवं विशालानगरे क्रमेणैव परस्परम्॥ ५०॥
उपदेशाद् विदुः सर्वे तत्वमाबालगोपकाः।
नरा नार्यो बालवृद्धा दासा दासीगणा अपि॥ ५१॥

அதற்கடுத்து அப்படி மந்திரிகளும் அரசனிடமிருந்து உலகின் நிலையைப் பற்றிக் கேட்டறிந்து தன் ஆத்ம நிலையையும் உணர்ந்து அறியவேண்டியதை அறிந்தவர்களாக ஆனார்கள். இப்படியே விசால நகரத்திலுள்ள ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், முதியவர்களும் தாஸ – தாஸிகளும், சிறுவர் கோபர்கள் உள்பட எல்லோரும் தத்துவத்தை அறிந்தனர்.

ज्ञातज्ञेयास्त्यक्तदेहाहंभावा अभवन् खलु।
न तत्र कस्यचित् कामः क्रोधो वा लोभ एव वा॥ ५२॥
अनाहतोऽस्ति बालस्य स्थविरस्यापि वा क्वचित्।

அறியவேண்டியதை அறிந்தவர்களாக உடலில் ஆத்மா என்ற எண்ண மற்றவர்களாக ஆனார்கள். அவர்களில் யாருக்கும் ஆசையோ கோபமோ பேராசையோ சிறுவனுக்கோ பெரியவனுக்கோ இயற்கையாக ஏற்படவே இல்லை.

आहृतैः क्रोधकामाद्यैर्व्यवहारपरायणाः ।। ५३ ।।
बालं माता खेलयति परतत्वस्य वार्तया।
दासा दास्यः स्वामिनं स्वं सदा परिचरन्ति वै ।। ५४ ।।
परतत्वपरैर्वाक्यैः व्याहरन्तः परस्परम्।
नटा नाट्यैः वितन्वन्ति पात्रैस्तत्वप्रसंगजैः ।। ५५ ।।
विवेकवार्तापरमं वचो गायन्ति गायकाः।
विदूषका दूषयन्ति लोकव्यवहृतिं सदा ।। ५६ ।।
शास्त्राणि पाठयन्ति स्म विद्वांसः पाठकान् जनान्।
परतत्वविचारार्हैः उदाहरणमण्डलैः ।। ५७ ।।

செயற்கையாக ஏற்படுத்திக்கொண்ட கோபம் காமம் முதலிய உணர்ச்சிகளால் உலகியலில் ஈடுபட்டவர்களாக ஆனார்கள். தாய் குழந்தையை பரதத்வப்பேச்சுடன் விளையாடச் செய்தாள். அப்படியே வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் பரதத்வ தொடர்புள்ள சொற்களால் ஒருவருக்கொருவர் உரையாடிக்கொண்டு தம் தம் எஜமானர்களுக்கு சுசுரூஷை செய்தார்கள். நடிகர்களும், நடிகைகளும் தத்வ நோக்குடன் அமைந்த கதைகளில் நடித்தார்கள். பாடகர்கள் தத்தவநோக்குள்ள பாட்டுக்களைப் பாடினார்கள். விதூஷகர்கள் உலகியல்பைச் சாடினார்கள். பரதத்வ பரமான உதாரணங்களைக் காட்டி தத்துவ நூல்களை அறிவாளிகள் தம்மிடம் வரும் மாணவர்களுக்குக் கற்பித்தார்கள்.

एवं तत्र नरा नार्यो दासा दास्यो नटा विटाः।
भृत्या भटा मन्त्रिणश्च शिल्पिनो वारयोषितः ।। ५८ ।।
सर्वे वेदितवेद्यास्ते विशालनगरेऽभवन्।

இப்படி ஆண்களும் பெண்களும் அடிமையான ஆண்களும் பெண்களும் நடிகர்களும் விடர்களும் கூலியாட்களும் அரசாங்க சிப்பந்திகளும் மந்திரிகளும் சிற்பிகளும் தேவதாசிகளும் அறியவேண்டியவற்றை அறிந்தவர்களாக விசால நகரத்தில் வாழ்ந்தார்கள்.

प्राक्संस्कारबलेनैव व्यवहारपरायणाः ।। ५९ ।।

न संस्मरन्ति संवृत्तं शुभं वाऽप्यशुभं तथा।
भविष्यत् नानुसन्धत्ते हर्षशोकादिसाधनम्॥ ६०॥
वर्तमाने स्मयन् हृष्यन् खिद्यन् क्रुध्यन्निवान्वहम्।
मधुक्षीब इवात्यन्तं व्यवहारपरो जनः॥ ६१॥

முன்னேற்பட்ட பழக்க வலிவினால் மட்டும் தன் நடவடிக்கைகளில் ஒழுங்காக அவர்கள் ஈடுபட்டார்கள். முன்னர் நடந்தது சுபமாயினும் அசுபமாயினும் அதனை நினைப்பதில்லை. வரவிருப்பது மகிழ்ச்சி தருவதாயினும் சோகமூட்டுவதாயினும் அதனைப் பொருட்படுத்துவதில்லை. நடந்துகொண்டிருப்பதற்கேற்ப ஆச்சரியப்பட்டுக் கொண்டும் ஆனந்தப்பட்டுக்கொண்டும் வேதனைப்பட்டுக்கொண்டும் கோபமடைந்தும் அவரவர் தம் தம் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

*விசால நகரத்தில் வாழ்ந்தவரனைவரும் தத்துவமுணர்ந்தவர்கள். எல்லோரும் அதனால் சமநிலை பெற்றிருந்தும் அங்கு அரசன் –பணியாளர், ஆசிரியர் – மாணாக்கர், கணவன் –மனைவி போன்ற ஒருவரை ஒருவர் சார்ந்து நிற்க அவர்களுக்கு முன்னிருந்த ஸம்ஸார வாஸனை உதவியது. மதுவருந்தியவன் மதுவால் மதி இழந்திருந்தாலும் முன் பெற்ற பழக்கம் காரணமாகத் தடுமாற்றமின்றி போரில் ஈடுபடுவான், பாடுவான், வண்டி ஓட்டுவான். அப்படியே அவனவன் முன் பழகிய தொழிலில் தடுமாட்டமின்றி ஈடுபடுவானல்லவா? அப்படியே அவர்கள் தம்தம் தொழிலில் ஏற்றத்தாழ்வுடன் நடந்துகொண்டும் உணர்வளவில் சமநிலையில் வாழ்ந்துகொண்டும் இருந்துவந்தார்கள்.*

एवंविधं तन्नगरं ऋषयः सनकादयः।
प्रसिद्धविद्यानगरं इत्याख्यमूचुरागताः॥ ६२॥

அதனால் அந்த நகரத்தை ஸனகர் முதலிய முனிவர்கள் அங்கு வந்ததும் அதனை வித்யாநகரம் எனப் புகழ்பெறப் பெயரிட்டனர்.

यत्र कीराः पञ्जरस्थाः अपि वाचो वदन्ति वै।
चितिरूपं स्वमात्मानं भजध्वं चेत्यवर्जितम्॥ ६३॥
नास्ति चेत्यं चितेरन्यत् दर्पणप्रतिबिंबवत्।
चितिश्चेत्यं चितिरहं, चितिः सर्वं चराचरम्॥ ६४॥
यतः सर्वं चितिमनु भाति सा तु स्वतन्त्रतः।
अतश्चितिं जनाः सर्वभासिनीं सर्वसंश्रयात्॥ ६५॥
भजध्वं भ्रान्तिमुत्सृज्य चितिमात्रं सुदृष्टयः।

तिर्यञ्चोऽप्येवमत्यन्तं यत्र वाचो वदन्ति वै ।। ६६ ।।
प्रसिद्धविद्यानगरं तदद्यापि प्रचक्षते ।

அங்குள்ள கூண்டிலுள்ள கிளிகள் இவ்வாறு தத்துவப் பேச்சுகளைக் கூறுகின்றன. "சைதன்யமே உருவான தன் ஆத்மாவை சைதன்யத்தால் அறியப்படும் பொருளை விட்டு விலக்கித் தனித்து உணருங்கள். அறிவால் உணரப்படுபவை அறிவைக் காட்டிலும் வேறுபட்டவை அல்ல. கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பம் கண்ணாடியைக் காட்டிலும் வேறுபடாததுபோல். அறிவே அறியப்படும் பொருள். அறிவே நான். அறிவே எல்லா சராசரங்களும் அடங்கிய உலகம். ஏனெனில் அறிவெனும் ஆதாரத்தில்தான் இவை அனைத்தும் துலங்குகின்றன. அந்த அறிவோ தனித்தும் இருக்கிறது. அதனால் எல்லாவற்றையும் துலக்குவதும், எல்லாவற்றிற்கும் ஆதாரமானதுமான அந்த பேரறிவையே நாடுங்கள். சூட்சும நோக்கைப்பெற்றவர்களாகக் கலக்கமின்றி பேரறிவைமட்டும் காணுங்கள்". இப்படிக் கிளிகளும் எங்கு பேசுகின்றனவோ அந்த நகரை வித்யாநகரம் எனப் பெயரிட்டு அழைக்கின்றனர்.

*(இந்த 63 – 65 சுலோகங்கள் இதே வடிவில் நான்காம் அத்யாயத்தில் 99–101 சுலோகங்களாக அமைந்துள்ளதைக் காணலாம். அங்குள்ள விளக்கம் இங்கும் பொருந்தும்)*

एवं तत्र पुरा हेमलेखया खलु बोधितः ।। ६७ ।।
हेमचूडोऽभवद् विद्वान् जीवन्मुक्तस्तथेतरे ।
स्त्रीबालप्रमुखाः सर्वे जाता ज्ञातपरावराः ।। ६८ ।।
तस्मात् श्रेयोनिदानं तु सत्संगः प्रथमो भवेत् ।
तस्मात् श्रेयोवाञ्छने तु सत्संश्रयपरो भवेत् ।। ६९ ।।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
हेमचूडोपाख्यानसमाप्तिर्नाम दशमोऽध्यायः ।।

இவ்வாறு முன்பு ஹேமலேகையால் விளக்கம்பெற்ற ஹேமசூடன் சிறந்த அறிவாளியாகவும், ஜீவன் முக்தனாகவும் ஆனான். மற்ற பெண்களும், சிறுவர்களும் முதலான எல்லோரும் ஆத்மஸ்வரூபத்தையும் மற்றவற்றையும் பற்றிய தெளிந்த அறிவு பெற்றவர்களாக ஆனார்கள். அதனால் நல்லோரிணக்கம் மேன்மைக்கும் காரணம். அதனால் மேன்மையை விரும்பினால் நல்லோரிணக்கம் பெறுபவனாக ஆகவேண்டும்.

***திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் ஹேமசூடன் வரலாற்றின் முடிவாகிய பத்தாவது அத்தியாயம்.***

# एकादशोध्यायः

## பதினோராவது அத்தியாயம்

श्रुत्वैवं हेमचूडस्य कथामत्यद्भुतां तदा।
भार्गवः सन्दिग्धमनाः प्रष्टुं समुपचक्रमे॥ १॥

அப்போது மிகவும் விந்தையான ஹேமசூடனின் கதையை இப்படிக் கேட்ட பரசுராமர் சந்தேகமுள்ள மனத்தினராகக் கேட்கத் தொடங்கினார்.

भगवन् श्रीगुरो यत्ते प्रोक्तं ज्ञानं महाद्भुतम्।
भाति मे विषमं ह्येतदसाध्यं चापि सर्वतः॥ २॥

"பகவானான குருவே! தாங்கள் விளக்கிய (சுத்த அத்வைத) ஞானம் மிகவும் ஆச்சரியம் விளைவிப்பது. எனினும் அது அனுபவத்திற்கு ஒவ்வாதது. எவ்வகையிலும் (எந்த ஸாதனத்தாலும்) சாதிக்க முடியாதது.

कथमेतत् जगद् दृश्यं चितिमात्रस्वरूपकम्।
अदृष्टं केवलं ह्येतत् श्रद्धोपेयं न चान्यथा॥ ३॥
चितिश्चेत्यविनिर्मुक्ता नानुभाव्या कथंचन।
नोपपन्नं सर्वथैतत् कथं चित्तं समारुहेत्॥ ४॥

காணப்படுகிற இவ்வுலகம் சித்து வடிவம் மட்டுமுள்ளதாக எப்படி இருக்க முடியும்? தனித்த சுத்த சித்து வடிவம் காண முடியாததே ! நம்பிக்கையால் மட்டும் கொள்ளத்தக்கது. அறிவால் எப்படியும் உணர முடியாதே ! இது பொருந்தாதே! இது எப்படி மனத்தில் பதியும்?

*முன் விளக்கிய ஹேமசூடனின் கதையால் " இந்த உலகம் பேரறிவு வடிவமே. கண்ணாடிக்குள் பதிந்த பிரதிபிம்பம்போல், அந்த பிரதிபிம்பம் கண்ணாடியைக் காட்டிலும் தனித்தில்லாததுபோல், உலகம் அறிவினுள் பதிந்துள்ளது. அந்த அறிவு தவிர தனித்து உலகம் இல்லை' என்ற தத்துவ விளக்கம் பரசுராமரின் மனத்தில் இன்னம் பதியவில்லை. வேறு விளக்கம் கேட்கிறார்.*

*காணப்படுகிற உலகம், அதனைக் காண்கிற அறிவு என இரண்டு தனித்துக் காணப்படுகிறதே! இரண்டும் ஒன்றாக எப்படி ஆகும்? குடத்தைப் பார்க்கும் நான் எனும் சித்து வேறு, சித்தால் பார்க்கப்படும் குடம் வேறல்லவா? `திருக்' ஆன சித்தும் `திருச்யம்' ஆன உலகமும் எப்படி*

*ஒன்றாகும்? எவரது அனுபவத்திலும் இந்த இரண்டும் தனித்துப் புலப் — படுகின்றனவே! என்பது தான் பரசுராமரின் கேள்வி.*

कृपया बोधनीयोऽहमत्र सर्वात्मना खलु।
इत्यापृष्टो दत्तगुरुः अवदद् भार्गवं प्रति॥ ५॥

தயைசெய்து இவ்விஷயத்தில் நான் தங்களால் முடிந்தவரை அறிவூட்டப்படத்தக்கவனாக இருக்கிறேன்." என்று கேட்கப்பட்ட ஸ்ரீதத்த குரு பரசுராமரை நோக்கிக் கூறினார்.

शृणु राम प्रवक्ष्यामि दृश्यतत्वं यथास्थितम्।
एतद् दृश्यमशेषं तु दृशिमात्रं न चेतरत्॥ ६॥

பரசுராமரே! அறிவால் உணரப்படுகிற உலகின் உண்மை நிலையை (திருச்ய தத்துவத்தை) அது இருக்கிற நிலையிலேயே விளக்குகிறேன். கேளும். காணப்படுவது அனைத்தும் காண்கிற அறிவே. வேறல்ல.

अत्रोपपत्तिं वक्ष्यामि शृणु सम्यक् समाहितः।
एतत् दृश्यं कार्यभूतं उत्पत्तेरुपलंभतः॥ ७॥
उत्पत्तिर्नूतनाभासः प्रतिक्षणमिदं जगत्।
नूतनत्वेनैव भाति तत्क्षणोत्पत्तिमत् जगत्॥ ८॥

இதற்கான யுக்தியைக் கூறுகிறேன். நன்கு அவதானத்துடன் கேளும். திருச்யமான (காணப்படுகிற) இவ்வுலகம் உற்பத்தியுள்ளதாக உணரப்படுவ — தால் காரியமாக (ஒருவனது செயலால் விளைவதாக) உள்ளது. உற்பத்தி என்பது புதிதாகப் புலப்படுவது என்பதே. கணத்திற்குக் கணம் இவ்வுலகம் புதியதாகவே காணப்படுகிறது. அதனால் இவ்வுலகம் கணத்திற்குக் கணம் உற்பத்தியாகிறது.

केचित् प्राहुर्जगदिदं अखण्डैकक्षणोद्भवम्।
अन्ये पदार्थसंघातमयं स्थिरचरात्मकम्॥ ९॥
सर्वथा तु समुत्पत्तिमत् इत्येव विनिश्चितम्।

சிலர் "இந்த உலகம் துண்டாட முடியாதது, ஒன்றே, கணத்திற்குக் கணம் தோன்றுவதே" என்கின்றனர். வேறு சிலர் "அழிவற்றதும் அழிவதுமாக உள்ள இந்த உலகம் பல பொருள்கள் குவியலாக அமைந்திருக்கின்றது " என்கின்றனர்.

க்ஷணிக விஞ்ஞானம் என ஒரு தத்துவக் கொள்கை. "அறிவு பலவானது, ஒன்றல்ல. குடவடிவில் அமைந்த அறிவும் துணி வடிவில் அமைந்த அறிவும் வெவ்வேறு. குடத்தைக் காண்பவன் குட அறிவைப் பெறுகிறான். துணியைக் காண்பவன் துணியறிவைப் பெறுகிறான். ஆகவே அறிவிற்கு வடிவமுண்டு. அதனால் அறிவால் உணரப்படும் பொருளின் வடிவம் அது இருக்கும் இடம், அது தோன்றும் நேரம் என்ற வஸ்து தேசம் காலம் என்ற மூன்றும் சேர்ந்ததும் துண்டாடமுடியாததும் க்ஷணகாலத்திற்கு உட்பட்டது (க்ஷணிக)மான ஒரு அறிவு தோன்றுகிறது. இந்த வடிவமுள்ள (ஸாகாரமான) அறிவைக் காட்டிலும் வேறுபட்ட பேரறிவு (நிராகாரம்)என ஒன்று இருக்கக் தேவை இல்லை. அந்த க்ஷணிக அறிவால் துலங்குகிற உலகமும் க்ஷணிகமே. இந்த க்ஷணத்தில் உண்டான அறிவிலிருந்தே அடுத்த க்ஷணத்தில் தோன்றவிருக்கிற அறிவு உண்டாகிறது. ஆக க்ஷணத்தில் தோன்றவிருக்கிற அறிவு உண்டாகிறது. ஆக க்ஷணிக விஞ்ஞானம் தொடர்ந்து சங்கிலிபோல் தாரைபோல் இருப்பதால் அது துண்டாட முடியாத அகண்டமும் ஏகமும் கூட. இந்த க்ஷணிக அறிவும் இதனால் அறியப் பெறும் க்ஷணிக உலகமும் ஒன்றே' இதுதான் அந்தக் கொள்கை.

கணாதர் முதலிய ருஷிகள் கண்ட தத்துவ விளக்கம் வேறுபடும். அது பின்வருமாறு – "பலதரப்பட்ட பொருள்கள் நெருங்கி இணைந்திருப்பதே உலகம். (பதார்த்தஸங்காதம்)இப்படி இணைந்த பொருள்களில் ஆகாசம் முதலிய மூலப்பொருள் வடிவில் தோன்றுவது நிலைத்தது, நித்தியமானது. குடம் துணி போன்ற ஒரு செயலால் அமைந்த வடிவும் கொண்டது, நிலையாதது, அநித்தியமானது. இத்தகைய ஸ்திரம்–சரம் என்று இரு வடிவம் கொண்ட பல பொருள்களின் கூட்டிணைப்பே உலகம்." இது அவர்கள் கொள்கை.

இவற்றில் முன் கூறிய கொள்கைப்படி அறிவும் அறிவால் துலங்குகிற உலகமும் என்ற இரண்டும் உண்டு, ஆனால் அந்த அறிவில் அறிவால் துலங்குகிற உலகம் அடங்குமென்று ஒத்துக்கொள்ளப்பட்டது. உலகம் புதிது புதிதாகத் தோன்றுவது, நிலைத்ததல்ல என்றும் ஒத்துக்கொள்ளப்பட்டது. இரண்டாவது கொள்கையானது தோன்றும் உலகைப்பற்றி நித்யம் அநித்யம் என இரு வகைப்படுத்தி விளக்கியதோடு நின்றுவிட்டது. இதனைத்தவிர அறிபவனின் அறிவிற்கு அங்கு தனி இடமில்லை. அறிவில் துலங்காதவரை உலகம் என ஒன்றிருந்து பயனில்லை. அறிவில் துலங்காத உலகைப் பற்றிய விளக்கம் தேவையில்லாததாகிறது. இது இந்த விளக்கத்தில் உள்ள குறை.

*இந்த இரண்டு கொள்கையின் விளக்கத்தாலும் உலகம் உற்பத்தி உள்ளது என்பது தேறுகிறது. இந்த உற்பத்திக்கு மூலம் எது? உலகம் தோன்ற அதற்கு மூலப்பொருள் தேவையா? உற்பத்தியாவது எப்படி நித்தியமாகும் என்ற பல ஐயங்கள் இதில் ஏற்படுகின்றன. அவற்றை யுக்தியுடன் மேலும் விளக்குகிறார்.*

तत्र स्वभाववादस्तु नोचितोऽतिप्रसंगतः ॥ १० ॥
अन्वयव्यतिरेकाभ्यां कार्यकारणनिश्चयात् ।
संवादतः प्रवृत्तीनां कथमाकस्मिकं भवेत् ॥ ११ ॥

அப்படியானால் எதிலிருந்தும் எதுவும் ஏற்படலாம் என்ற நிலை ஏற்படும். அன்வயத்தாலும், வியதிரேகத்தாலும் காரிய – காரணத்தொடர்பு தீர்மானிக்க முடிகிறது. மக்கள் செயல்படும்போதெல்லாம் இந்தத் தொடர்பு பொருந்தி வருகிறது. அதனால் ஸ்வபாவம் என்ற யதிருச்சையாக உலகம் உற்பத்தியாவது எப்படி நேரும்?

क्वचित्तु कारणेऽदृष्टं कल्प्यमेव तत् ।
बहूनामनुरोधो हि न्याय्यः सर्वैरुदाहृतः ॥ १२ ॥
भूयो दृष्टं सपूर्वं हि कार्यं क्वचिददर्शने ।
दृष्टवत् परिकल्प्यं स्यात् अन्यथा सार्वलौकिकी ॥ १३ ॥
संप्रवृत्तिर्विरुध्येत तस्मात्सर्वं सकारणम् ।

ஏதேனும் ஓரிடத்தில் காரணம் புலப்படாவிடில் அதற்குப் புலப்படாத காரணமொன்றைக் கல்பிக்கத்தான் வேண்டும். காரணத்தை முன்னிட்டே காரியம் ஏற்படுகிறதென்பது பெருவாரியாகக் காணப்படுகிறது. சில இடங்களில் அப்படி (காரணம்) தெரியாவிடில் அது இருப்பதாக ஊஹிக்க வேண்டும். இல்லாவிடில் உலகமனைத்தின் செயலீடுபாடு முரண்படும். அதனால் எல்லாமே காரணத்தோடு கூடியதுதான்.

अतएव कार्यहेतोः किञ्चित्कारणतत्परः ॥ १४ ॥
सर्वत्र दृश्यते लोकः तस्मादेतन्न किञ्चन ।

அதனால் ஒரு காரியம் நிறைவேறும் பொருட்டு அதன் காரணத்தில் உலகம் முக்கிய நோக்கு கொண்டிருப்பதைக் காண்கிறோம். அதனால் இந்த ஸ்வபாவ வாதம் எனும் கொள்கை பலனற்றது.

உலகம் தோன்ற எது காரணம் என்ற சிந்தனையில் ஈடுபட்டவர் பலர். அத்தகைய காரணம் நேரிடையாக ஸ்பஷ்டமாகப் புலப்படாததால் பல வேறுபட்ட கருத்துக்களுக்கு இடம் ஏற்படுகிறது. சார்வாகர்கள் கூறுவதைக் கூறுகிறார் ஸ்ரீதத்தகுரு. உலகம் தன்னிச்சையாக ஏற்பட்டது. எல்லாவற்றிற்கும் காரணம் என ஒன்று தேவை இல்லை. காரணத்தை எதிர்பார்க்காமல்தான் கார்யம் ஏற்படுகிறது. அப்படி ஏற்படுவது அததன் ஸ்வபாவம். இந்த உலகம் தானே ஏனோ தோன்றியது. உலகிற்கு ஒன்று காரணம் எனக் கொண்டால் அதற்கு எது காரணம்? எனக் கேட்பர். இப்படி வரிசையாக ஒன்றைக் கூறினாலும் கூட எல்லாவற்றிற்கும் முதற் காரணம் எதிலிருந்து தோன்றியது என்பதற்குப் பதில் கிடையாதல்லவா? அதற்குள்ள பதிலை இந்த உலக விஷயத்தில் கையாண்டால், உலகத்திற்கும் மூலகாரணம் ஒன்று உண்டென ஏற்கத் தேவையில்லை. அப்படி அது தோன்றுவது அதன் ஸ்வபாவம் இயல்பு எனக் கொள்வது எளிது. இது சார்வாகரின் வாதம்.

அது தவறு என்கிறார் ஸ்ரீதத்தகுரு. குடத்திற்கு மண் காரணம், துணிக்குப் பஞ்சு காரணம் எனக் கொள்கிறோம். குடமும் துணியும் முறையே மண்ணிற்கும் பஞ்சுக்கும் காரியம். குடம் குடமாகத் தோன்றியது ஸ்வபாவம் எனக் கொண்டால் குடத்தைப் பஞ்சிலிருந்தும் உண்டாக்கலாமே! மண்ணிலிருந்து துணி தோன்றட்டுமே. காரணத்தை ஒட்டிக் காரியமும், காரண குணத்தை யொட்டிக் காரிய குணமும் ஏற்படுவதால் இந்த காரணகாரியத்தொடர்பு முக்கியமானதல்லவா? காரணமான மண் காரியமான குடம் முழுவதிலும் பரவியுள்ளது. இது அன்வய வழியிலான சிந்தனை. காரணமான மண்ணில்லாமல் குடமில்லை. இது வியதிரேக வழியில் சிந்தனை. காரணம் காரியம் முழுவதிலும் வியாபித்திருக்கும். காரணமின்றிக் காரியமில்லை. என்ற இவ்விரு சிந்தனைகளும் எங்கும் பொருந்துகின்றன. "இது ஓரிடத்தில் பிரமையால் ஏற்பட்டிருக்கும். எல்லா இடங்களிலும் இது பொருந்துமா?"என்ற சந்தேகம் எழலாம். பல காரண காரிய தொடர்பு உள்ள இடங்களில் இதைப் பொருத்திப் பார்க்கும்போது ஸம்வாதம் (பொருத்தம்) கிட்டுகிறது. அதனால் எதற்கும் ஒரு காரணம் தேவை எனத் தோன்றுகிறது. ஸ்வபாவத்தால் ஏற்படுகிறதெனக் கொள்வது மேலெழுந்தவாரியான போக்காகும்.

"அதுசரி! உலக விஷயத்தில் அது பொருந்தவில்லையே. அதற்குத் தக்க காரணத்தைக் காட்ட முடியவில்லையே? அதனால் இங்கு ஸ்வபாவ வாதம் பொருந்தலாமே?" எனில், அப்படியல்ல. காரணமின்றிக் காரியமில்லை எனப்பலவிடங்களில் தேர்ந்திருப்பதால் உலகத்திற்கும் ஒரு காரணம் உண்டு

*எனக் கொள்கிறோம். அக்காரணம் நமக்குப் புலப்படவில்லை என்பதால் அது இல்லை என்றாகிவிடாது. நமக்குப் புலப்படாததெல்லாம் இல்லை என்பதானால் பல பொருள்கள் இல்லை என்றேயாகிவிடும். அதனால் "நமக்குப் புலப்படவில்லை" என்பதனால் காரணமேயில்லை எனக் கூறுவது தவறு. "காரணம் உள்ளது. ஆனால் நம்மால் அது கண்டுகொள்ளப்பெறாதது" எனக் கொள்வதுதான் உசிதம்.*

*"தெரிந்த இடத்தில் காரணம் காரியத்திற்கு முன் உள்ளதைக் கண்டதால் தெரியாத இடத்தில் காரணத்தை இருப்பதாகக் கல்பிப்பதைப்போல், தெரியாத இடத்தில் காரியத்திற்கு முன் காரணத்தைக் காணாததால் காரணமின்றி காரியம் தோன்றியிருப்பதால், எல்லா விடத்திலும் காரணமின்றியே காரியம் தோன்றும் எனக் கொள்வதில் தவறென்ன" என்று ஒரு குதர்க்கம் எழலாம். உலகில் மிகப் பெருவாரியாக "எங்கும் காரணத்தால் காரியங்கள் உண்டாகின்றன." என்பதைக் காண்கிறோம். காரணம் தெரியாமல் காரியம் உண்டாவது விரலால் எண்ணக்கூடிய ஒரு சில இடங்களில் தான். அதனால் காரணம் தெரியாத இடங்கள் மிகச் சிலதே என்பதால் அங்கும் ஒரு காரணம் இருக்கக்கூடும் என்று அனுமானிப்பதே எளிது.*

*உலகப் பிரவிருத்தியை நோக்குவோம். ஒருவன் ஒரு செயலில் ஈடுபடுகிறான். எதற்காகச் செயல்படுகிறாய்? எனக் கேட்போம். "இதன் பயனை எதிர்பார்த்து" என்று தானே பதில் கூறுவான்? அந்த பயனுக்கு இந்தச் செயல் காரணமென முன்னறிந்து திடமாக நம்பிச் செயல்படுவதைப் பார்க்கும்போது காரண - காரியத் தொடர்பு தான் உலகப் பிரவிருத்திக்குக் காரணம் என்றாகிறதல்லவா? எல்லாமே ஸ்வபாவமெனக் கண்டுகொண்டால் அதற்காக இதனைச் செய்கிறேன் என்ற எண்ணம் ஏற்பட நியாயமில்லையல்லவா? அதனால் காரியத்திற்கு முன் காரணம் இருக்கவேண்டும் என்பது தான் சரியான கொள்கை, எல்லாம் ஏனோ ஏற்படுகிறதெனக் கொள்வது மதியீனம் எனச் சார்வாகரின் கொள்கையைக் கண்டிக்கிறார் ஸ்ரீதத்தகுரு.*

केचिदाहुरसत्कल्पैः अणुभिः कार्यमुद्यतम् ॥ १५ ॥
तेभ्योऽत्यन्तं विभिन्नं चाप्यसदप्यन्ततो भवेत् ।
असत्सतोरेकता हि विरूद्धा न कुतो भवेत् ॥ १६ ॥

வேறு சிலர் கூறுவர் – "புலப்படாத அணுக்களிலிருந்தும் இந்த உலகம் தோன்றிற்று. அந்த அணுக்களிலிருந்தும் இது முற்றிலும் வேறுபட்டது. இது மறையும்போதும் மறுபடி புலப்படாததாக ஆகும்" என

(இதுவும் தவறு.) அஸத்தும் ஸத்தும் ஒன்று என்பது எப்படி முரண்படாததாகும்?

न हि पीतमपीतं च प्रकाशं चाप्रकाशकम् ।
एकं भवेद् विरुद्धत्वात् सांकर्यादिप्रसक्तितः ।। १७ ।।

மஞ்சளாக இருப்பதும், மஞ்சளல்லாததும் அதுபோல் பிரகாசமும் பிரகாசமில்லாததும் ஒன்றாக இருக்க முடியாதே! அவை முரண்படுபவையல்லவா? இரண்டும் ஒன்றாகலாம் என ஏற்றுக்கொண்டால் எங்கும் குழப்பம் முதலியவை தோன்றுமே!

ईश्वरेच्छादितो वापि कथमादिक्रियोद्भवः ।

(இரு அணுக்கள் கூடியது) ஈசுவரனது விருப்பத்தினால் என்றாலும் முதலில் அணுக்களில் செயல் எப்படி ஏற்பட்டது?

*ஆரம்ப வாதம் என்றொரு கொள்கை. இந்த உலகம் தோன்றுவதற்கு முன் பரமாணுக்களாக இருந்தது. பரமாணு நித்யம். அது ஒன்றோடு ஒன்று சேராது. தனித்த பொருள். அதற்கு அவயவங்களில்லை. அதனால் நகராது, ஒட்டாது, பிரியாது. இந்த நிலையில் முன்னரிருந்து அழிந்துபோன பிராணிகளின் வினை பழுத்துப் பயன் தரும் தருவாயை அடைந்தது. இந்த பிராணிகளின் வினைக்கு, உலகைப் படைப்பேன் என்ற ஈசுவரனது விருப்பம் துணை புரிந்தது. அதனால் இதுகாறும் பரமாணு நிலையிலிருந்தவற்றில் செயல் – சலனம் ஏற்பட்டது. இரு பரமாணுக்கள் இணைந்தன. மறுபடி வினையும் ஈசனின் விருப்பமும் தூண்ட இப்படி இணைந்த த்வியணுகங்களில் (இரண்டு பரமாணுக்கள்) மூன்று ஒன்றாக இணைந்து இந்த பல்வேறு தோற்றங்கள் கொண்ட உலகமாக மாறிற்று. த்வ்யணுகம் காரியம். பரமாணு காரணம். பரமாணுவின் தன்மைவேறு. த்வ்யணுகத்தின் தன்மை வேறு. பரமாணு நித்யம், கார்யமான த்வயணுகத்திற்கு மேற்பட்ட உலகமாகத் தோன்றுபவை அனைத்தும் அநித்தியம். இந்த உலகம் அழியும் வரை கண்ணுக்குப் புலப்படாதவை. அதனால் அஸத் கல்பங்கள் – அஸத் போல இருப்பவை. புலப்படாததால் ஸத் எனக் கொள்ள முடியவில்லை. இருப்பதனால் அஸத் எனக் கொள்ளவும் முடியவில்லை. அதனால் அஸத்கல்பம். இந்த அஸத்திலிருந்து ஸத்தான உலகம் தோன்றியது. உலகம் மறைந்ததும் அஸத்தாக பரமாணுவாக ஆகியது. உலக நிலையிலிருக்கும் காரிய அணுக்கூட்டத்திற்கும் உலகம் தோன்றுவதற்கு முன்னும் உலகம் மறைந்தபின்னுமுள்ள காரண பரமாணுக்களுக்கும் தன்மையில் முற்றிலும்*

*வேறுபாடு உண்டு. இது ஆரம்பவாதிகளான கணாத முனிவரைப் பின் பற்றியவர்களின் கொள்கை.*

*இதனையும் மறுக்கிறார் ஸ்ரீதத்தகுரு. குடம் பரமாணுக்களிலிருந்து தோன்றியது. குடம் அழிந்ததும் பரமாணுக்களாக மாறிவிடும். பரமாணு நிலையில் 'அஸத்' ஆக இருந்த குடம், குடநிலையில் ஸத்தாகி, மறுபடி அஸத்தாகிவிடுமல்லவா? இது பொருந்துமா? ஒன்றே ஸத்தாகவும் அஸத்தாகவும் ஆகுமா?*

*ஒரு மஞ்சள் துணி, அந்தத் துணியின் ஒவ்வொரு நூலிழையும் மஞ்சள் நிறம் கொண்ட பஞ்சாலானது. அதனால் துணியின் ஒவ்வொரு பகுதியிலும் அந்த மஞ்சள் புகுந்துள்ளது. அந்த மஞ்சள்துணி மஞ்சளல்லாத நிறம் கொண்டதாக ஒருசமயம் தோன்றுமா? ஒளியும் இருட்டும் பொருந்தாதவை. ஒளியால் மற்றதைத் துலக்கமுடியும், மறைக்க முடியாது. இருட்டால் மற்றதை மறைக்க முடியும், துலக்கமுடியாது. இப்படி முரண்படும் தன்மையுள்ள ஒளியே மறைப்பதாக எப்படி ஆகும்? அதுபோல் அஸத் எப்படி ஸத்தாக ஆகும்? அப்படி மஞ்சள் நிறமுள்ளது, மஞ்சளல்லாத நிறம் கொள்ளுமானால் உலகில் இது இது இப்படித்தான் இருக்குமென வரையறுக்கவே இயலாதே. நெருப்பு குளிரச் செய்யும் ! தண்ணீர் சுடுமே!*

*செயலற்ற – ஒன்றோடோன்று சேராத – நித்தியமான அணு கூடியது எனக் கொள்ள வேண்டி வருகிறது. அதற்கு இறைவனின் விருப்பத்தையும் மக்களின் வினையையும் காரணமாகக் கொண்டார்கள். ஒருவனது விருப்பம் மற்றொரு சேதனனைத் தூண்டிச் செயல்படச் செய்யும். ஒரு சேதனனின் விருப்பம் மற்றொரு அசேதனத்தைச் செயல்படச் செய்ய இயலுமா? ஈசுவரனின் இச்சைக்கேற்ப அணுக்கள் கூடுமானால் அரசன் சிப்பாய்களை நாடாமல் அம்பையும் கத்தியையும் ஏவி எதிரியை அழித்து விடலாமே? அரசனது விருப்பம் காரணமாக கத்தியே யுத்தகளம் சென்று போரிடுமே! அதனால் அணு உலகக் காரணமாகாது. அணு தானே த்வ்யணுகமாகாது. அந்த அணுவை உலகமாக ஆக்கிய சேதனன் யார் என்பதை இந்த ஆரம்ப வாதக் கொள்கை விளக்கவில்லை என்கிறார் ஸ்ரீதத்தகுரு.*

गुणसाम्यप्रकृतिकं जगदित्यप्यसंभवि ॥ १८ ॥
वैषम्यहेतोर्मृग्यत्वात् साम्यहेतोश्च हीनतः ।
चेतनेनानधिष्ठानात् दृष्टान्तानुपलंभतः ॥ १६ ॥

முக்குணங்களின் ஒரே சீரான சம நிலையை மூல காரணமாகக் கொண்டது இவ்வுலகம் என்பதும் பொருந்தாது. (படைப்பிற்கு முன் சம நிலையிலுள்ள முக்குணங்கள்) ஏற்றத் தாழ்வை அடைவதற்கான காரணம்

தேடியும் கிடைக்கவில்லை. அப்படி ஏற்றத் தாழ்வடைந்த குணங்கள் (மறுபடி பிரளய காலத்தில்)சமநிலை அடையக் காரணமும் இல்லை. (அப்படி மாற) சேதனமான ஒன்று அதனை முன் நின்று நடத்தவில்லை. (இவை நடக்க முடியும் என்பதற்கான)வேறு சான்று காணக் கிடைக்கவில்லை.

*உலகம் பரிணாமத்தால் ஏற்படுவது என்பது ஸாங்கியர்களின் பரிணாம வாதக் கொள்கை. பிரளயத்திற்குப் பின் பிரகிருதி எனும் மூலகாரணம் மட்டுமே இருந்தது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் சமநிலையே அந்தப்பிரகிருதியாகும். அதைத் தவிர வேறு சேதனப் பொருள் கிடையாது. உலகமாகத் தோன்ற முற்பட்டதும் முக்குணங்களின் சமநிலை மாறி ஏற்றத் தாழ்வு ஏற்பட்டதும் பலவாறான மூல தத்துவங்கள் தோன்றி இவ்வுலகம் பரிணமித்தது. புருஷன் என தத்துவம் ஒன்று உண்டு. அது செயலற்றது. அதன் அருகாமையையே காரணமாகக் கொண்டு பிரகிருதி தானே இவ்வுலகமாக மாறிற்று. அதனால் பிரகிருதியே உலகின் மூல காரணம். புருஷன் தாமரையில் நீர் போல் அப்பழுக்கற்றவன். எதிலும் ஒட்டாதவன். எதற்கும் காரணம் ஆகாதவன்.*

*இந்த பிரகிருதி பரிணாம வாதம் சரியாகப் பொருந்தவில்லை என்கிறார். ஸ்ரீ தத்தகுரு. குணங்களின் சமநிலையாகிய பிரகிருதி எப்படி ஏற்றத் தாழ்வுள்ள விஷம நிலைக்கு மாறிற்று? உலகமாகத் தோன்றிய நிலையில் விஷம நிலையிலிருந்த முக்குணங்கள் மறுபடி படைப்பு ஒடுங்கியதும் பிரளய நிலையில் எப்படி சமநிலைக்கு மாறின? இயற்கை சமநிலையானால் அதை மாற்றியது யார்? தானேமாறியது என்றால் ஜடம் தன் இயற்கையை விட்டுத் தானே மாறாதே! சேதனன் ஜடத்தை அதன் சுயநிலையிலிருந்து மாறச் செய்வான். அப்படி ஆட்டிப் படைக்கும் சேதனன் இந்த பரிணாமவாதக் கொள்கையில் இல்லையே! சேதனனின்றி ஜடமே தானே செயல்படும் என்பதற்குச் சான்று கிடையாதே!*

तस्मात् जागतकार्यस्य कारणं नोपलभ्यते ।
अदृष्टे तु श्रुतिर्मूलं नान्यमानस्य संगमः ॥२०॥
प्रमातॄणामपूर्णत्वात् प्रमाणस्यानवस्थितेः ।

அதனால் உலகாகிற காரியத்திற்குக் காரணம் யாதெனப் புலப் படவில்லை. புலப்படாத விஷயத்தில் வேதம் பிரமாணமாகும். மற்ற பிரமாணம் எதுவும் ஒத்து வராது. மற்ற பிரமாணங்களைக் கொண்டு நிரூபிப்பவர் யாவரும் குறையுள்ளவர்களே. எந்த பிரமாணமும் (வேறு யுக்திகள் மூலம் அடிபடுமானதால்) நிலைத்து நிற்கவும் இயலாது.

*பரிணாம வாதத்தின்படி உலகின் காரணம் பிரகிருதியாக மட்டும் இருக்க முடியாது. அந்த ஜடத்தை மாற்றித் தரும் சேதனன் யார் எனத்தெரியவில்லை. இந்நிலையில் வேதம் ஒன்றே பிரமாணமாகக் கொள்ளத்தக்கது. பிரத்யக்ஷம், அனுமானம் என்ற இரு பிரமாணங்களும் இங்கு பயன்பெறாது. நேரிடையாக உலகிற்குக் காரணமான சேதனனைக் காண முடியவில்லை. அதனால் பிரத்யக்ஷம் பயனற்றுவிடுகிறது. அனுமானம் பிரத்யக்ஷத்தையே ஆதாரமாகக் கொண்டது. அதனால் அதுவும் பிரமாணமாக முடியாது. சிற்றறிவிற்குப் புலப்படாதவற்றை விளக்குவதையே நோக்காகக் கொண்டது வேதம். மற்ற எந்த அறிவாளியும் குறையறிவுள்ளவரே. எவரும் பூர்ண அறிவுள்ளவரல்ல. ஒருவர் நிரூபிப்பதை மற்றொருவர் அதைவிட வலிய யுக்தியால் மறுத்துவிடக் கூடும். அதனால் யுக்தியால் நிரூபிக்கப்பட்டதெதுவும் நிலைத்ததாகக் கொள்ள முடியாது. அதனால் வேதம் பிரமாணம் எனக் கொண்டு, அது காட்டும் பாதையில் உலகைப் படைத்த வனைக்காண முடியும் என்கிறார் தத்தகுரு.*

कार्यकर्त्रवियोगस्य भूयोदर्शनहेतुतः ॥ २१ ॥
सकर्तृक जगदिदं संभवात् चेतनो हि सः ।
कार्यस्याचिन्त्यरूपस्य कर्ता साधारणः कथम् ॥ २२ ॥
तस्मादचिन्त्यशक्तिः स आगमस्तद्विमर्शनम् ।

செயலும் செயலாற்றுபவனும் இணைபிரியாதிருப்பது என்பது பெரும் பாலும் காணப்படுவதால் இவ்வுலகமும் படைப்பவனோடு கூடியதே. அவனும் சேதனனாக இருப்பதே பொருந்தும். உலகப் படைப்பென்பது எண்ணிப் பார்க்க முடியாத அற்புதச் செயல். அதனைப் புரிபவன் எப்படி சராசரி அறிவாளியாக இருக்க முடியும்? அதனால் அவனும் எண்ணிப் பார்க்க முடியாத திவ்யசக்தியுள்ளவனே. வேதம் அவனை விளக்கும்.

पूर्णस्य त्वप्रतिहतं प्रमाणं सर्वतोऽधिकम् ॥ २३ ॥
तत्रैकस्तु महेशानः पुरा सृष्टेरुदाहृतः ।
स्वतन्त्रो ह्यनुपादानः स्वातन्त्र्यभरवैभवात् ॥ २४ ॥
स्वात्मभित्तौ जगच्चित्रं विलासायावभासयत् ।

பூர்ணனான அவனை மறுத்தலுக்கிடமின்றி காட்டுகிற வேதம் மற்றவற்றைவிட மேலானது. அந்த வேதம் படைப்பிற்குமுன் மகேசன் ஒருவன் இருப்பதைக் குறிப்பிடுகிறது. அந்த மகேசன் தன்னிச்சையால் வேறு உதவியின்றி செயல்படுபவன். அந்த தன்னிச்சை நிறைவின் பெருமையால் தானேயான சுவற்றில் உலகாகிற சித்திரத்தை விளையாட்டாகத்

தோன்றவைத்தான்.

यथा स्वप्नमनोराज्ये कल्पितं स्वेन केवलम् ॥ २५ ॥
अहंत्वेनैव गृह्णाति देहं तद्वदयं जगत् ।
न ते रूपं यथा देहः स्वप्नव्यावृत्तिहेतुतः ॥ २६ ॥
तथाऽस्य न जगद्देहः व्यावृत्तेः प्रलये ननु ।

கனவிலும் கல்பனையிலும் தானே கல்பித்த உடலைத் தான் என ஏற்றுக் கொள்வதுபோல் இந்த உலகையும் மகேசன் 'தான்' எனக் கொள்கிறான். கனவிலும் கல்பனையிலும் கண்ட உடல் மாறுபாடுள்ளதால் எப்படி அது உனது உண்மை வடிவமல்லவோ அப்படியே பிரளயத்தில் மறைவதால் மகேசனுக்கும் உலகம் உண்மை உடலல்ல.

देहादिव्यतिरिक्तस्त्वं यथा केवलचिन्मयः ॥ २७ ॥
एवं देवो जगच्छून्यचिदेकवपुरव्ययः ।

நீ எப்படி உடல் முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனாக தனித்து சித்து வடிவமாக உள்ளாயோ அதுபோல் ஜகத்தைக் காட்டிலும் வேறுபட்ட சித்துமாத்திரம் வடிவமாக உள்ளவனும் அழிவற்றவனுமாக மகேசன் உள்ளான்.

तेनेदं स्वात्मनि जगत् चित्रमुन्मीलितं ननु ॥ २८ ॥
क्वोन्मीलयेत् जगच्चित्रं स्वान्यस्य क्वाप्यसंभवात् ।

அந்த தேவனால் உலகமாகிய சித்திரம் தன்னிடமே வரையப்பட்டது. தன்னைத்தவிர வேறொன்றில்லையாகையால் அவன் உலக சித்திரத்தை வேறு எங்கு எழுதுவான்?

ऋते चितिं कदाचिद्वा क्व किं भवितुमर्हति ॥ २९ ॥
यत्राभावश्चितेर्ब्रूयात् स देशो नैव सिध्यति ।
अभावश्च चितेः केन सिध्येत् तस्मात् चितिः परा ॥ ३० ॥

சித்சக்தியைத் தவிர வேறொன்று எங்காவது எப்போதாவது இருக்குமா? எந்த இடத்தில் சித்சக்தி இல்லை என்று கூறப்படுகிறதோ அந்த இடமே புலப்படாது. சித் இங்கு இல்லை என்று எப்படி நிரூபிப்பது? அதனால் சித்சக்தி எல்லாவற்றிற்கும் மேம்பட்டதும் மறுக்க முடியாததுமாகும்.

महासत्ता जगद्ग्रासशीला पूर्णा अवभासते ।
समुद्रमन्तरा भंगाः दिवानाथं विना प्रभाः ॥ ३१॥
यथा न सन्ति तद्वद्वै संविद्रूपं विना जगत् ।

அது மாபெரும் ஸத்து. உலகை தன்னுள் விழுங்கி விடக்கூடியது. எங்கும் நீக்கமற நிறைந்ததாகத் தோன்றுகிறது. கடலைத்தவிர அலைகளும் சூரியனைத் தவிர ஒளிக்கதிரும் எப்படி வேறுபட்டவனவல்லவோ அப்படியே அந்த ஸம்வித்சக்தியைத் தவிர உலகம் வேறுபட்டதல்ல.,

तस्मादेष महादेवः शुद्धचैतन्यविग्रहः ॥ ३२॥
आसीत्सृष्टेः पुरा तस्मादुत्पन्नं तत्र संस्थितम् ।
तस्मिन् विलीयते चान्ते जगदेतत् चराचरम् ॥ ३३॥

அதனால் இந்த மகாதேவன் சுத்தமான சைதன்யவடிவினன். அவனே படைப்பிற்கு முன்னும் இருந்தான். அவனிடமிருந்து தோன்றிய இவ்வுலகம் அவனிடத்திலேயே நிலைத்திருந்தது. முடிவில் சரமும் அசரமுமான உலகம் அவனிடத்திலேயே ஒடுங்கி விடுகிறது.

*நமது அறிவிற்கு எட்டாதாவற்றை வேதம் விளக்குகிறது. அதனால் இவ்விஷயத்தில் அது தான் நமக்குப் பிரமாணம். உலகம் எப்படித் தோன்றிற்று? இதைப்பற்றி வேதம் கூறுவதை 24–33 சுலோகங்களால் குறிப்பிடுகிறார் ஸ்ரீ தத்தகுரு. (ஐதேரேய உபநிடதம்) "பரம்பொருள் ஒன்று தான் முன்னதாக இருந்தது. வேறொன்றும் இல்லை." என்று கூறுகிறது வேதம்.*

*அவனிடமிருந்து தான் இந்த உலகம் தோன்றிற்று உலகத்தைத் தோற்றுவிக்க அந்தப் பரம்பொருளை ஏவும் மற்றொரு சேதனன் இல்லை. படைப்பதற்கேற்ற வேறு ஜடப்பொருளோ சேதனமோ இல்லை. படைப்பதற்குரிய கருவி தனித்துக்கிடையாது. ஆக பரம்பொருளே தானே கருவியாகிக் காரியமாகிக் கர்த்தாவாகி நின்றதெனலாம். ஆக உலகத்தைத் தோற்றுவிப்பதில் அது ஸ்வதந்திரம். அப்படி உலகைப் படைப்பானேன்? அதை அப்படி யார் தூண்டியது? எதற்காகப் படைத்தது? இந்த கேள்விகளுக்கெல்லாம் பதில் அது அப்படி விளையாட நினைத்ததென்பதே. விலாஸாய – லீலாகைவல்யம் என்பர்.*

*கனவில் ராஜபாட்டையுமில்லை. ரதமுமில்லை, குதிரையுமில்லை. ஆனால் கனவுகாண்பவன் அத்தனையையும் படைத்து அதில் ஏறிச் செல்கிறான். அவையனைத்தும் அவனைத் தவிர வேறில்லை. ஒருவன் தனித்து ஓரிடத்தில் உட்கார்ந்துகொண்டு "தானே அரசனானால்" என்று*

*கல்பனையால் மனோராஜ்யம் நடத்துகிறான். அவனது அரசும் மந்திரியும் படைகளும் மக்களும் அவனைத்தவிர வேறுபடுவதில்லையே!*

*கனவிலும் மனோராஜ்யத்திலும் தான்படைத்தவை மெய்யல்லவை எனினும் அவற்றில் 'தான்' 'தனது' என்ற உரிமை ஏற்படுவதுபோல் ஈசன் தான் படைத்தவற்றில் 'தான்' 'தனது' என்று அபிமானமும் கொள்கிறான். கனவில் தோன்றியது மறைந்ததும் தனதெனக் கொண்டது மறைந்ததைப் பற்றிச் சிந்திப்பதில்லை. அதுபோல் பிரளயத்தில் தன்னுள் ஒடுங்கும் உலகைப் பற்றி இறைவன் சிந்திப்பதில்லை.*

*உலகெனும் படைத்ததைத் 'தான்' ஆகிய சுவற்றில் தானே எழுதிக் கொண்டான். தன்னைத்தவிர வேறொன்றில்லை. எங்கும் இல்லை. எப்பொழுதுமில்லை. தான் ஸத்–சித்ஸ்வரூபன். தன்னுடைய ஸத் தன்மையை உலகில் காட்டி உலகம் இருப்பதாகக் காட்டுகிறான். இவனது 'ஸத்' தன்மையின்றி உலகம் தோன்றாது. உலகம் இருப்பதே அதனை நாம் அறிவதால்தான். அறியப்படும் பொருள் என்பது அறிபவனைச்சான்று நிற்கும். அறிபவனின்றி அறியப்படுவது இருந்து இல்லாதது போல்தான். சித்சக்தி இன்றி அறியமுடியாது. ஆக ஸத் – சித் சக்திகள் காரணமாகவே உலகம் தோன்றுவதும், புலப்படுவதும்.*

*மஹா ஸத்தும் மஹா சித்துமாக இருப்பது பரம்பொருள் ஒன்றே. கடல் போல் அது. அலை போல் உலகம். சூரியன் போல் அது. ஒளிக்கதிர் போல் உலகம். கடலைத்தவிர அலையோ, கதிரவனைத்தவிர கதிரோ இருப்பதில்லை. அதுதான் படைப்பிற்கு முன் தனித்திருந்து, படைப்பிற்குப்பின் உலகாகவும் தானுமாகவுமிருந்து பிரளயத்தில் தானாக மட்டுமிருக்கிறதென வேதம் கூறும்.*

इत्यागमप्रसिद्धोऽर्थः तत्र विप्रतिपद्यते ।
अदृष्टार्थेषु संवादात् प्रमाणं ह्यागमो भवेत् ।। ३४ ।।
दृश्यन्ते मणिमन्त्रादिसिध्दयः सर्वतो यतः ।
नाल्पप्रज्ञो विजानीयात् मणिमन्त्रमहाफलम् ।। ३५ ।।
तस्मात्सर्वज्ञगदितो ह्यागमः सर्वदर्शनः ।
तत्रोक्तो देव एवादौ सृष्टेर्जगत आस्थितः ।। ३६ ।।
निरुपादान एवादौ सृष्टवानखिलं जगत् ।

இவ்வாறு வேதம் கூறும் பொருள். அதில் ஐயம் ஏற்படுவதற்கில்லை. வேதம் புலனறிவிற்கெட்டாதவற்றில் பொருத்தமான விளக்கம் தருவதால் பிரமாணமாகிறது. மணி – மந்திர – ஔஷதங்களின் சித்தி

அபூர்வபலன்களைத் தருகிறது. இதனைக் குறைந்த அறிவுள்ளவன் அறிய முடியாது. (ஸர்வஜ்ஞனான இறைவன் தான் அதனையறிய முடியும். 'ஈசன் எல்லாமறிந்தவன். அவன் வெளியிட்ட வேதம் எல்லாவற்றையும் விளக்க வல்லது. அந்த வேதத்தில் "ஈசுவரன் ஒருவனே உலகின் படைப்பிற்கு முன் இருந்தவன். வேறு சாதனங்களின்றி தன்னிடமிருந்தே இந்த உலகைப் படைத்தான்" எனக் கூறப்பட்டுள்ளது.

यस्मान्महेश्वरः पूर्णस्वच्छस्वातन्त्र्यसंयुतः ॥ ३७॥
चिदात्मभित्तावखिलं चित्रमुन्मीलयेद् जगत् ।
न तज्जगत्संभवति बहिः क्वचिदवस्थितम् ॥ ३८॥
पूर्णत्वादीश्वरस्येह स्थानमन्यत्र विद्यते ।
अन्यस्थानस्थितं तत्र कथंचिन्नैव सिध्यति ॥ ३९॥

நீக்கமற எங்கும் நிரம்பிய அப்பழுக்கற்ற ஸ்வாதந்திரியத்துடன் கூடியவனாகையால் ஈசுவரன் பிரகாசவடிவான 'தான்' ஆகிய சுவற்றில் உலகாகிய சித்திரத்தை வரைந்தான். ஈசுவரன் எங்கும் நீக்கமற நிரம்பியவனாகையால் அவனை விட்டு வேறிடம் இல்லை. அதனால் உலகமும் அவனுக்கு வெளியே ஏற்பட இயலாது. (ஸத் –சித் வடிவினனான) ஈசுவரனைவிட்டு வேறிடத்தில் இருந்தால் அது துலங்காது, அதன் இருக்கைக்கும் துலங்கலுக்கும் காரணமான ஸத் –சித்– அம்சம் வெளியே இல்லாமையால்.)

तथा च दर्पणाभोगे प्रतिबिम्बवदेव हि ।
जगदुन्मीलितं देवे चैवं सर्वं समञ्जसम् ॥ ४०॥

ஆகவே கண்ணாடியின் பரப்பில் பிரதிபிம்பம் போல் பரம்பொருளிடத்தில் உலகம் தோன்றுகிறது.

*ஸத் சித் வடிவான பரம்பொருளிடத்திலிருந்து ஸத்தல்லாத சித்தல்லாத உலகத் தோற்றமும் விளக்கமும் எப்படி என்ற கேள்விக்குப் பதிலாகக் கண்ணாடியைக் காட்டுகிறார். கண்ணாடியின் தெளிவிற்குச் சற்றேனும் பொருந்தாத பிரதிபிம்பம் அதனுள் அடங்கி நிற்பதைக் காட்டுகிறார். அதேசமயம் கண்ணாடியைத்தவிர அது வேறுபட்டதல்ல என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். சாதனமும் மூலப்பொருளுமின்றி செயலாற்றுவது எப்படி? குயவன் மண்ணின்றித் தடியின்றிச் சக்கரமின்றிக் குடம் வனைவது எப்படி? என்ற ஐயப்பாட்டிற்கு இனி விடை தருகிறார்.*

जगदादेर्हि देवस्य योगीव जगतः क्रियाः ।
संकल्पनगरप्रख्या सृष्टिर्देवस्य संमता ॥४१॥

யோகி தன் விருப்பப்படி பொருளை உண்டாக்குவதைப்போல் இறைவன் உலகை உண்டாக்கினான். எண்ணத்தால் உருவாக்கப்பட்ட நகரம்போல் இறைவனின் இவ்வுலகப் படைப்பு.

யோகி தன் விருப்பப்படி வேறு ஜடப்பொருளைக் கையாளாமல் பொருளைத் தோற்றுவிப்பான். அப்படித் தோன்றுகிற பொருள் அவனைக்காட்டிலும் வேறாகத் தோன்றினாலும் அவனது எண்ணத்தையே மூலப்பொருளாகக் கொண்டது. அதனால் அவனது எண்ணத்தைக் காட்டிலும் அதனை வேறுபட்டதாகக் கொள்ள முடியாது. இதனை மேலும் விளக்குகிறார்.

राम ते मानसी सृष्टिर्मनोमय्येव केवला ।
अनेकमातृमेयादि प्रचुरा ह्यवभासते ॥४२॥
अनेकभेदभिन्नाऽपि मनसोऽन्या न हि क्वचित् ।
उत्पन्ना मनसस्तत्र स्थिता तत्रैव लीयते ॥४३॥
सा केवलमनोरूपा यथा तद्वत् जगत् शिवात् ।

பரசுராமரே! மனத்தால் படைக்கப்பட்டபொருள் மனமேதான். அது அறிபவையும் அறியத்தக்கவையுமாக உள்ள பல பொருள்கள் நிரம்பியதாகக் காண்கிறது. ஒன்றுக்கொன்று முரண்படுகிற பல தன்மைகள் கொண்டதாயினும் அது மனத்தைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. மனத்திலிருந்து தோன்றி அங்கேயே மறைகிறது. அதனால் தனித்தது மனமேதான். அதுபோல் உலகமும் ஈசனைக்காட்டிலும் வேறுபட்டதல்ல.

स शिवश्चितिमात्रैकरूपश्चितिरविग्रहा ॥४४॥
त्रिपुराऽनन्तशक्त्यैक्यरूपिणी सर्वसाक्षिणी ।

அந்த சிவன் சித் வடிவமானவன். அந்த சித்திற்குத் தனி வடிவமைப்பில்லை. அந்த சித்தே திரிபுரா. எண்ணற்ற சக்திகள் ஒருங்கே குவிந்த வடிவில் உள்ளவள். எல்லாவற்றையும் பார்த்து நிற்கும் ஸாக்ஷியானவள்.

*சிவனும் சித்தும் ஒன்றே. உலகில் காணப் பெறுகிற எண்ணற்ற சக்திகள் சித்தின் கதிர்களே. அவை அனைத்தும் இதனுள் அடக்கம். கண்ணாடி என்ற நிலையில் ஒன்றாகவும் பிரதி பிம்பம் என்ற நிலையில்*

*பலவாகவும் உள்ளதுபோல் பல சக்திகளாகவும் ஒரே சித்தாகவும் இருப்பவள். கண்ணாடிபோல் இவள் ஜடமல்ல. பேரறிவாக நின்று அறியத்தக்கவை அனைத்தையும் அறிபவளாக அதனால் பாதிப்புறாதவளாக ஸாக்ஷியாக நிற்பவள்.*

सा चितिः सर्वतः पूर्णा परिच्छेदविवर्जनात् ॥४५॥
कालो देशश्च लोकेऽस्मिन् परिच्छेदकरः स्मृतः ।
तत्राकारमयो देशः कालस्तु स्यात् क्रियामयः ॥४६॥
यां चितिं समुपाश्रित्य स्यादाकारः क्रियाऽपि वा ।
तस्याः परिच्छेदकत्वं अनयोः स्यात् कथं वद ॥४७॥

அந்த சித்சக்தி எங்கும் நீக்கமற நிரம்பியவள். அவளை எதுவும் துண்டாடவோ பகுக்கவோ முடியாது. உலகில் பகுப்பவை காலமும் தேசமும். தேசம் என்பது பூமி முதலியவைகளின் வடிவு. காலம் என்பது (சூரியன் முதலானோரின் கதி முதலிய) செயலே. எந்த சித்சக்தியின் துணைகொண்டு வடிவமும் செயலும் ஏற்படுமோ, அந்த சித்சக்தியைப் பகுக்க அவைகளால் எப்படி முடியும் என்று கூறுவாய்!

*அது இதல்ல, இது அதல்ல என்று பிரித்துக்கூற முடிந்தால் அது பூர்ணமல்ல. பிரித்துக்கூற இரண்டு உதவுகின்றன. (1) நேரம், (2) தேசம் நேற்றிருந்தது இன்றில்லை என்பதனால் நேற்றிருந்தது வேறு என்றாகிறது. அப்போது காலத்தால் வேறுபடுத்திக்கூற முடிவதால் (காலபரிச்சேதம் அடைவதால்) இது பூர்ணமல்ல எனலாம். காலம் என்பது சூரியனின் கதியால் ஏற்படுவது. செயல்வடிவானது. தேசம் என்பது பூமி முதலானவற்றை நகரம் கிராமம் மலை கடல் என்றவாறு உருவமைத்துப் பிரித்தது. இவன் சென்னையிலிருப்பவன் என்றால் இவன் திருச்சியில் இருக்கமுடியாது . அதனால் தேசத்தால் பரிச்சேதம் ஏற்படுவதால் –பாகுபடுத்த முடிவதால் பூர்ணமல்ல என்று கூற முடியும். இந்தக்காலமெனும் ஸூர்யசலனம் சித்சக்தியால் ஏற்படுவது. சித்சக்தி இன்றி எந்தச் சலனமும் ஏற்படாது. தேசமெனும் தோற்றமும் அந்த சித்சக்தியின் விளைவே. சித்சக்தியின் ஓரம்சத்தால் விளைந்தவை, சித்சக்தியைக் குறுக்கவோ பகுக்கவோ முடியாது.*

कस्मिन् देशे च काले च चितिर्नास्तीह तद्वद ।
यत्र न स्याच्चितिः सोऽपि कथं स्यादिति वै भवेत् ॥४८॥

எந்த இடத்திலாவது காலத்திலாவது இங்கு சித்சக்தி இல்லை என்று இருந்தால் அதனைக் குறிப்பிடுவாய். சித்சக்தி இல்லாத பொருள் ஒன்று

எவ்வாறிருக்க முடியும்?

अस्तिता हि पदार्थानां प्रकाशो नापरः खलु ।
प्रकाशस्तु चितिः प्रोक्ता नाचितेः स्यात्प्रकाशता ।।४९।।
प्रकाशस्तु सुमुख्यः स्यात् यः स्वतन्त्रः प्रकाशते ।
जडा न स्वप्रकाशा हि चितियोगप्रकाशनात् ।।५०।।
अन्यानपेक्षणेनैव चितिः स्वस्मिन्प्रकाशते ।
जडाश्रितिं समाश्रित्य प्रकाशन्ते न चान्यथा ।।५१।।

ஒரு பொருளிருப்பதென்பது அது வெளிப்படையாகக் காணப்படுவதன்றி வேறில்லை. அப்படி வெளிப்படையாகக் காணப்படுகிற தன்மையே சித்சக்தியாகும். சித்சக்தியில்லாவிட்டில் பொருள் துலங்காது. எந்த ஒரு பொருள் பிறர் உதவியை எதிர்பாராமல் தானே துலங்குகிறதோ அதுவே முக்கியப் பிரகாசமாகும். ஜடப்பொருள் தானே துலங்காது. சித்சக்தியில் கலந்தபின்னரே துலங்கும். பிற பொருளின் எதிர்பார்வையில்லாமலேயே சித்சக்தி தன்னிடத்தில் துலங்கும். ஜடப்பொருள்கள் சித்சக்தியை ஆசிரயித்தே துலங்கும். வேறுவிதமாக அல்ல.

*சூரியன் முதலியவற்றின் ஒளிகொண்டே எல்லாப்பொருளும் துலங்குகின்றது. அவ்வொளி இல்லாத இடத்தில் பொருளிருந்தும் துலங்குவதில்லை. சூரியனின் ஒளியை சித்சக்தியுடன் ஒப்பிட முடியாது. சூரியனின் ஒளியால் துலங்காமல் இருட்டில் சில பொருள்கள் இருக்கின்றன. அவை துலங்கவில்லை என்பது மட்டுமே. வேறு வகையில் அவற்றின் இருக்கையை உணரமுடியும். சித்சக்தியால் துலங்காதது எதனாலும் துலங்காது. அது மட்டுமல்ல. சித்சக்தியின்றி பொருள் இருக்கவே முடியாது. ஜடத்தின் உள் அதன் சக்தியாக "ஜடசக்தி: ஜடாத்மிகா" என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் கூறியுள்ளதுபோல் சித்சக்தி நீக்கமற நிரம்பியுல்ளது. அந்த சித்சக்தி அப்படி நிரம்பி அதன் வடிவமாகவே இருப்பதால் (தாதாத்மியம் பெற்றிருப்பதால்)ஜடத்தின் வடிவம் துலங்குகிறது. சித்சக்தி இல்லையேல் வடிவமே நிலைத்திருக்காது. அது அதுவாகத் தோன்றுவதும் இது இதுவாகத் தோன்றுவதும் நெருப்பு சுடுவதும் நீர் சில் என்றிருப்பதும் சித்சக்தி அந்த அந்த வடிவில் நிரம்பியிருப்பதால் தான்.*

अप्रकाशेऽपि वस्तूनामस्तिता चेत्तदा श्रृणु ।
अस्ति नास्तीति लोकेऽस्मिन् व्यवस्था न हि सेत्स्यति ।।५२।।

துலங்காவிடிலும் பொருள்கள் இருக்கலாமெனில் உலகில் இது உள்ளது இது இல்லாதது என்று நிர்ணயம் தேறாது.

*குதிரைக்கொம்பென ஒரு பொருளில்லை என்று கூறுவோம். அது எப்படி எனில் இதுவரை யாரும் கண்டதில்லையே என்று பதில் கூறுவோம். ஒன்று இருப்பதை அது உணரப்படுவதால் மட்டும் அறியமுடியும். "அதனை உணரவே முடியாது. ஆனால் அது உள்ளது' எனில் அது நம்பமுடியாத பேச்சு.*

तस्माद्वस्त्वस्तिता लोके चित्प्रकाशो न चापरः ।
यथा हि प्रतिबिंबानां सत्वं दर्पण एव हि ॥ ५३॥
तथा चितिजगत्सत्ता ततः सर्वं चितिर्भवेत् ।
अधिकं भासते यत्तु तन्नैर्मल्यमहित्वतः ॥ ५४॥

அதனால் ஒரு பொருளின் இருக்கை சித்சக்தியால் அதன் துலக்கமே தவிர வேறல்ல. பிரதிபிம்பப் பொருளின் இருக்கை அவை துலங்கும் கண்ணாடியைத் தவிர வேறல்ல என்பதுபோல். சித்சக்தியே உலகின் இருக்கை. அதனால் எல்லாம் சித்சக்தியே. தனித்தனிப் பொருளாகச்சித்தைக் காட்டிலும், வேறுபட்டதாகத் தோன்றுவது சித்தின் நிர்மலத்தன்மையின் பெருமையால்தான்.

*பிரதிபிம்பிக்கும் பொருள்கள் பலவெனினும் கண்ணாடியே பலவாகத் தோன்றுகிறது. பலவாக இருக்கிறது. கண்ணாடி ஒன்றே எனில் அது ஒன்றுதானே தெரியவேண்டும்? எனில் கண்ணாடியில் பல பொருள்கள் தெரிவது அதந் அப்பழுக்கற்ற தன்மையைக் காட்டும். எத்தனைக்கெத்தனை அப்பழுக்கற்றிருக்கிறதோ அத்தனை வடிவங்களின் சிறப்பு தோன்றும். இதுபோல் சித்சக்தி ஒன்றே எனினும் அதந் பிரகாசச்சிறப்பு பல்வேறு பொருளாகத் துலங்குவதே.*

काठिन्यनिर्मलत्वाभ्यां प्रतिबिम्बावभासनम् ।
तयोस्तु तारतम्येन प्रतिबिंबः स्फुटोऽस्फटः ॥ ५५ ॥
दर्पणे च जले चापि स्पष्टमेतद्धि लक्ष्यते ।

கடினத்தன்மை, தூய்மை இவைகளின் காரணமாகக் கண்ணாடியிலும் நீரிலும் தார தம்மியத்தின் விளைவாகப் பிரதிபிம்பம் முறையே தெளிவாகவும், தெளிவற்றதாகவும் ஸ்பஷ்டமாகத் காணப்படுகிறது.

*ஒரு பொருள் பிரதிபிம்பத்தைக்காட்ட ஒளியைத் தடைசெய்யாத தெளிவும் தூய்மையும் கடினத்தன்மையும் தேவை. அப்படி நமக்கு நன்கு அறிமுகமானவை இரண்டு. ஒன்று கண்ணாடி. மற்றொன்று ஜலம்.*

*இரண்டிலும் பிரதிபிம்பம் தெரிகிறது. தூய்மையும் கடினத்தன்மையும் கண்ணாடியில் அதிகம். அதனால் தெளிவான பிரதி பிம்பம் நன்கு தெரிகிறது. ஜலத்தில் கண்ணாடியைக்காட்டிலும் அவை குறைவு. அதனால் பிரதிபிம்பம் தெரிந்தாலும் தெளிவுமில்லை. நிலையுமில்லை. ஆகாசத்தில் தெளிவிருந்தும் கடினத்தன்மையில்லை, சுவற்றில் கடினத்தன்மை இருந்தாலும் ஒளியைத் தடைசெய்யும் மறைப்புள்ளது. அதனால் இரண்டிலும் பிரதிபிம்பம் தெரிவ—தில்லை. கண்ணாடியில் பிரதிபிம்பம் ஏற்பட வெளியே ஒரு பிம்பப்பொருள் தேவை. சித்திற்கு மற்றொரு பிம்பத்தின் உதவி தேவைஇல்லை என்ற சிறப்பையும் விளக்குகிறார் ஸ்ரீ தத்தகுரு.*

जडत्वात् दर्पणादेस्तु स्वातन्त्र्यपरिवर्जनात् ॥ ५६ ॥
बिंबापेक्षा चितेः स्वच्छस्वातन्त्र्यादनपेक्षता ।
निर्मलत्वं स्वतः सिद्धं चितेर्मालिन्यवर्जनात् ॥ ५७ ॥
अनेकरसतैव स्यात् मालिन्यं तच्चितेर्नहि ।
ऐकात्म्यरूप्याच्चिच्छक्तेः अखण्डत्वाच्च सर्वथा ॥ ५८ ॥
अरिक्तात्मभावहेतोः नैर्मल्यं सर्वतोऽधिकम् ।

கண்ணாடி முதலியவற்றிற்குத் தனித்தியங்க முடியாமையால் –ஜடமானபடியால் (பிரதிபிம்பத்தை ஏற்க) பிம்பப்பொருளின் எதிர்பார்வை உண்டு. பிரிக்கின்ற மலமின்மையால் ஸ்வச்சமாக இருப்பதாலும் தனித்தியங்கும் தன்மை படைத்திருப்பதாலும் சித்சக்திக்குப் பிம்பத்தின் எதிர்பார்வை இல்லை. சித்தில் அழுக்கு ஒட்டமுடியாதாகையால் ஸ்வச்சத் தன்மை அதற்கு இயற்கையாகவே அமைந்துள்ளது. பல பொருள் கலந்திருப்பதே அழுக்காகிறது. சித்தில் அது கிடையாது. ஆத்மாவைத் தவிர அது வேறுபடாமையால் எல்லாவற்றையும்விட ஸ்வச்சத் தன்மை இதில் அதிகம்.

अस्वतो भासमानस्य भानमन्यानुषंगतः ॥ ५९ ॥
प्रतिबिम्बस्वरूपज्ञाः प्रतिबिम्बं प्रचक्षते ।
जगदेतादृशं सर्वं सर्वैः समभिलक्षितम् ॥ ६० ॥
स्वतो न भासते क्वापि भासते च चिदाश्रयात् ।
अतो जगत्स्यादादर्शप्रतिबिंबसुसंमितम् ॥ ६१ ॥

பிரதிபிம்பம் என்பதன் தத்துவமறிந்தவர், "தானே தனித்துத் துலங்காததும் மற்றொன்றின் தொடர்பால் துலங்குவதும் பிரதிபிம்பமாகும் என்பர். உலகமனைத்தும் அப்படித்தான் என எல்லோரும் உணர்ந்ததே. தானே அது தனித்துத் துலங்குவதில்லை. சித்சக்தியின் தொடர்பால்

துலங்குகிறது. அதனால் உலகம் கண்ணாடியில் துலங்குகிற பிரதி பிம்பத்திற்கொப்பானது.

चितिर्विचित्राऽन्यभावैः उपरक्तापि भासिनी ।
स्वरूपादप्रच्युतैव आदर्शवल्लेशतोऽपि हि ॥ ६२॥

சித்சக்தி கண்ணாடி போன்றது. வேறு பொருள்களால் நிற மேற்றப்பட்டிருந்தபோதிலும் அதனால் விசித்திரத் தோற்றம் பெற்றிருந்தாலும் தன்னிலையிலிருந்து சிறிதும் நழுவாதபடி தன்னிலையிலும் அது தானே தன்னை வெளிக் காட்டிக்கொண்டு துலங்குகிறது.

दर्पणप्रतिबिंबानां दर्पणानन्यता यथा ।
चिदात्मप्रतिबिम्बानां चिदात्मानन्यता तथा ॥ ६३॥
दर्पणे प्रतिबिंबो हि बिम्बहेतुर्निरूपितः ।
चितिस्वातन्त्र्यहेतुः स्यात् प्रतिबिम्बो हि जागतः ॥ ६४॥

கண்ணாடியில் உள்ள பிரதிபிம்பங்கள் கண்ணாடியைக் காட்டிலும் வேறுபடாதிருப்பதுபோல், சித்தில் துலங்கும் பிரதிபிம்பங்கள் சித்தைக் காட்டிலும் வேறுபட்டவையல்ல. கண்ணாடியிலும் காண்கிற பிரதிபிம்பம் பிம்பத்தைக் காரணமாகக் கொண்டது. இங்கு சித்சக்தியின் தனித்தியங்கும் சக்தி காரணமாகவே உலகத்தின் பிரதிபிம்பம்.

स्वसंकल्पात् राम पश्य स्वात्मनि प्रतिबिंबितान् ।
भावान् बिम्बविनाभूतान् निर्निमित्तावभासनान् ॥ ६५॥
संकल्प एव स्वातन्त्र्यं चितेरुच्छूनमीर्यते ।
असंकल्पदशायां सा चितिः स्वच्छैकरूपिणी ॥ ६६॥

தனது சங்கல்பம் (மனக்கல்பனை) காரணமாக தன் உள்ளத்திலுள்ள சைதன்யத்தில் பிம்பமின்றியும் காரணமின்றித் தோன்றுபவையுமான பல பொருள்களை நீ காண்பாய். சித்சக்தியின் புஷ்டியடைந்து வெளியே பூரித்து மலர்கிற தனித்து இயங்குகிற சக்தியே அந்த ஸங்கல்பமாகும்.

*கண்ணாடியில் பிரதிபிம்பம் காண பிம்பம் தேவைப்படுகிறது. ஜீவனின் உள்ளத்தினுள் துலங்கும் சித்சக்தியில் பிரதிபிம்பிக்க வெளிப்பொருள்–பிம்பம் தேவை இல்லை. சித்சக்தி தனித்துத் தன்னுள் அடங்கி தானாக இருக்கும் நிலையில் அதில் ஒரு பிரதி பிம்பமும் ஏற்படாது. ஸமாதிநிலையிலும் ஸுஷுப்தி நிலையிலும் இதனைக்காணலாம். அதே சித்சக்தி தானே (உச்சூனம்) பூரித்து அந்தக்கரணத்தின் வழியே*

*வெளிப்படும்போது மனத்தின் ஸங்கல்பசக்தியைத் தூண்டி வெளிப்பொருளின்றி மனோராஜ்ஜியமாகப் பலவற்றைக் காணச்செய்கிறது. எதனால் அவை துலங்குகின்றன? எப்படித் துலங்குகின்றன? என்பது தெரியாது. ஸங்கல்பசக்தி நின்றால் அவையனைத்தும் மறைகின்றன. எங்கு அவை சென்றன! எங்கு எப்படித் தோன்றினவோ அங்கு அப்படி மறைந்தன. அதனால் அவை சித்தைத்தவிர வேறல்ல.*

एवं चितेः विशुद्धैकरूपायाः सृष्टितः पुरा ।
महत् स्वातन्त्र्यमभवत् संकल्पात्मकमेव तत् ॥ ६७॥
तत एतत्सममिति प्रतिबिंबात्मकं जगत् ।
बृहत्संकल्पसुस्थैर्यात् चिरमेतद्विभासते ॥ ६८॥

இவ்வாறு கலப்பற்ற சித்திற்கு படைப்பிற்கு முன் மகத்தான தனித்தியங்கும் சக்தி இருந்தது. அது (ஒன்றாக – துண்டாடப் பெறாதிருந்த தான் பலவாக – துண்டாடப்பட்டதுபோல் ஆகவேண்டுமென்ற (ஸங்கல்பமாக ஆனது. அதன் விளைவாகப் பிரதிபிம்ப நிலையிலுள்ள இந்த உலகம் தோன்றிற்று. அந்த மாபெரும் சக்தியின் ஸங்கல்ப வலிவால் நீண்டகாலம் அப்படியே தோற்றமளிக்கிறது.

*மனிதனின் ஸங்கல்பம் வலிவற்றது. அதனால் கல்பனையால் விளைந்ததனைத்தும் கல்பனை நின்றதும் உடனே மறைந்து, கண்டது பொய்யென நிரூபித்துவிடுகிறது. பராசக்தியின் ஸங்கல்பத்திலிருந்து உலகம் தோன்றியதால் அந்த ஸங்கல்பம் நீடித்திருப்பதால் வெகுகாலம் நிலைத்ததோற்றம் கொண்டு மெய்போல் காட்சி தருகின்றன. பராசக்தியின் ஸங்கல்பம் நிற்கும்போது உலகம் தோன்றிய இடத்திலேயே ஒடுங்கி மறைகின்றது.*

साधारणं जगद्भाति पूर्णस्वातन्त्र्यहेतुतः ।
अन्येषां तदपूर्णत्वात् भात्यसाधारणात्मना ॥ ६६॥

நிறைவுற்ற தானே இயங்கும் சக்திகாரணமாக உலகம் எல்லோருக்கும் ஒரேவிதமாகக் காணத்தக்கதாக விளங்குகிறது. மற்ற மனிதர்களுக்கு (ஸங்கல்பத்தில்) சுதந்திரம் (தானே இயங்கும் தன்மை) குறைவுள்ள தானதால் (எல்லோருக்கும் வெளிப்படையாக ஒரேவிதமாகத் தோன்றாமல்) கல்பனை செய்பவனுக்குமட்டும் தோன்றுவதாகக் காண்கிறது.

अभ्यासान्मणिमन्त्राद्यैः स्वातन्त्र्यं तु यथा तथा ।
त्यजेत्संकोचमात्मस्थं तथा तत्र हि भासनम् ॥ ७०॥

पश्यैन्द्रजालिकं राम निरुपादानयोगतः ।
भासयन्तं जगच्चित्रं संकल्पादेव सर्वतः ॥ ७१॥
साधारणं स्थिरं स्वार्थक्रियार्हं भूय एव तु ।
स्वात्मन्युपसंहरेच्च जगदेवं विभासते ॥ ७२॥

மணிமந்திரம் முதலியவற்றாலும் தொடர்ந்த பயிற்சியாலும் ஆத்மசக்தியை வளர்த்துக்கொள்வதுபோல், (ஆத்மதத்வத்தின் பூர்ணவிரிவை அனுஸந்தானத்தால் பயின்று) தன்னிடமுள்ள சக்தியின் சுருக்கத்தைக் கைவிடவேண்டும். அப்படிச் செய்வதால் ஆத்ம தத்துவத்தின் பூரண ஸ்வாதந்திரியமுள்ள முழு உருவம் உணரப்படும். வெளிச் சாதனச் சேர்க்கையின்றியே தன் ஸங்கல்பத்தாலேயே எல்லோருக்கும் விளக்கும்படி உலகை விசித்திரமாகத் தோற்றுவிக்கிற இந்திரஜால வித்தைக்காரனைப்பார். பலருக்குப் புலப்படும்படியாகவும் நிலைத்திருப்பதாகவும் தனது விருப்பத்தை நிறைவேற்றவல்லதாகவும் படைத்துக்காட்டிப் பின் தன்னுள்ளேயே அவற்றை அவன் ஒடுக்கிக்கொள்கிறான். அப்படியே தான் இவ்வுலகமும் தோன்றுகிறது.

योगिनः पश्य सृष्टिं तां पूर्णस्थैर्यसमावृताम् ।
योगिनस्तु मितत्वेन सृष्टिर्बाह्या विभाविता ॥ ७३॥
अमितत्वात् सृष्टिरियं चिन्नाथस्यान्तरेव हि ।

பூர்ணமாக நிலைத்தலைக் கொண்ட யோகியின் படைப்பைப்பார். யோகியின் சக்தி அளவிற்குட்பட்டதாகையால் தனக்கு வெளியே படைப்பு காணப்படுகிறது. இறைவனின் சக்தி அளவற்றதாகையால் தன்னுள்ளேயே படைப்பு ஏற்படுகிறது.

*இந்திரஜால வித்தைக்காரனது படைப்பு பிறரை மயக்குவதற்காக ஏற்பட்டது. அதனால் உடனுக்குடன் அது மறைந்து விடுகிறது. அது வலிவற்ற ஸங்கல்பத்தால் ஏற்பட்ட படைப்பு. விச்வாமித்திரர் தன் யோகசக்தியால் புதிய நட்சத்திர மண்டலத்தையே படைத்தார். அது இன்றும் தென்வான மண்டலத்தில் காணப்படுகிறது. அது இந்த படைப்பு உள்ளளவும் இருக்கும். அது யோகசத்தியால் விளைந்த வலிவுள்ள ஸங்கல்பத்தால் ஏற்பட்டது. யோகிக்கும் சக்தி அளவுக்குட்பட்டதே. அதனால் யோகி தனக்குள் படைக்க முடியாமல் தனக்கு வெளியே உலகைப் புதிதாகப் படைக்கிறான். பராசக்தியின் அனந்த சக்தி தனக்குள்ளே தானாகவே உள்ள உலகத்தைப் படைக்கிறது. இதுதான் அந்த பராசக்தியின் சிறப்பு. கண்ணன் தனக்குள்ளேயே உலகைத் தோற்றுவித்துத் தாய்க்குக் காட்டியது இந்த அளவற்ற சக்தியால் தான்.*

अत एव चिदात्मत्वव्यतिरेकादसत्यता ॥ ७४॥
जगतः प्रतिबिंबस्यादर्शात्मत्वं विना यथा ।
अत एव विचारेण सत्यतां याति नान्यथा ॥ ७५॥
सत्यं स्वभावं नो मुञ्चेत् असत्यं तु परित्यजेत् ।

பிரதிபிம்பமாக உள்ள உலகம் கண்ணாடி வடிவத்தையே தன் வடிவமாகக் கொண்டது. அதைத் தவிர வேறு தனிவடிவம் அதற்கு இல்லை. அதைப் பகுத்தறியும்போது பிரதிபிம்பம் மெய்யல்ல என்று ஆகிறது. ஸத்யமான பொருள் தன் ஸ்வபாவத்தை விடாது. அஸத்தியமானது தன் ஸ்வபாவத்தை விட்டுவிடும்.

जगत्पश्य भार्गवैतत् स्वभावादतिचंचलम् ॥ ७६॥
सत्यासत्यविभागेन भासते सर्वतोऽखिलम् ।
प्रतिबिंबादर्शभानमिव तत्प्रविचारय ॥ ७७॥

பரசுராமரே! இந்த உலகம் நிலையில்லாதிருப்பதைப்பாரும். எங்கும் ஸத்தியப் பொருளும் அஸத்தியப் பொருளும் தனித்துக் காணப்படுகின்றன. கண்ணாடியும் அதனுள் தெரியும் பிரதி பிம்பமும் போல். இதனை நன்கு ஆராய்ந்து பாரும்.

आदर्शे ह्यचलस्तत्र चलं हि प्रतिबिंबकम् ।
तथा जगच्चलं संवित् अचला सर्वभाविता ॥ ७८॥
अत एव हि भावानां विचारासहरूपता ।

கண்ணாடி அசைவற்றது. அதனுள் தெரியும் பிரதிபிம்பம் அசையும் தன்மை உள்ளது. அதுபோல் உலகம் அசையும் தன்மை உள்ளது. சித்சக்தி அசையாதது. இவை யாவரும் அறிந்ததே. அதனால் உலகம் பகுத்தறியும்போது நிலைப்பதில்லை.

*சித்சக்தி மெய்ப்பொருள். முக்காலும் அழிவுறாதது. நிலைத்ததன்மை கொண்டது. அதில் தோன்றும் உலகம் மாறிக்கொண்டே இருப்பது. இந்தக் கணம் தெரிவது அடுத்தக்கணம் தெரியாது. தோன்றுமளவில்தான் அது மெய். கண்ணாடி நிலைத்தது. அதனுள் தெரியும் பிரதிபிம்பம் மாறி மாறி வருகிறது. கண்ணாடிதான் பிரதிபிம்பமாகத் தெரிகிறதெனினும், பிரதிபிம்பம் மாறும்போது கண்ணாடியில் ஒரு மாறுதலுமில்லை. உலகம் தோன்றுவ—தாலும் இயங்குவதாலும் அழிவதாலும் உலகத்தின் ஆதாரமான சித்சக்தியில் யாதொரு மாறுதலும் ஏற்படுவதில்லை. உலகம் தோற்ற அளவில் கூட நிலைத்த உருக்கொண்டதல்ல. அதனை அனுபவிப்பதில் ஒரேவிதமான*

*பாதிப்பு எல்லோருக்கும் எல்லா நேரத்திலும் ஏற்படும் என்றும் சொல்வதற்கில்லை என மேலும் விளக்குகிறார்.*

यथा हि सूर्यालोको हि वस्तूनामवभासकः ॥ ७९ ॥
उलूकादिदिवान्धानां विपरीतोऽन्धकारवत् ।
प्रकाशत्वान्धकारत्वे न विविक्तेऽनयोः स्फुटे ॥ ८० ॥

**சூரிய வெளிச்சம் பொருட்களைக் காணச் செய்கிறது. ஆனால் ஆந்தை முதலியவற்றிற்கு அதுவே இருட்டாகி நின்று உலகைக் காண முடியாமல் செய்கிறது. அதனால் சூரிய ஒளி வெளிச்சமா இருட்டா என்பதை நன்கு பகுத்தறிய முடியாமல் உள்ளது.**

एवं विषं कस्यचित्स्यादविषं कस्यचिद् भवेत् ।
मनुष्यादेः प्रतीघातकरी भित्तिर्हि लक्ष्यते ॥ ८१ ॥
योगिनां गुह्यकादीनां अप्रतीघातलक्षणा ।
कालो देशश्च दीर्घो यो मनुष्यादिप्रभावितः ॥ ८२ ॥
स एव विपरीतो वै देवानां योगिनापि ।

**ஒன்று ஒருவனுக்கு விஷமாகிக் கொல்கிறது. அதுவே மற்றவனுக்கு அமிருதமாகிறது. சுவர் மனிதன் செல்வதற்குத் தடங்கலாக ஆகிறது. அதுவே யோகிகளுக்கும் தேவர்களுக்கும் தடங்கல் ஆவதில்லை. மனிதர்களால் நீண்டதாக உணரப்படும் தேசமும் காலமும் தேவர்களுக்கும் யோகிகளுக்கும் குறுகியதாக ஆகிறது.**

दर्पणे भासमानस्य दूरादेर्दूरता यथा ॥ ८३ ॥
तथैवास्य स्वभावोऽपि विचारे न स्थिरो भवेत् ।

**அப்படியே கண்ணாடியில் புலப்படும் தூரத்தின் தூரத்தன்மை போல் இவ்வுலகின் தன்மையும் பகுத்தறிவில் நிலைக்காததாகக் காணப்படும்.**

***கண்ணாடியில் மிகுந்த தூரத்தில் உள்ளதும் நெருங்கி இருப்பதுபோல் தோன்றும். அத்தனை தூரமும் நெருக்கமும் கண்ணாடியின் விரல் அளவு கனத்திற்குள் அடங்கியதே. ஆனால் நீண்டோ குறுகியதாகவோ தோன்றுவது தோற்ற அளவில் மெய்யானது: பகுத்தறிந்தால் அது மெய்யல்ல என விளங்கும். அதுபோல் உலகமும் காலமும் தேசமும் பகுத்தறிந்தால் நாம் உணர்வதற்கு மாறுபட்டதாக மெய்யல்லாததான தோற்றம் உள்ளதாகக் காணப்படும்.***

अत आश्रयरूपेण विना नास्ति हि किञ्चन ।। ८४ ।।
यदस्तीति भाति तत्तु चितिरेव महेश्वरी ।
एवं जगत् चिदेकात्मरूपं ते सम्यगीरितम् ।। ८५ ।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
जगत्तत्त्वनिरूपणं एकादशोऽध्यायः ।

அதனால் எல்லாவற்றிற்கும் ஆதாரமான சித்சக்தியைத் தவிர வேறொன்றும் தனித்தில்லை. எது தனித்து இருப்பதாகத் தோன்றுகிறதோ அது பரமேசுவரியான சித்சக்தியே. இவ்வாறு உலகமும் சித்சக்தியும் ஒன்றே என்ற தத்துவம் உனக்கு நன்கு விளக்கப்பட்டது.

*ஸ்ரீ திரிபுரா ரஹஸ்யத்தில் ஞான கண்டத்தில் ஜகத்தின் உண்மை நிலை விளக்கம் என்ற பதினோராம் அத்தியாயம்.*

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரண்டாவது அத்தியாயம்

पप्रच्छ भार्गवो भूयः सन्देहकलिलान्तरः ॥ १ ॥

இவ்வாறு தத்தாத்திரேயர் மூலமாக ஜகத்தின் நிலையை அறிந்து சந்தேகத்தால் கலங்கியவராகப் பரசுராமர் மீண்டும் கேட்டார்.

भगवन् संश्रुतं प्रोक्तं भवता जागतं ननु ।
यथा ब्रवीषि भगवन् तत्तदेव न चान्यथा ॥ २ ॥
तथाऽपि कुत एतद्धि भाति सत्यात्मकं सदा ।
कुतो वाऽन्यैः बुद्धिमद्भिः सत्यत्वेन विनिश्चितम् ॥ ३ ॥
त्वत्तः श्रुतं चापि भूयो भाति मे सत्यवत्कुतः ।
ब्रूह्येतत् कृपया नाथ यथा नश्येदयं भ्रमः ॥ ४ ॥

பகவானே! தாங்கள் கூறியுள்ள ஜகத்தின் நிலையை நன்கு கேட்டேன். தாங்கள் கூறியப்படி அது அப்படித்தான். வேறு வகையாயிருப்பதற்கில்லை. எனினும் ஏன் நிலைத்தவடிவுள்ளதாக இது தோன்றுகிறது? மற்ற அறிவாளிகளும் உலகம் ஸத்தியமானதென ஏன் நிச்சியித்துள்ளார்கள்? தங்களிடம் (நிலையற்றதெனக்) கேட்ட பிறகும் அது நிலைத்ததென எனக்கு ஏன் தோன்றுகிறது? இந்தக் கலக்கம் நீங்குமாறு உபதேசிக்க வேண்டும்.

इत्यापृष्टो भार्गवेण दत्तात्रेयो महाशयः ।
जगत्सत्यभ्रान्तिमूलं प्रवक्तुमुपचक्रमे ॥ ५ ॥

இவ்வாறு பரசுராமரால் கேட்கப்பெற்றப் பெரும்புகழ் படைத்த தத்தாத்ரேயர் உலகம் ஸத்யமென்ற பிரமையின் அடிப்படையை விளக்கிக் கூறத் துவங்கினார்.

शृणु राम जगद्भ्रान्तेः मूलमेतत् सनातनम् ।
वस्त्वविद्यापूर्वकं यत् दृढभावनमेव तत् ॥ ६ ॥
पश्यात्मानमविनाय स्वात्मबुद्धिं शरीरके ।
क्व मांसरुधिरास्थीनि क्वचिदात्मा अतिनिर्मलः ॥ ७ ॥
केवलं भावनादार्ढ्यात् चिदात्मा देहकोऽभवत् ।

ज्ञातेऽप्यात्मनि चिद्रूपे भूयो भ्रान्तिः शरीरके ॥ ८ ॥

பரசுராமரே! கேளும். உலகம் ஸத்யமெனும் பிரமைக்கு அடிப்படை இதுதான். இது பொருளின் உண்மை நிலை பற்றி நீண்ட காலத்திய அறியாமையால் ஏற்பட்டது. அதனை அப்படியே தொடர்ந்து எண்ணி வந்ததால் நிலைத்து விட்டது. ஆத்மா என்பதன் உண்மை நிலையை அறியாமல் உடலில் ஆத்மா என்ற எண்ணம் கொண்டுள்ளதைப் பார். தசையும், ரத்தமும், எலும்புமான உடல் எங்கே! அப்பழுக்கற்ற ஞான வடிவினனான ஆத்மா எங்கே! (உடலையே ஆத்மாவெனத்) தொடர்ந்த எண்ணத்தின் வலிமையால் உடல் சிதாத்மாவாக ஆகிவிட்டது. ஆத்ம தத்வம் இத்தகையதெனக் கேட்டறிந்த பின்னும் உடலில் (ஆத்மப்) பிரமை மீண்டும் மீண்டும் ஏற்படுகிறது.

एवमेव भावनया सत्यं भाति जगत् खलु।
विपरीतं भावयन् वै दृढभ्रान्तिं निवर्तयेत्॥ ९ ॥
यो यथा भावयेदेतत् जगत् तस्य तथा भवेत्।
योगिनां धारणध्यानैः पश्य तद्रूपसंगतिम्॥ १० ॥

அப்படி தொடர்ந்த எண்ணத்தால் (பாவனையால்) உலகம் ஸத்தியமாகத் தோன்றுகிறது. இதற்கு மாறாக (நிலையற்றதென)த் தொடர்ந்து பாவனை செய்து அந்தத் திடமான பிரமையை விலக்கிக் கொள்ளவேண்டும். எவரெவர் எவ்வெவ்வாறு பாவனை செய்கிறார்களோ அவ்வவ்வாறு உலகம் அவரவர்க்கு அமையும். யோகிகளின் தாரணையாலும் தியானத்தாலும் உலகம் அவர்கள் எண்ணியவாறு வடிவமைப்பு கொள்வதைக் காண்பாயாக.

*எண்ணும் மனம் அலைபாய்வதால் எண்ணம் நிலைக்காது. அலைபாயும் எண்ணத்தைத் திரும்பத்திரும்ப ஒருபொருளில் நிலைக்கவைப்பது தாரணை. அப்படி நிலைக்கவைத்த எண்ணத்தை தைலதாரைபோல் அறுபடாமல் நீட்டிக்கொண்டே போவது தியானம். தொடர்ந்து ஒன்றையே எண்ணி மனத்தை அந்த எண்ணத்தில் ஊறப்போடுவது பாவனை.*

अत्र ते वर्तयिष्यामि पुरावृत्तं महाद्भुतम्।
अस्ति वंगे सुन्दराख्यं पुरं परमपावनम्॥ ११ ॥
तत्रासीन्नृपतिर्धीमान् सुषेण इति विश्रुतः।
तस्य भ्राता महासेनो यवीयान् प्रियकृत् सदा॥ १२ ॥
शशास राज्यं नृपतिर्धर्मतः सर्वसंमतः।

முன் நடந்த மிகவும் வியக்கத்தக்க ஒரு கதையைக்காட்டுகிறேன். வங்கதேசத்தில் ஸுந்தரமென்ற நகரம். மிகப்புனிதமானது. அதில் மிகச் சிறந்த புகழ்பெற்ற அறிவாளியான ஸுஷேணன் என்ற அரசன். அவனுக்கு மஹாஸேனன் என்ற தம்பி. அண்ணனுக்கு பிரியத்தை எப்போதும் செய்பவன். அரசன் எல்லோராலும் மதிக்கப்பட்டவனாக நேர்மையுடன் அரசாண்டு வந்தான்.

कदाचिदश्वमेधैः सोऽयजत् देवं महेश्वरम् ।। १३ ।।
तत्र राजकुमारास्तु महा बलपराक्रमाः ।
महत्या सेनया यज्ञाश्वं सर्वे ह्यनुसंययुः ।। १४ ।।
अश्वस्य रोधकान् सर्वान् विजित्य बलिनो बलात् ।
ययुरैरावतीतीरं अन्वश्वं नृपतेः सुताः ।। १५ ।।

ஒரு சமயம் அரசன் அச்வமேதத்தால் தேவனான பரமேசுவரனை வழிபட்டான். அரசகுமாரர்கள் பெரும்பலமும் பராக்கிரமமும் உடையவர்களாக பெருத்த சேனையுடன் யாகக் குதிரையைப் பின் தொடர்ந்தார்கள். குதிரையைத் தடை செய்யும் பலசாலிகளெவரையும் தம் வலிமையால் வென்று குதிரையைத் தொடர்ந்து ஐராவதி நதிக்கரையை அடைந்தார்கள்.

ददृशुस्तत्र राजर्षि तंगणाख्यं तपोनिधिम् ।
बलोद्धता अवज्ञाय तमसंगम्य ते ययुः ।। १६ ।।
तद्वीक्ष्य तंगणसुतः पित्रवज्ञां रुषान्वितः ।
जग्राहाश्वं यज्ञियं तं राजपुत्रान् हि भर्त्सयन् ।। १७ ।।

அங்கு தவநிதியாக உள்ள ராஜரிஷியான தங்கணரைக் கண்டார்கள். வலிமையின் செறுக்கால் அவரை மதிக்காமல் அருகில் சென்று வணங்காமல் சென்றார்கள். அப்படித் தந்தைக்கேற்பட்ட அவமதிப்பைக் கண்ட தங்கணரின் புதல்வன் கோபம் கொண்டவனாக அரச குமாரர்களை மிரட்டிவிட்டு யாகத்திற்கான குதிரையைப் பிடித்து நிறுத்திவிட்டான்.

अथ राजकुमारास्ते रुरुधुः सर्वतो हि तम् ।
तावत्तंगणपुत्रोऽपि गण्डशैलं पुरःस्थितम् ।। १८ ।।
विवेशाश्वं समादाय पश्यत्सु राजसूनुषु ।
साश्वं शिलाविक्लीनं तं दृष्ट्वा राजकुमारकाः ।। १९ ।।
बिभिदुर्गण्डशैलं तं शस्त्रैरुच्चावचैः पृथक् ।

அரசகுமாரர்கள் அவனை நாற்புறமும் சூழ்ந்து தடுத்தார்கள். அதற்குள் தங்கணரின் புதல்வன் அருகிலிருந்த சிறு குன்றுக்குள் (வட்டப்பாறை) அரசகுமாரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே குதிரையுடன் நுழைந்துவிட்டான். அவன் கல்லிற்குள் குதிரையுடன் மறைந்ததைக் கண்டு அரசகுமாரர்கள் அந்தப் பாறையைப் பல சிறிதும் பெரிதுமான கூரான ஆயுதங்களைக் கொண்டு பிளந்தார்கள்.

चूर्णितात् गण्डशैलात्स महत्या सेनया वृतः ।। २० ।।
निर्गत्य तंगणसुतो जिगाय युधि तान् क्षणात् ।
निहत्य सेनां सौषेणीं बध्वा राजकुमारकान् ।। २१ ।।
प्रविवेश गण्डशैलं भूयस्तंगणसंभवः ।

தூளாக்கப்பட்ட பாறைப் பகுதியிலிருந்தும் பெருத்த படையுடன் கூட வெளிப்பட்ட தங்கண குமாரன் அவர்களைப் போரில் கணப்பொழுதில் வென்றான். ஸுஷேணரின் படையையும் அழித்து அரச குமாரர்களைக் கட்டி இழுத்துக் கொண்டு மறுபடி அந்த பாறைக்குள் நுழைந்தான்.

अथ सेनाभटाः शिष्टा गत्वा राज्ञे न्यवेदयन् ।। २२ ।।
साश्वराजकुमाराणां हरणं गण्डशैलके ।
सुषेणो विस्मितोऽत्यन्तं उवाचावरजं स्वकम् ।। २३ ।।

அதன்பின் (அழிந்தவர்களைத் தவிர) மீதமிருந்த படை வீரர்கள் அரசனிடம் சென்று குதிரையுடன் அரச குமாரர்கள் பாறைக்குள் அபகரிக்கப்பட்டுச் சென்றதைத் தெரிவித்தார்கள். ஸுஷேணன் வியப்புற்றுத் தன் தம்பியிடம் கூறினான்.

वत्साशु गच्छ तं देशं यत्रास्ते तंगणो मुनिः ।
तपस्विनोऽचिन्त्यवीर्या अजेया देवमानुषैः ।। २४ ।।
तं प्रसाद्य सुतानश्वं चासाद्यायाहि सत्वरम् ।
न कालोऽतिव्रजेदेष वसन्तो यज्ञसंमतः ।। २५ ।।
अभिमानो न कर्तव्यस्तपस्विषु कदाचन ।
क्रुद्धास्तपस्विनो लोकान् भस्मीकुर्युः क्षणेन वै ।। २६ ।।
अतः प्रसादनपरो भूत्वा स्वार्थं प्रसाधय ।

குழந்தாய்! விரைந்து தங்கண முனிவரிருக்குமிடம் செல்வாய். தபஸிலிருப்பவர்கள் நினைத்துப் பார்க்கமுடியாத செயலாற்றல் உள்ளவர்கள். தேவர்களாலும் மனிதர்களாலும் வெல்ல முடியாதவர்கள். அதனால் தங்கணமுனிவரை நம்மைப்பற்றி நல்லெண்ணமுடையவராக்கிக் குமாரர்களையும் குதிரையையும் திரும்பப்பெற்று விரைவில் வந்து சேருவாய்.

யாகத்திற்குரிய வஸந்தகாலம் தாண்டக் கூடாது. தவசிகள் விஷயத்தில் தற்பெருமை காட்டக்கூடாது. தவசிகள் கோபவசப்பட்டார்களேயாகில் உலகை நொடியில் சாம்பலாக்கிவிடுவார்கள். அதனால் அவரது அருளைப் பெறுவதில் நாட்டமுடையவனாக இருந்து தன் காரியத்தைச் சாதித்து வருவாயாக!

इत्यादिष्टो महासेनस्तं देशं शीघ्रमाययौ ।। २७ ।।
अपश्यत्तंगणं तत्र समाहितमतिं दृढम् ।
काष्ठकुड्यात्मतां प्राप्तं शान्तेन्द्रियमनोधियम् ।। २८ ।।
निर्विकल्पदशांभोधिनिलीनस्वात्मभावनम् ।
प्रणम्य दण्डवद् भूयः कृताञ्जलिपुटस्तदा ।। २९ ।।
तुष्टाव विविधैः स्तोत्रैः महासेनो मुनीश्वरम् ।
तथा तस्य संस्तुवतो ह्यत्यगाद्वै दिनत्रयम् ।। ३० ।।

இவ்வாறு கட்டளையிடப்பட்ட மகாசேனன் அவ்விடத்திற்கு விரைவில் வந்து சேர்ந்தான். அங்கு ஸமாதியில் மனம் நன்கு லயம் அடைந்தவராக, கட்டை அல்லது சுவர் போன்ற நிலையில் இருப்பவராக, புலன்கள் மனம் புத்தி இவை அடங்கியவராக, நிர்விகல்ப ஸமாதி நிலையாகிய கடலில் தன்னிலை எண்ணங்கள் கரைந்தவராக இருந்த தங்கணரைக் கண்டான். மீண்டும் மீண்டும் தண்டம் போல் வணங்கிக் கை கூப்பி நின்று முனிவரை மஹாஸேனன் பல துதிகளால் துதித்தான். இப்படி மூன்று நாட்கள் கழிந்தன.

अथाजगाम तत्पुत्रः सन्तुष्टः पितृसंस्तवात् ।
प्रोवाच तं महासेनं राजंस्तुष्टोऽस्मि संस्तवात् ।। ३१ ।।
ब्रूहि किं तेऽभिलषितं साधयाम्यविलंबितम् ।
अहं पुत्रोऽस्म्यस्य विभोः तंगणस्य महामुनेः ।। ३२ ।।

இதற்குள் தங்கணரின் புதல்வன் தன் தந்தையைத் துதிப்பதைக் கேட்டு மகிழ்ந்தவனாக அங்கு வந்தான். அவனைப் பார்த்துக் கூறினான். அரசே! உமது துதியால் மகிழ்ந்தேன். நீர் விரும்புவதைக் கூறும். அதனைத் தாமதமின்றி நிறைவேற்றித் தருகிறேன். நான் இந்தப் பெரியாரான தங்கண முனிவரின் குமாரன்.

नैतस्य मे पितुः कालो भाषणे शृणु भूमिप ।
समाहितस्वान्त एष द्वादशाब्दादनन्तरम् ।। ३३ ।।
समाधितः समुत्तिष्ठेत् तत्र पञ्चाब्दका गताः ।
सप्तावशेषा एवं हि समयोऽस्य पुरातनः ।। ३४ ।।

तत्तेऽभिवाञ्छितं ब्रूहि यदस्मात्तत्करोम्यहम्।
न मां बालं विजानीहि पितृतुल्यं तपस्विनम्॥ ३५॥
नासाध्यं विद्यते लोके योगिनां हि तपस्विनाम्।

அரசே ! என் தந்தையுடன் பேச இது நேரமல்ல. மனமடங்கியநிலையிலுள்ள இவர் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரே சமாதியிலிருந்து எழுவார். அதில் ஐந்து ஆண்டுகள் சென்றிருக்கின்றன. ஏழாண்டுகள் மீதி உள்ளன. இது அவரது வெகுநாளைய பழக்கம். இவரிடமிருந்து எதனை விரும்புகிறாயோ அதனைச் சொல். நான் அதனைச் செய்கிறேன். தகப்பனாருக்குச் சமமான தவலவிமை கொண்ட என்னைச் சிறுவனென நினைக்காதே. தவத்திலுள்ள யோகிகளுக்குச் செய்ய முடியாததென ஒன்றில்லை.

श्रुत्वा मुनिकुमारोक्तं महासेनोऽतिबुद्धिमान्॥ ३६॥
प्राह तं तंगणसुतं प्रणम्य च कृताञ्जलिः।
मुनिपुत्र! प्रियं मेऽद्य करोषि यदि सत्यतः॥ ३७॥
त्वत्पितुस्तेऽद्य वाञ्छामि समाधेर्व्युत्थितस्य वै।
सह संभाषणं किञ्चिदेतदत्यन्तवाञ्छितम्॥ ३८॥
अनुकंप्यो यद्यहं ते द्रुतमेतत्प्रसाधय।

முனிகுமாரன் கூறியதைக் கேட்டச் சிறந்த அறிவாளியான மகாசேனன் தங்கண குமாரனை வணங்கிக் கை கூப்பியவனாகக் கூறினான் – "முனிவரே! உண்மையில் எனக்குப்பிரியம் செய்வதானால் சமாதியிலிருந்து எழுந்த உமது தந்தையுடன் பேச விரும்புகிறேன். இதுதான் எனக்கு மிகுந்த விருப்பம். உமது தயைக்கு உரியவனாக நான் இருப்பேனேயானால் விரைவில் இதனைச் செய்வீராக!

श्रुत्वैतद्वचनं राज्ञः प्राह तापसजः पुनः॥ ३९॥
राजन्नसाध्यं ह्येतत् ते वाञ्छितं सर्वथा भवेत्।
तथापि ते करोमीति प्रतिश्रुत्यान्यथा कथम्॥ ४०॥
ब्रवीमि भूयस्तत् कञ्चित् प्रतीक्षस्वाभियाचितः।
मुहूर्तमात्रं मे पश्य सामर्थ्यं योगसंभवम्॥ ४१॥

அரசனின் பேச்சைக் கேட்ட தவசி குமாரன் – " அரசே, இந்த உமது விருப்பம் நிறைவேற்ற இயலாததே. எனினும், செய்கிறேன் என வாக்களித்துவிட்டுப் பின் வேறு விதமாக எப்படிக் கூறுவேன்? அதனால் உன்னை நான் வேண்டுகிறேன். சிறிது நேரம் பொறுத்து இருப்பாய்!. யோகத்தால் ஏற்பட்ட என் திறமையைக் காண்பாய்.

एष मेऽद्य गुरुः शान्तपदे परमपावने।
संस्थितस्तं बाह्ययत्नैरपि को वै प्रबोधयेत्॥ ४२॥
पश्याहं बोधयाम्येनं योगयुक्त्यैव सूक्ष्मया।

இந்த எனது குரு மிகத்தூயதான அமைதி நிலையில் ஆழ்ந்து உள்ளார். அவரை எவர் வெளி முயற்சிகளால் எழுப்ப முடியும்? மிகவும் சூட்சுமமான முறையால் அவரை எழுப்புகிறேன். பார்ப்பாயாக!

इत्युक्त्वाथ समाविश्य समाहृत्येन्द्रियाण्यलम्॥ ४३॥
प्राणेऽपानं सुसंयोज्य मुख्यप्राणेन निर्गतः।
देहं पितुः प्रविश्याशु प्रलीनं तस्य मानसम्॥ ४४॥
बोधयामास चाकृष्य प्रबोध्याशु विनिर्गतः।
देहं स्वमाविशत् यावत्तावत् स बुबुधे मुनिः॥ ४५॥

இவ்வாறு கூறிவிட்டு அமைதியாக அமர்ந்து பொறிகளை வெளிவிஷயங்களிலிருந்தும் இழுத்து அபான வாயுவை பிராண வாயுவுடன் கலக்கச்செய்து அந்த பிராண வாயுவுடன் வெளிக்கிளம்பித் தந்தையின் உடலில் நுழைந்து அங்கு லயமடைந்துள்ள மனத்தை எழுப்பி வெளிப்படுத்தி உணர்வேற்படுத்திவிட்டு உடன் வெளிப்பட்டு விட்டுத் தன் உடலில் நுழைந்து விட்டான். முனிவரும் விழித்தெழுந்தார்.

अपश्यदग्रगं भूपं स्तुवन्तं प्रणतं तदा।
किमेतदिति संचिन्त्य सर्वं योगदृशाऽविदत्॥ ४६॥
प्रसन्नचित्त आमन्त्र्य पुत्रं प्राह सुशान्तधीः।

முனிவர் தன் முன் நின்று வணங்கித் துதிக்கும் அரசனைக்கண்டார். இதென்ன என யோக திருஷ்டியால் ஊன்றிக்கவனித்து அனைத்தையும் அறிந்தார். அருள் நிரம்பிய மனத்தினராக அமைதியடைந்த அறிவு உள்ளவராகப் புதல்வனைக் கூப்பிட்டார்.

वत्स नैवं पुनः कार्यं क्रोधस्तु तपसो रिपुः॥ ४७॥
राज्ञा हि रक्षिते लोके तपो निर्विघ्नमेधते।
यज्ञविघ्नक्रिया दैत्यस्वभावो न मुनेः क्वचित्॥ ४८॥
प्रयच्छाश्वं राजपुत्रान् अप्यस्मै सुमना द्रुतम्।
शीघ्रं यात्वेष यज्ञस्य न कालातिक्रमो भवेत्॥ ४९॥

குழந்தாய் ! இதுபோல் மறுபடி செய்யக்கூடாது. கோபம் தவத்திற்கு எதிரி. அரசனால் காப்பாற்றப் பெறும் உலகில் தான் தவம் தடங்கலின்றி வளரும். யாகத்திற்கு இடையூறு விளைவிப்பது அஸுரனுக்கு ஏற்ற செயல். குதிரையையும் அரசகுமாரர்களையும் நல்மனத்துடன் விரைவாகத் தந்துவிடு. அரசர் சீக்கரம் செல்லட்டும். யாகத்திற்குரிய நேரம் தாண்டாதிருக்கட்டும்.

इत्युक्तो गण्डशैलं स प्रविश्य क्षणमात्रतः।
साश्वान् राजसुतांश्चास्मै ददौ प्रीत्या गतक्रुधः॥५०॥
ततः साश्वान् भ्रातृपुत्रान् संप्रेष्य नगरं प्रति।
महासेनस्तंगणं तं प्रणम्यात्यन्तविस्मितः॥५१॥
अपृच्छत्प्राञ्जलिर्भूत्वा प्रसाद्य मुनिपुंगवम्।
भगवन् ज्ञातुमिच्छामि साश्वा मे भ्रातृनन्दनाः॥५२॥
कथं गण्डशैलगर्भे संस्थितास्तत् समीरय।
एवं राज्ञाऽनुयुक्तोऽथ तंगणः प्राह भूपतिम्॥५३॥

இவ்வாறு கூறப்பட்ட முனிகுமாரன் நொடியில் பாறையினுள் சென்று குதிரையுடன் அரசகுமாரர்களை விடுவித்துக் கோபமற்றவனாக பிரீதியுடன் அரசனிடம் அளித்தான். அதன்பின் ஸகோதர குமாரர்களைக் குதிரையுடன் தலைநகருக்கு அனுப்பிவிட்டு வியப்பிலாழ்ந்த மகாசேனன் முனிவரைக் கை கூப்பி வணங்கி அருள் முகமாக்கிக் கேட்டான். முனிவரே! என் சகோதர குமாரர்கள் குதிரையுடன் எப்படிக் குன்றுப்பாறைக்குள் இருந்தார்கள் என்பதை விளக்குவீராக! இப்படி அரசனால் கேட்கப்பட்ட தங்கணர் அரசனைப் பார்த்துக் கூறினார்.

*பொய்யை மெய்யெனவும், மெய்யைப் பொய்யெனவும் அறிவில் தீவிர எண்ண வலிமையால் ஏற்படும் பாவனை உலகை எண்ண வடிவில் மாற்றிவிடுகிறது. இந்த பாவனையின் தீவிரம் மற்றவர் கண்ணுக்கு மாறுபட்டே புலப்படும்படி மாற்றி அமைக்கிறது. கண்ணன் தன் ஈசுவரயோக மகிமையால் தாய்க்கும் அர்ஜுனனுக்கும் மட்டும் விசுவரூபம் காட்டினார். விசுவாமித்திரர் தன் யோக வலிவால் மற்றோர் நக்ஷத்திர மண்டலத்தையே படைத்து அதை உலகம் உள்ளளவும் நிலைத்த தோற்றமுடையதாகச் செய்தார். இதே பாவனாபலத்தால் தங்கணரும் அவரது குமாரனும் பாறையினுள் வெளி உலகினரை அழைத்துச் சென்று வெளிக்கொணர்கிறார்கள். இதன் தத்வத்தை இனி விளக்குகிறார் தங்கணர்.*

शृणु राजन् प्रवक्ष्यामि पुराऽहं पृथिवीपतिः।
समुद्रवलयां पृथ्वीं अन्वशासं चिरं खलु॥५४॥
महादेवप्रसादेन ज्ञात्वा चितिमधीश्वरीम्।

त्रिपुरां लोकसंस्थानं नीरसं विमृशंस्ततः ।। ५५ ।।
निर्विण्णो लोकयात्रायाः न्यस्य राज्यं सुतेष्वथ ।
प्राविशं वनमेतद् वै भार्या मामन्वगात् सती ।। ५६ ।।

அரசே! சொல்கிறேன், கேளும். முன் நான் அரசனாக ஸமுத்திரத்தை எல்லையாகக் கொண்ட பூமியை வெகுகாலம் ஆண்டுவந்தேன். பரமேசுவரனின் அருளால் எல்லாவற்றிற்கும் மேம்பட்ட திரிபுரா என்ற ஆத்ம சக்தியை அறிந்தபின் உலகப்போக்கு சுவையற்றிருப்பதைப்பற்றிச் சிந்திப் பவனாகிப் பின் உலக வாழ்க்கைமுறையில் போது மென்ற மனம் கொண்டவனாகப் புதல்வர்களிடம் அரசை ஒப்படைத்து விட்டு இந்தக்காட்டினுள் நுழைந்தேன். பதிவிரதையான என் மனைவியும் என்னுடன் வந்தாள்.

तस्याभितप्यतो मेऽद्य ययुरर्बुदवत्सराः ।
भार्याऽपि मत्सेवनेन परां सिद्धिमुपागता ।। ५७ ।।
कदाचिदथ भाव्यर्थगौरवान्मे प्रिया सती ।
समाधावेव कामार्तमानसाऽभूत् ततस्तु सा ।। ५८ ।।
मां दृष्ट्वा रतिमिच्छन्ती समाधिस्थं स्थिरान्तरम् ।
असहन्ती कामवेगं भावयामास मद्रतिम् ।। ५६ ।।

அப்படித் தவமியற்றிவந்த எனக்கு பதினாயிரம் ஆண்டுகள் கழிந்தன. என் மனைவியும் எனக்குப் பணிவிடை செய்ததால் உயர்ந்த சித்தியைப் பெற்றாள். பிறகு ஒருநாள் விதியின் அழுத்தலால் அந்தப் பதிவிரதையான அரசி ஸமாதிநிலையிலேயே காமவசப்பட்ட மனத்தினளாக ஆனாள். ஸமாதியில் இருப்பவனும் நிலைத்த மனத்தினனுமான என்னைக்கண்டு காமவேகத்தைத் தாங்க இயலாதவளாக என்னிடம் உடலுறவுகொள்ள விரும்பியவளாக என்னுடன் கூடுதலைப் பாவனையால் அமைத்துக்கொண்டாள்.

गाढभावनया प्राप्य संभोगं तु मया सह ।
दधार गर्भं, सुषुवे पुत्रमेनं पुरःस्थितम् ।। ६० ।।
पुत्रं न्यस्य मदुत्संगे मां समाधेः प्रबोध्य च ।
देहं भूतेषु सात्कृत्य परव्योमात्मतां ययौ ।। ६१ ।।

மிகவும் ஆழ்ந்த பாவனையால் என்னுடன் போகத்தைப் பெற்றுக் கருத்தரித்தாள். முன்னே நிற்கும் இந்தப்பிள்ளையைப் பெற்றாள். அப்புத- ல்வனை என்மடிமீது கிடத்தி என்னைச்சமாதியிலிருந்து எழச்செய்து பஞ்சபூதங்களில் தன் சரீரத்தைக் கரைத்துச் சேர்த்துப் பெருவெளியாகிய நிலையை அடைந்தாள்.

*ஆழ்ந்த வலிய கருத்து தானே தனித்த புறச்சாதனமின்றிப் புதிய உலகைப்படைக்கவல்லது. யோகவழியில் நிலைநிற்கும் மனத்தில் எழக்கூடிய கருத்து பௌதிக இயல்பை மீறிய வலிவைப் பெறுகிறது. இதனைத் தன் வாழ்வில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளால் நிரூபிக்கிறார் தங்கணர். மனைவியின் மனத்தளவில் தோன்றிய காமக்கருத்தின் ஆவேசம், கணவன் சமாதியில் இருந்து இதனை அறியாத அளவில் கணவனது சேர்க்கையை ஸங்கல்ப வலிவால் ஏற்படுத்திக்கொண்டுக் கருத்தரிக்குமளவு அது இயற்கையாக அமைந்த விந்தையை விளக்குகிறார்.*

अथ दृष्ट्वोत्संग एवं ज्ञात्वा तस्य गतिं पराम्।
दयाक्रान्तमना जातस्तेनायं वर्धितो मया॥ ६२॥
श्रुत्वा कदाचिन्मत्तोऽयं राज्यशास्तिं पुरा कृताम्।
राज्यशासनकामोऽभूत् प्रार्थयामास मामनु॥ ६३॥

**பின்னர் மடியில் இவனைக்கண்டு இவனது மேலான வருங்காலத்தையும் அறிந்து பரிவு நிரம்பிய மனத்தினன் ஆனேன். இவன் என்னால் வளர்க்கப்பட்டான். ஒருநாள் என்னிடம் நான் முன்செய்த அரசாட்சியைப் பற்றிக்கேட்டுத் தானும் அரசாள விரும்பினான். என்னையும் அதுவிஷயமாக பிரார்த்தித்தான்.**

ततो मदुपदेशेन प्राप्य योगर्धिमुत्तमाम्।
निर्माय भावनायोगात् लोकमस्मिन् महाश्मनि॥ ६४॥
समुद्रवलयां पृथ्वीं शास्ति नित्यं सुतस्त्वयम्।

**பின் என் உபதேசப்படி சிறந்த யோகத்தேர்ச்சியைப் பெற்று பாவனை வழியில் இந்தப்பெரும் பாறையினுள் உலகைப்படைத்து ஸமுத்திரத்தை எல்லையாகக் கொண்ட பூமியை இந்தப்புதல்வன் தினமும் ஆண்டுவருகிறான்.**

तल्लोकेऽश्वः सुता राज्ञो निरुद्धाः ते हि मोचिताः॥ ६५॥
इत्येतत्ते समाख्यातं गण्डशैलेऽवरोधनम्।
इति श्रुत्वा मुनिवचो भूयः पप्रच्छ भूपतिः॥ ६६॥

**அந்த உலகில் குதிரையும் அரசகுமாரர்களும் அடைக்கப்பட்டிருந்தார்கள். ஆக உனக்குப் பெரும்பாறையில் அவர்களை மறைத்த வகையைப்பற்றி கூறியுள்ளேன்." முனிவரின் சொல்லைக்கேட்ட அரசன் மறுபடி கேட்டான்.**

श्रुतं त्वदुक्तमेतद्वै महाश्चर्यकरं परम्।
तं लोकं द्रष्टुमिच्छामि कृपया मे प्रदर्शय।। ६७।।
इति संप्रार्थितो राज्ञा मुनिः पुत्रं समादिशत्।
वत्सास्मै दर्शय स्वीयं लोकं सर्वं यथेप्सितम्।। ६८।।
इत्युक्त्वा तंगणो भूयः प्रविवेश समाहितिम्।

"தாங்கள் சொன்ன மிக்க விந்தையான வார்த்தையைக் கேட்டேன். அந்த உலகைப் பார்க்க விரும்புகிறேன். கிருபை கூர்ந்து அதனைக் காட்டவேண்டும்." இப்படி அரசனால் வேண்டப்பட்ட முனிவர் "குழந்தாய்! இவருக்கு உனது உலகை இவர் விரும்பியவாறு காட்டுவாயாக" எனப் புதல்வனைப் பணித்தார். மறுபடி சமாதிநிலையில் அடங்கிவிட்டார்.

अथ तं तंगणसुतः समासाद्य नृपं ययौ।। ६९।।
गण्डशैलं प्रति ततः प्राविशन्मुनिदारकः।
प्रवेष्टुं नाशकद् भूपः आह्वयन्तं मुनेः सुतम्।। ७०।।
सोऽपि गण्डशिलान्तःस्थो राजानं समुपाह्वयत्।

அதன்பின் தங்கண குமாரன் அரசனை அழைத்துப் பாறையை நோக்கிச் சென்றான். முனிகுமாரன் பாறையினுள் நுழைந்தான். முனிகுமாரன் தன்னை உள்ளே அழைத்தபோது அவனைத் தொடர்ந்து அரசனால் நுழைய முடியவில்லை. பாறையினுள் நின்று கொண்டே முனிகுமாரனும் அரசனை அருகேவர அழைத்தான்.

अथ भूयो विनिष्क्रम्य प्राह भूपं मुनेः सुतः।। ७१।।
नृपैष लोकस्तेऽसाध्यः प्रवेष्टुं खल्वयोगिनः।
अयोगाद् गण्डशैलोऽयं घनः सप्रतिघोऽभवत्।। ७२।।
नेतव्यस्त्वं सर्वथैव पितुर्वचनगौरवात्।
तदत्र देहं विन्यस्य कोटरे तृणसंवृते।। ७३।।
मनोमात्रशरीरः सन् शैलं विश मया सह।

பின் முனிகுமாரன் மறுபடியும் பாறையினுள்ளிருந்து வெளி வந்து அரசனை அழைத்தான். "அரசே! யோகப் பயிற்சி பெறாத உமக்கு இதனுள் நுழைய முடியாது. யோகப் பயிற்சியின்மையால் இந்தப்பாறை நெருக்கமுள்ளதாகவும் தடையுள்ளதாகவும் ஆகிவிட்டது. என் தந்தையின் சொல்லை மதிப்பதால் எப்படியாவது நீர் அழைத்துச் செல்லப்பட வேண்டியவரே! அதனால் புல்லால் மறைக்கப்பட்டிருக்கும் இந்த

மரப்பொந்தில் உடலை வைத்துவிட்டு மனோமயகோசம் மட்டும் உடலாக அமைந்தவராக என்னுடன் இந்தப் பாறையினுள் நுழைவீராக.

इत्युक्तः प्राह नृपतिः अशक्तो देहनिर्गमे ॥ ७४ ॥
कथं मुने देहमिमं उत्सृजामि समीरय।
उत्सृजामि यदि बलात् नाशमेष्यामि सर्वथा ॥ ७५ ॥
एवं वदन्तं नृपतिं प्रहस्याह मुनेः सुतः।

இவ்வாறு கூறப்பட்ட அரசன் உடலைவிட்டு வெளிக்கிளம்ப இயலாதவனாகக் கூறினான். "முனிவரே! இந்த உடலை எப்படிவிடுவது? விளக்குவீர்! பலாத்காரத்துடன் இதனை விடுவேனாயின் முழுவதும் அழிந்துவிடுவேன்." இவ்வாறு கூறும் அரசனைப்பார்த்துச் சிரித்துக் கொண்டே முனிகுமாரன் கூறினான்.

अहो योगानभिज्ञोऽसि चास्तु नेत्रे निमीलय ॥ ७६ ॥
इत्युक्त्वा मीलिताक्षं तं प्रविश्य निमिषार्धतः।
आकृष्य तल्लिंगतनुं क्षिप्त्वा श्वभ्रे च तत्तनुम् ॥ ७७ ॥
योगसामर्थ्यतः शैले निवेश्य नृपसंयुतः।
सुषुप्तं देहवैकल्यात् स्वसंकल्पोत्थदेहके ॥ ७८ ॥
संयोज्य बोधयामास प्रबुद्धो नृपतिस्तदा।
गृहीतं मुनिनाऽपश्यत् स्वं महागगने तदा ॥ ७९ ॥

"விந்தைதான் இது! நீர் யோகமறிந்தவரல்ல. இருக்கட்டும். கண்களை மூடும்." என்று கூறி கண்களை மூடிக்கொண்டிருக்கும் அவருள் நுழைந்து அரைநொடிக்குள் அவரது லிங்க சரீரத்தைத் தன்பால் இழுத்துக்கொண்டு அந்த ஸ்தூல சரீரத்தைப் பள்ளத்தினுள் தள்ளிவிட்டு, யோகத்திறமையால் அரசனுடன் பாறையினுள் நுழைந்து உடலில்லாமையால் ஸுஷுப்தியில் இருக்கும் அரசனை தன் ஸங்கல்பத்தால் எழுப்பிய உடலினுள் நுழைத்துப்பின் அவரை முனி குமாரன் எழுப்பினார். அப்பொழுது எழுந்த அரசன் தான் பேராகாசப் பெருவெளியில் முனிகுமாரனால் தாங்கப்பட்டவனாக இருப்பதைக் கண்டான்.

*வெளியில் பருத்துக் காண்பது ஸ்தூல உடல். அதனுள் பொறிகளும் மனமும் கொண்ட ஸூக்ஷ்ம உடல் - லிங்க சரீரம் என்பது. ஜடமான உடலினுள் தங்கியுள்ள சேதனனான ஆத்மாவின் இருப்பை இந்த ஸூக்ஷ்ம சரீரம்தான் சுட்டிக் காட்டுகிறது. ஸூக்ஷ்மசரீரம் ஜடமாயினும் ஆத்மாவின் பிரதிபலிப்பால் தனித்துத் தானே இயங்குவது போலாகி ஆத்மாவின் சேதனத்*

*தன்மையைத் தான் ஏற்று சேதனன் எவ்வாறு இயங்குவான் என்பதைக் காட்டுகிறது. ஸுஷுப்தி எனும் முழுத் தூக்கத்தில் உடலில் அவை இருந்தும் இயக்கமில்லா திருப்பதால் அவை இயற்கையாக ஜடம் இயக்கமில்லாதவை, ஆத்ம ஒளியால் இயங்குபவை என்பதையும் காட்டுகின்றன. லிங்க சரீரம் அப்போது முனிகுமாரன் இழுத்த இழுப்பிற்கு வசமாகிச் சுதந்திரமும் இழந்து அவனுடன் சென்றது. ஸ்தூல உடல் தொடர்பின்மையால் ஜாக்ரத் தெனும் விழிப்பு நிலைக்கு வரமுடியவில்லை. தனித்து இயங்க இயலாமையால் கனவு நிலையிலும் இருக்க முடியவில்லை. அதனால் ஸுஷுப்தி நிலையில் இருக்க நேர்ந்தது. அந்த நிலையில் இருக்கும் லிங்க சரீரம் எந்த அறிவையும் உணர்த்த முடியாது. அதனால் முனிகுமாரன் அந்த லிங்க சரீரத்திற்கு ஒரு ஸ்தூல சரீரத்தைத் தந்தான். அந்த ஸ்தூல சரீரம் முன் அரசன் பெற்றிருந்த ஸ்தூல சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டது. முன்னிருந்த ஸ்தூல சரீரத்துடன் அரசன் கல்லின் உள்ளே நுழைய முடியவில்லை. யோக பலத்தால் முனிகுமாரன் எழுப்பிய ஸ்தூல உடலுடன் அரசன் இனி கல்லின் உள்ளே உலாவ முடியும். கல்லினுள்ளும் கற்பகுதிகள் புலப்படவில்லை. நிரம்பியிருப்பது மஹாகாசமே. ஆகாசத்தில் எங்கும் செல்லலாம், தடையிராது. கல்லினுள் உள்ள மஹாகாசத்தில் அரசன், தான் முனிகுமாரனால் தாங்கப்பெற்றவனாகச் செல்வதை உணர்கிறான். ஸுஷுப்தியிலிருந்து விழிப்பிற்கு வந்துவிட்டான்.*

ऊर्ध्वं विष्वक् च संपश्यन् नभो भीममनन्तकम् ।
भीतः प्राह मुनेः पुत्रं मुने मां न परित्यज ॥ ८० ॥
परित्यक्तो विनश्यामि पतिष्येऽहं निराश्रयः ।
इति भीतं नृपं दृष्ट्वा प्रहस्याह मुनेः सुतः ॥ ८१ ॥

**மேலும் குறுக்கிலும் எல்லையற்ற பயங்கரமான விண்வெளியைப் பார்த்துப்பயந்தவனாக அரசன் முனிகுமாரனிடன் கூறினான். முனிவரே! என்னைக் கைவிடாதீர்கள். கைவிடப்பட்டால் அழிவேன். தாங்குவார் இன்றி கீழே விழுந்து விடுவேன்: எனப்பயந்து நிற்கும் அரசனைப் பார்த்து முனிகுமாரன் கூறினான்.**

परित्यज भयं भूप नोत्सृजामि निशामय ।
एनं शैलान्तरस्थानं लोकं धैर्येण सर्वतः ॥ ८२ ॥

**"அரசே! பயத்தை விடும். நான் கைவிடமாட்டேன். தைரியத்துடன் சுற்றுமுள்ள இந்தக் கற்பாறையின் இடைவெளியிலுள்ள உலகைப் பாரும்."**

अथ धैर्यं समालंब्य नृपः समवलोकयत्।
अधो दूरे सनक्षत्रं अभ्रमन्धतमोवृतम्॥ ८३॥
प्रविश्य तं देशमपि ततोऽधस्तात्प्रपश्यत।
चन्द्रमण्डलमास्फीतं तत्रागत्य जडीकृतः॥ ८४॥
चन्द्रमण्डलशीतेन मुनिपुत्रेण रक्षितः।
अथ प्राप्य सूर्यलोकं तत्करैरभितापितः॥ ८५॥
मुनिपुत्रेण योगेन शिशिरीकृतदेहकः।
अपश्यत् लोकमखिलं स्वर्लोकप्रतिबिंबवत्॥ ८६॥

அதன் பிறகு தைரியத்தைக் கைக்கொண்டு அரசன் சுற்றிலும் பார்த்தான். கீழே வெகுதூரத்தில் காரிருள் சூழ்ந்ததும், நக்ஷத்திரங்களுடன் கூடியதுமான வானவெளியைக் கண்டான். அந்த இடத்தில் வந்து நின்று அதன்கீழ் பார்த்தான். பூர்ணமான சந்திரமண்டலத்திற்கு வந்து, அங்கு சந்திரமண்டலத்துக் குளிரால் விறைத்தவனானான். முனி குமாரனால் அந்தக்குளிரிலிருந்தும் காப்பாற்றப் பட்டவனாக ஸூர்ய உலகிற்கு வந்து அங்கு ஸூர்யனின் கிரண வெப்பத்தால் வெந்தவனாகி, முனிகுமாரனின் யோகத்தால் உடலின் தாபம் குறைந்து குளிர்ந்தவனாகக் கீழேயுள்ள ஸ்வர்க்கலோகத்தின் பிரதிபிம்பம்போன்ற உலகைக் கண்டான்.

अथ शृंगे हेमगिरेर्मुनिना सह संस्थितः।
मुनिप्रदर्शितं सर्वमपश्यत्पृथिवीपतिः॥ ८७॥
दूरान्तरावलोकाय मुनिदत्तशुभेक्षणः।
अपश्यद्वलयात्मानं लोकालोकाख्यपर्वतम्॥ ८८॥

அதன்பின் மேருமலையின் கொடிமுடியில் முனிவருடன் அமர்ந்து முனிவர் காட்டும் அனைத்துயும் அரசன் கண்டான். தூரத்திலும் இடைவெளியிலும் உள்ளதைக்காண முனிவரால் யோகப் பார்வை தரப்பெற்றவனாக உலகை வளையமிட்டு நிற்கும் லோகாலோக மலையைக் கண்டான்.

तद्बहिर्ध्वान्तसन्दोहमन्तः सौवर्णमेदिनीम्।
समुद्रान् सप्त द्वीपांश्च नदीगिरिसमाकुलान्॥ ८९॥
भुवनानि च सर्वाणि चेन्द्राद्यान् विबुधोत्तमान्।
दैत्यान् मनुष्यान् रक्षांसि यक्षकिंपुरुषादिकान्॥ ९०॥

அந்த மலையின் வெளியே (அலோகம்) இருள்குவியலையும், உள்ளே தங்க நிறமுள்ள (லோகம்) பூமியையும் கடல்களையும் ஆறுகள் மலைகள் சூழ்ந்த ஏழுதீவுகளையும் மற்ற உலகங்களையும் இந்திரன் முதலிய தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், கிம்புருஷர்கள் முதலானோரையும் கண்டான்.

तत्रापश्यत्सत्यलोके वैकुण्ठे राजते नगे।
मुनिपुत्रं स्वमात्मानं ब्रह्मविष्णुशिवात्मना॥ ६१॥
विभज्य संस्थितं सर्वलोकसृष्ट्यादिहेतवे।

அங்கு ஸத்தியலோகத்திலும், வைகுண்டத்திலும், கைலாஸமலையிலும் உலகைப் படைக்கவும், காக்கவும், அழிக்கவும் தன்னையே பிரும்மா விஷ்ணு சிவன் இவர்கள் வடிவில் பிரித்துக்கொண்டு ஆளும் முனிகுமாரனையும் கண்டான்.

अथापश्यद् भूविभागे कृत्वा रूपान्तरं तथा॥ ६२॥
प्रशासनपरो भूमेः सार्वभौमत्वमास्थितः।

பிறகு பூமியின் ஏதோ ஒரு பகுதியில் வேறுவடிவமெடுத்து அரசனாக இருந்து அந்தப்பகுதியை ஆள்பவனாகவும் முனிகுமாரனைக் கண்டான்.

*இந்தப் பாறையினுள் கண்டதனைத்தும் முனிகுமாரனின் யோகபலத்தால் படைக்கப் பெற்றவை. அவை அனைத்தும் முனி குமாரனே. உலகத்தைக்காக்கும் தேவதைகளும், படைக்கும் பிரமனும், காக்கும் நாராயணனும், அழிக்கும் ருத்திரனும் முனி குமாரனே. தனித்து ஒருபகுதியில் அவனே அரசனாக நின்று ஆளவும் செய்கிறான்.*

एवं मुनिकुमारस्य दृष्ट्वा योगर्धिमुत्तमाम्॥ ६३॥
विस्मितोऽभून्महासेनः ततः प्राह मुनेः सुतः।
राजन्नेतल्लोकजातं पश्यतः काल अत्यगात्॥ ६४॥
अर्बुदानां द्वादशकं इतोऽप्यत्र दिनात्मकः।
गच्छावो बाह्यलोकं तं यत्रास्ते जनको मम॥ ६५॥

இவ்வாறு முனிகுமாரனின் உயர்ந்த யோகச் செல்வத்தைக் கண்டு அரசன் வியப்படைந்தான். முனிகுமாரன் கூறினான். "அரசே, இந்த உலகங்களைக்காணும் நமக்கு ஒரு நாளாகிவிட்டது. ஆனால் வெளியுலகிற்கு 120 கோடி ஆண்டுகள் ஆகிவிட்டன. நாம் வெளி உலகை நோக்கிச் செல்வோம். அங்கு என் தந்தை இருக்கிறார்."

इत्युक्त्वा भूभृता तेन सह भूयः खमाप्लुतः।
पूर्ववत् तद्गण्डशैलात् निर्गत्याभ्याययौ बहिः॥ ६६॥

இவ்வாறு கூறிவிட்டு அரசனுடன் சேர்ந்து விண்ணை நோக்கிப் பாய்ந்து முன்போல் அந்தப் பாறையிலிருந்தும் வெளியே வந்தான்.

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
गण्डशैल लोकावलोकनं नाम द्वादशोऽध्यायः ।

*திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் பாறை உலகைப் பார்ப்பதான பன்னிரண்டாவது அத்தியாயம்.*

# त्रयोदशोऽध्यायः

## பதின்மூன்றாவது அத்தியாயம்

मुनिपुत्रः पुनः शैलात् महासेनं विनिर्गमे।
विधाय मूर्च्छितं लिंगदेहं संस्कारमात्रकम्॥ १॥
समादाय विनिर्गत्य प्राक्षिपत्तच्छरीरके।
उत्थापयामास तु तं जीर्णदेहसुसंगतम्॥ २॥

முனிகுமாரன் மறுபடியும் பாறையிலிருந்தும் வெளிப்படும்போது மகாஸேனனை நினைவு இழக்கச் செய்து வாஸனை மாத்திரம் மீதியுள்ள லிங்கதேகத்தைப் பிரித்தெடுத்துக்கொண்டு வெளிப்பட்டு பழைய உடலுடன் பொருத்தி அவரை எழுப்பினான்.

अथोत्थितो महासेनो बाह्यलोकं समीक्ष्य तु।
भुवं जनांस्तरून् स्रोतो ह्रदादींश्चापि नूतनान्॥ ३॥
बभूव विस्मितोऽत्यन्तं पप्रच्छ मुनिनन्दनम्।

பிறகு விழித்தெழுந்த மகாசேனன் வெளி உலகை உற்றுப் பார்த்து அந்த இடத்தையும் மக்களையும் மரங்களையும் ஆறு குளம் முதலியவற்றையும் புதியனவாகக்கண்டு மிகவும் வியப்படைந்தவனாக முனிகுமாரனைக் கேட்டான்.

कतमो वै महाभाग लोकोऽयं मे प्रदर्शितः॥ ४॥
पुरा दृष्टादपूर्वोऽयं समाचक्ष्वैतदद्भुतम्।
इत्यापृष्टो मुनिसुतो महासेनमुवाच ह॥ ५॥

பெரியோரே! எனக்குக் காட்டப்பெறும் இவ்வுலகம் எது? இது முன்கண்டதைக் காட்டிலும் வேறுபட்டது. வியப்பிற்குரிய இதனைப்பற்றிக் கூறும் எனக் கேட்கப்பட்ட முனிகுமாரன் மகாஸேனனிடம் கூறினான்.

शृणु राजन्नयं लोकः पूर्वं योऽस्माभिरास्थितः।
स एव चिरकालेन परिणामान्तरं गतः॥ ६॥
शैललोकगतानां नो दिनमेकं यदत्यगात्।
तावतैवात्र कालेन द्वादशार्बुदवत्सराः॥ ७॥
अतिक्रान्ता अतो लोकस्त्वयं रूपान्तरं गतः।

அரசே! கேளும், இந்த உலகம் முன் நாம் வாழ்ந்ததே. இதுவே வெகுகாலமாகிவிட்டபடியால் மாறுபாட்டை அடைந்துள்ளது. பாறை உலகில் இருந்த நமக்கு ஒருநாள் சென்றது. அதே காலவரையில் 120 கோடி ஆண்டுகள் இங்கு சென்றுவிட்டன. அதனால் இவ்வுலகம் வேறு உருவத்தை அடைந்துவிட்டது.

भिन्नां व्यवहृतिं पश्य भाषां चापि समन्ततः ॥ ८ ॥
एवमेव जनानां तु कालेन भिद्यते स्थितिः ।
एवं मया तु बहुधा दृष्टा भिन्ना जगत्स्थितिः ॥ ९ ॥

பழக்க வழக்கங்கள் மாறியுள்ளதைப் பார். மொழியும் முழுவதும் மாறிவிட்டதைப் பார். இப்படித்தான் காலத்தால் உலக நிலை மாறுபடுகிறது. இப்படி பல மாறுபாடுகளடைந்த உலக நிலையை நான் கண்டிருக்கிறேன்.

पश्यैष मे स भगवान् समाहितमतिः पिता ।
सोऽयं देशो यत्र पूर्वं त्वया मे संस्तुतः पिता ॥ १० ॥
एनं पश्य महाशैलं यत्र मे लोक ईक्षितः ।

இதோ பார்! என் தந்தையான அந்த மகான் ஸமாதியில் ஆழ்ந்த மனத்தினராக இருக்கிறார். இங்குதான் உன்னால் என் தந்தை துதிக்கப் பட்டார். இந்த பெரும்பாறையைப் பார். இங்குதான் என் தனி உலகம் காணப்பட்டது.

त्वद्भ्रातुर्वंशपुरुषा अतिक्रान्ताः सहस्रशः ॥ ११ ॥
यत्ते पुरं वंगदेशे सुन्दराख्यं स्थितं पुरा ।
तवाभूत् संप्रति वनं व्याप्तं श्वापदमण्डलैः ॥ १२ ॥
त्वद्भ्रातृवंशजः सद्यो वीरबाहुरिति श्रुतः ।
मालवेशो विशालाख्ये क्षिप्रातीरे पुरेऽस्ति हि ॥ १३ ॥
त्वद्वंश्योऽपि सुशर्माख्यो द्रविडेष्वभवन्नृपः ।
वर्धने नाम नगरे ताम्रपर्णीसरित्तटे ॥ १४ ॥

உன் சகோதரனின் வம்சத்தினர் ஆயிரக்கணக்கில் பிறந்து மறைந்து விட்டனர். வங்க தேசத்திலிருந்த ஸுந்தர நகரம் என்ற உன் தலைநகரம் இருந்த இடம் கொடிய விலங்குகள் சூழ்ந்த காடாகி விட்டது. உன் சகோதர வம்சத்தில் பிறந்த வீரபாஹு என்பவன் மாலவ அரசனாக க்ஷிப்ரா நதிக்கரையில் உள்ள விசாலா (உஜ்ஜயினி) நகரத்தில் இருக்கிறான். உன்

வம்சத்தில் பிறந்த ஸுசர்மா என்பவன் திரவிடதேசத்தில் தாம்ரபர்ணி நதிக்கரையிலுள்ள வர்த்தன நகரத்தில் அரசனாக இருக்கிறான்.

लोकस्थितिरियं चेत्थं सर्वदा परिवर्तते।
अल्पकालेनैवमेतत् अभवत् नूतनं जगत्॥ १५ ॥
इतोऽपि चिरकालेन नगा नद्यो ह्रदा भुवः।
अन्यथा भावमायान्ति एवमेव जगद्गतिः॥ १६ ॥

உலக நிலை இப்படித்தான் எப்போதும் மாறிவரும். சிறிது காலத்தளவில் கூட இது புது உலகமாக ஆகிவிடும். வெகு நாட்கள் கழித்தும் மலைகளும் ஆறுகளும் மடுக்களும் பூமியும் மாறுபடுகின்றன. இதுவே உலகப் போக்கு.

गिरयो निम्नतां यान्ति निम्नदेशा महोच्चताम्।
मरुदेशास्त्वनूपाः स्युः पर्वता वालुकामयाः॥ १७॥
कठिना भूः शिलाप्राया भवेदत्यन्तकोमला।
कोमला भूरपि भवेत् पाषाणसदृशी क्वचित्॥ १८ ॥
ऊषरा भूरुर्वरा स्यादुर्वरोषररूपिणी।
रत्नानि शर्कराः स्युर्वै रत्नात्मानस्तु शर्कराः॥ १९ ॥
क्षारं जलं स्वादुरसं मधुरं क्षारतां गतम्।

மலைகள் பள்ளமாகும். பள்ளம் மிக உயர்ந்த இடமாகும். பாலை—வனம் சதுப்பாகவும், மலை மணலாகவும், பாறையால் இறுகிய பூமி மிக மென்மையான பூமியாகவும், மென்மையான பூமி கல்லாகவும் ஆகும். உவர் மண்ணாயிருப்பது பயிர் விளைவிற்கேற்ற இடமாகவும், வயல்கள் உவர் மண்ணாகவும் மாறும். ரத்தினக்கற்கள் பெருமணல்களாகவும் பெருமணல் ரத்தினக்கற்களாகவும், உப்பு நீர் இனியதாயும் இனிய நீர் உப்பு நீராயும் மாறும்.

कदाचिन्नरबाहुल्यं कदाचित्पशुसंचयम्॥ २० ॥
कदाचित्क्रिमिकीटादिप्रचुरं जगदीक्षितम्।
एवमेतत् जगत् कालभेदात् परिणतं पृथक् ॥ २१ ॥
तस्मादयं पुरास्माकं लोक एवेदृशः स्थितः।

சில சமயம் மனித இனம் அதிகமாகவும் சில சமயம் விலங்கினங்கள் அதிகமாகவும் சிலசமயம் பூச்சி புழுக்களும் அதிகமாகவும் உலகம்

காணப்பட்டுள்ளது. இப்படித்தான் உலகம் காலமாறுபாட்டால் மாறிவிடும். முன் நாம் கண்ட உலகமே இப்படி மாறிவிட்டது.

इत्याकर्ण्य मुनिसुतवाक्यं स च महीपतिः ॥ २२ ॥
महासेनोऽत्यन्तशोकाविष्टो मूर्च्छामुपागतः ।
मुनिपुत्रसमाश्वस्तः प्रज्ञामासाद्य भूपतिः ॥ २३ ॥
अत्यन्तशोकसंविष्टो विललाप सुदीनवत् ।
भ्रातरं भ्रातृपुत्रांश्च दारान् स्वात्मन एव च ॥ २४ ॥
पुत्रादींश्च पृथक् स्मृत्वा विललापातिदुःखितः ।
अथ तं मोहतो भ्रातृमुखान् शोचन्तमञ्जसा ॥ २५ ॥
मुनिपुत्रो वचः प्राह बुबोधयिषया नृपम् ।

இப்படி முனிகுமாரனின் வார்த்தையைக் கேட்ட அந்த அரசன் மகாஸேனன் பெரும் துக்கமடைந்தவனாக நினைவிழந்தான். முனி குமா–ரனால் ஆறுதலளிக்கப்பட்டவனாக நினைவைப் பெற்று அந்த அரசன் மிகுந்த சோகவசப்பட்டவனாக கடப்படாதவன்போல் அழுதான். சகோதரர், சகோதரரின் புதல்வர்கள், தன் மனைவி, தன் புதல்வர்கள் இவர்களை நினைத்துத் துக்கமடைந்தவனாகப் புலம்பினான். மோகத்தால் சகோதரர் முதலானவரைப்பற்றி வருந்தும் அரசனை முனிகுமாரன் அறிவூட்டுவதற்காகக் கூறினான்.

राजंस्त्वं बुद्धिमान्नूनं कं किमर्थं हि शोचसि ॥ २६ ॥
बुद्धिमन्तो हि विफलं जातु कुर्वन्ति कर्म नो ।
अविमृश्य फलं यस्तु कर्म कुर्यात्स बालिशः ॥ २७ ॥
तत्त्वं शोचसि कं ब्रूहि किमर्थं वा हि शोचनम् ।
इत्युक्तः प्राह तं भूपो महासेनोऽतिदुःखितः ॥ २८ ॥

அரசே! நீர் அறிவாளியே ! சந்தேகமில்லை. எதனைப்பற்றி எதற்காக வருந்துகிறீர். அறிவாளிகள் பயனற்ற செயலைச் செய்யமாட்டார்களல்லவா? பலனைச் சிந்தியாது செயல்புரிபவன் சிறுபிள்ளையே. நீர் எதற்காக வருத்தப்படுகிறீர்? வேதனை எதற்கு? எனக் கேட்கப்பட்ட அரசன் மகாஸேனன் அதிக துக்கமடைந்தவனாகக் கூறினான்

किन्न पश्यसि शोकस्य स्थानं मम महामुने ।
सर्वं यस्य हतं तस्य कारणं पृच्छसीह किम् ॥ २९ ॥

एकस्मिन्नपि शोकः स्याद्धते लोकस्य सर्वथा।
कुतस्त्वं पृच्छसि पुनः सर्वनाशे ह्युपस्थिते॥ ३०॥
इत्युक्तो मुनिपुत्रोऽपि भूयः प्राह हसन्निव।

மாமுனிவரே! என் வருத்தத்திற்கான காரணத்தை நீர் காண வில்லையா? எல்லாமே ஒருவனுக்கு அழிந்துவிட்டதெனில் காரணம் கேட்கிறீரே! ஒன்றை இழந்தாலே சோகம் ஏற்படும். எல்லாமிழந்த போது மறுபடி ஏன் என்று கேட்கிறீரே! என்பதனைக் கேட்ட முனி குமாரன் மறுபடி சிரித்துக்கொண்டே கூறினான்.

राजन् ब्रूहि किमेतत्ते कुलधर्मः सनातनः॥ ३१॥
यच्छोचनमकृत्वा तु प्रत्यवायो महान् भवेत्।
अथवा शोचिते नष्टं प्राप्यते भूय एव तत्॥ ३२॥
राजन् विमृश धैर्येण शोचिते किं फलं भवेत्।

அரசே! இழந்ததைப்பற்றி வருந்தாமல் இருந்தால் கேடு விளையுமா? அல்லது இப்படி அழுவது பழங்காலம் தொட்டுவந்த நெறியா? அல்லது அழுதால் இழந்ததை மறுபடி பெற முடியுமா? அழுவதால் என்ன பயன் என்பதைத் தைரியத்துடன் சிந்தித்துப்பார்.

नष्टेषु बन्धुषु यदि शोचितव्यं तदा शृणु॥ ३३॥
अतीता बन्धवो नष्टाः पितामहमुखाः खलु।
तत्सर्वदा शोचितव्यं कुतः पूर्वं न शोचितम्॥ ३४॥
अथ ते बन्धवः कस्य बन्धुत्वं वा कुतस्तव।
मातापित्रोः स्वस्य वापि पुरीषकृमयो हि ये॥ ३५॥
असंख्याताः स्वदेहोत्था देहसंबन्धिनोऽपि च ।
न ते स्युर्बन्धवः कस्मात्कुतो वा ते न शोचिताः ॥ ३६॥
राजन् विमृश कस्त्वं वै कान् विनष्टान् प्रशोचसि ।

பந்துக்களை இழந்துவிட்டால் துக்கப்பட வேண்டுமெனில் நான் கூறுவதைக் கேள். முன்னிருந்த பாட்டனார் முதலிய பந்துக்கள் அழிந்தார்களே, அவர்களைப் பற்றி எப்போதும் வருத்தப்பட வேண்டுமே! ஏன் இதற்கு முன் வ்ருந்தவில்லை? அவர்கள் பந்துக்களாயின் யார் எப்படி பந்துவானார்? பெற்றோர் வயிற்றில் வசித்ததால் எனில் பெற்றோர் வயிற்றில் மலத்தில் காண்கின்ற எண்ணற்ற கிருமிகளும் அவர்களது உடல் சம்பந்தம் பெற்றவையாயிற்றே! அவர்களும் பந்துக்களல்லவா? ஏன் அவர்களைப் பற்றி வருந்தவில்லை?

அரசே! சிந்தியும் ! நீர் யார், இழந்த யாரைப் பற்றி வருந்துகிறீர்?

देहस्त्वं देहभिन्नो वा देहः संघातरूपकः ॥ ३७॥
संघातस्यैकदेशस्य वा नाशान्नाश उच्यते ।
प्रतिक्षणं त्वेकदेशनाशो देहस्य भावितः ॥ ३८॥
मूत्रोच्चारश्लेष्मनखकेशादेः सन्ततं क्षयः ।
सर्वात्मना तु संघातनाशो न हि विभाव्यते॥ ३६॥
भ्रात्रादेस्तव देहांशः स्यात्पृथिव्यादिषु स्फुटम् ।
अन्ततो देहगगनमविनाश्यस्ति केवलम् ॥ ४०॥

நீர் இந்த உடலா? உடலைக்காட்டிலும் வேறுபட்டவரா? உடல் என்பது பலவற்றின் கூட்டு தானே? தேகத்தின் அழிவு அந்தக் கூட்டில் ஏதேனும் ஒன்றின் அழிவால் ஏற்படுகிறதா? எல்லாவற்றின் அழிவால் ஏற்படுகிறதா? ஒவ்வொரு நொடியிலும் உடலின் ஏதேனும் ஒரு பகுதியின் அழிவு ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. சிறுநீர் கபம் நகம் கேசம் முதலியவற்றின் அழிவு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது (உடல் அழிந்ததாகக் கொண்டபின்னரும்) எல்லாவற்றின் அழிவும் ஏற்படக் கூடியதல்ல. உம் சகோதரர் முதலானவர்களுடையதும் உம்முடையதுமான உடலின் அம்சம் மண்ணில் நன்கு மீதி உள்ளதே. கடைசியில் உடலின் ஆகாய தத்துவம் தனித்து அழியாதிருக்கின்றதே.

न त्वं देहः किन्तु देही मद्देह इति भाषसे ।
यथा मद्वस्त्रमित्येवं स देहस्त्वं कथं वद ॥ ४१॥
यदि त्वं देहभिन्नोऽसि संबन्धः कोऽन्यदेहकैः ।
यथा भ्रात्रादिवासोभिर्नास्ति संबन्धलेशकः ॥ ४२॥
अविशेषात्तच्छरीरैः विनष्टैस्ते कथं शुचा ।

என் உடை என்பதுபோல் என் உடல் என்று கூறுகிறாய்? அப்போது நீ உடலல்ல. ஆனால் உடலை உடைமையாகக் கொண்டவன், நீ எப்படி உடல் ஆவாய்? கூறு. உடலைக்காட்டிலும் வேறு பட்டவனாயின் (உன் சகோதரர் போன்ற) மற்றவர்களின் உடலுடன் என்ன சம்பந்தம்? சகோதரர் முதலியவர்களின் ஆடையுடன் எப்படி சம்பந்தமில்லையோ அப்படியே ஆடை முதலானவற்றைக் காட்டிலும் தனித்த சிறப்பொன்றுமில்லாத அவர்களது உடல் அழிந்தால் வருந்துவானேன்?

मच्छरीरं मदक्षाणि मत्प्राणो मन्मनस्त्विति ॥ ४३॥
वदन् भवान् किंस्वरूपो वद मे पृच्छते नृप ।

என் உடல், என் பொறிகள், என் உயிர், என் மனம் என்று பேசும் நீ அவற்றைக்காட்டிலும் வேறுபட்டவனாக இருக்க வேண்டும் அப்போது பேசும் நீ எந்த வடிவினன்? கேட்கும் எனக்குக் கூறு வாயாக!

एवमुक्तो महासेनो मुहूर्तं सुविचार्य तु ॥ ४४ ॥
अप्राप्यान्तं मुनेः प्रश्ने प्राह दीनतरस्ततः ।

இப்படிக் கேட்கப்பட்ட மகாஸேனன் சிறிது நேரம் சிந்தித்து முனிவரின் கேள்விக்குப் பதில் கிடைக்காதவனாக மேலும் அயர்ந்தவனாகக் கூறினான்.

न जाने भगवन् कोऽहमिति सर्वात्मनाऽप्यहम् ॥ ४५ ॥
स्वभावतस्तु शोचामि कारणं तत्र नाविदम् ।
प्रपन्नस्त्वामहं दीनः किमिदं भगवन् वद ॥ ४६ ॥
सर्वे शोचन्ति यत्कस्मिन्नपि बन्धौ मृते सति ।
न स्वात्मानं विजानन्ति नान्यं शोचन्ति चैव हि ॥ ४७ ॥
एतन्मे ब्रूहि भगवन् शिष्याय तव वै स्फुटम् ।
इति पृष्टो मुनिसुतो महासेनमथाब्रवीत् ॥ ४८ ॥

"பெரியவரே! நான் யார் என்பதைப் பற்றி நான் முழுவதும் அறியாதவன். ஏன் அழுகிறேன் எனில் அது என் இயல்பு. அதற்குக் காரணத்தை அறியேன். இது ஏன் என்பதை நீர்தான் விளக்க வேண்டும். நான் நொந்தவன். உம்மைச் சரணடைந்தவன். ஏதேனும் ஒரு பந்து இறந்தால் அவனைப்பற்றி எல்லோரும் வருந்துகிறார்கள். அவர்களும் தன்னை அறியாதவரே. மற்றவரைப் பற்றி வருந்துவதுமில்லை. இது ஏன்? இதனை உம் சிஷ்யனான எனக்கு விளக்க வேண்டும்." இப்படிக் கேட்கப்பெற்ற முனி குமாரன் மகாஸேனனைக் கண்டு கூறினான்.

राजन् शृणु महादेव्या मायया मोहिता जनाः ।
स्वात्मानमविदित्वैव व्यर्थं शोचन्ति सर्वदा ॥ ४९ ॥
यावन्न विदितं स्वात्मसत्तत्त्वं तावदेव वै ।
जनाः शोचन्ति विज्ञाय भूयः शोचन्ति न क्वचित् ॥ ५० ॥

"அரசே! கேளும் பெருந்தேவியின் மாயையால் மக்கள் மயங்கித் தன்னை அறியாமலேயே வீணே எப்பொழுதும் வருந்துகிறார்கள். தனது ஆத்மாவைப் பற்றிய உண்மை நிலையை அறியாதவரை மக்கள் வருந்துகிறார்கள். அறிந்ததும் மறுபடி எங்கும் வருந்துவதில்லை.

यथा निद्रामोहितात्मा स्वमविज्ञाय शोचति ।
ऐन्द्रजालिक मन्त्रोत्थमायया मोहितो नरः ॥ ५१ ॥
तत्प्रक ल्पितसर्पादिभीत्या यद्वध्दि शोचति ।
तथैव मायया मुग्धः स्वमज्ञात्वा प्रशोचति ॥ ५२ ॥

எப்படித் தூக்கத்தால் கலங்கிய மனமுள்ளவன் கனவில் தன்னை அறியாமல் வருந்துவானோ, இந்திரஜால வித்தைக்காரனது மந்திர மாயையால் தன்னை மறந்த மனிதன் அவனால் தோற்றுவிக்கப் பெற்ற பாம்பு முதலியவற்றிடம் பயத்தால் எப்படி துன்புறுவானோ, அதனைப்போல் இந்த மாயையால் மயங்கியவனும் தன்னிலை மறந்தவனாகத் துன்புறுவான்.

यथा स्वप्नात्प्रबुद्धो वा ज्ञातैन्द्रजालिकागमः ।
न शोचति क्वचिच्चान्यान् शुचा युक्तान् हसत्यपि ॥ ५३ ॥
एवं स्वात्मविदो मायामुक्ताः शोचन्ति न क्वचित् ।
शोचतस्त्वादृशान् मायामूढान् प्रविहसन्ति च ॥ ५४ ॥

கனவிலிருந்து விழித்துக்கொண்டவனும் இந்திரஜாலக்காரனின் தந்திரமறிந்தவனும் தானும் வருந்துவதில்லை. வருந்துபவனையும் பரிகசிப்பான். அப்படியே ஆத்ம ஞானிகள் மாயையிலிருந்து விடுபட்டவர்களாக எப்போதும் வருந்துவதில்லை. மாயையால் மயங்கி வருந்தும் உன் போன்றவரையும் பரிகசிப்பர்.

तत्त्वं विज्ञायात्मतत्वं मायामुत्तीर्य दुर्गमाम् ।
जहि शोकं महाबाहो मोहोत्थं सद्विमर्शनात् ॥ ५५ ॥
इत्युक्तः पुनरप्याह महासेनो मुनीश्वरम् ।

அதனால் நீயும் ஆத்மநிலையை அறிந்து, மாயையைத் தாண்டி ஸத்தான பரம்பொருளைப் பற்றிய விளக்கம் பெற்றுச் சோகத்தை விடுவாய்" என்று கூறப்பட்ட மகாஸேனன் முனிவரிடம் மறுபடி கூறினான்.

भगवन् यत्त्वया प्रोक्तो दृष्टान्तो विषमः स हि ॥ ५६ ॥
स्वाप्नो वा मायिको वापि शून्यात्मा भासते परम् ।
अयं जाग्रत्प्रपञ्चस्तु सत्यः सर्वार्थसाधकः ॥ ५७ ॥
अबाधितः स्थिरश्चापि कथं स्वप्नसमो भवेत् ।
इत्युक्तः पुनराचख्यौ मुनिपुत्रोऽतिबुद्धिमान् ॥ ५८ ॥

"பெரியவரே! நீர் கூறிய உதாரணம் சரியாக இங்கு பொருந்தாது. கனவில் கண்டதும் இந்திரஜால மாயையால் எழுந்ததும், (கனவிற்குப் பின்னும் இந்திரஜாலக் காட்சிக்குப் பின்னும்) சூன்யமாகி விடுகிறது. விழித்த நிலையில் உணரப்பெறும் உலகம் உண்மையாக நினைத்ததனைத்தையும் ஸாதிக்கவல்லதாகக் காணப்படுகிறதே? கனவில் கண்டதுடன் இது எப்படிச் சமமாகும்?' இவ்வாறு கேட்கப் பட்ட அதிக அறிவாளியான முனிகுமாரன் பதிலைக் கூறினான்.

शृणु राजन् यत्त्वयोक्तं दृष्टान्तो विषमस्त्विति ।
एष मोहो द्वितीयस्ते स्वप्ने स्वप्नस्य यादृशः ॥ ५९ ॥
स्वाप्नवृक्षोऽपि तत्काले किं न साधयते हितम् ।
पान्थानां किं न हरति तापं छायाप्रदानतः ॥ ६० ॥
फलाद्यैः स्वाप्नमर्त्यादीन् न तर्पयति किं वद ।
स्वप्ने क्व बाधितः स्वप्नः क्वास्थिरश्चोपलक्षितः ॥ ६१ ॥

அரசே! நான் கூறிய உதாரணம் பொருந்தாது என்றீரே, அது மற்றொரு மோகம். கனவில் காணும் மற்றொரு பிரமத்தைப்போல் அது. கனவில் கண்ட மரம் கனவில் ஹிதமானதைத் தரவில்லையா? கனவு மரம் கனவு வழிப்போக்கனுக்கு நிழல் தந்து தாபத்தைப் போக்க வில்லையா? கனவு மனிதனுக்குப் பழம் தந்து திருப்தி தரவில்லையா? கனவில் கண்டது கனவிலேயே தவறானதென எப்போதாவது அறியப்பட்டுள்ளதா? கனவளவில் நிலைத்ததல்ல என்று காணப்பட்டுள்ளதா?

*அரசனின் கேள்வி பொதுவான மனித எண்ணத்தின் அடிப்படையில் எழுந்தது. மனிதன் கனவைப் பொய்யானதென நினைக்கிறான். இந்திரஜாலம் தோன்றுமளவில் மெய்போல் ஒரு போலிக் காட்சி என மதிக்கிறான். அவை சத்தியமானவை என ஒரு போதும் நினைப்பதில்லை. முனிகுமாரன் இதனைத் தவறான எண்ணம் எனச் சுட்டிக்காட்டுகிறான். விழிப்பு நிலையில் கண்டது விழித்திருக்கும் அளவில் எப்படிச் சத்தியமோ, அதே அளவில் கனவில் கண்டதும் கனவளவில் சத்தியமே என்கிறான். ஒன்று சத்தியமானது, மெய்யல்ல எனக் கூறுவதற்குச் சில முறைகள் உண்டு. காணும் பொருள் காண்பவனைவிட வேறுபட்டதாகத் தனித்து இருப்பு கொண்டிருக்க வேண்டும். அது காண்பவனின் காரியத்தைச் சாதித்து உதவவேண்டும். சிறிது நேரம் ஒரு நிலையில் காணப்படுவது மற்றொருபொழுதில் வேறுபட்டதாகக் காட்சி அளிக்கக்கூடாது. குதிரையாயிருந்தது யானையாகக்கூடாது. அப்படியானால் பாதிப்புள்ளது. உண்மையல்ல. நிலைத்த தோற்றத்துடன் இருக்கவேண்டும். விழிப்பில் காணும் பொருள்களனைத்தும் இந்த*

*சோதனையில் தேர்பவையே. கனவில் காண்பது இந்த சோதனைக்கும் உட்படாது என்று நினைக்கிறோம். முனிகுமாரன் யுக்தியால் இதனை மறுக்கிறான்.*

*காணப்படுகிற பொருள் உண்மையில் காண்பவனைத் தவிர வேறு தனித்த இருக்கை கொண்டதல்ல என்று முன்னர் விளக்கப்பட்டுள்ளது. காணப்படுகிற பொருள் வேறுபட்டது என்ற எண்ணம் பிரமையால் உண்டாவது. அதனால் காணப்படுகிற பொருள் சத்தியமா பொய்யா என்ற விளக்கத்திற்குச் செல்கிறோம். இது முதல் பிரமை. இதுவே பிரமையாயின் காணப்படும் பொருளில் கனவில் கண்டது மட்டும் பொய் எனச் சொல்வது மற்றொரு (இரண்டாவது) பிரமை என்கிறான். கனவில் காணப்படும் பொருள் கனவளவில் சத்தியமே, காரியத்திற்கு உதவுவதே. கனவில் கண்ட யானை குதிரையாவதில்லையாதலால் பாதிப்புறாததே, கனவு வரையில் நிலைத்ததே என்று பதில் அளிக்கிறான். கனவு நிலையையும் விழிப்பு நிலையையும் மேலும் சீர்தூக்கிக் காட்டுகிறான்.*

अखिलं बाधितं जाग्रद्दशायामिति चेत् श्रृणु ।
जाग्रत्प्रपञ्चोऽपि सर्वः सुषुप्तौ किं न बाधितः ॥ ६२ ॥
न बाधितः परदिनेऽप्यनुवृत्तेस्तथेति चेत् ।
स्वाप्नस्यापि परदिने नानुवृत्तिः क्व वा वद ॥ ६३ ॥

ஸ்வப்னத்தில் கண்டதனைத்தும் விழித்திருக்கையில் பாதிப்பு அடைகிறதெனில் விழித்துள்ளபோது காணப்படும் உலகமனைத்தும் ஸுஷுப்தி நிலையில் பாதிப்புறவில்லையா? மறுநாளும் (அதே உலகம் அதே நிலையில்) தொடர்வதால் பாதிப்புறவில்லை எனில், ஸ்வப்ன உலகிற்கு மறுநாள் தொடர்பு எங்கில்லை?

नानुवृत्तिर्भाति स्वप्ने इति चेत् नृपते श्रृणु ।
जाग्रत्यपि क्वानुवृत्तिभासो नव्यावभासके ॥ ६४ ॥
नव्येऽनुवृत्यभानेऽपि भात्यन्यत्रेति चेत् शृणु ।
तथा स्वप्नेऽपि भात्येवानुवृत्तिः स्थिरभासने ॥ ६५ ॥

கனவில் அத்தகைய தொடர்பு காணப்படவில்லை எனில் விழிப்பிலும் புதிது புதிதாகத் தோன்றுவதில் எங்கு தொடர்பு உணரப்படுகிறது? புதிது புதிதாகத் தோன்றுபவைகளில் தொடர்பின்மை இருந்தாலும் ஸ்திரமாயுள்ளவற்றில் (மலை, கடல் முதலியவற்றில்) ஸ்திரமான தோற்றத் தொடர்பு இருக்கிறதென்றால் அதேமாதிரி ஸ்திரமான பொருள்களின் தோற்றம்

கனவிலும் தொடர்கிறதைக் காண்கிறோமே!

मृषानुवृत्तिस्तत्रेति चेत् जाग्रत्यपि सा तथा ।
सूक्ष्मबुद्ध्या विमृश तद् वस्तु जाग्रति संस्थितम् ।। ६६ ।।
देहवृक्षनदीदीपादिकं क्षणविभेदितम् ।
कथं तदनुवृत्तिर्वै भवेदवितथात्मिका ।। ६७ ।।

கனவில் காண்பவை பொய்யானவை, அவை தொடர்ந்து காண்பது பிரமை எனில் விழிப்பு நிலையில் காண்பவையும் அப்படியே. சூட்சும நோக்கில் சிந்தித்துப்பார். உடலோ, மரம், நதி, தீபம் முதலானவையோ கணத்திற்குக்கணம் உருமாறுபவை. அவை தொடர்ந்து புலப்படுவதெனில் எப்படி அது உண்மையான தோற்றமாயிருக்கும்?

अचलानामपि नहि द्वितीयक्षणसंगतम् ।
रूपमस्ति सर्वदैव निर्झरैर्भेदितात्मनाम् ।। ६८ ।।
मूषकैरुपदीकाभिः सूकरैनिर्झरादिभिः ।
सर्वतस्तु विभिद्यन्ते पर्वताः सर्व एव हि ।। ६६ ।।
पर्वतांबुधिभूमुख्या अप्येवं क्षणभेदिनः ।

எப்போதும் அருவிகளால் தூளாக்கப்படும் மலைகளுக்கும், மறுகணத்திலும் தொடரக்கூடிய உருவம் எப்போதுமே இல்லை. எலிகள், கரையான்கள், காட்டுப் பன்றிகள், அருவிகள், முதலானவற்றால் மலைகள் எப்போதும் பல கூறுகளாகப் பிளக்கப்படுகின்றன அல்லவா? மலைகளும், கடலும், தரையும், மற்றவையையும் இப்படிக் கணத்திற்குக்கணம் மாறுபவையே!

अथ ते संप्रवक्ष्यामि पश्य सूक्ष्मधिया नृप ।। ७० ।।
परिच्छिन्नानुवृत्तिर्हि समैव स्वप्नजाग्रतोः ।
अपरिच्छिन्नानुवृत्तिः कार्येष्वत्यन्तदुर्लभा ।। ७१ ।।

சற்றுக் கூரான அறிவுடன் கவனி. குறுகிய அளவில் தொடர்புள்ள தெனில் அது கனவு விழிப்பு என்ற இருநிலைகளிலும் பொதுவானதே. செயலால் விளைந்ததனைத்திலும் முழு அளவில் தொடர்பென்பது ஏற்படமுடியாதது.

अनुवृत्तिः कारणैन रूपेणास्ति हि सर्वदा ।
इति चेत्कारणं रूपं पृथिव्यादिमयं किल ।। ७२ ।।

तच्चानुवृत्तं स्वप्नेऽपि पृथिव्यादेर्हि भासनात् ।

(காரியம் எனும் நிலையில் இல்லாவிடினும் ) காரணமான மூலப் பொருளளவில் தொடர்பு எப்போதும் உண்டு எனில், காரண வடிவம் என்பது பிருதிவீ முதலிய ஐம்பூத வடிவில் உள்ளதல்லவா? பிருதிவீ முதலியவை தானே கனவிலும் தோன்றித் தொடர்கின்றன?

अथ स्वाप्नस्य बाधो हि जाग्रति ह्यनुभूयते ।। ७३ ।।
न जागरस्य बाधस्तु भासते कस्यचित् क्व चित् ।
इति चेच्छृणु वक्ष्यामि बाधो ह्यनवभासनम् ।। ७४ ।।
सुषुप्तौ सर्वजगतोऽप्यनुभूतं ह्यभासनम् ।

கனவில் கண்டது விழிப்பு நிலையில் பாதிப்படைவதை உணர்கிறோம்; விழிப்புநிலையில் கண்டது அப்படி எங்கும் எவருக்கும் பாதிப்படைவதில்லை என்று கூறுவாயேயாகில் விடை சொல்வேன். பாதிப்பு என்பது அறிவிற்குப் புலப்படாமையல்லவா? ஸுஷுப்தியில் இந்த எல்லா உலகமும் தோன்றாதிருப்பது (அறிவிற்குப் புலப்படாதிருப்பது) அனுபவத்தில் உள்ளதே.

अथ बाधोऽह्यप्रमाणदर्शनं चेत्तदा श्रृणु ।। ७५ ।।
अप्रमाणदृशिर्नास्ति भ्रान्तानां त्वादृशां खलु ।
ज्ञातविज्ञेयतत्वानां अप्रमाणदृशिः स्फुटा ।। ७६ ।।

நம்பத்தகாத தோற்றம்தான் பாதிப்பு என்பதெனில் உண்மையறிவற்ற உன்னைப் போன்றவர்களுக்குத்தான் (விழிப்பு நிலையில் காண்பதும்) நம்பத்தக்கதல்ல என்ற அறிவு ஏற்படாது. உண்மைநிலை அறிந்தவர்களுக்கு இதுவும் நம்பத்தக்கதல்ல என்ற அறிவு ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது.

*கனவில் காணும் மர நிழல் கனவில் சுகம் தருவதால் கனவும் சத்தியமே என்று வாதிக்கிறான் முனிகுமாரன். விழிப்பு நிலையில் காண்கிற உலகமே ஸத்தியமானது என்ற எண்ணம் தவறானது என்பதை நிரூபிக்க இந்த வாத முறையைக் கையாள்கிறான். விழிப்பில் காண்கிற உலகம் ஒவ்வொருநாளும் தொடர்ந்து அதே நிலையில் உணரப்பெறுகிறது. அதனால் நித்தியம். கனவில்காண்பது கணத்திற்குக் கணம் மாறுகிறது. அதெப்படி நித்தியமாகும்? என்ற சந்தேகம் எழும். விழிப்புலகமும் கணத்திற்குக்கணம் மாறும் சுபாவம் உள்ளதே. மலை ஒவ்வொரு கணமும் மணலாகிறது. கடலில் புதுப்புது நீர் சேர்கிறது. இவற்றின் நித்யமான நிலைத்தோற்றம் என்பதும் பொய்யானதே. விழிப்பில் உணரப்பெறுவதனைத்தும் காலத்தாலும், பொருளாலும், தேசத்தாலும் கட்டுப்படுகிற தோற்றம் கொள்பவையே. அவை எப்படி நித்தியமாகும்? தோன்றுகிற பொருள் அனைத்தும் கணத்திற்குகணம்*

*மாறுபாடு அடைபவையே. மாறுபாடடையாத தத்துவநிலையில் உள்ள பிருதிவி முதலிய ஐம்பூதங்களாகிய காரணப்பொருள் என்ற ரீதியில் விழிப்புலகம் ஸத்யம்தானே என்றால், கனவில் காணப்பெறும் பொருளும் காரணரீதியில் ஸத்யம் தானே.*

*விழிப்புலகில் காணப்பெறுவது பாதிப்புறவில்லை. என்றொரு காரணம் கூறப்பட்டது. வெள்ளியை இது வெள்ளியல்ல என்று கூற நேர்ந்தால் பாதிப்பு ஏற்பட்டதெனலாம். கனவில் கண்ட வெள்ளியை இது வெள்ளியல்ல எனக் கனவில் யாரும் சொல்லக் காணோம். கனவில் கண்டது விழிப்பில் காணப்பெறவில்லை எனில் விழிப்பில் கண்டது ஸுஷுப்தியில் காணப்படுவதில்லையே. வேறு நிலையில் காணப்படுவதில்லை என்பது இரண்டிலும் சமமே. கனவில் கண்டது நம்பத்தக்கதல்ல. விழிப்பில் கண்டதுதான் நம்பத்தக்கது என்ற பொதுவாக ஒரு கருத்து உள்ளதே எனில் அதுவும் தவறு. பொருளின் உண்மைநிலை அறிந்தவர்க்கு விழிப்பில் காணும் உலகமும் பொய்யாகத்தான் தோன்றுகிறது. எனக்கு அப்படித் தோன்றவில்லை எனில் நீ பிரமையால் உண்மைநிலை அறிய முடியாதவன் என்று வாதிக்கிறான் முனிகுமாரன்.*

तस्मादिदं दृश्यजालं स्वाप्नदृश्यसमस्थिति ।
दीर्घकालोऽपि च स्वप्ने भासते निर्विशेषतः ॥ ७७ ॥
तस्मादबाधितो ह्यर्थक्रियाकारी स्थिरोऽपि च ।
स्वाप्नभावस्तेन तुल्यः जाग्रद्भावोऽपि सर्वशः ॥ ७८ ॥
यथा जाग्रति जाग्रत्त्वं गृहीतं जागरे स्फुटम् ।
स्वप्नेऽपि जागरत्वं तु गृहीतं तद्वदेव हि ॥ ७९ ॥
एवं स्थिते कुतो राजन् विशेषः स्वप्नजाग्रतोः ।

அதனால் காணப்படுவதனைத்தும் கனவில் கண்டவற்றுடன் சமமான நிலைப்பைப்பெற்றவை. அதனால் கனவில் கண்டதும் பாதிப்புறாதது. பயனுள்ள செயலாற்றலுள்ளது. நிலைத்ததும்கூட. இதனோடொத்ததுதான் விழிப்பில் காண்பதனைத்தும், விழிப்பு நிலையில் நான் விழித்துக்கொண்டிருக்கிறேன் என்ற உணர்வு எப்படி நன்கு உணரப் பெறுகிறதோ அப்படியே கனவிலும் நான் விழித்துக்கொண்டிருக்கிறேன் என்ற உணர்வு ஏற்படுகிறது. அப்படி இருக்கும்போது ஸ்வப்ன உலகிற்கும் விழிப்பு உலகிற்கும் எப்படி வேற்றுமை?

*ஒருவன் விழிப்பு நிலையில் பொருளைக் காணும்போது, நான் விழித்துக்கொண்டிருக்கிறேன், இதனைக் காண்கிறேன் என்று உணர்வதைப்போல் கனவிலும் பொருளைக் காணும்போது நான்*

*விழித்துக்கொண்டிருக்கிறேன், காண்கிறேன் என்றே உணர்கிறான். கனவு காணும்போது தான் கனவு காண்பதாய் யாரும் நினைப்பதில்லை. தான் காண்பது மெய்யானதல்ல, கனவே என்று யாரும் உணர்வதாகக்காணோம். அதனால் கனவிலும் விழித்திருந்து காண்பதாகவே உணர்வதால் அதுவும் விழிப்புணர்ச்சிதானே என்கிறான் முனிகுமாரன்.*

तत् स्वाप्नान् निजबन्धूस्त्वं न हि शोचसि वै कुतः ॥ ८० ॥
केवलं भावनामात्रात् सत्यता जगति स्थिता ।
शून्यताभावनेनापि शून्यं निष्प्रतिघं भवेत् ॥ ८१ ॥
भावना ह्यप्रमाणत्ववैधुर्येण स्थिरीकृता ।
भवेत्तदात्मभावेन सत्यमेतन्महीयते ॥ ८२ ॥

அதனால் கனவில் கண்ட உன் பந்துக்களைப்பற்றி (அவர்களது பிரிவால்) ஏன் நீ வருந்தவில்லை? நினைப்பளவில் இந்த உலகில் ஸத்தியத்தன்மை உள்ளது. இந்த உலகம் மெய்யானது என்ற நினைப்பு தொடர்ந்திருப்பதால் ஏற்பட்டது. இந்த உலகம் சூன்யம் என பாவனைசெய்தால் சூன்யமாகிவிடும். ஆகாயம்போல் அது தடையாக நிற்காது. பாவனை பிரமாணமல்ல என்ற எண்ணம் ஏற்படாத வகையில் நிலைத்ததானால் அந்த வடிவத்தை அடைந்துவிடும். இது ஸத்தியம்.

*இந்த உலகை ஸத்தியம் என பாவனை செய்தால் ஸத்தியம். பொய் என பாவனை செய்தால் பொய்யாகும். அரசன் ஸத்தியமென பாவனை செய்து வந்ததால் அவனுக்கு ஸத்தியமாகிறதே தவிர ஞானிக்கு அது பொய்யானதே. ஏனெனில் ஞானி அதனைப் பொய்யென பாவனை செய்துவருகிறான் என்கிறான் முனிகுமாரன். பாவனைக்கு இந்த சக்தி உண்டா? என்று மலைக்கிறான் அரசன். பாவனையை விளக்குகிறான் முனிகுமாரன். உலகம் சூன்யம் என்று நினைத்துப் பழகுவது பாவனையல்ல. உண்மைத் தோற்றம் இது தான் என்று தொடர்ந்த நினைப்பு பாவனை. அப்படி இது உண்மை என்ற பாவனை செய்யும்போது இது உண்மையல்ல என்ற வேறொரு எண்ணம் இதனை மறுக்கக்கூடாது. அதனால் முத்துச் சிப்பியைக் கண்டு இது வெள்ளி என்று எத்தனை தொடர்ந்த நினைவு ஏற்பட்டாலும் அது உண்மையறிவால் இது வெள்ளியல்ல என்ற மறுப்பிற்கு உட்படுமானதால் இது பாவனையாகாது. உண்மைநிலை அறிவு திடப்பட்டால் அது பாவனையாகும். உலகின் தோற்றம் மெய்யானதல்ல என்ற நினைவு, மறுப்பேற்படாமல் தொடர்ந்து நிலைத்திருப்பதால் அது பாவனை என்கிறான் முனிகுமாரன்.*

निदर्शनं त्वत्र चेदं मञ्जगद् दृष्टमेव ते ।
इमं शैलं परिक्रम्य चैहि पश्याव संप्रति ॥ ८३ ॥
इत्युक्त्वा नृपतिं हस्ते गृहीत्वा परिचक्रमे ।
परिक्रम्य गण्डशैलं राज्ञा सह समेत्य तु ॥ ८४ ॥
पुनः प्राह महासेनं मेधावी मुनिनन्दनः ।

இதற்கு உதாரணம் நீ பார்த்த என் உலகமே. இந்த மலையைச் சுற்றிவந்து இப்போது காண்போம். எனக்கூறி முனிகுமாரன் அரசனைக் கைத்தலம்பற்றி சுற்றிவந்தான். மஹாஸேனனைப் பார்த்துக் கூறினான்.

राजन् दृष्ट एव शैलः पादगव्यूतिमात्रकः ॥ ८५ ॥
दृष्ट एवास्य गर्भे ते लोकः सुविततः स्फुटः ।
एव जाग्रदुत स्वप्नः सत्यो मिथ्यात्मकोऽपि वा ॥ ८६ ॥
शैललोके यद् दिनैकं तदत्र द्वादशार्बुदाः ।
वत्सरास्त्वनुभूतास्ते सत्यासत्ये विवेचय ॥ ८७ ॥

அரசே இந்த மலையைச்சுற்றிப் பார்த்துவிட்டாய். கால் கவ்யூதியளவு (ஒரு கவ்யூதி 16000 முழம் 41/2 மைல்) சுற்றளவுள்ளது. இதல உள்ளே நன்கு மிக விரிந்த உலகைக் கண்டாய். இது விழிப்பா? கனவா? மெய்யா, பொய்யா? மலை உலகில் ஒருநாள், வெளியே 120 கோடி வருஷமானது. இதன் உண்மை – பொய்நிலைபற்றிச் சிந்தித்துப்பார்.

विवेचनं नास्य भवेत् स्वप्नयोर्भिन्नयोरिव ।
अस्मादेतद्विद्धि जगत् भावनामात्रसारकम् ॥ ८८ ॥
अभाव्यमानं चैतत्तु लीयेत क्षणमात्रतः ।
तस्मात् शोकं जहि नृपावेत्य स्वाप्नसमं जगत् ॥ ८९ ॥

ஒரு கனவைக்கொண்டு மற்றொரு கனவைப் பொய்யெனவோ மெய்யெனவோ கூறமுடியாததுபோல், இவற்றில் ஒன்றை ஸத்யமெனக்கொள்வது இயலாதது. அதனால் இந்த உலகம் பாவனையால் மட்டும் நிலைத்தது. அப்படி பாவனை செய்யாவிடில் கணத்தில் அது கரைந்து மறைந்துவிடும். அதனால் இந்த உலகை கனவிற்காண்பதுடன் சமமானதென உணர்ந்து சோகத்தை விடுவாய்.

स्वाप्नचित्रभित्तिभूतं स्वात्मानं संविदात्मकम् ।
दर्पणप्रतिमं मत्वा संस्थितोऽसि यथा तथा ॥ ९० ॥

जाग्रच्चित्रदर्पणं चावेह्यात्मानं चिदात्मकम् ।
परमानन्दितस्वान्तो भव शीघ्रं महीपते ।। ६१ ।।

इति त्रिपुरारहस्ये ज्ञानखण्डे
शैललोकदर्शनं नाम त्रयोदशोऽध्यायः ।।

**உனது ஆத்மா சித்துவடிவானவன். கனவாகிய சித்திரம் அமைவதற்காதாரமான சுவறு ஆகி இருப்பவன். இந்த உலகம் பிரதி பலிக்கும் கண்ணாடி போன்றவன். அந்த ஆத்மா கனவில் கண்டதால் மகிழ்ச்சியையோ, வேதனையையோ எப்படி அடையமாட்டானோ அப்படியே விழிப்பிலும். விழிப்புலகில் காணும் சித்திரத்திற்குச் சுவரும். கண்ணாடியும் சித்ஸ்வரூபமான ஆத்மாவே. அதனால் எவ்வித பாதிப்பும் அடையாதபடி ஆனந்தத்தில் திளைக்கும் மனத்தினனாய் விரைவில் ஆகி விடுவாய்.**

***கனவுக்காட்சி என்பது ஆத்மாவாகிய கண்ணாடியால் தெரியும் சித்திரம். அதனால் அக்காட்சியில் கண்ணாடியால் யாதொரு பாதிப்பும் ஏற்படாது. விழிப்பு நிலையில் உள்ள காட்சியும் அத்தகையதே. ஆத்மா ஞான வடிவமான கண்ணாடி போன்றது. அதில் தெளிந்த தோற்றம் தோன்றுமளவில் மெய்யே. அதன் ஆதாரமான கண்ணாடியின் ஸத்தியத் தன்மையே அதன் ஸத்தியத் தன்மையாகத் தோன்றுகிறது. இந்தத் தெளிவு ஏற்பட்டால் கலக்கத்திற்கு இடமில்லை என்கிறான் முனிகுமாரன்.***

***இவ்வாறு திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் சைல லோகக் காட்சி என்ற பதிமூன்றாவது அத்தியாயம்.***

# चतुर्दशोऽध्यायः

## பதினான்காம் அத்தியாயம்

इत्याकर्ण्य मुनिवचो विचार्य शुभया धिया ।
जगत्स्थितिं स्वाप्नसमां ज्ञात्वा शोकं जहौ द्रुतम् ॥ १ ॥
धैर्यमालंब्य निःशोको भूयोऽपृच्छन्मुनेः सुतम् ।

இவ்வாறு முனிவரின் சொல்லை நல்ல எண்ணத்துடன் சிந்தனை செய்து உலகின்நிலை ஸ்வப்ன உலகம் போலுள்ளதை உணர்ந்து அரசன் உடன் சோகத்தை விட்டான். சோகம் நீங்கியதும் தைரியத்தை ஏற்று மறுபடி முனிகுமாரனிடம் கேட்டான்.

मुनिपुत्र महाबुद्धे त्वं परावरदर्शनः ॥ २ ॥
न तेऽप्यविदितं किञ्चित् मन्ये स्यादिति लेशतः ।
पृच्छामि यदहं तन्मे कृपया वक्तुमर्हसि ॥ ३ ॥

பெரும் புத்தியுள்ள முனிகுமாரா! நீர், மேல் – கீழ் நிலையிலுள்ள தனைத்தையும் அறிந்தவர். நீர் அறியாதது லேச அளவில் கூட இல்லை என நினைக்கிறேன். நான் கேட்பதை விளக்கவேண்டும்.

भावनाप्रभवं ह्येतत् सर्वं वदसि तत्कथम् ।
मया भूयो भावितं च न बहिः सर्वथा भवेत् ॥ ४ ॥
त्वया तु भावनासिद्ध्या शैले लोकः प्रकल्पितः ।
अथापि देशः कालश्च युगपद् द्विविधः कथम् ॥ ५ ॥
तत्रासत्यमन्यतरत् कतमं तन्ममेरय ।

இவை அனைத்தும் பாவனையால் உண்டானது எனக் கூறுகிறீர். அது எப்படி? என்னால் எத்தனை பாவனை செய்யப்பட்டாலும் வெளியே பலர் கண்களில் படும்படி அப்படி ஒரு உலகம் ஏற்படாது. நீங்களோ பாவனையின் சித்தியால் பாறையில் உலகைத் தோற்றுவித்துள்ளீர்கள். இருந்தாலும் ஒரே நேரத்தில் இருவிதமான காலமும் தேசமும் எப்படி நேரும்? அவற்றில் ஒன்று மெய்யல்ல. எது அது? கூறுவீர்கள்.

इति पृष्टो मुनिसुतः प्रवक्तुमुपचक्रमे ॥ ६ ॥
संकल्पो भावना प्रोक्ता सिद्धाऽसिद्धेति सा द्विधा ।

सिद्धिर्विकल्पासंभेदः विकल्पस्त्वेकनिष्ठितेः ।। ७ ।।

இப்படிக் கேட்கப்பட்ட முனிகுமாரன் விளக்கத் தொடங்கினான். பாவனை என்பது ஸங்கல்பம். அது ஸித்தா அஸித்தா என இருவகை. ஸித்தா என்பது குழப்பமில்லாதது. குழப்பம் இரண்டில் ஒன்று தான் உண்மை என்ற பிடிவாதத்தால் ஏற்படுகிறது.

*காலமும் தேசமும் ஒரேவிதம் தான் இருக்க முடியும். ஒருவனுக்குப் பகல், மற்றவனுக்கு இரவாக இருக்க முடியாது. ஒருவனுக்கு எட்டடி அகலமும் எட்டடி நீளமும் உள்ள இடம் மற்றொருவனுக்கு அதைவிடக் குறுகியோ நீண்டோ இருக்க முடியாது. இப்படி இருக்கும் கால தேசங்களின் ஸ்திரமான தோற்றம், வெளிபிரபஞ்சத்தில் ஒருவிதம், பாறை உலகில் மற்றொரு விதம் என்று தோன்றினால் எதை நம்புவது? பாறை உலகம் செயற்கையாலானது, வெளி உலகம் இயற்கையாலானது. அதனால் வெளி உலகம் தான் உண்மையானதாக இருக்கும் என்ற ஐயமுள்ள அரசனுக்கு விளக்குகிறார்.*

*இது இப்படி இருக்கும் என்ற மனத்தளவில் கொண்ட வரையறை —ஸங்கல்பமாகும். இது இப்படி இருக்கும் என்ற எண்ணத்தின் ஊடே இது இப்படி இருக்காது என்ற எண்ணமும் ஏற்பட்டால் அது விகல்பம். விகல்பம் ஏற்பட்டால் எது உண்மை என்று தீர்மானிப்பதில் குழப்பம் ஏற்படுகிறது. விகல்பக் கலப்பில்லாத பாவனை ஸித்த பாவனை. வெளி உலகம் ஸத்யம் என்ற எண்ணம் நிலைத்து பாறை உலகம் மெய்யாக இருக்காதோ என்ற விகல்பம் இருந்தால் பாவனாஸித்தி ஏற்படாது. பாவனாஸித்தி இன்றி பாறை உலகத்தைப் படைக்க முடியாது. பாவனாஸித்தியுடன் படைத்த உலகம் பொய்யாகாது. அங்கு விகல்பம் தோன்றாது. மனத்தை ஸங்கல்பத்தில் நிலைநிறுத்தி விட்டால் விகல்பம் ஏற்படாததால் ஸிருஷ்டி நிலைக்கும். அப்போது எது உண்மை என்ற ஐயத்திற்கு இடமில்லை.*

ब्रह्मभावनया पश्य जातं जगदिदं ननु ।
एतत् सर्वैः सत्यरूपं भावितं सुदृढत्वतः ।। ८ ।।
तथा स्वसंकल्पभवे नास्ति कस्यापि भावना ।
विकल्पसंभेद एषोऽसिद्धा तस्माद्विभावना ।। ९ ।।

பிரும்மாவின், ஸித்த பாவனையால் இவ்வுலகம் ஏற்பட்டது. நன்கு நிலைத்திருப்பதால் எல்லோராலும் ஸத்ய வடிவுள்ளதாக பாவனை செய்யப்பட்டது (அதனால் எல்லோருக்கும் ஸத்யமாகக் காட்சி தருகிறது.) அதேபோல் தன் ஸங்கல்பத்தால் தோன்றிய உலகில் யாருக்கும் ஸித்த பாவனை கிடையாது. விகல்பக் கலப்பிருக்கும், அதனால் அந்த பாவனை

அஸித்தா ஆக நிலைப்பில்லாததாக ஆகிவிட்டது.

भावनायाः सिद्धिरत्र बहुधा संस्थिता भवेत् ।
जन्मना मणिना तद्वदौषधेन च योगतः ॥ १० ॥
तपसा मन्त्रसिद्ध्या च वरेण च भवेन्नृप ।
जन्मना ब्रह्मणः सा वै मणिना यक्षरक्षसाम् ॥ ११ ॥
औषधेन तु देवानां योगिनां योगतो भवेत् ।
तपसा तापसानां सा मान्त्रिकाणां तु मन्त्रतः ॥ १२ ॥
विश्वकर्ममुखानां तु वरप्राप्त्या हि साऽभवत् ।

பாவனை பல முறைகளில் ஸித்திக்கிறது. பிறப்பாலும், ரத்னத்தாலும், மூலிகையாலும், யோக முறையாலும், தவத்தாலும், மந்திரஸித்தியாலும், வரத்தாலும் ஸித்தி ஏற்படலாம். பிரும்மாவிற்குப் பிறப்பால் பாவனை ஸித்தித்தது. யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் ரத்நத்தால்; தேவர்களுக்கு மூலிகையால், (மூலிகையாலான அம்ருதத்தால்); யோகிகளுக்கு யோக முறையால்; தவசிகளுக்குத் தவத்தால்; மாந்திரிகர்களுக்கு மந்திரத்தால்; தேவச் சிற்பியான விசுவகர்ம முதலியவர்களுக்கு வரத்தால் கிடைத்தது.

संकल्पितं तथा भाव्यं पूर्वविस्मरणे सति ॥ १३ ॥
स्थिरं तावद्भवत्येव यावत्पूर्वं न हि स्मरेत् ।
एवमेव निर्विकल्पभावना यदि सुस्थिरा ॥ १४ ॥
अनिच्छया विकल्पस्य यावत्संभेदनं नहि ।
तावत्सा भावना सिद्धा साधयेद्वै महाफलम् ॥ १५ ॥

முன் உள்ளது அனைத்தும் மறந்து பின் சங்கல்பம் ஏற்பட வேண்டும். முன் இருந்த நிலை நினைவிற்கு வராதவரை அது ஸ்திரப்படும். முன்நிலை நினைவிற்கு வராதபடி வெகு நாட்கள் தொடர்ந்து ஸங்கல்பத்திலேயே விகல்பநிலை தோன்றாதபடி பாவனையை நன்கு நிலைக்கச் செய்துவிட்டால், அப்போது பாவனாஸித்தியால் எதனையும் ஸாதித்துவிடலாம். இவனது விருப்பமில்லாமலேயே விகல்பம் அதனுடன் கலக்காதவரை அந்த பாவனை ஸித்தி பெற்று பெரும்பயனை சாதித்துத் தரும்.

संभेदात्तु विकल्पेन न सिद्धा तव भावना ।
भावनां साधय क्षिप्रं यदि स्रष्टुं समीहसि ॥ १६ ॥

உனது பாவனை விகல்பக் கலப்பினால் ஸித்திக்கவில்லை. நீயும் படைக்க விரும்பினால் பாவனையைச் சீக்கிரமாக ஸித்தி செய்துகொள்.

शृणु राजन् देशकालद्वैविध्यं वदतो मम ।
अव्युत्पन्नोऽसि लोकस्य व्यवहारे ततस्तव ॥ १७ ॥
एतच्चित्रं भासते वै शृणु सम्यग् ब्रवीमि ते ।

அரசே! தேசமும் காலமும் இரண்டுவிதமாக வேறுபடுவதைப் பற்றிக் கூறுவதைக் கேள். உலகின் நிலை பற்றி நீ அறியவில்லை. அதனால் தான் இது உனக்கு விந்தையாகத் தோன்றுகிறது. நான் நன்கு விளக்குகிறேன்.

जगद्भावस्वभावोऽयं द्विविधत्वेन भासनम् ॥ १८ ॥
एक एव हि सूर्यस्य प्रकाशो द्विविधः स्थितः ।
दिवान्धानामन्धकारः इतरेषां तु भासकः ॥ १९ ॥
जलं मनुष्यपश्वादेः श्वासस्य प्रतिरोधकम् ।
मत्स्यादीनां बहिः श्वासप्रतिरोधो जले न हि ॥ २० ॥

உலகில் தோன்றியதன் இயல்பு இரு முரண்பட்ட விதங்களில் உணரக் கூடியதே. ஒரே சூரியனின் ஒளி கோட்டானுக்கு இருட்டாகவும் மற்றவர்க்கு ஒளியால் விளக்குவதாகவும் இருவிதமாகக் காண்கிறது. மனிதன் விலங்கு முதலியவைகளுக்கு ஜலம் மூச்சு விடுவதைத் தடை செய்யும். மீனுக்கு ஜலத்திற்கு வெளியே மூச்சுத் தடை; ஜலத்தில் அத்தடை இல்லை.

अग्निर्दहति मर्त्यादीन् तं भक्षयति तित्तिरिः ।
वह्निर्नश्यति तोयेन स जले ज्वलति क्वचित् ॥ २१ ॥
एवं सर्वे जागतास्तु भावाः द्वैरूप्यतः स्थिताः ।
एवं सेन्द्रियवृत्तान्ताः त्वन्ये केऽपि निरिन्द्रियाः ॥ २२ ॥
स्वभावतो विरुद्धा वै शतशोऽथ सहस्रशः ।

நெருப்பு மனிதர் முதலானோரை எரித்துவிடுகிறது. அதனைத் தித்திரிப் பட்சி தின்கிறது. நெருப்பு ஜலத்தால் அழிகிறது. சில இடத்தில் அது ஜலத்தின்மேல் எரிகிறது. (வடவானலம்)இப்படி நேர் எதிரிடையான இரு வடிவங்களில் உலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் காணப்படுகின்றன. ஜடமும் சேதனமுமான பொருள்கள் இப்படி இயல்பில் முரண்பட்டவைகளாக நூறு ஆயிரக்கணக்கில் காணலாம்.

अत्रोपपत्तिं वक्ष्यामि समाहितमनाः शृणु ॥ २३॥
एते हि चाक्षुषा भावाः चक्षुर्विकृतिमात्रकाः ।
न चाक्षुषादंशतोऽन्यत् दृश्यमस्ति क्वचित् बहिः ॥ २४॥

இதற்கு ஒரு சமாதானம் கூறுவேன் கேள். இவை அனைத்தும் கண்களால் உணரக்கூடியவை. கண்களின் பார்வை வேறுபட்டால் தோற்ற வேறுபாடு. பார்வை என்ற அம்சத்தை நீக்கிப் பார்க்கக்கூடிய உலகம் என்று வெளியில் வேறொன்றில்லை.

यथा पित्तप्रदुष्टाक्षो बहिः पीतं प्रपश्यति ।
यथा तैमिरिकोऽन्यस्तु पश्यत्येकं द्विधास्थितम् ॥ २५॥
एवं विचित्रदुष्टाक्षाः पश्यन्ति विविधं जगत् ।

பித்தத்தால் கண்கெட்டவன் வெளியில் எல்லாவற்றையும் மஞ்சள் நிறமாகப் பார்ப்பது போல், திமிரநோய்(காடராக்ட்) கண்ணுள்ளவன் ஒன்றையே இரண்டாகப் பார்ப்பது போல், பலவகைகளில் மாறுபட்ட கண்களுடையவர்கள் உலகைப் பலவிதமாகப் பார்க்கிறார்கள்.

अस्ति पूर्वसमुद्रस्य मध्ये कारण्डकाह्वयः ॥ २६॥
द्वीपस्तत्र जना भावान् रक्तान् पश्यन्ति वै सदा ।
एवं रमणकद्वीपे सदा पश्यन्ति वै जनाः ॥ २७॥
व्यत्यस्तमूर्ध्वाधरतः निखिलं भावमण्डलम् ।
एवमन्येषु द्वीपेषु विविधं भावमण्डलम् ॥ २८॥
जना नेत्रस्वभावेन पश्यन्ति खलु सर्वदा ।
तत्र तेषामन्यथा तु दृश्यते यदि कुत्रचित् ॥ २६॥
नेत्रं सुसाध्यौषधेन पश्यन्ति प्राग्वदेव हि ।
अतस्तु चक्षुषा यावत् दृश्यते जगतीतले ॥ ३०॥
तावद् भवेच्चाक्षुषोंऽशः पीतवत् पीतचक्षुषः ।

கிழக்குக் கடலின் இடையே காரண்டகம் எனும் தீவு உள்ளது. அங்குள்ளவர் எதனையும் சிவந்ததாகக் காண்கின்றனர். அப்படியே ரமணகத்தீவில் மக்கள் எதனையும் தலைகீழாகப் பார்க்கின்றனர். ஒருக்கால் யாருக்கேனும் இதற்கு மாறுபாட்டுத் தோன்றினால் அதனை வியாதி எனக்கொண்டு மருந்தால் அதனை நேராக்கி முன்போல் காண்கின்றனர். அதனால் கண்களால் பார்க்கப்படும் உலகம் அந்தந்த கண்களால் படைக்கப்பட்ட வடிவுள்ளது. காமலைக் கண்ணிற்கு எதுவும் மஞ்சளாகக் காண்பது போல்.

एवं घ्राणादीन्द्रियाणां अंशा गन्धादयोऽपि हि ॥ ३१॥
मानसाश्च मनोमात्राः तथैवाखिलजागताः ।
क्रमोऽप्यक्षस्वभावोत्थः ततः किञ्चिद्बहिर्न हि ॥ ३२॥

அப்படியே மூக்கால் உணரப்படும் மணம் முதலியவையும் மூக்கைப் பொறுத்தவையே. மனத்தால் நினைக்கப்படும் பொருள்கள் மன அளவில் அமைந்தவை. இப்படித்தான் உலகிலுள்ள அனைத்தும். காலத்தாலும் தேசத்தாலும் ஏற்படும் வரிசை இட அமைப்பு திசை முதலியவை அனைத்தும் அவனவனுக்குள்ளே உள்ளவையே. வெளியில் ஒன்றுமில்லை.

*பார்க்கும் கண்களை ஒட்டியே வெளித் தோற்றம். முகரும் மூக்கை ஒட்டியே வெளியில் உள்ள மணம். நினைக்கும் மனத்தை ஒட்டியே உலகைப் பற்றிய கல்பனை. இவை ஒவ்வொருவருக்கும் அவரது சரீர-மன அமைப்பை ஒட்டி மாறுபடலாம். பலர் ஒரே நிலையைப் பழக்கத்தால் உணரலாம். ஒரு முதிர்ந்த பெண்மணியிடம் அவளது பிள்ளைகள் அனைவரும் தாய் என எண்ணம் கொண்டுள்ளனர். இது பல ஆண்டுகளாக அப்படி எண்ணி எண்ணி வலுப்பட்டது. அவளைத் தாய் ஆகத்தான் அவர்களால் பார்க்க முடியுமே தவிர வேறு வகையில் பாவனை செய்ய முடியாது. அது வலிவடைந்த எண்ணத்தால் விளைந்த தோற்றம். அதேபோல் உலகில் மலையை எல்லோரும் மலையாகப் பார்ப்பதன் காரணம் அப்படி பாவனை செய்கிற பழக்கம் எல்லோருக்கும் வேரூன்றி நிலைத்திருப்பதே. கிழக்கு மேற்கு முதலிய தேசவரையும் நிமிஷம் மணி முதலிய காலவரையும் பாவனையால் நிலைத்ததே. ஒரு தனி மனிதனின் கண்ணோ காதோ பொதுவாகப் பிறருக்கு அமைந்துள்ளதைக் காட்டிலும் சிறிதாவது மாறுபட்டு அமைந்திருக்கும். அவன் உணரும் வடிவமோ மணமோ மற்றதோ சிறிதாவது மாறுபட்டிருக்கும். உண்மையில் எல்லோருக்கும் ஒரேவிதமாக புலன்களோ மனமோ அமைந்திருக்காது. உலகத்தை அவரவர் ஒவ்வொரு விதமாக உணர்கிறார்கள். அதனால் வெளியுலகத்திற்கு நிலைத்த தோற்றமோ நிலைத்த தேசகால வரையறையோ கிடையாது. காண்பவனின் நிலைக்கேற்பத் தோன்றுவதே உலகம். அதனால் வெளியில் ஒரு உலகம் இருக்கிறது என்பதைவிட அவனவனுக்குள்ளே அவனவனது உலகம் அடங்கியுள்ளதெனக் கொள்வதே பொருந்தும். நாம் காண்பதே அதன் கோலம். நாம் உணர்வதே அதன் நிலை. அப்படியாயின் வெளி உலகம் எப்படி உள்ளது? அதன் உண்மை நிலை என்ன? காண்பவன் காண்கிற அதன் நிலையைவிட அது வேறுபட்டதா? என்ற கேள்விக்கு முனிகுமாரன் பதில் கூறுகிறான்.*

शृणु राजन् बहिरिति यल्लोके भाति केवलम् ।
तदाद्यं सर्वजगतां जगत् चित्रस्य भित्तिवत् ॥ ३३॥
तस्य बाह्यस्य वक्तव्यं अपादानं ध्रुवं ननु ।
शरीरं स्यादपादानं नेतरद् भवितुं क्षमम् ॥ ३४॥

அரசே! சித்திரத்திற்குச் சுவர்போல் உலகில் வெளியில் தோன்றுகிறதெனக் கூறப்படும் உலகப் பொருள் அனைத்திற்கும் ஆதியான ஆதாரப் பொருள் இருக்கவேண்டும். வெளியில் தோன்றுமனைத்திற்கும் ஆதாரம் அவசியமல்லவா? உடல்தான் அதற்கு ஆதாரமாக இருக்கமுடியும். மற்றது ஆதாரமாக இருக்கமுடியாது.

*பார்க்கப்படும் பொருள் வெளியே இல்லை என்பதைப் பல உதாரணங்களால் நிரூபிக்கிறார். வெளியே உலகம் தோன்றுகிற தென்கிறோம். சித்திரம் தெரிகிறது. அது சுவர் எனும் ஆதாரத்தால் தோன்றுகிறது. சுவருக்குப் புறம்பட்டதாக அது தனித்துத் தெரிகிறது. சுவருக்கு வெளியே சித்திரம் தெரிவதுபோல் நமக்கு வெளியே உலகம் தெரிகிறதெனில் நம் சரீரத்திற்குப் புறம்பட்டு உலகம் தெரிகிறதெனப் பொருள். உலகில் உள்ள அனைத்துப் பொருளுமே நமக்கு வெளியேதான் தெரிகின்றன. வெளியே என்று கூறும்போது எதற்கு வெளியே என்ற அபாதானப் பொருளின் விளக்கம் தேவை. சித்திரத்திற்குச் சுவர் அபாதானம். அதுபோல் காட்சிப் பொருளான வெளி உலகிற்கு அபாதானம் எது என்ற பிரச்னை எழுகிறது. வெளியே உள்ளவை—குடம் வீடு முதலியவை அபாதானமாக முடியாது. அதுவும் காட்சிப்பொருளே. அதனால் நம் உடல்தான் அபாதானம் என்று கூறநேரும்.*

तस्यापि बहिराभासात् अपादानं कथं नु तत् ।
पर्वताद् बहिरित्युक्ते पर्वतो न बहिर्भवेत् ॥ ३५॥
यथा घटो भासते हि बहिस्तद्वच्छरीरकम् ।

அந்த உடலும் வெளியில் தோன்றுவதால் அது அபாதானமாக இருக்கமுடியாது. மலைக்கு வெளியே எனில் மலை வெளியில் இருக்காது. உடலுக்கு வெளியே எனில் குடம் வெளியில் தோன்றுவதுபோல் உடலும் காணப்படுகிறதே.

*நம் உடலும் வெளியே தோன்றுகிற பொருள்தானே. அரசரும், முனிகுமாரரும் இருக்கும் மலைக்கு வெளியே உலகம் உள்ளதெனில் அந்த உலகில் மலை உட்பட்டதா, உட்படாததா? மலையும் காணப்படுகிற உலகில் அடங்கியதே, அதற்கும் எது அபாதானம்? நம் உடலுக்கு வெளியே உள்ளதெனக்கொண்டு நம் உடல்தான் அதற்கு அபாதானம் எனில் நம் உடலும் நம்மால் காணப்படும் பொருளே! அதற்கும் அபாதானம் எது?*

भासकाद्बहिरित्येवं वक्तुं वापि न संभवेत् ॥ ३६ ॥
दीपसूर्यालोकबहिर्गतानां न हि भासनम् ।
अतस्तु भासकस्यान्तः भास्यमस्तीति युज्यते ॥ ३७ ॥

எது உணர்த்துகிறதோ அதற்கு வெளியில் எனக்கொள்ளவும் முடியாது. தீபம் சூரியன் இவற்றின் வெளிச்சத்திற்கு – இவற்றாலான விளக்கத்திற்கு அப்பாற்பட்டவை விளக்கம் பெறுவதில்லையே! அதனால் எது உணர்த்துகிறதோ அதற்குள்தான் உணரப்பெறும் பொருளும் இருக்கிறதென்பதுதான் யுக்திக்கேற்றது.

*உடல் அபாதானமாகாதெனில் உடலிலிருந்து வெளிப்பொருள் இருப்பதை உணர்த்துகின்ற சேதனனான ஆத்மாவே அபாதான மெனக்கொண்டு ஆத்மாவிற்கு வெளியிலுள்ள உலகம் எனக் கொள்ளலாமே எனில் இதிலும் ஒரு சங்கடம் உள்ளது. எது உணர்த்துகிறதோ அதற்குட்பட்டதே அதனால் உணர்த்தப்பெறுவதும். சூரியனின் ஒளி, சூரியனின் ஒளிப்பரப்பில் அடங்கியதையே விளக்கும். தீபத்தின் ஒளி, தீப ஒளிக்குட்பட்டதையே விளக்கும். அதேபோல் ஆத்மாவின் சேதனத் தன்மை ஆத்மசைதன்யத்திற்கு உட்பட்டதையே விளக்கும். அதற்கு வெளியே உள்ளதை அதனால் விளக்கமுடியாது. அதனால் ஆத்மாவிற்கு வெளியே உள்ள தொன்றை ஆத்மா விளக்காதாகையால் ஆத்மாவிற்கு உட்பட்டதே உலகம் எனக்கொள்ளத்தகும்.*

भासकं न तु देहादिः भास्यत्वात् पर्वतादिवत् ।
न सर्वथा यत्तु भास्यं भासकं तद्धि युज्यते ॥ ३८ ॥
भासकस्यापि भास्यत्वे भासकस्यानवस्थितिः ।
स्वस्यैव भासकत्वं च भास्यत्वं न हि युज्यते ॥ ३६ ॥

மலை முதலியவைபோல் மற்றொன்றால் விளக்கத்தக்கதாக இருப்பதால் உடல் முதலியவை வெளி உலகை விளக்கமுடியாது. எது எப்போதும் வேறொன்றால் விளக்கப்படுகிறதோ, அது மற்றொன்றை விளக்காது. வேறொன்றால்தான் விளக்கப்படுவதாயினும் தான் மற்றொன்றை விளக்கக்கூடுமேயெனில், நிலையின்மை ஏற்படும். தானே தன்னை விளக்கிக்கொண்டே மற்றொன்றையும் விளக்கலாம் என்பதும் பொருந்தாது.

*தீபத்தின் ஒளி வெளியே உள்ள பொருளை விளக்குகிறது. அதுபோல் உடல் உலகை நமக்கு விளக்காது. அது ஜடம், மலை போல், அதற்கு விளக்கம்தரும் சக்தி கிடையாது. மலைபோல் உடலும் விளக்கம்பெற மற்றொரு சேதனத்தை எதிர்பார்க்கிறது. எது மற்றொன்றால் விளக்கம் பெறுகிறதோ அது மற்றொன்றை விளக்காது. "தீபத்தின் ஒளி தீபத்தையும் விளக்குகிறது. வெளிப் பொருளையும் விளக்குகிறது. தன் ஒளியால்*

*விளக்கம்பெற்ற தீபம் வெளிப் பொருளை விளக்குகிறது" எனக்கொள்வது அறிவீனம். தீபம் எப்போதுமே விளக்கும் சக்தியற்றது. ஒரே பொருளிற்கு ஒளியாயும், விளக்கப்படும் பொருளாயும் இருக்கும் தன்மை பொருந்தாது. நான் உணர்கிறேன் எனும்போது உடலிலிருந்தும் வேறுபட்ட நானே உணர்பவன். தடித்த உடலும், ஆணும் கிழவனுமான நான் உணர்கிறேன் எனக்கொண்டு உடலும் உணர்வதில் பங்கெடுக்க முடியுமே என்ற கேள்வி எழும். திரி ஒளியைத் தாங்கும் வெண்கல தீபமும் தானும் விளக்குவதாகலாமே! இது தவறானது. வெண்கல விளக்கைத் தாங்கிநிற்கும் பலகையும், அதைத் தாங்கி நிற்கும் தரையும்கூட அப்போது விளக்காகிவிடக்கூடும். முற்றிலும் வேறுபட்ட இரு தன்மைகள் ஓரிடத்தில் சேராது. மூட்டையைத் தூக்குபவன் வேறு, மூட்டை வேறு. தானே தன் தோளில் ஏறிக்கொள்ளமுடியாது.*

अतस्तु भासकं शुद्धं भासकैकस्वरूपकम् ।
तत्र भारूपमेवेह पूर्णमेकरसात्मकम् ॥ ४० ॥
तेन व्याप्ता देशकालाः भासना तस्य पूर्णता ।

அதனால் உணர்த்தும் சேதனம் சுத்தமானது. மற்றதை உணர்த்துவதென்பதே அதன் சுயவடிவம். அது உணர்வுருவம்கொண்டது. எங்கும் நிறைந்தது. வேறு பொருள் கலப்பில்லாதது. அதனால் தேசமும்,காலமும் வியாபிக்கப்பட்டுள்ளது. எதனையும் விளக்குவதாகையால் (எங்கும் அது பரவியுள்ளமையால்)பூர்ணத்தன்மை பெற்றது.

अभारूपस्य चाभानात् भासकैकरसं हि तत् ॥ ४१ ॥
अन्तर्बहिर्वा यत् किञ्चित् भारूपोदरसंस्थितम् ।
अतस्तन्नापादानं स्यात् शृंगस्येव हि पर्वतः ॥ ४२ ॥

ஒளியாக இல்லாதது புலப்படாமையால் ஒளி உருவிலுள்ளதுடன் அது பேதமறக் கலந்திருக்கிறது. ஒளியின் பரப்பில் அடங்கியது உள்ளோ வெளியோ இருப்பினும் (மலையின் ஒரு பகுதியான)கொடுமுடிக்கு மலை அபாதானமாகாததுபோல் வெளிப் பொருளுக்கும் ஒளி அபாதானமாவதில்லை.

*கண்ணாடியில் கண்ணாடியினுள் காணும் பிரதிபிம்பம் தனித்து உணரப்பட்டாலும் 'கண்ணாடி அபதானம். மற்றொன்று அதன் மீதுள்ள காட்சிப் பொருள்' என்று பிரிக்கமுடியாது. பிரதிபிம்பத்தின் ஒவ்வொரு பகுதியிலும் கண்ணாடி பரவியுள்ளது. அதனால் கண்ணாடி அனைத்திலும் வியாபித்துள்ளது. இதைப்போல் சேதன ஒளி எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்துள்ளது. அந்த ஒளி வட்டத்திற்ககப்படாததெதுவும் புலப்படாது. புலப்படாமல் ஒன்றிருக்க முடியாது. அதனால் எல்லாமே அந்த சேதன*

ஒளிமயமே. மலை தன் கொடிமுடிக்கு ஆதாரம் என்பதில்லை. கொடிமுடியும் மலைதானே. தானே தனக்கு ஆதாரமாகமுடியாது.

एवंविधं हि भारूपं ग्रस्तसर्वप्रपञ्चकम् ।
भाति स्वतन्त्रतः स्वस्मिन् सर्वत्रापि च सर्वदा ॥ ४३ ॥
एतत्परा चितिः प्रोक्ता त्रिपुरा परमेश्वरी ।
ब्रह्मेत्याहुः वेदविदः विष्णुं वैष्णवसत्तमाः ॥ ४४ ॥
शिवं शैवोत्तमाः प्राहुः शक्तिं शक्तिपरायणाः ।
एतद्रूपादृते किंचिद् यदि ब्रूयुस्तदल्पकम् ॥ ४५ ॥

இந்த சித்சக்திதான் ஒளிவடிவில் உள்ளது. உலகனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டது. தானாகவும் எங்கிலும் எப்போதும் இதுதான் தோன்றுகிறது. இது பரசித் வடிவானது. திரிபுரா பரமேசுவரீ இவளே. இதனை வேதியர் பிரும்மா என்பர். வைஷ்ணவ நல்லோர் விஷ்ணு என்பர். சைவப் பெரியோர் சிவன் என்பர். சக்தியே அடையவேண்டிய பெருவீடு என்பவர் சக்தி என்பர். இந்த பரசித்தைத்தவிர மற்றதனைத்தும் காலதேசப் பகுப்பிற்குட்பட்டதே.

तया व्याप्तं तु चिच्छक्त्या दर्पणप्रतिबिंबवत् ।
तस्य भास्यकृतं भासकत्वं च न स्वतः स्थितम् ॥ ४६ ॥
भास्यं तु भाननिर्मग्नं आदर्शे नगरादिवत् ।
दर्पणे नगरं यद्वत् दर्पणान्नातिरिच्यते ॥ ४७ ॥
तथा चिति जगद्भाति यत्तत्रैवातिरिच्यते ।

கண்ணாடியால் பிரதிபிம்பம்போல் அந்த சித்சக்தியினால் உலகம் முழுவதும் வியாபிக்கப்பட்டுள்ளது. ஆனால் கண்ணாடியில் நகரம்போல் விளக்கப்படும் பொருள் ஒளியில் ஆழ்ந்துவிட்டது. கண்ணாடியிலுல்ள நகரம் எப்படிக் கண்ணாடியைவிட்டு வேறுபட்டதல்லவோ, அப்படியே தோன்றும் பொருளனைத்தும் சித்சக்தியில் தனிமையின்றி காணப்படுகிறது.

दर्पणात्मनि संपूर्णे निबिडे चैकरूपिणि ॥ ४८ ॥
यथा हि भिन्नं नगरं सर्वथा नोपपद्यते ।
तथा पूर्णे सुनिबिडे चैकरूपे चिदात्मनि ॥ ४९ ॥
जगत्सर्वात्मना नैव ह्युपपत्तिं समश्नुते ।

இடைவெளி இல்லாததும், நன்கு கெட்டியாக நெருக்கமுள்ளதும் எங்கும் ஒரேவிதமானதுமான கண்ணாடியில் அதைக்காட்டிலும் வேறுபட்ட நகரம் எப்படி உள்ளிருக்கமுடியாதோ, அதேபோல் நீக்கமற நிறைந்துள்ளதும்

ஒரேவிதமாயும் உள்ள சித்ஸ்வரூபத்தில் அதிலிருந்தும் வேறுபட்ட தனி உலகமிருப்பது பொருந்தாது.

आकाशस्त्ववकाशात्मा शून्यरूपत्वहेतुतः ॥ ५० ॥
द्वैतं जगत्प्रसहते सर्वत्रैव हि सर्वदा ।
सती चितिरशून्यात्मरूपिणी एकरसा कथम् ॥ ५१ ॥
द्वितीयलेशं प्रसहेत् आदर्शात्मवदञ्जसा ।

ஆகாயம் என்பது இடைவெளி. சூன்யமாயிருப்பதால் தன்னைக் காட்டிலும் வேறுபட்ட உலகைத் தனித்து எப்போதும் எங்கும் தாங்குகிறது. சித்சக்தி சூனியமல்ல. இடைவெளியின்றி நிறைந்த ஒன்று. ஒரேவிதமானதும்கூட, கண்ணாடிபோல் உள்ள அது எப்படி தன்னைக் காட்டிலும் வேறுபட்ட தொன்றைத் தாங்கமுடியும்?

*"ஆகாயம்போல் எங்கும் நிரம்பியது ஆத்மா, ஆகாசவத்ஸர்வகத: என்று கூறப்படுகின்றதல்லவா? ஆகாயம் நீக்கமற நிரம்பியதாயிருந்தும் தன்னுள் தன்னைவிட வேறுபட்ட உலகைக் தாங்குகிறது. அதுபோல சித்சக்தியும் தன்னைவிட வேறுபட்ட உலகைத் தாங்கியிருக்கட்டுமே" என்ற கேள்விக்கு விடை தருகிறார். தனித்து உலகம் தெரிவதால் இந்த சமாதானம் சரியானதாகத் தோன்றினாலும் ஏற்கத்தக்கதல்ல. ஆகாயம் இடைவெளியுருவானது. இடைவெளி எனும்போது சூன்யம் என்றாகும். அப்போதுதான் ஆகாயம் மற்றதற்கு இடம் கொடுக்க முடியும். இடைவெளியே அதன் வடிவமானதால் அதில் நெருக்கமில்லை. சித்சக்தி ஆகாயமும் மற்றதும் தன்னுள் விளக்கம்பெறுகின்ற முழு மூலப்பொருள். அது நெருக்கம்மிக்கதாக வியாபித்துள்ளது. அதில் இடைவெளியில்லை. தன்னைக்காட்டிலும் வேறுபட்ட பொருளும் அதனுள் கிடையாது. தனித்துத் தெரிவதெல்லாம் உபாதியால். நிறமற்ற சிறு ஸ்படிகமணியினுள் சுற்றியிருக்கும் மந்தாரைப்பூவின் செம்மை படர்ந்திருக்கிறது. அது படிகமணியின் இயற்கை நிற மல்ல. செந்நிறம் மணியினுள் ஊடுருவிப் பாய்வதற்கும் வாய்ப்பில்லை. அத்தனை கன நெருக்கமுள்ள பொருள் ஸ்படிகம். ஆனால் தெரிவது பிரதிபிம்பம். அந்த செவ்வொளி ஸ்படிக ஒளியைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. அந்த செவ்வொளியைத் தருவதாக ஸ்படிகத்தில் பிரதிபிம்பித்திருக்கும் செந்நிறப் பூவும் அதனுள் நுழையாது. இருந்தாலும் நுழைந்துவிட்டதுபோல், செவ்வொளி ஸ்படிகத்தின் இயற்கையான ஒளியாய் தோன்றுவது போல் இருப்பது உபாதியால் அல்லவா? அதுபோல்தான் சித்சக்தியில் உலகமும் பிரதிபலிக்கிறது.*

*ஒரு சந்தேகம் எழலாம். கண்ணாடியின் பிரதிபிம்பம்போல் என்று கூறும்போது கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம் கண்ணாடியினுடையத-ல்லவே. வெளியே உள்ள பொருளின் பிரதிபிம்பமல்லவா? அப்போது கண்ணாடியைக்காட்டிலும் வேறுபட்டதான பிம்பப்பொருளைக் காண்கிறோமல்லவா? அதுபோல் சித்சக்தியில் பிரதிபிம்பமாகத் தோன்றும் உலகம் வெளியிலிருக்கத்தான் வேண்டும். அது சித்சக்தியைக்காட்டிலும் வேறுபட்டதாகத்தான் இருக்கவேண்டும். அதனால் சித்சக்தியும் உலகமும் வெவ்வேறானதே, ஒன்றல்ல என்று ஆக்ஷேபத்திற்கு இனி விடையளிக்கிறார்.*

तस्मादादर्शवत् संवित् स्वातन्त्र्यभरवैभवात् ॥ ५२॥
भासयेदद्वितीये स्वे रूपे सर्वं चराचरम् ।
निमित्तोपादानहीनं तद् द्वितीयमतिचित्रितम् ॥ ५३॥

அதனால் கண்ணாடிபோல் சித்சக்தி தனது ஸ்வாதந்திரிய நிறைவின் பெருமையால் இரண்டென்று ஒன்றில்லாத தன் வடிவில் நிமித்த காரணமும் உபாதான காரணமுமில்லாமல் ஒன்றுக்கொன்று மாறுபடும் விசித்திரமான இரண்டாவதாகக் தோன்றும் சர அசரங்களடங்கிய உலகைத் தோற்றுவிக்கிறது.

यथाऽनेकरूपविधे भासमानेऽपि दर्पणे ।
एकत्वं भासते स्पष्टं अविशेषाददूषितम् ॥ ५४॥
तथा विचित्रे जगति भासमानेऽप्यनेकधा ।
अनुसंधानसंसिद्धमेकं दोषविवर्जितम् ॥ ५५॥

பலவித வடிவங்களும் கண்ணாடியில் தோன்றிக்கொண்டிருந்த போதிலும் அந்தக் கண்ணாடியில் கண்ணாடியைத் தவிர வேறில்லாத 'ஏகம்' என்ற நிலை வேறு எதனாலும் பாதிக்கப்படாதவாறு ஸ்பஷ்டமாக தோன்றுவதுபோல் விசித்திரமான பல உருவங்களுடன் இவ்வுலகம் தோன்றிக்கொண்டிருந்தபோதிலும் அதுதான் இது என்ற அனுஸந்தானத்தின் காரணமாக மறுப்பில்லாத சித்தின் தனித்தன்மை புலப்படுகிறது.

*சித்சக்தி பிற வஸ்துவை நாடாமல் தனித்தியங்கும் சக்தி உள்ளது. உலகில் உள்ளதனைத்தும் தான் இருக்கவும் துலங்கவும் மறையவும் மற்றொன்றின் உதவியை நாடும். சித்சக்தி அப்படியல்ல. எக்காலத்திலும் எந்த இடத்திலும் இதன் ஸ்வதந்திரத்தன்மை பாதிப்புறாதது. தன்னிடம் பல உருவங்களில் வேறுபடும் பல பொருள்களை க்ஷணத்திற்கு க்ஷணம் மாறுபடுவதாகக் காட்டும் வல்லமை படைத்தது. அப்படிப் பலவற்றைக் காட்டுவதால் அதன் சுய உருவத்தில் ஒரு மாறுபாடும் ஏற்படுவதில்லை.*

*கண்ணாடியில் பல நிறங்களில் பல வடிவங்கள் சிறிதும் பெரிதுமாக மாறி மாறித் தோன்றினாலும் கண்ணாடி பல பொருள்களாக மாறாமல் ஒன்றாகவே இருப்பது போலாகும்.*

*எந்த மாற்றமும் வடிவமும் நிமித்த காரணத்தையும் உபாதான காரணத்தையும் எதிர்பார்ப்பதைக் காண்கிறோம். மண் குடமாக மாறக் குயவன் குயவனின் தடி, சக்கடை முதலிய நிமித்த காரணங்களையும் மண் ஆகிய உபாதான காரணத்தையும் எதிர்பார்த்துத்தான் குடமாக மாற முடிகிறது. அதனால் குடமாக ஒன்று தானே தோன்றமுடியாது. அது பரதந்திரம். ஆனால் சித் சக்தி இந்த உலகமாகக் காட்சி தரவோ காண்பதை மறைக்கவோ நிமித்த – உபாதான காரணங்களை எதிர்பார்ப்பதில்லை என்பதனால் இது ஸ்வதந்திரம். நடு நடுவே வேறு வேறாகத் தோன்றினாலும் அதுதான் இந்தத் தோற்றத்திலுள்ளது என்ற இடையறாத அனுஸந்தானம் இருப்பதால் தோற்றங்களின் போலித்தன்மையும் சித்சக்தியும் உண்மை நிலையும் நன்கு புரிகிறது.*

*விழிப்பு நிலையில் ஒன்றை உணர்பவன் கனவில் இதற்கு நேர் மாறானதொன்றை உணர்கிறான். விழிப்பிலிருந்த தனக்கும் கனவிலிருந்த தனக்கும் இருக்கும் தொடர்பை வெளிப்படையாக உணர்வதில்லை. எனினும் விழிப்பில் இதனை இவ்வாறு கண்ட நானே கனவில் இதனை அதுவாக அவ்வாறு கண்டேன்" என்ற தொடர்பைக் காட்டும் எண்ணமும் (அனுஸந்தானம்)அவனுக்கு ஏற்பட்டு அதனால் விழிப்பிலிருந்த நானே கனவையும் கண்டவன் என்று நிச்சயிக்க முடிகிறதல்லவா? அதுபோல் வெறும் கண்ணாடியாக இருக்கும் நிலையிலும், பிரதி பிம்பங்களைக் காட்டி வெவ்வேறு அசைவுகளைப் பிரதிபலிக்கும் நிலையிலும், கண்ணாடி மாறுபாடின்றி ஒன்றாகத்தான் இருக்கிறது என்ற அனுஸந்தானம் ஏற்படுகிறது. அதுபோல் சித்சக்தியிலும் அனுஸந்தானம் தொடர்கிறது. கண்ணாடி உதாரணத்தில் கண்ணாடிக்கு வேறு வேறாகக் காட்சிபெற பிரதி பிம்பம் தேவை என்பதுபோல் சித்சக்திக்கும் வெவ்வேறான உலகைக் காட்ட வேறொன்று தேவை இருக்குமோ என்ற ஐயம் நீங்க வேறு உதாரணத்தைக் கொண்டு விளக்குகிறார்.*

राजन् स्वात्मनि संपश्य मनोराज्यदशास्थितिम् ।
अनेकवैचित्र्यवपुरपि चैतन्यमात्रकम् ॥५६॥
सृष्टौ वा प्रलये वापि निर्विकल्पैव सा चितिः ।
प्रतिबिंबस्य भावे वाऽप्यभावे वेव दर्पणः ॥५७॥

அரசே! உம்மிடத்தில் மனோராஜ்ய நிலையை ஊன்றிப்பாரும். அதுவும் பல வேறுபட்ட வடிவங்களைப் பெறுகிறது. எனினும் சித்சக்தியின் தோற்றமே அது. பிரதிபிம்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் கண்ணாடி எப்படி மாறுபடாமல் ஒன்றோ, அப்படியே ஸ்வதந்திரத்தன்மை காரணமாக சித் சக்தியும் ஒன்றே.

*நாம் ஒவ்வொருவரும் மனோராஜ்யம் காண்கிறோம். அது மனத்தின் எண்ணம் மட்டுமே. தான் உண்மையாக இருக்கும் நிலையை விட்டு முற்றிலும் வேறான நிலையில் தான் இருப்பதாக எண்ணிப் பார்த்துக்கொண்டிருப்பதே மனோராஜ்யம். தான் திடீரெனச் செல்வந்தனாகவோ அறிவாளியாகவோ ஆகிவிட்டதாகப் பகல்கனவு காண்கிறான். அதனையொட்டி வாழ்வின் பல நிலைகளைத் தன் சக்திக்கும் தேசகாலங்களுக்கும் ஸம்பந்தமின்றி அனுபவிக்கிறான். அவ்விதம் பகல் கனவில் – மனோராஜ்யத்தில் அவன் அனுபவிக்கிற பிற பொருள்களின் நேரிடைத் தொடர்பு இல்லாமலேயே, பிரதிபிம்ப வடிவில் அவை மனத்தில் தோன்றிப் பாதிப்பை விளைவித்து சுகதுக்கங்களைத் தருகின்றன. பிம்பமில்லாமலேயே பிரதிபிம்பம் தோன்றுவதை அங்கு காண்கிறோம்.*

*நமக்கு ஒரு சந்தேகம் ஏற்படலாம். "விழிப்பில் உணர்ந்தவற்றால் ஆழ்மனத்தில் ஏற்பட்ட எண்ணப் பதிவு (வாஸனை – ஸம்ஸ்காரம்)கனவில் நாம் காண்பவற்றின் அடிப்படையாக அமைவதைக் காண்கிறோம். அதுபோல் மனராஜ்யத்திலும் இப்படி ஒரு எண்ணப்பதிவு காரணமாக இருக்கலாம். ஆகவே இதுவும் காரணத்துடன் தோன்றுவதே. ஸ்வதந்திரத் தோற்றமல்ல' என்ற சந்தேகம் தோன்றும். இந்த எண்ணப்பதிவு பின்தோன்றும் மனோராஜ்யத்திற்கு உபாதானகாரணமாகவோ நிமித்த காரணமாகவோ ஆக வழியில்லை. அதனால் சித்சக்தி பிம்பங்களின் தேவையின்றியே ஸ்வதந்திரமாக உலகத்தோற்றத்தைத் தன்னிடம் காட்டுகிறது. சித்சக்தி தேசத்திற்கும் காலத்திற்கும் கட்டுப்பட்டதல்ல. இவற்றால் மாறுபடுவதுமல்ல. அதனால் ஒரே காலவரை இருவித ஸங்கல்பங்களால் இரண்டுவிதமாக – குறுகியதாகவோ நீண்டதாகவோ காணலாம். தேசவரையும் அப்படியே. அதனால் ஒரே சமயத்தில் பாறைக்குள்ளிருந்த தேசகாலவரைகளுக்கும் வெளியே உள்ள தேசகாலவரைகளுக்கும் வேறுபாடு ஏற்படுவதென்பது ஸாத்தியமே. வெளிப்புற ஸ்ருஷ்டி அனைத்தும் காண்பவனின் ஸங்கல்பத்திற்கு ஏற்றவாறு அமையக்கூடியவை. நிலைத்த தன்மை படைத்தவை அல்ல. சித்சக்தி ஒன்றே உண்மை.*

*ஸ்ருஷ்டி கல்பனை என்று கொள்வோம். மாறுபாட்டிற்கிட மில்லாத உண்மையான சித் சக்தியிலிருந்து மாறுபாட்டையே தன்மையாகக் கொண்ட பொய்யான உலகம் தோன்றுமா? காரணத்தின் தன்மைகள் காரியத்திலும்*

*பிரதிபலிக்கும் என்பார்களே! என்ற கேள்வி எழும். அதற்கு விடையாக நிர்விகல்பமான சித்திலிருந்து விகல்ப வடிவான உலகத் தோற்றம் வரும் வகையைக் காட்ட, ஆகமங்கள் கூறும் 36 தத்துவங்களின் தோற்றுவாய் வரிசையை விளக்குகிறார்.*

एवंविधैक रूपापि चितिः स्वातन्त्र्यहेतुतः ।
स्वान्तर्विभासयेद् बाहयं आदर्शे गगनं यथा ॥ ५८॥
एषा हि प्रथमा सृष्टिः अविद्या तम उच्यते ।
पूर्णस्यांशेनेव भानं बाह्याभासनमुच्यते ॥ ५६॥

இத்தன்மையுள்ளதாகவும் ஒரே வடிவம் கொண்டதாயுமுள்ள சித்சக்தி தனது ஸ்வதந்திரத்தன்மை காரணமாகத் தன்னுள் வெளியுலகைக் கண்ணாடியில் ஆகாசத்தைப் போல் தோற்றுவிக்கிறது. இந்த வெளிப் பொருள் தோற்றத்திற்கான இயக்கமே ஸ்ருஷ்டியின் துவக்க நிலை. இதனை அவித்யை – தமஸ் என்பர். பூர்ணமான தொன்று பகுதி பகுதியாகத் தோன்றுவதை வெளிப்பொருள் தோற்றம் என்பர்.

*கண்ணாடியில் ஆகாயம் பிரதிபிம்பிக்கிறது. அதுபோல் சித் சக்தியில் வெளி உலகம் பிரதிபிம்பிக்கிறது. கண்ணாடி ஜடமானதால் ஆகாயத்தை பிரதிபிம்பிக்க ஆகாயத்தை எதிர்பார்க்கிறது. சித்சக்தி பூர்ண சேதனமானதால் பிரிதிபிம்பிக்க வெளியில் உலகின் இருப்பை எதிர்பார்க்கவில்லை. எப்படி பிம்பமின்றி வரும் என்ற கேள்விக்கிடமில்லை. சித்தின் ஸ்வதந்திரத்தன்மை அத்தகையது. இந்த வெளிப்பொருள் தோற்றம் உண்மையான சித்சக்தியை அறிய முடியாமல் செய்கிறது. கண்ணாடியில் பிரதிபிம்பிக்கும் அழகிய பொருள்களின் தோற்றத்தில் மயங்கி அது கண்ணாடிதானே என்ற அறிவின்றி, மகிழ்ச்சியடைகிறான். கண்ணாடி எனக் கண்டானேயானால் மகிழ்வதற்கில்லை. அவன் காட்சியைக் கண்டு மகிழ்கிறான். காட்சிக்கு ஆதாரத்தைக் காணவில்லை. இது ஒரு முழு அறியாமையல்ல. செவ்வனே அறியாதநிலை இது. அதனால் அறியாமை என்று கூறாமல் காட்சியின் உண்மைநிலை உணராமை என்ற பொருள் படும்படி அவித்யையென்று பெயரிட்டுள்ளனர். அதுபோல் இருட்டில் பொருள் தெரிவதில்லை. அதனால் நாம் பொருளைக் காண்பதில்லை. பொருள் தெரியாததற்காகவும் நாம் காணாததற்காகவும் பொருள் அங்கு இல்லாமற்போவதில்லை. அதுபோல் சித்சக்தியை நாம் காணாததற்காக சித்சக்தி இல்லாமற் போக வில்லை. சித்சக்தியைக் காண முடியாதபடி வெளிப்பொருள் தோற்றத்தின் அழகு வலிமை நம்மை மறைக்கிறது. இருள் மறைப்பதுபோல். அதனால் இதனை தமஸ் – இருள் என்றும் குறிப்பிடுவார்.*

*மனிதன் முழுமையானவனாயின் அவனது கை கால் முதலிய உறுப்புகள் தனித்து உருப்பெற்றுப் பகுதி பகுதியாக (அம்சமாக)க் காண்கின்றன. இது கை, இது கால் எனத் தனித்துப் பெயர் பெறுகின்றன. ஆனால் சித்சக்தியின் பல்வேறு அம்சங்களாகப் பல பொருள்கள் தோன்றி-னாலும் அவற்றிலுள்ள சித்சக்தி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பதால் பகுப்பிற்கு உட்படுவதல்ல. ஆனால் ஏதோ ஒரு மறைப்பு (அவித்யை) காணப்படுகிறது. இப்படி ஒன்றாக இருந்து பலவாறாக வெளிப்பொருளாகக் காட்சியளிப்பதும் சித்சக்தியின ஸ்வதந்திரத்தன்மையின் விளையாட்டே. இந்த விளையாட்டை சக்தி, கிரியா, விமர்சம் முதலிய பல பெயர்களால் குறிப்பிடுவர். பிரளயத்திற்குப் பின்னரும் ஸ்ருஷ்டிக்கு முன்னரும் ஸ்வஸ்வரூபமாக –சுய உருவில் இருந்த சித்சக்தியானது ஸ்ருஷ்டிமுதல் பிரளயம்வரை விமர்சரூபமாக – விளக்கம் கொண்டு பல பகுப்புகளுக்கு உட்படுத்திக்கொண்டது போலுமிருந்து சுய உருவிலும் யோகிகள் உணர்விற்குப் புலப்படுகின்றது.*

पूर्णाहंभाव विच्छेदात् अनहंभावरूपता ।
एषैवाव्यक्तमित्युक्ता जडशक्तिश्च कथ्यते ॥ ६० ॥

(இந்த படைப்பின் முதல்நிலை) எங்கும் நீக்கமற நிறைந்திருந்த சித்சக்தி துண்டாடப்பெறுவதால் நான் என்ற சித்தின் நிலை நீங்கியதாக ஆகிறது. இதனை அவ்யக்தம் என்பர். ஜடசக்தி எனவும் கூறுவதுண்டு.

*மனிதன் நான் என்ற எண்ணத்தை உடல் முழுவதும் பரவிநிற்பதாக உணர்கிறான். உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வுரை தோல்மூடிய பகுதிகளனைத்திலும் இந்த நான் என்ற எண்ணம்பரவி நான் என்ற சொல்லிற்குப் பொருளாகிவிடுகிறது. இது பகுப்பிற்குட்பட்ட 'நான்' என்ற எண்ணம். இதனை அஹம்பாவம் – அஹங்காரம், பரிச்சின்ன அஹம்பாவம் என்பர். உலகனைத்திலும் விமர்ச நிலையில் பரவிநிற்கும் சித்சக்தியின் நான் என்ற எண்ணம் எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பதால் பூர்ண அஹம்பாவம், பூர்ண அஹங்காரம், பராஹந்தா எனக் குறிப்பிடப்படுகிறது. ஸ்ருஷ்டிக்கு முன் இது தனித்து நின்றதால் பிரகாசமாக இருந்தது. பராஹந்தா என்ற சித்சக்தியின் ஆதாரத்தில் பரிச்சின்ன அஹம்பாவமாகிற பல பொருள்தோற்றம் தொடங்கும்போது பராஹந்தையும் ஸ்பஷ்டமாகத் தெரியாமல் 'பிரகாசம்' ஆக இருந்த நிலையும் தோன்றாமல் விமர்சநிலையில் பல பொருள்கள் தனித் தனியாகவும் தோன்றாமல் இரண்டும் கெட்டான் நிலையில் இருக்கும் நிலையே இந்த அவ்யக்த நிலை. பிரளயத்திற்கு முன்னிருந்த நிலை நிர்விகல்ப நிலை. அது பேத உணர்விற்கு அப்பாற்பட்டது. அதுவே பேத*

*உணர்விற்கிடமான ஸ்ருஷ்டியைத் தொடங்கும்போது, வேதாந்திகள் மாயை எனவும், சாக்தர்களும் ஸாங்கியர்களும் மூலப்ரகிருதி எனவும் அவ்யக்தம் எனவும் குறிப்பிடும் நிலை ஜடசக்தி என இங்கு குறிப்பிடப் பெறுகிறது. ஜடமான இந்த உலகத்தின் மூலநிலை.*

*'சித்சக்தி: சேதனாரூபா ஜடசக்தி : ஜடாத்மிகா' என இந்த ஸ்ருஷ்டிக்கு முன்னும் ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலும் சித்சக்தியில் ஏற்படும் பலவிளக்க நிலைகளை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்திலுள்ள இந்த நாம வரிசை விளக்குகிறது. பராஹந்தா நிலையிலிருந்து பரிச்சின்ன – (பகுப்பிற்குட்பட்ட) அஹம்பாவ நிலைக்கு சித்சக்தி இறங்குவதை இது விளக்குகிறது. இதனையே பராப்ருகிருதி என கீதை 7வது அத்தியாயத்தில் 4–5 சுலோகங்களில் கண்ணன் குறிப்பிடுகிறார். "பூமி: ஆப: அநலோ வாயு: கம், மநோ – புத்திரேவச. அஹங்கார இதீயம்மே பிந்நா ப்ரகிருதிரஷ்டதா" என. இந்த பராப்ரகிருதியாகிய ஈசுவரரின் சித்சக்தியே அஹங்காரம் புத்தி மனம் பஞ்ச பூதங்கள் என்ற வரிசையில் உலகமாக மாறவிருக்கும் ஜடசக்தியின் மூலதத்துவம். இதனை சிவ தத்துவம் வித்யா தத்துவம் ஆத்ம தத்துவம் எனப் பிரித்து விளக்குகிறார்.*

या चितिश्चात्र विच्छिन्नाभासिनी बहिरात्मनः ।
शिवतत्वमिति प्रोक्ता शक्तिस्तद्भासनं भवेत् ॥ ६१ ॥

இந்த படைப்புத் தொடக்கத்தில், ஆத்ம தத்துவத்திற்கு வெளியே சித்சக்தி துண்டாடப் பெற்றதாகத் தோன்றுவது சிவ தத்துவம் எனப்படும். அந்த துண்டாடப் பெற்ற சித்சக்தியில், தான் என்ற எண்ணத் தோற்றம் சக்தி தத்துவம் எனப்படும்.

*பரசிவம் பராசக்தி என்று பேதமற்று நிர்விகல்பமாக இருந்த சித்சக்தி, வேறுபாட்டை அடைய எண்ணி, வேறுபாட்டை ஏற்கத்தொடங்கிய நிலை சிவதத்துவம். ஒரே கடலாக இருந்ததில் அலைகள் ஏற்படத் தொடங்குமுன் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்ட பல அலை நிலைகளைப் பெறத் தொடங்கிய நிலை போல் இதனைக் கொள்ளலாம். உருவமும் பெயரும் அடையாத நிலையில் பிரிவு மாத்திரம் தோன்றிய நிலை இது. இந்த சிவதத்துவம் ஒவ்வொன்றிலும் முன்னிருந்த பூர்ணாஹந்தா மாறி தனித்தனியாக 'நான்' என்ற உணர்வு சக்தி தத்துவமாகும். சித்தே சிவம், சித்தின் அஹந்தையே சக்தி. உண்மையில் இந்த சிவசக்தி தத்தவத்தினுள் வேறுபாடில்லை.*

बहीरूपं महाशून्यं कल्पितं यत् तदेव तु ।
अहंभावाच्छादनेन सदाशिवमयं स्मृतम् ॥ ६२ ॥

இப்படித் துண்டாடப் பெற்ற பல சித்சக்திகளாக வெளித்தோன்றியநிலை ஸதாசிவ தத்துவமாகும். அது உருவமும் பெயருமற்றது. இது தனது அஹந்தையை ஜடப்பொருளின்மேல் பரப்பி மறைக்கும்.

*சிவதத்துவமும் சக்தி தத்துவமும் மேலும் மாறுகின்றன. ஜகத்தென்ற ஜடப்பிரகிருதி தோன்றுவதற்கான – ஜகத்தாகிற சித்திரம் தோன்றுவதற்கான ஆசிரயமாக – பர ஆகாசமாக –அதனால் சூன்யமாகக் காணும் நிலை ஸதாசிவ தத்துவம். சிவசக்தி தத்துவங்களாக சித்து வடிவமாக மட்டுமிருந்த நிலை பின்னர் உருவமும் பெயருள்ள ஜட ஜகத்தாகத் தோன்ற முற்படும் நிலை. நான் இந்த உலகமாக மாற இருக்கிறேன் என்ற ஸங்கல்ப நிலை. அது இது என்ற விகல்பம் தோன்றுமுன் 'நான்' ஆனது அது இது என்றதற்கெல்லாம் (இதம் என்ற நிலை) ஆசிரயமாகத் தன்னை ஆக்கிக்கொள்ளும் நிலை. அதுவும் இதுவும் வெளிப்படாத நிலை. "அது இது" இவற்றின்மேல் "நான்" மூடி மறைத்து நிற்கும் நிலை "அது இது" ஜடமாக ஆகவிருக்கும் உலகம். அது இன்னும் வெளிப்படவில்லை.*

तदेव जडमुख्यत्वे ईश्वराख्यं प्रचक्षते ।
अनयोः संवेदनं तु भेदाभेदविमर्शनम् ॥ ६३ ॥
शुद्धविद्येति संप्रोक्तं एतावत् शुद्धमुच्यते ।
भेदशक्तेरप्ररूढ्या चाभेदात्मावभासनात् ॥ ६४ ॥

**அதே ஸதாசிவ தத்துவம் ஜடத்தன்மை வெளிப்பட்**டுள்ள நிலையில் ஈசுவர தத்துவமெனப்படும். சித்தன்மை, ஜடத்தன்மை என்பதன் வேறுபாட்டு உணர்வும், வேறுபாட்டினிடையே ஒற்றுமையின் உணர்வும் சுத்த வித்யை எனப்படும். பேதசக்தி நிலைக்காததாலும் வேறுபாடற்ற ஆத்மா துலங்குவதாலும் இந்த ஐந்து தத்துவங்களும் சுத்த தத்துவங்கள் எனப்படும்.

*'நான்' பலவாக மாறுவேன் என்ற ஸங்கல்பம், ஸதாசிவ தத்துவம், பலவாக மாறத் தொடங்கியதும் அந்த 'பல'வும் ஒரே பொருளாயினும், ஒன்றில் 'நான்' எனவும் 'நான்' ஐத் தவிர மற்றவற்றில் இது எனவும் எண்ணமும் (விகல்பமும்) தோன்றத் தொடங்கின. சற்றுச் சிந்தித்தால் இந்த விகல்பம் மேல் எழுந்த வாரியாக உண்டாகி இருப்பது புலப்படும். ஆக பேதம் மேலெழுந்த வாரியாகவும் அபேதம் ஊன்றிப்பார்த்தால் கிடைப்பதாகவும் உணரும் நிலை. இதனை சுத்த வித்யா – பிரித்தும் ஒன்றாகவும் உணரும் தத்துவமிது. சித்சக்தி ஒன்றே என்ற அடிப்படை நிலையில் மாறுபாடின்றி, சித் வேறு ஜடம்வேறு என்ற மேலெழுந்த வாரியான பிரிவும் காணப்படும்வரை உள்ள இந்த ஐந்தும் சுத்த தத்துவம் என்றழைக்கப்படும்*

*இனி சுத்தா சுத்த மிச்ரதத்துவம் என்ற வகையில் உள்ள தத்துவங்கள் விளக்கப்படுகின்றன.*

अथ चित्स्वातन्त्र्यभरात् प्ररूढे भेदभावनम् ।
जडशक्तिर्धर्मिभाव चितिर्धर्मात्मतां ययौ ॥ ६५ ॥
तदा सा जडशक्तिस्तु मायातत्त्वं प्रचक्षते ।

சித்தின் ஸ்வதந்திர சக்தியின் மிகுதியால் பேதபாவனைஊன்றி நிலைத்து ஜடசக்தி மேம்பட்டு சித்சக்தி அதற்குள் தன்மையாக அடங்கி ஜடசக்தியாகவே வெளித்தோற்றம் பெறுவது மாயாதத்துவம் எனப்படும்.

*சித்சக்தி பலவாக மாறத் தொடங்கியதும், அது இது என்ற வேற்றுமை உணர்வு வலுப்படுகிறது. அந்த வேற்றுமைக்கு ஆதாரமான ஜடசக்தி முக்கியமானதாகி, அதனுள் தன்மையாக சித்சக்தி அடங்கிவிடும் நிலை ஏற்பட்டது. இது மாயை எனும் தத்துவ நிலை. எது எப்படி இல்லையோ அப்படித் தோன்றுவதை மாயை என்பர். எங்கும் பரந்து தனித்து நிற்கும் சித்சக்தி அடங்கிப் பிரிந்து காணப்படுவதும், பொய்யான ஜடத்தோற்றம் நிலைத்தது போல ஆகித் தானே மெய்யெனக் காட்டுவதுமான நிலை இது.*

माया विभेदबुद्धिस्तु भेदप्रचुरभावनात् ॥ ६६ ॥
भेदप्रचुरसंवीता चितिः संकुचितात्मिका ।
पञ्चकञ्चुकसंव्याप्ता पुरुषत्वं प्रपद्यते ॥ ६७ ॥

மாயை என்பது இதுவேறு அதுவேறு என்ற வேறுபாட்டுணர்ச்சியாகும். இந்த வேறுபாடு மிகுந்து அதனால் சூழப்பட்ட சித்சக்தி. தான் குறுகியதாகி ஐந்து கோசங்களால் (உறைகளால்) மூடப்பெற்றது புருஷன் எனும் தத்துவமாகிறது.

कलाविद्यारागकालनियतिः पञ्चकञ्चुकम् ।
कला किञ्चित्कर्तृता स्यात् विद्या किञ्चिज्ज्ञता भवेत् ॥ ६८ ॥
रागस्तृष्णा परिच्छित्तिरायुषा काल उच्यते ।
नियतिः परतन्त्रत्वं एतैर्युक्तस्तु पूरुषः ॥ ६९ ॥

கலா, வித்யா ராகம், காலம், நியதி என ஐந்துகோசங்கள் கஞ்சுகங்கள் எனப்படும். கலை என்பது அளவுக்குட்பட செயல்திறன். வித்யை என்பது அளவுக்குட்பட்ட அறிவு. ராகம் என்பது ஆசை. வயதால் குறுக்கப்படுவது காலம். தனக்கு வெளிப்பட்டதொன்றை அண்டியிருப்பது நியதி. இவ்வைந்தும் கொண்டவன் புருஷன் எனும் தத்துவம்.

*கஞ்சுகமானது சட்டைபோல் ஒன்றை மூடி மறைக்கும். மாயையிடமிருந்து இந்த ஐந்து கஞ்சுகங்களும் தோன்றின. இருப்பதை மறைத்து இல்லாததைத் தோற்றுவிக்க மாயைக்கு உதவுபவை இந்த கஞ்சுகங்கள். எல்லாமறிந்து எல்லாவற்றையும் செய்யும் திறமை பெற்று நிறைந்ததாக (குறையற்றதாக) நித்தியமாக, தன்னிஷ்டப்படி இயங்குவதாக இருந்த ஒன்று, சிற்றறிவும் சிற்றாற்றலும் குறையுணர்வும், கால வரைக்குட்பட்ட வாழ்வும், எதற்கும் பிறரை அண்டி நிற்கும் தன்மையும் கொண்டதாக ஆனது இந்த கஞ்சுகங்களால்.*

*ஒன்று பலவாக ஆனதன் விளைவாக அந்த பலவற்றை ஒவ்வொன்றையும் தனித்துக் குறிப்பிடுவதற்கும் சில மாற்றங்கள் தேவைப்பட்டன. ஒரேமாதிரி பல இருப்பதில் சுவை இருக்காது. அதற்கு உதவும் வேறுபாட்டிற்கு, அறிவு, செயல்திறம், ஆசை, காலவரம்பு, சுதந்திரமின்மை (கட்டுப்பாடு) என்ற ஐந்து வரம்பு கள் பயன்பட்டன. இவற்றால் நேர்ந்த ஏற்றத் தாழ்வால் பலவாகத் தோன்றுவது எளிதாயிற்று. மாயை இவற்றைப் பயன்படுத்தி சித்சக்தியை உள்ளடக்கி ஜடசக்தி முக்கியமாக நின்ற ஈசுவர தத்துவத்தைப் புருஷன் எனும் தத்துவமாக மாற்றிற்று. சைவசாக்த சமயத்தில் மாயை, கலா, வித்யா, ராகம், காலம், நியதி, புருஷன் பிரிகிருதி என்று தத்துவ வரிசை காணும். அதனைச் சிறிது மாற்றி தத்தாத்ரேயர் விளக்குகிறார் மாயை – புருஷன், ராகம் முதலியவை ஐந்து என, மாயை புருஷனிடம் இந்த ஐந்து கஞ்சுகங்களால் வேறுபாட்டை ஏற்படுத்துகின்றது என்ற விளக்கத்திற்கு இந்த வரிசை உதவுகிறது.*

चितिशक्तिमधिष्ठाय विचित्रानादिकर्मणाम् ।
जनानां वासनापिण्डः स्थितः प्रकृतिरुच्यते ॥ ७० ॥

இந்த சித்சக்தியை ஆதாரமாகக் கொண்டு பல்வகைக் பட்டதும் தோற்றுவாய் அறிய முடியாததுமான வினைகளுள்ள ஜனங்களின் வாஸனையின் இறுகிய குவியலே பிரகிருதி எனப்படும் தத்துவமாகும்.

*மாயை வேற்றுமையை ஒவ்வொன்றின் மேலும் பதிய வைக்கப் பயன்படுவது பிரகிருதி எனும் தத்துவம். ஜனங்கள் மனிதர் மட்டுமல்ல. தோன்றித் தோன்றி மறைவது அனைத்தும் ஜனங்கள், அந்த ஜனங்கள் என்று தோன்றத் துவங்கினர் என்று குறிப்பிட முடியாது. இப்படி தொடங்கின நாள் அறியமுடியாதபடி உள்ள காலவரையில் அவை எடுத்த பிறப்பும் பலவகை. வெவ்வேறு வகையில் அமைந்ததால் விசித்திரமானதும்கூட, அந்த*

*ஒவ்வொரு பிறவியிலும் அனுபவித்துத் தீராமல் ஸூக்ஷ்ம சரீரத்தில் வினையாக – பாப புண்யங்களாகப் பதிந்த வாசனைகள் எத்தனை எத்தனையோ, அவை அனைத்தும் குவிந்து தனித் தனிப் பிறவிக்குக் காரணமாக ஜனங்களைக் கட்டுப்படுத்த நிற்கின்றன. இதுவும் மாயையிடம் கிடைக்கும் மற்றோர் கட்டுப்பாடு.*

फलं तु त्रिविधं यस्मात् कर्मणां सा त्रिरूपिणी ।

வினைகள் மூன்றுவகை பயன்களைத் தருபவையாதலால் அந்த வாஸனை வடிவான பிரகிருதியும் மூன்று வடிவங்களுடன் கூடியதாகிறது.

*வினை ஜனத்திடம் மூன்றுவகை பயனை விளைவிக்கிறது. சுகம், துக்கம், சுகமா துக்கமா என இனமறிய முடியாத கலக்கம் (மோஹம்) என அவை மூன்று. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று இதனைக் குறிப்பிடுவர்.*

अस्या अवस्थाभेदो हि चित्तमित्यभिधीयते ॥७१॥
सुषुप्तौ प्रकृतिर्ज्ञेया तदन्ते चित्तमुच्यते ।
वासनापिण्डसहिता चितिश्चित्तमुदीरितम् ॥७२॥
अव्यक्तमेतदेवोक्तं वासनापिण्डभावतः ।

இந்த பிரகிருதி எனும் தத்துவத்தின் ஒருநிலை சித்தமெனப்படும். நல்ல நித்திரையில் அது பிரகிருதி. நித்திரையின் இறுதியில் அதுவே சித்தம். வாஸனை நெருக்கத்துடன் கூடிய சித்சக்தி சித்தம். வாஸனை நெருக்கத்தால் இனமறிய முடியாதபடி இருப்பதால் இதுவே அவ்யக்தம் எனப்படும்.

*தனி மனிதனின் அளவில் உதாரணம் காட்டி பிரகிருதி, சித்தம் எனும் தத்துவங்களை விளக்குகிறார் தத்தாத்ரேயர். வாஸனைகள் பலவகை. அவை நெருக்கமுற்றுப் பிரகிருதியில் அடங்கியுள்ளன. அவற்றில் ஒன்றோ சிலதோ பிரிந்து மலர்ந்து வெளிப்படும் நிலை சித்தம். ஆழ்ந்த தூக்கத்தில் எல்லாமிருந்தும் வாஸனைகள் நெருக்கமாக இருந்தும் மனமோ மற்றதோ இயங்கக் காணோம். பிரகிருதியானது தனிப்பட்ட மனிதனிடம் தோன்றுகிற பாங்கு இது. தூக்கத்தின் அழுத்தம் குறைந்த நிலையான கனவிலும் தூக்கமே இல்லாத விழிப்பிலும் மனம் இயங்குகிறது. வாஸனைகளில் சில அதனை ஆட்டுவிக்கின்றன. வாஸனைகள் இடைவெளியற்று நெருங்கி நின்றும் செயலற்றிருந்தால் பிரகிருதியாகும். வாஸனைகள் செயல்பட்டால் அந்நிலை சித்தமாகும். ஜகத் காரணமான பிரகிருதியிலும் இப்படி பலவாக ஆனவை*

*அனைத்தும் பிரகிருதி எனப்படும். அவையே செயல்பெற்று இயங்க முற்படும் நிலை சித்தமெனப்படுகின்றது.*

पुरुषाणां विभेदेन चित्तं बहुविधं भवेत् ॥७३॥
जीवानामविभेदेन सुषुप्तावेकधा हि तत् ।
प्रकृतित्वं समायाति तदन्ते चित्ततामियात् ॥७४

புருஷர்கள் பலவகைப்படுவதால் சித்தமும் பலவகைப்படும். ஆழ்ந்த தூக்கத்தில் ஜீவர்களுக்குள் வேற்றுமை இல்லாததால் அந்நிலையில் சித்தம் ஒரேவிதமாக நின்று பிரகிருதித்தன்மையை அடைகிறது. தூக்கத்தின் இறுதியில் மறுபடி சித்தமாகிவிடுகிறது.

एतदेव पुमान् प्रोक्तः चितिप्राधान्यहेतुना ।
अव्यक्तप्राधान्यतस्तु चित्तप्रकृतितामियात् ॥७५॥

இந்த சித்தமே சித்சக்தியை முக்கியமானதாகக் கொண்டு புருஷன் எனப்படுகிறது. ஜடசக்தியைப் பிரதானமாகக் கொண்டு பிரகிருதி என்றாகிறது.

*விழிப்பு நிலையிலும் கனவிலும் ஒவ்வொருவருடைய சித்தமும் தன் தன் ஆதாரமான வாஸனைக்கேற்ப தனித்தனியாகச் செயல்படுகிறது. ஆழ்ந்த தூக்கத்தில் சித்தமானது. தனது மூல வடிவான பிரகிருதியாகிவிடுவதால் பல்வாறு செயல்படுவதில்லை. ஜீவன் சித்சக்தியே. எனினும் தேகம் முதலியவற்றின் குறுக்கீட்டால், பல வடிவங்களுக்குட்படுகிறது. தேகம் முதலியவற்றின் குறுக்கீடு ஆழ்ந்த தூக்கத்திலில்லை. அதனால் எல்லா ஜீவர்களும் விழிப்பில் தனித்தனியாக இருந்தவர்கள் ஆழ்ந்த நித்திரையில் ஒன்றாகிவிடுகின்றனர். கடலில் அலை ஓய்ந்த நிலையில் கடல் ஒன்றே. அலைகள் எழும்போது தனித்தனிவடிவில் பல அலைகள். கடலைக் காட்டிலும் வேறுபட்டவை.*

*ஸுஷுப்தி எனும் ஆழ்ந்த தூக்கநிலையில் என்ன நடைபெறுகிறது? விழிப்பில் அன்றாடம் அனுபவிக்க வேண்டிய வினைகள் வாழ்வாகிற நெருப்பில் எரிபொருளாகிச் சேர்ந்து எரிந்து மறைந்துவிட்டன. தணல் மட்டும் பாக்கி. இனி அது எரியாது. அணையாது. மேற்கொண்டு எரிபொருளாக ஆகவேண்டிய வினைகள் நிறைய உள்ளன. அவற்றை நெருப்பில் சேர்க்கும் விழிப்புநிலை ஏற்படவில்லை. தீராத அந்தவினை பழுத்துப் பாகமடையும் நிலை – பலன் தரும் நிலை ஏற்படத்தக்க நேரம் வரவில்லை. ஞானசக்தி*

*வெளிப்பட்டால்தான் அந்த நேரம் வந்ததாக ஆகும். அதனால் ஒருவித வினை அனுபவமுமில்லாத அந்த நிலை ஆனந்தம் தருவதாக ஆகிறது. தூங்குகிற காலத்தில் பலன் தரும் நிலைக்கு வந்துள்ள வினைகள் தூங்குபவனை எழுப்பி அனுபவிக்கச்செய்கின்றன. அதனால் தூங்கும் நிலையில் பிரகிருதி நிலையும் விழித்துள்ள விக்ஷேபநிலையில் சித்தநிலையும் ஏற்படுகிறது என விளக்குகிறார்.*

क्रियाभेदात् तत् त्रिविधं अन्तः करणमुच्यते ।
अहंकारबुद्धिमनोरूपेण नृपसत्तम ॥ ७६ ॥
ज्ञानकर्मेन्द्रियाणां तु पञ्चकं स्यात् ततः पृथक् ।
शब्दादि गगनादीनि भूतानि स्थूलसूक्ष्मतः ॥ ७७ ॥

இப்படி (பிரகிருதியாயும் சித்தமாயுமுள்ள) அந்த தத்துவம் அவற்றால் நிகழும் பணிகள் வேறுபாட்டால் மூன்றாகும். அஹங்காரம் புத்தி மனம் என. இவற்றிலிருந்தும் ஞானேந்திரியங்கள் ஐந்து. கர்மேந்திரியங்கள் ஐந்து, சப்தம் முதலிய ஸௌக்ஷ்ம பூதங்கள் ஐந்து, ஆகாயம் முதலியஸ்தூல பூதங்கள் ஐந்து.

*பிரகிருதியும் சித்தமும்ஒன்றே. அதிலிருந்து வெளிப்பட்டவை மூன்று – அந்தக்கரணம் எனும் மூன்று தத்துவங்கள். அந்தக்கரணம் – உள்ளுறுப்புகள், வெளிப்படையாக உணரமுடியாதவை. அகங்காரம் – நான் என்று உணரவைப்பது – அபிமானம் என்பது இதன் தனிப்பணி. செய்வதை இப்படித்தான் செய்யவேண்டுமென்ற திடமான நிச்சயம் எனும் தனிப் பணியுடன் கூடிய புத்தி. நாம் இதனைச் செய்தால் நல்லது அல்லது செய்யாதிருத்தல் நல்லது என்று மாறி மாறி எண்ணும் ஸங்கல்பம் எனும் தனிப் பணியுடன் கூடிய மனம். அஹங்காரமும் முக்குணமுள்ளது. அதன் ஸத்வ குணத்திலிருந்து தோன்றியவை ஞானேந்திரியங்கள் எனப்படும். காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்ற ஞானேந்திரியங்கள். இவை ஸௌக்ஷ்மமானவை. புலப்படாதவை. நமக்குப்புலப்படும் கண் காது முதலியவை அந்த இந்திரியங்கள் அமைந்த பொறிக் கூடுகளே. அஹங்காரத்தின் ரஜோ குணத்திலிருந்து தோன்றியவை வாக்கு, கை, கால், மலவழி, குறி என ஐந்து கர்மேந்திரியங்கள். கண்ணுக்குப் புலப்படாதவை. நமக்குப் புலப்படுபவை இவைகளைத் தாங்கும் தசை எலும்புப் பிண்டங்களே. அஹங்காரத்தின் தமோ குணத்திலிருந்து ஐம்பூதங்களின் ஸௌக்ஷ்மமான சப்த தந்மாத்திரம், ஸ்பர்சதந்மாத்திரம், ரூப தந்மாத்திரம், ரஸ தந்மாத்திரம்,*

*கந்ததந்மாத்திரம் என்பவை தத்துவங்களாக வெளிப்பட்டன. இந்த ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸ்தூலமான ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பிருத்வி என்ற ஐம்பூதங்கள் தோன்றின. ஆக சிவன் சக்தி ஸதாசிவன் ஈசுவரன் சுத்த வித்யா என்ற ஐந்து சுத்த தத்துவங்கள். மாயை, 5 கஞ்சுகங்கள். புருஷன் பிரகிருதி என்ற எட்டு மிச்ர தத்துவங்கள். அந்தக்கரணங்கள் 3, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, ஸூக்ஷ்ம பூதங்கள் 5, ஸ்தூல பூதங்கள் 5, ஆக 23 அசுத்த தத்துவங்கள் ஆக 36 தத்துவங்கள். பிரளயம் வரை நிலைத்திருக்கக் கூடிய ஜகத்தின் மூலப்பொருள்களைத் தத்துவம் என்பர்.*

एवं सा परमा संवित् बाह्याभासप्रपूर्वकम् ।
क्रीडां करोति सृष्ट्यादिक्रमेण सर्वसाक्षिणी ॥७८॥
तत्राद्यया श्रीत्रिपुराशक्त्या सृष्टौ प्रभावितः ।
हिरण्यगर्भो यो ब्रह्मा तस्यैतद् भावनोत्थितम् ॥७९॥
जगत्तत्र तु या संवित् त्वमहंरूपभासिनी ।
सा परैव हि चिच्छक्तिः तद्भेदो न तु विद्यते ॥८०॥

இப்படி அந்த பரசித்தானது வெளித் தோற்றத்தைத் தொடங்கி ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியவற்றை முறைப்படி விளைவிப்பவளாகவும், எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு ஸாக்ஷியாக இருப்பவளாகவும் விளை-யாடுகிறாள். அந்த விளையாட்டில் ஆதியான அந்த திரிபுரா சக்தியால் பாவனையால் தோற்றுவிக்கப்பட்டவர் ஹிரண்யகர்ப்பன் என்ற பிரம்மா. அவரது பாவனையால் எழுந்ததே இந்த உலகம். இந்த படைப்பு முதலியவற்றை நீ நான் என்று வடிவமைப்புடன் உள்ள பகுப்பிற்குட்பட்ட சித்சக்தியும் அந்த மேம்பட்ட சித்சக்தியே. உண்மையில் வேற்றுமை இல்லை.

भेदस्त्वौपाधिको भाति ह्युपाधिर्ब्रह्मभावितः ।
तद्भावनोपसंहारे नास्ति भेदस्य भासनम् ॥८१॥

உணரப்படும் வேற்றுமை பிரும்மாவின் பாவனையால் ஏற்பட்ட உபாதியால் எழுந்தது. அந்த பாவனை ஒடுங்கினால் வேற்றுமை தோன்றாது.

*உலகமாக - பலவாறாக ஆவேன் என்ற சித்சக்தியின் ஸங்கல்பம் வலுப்பட்டுப் பாவனையாகி பிரும்மாவை உண்டாக்கியது. தத்துவ நிலையில் தங்கம்போல் ஒளிவிடும் இந்த 36 தத்துவங்களையும் மூலப்பொருளாகத் தன்னுள் கொண்டதால் அவர் ஹிரண்ய கர்ப்பர். அவர் இந்த தத்துவங்கள் உலகமாகத் தோன்றட்டும் என ஸங்கல்பித்து அதற்கு வலிவூட்டினார். அந்த வலிவடைந்த ஸங்கல்பமே பாவனையாகி உலகமாகியது. சித்தாக*

*மூலப்பொருளாக நின்று பிரும்மாவின் பாவனையால் வடிவம் பெயர் என்ற உபாதிகளால் பலவாகப் பிரிந்துள்ள இந்த சித்சக்தி பாவனையால் ஏற்பட்ட உபாதியாகிய வேற்றுமைகள் அகன்றதும் ஒரே சித்சக்தியான உணர்வு ஏற்படும்.*

चितो या भावनाशक्तिः मायया ते समावृता ।
तदावरणहाने तु तव सा सिद्धिमेष्यति ॥ ८२ ॥
देशः कालोऽथवा किञ्चित् यथा येन विभावितम् ।
तथा तत्तत्र भासेत दीर्घसूक्ष्मत्वभेदतः ॥ ८३ ॥

சித்சக்தியின் மாயையால் உனக்குப் புலப்படாதவாறு அந்த பாவனாசக்தி மறைக்கப்பட்டுள்ளது. அந்த மறைப்பு நீங்கினால் அந்த பாவனாசக்தி உனக்குச் சித்தியாகும். அதன் சித்தியால் தேசமோ காலமோ யார் எப்படி நினைக்கிறாரோ அப்படி நீண்டும் குறுகியும் வேறுபட்டு அவ்வப்படி காணும்.

मयैकदिनरूपेण भावितं तत् दिनैककम् ।
ब्रह्मणा तावदेवात्र द्वादशार्बुदरूपतः ॥ ८४ ॥
भावितं तेनैवमेतत् चिरशीघ्रत्वभासनम् ।
ब्रह्मणा निर्मिते शैले पादगव्यूतिसम्मिते ॥ ८५ ॥
मयाऽनन्तप्रदेशस्य भावितत्वादनन्तता ।
एवं च द्वयमप्यत्र सत्यं चासत्यमेव च ॥ ८६ ॥

என்னால் ஒரு நாளாக பாவனை செய்யப்பட்டதே பிரும்மாவின் பாவனையால் 120கோடி ஆண்டுகளாக ஆனது. இப்படித்தான் காலவரை நீண்டும் குறுகியும் ஆகிறது. பிரும்மாவின் பாவனையால் தோன்றிய கால் கவ்யூதி அளவுள்ள பாறையினுள் எல்லையற்ற ஒரு வெளியை நான் பாவனை செய்ததால் எல்லையற்ற வெளியுள்ள தேசம் தோன்றியது. அதனால் இந்த இரண்டும் ஸத்தியமும் அஸத்தியமுமாகும்.

*உலகியலில் பயன்படுவதால் ஸத்தியம், தோற்ற அளவில் மட்டும் இருந்து பாவனையின் வலிவு குறையும்போது மறைவதால் அஸத்தியம்.*

त्वमप्यन्तः क्रोशमितं देशं कालं कलात्मकम् ।
विभाव्य भूयस्त्रैव भावयानन्तयोजनम् ॥ ८७ ॥
असंख्यकालमपि च भासेत् यावद्धि भावनम् ।

तस्माद्भावनमात्रात्मरूपमेतत् जगद् बहिः ॥ ८८ ॥
चिदात्मरूपेऽव्यक्ते वै भासते मनुजाधिप ।

நீயும் கூப்பிடுதூரம் உள்ள இடத்தையும் நொடிப்பொழுதுள்ள கால - வரையையும் முதலில் பாவனை செய்து மறுபடி அதில் பல யோஜனைகள் நீண்ட இடத்தையும் அளக்க முடியாத காலவரையையும் பாவனை செய். பாவனை உள்ளவரை அது அவ்வாறே தோன்றும். அதனால் இந்த வெளி உலகம் பாவனை வடிவானதே. சித்சக்தியாகிய அவ்யக்தத்தில் இது தோன்றுகிறது.

तस्माद् बाह्यात्मकाव्यक्तभित्तौ चित्रमयं जगत् ॥ ८९ ॥
अव्यक्तभित्तिमात्रं स्यात् सा स्वभित्तिचिदात्मिका ।

சித்தின் வெளித்தோற்றமாகிய அவ்யக்தம் எனும் ஜட சக்தியாகிய சுவற்றில் இவ்வுலகம் சித்திரம் போல் எழுந்தது. அந்த ஜட சக்தியாகிய சுவர் மட்டுமே அது. அந்த ஜட சக்தியும் சித்தாகிற சுவற்றில் எழுந்த சித்திரமே. அதனால் அதுவும் சித்தே.

अतएव चिराद् गम्यो दूरदेशोऽपि योगिनः ॥ ९० ॥
क्षणेन गत्वा पश्यन्ति करामलकवद् ध्रुवम् ।
तस्माद्दूरं समीपं वा चिरं शीघ्रमथापि वा ॥ ९१ ॥
भावनामात्रसंसिद्धं चिद्दर्पणसमाश्रितम् ।

அதனால் வெகு நேரம் செல்ல வேண்டிய தூரதேசத்தையும் யோகிகள் நொடியில் அடைந்து கைத்தல நெல்லிக்கனிபோல் பார்க்கின்றனர். அதனால் வெகுதூரம், அருகில், அதிக நேரம், சீக்கிரம் என்பதெல்லாம் சித்சக்தி என்ற கண்ணாடியில் பாவனையால் மட்டுமே தேறியவை.

निश्चित्यैवं त्यज भ्रान्तिं शुद्धचिद्भावनक्रमात् ॥ ९२ ॥
ततस्त्वमप्यहमिव स्वतन्त्रस्तु भविष्यसि ।

இவ்விதமாக திடமாகக் கருதிக் கலக்கத்தை விடுவாய். சுத்தமான சித்சக்தியை பாவனை செய்யும் முறையால் நீயும் என்னைப் போல் தன் விருப்பப்படி இயங்குபவனாக ஆவாய்.

इति श्रुत्वा मुनिसुतवचनं नृपसत्तमः ॥ ६३ ॥
परित्यज्याखिलभ्रान्तिं ज्ञातज्ञेयः शुभाशयः ।
समाध्यभ्यासयोगेन संसाध्य निजभावनाम् ॥ ६४ ॥
स्वातन्त्र्यमधिगम्याथ चिरकालं विहृत्य तु ।
देहाभासमथोन्मूल्य महागगनसंश्रयः ॥ ६५ ॥
निर्वाणं परमं प्राप्तो महासेनोऽपि भार्गव ।

இப்படி அந்த அரசன் மகாசேனன் முனிகுமாரனின் சொல்லைக்கேட்டு எல்லாவற்றிலுமிருந்த அறிவுத் தெளிவின்மையைக் களைந்து அறியவேண்டியதை உணர்ந்தவனாக,மனத்தூய்மைபெற்று, ஸமாதியைத் திரும்பத்திரும்ப முறைப்படி செய்து தனது பாவனைசக்தியை சித்தி செய்துகொண்டு தன்னிஷ்டப்படி இயங்கும் திறமையைப்பெற்று வெகுகாலம் வாழ்ந்து தேகமெனும் தோற்றத்தைக் களைந்து பெருவெளியில் தங்குபவனாகி பேரமைதியைப் பெற்றான்.

एवं जगत् सत्यभावभावनामात्रहेतुतः ॥ ६६ ॥
भाति सत्यात्मरूपेण विमृशैतद् भृगूद्वह ।
विचारेण शमं यायात् भ्रान्तिस्ते चित्तसंश्रया ॥ ६७ ॥

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
शैललोकाख्यानं नाम चतुर्दशोऽध्यायः ।

இப்படி உலகமானது ஸத்யமாக இருப்பதாகப் பாவனை செய்த ஒரே காரணத்தால் ஸத்திய வடிவில் தோன்றுகிறது. இதனை நன்கு சிந்தித்து விளக்கம் பெறுவாய். தத்துவவிசாரம் செய்வதால் உனது மனத்திலுள்ள கலக்கம் அகன்றுவிடும்.

***இவ்வாறு திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் சைலலோகக்கதையாகிய பதினான்காம் அத்தியாயம்.***

# पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாம் அத்தியாயம்

इति श्रुत्वा शैललोकाख्यानमत्यद्भुतं तदा ।
भूयोऽत्यन्तं विस्मितोऽभूत् रामो भृगुकुलूद्वहः ॥ १॥
विमृश्य गुरुणा प्रोक्तं बुद्ध्या निश्चित्य शुद्धया ।
दत्तात्रेयं पुनर्गत्वा नत्वा पप्रच्छ सादरम् ॥ २॥

இவ்வாறு மிகவும் வியக்கத்தக்க சைலலோகத்தைப்பற்றிய கதையைக் கேட்டு மிகவும் வியப்படைந்த பிருகு குலத்தோன்றலான பரசுராமர் குருவால் உபதேசிக்கப்பட்டதை நன்கு புத்தியால் விமர்சித்துத் தெளிவடைந்த கருத்துடன் தத்தாத்ரேயரிடம் மறுபடி சென்று வணங்கிப் பணிவுடன் கேட்டார்.

भगवन् यत्त्वया प्रोक्तं आख्यानैर्विविधैस्तु तत् ।
तत्र सारमियत् ज्ञातं मयाऽत्यन्तं विचारतः ॥ ३॥
संवेदनं सत्यमेकं संवेद्यं तत्र कल्पितम् ।
आदर्शनगरप्रख्यं मृषैव प्रविभावितम् ॥ ४॥

பகவானே! தங்களால் பல கதைகள் மூலமாக விளக்கப்பட்ட தத்துவத்திலிருந்து மிகுந்த கருத்துடன் சிந்தித்ததன்மேல் ஸாரமாக இந்த அளவு புரிந்துகொண்டேன். ஸம்வித் எனும் பேரறிவு ஒன்றே ஸத்யம். அதனால் உணரப்பட்டதோ அதில் கற்பனையால் தோன்றுவதாகும். கண்ணாடியில் காணும் நகரம்போல் பொய்யாக உருவகப் படுத்தப்பட்டுள்ளது.

सा चितिः परमा शक्तिः संविद्रूपा महेश्वरी ।
स्वात्मभित्तौ जगच्चित्रं अव्यक्तादिप्रभेदितम् ॥ ५॥
भासयेत्स्वातन्त्र्यमात्रात् निरूपादानहेतुकम् ।
एतावत्तु मया ज्ञातं विचार्य सूक्ष्मया धिया ॥ ६॥

அந்த சித்சக்தி பேராற்றலுள்ளது. பேரறிவு வடிவானது. நம் சிற்றறிவிற்கும் அடங்காதது. "தான்" ஆகிற சுவரில் விசித்திரவடிவு ள்ளதும்அவ்யக்தம் (மஹத் – அஹங்காரம்) முதலிய தத்துவங்களாகப் பல வேறுபாடுகளுள்ளதுமான உலகைத் தனது ஸ்வதந்திரத்தன்மையால் (தானே வேறொன்றின் உதவியின்றி இயங்குகிற பாங்கால்) வேறு காரணப் பொருளின் உதவியின்றி

தோற்றுவிக்கிறது. இது மிகவும் அறிவால் யோசித்து உணரப்பட்டது.

किन्त्वेवंविधसंवित्तिः वेद्यवन्ध्या निरूपिता।
उपलब्धुमशक्यैव सवेद्यायाः सदा स्थितेः॥ ७॥
वेद्यं विना तु संवित्तेः कथं स्यादुपलंभनम्।
उपलंभं विना तस्याः पुरुषार्थो न विद्यते॥ ८॥

ஆனால் அத்தகைய பேரறிவு உணரப்படும் பொருள் கலப்பின்றி இருப்பதாக *விளக்கப்பட்டது.* உணரப்படும் பொருளுடன் சேர்ந்தே எப்போதும் இருப்பதால் தனித்த அந்த அறிவை எப்படிக் காண்பது? அப்படி உணரமுடியாவிடில் அதனால் மோக்ஷம் என்ற பயன் கிட்டாதே.

पुरुषार्थोऽपि मोक्षः स्यात् स वा किंविध उच्यते।
विज्ञाने सति मोक्षः स्यात् मुक्ते व्यवहृतिः कथम्॥ ९॥
ज्ञानिनोऽपि हि दृश्यन्ते व्यवहारपरायणाः।
कथं तेषां हि संवेद्यमुक्तसंवेदनं स्थितम्॥ १०॥

மோக்ஷம் என்பது ஒரு புருஷார்த்தம். அது எத்தகையது? ஞானம் ஏற்பட்டதும் மோக்ஷம் ஏற்படவேண்டும். மோக்ஷம் அடைந்த பின் எப்படி உலக வியவகாரம் ஏற்படும்? ஞானிகளும் உலக வியவகாரங்களில் ஈடுபட்டவர்களாகக் காண்கிறார்களே! அவர்களுக்கு உணரப்படும் பொருளில்லாத நிர்விகல்ப அறிவு எப்படி நிலைத்துநிற்கும்?

*பரசித் எனும் பேரறிவு வேத்யமான உணரப்படுகிற பொருள் கலப்பில்லாதது. உணரப்படுகிற பொருள் கலந்த அறிவு சிற்றறிவாகும். நான் பார்க்கிறேன். எதை? குடத்தை. குடம் என்ற பொருளுடன் கூடியே பார்த்தல் என்ற அறிவு ஏற்பட்டது. இது வியவஹார ஞானம், ஸவிகல்பக அறிவு. இந்த அறிவு ஏற்பட குடம் முதலியவற்றின் தொடர்பு அவசியம். நிர்விகல்பம் எனும் பேரறிவு இந்த பொருள் கலப்பில்லாததென முன் விளக்கப்பட்டது. குடம் துணி என்பது போன்ற அறிவால் உருவகப்படுத்தப்படும் பொருளின்றி அறிவு எங்கும் காணப்படாததால் அப்படி ஒரு பேரறிவு இருக்க வழியில்லை. அப்படி ஓர் அறிவு இருந்தாலும் அதனை உணர்ந்தாலன்றி அது பயன்படாததாகையால் முக்தி எனும் புருஷார்த்தத்திற்கு உதவாது. இரண்டாவது கேள்வி – முக்தி சிறந்த புருஷார்த்தம். நிர்விகல்பக ஞானத்தால் மோக்ஷம் எனில் ஞானி உயிருடன் இருக்கும்போது முக்தியா? இறந்த பிறகா? உயிருடன் இருக்கும்போதே முக்தி (ஜீவன் முக்தி) எனில் அந்த ஞானி உலகியலில் ஈடுபடமுடியுமா? ஸவிகல்பக ஞானம் உலகியலில் பயன்படும்.*

*நிர்விகல்பக ஞானம் உலகியலில் பயன்படாது. ஞானிகள் உலகியலில் கலந்துகொள்வதைக் காண்கிறோம். அவர்களுக்கு நிர்விகல்பக ஞானம் நிலைத்து நிற்குமா? என்பதே பரசுராமரின் கேள்வி. தன் ஐயத்தை மேலும் விளக்குகிறார்.*

स्थितायां शुद्धसंवित्तौ व्यवहारः कथं भवेत्।
विज्ञानमेकरूपं वै मोक्षोऽप्येकः फलं भवेत्॥ ११॥
तत्कथं ज्ञानिनां भेदः स्थितौ लोके हि दृश्यते।

நிர்விகல்ப ஞானம் நிலைத்திருந்தால் உலக வியவஹாரம் எப்படி ஏற்படும்? முக்திக்கு ஸாதனமான பேரறிவும் ஒரேவிதம். பேரறிவால் கிட்டும் முக்தியும் ஒரேவிதம். அப்படி இருக்கையில் ஞானிகளிடையே வியவஹாரத்தில் பெருத்த வேறுபாடு காணப்படுகிறதே அது எங்ஙனம்?

केचित् कर्म प्रकुर्वन्ति काले सच्छास्त्रचोदितम्॥ १२॥
केचित्समाराधयन्ति देवतां भिन्नवर्त्मभिः।
केचित्समाधिपरमाः संहृतेन्द्रियमण्डलाः॥ १३॥
केचित्तपः प्रकुर्वन्ति देहेन्द्रियविशोषणम्।
केचिच्छिष्यान् बोधयन्ति पृथक्प्रवचनैः स्फुटम्॥ १४॥
केचिद्राज्यं प्रशासन्ति दण्डनीत्युक्तवर्त्मना।
केचित्प्रवादं कुर्वन्ति सदस्सु प्रतिवादिभिः॥ १५॥
केचिच्छास्त्राणि विविधान्यजस्रं रचयन्ति वै।
अन्ये केवलमुग्धत्वं आवहन्ति सदैव हि॥ १६॥
केऽपि लोकविगर्ह्यां तु वृत्तिं नित्यमिहास्थिताः।
त इमे ज्ञानिन इति प्रथिता भूरिशो जनैः॥ १७॥

சிலர் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள நற்கருமங்களை உரிய நேரத்தில் செய்கிறார்கள். சிலர் தனித்துமுறையில் தெய்வத்தை வழிபடுகின்றனர். சிலர் பொறிகளை அடக்கிச் சமாதியில் ஆழ்ந்திருக்கிறார்கள். சிலர் உடலையும் பொறிகளையும் வாட்டும் தவத்தைச் செய்கிறார்கள். சிலர் நல்லவிளக்க உரைகளுடன் சீடர்களுக்குத் தத்துவங்களைப் போதிக்கின்றனர். சிலர் அரசியல் முறைப்படி அரசாளுகின்றனர். சிலர் எதிர் வழக்காடுபவர்களுடன் ஸபைகளில் வாதம்புரிகின்றனர். சிலர் எப்போதும் பலதரப்பட்ட தத்துவங்களை எழுதுகின்றனர். சிலர் எப்போதும் தன்னை அறிவில்லாதவராகக் காட்டிக்கொள்கின்றனர். சிலர் உலகத்தினர்

அருவறுப்படையும் செயல்களை எப்போதும் செய்கின்றனர். இவர்கள் மக்களால் பெரும்பாலும் ஞானிகள் எனப் பாராட்டப்படுபவர்களே.

तत्कथं साधनफलाभेदेऽपि स्थितिभिन्नता।
किमेते समविज्ञानाः तारतम्यमुताश्रिताः ॥ १८ ॥
एतत्सर्वमशेषेण प्रवक्तुं मे समर्हसि।
शिष्येऽनन्यशरण्ये ते निसर्गसदयं मनः ॥ १९ ॥

ஸாதனமான ஞானமும் அதன் பயனான முக்தியும் பேதமின்றி இருக்கையில் வியவஹார நிலையில் வேற்றுமை எப்படி? இவர்களின் ஞானம் ஒரேவிதமானதா? அல்லது இவர்கள் ஞானத்தில் ஏற்றத்தாழ்வு கொண்டவர்களா? இவை அனைத்தையும் எனக்கு விளக்கிக் கூறுவீராக! வேறு புகலிடமற்ற சீடனிடத்தில் இயற்கையாகவே உங்களுடைய மனம் தயையுடனுள்ளது.

इत्यत्रिसूनुरापृष्टः भार्गवेण प्रसन्नधीः।
मत्वा योग्यं प्रश्नजातं प्रवक्तुमुपचक्रमे ॥ २० ॥

இவ்வாறு பரசுராமரால் கேட்கப்பட்ட தத்தர் கேள்வி தக்கதென நினைத்து விளக்க முற்பட்டார்.

राम बुद्धिमतां श्रेष्ठ नूनं स्पृशसि तत्पदम्।
सद्विमर्शपरो यस्त्वमतो ज्ञातुं प्रभावितः ॥ २१ ॥
एतदेव हि तच्छक्तिपातो यत्सद्विमर्शनम्।
भगवच्छक्तिपातेन विना कः श्रेय आप्नुयात् ॥ २२ ॥
कृत्यमात्मदेवतायाः जानीह्येतावदेव हि।
यत्सद्विमर्शनं नित्यं वर्धयेत् सुप्रसादिता ॥ २३ ॥
यत्त्वया विदितं तत्तु तादृक् सत्यं नहीतरत्।
किन्तु तत् तादृशमपि त्वयोक्तं परचिद्वपुः ॥ २४ ॥
न ते सुविदितं राम यत एवं वदस्यतः।

அறிவாளிகளில் சிறந்த பரசுராமரே! பேரறிவு நிலையை நெருங்கிவிட்டீர். அதனால்தான் நல்ல விமர்சனம் செய்கிறீர். அதனால் அந்நிலைபற்றி அறியத் தகுதியுள்ளவரே. இது இறையருளின் சக்தி. அதனால்தான் நல்ல விமர்சன சக்தி உள்ளது. இறையருளின்றி எவன் மேன்மையை அடையமுடியும்? தனது வழிபடு தெய்வத்தின் செயல் இப்படிப்பட்டதென அறிவீர். அந்த

தெய்வம் அருள்கூர்ந்து நல்ல விமரிசன சக்தியை வளர்க்கும். நீர் அறிந்த-வரை அந்த சித்சக்தி அப்படிப்பட்டதே. அதுவே நிலைத்தபொருள். வேறல்ல. அந்த பரசித் வடிவத்தைப்பற்றி நீர் அப்படி விளக்கியபின்னரும் அதனை நன்கு உணராததால் இப்படிக் கூறுகிறீர்.

ताटस्थ्येन तु यो यावद्वेद तावन्न वेद वै।। २५ ।।
यतः सा विदिता सम्यक् ताटस्थ्यमुपशामयेत्।
तटस्थसंवेदनं तु स्वप्नसंवेदनोपमम्।। २६ ।।
यथा स्वप्ननिधिप्राप्तिः पुरुषाणां निरर्थिका।
तथा तटस्थविज्ञानं अमुख्यफलदं भवेत्।। २७ ।।

மேலெழுந்தவாரியாக அறிவதால் அதனை அறிந்ததாகாது. நன்கு அந்த சித்சக்தி உணரப்பட்டால் இந்த மேலெழுந்தவாரியாக ஏற்படுகிற அறிவு மறைந்துவிடும். மேலெழுந்தவாரியான அறிவு மனிதர்களுக்கு ஒருபயனும் தராது. கனவில் செல்வக்குவியல் பெறுவதால் எப்படி ஒருலாபமும் இல்லையோ அப்படியே இது.

*ஒரு பொருளை இது இந்த தன்மையுள்ளது என ஆழ்ந்த அறிவின்றி மேலெழுந்தவாரியாக அறிவதால் ஐயம் நீங்காது. வழிப்போக்கன் ஒரு தனிமனிதரின் இருப்பிடத்தைப்பற்றி எதிரில் வருபவரிடம் விசாரிக்கிறான். அதோ காக்கை உட்கார்ந்திருக்கிறதே அதுதான் அவர் இல்லம் என அவரிடமிருந்து அறிகிறான். காக்கை பறந்து வேறிடத்தில் உட்கார்ந்தால் காக்கை உட்காரும் இடமே அந்த வீடு எனக்கொள்வதில்லை. காக்கை இருந்தாலும் இல்லாவிட்டாலும் காக்கையால் அச்சமயத்தில் குறிப்பிட்ட வீட்டை மனத்திற்கொள்வான். அந்த வீட்டிற்கு காக்கையுடன் கூடியிருப்பது நிலைத்த அடையாளமல்ல. சிலசமயம் அறிவூட்ட இப்படி வெளிப்படையான சில விளக்கங்கள் தேவைப்படலாம். இவை தக்க விளக்கமல்ல. பொருளின் தனித்தன்மை விளக்கமே தக்க விளக்கம். மேலெழுந்தவாரியான விளக்கம் இந்த தனித்தன்மை விளக்கத்தின் அருகே அழைத்துச்செல்லும். அந்த தனித்தன்மை விளக்கத்தைக்கொண்டு உண்மை உணர்வு ஏற்பட்டு பொருளின் ஸாக்ஷாத்காரம் எனும் நேரிடை அனுபவம் முழுவதும் ஏற்பட்டால்தான் ஞானம் ஏற்பட்டதாகக்கொள்ளலாம்.*

*கண்ணாடியில் தோன்றுகிற நகரம்போல் சித்தில் உலகம் தோன்றுகிறது என்ற விளக்கம் மேலெழுந்தவாரியானது. அதனால் சித்தை ஸாக்ஷாத்காரம் செய்யமுடியாது. சித்சக்தி வேறு உதாரணங்களால் வெளிப்படையாக உணரமுடியாது. உள்ளே ஊடுருவி நிற்கும் பரம்பொருளை அது தானாக,*

*தான் அதுவாக உணர்வதே ஞானம். உதாரணங்களால் ஏற்படும் அறிவு தடஸ்தஞானமாகும். உண்மை அறிவு ஏற்பட்டபின் உதாரண விளக்கம் தேவைப்படாது. உதாரண விளக்கத்தால்மட்டும் உண்மை அறிவு ஏற்படாது. உதாரண விளக்கம் உண்மை அறிவினருகே அழைத்துச்செல்லும். அதுவே ஸத்திய ஞானமல்ல. இதனை விளக்கும்வகையில் ஒரு கதையைத் தொடங்குகிறார் தத்தபகவான்.*

अत्र ते कथयिष्यामि प्राग्वृत्तमतिशोभनम् ।
पुरा विदेहेषु कचित् आसीद् राजा सुधार्मिकः ॥ २८ ॥
वृद्धप्रज्ञो हि जनकः प्रविज्ञातपरावरः ।
स कदाचित् स्वात्मदेवीं ईजे क्रतुभिरुत्तमैः ॥ २९ ॥
तत्राजग्मुर्ब्राह्मणाद्याः विद्यावन्तस्तपस्विनः ।
कलाभिज्ञा वैदिकाश्च यज्वानश्चापि सत्रिणः ॥ ३० ॥

இங்கு ஒரு அழகிய பழங்கதையைக் கூறுகிறேன். முன்னர் விதேகநாட்டில் ஓர் அரசர் இருந்தார். அவர் அறநெறிவழிநடப்பவர். முதிர்ந்த அறிவுள்ளவர். பரம்பொருளையும் உலகையும் பற்றி நன்கு அறிந்தவர். ஜனகன் எனப்பெயர்கொண்டவர். அவர் ஒருசமயம் தாம் வழிபடும் தேவியை உயர்ந்த வேள்விகளால் ஆராதித்தார். அங்கு கல்விமான்களும், தவசிகளும், கலைஞர்களும், வேதவித்துகளும், யாக முறையறிந்தவர்களுமான அந்தணர் முதலானோர் கூடினார்.

तत्काल एव वरुणो यष्टुं समुपचक्रमे ।
तेनोपहूता विप्राद्याः न ययुस्तत्र भूरिशः ॥ ३१ ॥
जनके ह्यभिसंप्रीताः पूजितास्तेन तर्पिताः ।

அதேசமயம் வருணனும் வேள்வி செய்யத் தொடங்கினார். அவரால் அழைக்கப்பட்டும் அந்தணர்கள் பெரும்பாலும் செல்லவில்லை. ஜனகரிடத்தில் அதிக திருப்தி அடைந்தவர்களாகவும், அவர்களால் இஷ்டபூர்த்தி அடைந்தவர்களாகவும் ஆனார்கள்.

अथाजगाम वरुणदायादो बौद्धसंपदा ॥ ३२ ॥
विप्रवेषधरो नेतुं ब्राह्मणान् कूटवर्त्मना ।
आसाद्य यज्ञसदनं नृपं संयोज्य चाशिषा ॥ ३३ ॥
आक्षिपत्तत्र सभ्यांस्तु शृण्वतां च सभासदाम् ।

வருணனின் பிள்ளை வாதத்திறன் நிரம்பியவன். அவன் அந்தண வேஷம் பூண்டவனாக (ஜனகரின் யாகத்தில் கலந்துகொண்டுள்ள) அந்தணர்களை ஏமாற்றி அழைத்துச்செல்ல அங்குவந்தான். அரசருக்கு ஆசிகள் வழங்கி சபையிலுள்ளவர் கேட்கும்படி அவர்களை ஆட்சேபித்துப் பேசினான்.

राजंस्ते यज्ञसदनं अत्यन्तं नैव शोभते ।। ३४ ।।
कमलाकरवत् काककंकबृन्दस्य सञ्चयात् ।
सभा विद्वत्समुदयैः शोभिनी शोभतेतराम् ।। ३५ ।।
शारदं हंससंघातैः सपद्मं तु सरो यथा ।
तदत्र विद्याविशदं न पश्याम्येकमप्यलम् ।। ३६ ।।
स्वस्ति तेऽस्तु गमिष्यामि नात्र मे संस्थितिर्भवेत् ।
कथं सभामिमां मूर्खप्रचुरां संविशाम्यहम् ।। ३७ ।।

"அரசே! உன் வேள்விக்கூடம் சோபை மிகவும் குன்றியுள்ளது. காக்கையும், கழுகும் கூட்டமாகச் சூழ்ந்த தாமரையோடைபோலுள்ளது. அறிவாளிகள் கூடினால் ஸபை அழகுறும். சரத்காலத்திய தாமரை ஓடை அன்னபட்சிகள் நிறைந்திருப்பதுபோல் இருக்கும். இங்கு அறிவால் தெளிந்த எவரையும் நான் காணவில்லை. நான் இங்கு இருக்கத் தகாது. உனக்கு நன்மை உண்டாகட்டும். நான் செல்கிறேன். மூர்க்கர்கள் நிறைந்த இந்த சபையினுள் எப்படி உட்கார்வேன்."

एवं वारुणिना प्रोक्ताः सभ्याश्चुक्रधुरञ्जसा ।
किमरे द्विजबन्धो त्वं अधिक्षिपसि सर्वतः ।। ३८ ।।
केयं तवेदृशी विद्या यया सर्वे वयं जिताः ।
वृथा कत्थसि दुर्बुद्धे जित्वाऽस्मान् त्वं गमिष्यसि ।। ३९ ।।

இப்படி வாருணியால் கூறப்பட்ட ஸபையினர் உடன் வெகுண்டார்கள். "அந்தண வேஷத்தில் உள்ளவனே! ஏன் எல்லோரையும் தூக்கி எறிந்து பேசுகிறாய்? எங்களனைவரையும் வெல்லுமளவில் உனக்கு என்ன கல்வியறிவு உள்ளது? கெட்ட புத்தியுள்ளவனே! வீணாகப் பிதற்றுகிறாய்! எங்களை வென்றுதான் நீ வெளியே செல்ல வேண்டும்"

प्रायो भूलोकसंस्थानः विद्वांसः संगताः खलु ।
किं त्वं भूलोकमेवाद्य जेतुमिच्छसि दुर्मते ।। ४० ।।

ब्रूहि का ते भवेद्विद्या ययास्मान् जेतुमिच्छसि।
इत्युक्तवत्सु सभ्येषु वारुणिः पुनराह तान्॥ ४१॥

அனேகமாக பூலோகத்திலிருக்கும் அறிவாளிகள் அனைவரும் இங்கும் கூடியுள்ளனர். அப்படியாயின் பூலோகத்தையே நீ வெல்ல விரும்புகிறாயா? எங்களை வெல்லத் தூண்டுகிற உன் கல்வியறிவுதான் என்ன? அதனைக் கூறுவாய்? என ஸபையினர் சொன்னதும் வாருணி மறுபடி அவர்களைப் பார்த்துக் கூறினான்.

समयेन विजेष्यामि सर्वान् वः क्षणमात्रतः।
अहं जितो भवद्भिस्तु समुद्रे स्यां निमज्जितः॥ ४२॥
युष्मास्वहं मज्जयामि जितं जितमथापि वा ।
उपेत्यैवं तु समयं विवदन्तु मया सह॥ ४३॥

"ஒரு பந்தயத்தின்மூலம் உங்களை அனைவரையும் நொடிப்பொழுதில் வென்றுவிடுவேன். தங்களால் நான் தோற்கப்படுவேனானால் கடலில் என்னை அமுக்கிவிடலாம். நீங்கள் தோற்றால் தோற்றவர் ஒவ்வொருவரையும் கடலில் மூழ்கடிப்பேன். இப்படி ஒரு ஒப்பந்தத்திற்கு வந்து என்னுடன் வாதம் செய்யுங்கள்."

इत्युक्ताः संमतिं चक्रुः सभ्या वादाय तेन तु।
विवादं चक्रुरत्यन्तं तेन वारुणिना द्विजाः॥ ४४॥
जिगाय वारुणिर्विप्रान् वितण्डाजल्पवर्त्मना।
सिन्धौ निमज्जिता विप्राः शतशोऽथ सहस्रशः॥ ४५॥
निमज्जितास्तु ये विप्राः दूतैस्तैर्वारुणैर्हृताः।
वारुणं यज्ञमासाद्य मुमुदुः पूजिता भृशम्॥ ४६॥

இப்படி கூறப்பெற்ற ஸபையினர் அவனுடன் விவாதத்திற்குச் சம்மதித்தனர். அந்த வாருணியுடன் அந்தணர்கள் முடிவுவரை வாதித்தனர். விதண்டாவாதவழியில் வாருணி அவர்களை வென்றான். நூறு ஆயிரம் என அந்தணர்கள் கடலில் மூழ்கடிக்கப்பெற்றார்கள். கடலில் மூழ்கடிக்கப்பட்ட அனைவரும் வருணனின் தூதர்களால் அழைத்துச் செல்லப்பட்டு வருணனின் வேள்வியில் கலந்துகொண்டு கொண்டாடப்பட்டவர்களாக மகிழ்ச்சியுடன் இருந்தார்கள்.

मज्जितं पितरं श्रुत्वा कहोलं तत्सुतस्ततः ।
अष्टावक्रः समागत्य ज्ञानवैतण्ड्यजल्पकः ॥ ४७ ॥
विजित्य वारुणिं सिन्धौ आदिदेश निमज्जने ।
अथ प्रकाशमापन्नो वारुणिर्दिजमुख्यकान् ॥ ४८ ॥
समानयत्स्वलोकस्थान् अष्टावक्रेण निर्जितः ।

தன் தந்தை கஹோலர் தோற்கடிக்கப்பட்டதைக் கேட்டறிந்த அவரது பிள்ளை அஷ்டாவக்ரர் அங்கு வந்து விதண்டாவாதம் பேசுபவராக வாருணியை வென்று கடலில் மூழ்கடிக்க உத்தரவிட்டார். அஷ்டாவக்கிரரால் வெல்லப்பட்டதும் வேஷத்திலிருந்து வெளிப்பட்ட வாருணி தன் உலகில் இருந்த அந்தணர்களைத் திரும்ப வரவழைத்தான்.

अथागतेषु विप्रेषु कहोलतनयो भृशम् ॥ ४९ ॥
विप्रान् विमोचितान् सर्वान् अत्यवर्तत दर्पतः ।
अष्टावक्रेण विमताः विप्राः खेदमुपागताः ॥ ५० ॥
तत्काल आगतां कांचित् तापसीं शरणं ययुः ।

அந்தணர்கள் வந்ததும் கஹோளரின் குமாரனான அஷ்டாவக்ரன் தன்னால் விடுவிக்கப் பெற்ற எல்லா அந்தணர்களையும் துச்சமாக மதித்தான். அஷ்டாவக்ரரால் அவமதிக்கப்பட்ட அந்தணர்கள் வருத்தமடைந்து அந்த நேரத்தில் அங்கு வந்துசேர்ந்த ஒரு தாபசியைச் சரணடைந்தார்கள்.

तान् समाश्वास्य विप्रान् सा काषायांबरवासिनी ॥ ५१ ॥
जटिला नित्यतरुणी मनोहरवपुर्धरा ।
सभामुपेत्य प्रोवाच नृपेणाभिसुपूजिता ॥ ५२ ॥

துவராடை அணிந்தவளும் சடை நிரம்பியவளும் நிலைத்த இளமை-யுள்ளவளும் அழகிய வடிவம் கொண்டவளுமான அவள் அந்த அந்தணர்களுக்கு ஆறுதலளித்து ஸபையை அடைந்து அரசரால் வழிபடப் பெற்றவளாகப் பேசினாள்.

कहोलसुत वत्स त्वं अत्यन्तं बुद्धिमानसि ।
त्वया विमोचिता विप्राः वादे निर्जित्य वारुणिम् ॥ ५३ ॥
अहं पृच्छामि किंचित्त्वां वद हित्वा सुकैतवम् ।

குழந்தாய், கஹோலரின் புதல்வனே. நீ மிகவும் புத்திசாலி, வாதத்தில் வருண குமாரனை வென்று உன்னால் அந்தணர்கள் விடுவிக்கப்பட்டுள்ளனர். நான் ஒரு சிறிய விஷயத்தைப் பற்றிக் கேட்பேன். ஏமாற்றுவதைவிட்டுப் பதில் சொல்வாய்.

यत्पदं विदितं सर्वामृतत्वप्रतिपादकम् ॥ ५४ ॥
यत्पदे विदिते सर्वसन्देहः प्रलयं व्रजेत् ।
अविज्ञातं न किंचित्स्यात् आशास्यं वा न किञ्चन ॥ ५५ ॥
अवेद्यं विदितं तच्चेत् वद मामुप सत्वरम् ।

எந்த ஒன்று அறியப்படின் எல்லாம் அழியா நிலையை அடையும்? எதனை அறிந்தால் எல்லா ஐயங்களும் மறையும்? எதனை அறிந்தால் அறியாததோ வேண்டிப் பெறத்தக்கதோ வேறொன்றும் இருக்காது? அப்படி அறிய முடியாததொன்றை நீ அறிந்திருப்பாயேயானால் உடன் எனக்குக் கூறுவாய்.

तापस्यैवं समापृष्टः कहोलतनयोऽब्रवीत् ॥ ५६ ॥
विदितं तत्पदं भूयो वच्मि तापसि संशृणु ।
न मे ह्यविदितं लोके ह्यस्ति किञ्चित्कियत्विदम् ॥ ५७ ॥
मया शास्त्राणि सर्वाणि भूयः संलुठितानि वै ।
यत्त्वं पृच्छसि तद्वक्ष्ये शृणु तापसि तत्त्वतः ॥ ५८ ॥

தாபசியால் கேட்கப்பட்ட கஹோல குமாரன் அஷ்டாவக்ரன் கூறினான். "நீ கேட்டதை நான் அறிவேன். நான் கூறுவேன். கேட்பாயாக. உலகில் நான் அறியாதது ஒன்றுமில்லை. இது மிக அல்பமானது. என்னால் எல்லா சாஸ்திரங்களும் அடிக்கடி அகழ்ந்து பார்க்கப்பட்டுள்ளன. அதில் உண்மை நிலையை நான் கூறக் கேட்பாய்!

तद्धि सर्वजगद्धेतुः आदिमध्यान्तवर्जितम् ।
देशकालानवच्छिन्नं शुद्धाखण्डचिदात्मकम् ॥ ५९ ॥
यदुपाश्रित्य वै सर्वं जगदेतद् विराजते ।
आदर्शनगरप्रख्यं तदेतत् परमं पदम् ॥ ६० ॥

அது எல்லா உலகிற்கும் மூலகாரணம். தொடக்கமும் நடுவும் முடிவுமற்றது. தேசம் காலம் இவற்றால் குறுகாதது. சுத்தமானதும்

துண்டாடப் பெறாததுமான சித்சக்தி வடிவானது. அதனை அண்டியே இந்த உலகம் கண்ணாடியில் தெரியும் நகரம்போல் வெளியே தோன்றுகிறது. அதுதான் மேலானது.

प्राप्नोति तद्विदित्वैव निश्चलामृतसंस्थितिम्।
आदर्शे विदिते यद्वत् न सन्देहः क्वचिद्भवेत्॥ ६१॥
प्रतिबिंबेष्वनन्तेषु न स्यादविदितं तथा।
नाशास्यं वा भवेत् किञ्चिदेवं प्रविदिते परे॥ ६२॥
तच्चाप्यवेद्यमन्यस्य वेदकादेरभावतः।
एवं तापसि तत्तत्वं शास्त्रदृष्टया विभावितम्॥ ६३॥

கண்ணாடியை அறிந்து கொண்டால் (அதனுள் உள்ள பிரதி பிம்பத்தைப்பற்றிய) சந்தேகம் ஏற்படாது. எல்லையற்ற பிரதி பிம்பங்களைக் கண்டாலும் அறியப்படாதது ஒன்றுமிருக்காது. அந்தப் பரவஸ்துவை அறிவதால் (அனைத்தையும் பிரதிபிம்பமாகக் காண்பதால்) வேண்டிப் பெறத்தக்கதும் ஒன்றுமிருக்காது. அதனை அறிவதற்கு வேறொன்று அறிவூட்டுவதாக இல்லாததால், அது வேறொன்றால் அறியத்தகாததே. சாஸ்திர நோக்கில் நன்கு ஆராயப்பட்ட அந்த தத்துவம் இத்தகையது."

इत्यष्टावक्रवचनं श्रुत्वा सा पुनरब्रवीत्।
मुनिदारक सूक्तं ते यथावत् सर्वसम्मतम्। ६४॥
यदुक्तं वेदकाभावात् अवेद्यं तदिति त्वया।
प्राप्नोति तद्विदित्वैव चामृतं पदमव्ययम्॥ ६५॥
इति पूर्वोत्तरवचो मन्यसे संगतं कथम्।
अवेद्यं चेन्न जानामि नास्तीति च निरूपय॥ ६६॥
अस्ति जानासि यदि तदवेद्यमिति मा वद।

இப்படி அஷ்டாவக்ரன் கூறியதைக் கேட்டு அந்தத் தாபசி மறுபடி கூறினாள். "முனி குமாரனே! எல்லோரும் மதித்துள்ளதை நன்கு கூறினாய். ஆனால் அதனைப்பற்றி அறிவதற்குள்ள ஸாதனமில்லாததால் அது அறிய முடியாதது எனக் கூறினாய். அதனை அறிந்தால் அழிவற்ற. நிலைத்த நிலையை அடையலாம் என்றாய். நீ கூறியதில் முன்னதும் பின்னதும் பொருந்துவதாக நினைக்கிறாயா? அறிய முடியாததெனில் 'நான் அறியேன்' என்றோ 'அது இல்லை' என்றோ கூறுவாய். "அது இருக்கிறது, அதனை நான் அறிவேன்" எனில் அது அறியமுடியாததெனக் கூறாதே.

*உலகில் ஒரு பொருள் இருந்தால் மட்டும் போதாது. அதனைக் காண கண் முதலிய பொறிகள், வெளிச்சம், காற்று போன்ற வெளிச் சாதனங்கள் முதலியவை உதவுகின்றன. பரம்பொருளோ இவ்வறிவிற்கு அப்பாற்பட்டது. இந்த அறிவு துண்டுதுண்டாகப் பெறப்பட்டுள்ளது. அதுவோ துண்டாட முடியாதது. காலத்திற்கும் தேசத்திற்கும் உட்பட்டதைத்தான் நாம் அறிவோம். அதுவோ காலதேசவரம்பிற்கு உட்படாதது. அதனை அறியத்தக்க பொறிகளோ வெளிச்சாதனங்களோ இல்லாமையால் அதனை அறியத்தகாது. அறியத்தகாத தெனவும் கூறிவிட்டு அதனை அறிந்தால் அழியா நிலை பெறலாம் என்றும் கூறுவது முரண்படுகின்றது. அறிவிற்குட்படாததை நான் அறியேன், என் அறிவிற்குட்படாதது எனக் கூறித் தப்பித்துக்கொள்ளலாம். அல்லது அறிவிற்குட்படாத பொருளே இருக்கமுடியாது. அதனால் பரம்பொருள் என்று இருப்பதற்கில்லை எனச் சாதிக்கலாம். இந்த இருவழிகளை விட்டுவிட்டு அறியத்தகாதது, அறிந்தால் மோக்ஷம் என்று முரண்படக் கூறுவது சரியா, என்பதே தாபசியின் கேள்வி.*

अथैतत्तु त्वया विप्र शास्त्रदृष्टया विभावितम् ॥ ६७॥
न तत् स्वयं विजानासि तस्मात्तन्नापरोक्षकम् ।
दृष्द्वा प्रत्यक्षतः सर्वं प्रतिबिंबं यथा स्थितम् ॥ ६८॥
आदर्शं न विजानासि प्रत्यक्षेणेति तत्कथम् ।
एवं वदन् सभामध्ये जनकस्यास्य वै पुरः ॥ ६६ ॥
परिभूतं स्वमात्मानं मन्यसे नो कथं वद ।

மேலும் இதனை சாஸ்திர நோக்கால் ஆராய்ந்துள்ளாயே தவிர அதனை நீ நேரடியாக பிரத்யக்ஷமாக அறியமாட்டாய். பிரதிபிம்பத்தை அது உள்ளபடி நேரடியாக அறிந்தபின் கண்ணாடி நேரிடையாகப் பார்க்கப்படவில்லை. எனில் அது எப்படி? ஜனகரின் முன்னிலையில் நடுவே இப்படி முரண்படப்பேசுகிற நீ அவமதிப்புக்கு உள்ளாகியுள்ளதை அறிய மாட்டாயோ! கூறுவாய்.

*சாஸ்திர வழியில் ஆராய்ந்து இருப்பதாகக் கண்டதாயின் அது நேரிடை அறிவு (அபரோக்ஷ ஞானம்) ஆகாது. உதாரணமாகக் காட்டிய கண்ணாடி பிரதிபிம்ப வாதப்படி, கண்ணாடியும் அதனுள் காணும் பிரதிபிம்பமும் பிரத்யக்ஷம். அப்படியிருக்க பிரதிபிம்பத்தை பிரதிபிம்பமாக அறிவேன்! கண்ணாடியை அறிய முடியாது' எனக் கூறுவது அறிவீனம். கண்ணாடியை அறிந்திருத்தாலன்றி பிரதிபிம்பத்தைப் பிரதிபிம்பமாக அறியமுடியாது. கண்ணாடியை அறியாதவன் பிரதிபிம்பத்தை ஸத்யமான பிம்பமாகக் காண்பான். இதுதான் முரண்பாடு.*

एवमुक्तस्तया तत्र नैव प्रोवाच किञ्चन ॥ ७० ॥
विमना इव संजातः लज्जितोऽभवदञ्जसा ।
अवाङ्मुखः क्षणं स्थित्वा विचार्यान्तस्तयेरितम् ॥ ७१ ॥
तत्प्रश्नोत्तरमप्राप्य तां प्राह द्विजसत्तमः ।

இப்படி அவளால் கூறப்பட்ட முனிகுமாரன் பதில் ஒன்றும் கூறவில்லை. மனமிழந்தவனாகி உடன் வெட்கமடைந்தான். தலை குனிந்தவாறு சிறிது நேரம் இருந்து மனத்தில் அவள் கூறியதைப் பற்றித் தீரயோசித்து அவள் கேள்விக்குப்பதில் கிட்டாமல், அவளைப் பார்த்துக் கேட்டான்.

तापस्यहं न जानामि त्वत्प्रश्नस्योत्तरं वचः ॥ ७२ ॥
शिष्योऽहं ते वदैतन्मे कथमेतन्निरूपितम् ।
नाहं वदाम्यनृतकं तपोहरमनर्थकम् ॥ ७३ ॥
इत्यापृष्टा तापसी सा प्रसन्ना तस्य सत्यतः ।
अष्टावक्रं प्रत्युवाच शृण्वतां च सभासदाम् ॥ ७४ ॥

"தாபசி! உங்களது கேள்விக்குரிய பதிலை நான் அறியேன். நான் உங்கள் சீடன். இதனது விளக்கம் எப்படி என்பதைக் கூறுவீராக, தவத்தைப் போக்கக்கூடிய பயனற்ற பொய்பேசமாட்டேன்." என்று கேட்கப்பட்ட தாபசி அவனது ஸத்யமொழியால் மனமிரங்கியவளாக மற்ற ஸபையினர் கேட்கும்படி அஷ்டாவக்ரனை நோக்கிக் கூறினாள்.

वत्सैतदविदित्वैव बहवो मोहमागताः ।
शुष्कतर्कैरविज्ञेयं सर्वथैव सुगोपितम् ॥ ७५ ॥
एतावत्सु सभासत्सु न विजानाति कश्चन ।
राजाऽयं वेत्त्यहं वापि वेद्मि नान्यस्तु कश्चन ॥ ७६ ॥

குழந்தாய்! இதனை அறியாமல் பலர் மயங்கி நிற்கின்றனர். வரட்டு வாதத்தால் இதனை அறியமுடியாது. எங்கும் இது மறைத்தே வைக்கப்பட்டுள்ளது. ஸபையில் உள்ள இத்தனை அறிஞர்களில் ஒருவரும் இதனை அறியமாட்டார். இந்த அரசன் அறிவார். நானும் அறிவேன் எனலாம். வேறு யாரும் அறியமாட்டார்.

सर्वत्र हि विवादेषु नैतत्प्रश्नोत्तरं क्वचित् ।
प्रायो विदुर्हि विद्वांसस्तर्कमात्रसमाश्रयाः ॥ ७७ ॥
नैतत्तर्केण विज्ञेयं अपि सूक्ष्मधिया क्वचित् ।

विना सद्गुरुसेवाया देवतानुग्रहाद्विना ।। ७८ ।।
मुनिपुत्राभिधास्यामि शृण्वेतत्सूक्ष्मया धिया ।

எல்லா விவாதங்களிலும் பகுத்தறிவு வாதத்தை மட்டும் அண்டி நின்றவர் அறிவாளியாயினும் இந்தக் கேள்விக்கான பதிலை பெரும்பாலும் அறியமாட்டார். பகுத்தறிவு வாதத்தால் கூரிய அறிவு கொண்டும் இதனை அறிய முடியாது. நல்ல குருவின் சேவை, தெய்வானுக்கிரஹம் இவ்விரண்டையும் தவிர வேறெதனாலும் அறிய முடியாது. முனி குமாரனே! நான் கூறுவதை கூரிய அறிவைக் கொண்டு புரிந்து கொள்வாய்.

नेदं श्रुत्वापि विज्ञेयं ताटस्थ्यप्राणया धिया ।। ७९ ।।
यावदेतद्धि विज्ञानमनुदाहृतमात्मनि ।
तावत्सहस्रशः प्रोक्तं श्रुतं चापि निरर्थकम् ।। ८० ।।

கேட்பதால் மட்டும் மேலெழுந்தவாரியாக உள்ள புத்தியால் இது அறியக் கூடியதல்ல. கேட்டறிந்ததனைத்தையும் தன்னிடம் பொருந்திப் பார்க்காவிடில் (ஆத்மாவைப் பற்றிய ஸ்வப்ரகாச – சுத்த– நித்யபுத்தாதி லக்ஷணங்கள் தன்னிடம் பொருந்தியுள்ளதாக உணராதிருந்தால்) ஆயிரம் தடவை சொன்னதும் கேட்டதும் பலனற்றதாகும்.

यथा कश्चित् स्वकण्ठस्थं मुक्ताहारं प्रमादतः ।
अविज्ञाय हृतं चौरैर्मन्यते मूढभावतः ।। ८१ ।।
प्रबोधितोऽपि स पुनः कण्ठेऽस्तीति हि केनचित् ।
स्वात्मानमनुदाहृत्य यावत् कण्ठं न पश्यति ।। ८२ ।।
तावन्नाप्नोति कण्ठस्थं हारं सूक्ष्मविमर्श्यपि ।
एवं मुनिसुतात्मानं स्वस्वभावं निशम्य च ।। ८३ ।।
भूयोऽतिनिपुणोऽप्यन्तरात्मानमनुदाहरेत् ।
यावत् तावत् बहिः कुत्र कथं तद् विदितं भवेत् ।। ८४ ।।

ஒருவன் தன் கழுத்திலுள்ள முத்தாரத்தை கவனமின்மையால் கழுத்திலுள்ளதாக உணராமல், திருடர்களால் அபகரிக்கப்பட்டதாக முட்டாள் தனத்தால் நினைத்தான். வேறொருவனால் கழுத்தில் இருக்கிறதே என நினைவூட்டப்படுகிறான். அப்போதும் அவன் தன்னை உற்றுநோக்கிக் கழுத்தைப் பார்க்காவிடில் கழுத்திலுள்ள ஹாரத்தை அவன் கூரிய நோக்குள்ளவனாயினும் உணர முடியாது. அப்படியே தன்னை – தன் இயற்கை நிலையை நன்கு கேட்டிருந்தும் நல்ல நிபுணனாயிருந்தும்

அத்தகையவனாக உற்றுநோக்கிய நிலையில் இருந்து உணராவிடில் அதனை வெளியே எங்கு எப்படி அறிந்து கொள்ள முடியும்?

यथा हि दीपो विषयान् प्रकाशयति सर्वतः।
स्वयं प्रकाश्यतां नैति क्वचिद्दीपस्य कस्यचित्॥ ८५ ॥
प्रकाशते स्वयं चैवानपेक्ष्यान्यं प्रकाशकम्।

ஒரு தீபம் சுற்றிலும் உள்ள பொருள்கள் அனைத்தையும் தன் ஒளியால் விளக்குகிறது. அது தன்னை வேறொரு தீபத்தின் மூலம் விளக்கிக் கொள்வதில்லை. தன்னைத் துலக்க மற்றொரு தீப ஒளியை எதிர் பார்க்காமலேயே தன்னை துலக்கிக் காட்டுகிறது.

एवं सूर्यादयः सर्वे प्रकाशकतया स्थिताः॥ ८६ ॥
एवं च किं दीपमुखा अप्रकाश्यत्वहेतुतः।
न सन्ति न प्रकाशन्त इति वक्तुं हि युज्यते॥ ८७ ॥
एवं प्रकाश्यभूतेषु सत्सु दीपमुखेषु वै।
अत्यन्तमप्रकाश्यं यच्चित्तत्वं तत्कुतो वद॥ ८८ ॥

இப்படி சூர்யன் முதலான எல்லாம் மற்றவற்றையும் துலக்கிக் கொண்டு தன்னைத் துலக்கிக் கொள்வதாகவும் உள்ளன. பிற பொருளால் துலக்கப்படாதவை என்ற காரணத்தால் தீபம் முதலானவற்றை அவை இல்லை என்றோ அவை ஒளிவிடவில்லை என்றோ கூறுவது தகுமா? அந்த தீபம் முதலானவை சித்தால் உணரப்படுகின்ற நிலையில் தன்னைக்காட்டப் பிற பொருள்களைச் சிறிதும் நாடாதது சித்தத்துவம். இது ஏன் என்பதைச் சிந்தித்துப்பார்.

*ஆத்மாவை மனமோ பொறிகளோ உணர்த்தமுடியாததால் ஆத்மாவே இல்லை எனலாம் என்றதொரு யுக்தி கிளம்புகிறது. பெரும்பாலும் வெளிப்பொருள்கள் மனம் முதலியவற்றால் உணர்த்தப்படுபவையே. அதற்காக மனம் முதலியவற்றின் உதவியின்றி தானே தன்னிருக்கையால் காட்டிக்கொள்ளும் ஆத்மாவை இல்லையென்று கூறுவதற்கில்லை. தீபம் தன்னையும் ஒளியால் விளக்கிக் கொண்டு மற்றவற்றையும் விளக்குகிறது. மற்றவற்றை விளக்கும் தீபத்தை விளக்க மற்றொரு தீபமோ வேறு பொருளோ தேவைப் படுவதில்லையல்லவா? வேறு பொருளால் விளங்காதது என்ற காரணத்தால் தீபம் இல்லை என்று சொல்லத்தகுமோ? வானில் ஸூரியனைத் துலக்க வேறு ஒளி தேவைப் படுவதில்லையே! வேறு ஒளியால்*

*விளக்கப்படாமையால் ஸூர்யன் இல்லை என்போமோ? அதுபோல் ஆத்மா மற்றவற்றைத் தன்னிருக்கையால் விளக்கிக்கொண்டு அதேசமயத்தில் தன்னிருக்கையையும் காட்டிக்கொள்கிறது. "மனம் முதலியவற்றால் உணர்த்தப்பெறாதிருத்தலால் அது "இல்லை" என்பது தகாத வாதம்.*

असंवेद्यं प्रकाशेत चेत्यत्र विचिकित्सितम्।
तस्मात्त्वमन्तर्मुखया दृष्ट्या सम्यक् विचारय॥ ८९॥

மற்றொன்றால் துலக்கமுடியாதிருக்கும் ஒன்று தானே துலங்கும். மனத்தை உள்ளே திருப்பி நன்கு யோசித்துப்பார்.

*தீபம் ஒளியுடன் தானும் பிரகாசித்து மற்றவற்றையும் துலக்குகிறது. அந்த தீபத்தையும் அதன் ஒளியையும் அதனால் துலக்கப்படுபவற்றையும் உணர்வது சித்சக்தி. ஜடமான தீபமே மற்றவற்றைத் துலக்குகிறது. தன்னைத் துலக்க வேறொன்றை எதிர்பார்க்கவில்லை எனில் சித்சக்திக்கு இந்த தன்மை உள்ளதென்பதில் ஏன் ஐயம்? அப்படி ஐயம் மறைத்தால் புத்தியை உட்புறம் திருப்பி நமது உணர்ச்சிகள் அனைத்தும் எந்த ஒளியின் பிரகாசத்தால் கிடைக்கின்றன என்பதைச் சிந்தித்தால் ஆத்ம ஒளியாகிய சித்சக்தியே எல்லா உணர்வுகளுக்கும் மூலம் என்பது துலங்கும். அதற்கும் மூலம் ஒன்றுமில்லை என்பதும் துலங்கும். அப்படி மூலமாயிருந்து தனக்கெனத் தனித்த மூலத்தைக் கொள்ளாமலேயே அது சேதன சக்தியைப் பரப்புவதையும் உணரலாம்.*

चिच्छक्तिरेषा परमा त्रिपुरा सर्वसंश्रया।
सर्वावभासिनी कुत्र कदा वा न प्रकाशते॥ ९०॥
यदा सा न प्रकाशेत प्रकाशेत तदा नु किम्।

இந்த சித்சக்தி எல்லாவற்றிற்கும் மேம்பட்டது. முப்புரங்களுக்கும் அப்பாற்பட்டது. எல்லாவற்றிற்கும் ஆதாரமானது. எல்லாவற்றையும் துலக்குவது. அது எங்கு ஏன் பிரகாசிக்காமலிருக்கும்? அது பிரகாசிக்காவிடில் வேறு எதுதான் பிரகாசிக்கும்?

अप्रकाशेनापि सैव चितिशक्तिः प्रकाशते॥ ९१॥
अप्रकाशो यथा भाति सा न भायात् कथं वद।
भाति चेत् सा कथं भाति विमृशैतत् सुसूक्ष्मतः॥ ९२॥

ஒன்றும் துலங்காத நிலையிலும் அந்த சித்சக்திதான் துலங்குகிறது. ஒன்றும் துலங்கவில்லை என்ற உணர்விருக்கிறதே? அது ஏற்படும்போது சித்சக்தி துலங்கவில்லை என்று எப்படிக் கூறமுடியும்? சித்சக்திதான் அப்போது துலங்குமென்றானால், அது எப்படித் துலங்குகிறது என்பதைச் சிந்தித்துப்பார்.

*இது இருக்கிறது என்ற உணர்வு ஒளியின் மூலம் வருமானால் இது இல்லை என்ற உணர்வு ஒளி மூலமாகத்தான் வரும். விழிப்பில் தோன்றும் உணர்வுகளுக்கு சித்சக்தியே காரணமாகும். அதுபோல் ஆழ்ந்த தூக்கத்திலும் பிரளயத்திலும் ஒன்றுமே துலங்காதபோது, அந்த "ஒன்றுமே துலங்கவில்லை" என்ற உணர்விற்கும் மூலமாவது அந்த சித்சக்தியே. வெளிச்சமுள்ள ஒரு அறையில் குடம் இல்லை. அப்போது குடமில்லாதிருப்பதை உணர்வது அந்த சித்சக்தி. பொருளை உணர்வதுபோல் பொருளின்மையையும் உணர்வது சித்சக்தியே. பொருளில்லாதபோது ஏற்படும் உணர்வு தன்னால் விளக்கத்தக்க பொருளின்மை என்ற வடிவில் தோன்றும். அந்த சித்சக்தி பொருளிருக்கும் போதும் இல்லாதபோதும் ஒரே நிலையில் உள்ளது. அந்த பிரகாச அப்ரகாச நிலைகளுக்கு ஆதாரமான இதனை விமர்சித்துப் பார் என்கிறாள். ஆனால் கண்ணால் கண்டதை ஆராய்வது எளிது. காணாத சித்சக்தியை ஆராய்வது எங்ஙனம் என்ற கேள்விக்குப் பதிலளிக்கிறாள்.*

अत्र सर्वे न पश्यन्ति कुशला अपि पण्डिताः।
अनन्तर्दृष्टयस्तेन मोहिताः संसरन्ति च॥ ६३॥
यावद् दृष्टिः प्रवृत्तिं तु न परित्यज्य तिष्ठति।
तावदन्तर्दृष्टितापि न स्यादेव कथंचन॥ ६४॥

இந்த சுத்த சித்தை மிகக்கூர்மையான அறிவுள்ளவரும் விரிந்த கல்வியறிவு உள்ளவரும் பார்ப்பதில்லை. ஏனெனில் அவர்கள் உள்நோக்கில்லாதவர்கள். உள்நோக்கில்லாத காரணத்தால் கலக்கமுற்று பிறப்பிறப்புச்சுழலில் சிக்கி நிற்கிறார்கள். மனம் ஸங்கல்பத்தைவிட்டுச் சலனமின்றி நிற்கும்வரை இந்த உள்நோக்கு கட்டாயம் ஏற்படாது.

यावन्नान्तर्दृष्टिमेति तावत्तां न प्रपश्यति।
अन्तर्दृष्टिनिरीहा स्यात् सेहायाः सा कथं भवेत्॥ ६५॥
परिहृत्य तु तां सम्यक् स्वभावमुपसंश्रय।
क्षणं स्वं भावमाश्रित्य निर्विमर्शस्ततः परम्॥ ६६॥
विमृश्य स्मरणद्वारा ततो वेत्सि समस्तकम्।

உள்நோக்காளனாக ஆகாதவரை அந்த சித்சக்தியை உணர முடியாது. ஸங்கல்பமின்மையே உள்நோக்காகும். ஸங்கல்பமுள்ள நிலையில் சித்சக்தி எப்படி புலப்படும்? ஸங்கல்பத்தைத் துறந்து உள்ளே உள்ள தன்னிலையான சித்சக்தியை அண்டிநிற்பாய். நிறைவு நிலையாகிய அதனுடன் சேர்ந்தவுடன் க்ஷணநேரமாவது வெளிஈடுபாடுகளின்றித்தான் சித்சக்தியுடன் இணைந்துள்ள நிலையை நினைவிற்கொண்டு அதனை ஆராய்ந்ததும் உனக்கு எல்லாம் புலப்படும்.

असंवेद्यं सुवेद्यं च तदेवं तत्वमुच्यते।। ९७।।
चिदित्यैवमवेद्यं च प्राप्नुयादमृतां स्थितिम्।

இத்தகைய ஆராய்வால் முன்னர் உணரப்படாதிருந்த சித்சக்தி இப்போது எளிதில் உணரப்படுவதாக ஆகும். அந்த நிலையை உணர்ந்ததும் அழிவற்ற நிலையை அடையலாம்.

एतत्तेऽभिहितं सर्वं मुनिपुत्र नमोस्तु ते।। ९८।।
व्रजाम्यहं त्वया चैतन्न विज्ञातं सकृच्छ्रुतेः।
बोधयष्यति त्वामेष राजा बुद्धिमतां वरः।। ९९।।
पृच्छ भूयः संशयं ते सर्वं छेत्स्यति वै नृपः।

முனிகுமார! அனைத்தையும் உனக்குச் சொல்லியாகிவிட்டது. உனக்கு வணக்கம். நான் செல்கிறேன். ஒரே தடவை கேட்ட படியால் உன்னால் நன்கு அறியப்படவில்லை எனில் இந்த அறிவாளிகளில் சிறந்தவனான அரசன் உனக்கு விளக்குவான். உனது ஐயங்களைப்பற்றி மறுபடி கேட்பாய். அரசன் ஐயத்தைப் போக்குவான்.

इत्युक्त्वा पूजिता राज्ञा प्रणता च सभासदैः।। १००।।
वातनुन्नभ्रलेखेव क्षणादन्तर्धिमाययौ।
एतत्तेऽभिहितं राम वेदनप्रक्रियाऽऽत्मनः।। १०१।।

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
अष्टावक्रीयं नाम पञ्चदशोऽध्यायः।

இவ்வாறு கூறிவிட்டு அரசனாலும் ஸபையோராலும் வணங்கி வழிபடப்பட்டவளாக காற்றால் உந்தப்பட்ட மேகக்கோடுபோல் நொடியில் மறைந்துவிட்டாள். இதுதான் ஆத்மாவை உணரும்முறை ராமரே! அது உமக்கு விளக்கப்பெற்றது.

*இவ்வாறு ஸ்ரீதிரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் அஷ்டாவக்ரர் பற்றிய சரிதமாகிய பதினைந்தாவது அத்தியாயம்.*

# षोडशोऽध्यायः

## பதினாறாவது அத்தியாயம்

श्रुत्वैतद् भार्गवो रामः प्राप्य विस्मयमान्तरे।
भूयः पप्रच्छात्रिसूनुं अवितृप्तः कथाश्रुतेः॥ १॥

இதனைக் கேட்ட பரசுராமர் மனத்தில் வியப்படைந்தவராகத் தான் கேட்ட கதையால் மன நிறைவுறாதவராக மறுபடியும் தத்தரிடம் கேட்டார்.

भगवन्नद्भुतं ह्येतत् श्रुतं वृत्तं पुरातनम्।
भूयः पप्रच्छ राजानां अष्टावक्रो महामुनिः॥ २॥
यद्राजा प्रत्युवाचैनं तच्च मे वद सर्वशः।
अहोऽद्भुतं समाख्यानं न क्वचिच्च मया श्रुतं॥ ३॥
विज्ञानवृत्तसर्वस्वं दयया वद मे गुरो।
इत्येवमनुयुक्तोऽथ दत्तात्रेयो महामुनिः॥ ४॥
भार्गवाय समाचख्यौ कथां परमपावनीम्।

"பகவானே! இந்தப் பழங்கதை மிகவும் விந்தையானது. அஷ்டாவக்ர மஹரிஷி அரசரை மறுபடி என்ன கேட்டார்? அரசர் என்ன பதில் கூறினார். அதனைத்தையும் கூறுவீர்களாக. இந்த வியப்பூட்டும் சரித்தயை எங்கும் நான் கேட்டதில்லை. அறிவூட்டும் முறையனைத்தையும் தயையுடன் எனக்குக் கூறவேண்டும்" என்று கேட்கப்பட்ட தத்தாத்ரேய மஹரிஷி பரசுராமருக்கு மிகவும் தூய்மை தரும் கதையைக் கூறினார்.

शृणु भार्गव यत्प्रोक्तं जनकेन महात्मना॥ ५॥
निर्गतायां तु तापस्यां अष्टावक्रो मुनेःसुतः।
संवृतो बहुभिर्विप्रैः समेत्य नृपपुंगवम्॥ ६॥
पप्रच्छ यत्तु तापस्या संक्षिप्योक्तं महार्थकम्।
तदुच्यमानं तु मया सम्यक् शृणु समाहितः॥ ७॥

பரசுராமரே! ஜனகர் கூறியதனைத்தையும் கேட்பீர். தாபசி வெளியேறியதும் அஷ்டாவக்ரர் என்ற முனிகுமாரர் பல அந்தணர்களுடன்

சேர்ந்து அரசனை அடைந்து தாபசியால் சுருங்கக் கூறப்பட்டதும் பெரும் பொருள் உள்ளதுமானதைப் பற்றிக் கேட்டார். அதனைக் கூறுகிறேன். கவனித்துப் கேட்பாய்.

राजन् विदेहाधिपते तापस्योक्तं तु यत्तया।
तदहं नाविदं समयक् संक्षेपोक्तत्वहेतुतः ॥ ८ ॥
कथं विद्यामवेद्यं तत्समाचक्ष्व दयानिधे।
एवं जनक आपृष्टः प्राह तं विस्मयन्निव ॥ ९ ॥

விதேக தேசத்தரசே! தாபசியால் சுருக்கமாகக் கூறப்பட்டபடியால் நன்கு நான் அறியேன். வேறொன்றால் அறிய முடியாத அந்த தத்துவத்தை எப்படி நான் அறிவேன்! இதனை விளக்கு வீராக! என்று கேட்கப்பட்ட ஜனகர் வியப்புடன் கூறினார்.

मुनिपुत्र शृणु वचो मया यत् प्रोच्यतेऽधुना।
नावेद्यं सर्वथा तद्धि वेद्यं चापि न सर्वथा ॥ १० ॥
अवेद्यं चेत्सर्वथैव तद् गुरुः किं वदेद्वद।

முனி குமாரரே! நான் கூறுவதைக் கேளும். எவ்வகையாலும் அது உணர முடியாததுமல்ல. எவ்வகையாலும் அறிய முடியாததாயின் குரு எப்படி விளக்குவார்?

गुरुरावेदयेत् तत्त्वं अत आदौ गुरुं श्रयेत् ॥ ११ ॥
एतद्वेदनमत्यन्तं सुलभं दुःशकं च हि।
यः परावृत्तदृष्टिः स्यात् तस्य तत्सुलभं भवेत् ॥ १२ ॥
यः पराग्दृष्टिरेवास्ते तस्य तच्चातिदुर्लभम्।

குருதான் இதன் உண்மை நிலையை விளக்க முடியும். அதனால் குருவை முதலில் அடைய வேண்டும். இதனை உணர்வது மிக எளிதும் முடியாததும் கூட. வெளிநோக்கை உள் திரும்பிப் பார்ப்பவனுக்கு இது எளிது. வெளி நோக்குள்ளவனாகவே இருப்பவனுக்கு இதனை அடைவது மிகவும் சிரமம் தரும்.

अनिरूप्यं केवलं तत् अवेद्यमपि सर्वथा ॥ १३ ॥
कथंचिदन्यरूपेण निरूप्यं वेद्यमप्युत।

இது எனச் சுட்டிக்காட்ட முடியாத (வேறு உவமை – இணையில்லாததும் வேறு அடையாளமில்லாததுமான) தனித் தத்துவம் இது. ('இது அல்ல' 'இது அல்ல' என்றவாறு) வேறு வழியில் தான் இதனைக் காட்டி உணர்த்த முடியும்.

यद् यद् दृश्यं पश्यसीह तेन तद्वेद्यं उच्यते ॥ १४ ॥
यत्तेऽवभासते किञ्चित् तद्विभावय सद्धिया।
भानशक्तिर्भास्यहीना सर्वभानसमाश्रया ॥ १५ ॥
सैव तत्तत्वमित्येव विजानीहि मुनेः सुत।

உலகில் காணப்படுகிற பொருள்களின் வடிவிலேயே அந்த ஞானம் உணரப்படுகிறது. காணப்படுகிற பொருளைக் கூர்ந்து அறிவால் விளக்கிப்பார். ஞானம் காணப்படுகிற பொருளைக்காட்டிலும் வேறுபட்டது. அந்த ஞானம் எல்லா பொருளைப்பற்றிய உணர்விற்கும் ஆதாரம். அந்த ஞானம் எனும் சித்சக்தியே சுத்தமான ஆத்ம தத்வம் என்பதை அறிவாய்.

*தாபசி ஸங்கல்பமில்லாத நிலையில் மனமடங்கிய நிலையில் ஆத்மதத்வம் சுத்தமான சித்சக்தியாகத்துலங்கும் என்றாள். அதனை மேலும் விளக்குகிறார் ஜனகர். நான் குடத்தைப் பார்க்கிறேன். குடத்தைப் பார்ப்பதாகிற அறிவு – உணர்வு எனக்கு ஏற்படுகிறது. பாட்டைக் கேட்கிறேன். ஒலியை உணர்வதாகிற ஞானம் எனக்கு ஏற்படும். குடப்பார்வையும், ஒளிக்கேள்வியும் தனித்தனியான இரண்டு ஞானங்கள் என்று நான் பொதுவாக நினைக்கிறோம். இதனை மறுபடி விளக்கலாம். குடப்பார்வையில் இரண்டு அம்சங்கள் உள்ளன. குடம், பார்வை என. குடம் என்பது ஞானத்தால் விளக்கப்படுவ—தானதால் அது ஞானம் அல்ல; அது பிரகாச்யம். குடத்தை விட்டு அந்த பிரகாசத்தைப் பிரித்துப் பார்த்தால் வேறுபடாற்றதாக – துண்டாட முடியாததாக – எல்லாவற்றிலும் தொடர்ந்த ஞானமாக – பூரண சித்தாக இருப்பது விளங்கும். அதேபோல்தான் பாட்டைக் கேட்பதாகிற ஒளி கேள்வியும். அதிலுள்ள ஒளியையும் கேள்வியையும் பிரித்துப் பார்ப்போம். ஒளி பிரகாச்யம், ஜடம். ஒளிக்கேள்வியானது பிரகாசம் ஞானவடிவமானது. ஒளியைப் பிரித்த பிறகு அதுவும் அகண்டா காரமாக – துண்டாட முடியாததாக பூரணமானதாகத் துலங்கும். முன்பு குடப்பார்வையும் ஒலிக்கேள்வியும் தனித்தனி ஞானங்கள் என்று நினைக்கப்பட்டதல்லவா? இப்போது பிரகாச்யமான குடத்தையும் ஒலியையும் நீக்கிப்பார்த்தால் எல்லாவற்றிலும் தொடர்புள்ள ஒரே ஞானம்தான் தத்துவம். பார்வை கேள்வி*

*என்று வேறுபாடு உண்மையானதல்ல என்பது புலப்படும். குடம் ஒளி என்ற இரண்டு உபாதிகளால் குடப்பார்வை, ஒலிக்கேள்வி என்ற இரு வடிவங்கள் ஏற்பட்டது. உபாதிகளை நீக்கியதும் பார்வை கேள்வி என்ற பாகுபாடும் மறைந்து உணர்வு என்ற ஞானம் மாத்திரம் ஏகாகாரமாக ஏற்படுகிறது. இதனை மேலும் விளக்குகிறார்.*

वेद्यमेव न वित्तिः स्यात् स्वतो यन्न प्रकाशते ।। १६ ।।
वित्तिरन्या यया वेद्यं वेद्यते न स्वतः क्वचित् ।
वेद्यं विभिन्नरूपं वै वित्त्यैव वेद्यते खलु ।। १७ ।।
तत्तद्रूपविभेदेन वित्तिर्नो भिद्यते क्वचित् ।

அறிவால் உணரப்படுவது (குடம் ஒலி முதலானது) அறிவாகாது. அந்த உணரப்படுகிற பொருள் தானே துலங்குவதில்லை அல்லவா? அறிவு என்பது உணரப்படும் பொருளைக் காட்டிலும் வேறுபட்டது. அதனால்தான் குடம் ஒளி போன்றவை உணரப்படுகிறது. அறிவால் உணரப்படுவது. அறிவால் உணரப்படுவது (குடம் ஒலி என்றவாறு) பலதரப்பட்டது. அறிவு அவற்றிலிருந்து வேறுபட்டது. குடம் முதலியவற்றின் உருவ வேற்றுமையால் அறிவில் வேற்றுமை ஏற்படுவதில்லை.

भेदो हि वेद्यधर्मः स्यात् न वित्तिं संस्पृशेत् क्वचित् ।। १८ ।।
यत आकारभेदो हि वेद्यपक्षे विभासते ।

அறிவால் உணரப்படும் பொருளில் உள்ள வேற்றுமை அறிவில் ஒட்டாது. உருவ வேறுபாடு பொருளில்தான் காணப்படுகிறது. (அறிவில் அல்ல).

पश्य वेद्यं पृथक्कृत्य बुद्ध्याकारविवर्दितम् ।। १९ ।।
बिम्बानुकृतिरादर्शे यद्वत्तद्वदियं स्थितिः ।
दृश्याकारधृतेर्नानारूपतां प्रतिपद्यते ।। २० ।।
एवं वित्तिरियं वेद्या वेद्यव्यावृत्तरूपतः ।
न तु स्वभावतो वेद्या सा वित्तिर्विश्वसंश्रया ।। २१ ।।
यत एतद्वेदितुः स्यात् रूपं तस्मान्न वेद्यते ।

அறிவால் உணரப்படும் பொருளை அறிவிலிருந்தும் பிரித்துப் பார். அப்போது அதற்கு உருவ வேறுபாடின்மையைக் காணலாம். பிம்பத்தை ஒட்டிப் பிரதிபிம்பம் பலவாறாகத் துலங்குதுபோல் இதன் நிலையுமாகும். காணப்படுகிற பொருளின் வடிவை அறிவை எடுத்துக்கொள்வதால் அறிவும்

பல வடிவுள்ளதாகக் காணப்படுகிறது. காணப்படுகிற பொருளை விலக்கினால் இதனைக்காண முடியுமானதால் இந்த அறிவு உணரக்கூடியதாகின்றது. அப்படி விலக்கிப்பார்க்காமல் இதனை உணர முடியாது. இந்த அறிவு உணரப்படும் உலகனைத்திற்கும் ஆதாரம். இது உணர்பவனாகிய ஆத்மாவின் வடிவே. அதனால்தான் இதனைத் தனித்து உணரமுடியாது.

*குடத்தைப் பார்க்கிறேன் என்பது போன்ற உணர்வுகளைக் கூறு போட்டுப் பார்ப்போம். உணர்பவன் ராமன் கிருஷ்ணன் என்றவாறு பலர். உணரப்படும் பொருளாகிய குடம் துணி ஒலி முதலியவை பல, குடப்பார்வை, துணிப்பார்வை, ஒலிக்கேள்வி என்றவாறு உணர்வுகளும் பல. இது பொதுப்படையான நோக்கு. இவை அனைத்திலும் இரண்டு பொது அம்சங்கள். ஒன்று உணரப்படும் பொருள் – வேத்யம். மற்றொன்று உணர்வு. (வித்தி – ஸம்வித்சித் ஞானம் என்ற பலபெயர்களால் குறிப்பிடப்படுவது.) பார்வை என்ற உணர்வு குடம் என்ற பொருளாலும் கண் என்ற கரணத்தாலும் மற்ற உணர்வுகளிலிருந்தும் வேறுபடுகிறது. கேள்வி என்ற உணர்வு ஒலி என்ற பொருளாலும் காது என்ற கரணத்தாலும் மற்ற உணர்வுகளிலிருந்தும் வேறுபடுகிறது. உணரப்படுகிற பொருளோ கரணமோ உணர்வல்ல. உணரப்படும்பொருள் இருந்தால் மட்டும் உணர்வு ஏற்படுவதில்லை. கரணம் இருந்தால் மட்டும் உணர்வு ஏற்படுவதில்லை. 'நான்' உணர்ந்தால் மட்டுமே உணர்வு ஏற்படுகிறது. வேற்றுமைகள் உணரப்படும் பொருளிலும் காரணத்திலும் தான் உள்ளன. உணர்பவனாகிய ஆத்மாவிடத்திலோ உணர்விலோ இல்லை. அதாவது குடம் உணர்விற்கு விஷயமாகவதால் குடஉணர்வு என்போம். குடம் கண் மூலம் விஷயமாவதால் பார்வை உணர்வு என்போம். குடம் கண் இரண்டையும் நீக்கி விட்டால் நான், உணர்வு என்ற இரண்டு மாத்திரம் மீதமாகும். கூர்ந்து நோக்கினால் 'நான்' இன்றி உணர்வில்லை. இந்த உணர்வு இல்லாவிடில் 'நான்' என்பதும் புலப்படப்போவதில்லை. ஆகவே நானும் உணர்வும் ஒன்றாகிவிட்டதைக் காணலாம். இந்த நான் என்பதையும் கூர்ந்து பார்த்தால் ராமன் கிருஷ்ணன் என்ற உடலாலும் பெயராலும் ஏற்படும் வேற்றுமையை அகற்றிவிட அகண்டாகாரமான 'நான்' மிஞ்சும். அதுவே சித் – ஸம்வித்– ஞானம். ஆத்மா என்ற சுத்த தத்துவமாகும்.*

*கண்ணாடியில் வெளியிலுள்ள பல பிம்பங்களின் பல பிரதிபிம்பங்கள் தெரிகின்றன. தெரியும் பிரதிபிம்பங்களின் வேறுபாடு கண்ணாடியை பாதிக்காது. கண்ணாடி ஒன்றே. வேறுபாடு பிம்பத்தில் உள்ளது என்று உதாரணம் காட்டி இதனை விளக்குகிறார் ஜனகர்.*

विमृशाष्टावक्र रूपं निजमेवंविधं स्फुटम् ॥ २२ ॥
न त्वं शरीरं प्राणो वा मनो वाऽप्यस्थिरत्वतः ।
शरीरं धातुनिकरं तत्ते रूपं कथं भवेत् ॥ २३ ॥
तच्चान्याविषयाभासे त्वहंधियमतिव्रजेत् ।

அஷ்டாவக்ரரே! நீர் உமது சொந்தமான வடிவத்தை ஸ்பஷ்டமாக சிந்தித்துப் பாரும். நீர் சரீரமோ பிராணனோ மனமோ அல்ல. அவை ஸ்திரமற்றவை. உடல் என்பது (ரக்தம் தசை முதலிய) தாதுக்களின் குவியல் தானே! அது எப்படி உமது வடிவமாகும். வெளியிலுல்ள வேறு பொருளைக் காணும்போது நான் என்ற எண்ணத்திற்கு வெளிப்பட்டே உடல் காண்கிறது.

*'நான் இதனைப் பார்க்கிறேன்' எனும்போது, பார்க்கின்ற என்னைக் காட்டிலும் வேறுபட்டதாகவும் அது நான் அல்ல என்ற எண்ணத்திற்கு உட்பட்டதாகவும் இதனை உணர்கிறேன். ஆகவே பார்க்கப்பெறுகிற பொருள் 'இது' என்ற உணர்விற்கு உட்பட்டது. 'நான்' என்ற உணர்விற்கு வெளிப்பட்டது. அதுபோல்தான் இந்த உடலும். ரத்தமும் தசையும் 'நான்' என்ற உணர்விற்கு உட்படாதவை. 'இது' என்ற உணர்விற்கு உட்பட்டவை. 'என் உடல்' 'என் தசை' 'என் ரத்தம்' என்ற உணர்விற்கு உட்படுகின்ற இவை 'நான்' ஆகாதல்லவா? 'நான்' என்பது விழிப்பிலும் கனவிலும் தூக்கத்திலும் ஸமாதியிலும் தொடர்ந்து நிற்பது. உடல் விழிப்பில் மட்டும் தொடர்வது. அதனால் நிலையற்றது. 'நான்' என்பது தானே தன்னை விளக்கிக்கொள்ளும், தீபம்போல் உடல் மற்றொன்றால் விளக்கப்பெறுவது. 'நான்' என்பது நானே. எனது உடல் 'நான்' ஆகவும் 'எனது' ஆகவும் கலந்து பின்னி உணரப்பெறுகிறது. 'எனது' என்ற பொருள் என்னைக்காட்டிலும் வேறுபட்டது. 'எனது' என்ற பொருள் என்னைக்காட்டிலும் வேறுபட்டது. 'எனது' என்ற உணரப்பெறும் பொருள் 'இதம் ப்ரத்யயகோசரம்' – இது என்ற உணர்விற்கு உட்படுவது. 'அஹம் ப்ரத்யயத்திற்கு கோசரமல்ல – நான் என்ற உணர்விற்கு வெளிப்பட்டதே.*

एवं प्राणो मनोऽपि स्यात् अहं बुद्धिव्यतिक्रमात् ॥ २४ ॥
अहंबुद्धिं न व्यतीत्य तिष्ठत्येषा परा चितिः ।

இப்படியே பிராணனும் மனமும் நான் என்ற உணர்விற்கு வெளிப்படுபவையாதலால், 'நான்' அல்ல. எல்லாவற்றிற்கும் வெளிப்பட்ட சித்சக்தி நான் என்ற உணர்விற்கு வெளிப்பட்டதாக எந்நிலையிலும் நிற்பதில்லை.

तस्माच्चितिः सर्ववेत्त्री त्वमष्टावक्र तत्त्वतः ।। २५ ।।
पश्य प्रत्यावृत्तचक्षुः स्वात्मानं केवलां चितिम् ।

அதனால் நீ அந்த எல்லாவற்றையும் உணரும் சித்சக்தியே. நீ தன்னை அந்த சுத்த சக்தியாக இருப்பதை உட்புறத்தில் உன் கண்களைத் திருப்பிக் காண்பாயாக.

आदेशकाल एव स्वं पश्यन्त्युत्तमबुद्धयः ।। २६ ।।
चक्षुर्नैतद्गोलकं ते मनश्चक्षुरुदाहृतम् ।
येन पश्यति स्वप्नेषु तच्चक्षुर्मुख्यमुच्यते ।। २७ ।।
तस्य प्रत्यावृत्तिरपि प्रोच्यते शृणु भूसुर ।
अप्रत्यावृत्तचक्षुर्वै नैष पश्यति किञ्चन ।। २८ ।।
दिदृक्षुश्चक्षुषा किञ्चित् तदन्येभ्यो ह्यशेषतः ।
प्रत्यावृत्य दृढं तस्मिन् एव संयोजयेद्यदि ।। २९ ।।
तदा तद्भासते स्पष्टं नान्यदा तु कदाचन ।
अन्यदा तु पुरोवृत्ति न स्पष्टं भासते क्वचित् ।। ३० ।।
अभातकल्पमेव स्यात् अप्रत्यावृत्तवचक्षुषा ।

உபதேசம் செய்யும்போதே சிறந்த அறிவாளிகள் ஆத்மதத்துவத்தை உணர்வார்கள். 'கண்களை உட்புறம் திருப்பு' எனும்போது கண்கள் என்பவை வெளியில் தெரியும் உறுப்பல்ல. அது ஒரு தசை கோளம். மனமே கண்கள். (விழிப்பில்தான் இந்தக்கணகள் மனம் மூலமாகப் பார்க்கும் கனவில் பார்ப்பது மனமே) கனவில் பொருளை காண்கிற மனமே முக்கியமான கண். அந்த மனம் வேறுபொருளைக் காணாமல், அவற்றிலிருந்து தன் குறியை நீக்கிப் பார்க்க வேண்டியதையே குறியாகக் கொள்வது தேவை என்பார்கள். இப்படி நோக்கை ஒருமுகப்படுத்தாதவன் எதனையும் பார்ப்பதில்லை. ஒன்றைக் கண்ணால் காணவிரும்புபவன் காணவேண்டியவற்றைத் தவிர மற்றவற்றில் கண்களைச் செலுத்தாமல் பார்க்க வேண்டியதில் கண்களை நன்கு பொறுத்தினால்தான் அந்தப்பொருள் நன்கு துலங்கும். பொருத்தாதபோது அது எப்பொழுதும் துலங்காது. பொருத்தாதபோது எதிரில் உள்ள பொருளும் ஸ்பஷ்டமாக உணரப்படுவதில்லை. நன்கு துலங்காதது போன்ற அது காணப்படும்.

एवं श्रोत्रत्वगादीनां भूदेवावेहि संस्थितिम् ॥ ३१ ॥
मनसोऽप्येवमेव स्यात् सुखदुःखावभासनम् ।
नाप्रत्यावृत्तमनसा किञ्चिद्वेदितुमर्हति ॥ ३२ ॥
तस्मात्तदेकपरता परावृत्तिश्च चक्षुषः ।
प्रत्यावृत्तं मनः शुद्धं निजरूपावभासकम् ॥ ३३ ॥

**கண்களைப் போன்றே காதுகளும் தோலும் அமைந்துள்ளன. கருத்தில் ஒருமித்த மனமும் அப்படியே சுகத்தையும் துக்கத்தையும் உணர்கிறது. மனம்வெளிப் பொருளிலிருந்து திரும்பி, உணர வேண்டியதில் நிலைக்காவிடில் ஒன்றையும் உணரமுடியாது. அதனால் எதனைக் காணவேண்டுமோ அதில் மட்டும் குறியும் வெளிப்பொருளில் குறியில்லாதிருப்பதும் தெளிந்த மனமுமே சுயரூபத்தை விளக்க வல்லதாக ஆகும்.**

***நான் என்பது என்ன? இதனைக்காண வேண்டுமாயின் நானற்றவற்றிலிருந்து நோக்கைத் திருப்பி நான் என்பதில் குறிப்போடு நோக்குவதுதான் வழி. அம்பால் ஒரு பொருளை அடிக்க விரும்புபவன் அம்பிற்குக் குறியாகும் பொருளைத் தவிர மற்றொன்றைக்காணாமல் இலக்கில் பதித்த மனத்தினனாக இலக்கை மட்டுமே காண்கின்ற கண்ணினனாக இருப்பது அவசியம். 'நான்' அல்லாதவற்றில் கண் பதிய, அவற்றின் விசித்திரத்தில் மனம் பதிந்து இருக்கும்போது இலக்காக வேண்டிய சித்சக்தி காணப்படாதிருப்பதில் வியப்பில்லை. கூட்டத்தில் ஒருவரைக்காண வேண்டுமாயின் இவர் அல்ல இவர்அல்ல என்று ஒவ்வொருவராய் ஒதுக்கி நாம் யாரைக் காண வேண்டுமோ அவரது சுயவடிவை மனத்தால் உற்று நினைத்துத் தேடினால்தான் அவர் கிடைப்பார்.***

अत्र ते सम्प्रवक्ष्यामि शृणु तन्नियतान्तरः ।
अगोचरश्चेत् आत्मासौ मनसो गोचरोऽपि च ॥ ३४ ॥
अत्र मुह्यन्ति बहवः श्रुत्यागमविवेचकाः ।

**இங்கு ஒன்றைக் கூறுவேன். கவனமாகக் கேளும் ஆத்மா உணரபடுபவனா, உணர முடியாதவனா என்பதில் வேதாகமங்களை விளக்குப்வர்களும் தடுமாறுகிறார்கள்.**

मनोगोचरता बाह्यो द्विप्रकारेण संस्थिता ॥ ३५ ॥
आद्याऽन्यभ्यः परावृत्तिः परा तत्परता भवेत् ।

अन्येभ्यस्तु परावृत्तिमात्रेपि मनसः सति ।। ३६ ।।
न किञ्चिद्भासयेद्वस्तु तटस्थावसरेषु यत् ।
तस्मात्तत्परताऽप्यत्र व्यापारो मानसः परः ।। ३७ ।।

மனத்தால் ஒரு பொருள் உணரப்பட வேண்டுமாயின் வெளிப்பொருளிடம் இரண்டு நிலைகள் ஏற்பட வேண்டும். உணரப்பட வேண்டாதவற்றிலிருந்து மனதைத் திருப்புவது முதலாவதாகும். உணரப்பட வேண்டியதில் நாட்டம் இரண்டாவதாகும். வெளிப்பொருளிலிருந்து மனதைத் திருப்பினால் மட்டும் போதாது. ஒன்றில் குறியில்லாவிடில் அது புலப்படாது. அதனால் காணவேண்டியதில் நாட்டம் மிகவும் அவசியமானதே.

एवं व्यावृत्तभावानां व्यापारद्वयभासनम् ।
अव्यावृत्ता चितिर्यस्मात् तस्मान्नात्र तथा भवेत् ।। ३८ ।।

ஒன்றோடொன்று வேறுபட்ட பொருள்களை உணர இந்த இரு நிலைகளும் தேவை. சித்சக்தி எவ்வித வேறுபாடுமற்றதாகையால் இங்கு அப்படி இல்லை.

अन्येभ्यस्तु परावृत्तिमात्रेणैवावभासयेत् ।
यथा पुरःस्थितादर्शे किञ्चिद्दर्शनहेतवे ।। ३६ ।।
अन्येभ्यस्तु परावृत्तिराभिमुख्यं च तस्य वै ।
अपेक्ष्यते दर्पणस्य प्रतिबिंबदिदृक्षुणा ।। ४० ।।

மற்றவெளிப் பொருள்களிலிருந்து திரும்பி விடுவதால்மாத்திரம் (மனம் சித் சக்தியை) விளக்கும். தன் முன்னுள்ள கண்ணாடியில் எதையேனும் காண்பதற்கு மற்ற பொருளிலிருந்து நோக்கைத் திருப்பிப் பார்க்க வேண்டியவற்றை உற்று நோக்குவது கண்ணாடியில் பிரதி பிம்பத்தைப் பார்க்க விரும்புபவனுக்குத் தேவையாவது போல்.

*கண்ணாடியில் உள்ள ஏதோ ஒரு பிரதிபிம்பத்தைக் காண்பதற்கு காணவிருப்பதைக் தவிர மற்றவற்றிலிருந்து நோக்கத்தைத் திருப்புதல், காணவிருப்பதில் நாட்டத்துடன் அதனை நோக்குதல் என இரண்டு செயல்கள் தேவைப்படுகின்றன. இவை தனித்தனிப் பொருள்களைக் காண்பதற்கு அவசியம். ஆனால் அதே கண்ணாடியில் ஆகாயத்தைப் பார்க்க விரும்பினால் இந்த இரண்டாவது செயல் தேவைப்படுவதில்லை. அதுபோல் சித்சக்தியை உணர்வதிலும் என விளக்குகிறார்.*

गगनं दर्पणे द्रष्टुं यदा समभिवाञ्छति।
तदाऽन्येभ्यः परावृत्तिमात्रेण हि कृतार्थता॥ ४१॥
गगनं सर्वतो व्याप्तं दर्पणे सर्वदा स्थितम्।
अव्यावृत्तं किन्तु चान्यैरभिच्छन्नं न भासते॥ ४२॥

ஆகாயத்தை கண்ணாடியில் காண விரும்பும்போது மற்றவற்றிலிருந்து நோக்கைத் திருப்பினால் மட்டும் போதும். ஆகாயம் எங்கும் பரவியுள்ளது. கண்ணாடியில் எப்போதும் உள்ளது. அதிலுள்ள எல்லா பிரதி பிம்பங்களைக் காட்டிலும் வேறுபட்டதுமல்ல. ஆனால் மற்ற பிரதி பிம்பங்களால் மறைவுறுவதால் நன்கு துலங்குவதில்லை.

सर्वाश्रयं सर्वगतमपि तैश्छादितं यतः।
मतस्तेभ्यः परावृत्तिमात्रेणैव विभासते॥ ४३॥

பிரதி பிம்பமாகக் காணப்பெருகிற அனைத்திற்கும் அதுவே ஆதாரம். எங்கும் நிரம்பியுள்ளதும் கூட. எனினும் அந்தப் பிரதி பிம்பங்களால் மறைக்கப்பட்டுள்ளது. ஆகையால் மறைத்துக் கொண்டுருக்கிற அவற்றிலிருந்தும் பிரித்துத் திருப்பின் உடனேயே அது துலங்குகிறது.

एवं चितिः सर्वगता सर्वाश्रयतया स्थिता।
सर्वकाले समापूर्णा मनसि व्योमवद् द्विज॥ ४४॥
तस्मादन्यपरावृत्तिमात्रं मनस इष्यते।

இதேபோல் சித் சக்தியும் எல்லாவற்றிலும் நீக்கமற நிரம்பியிருப்பது. அனைத்திற்கு ஆதாரமாய் இருப்பது. எல்லா காலத்திலும் மனத்தில் நிரம்பியுள்ளது கண்ணாடியில் ஆகாயம் போல். மனத்தில் தோன்றும் மற்றவற்றை அகற்றுவது மாத்திரம் தேவைப்படுகிறது.

पश्य विप्र चितिः कुत्र कदा नास्त्यवभासिनी॥ ४५॥
यदा यत्र च सा नास्ति न यदा नापि यत्र च।
तस्माच्चिदात्मावभासे मनसोऽन्यपरावृतिः॥ ४६॥
केवलाऽपेक्षिता नैवाभिमुख्यं नूतनं क्वचित्।

அந்தணரே! சித்சக்தி எங்கு இல்லை? எப்போது அது துலங்க வில்லை? அது துலங்காத காலமோ தேசமோ இல்லை. அதனால் சித்தாகிற ஆத்மா

துலங்க மனத்தின் மற்ற பொருளில் நாட்டமின்றித் திருப்புதல் மட்டும் தேவைப்படுகிறது. அதனைக் காண்பதற்கான தனி நாட்டம் புதிதாகத் தேவைப்படுவதில்லை.

*எல்லாவற்றையும் பிரதிபிம்பமாகக் காட்டுகிற கண்ணாடியினும் சில பொருள்கள் குறிப்பிட்ட நேரத்தில் சில இடத்தில் மட்டுமே காணப்படுகின்றன. எல்லாமும் அந்நேரத்திலும் எல்லாவிடத்திலும் காணப்படுவதில்லை. வெவ்வேறாகக் காணப்படுபவை, வெவ்வேறு காலதேசங்களில் காணப்படுபவை அனைத்திற்கும் இந்நிலை பொதுவானதே. ஆனால் கண்ணாடியில் ஆகாயம் எந்நேரத்திலும் எந்த இடத்திலும் காணப்படும். (ஆனால் மற்றவை மறைப்பதால் ஆகாயத்தைக் காண முடிவதில்லை) பல பொருள்கள் கண்ணாடியில் பிரதிபிம்பமாகக் காணப்படும்போது குறிப்பிட்ட பொருளைக் கண்ணாடியில் காணவிரும்பினால் கண்ணாடியில் காணப்பெறுகிற அனைத்துப் பொருள்களிலிருந்தும் நமது நோக்கத்தைத் திருப்பிக் காண விரும்பியதில் நாட்டமுடன் நோக்கைத் திருப்ப நேர்கிறது. ஆனால் ஆகாயத்தைக் காண்பதற்கு மற்ற பிரதிபிம்பங்களிலிருந்து நோக்கைத் திருப்பினாலே போதும். எப்போதும் அங்கிருக்கும் ஆகாயம் கண்ணில் பட்டுவிடும். ஆகாயத்தைக் காண்பதற்கான தனி நாட்டம் தேவைப்படுவதில்லை.*

*சுத்த சிதாத்மஸ்வரூபம் ஆகாயத்தைப்போல் எப்போதும் மனத்தில் நிரம்பியுள்ளது. மனத்தில் தோன்றும் வெளிப்பொருள்களிலிருந்தும் மனத்தைத் திருப்பியவுடன் மனம் நாட்டத்துடன் இல்லாவிடினும் தானே பிரகாசமான சிதாத்மஸ்வரூபம் மனத்தினுள் துலங்கும். எப்போது துலங்கும்? எங்கு துலங்கும்? என்ற கேள்விகளுக்கு இடமில்லை.*

*ஒளியின் உதவிகொண்டு பலவற்றைப் பார்ப்பவன் ஒளியைக் காண்பதில்லை. ஒளியைக் காண விரும்புபவன் ஒளியால் காண்பவற்றிலிருந்தும் நோக்கைத் திருப்பினாலோ வெளிச்சம் துலங்கும். வெளிச்சம் என்ன என்று தேடத் தேவையில்லை. வெளிச்சத்தைக் காணத் தனி முயற்சியும் தேவையில்லை.*

आभिमुख्याभावहेतोरेवावेद्यत्वमिष्यते ।। ४७ ।।
अत एव शुद्धमनोवेद्यं तत्तत्त्वमुच्यते ।
अन्येभ्यस्तु परावृत्तिरेव शुद्धिर्हि मानसी ।। ४८ ।।

நோக்கை ஒருமுனைப்படுத்திக் காணுதல் இன்மையாலேயே அவேத்யம் – வேறொன்றில் உணர்த்தப்படாதது என்ற தன்மை அதில் இருப்பதாக

ஏற்கப்பட்டுள்ளது. தூய மனத்தில் இது துலங்கக்கூடிய தத்துவமாகும். மனத்தின் தூய்மை என்பது மற்ற பொருளிலிருந்து நோக்கைத் திருப்புவதேயாகும்.

एतदेव परं तत्त्वज्ञाने साधनमुच्यते।
यावन्न हि मनः शुद्धं तावत् ज्ञानं कथं भवेत्॥ ४९॥
शुद्धे मनसि वै ज्ञानं कथं वा न भवेद् ध्रुवम्।

ஆதலால் மனத்தூய்மை தத்துவஞானத்தில் உயர்ந்த ஸாதனம் ஆகிறது. மனம் தூய்மை அடையாவிடில் ஞானம் எப்படி ஏற்படும்? மனம் தூய்மை பெற்ற பிறகு ஞானம் எப்படி ஏற்படாமலிருக்கும்?

उपक्षीणं सर्वमत्र साधनं तस्य शोधने॥ ५०॥
कर्म वोपासनं वाऽपि वैराग्यादिकमेव वा।
मनसः शोधने एव विनियुक्तं न चान्यथा॥ ५१॥
तस्माच्छुद्धेन मनसा भासते तत्परं वपुः।

ஆத்மஞான ஸாதனம் அனைத்தும் மனத்தைத் தூயதாக்கவே பயன்படுகின்றன. சடங்குகளோ, வழிபாட்டு முறைகளோ, வைராக்யம் முதலியவையோ மனத்தின் தூய்மைக்காகவே பயன்படுபவை. வேறு பயனை உத்தேசித்து அல்ல. அதனால் தூயமனத்தில் அந்த பரம்பொருள் துலங்குகிறது.

इति राज्ञेरितं श्रुत्वा त्वष्टावक्रः पुनर्जगौ॥ ५२॥
राजंस्त्वयोक्तं अन्येभ्यः परावृत्तिर्हि मानसी।
केवला चेत् सा परा चिद् मनसा प्रविभासंते॥ ५३॥
तत्सुषुप्तौ विभासेत परावृत्तं मनस्तदा।
ततः किं साधनैरन्यैः सुप्तिमात्रात्कृतार्थता॥ ५४॥
इति पर्यनुयुक्तोऽथ विप्रेणोवाच भूपतिः।

இவ்வாறு அரசன் கூறியதைக் கேட்ட அஷ்டாவக்ரர் மறுபடி கேட்டார் – அரசே! மற்ற பொருள்களிலிருந்து மனத்தின் தூய திருப்பம் கிடைத்துவிட்டால் அந்த பர–சித்து மனத்தில் துலங்கும் என்றீர்கள். அப்படியானல் ஆழ்ந்த நித்திரையில் மனம் மற்றவற்றில் இருந்தும் திரும்பி இருக்குமாதலால் அப்போது ஆத்மா துலங்க வேண்டுமே ! அப்படியாயின்

ஆத்ம ஸாதனைக்கான முயற்சிகள் அனைத்தும் வீணே! தூக்கம் ஒன்றாலேயே விருப்பம் நிறைவேறிவிடுமே! என்று கேட்கப்பட்ட அரசர் பதில் கூறினார்.

समाहितः शृणु ब्रह्मन् समाधानं वदामि ते।। ५५ ।।
सत्यं सुषुप्तौ मनसः परावृत्तिस्तु सर्वथा।
लीनं मनस्त्वं चाप्यस्य कथं तमवभासयेत्।। ५६ ।।
कज्जलेन समालिप्ते दर्पणे गगनं नहि।
अन्येभ्यस्तु परावृत्तिमात्रेण भासते क्वचित्।। ५७ ।।

அந்தணரே! அமைதியுடன் இதற்குரிய விடையைக் கேட்பீர். தூங்கும்போது மனம் வெளிப் பொருளிலிருந்து திரும்பி உள்நோக்கிச் சென்றது. முழுமையானது உண்மையானதும் கூட, எனினும் மனத்தின் தன்மை (புரிய வைக்கும் திறமை)யும் அங்கு மறைந்து விட்டதே! அப்போது ஆத்மாவை அது எப்படி புலப்படுத்தும்? கருமையான மையால் பூசப்பட்ட கண்ணாடியில் (பிரதிபிம்பத்தைக் காட்டும் தன்மையை அது இழந்துள்ள நிலையில்) மற்ற பிரதிபிம்பங்களை ஒதுக்குவதொன்றால் மட்டுமே எதுவும் துலங்காதல்லவா?

एवं विलिप्ते मनसि निद्रयाऽन्यपरावृतेः।
अयोग्यत्वादेव मनो भासयेन्न चितिं क्वचित्।। ५८ ।।
अन्यथा लोष्टकुड्यादेरपि भायात् कुतो न सा।
तस्माद्योग्येन मनसा शुद्धेन भासते हि सा।। ५९ ।।
अतः सद्योजातशिशोः भासते न हि किञ्चन।

மற்றவற்றிலிருந்தும் திரும்பி உள்நோக்கிருந்தும், தூக்கத்தால் மனம் மறைக்கப்படுவதால் (தன் புலப்படுத்தும் தன்மையை இழந்தால் ஏற்பட்ட) தகுதியின்மையால் மனம் சித்சக்தியை துலக்கவில்லை. இல்லாவிடில் பட்டுப்போன மரத்திலும் சுவரிடம் கூட அந்த சித்சக்தி புலப்படுமே! அதனால் தகுதியுள்ள தூய மனத்தால் மட்டுமே சித்சக்தி துலங்கும். அதனாலேயே சிசு பிறந்ததும் உடன் அதற்கு எதுவும் புலனாவதில்லை.

अथापि शृणु वक्ष्यामि मषीलिप्ते हि दर्पणे।। ६० ।।
अलक्षितं चापि मषीप्रतिबिम्बनमस्ति वै।

संश्लेषान्न विलक्ष्येत स्वभावस्यानपोहनात् ।। ६१ ।।
तथा मनः सुषुप्तिस्थं संश्लिष्टं निद्रयैव हि ।
अतोऽन्येभ्यः परावृत्तेरभावात् भासयेन्न ताम् ।। ६२ ।।

மற்றொன்றும் கூறுகிறேன். மை பூசப்பட்ட கண்ணாடியில் மையின் பிரதிபிம்பம் படும். நமக்குப் புலப்படாவிட்டாலும் கட்டாயம் அது ஏற்படுகிறது. பிம்பமான மையும் கண்ணாடியும் மிகவும் நெருங்கி இடை வெளி இல்லாதிருப்பதால் நமக்கு மையின் பிரதி பிம்பம் புலப்படவில்லை. பிரதி பிம்பத்தைக் காட்டும் தன்மை கண்ணாடியிலிருந்து என்றும் அகலாத — ல்லவா? அதே போல் ஆழ்ந்த தூக்கத்திலுள்ள மனமும் தூக்கத்தால் இடை வெளியின்றி பிணைந்துள்ளது அதனால் தான் மற்றவற்றிலிருந்து திரும்பிய நிலை ஏற்படாததால் (தூக்கத்தின் தொடர்பிருப்பதால் – தாமோ குணத்தின் தொடர்பால்) சித் சக்தியைத் துலக்க வில்லை.

*கண்ணாடியில் வேறு பிரதி பிம்பம் காணாதநிலையில் ஆகாயம் புலப்படும் என்று கூறினேன். மை பூசப்பட்ட கண்ணாடியில் ஆகாயம் ஏன் துலங்கவில்லை என்ற கேள்விக்கு `மை பூசப்பட்டதால் மையின் பிரதிபிம்பம் தெரிகிறதே! வேறு பிரதிபிம்பம் தெரியும்போது ஆகாயம் துலங்காதல்லவா?' என்றுபதில் கூறினோம். மையின் பிரதி பிம்பத்தை காணவில்லையே! மைதானே தெரிகிறது எனில் மைக்கும் கண்ணாடிக்கும் இடைவெளியில் நின்று பார்த்தால்தான் மையின் பிரதிபிம்பம் தெரியும். அப்படி நின்று பார்க்க முடியாதபடி மையும் கண்ணாடி நெருங்கியுள்ளன. பார்க்கத் தகுதி பெறாத பார்ப்பவனின் குறையே தவிரபிம்பத்தையும் காட்டுகின்றது. அதைப்போல ஸுஷுப்தியிலுள்ள மனம் தூக்கத்துடன் பிணைந்துள்ளது. வேறு பொருள் சேர்க்கை இல்லாத நிலை மனத்தில் ஏற்படவில்லை. மனம் தூக்கத்துடன் பிணைந்துள்ளதே! அதனால் தூயமனமாகவில்லையே! அதனால் தூக்கத்தில் மனம் சித்சக்தியை துலக்கவில்லை.*

अतो निद्रास्मृतिरपि व्युत्थितस्य हि संभवेत् ।
मूढताऽपि च या तस्यां दशायामनुभूयते ।। ६३ ।।

(தூக்கத்தில் மனம் தூக்க வடிவை ஏற்றுக் கொண்டதால் தான்) விழித்ததும் தூக்கத்தின் நினைவு ஏற்படுகிறது. (முன் அனுபவித்தது தானே நினைவில் வரும்.) தூக்கத்தின் ஆவரணத்தால் மனம் ஒன்றையும் அறியாத மூட நிலையும் அனுபவத்தில் உள்ளது.

तत्ते सम्यकू प्रवक्ष्यामि शृणु सम्यकू समाहितः।
मनसस्तु द्विधाऽवस्था प्रकाशामर्श भेदतः ॥ ६४ ॥
बहिरर्थेषु विश्रान्तिः या प्रकाशः स उच्यते।
यस्तद्विचारः स्वस्मिन् वै स विमर्शः उदाहृतः ॥ ६५ ॥

அதனை (ஸுஷுப்திக்கும் ஸமாதிக்கும் உள்ள வேற்றுமையை)ப் பற்றி நன்கு விளக்குகிறேன். மன ஈடுபாட்டுடன் அதனை நன்கு கேட்பாயாக! மனத்திற்கு இரண்டு நிலைகள். பிரகாசம் ஆமர்சம் (விமர்சம்) என. மனம் வெளியில் சென்று பொருளுடன் தொடர்பு கொள்வது பிரகாசம். அப்படி தன்னுள் பிரதிபிம்பத்தை – ஏற்கப்பட்ட வெளிப்பொருளின் தொடர்பைப் பற்றி மனம் ஆராய்வது விமர்சம்.

*மனம் கண்வழியே வெளியே சென்று குடத்தைப் பார்த்ததும் முதலில் பார்வையால் அந்தக்கணத்தில் உணர்ந்த குடம் என்ற அறிவு மட்டும் மனத்தில் பதிகிறது. இதில் வேறு எண்ணக் கலவைகள் இல்லாததால் இது நிர்விகல்பகம். இது புதிய உணர்வு வஸ்துதரிசனம் – வஸ்துபிரகாசம் என்று இதனைக் கூறுவர். மனத்தில் பதிந்த குடத்தைப்பற்றி குடத்தைப்பார்த்த உணர்வு ஏற்பட்ட அடுத்தக் கணத்தில் இந்தக்குடம் இத்தகையது, அத்தகையதல்ல என்றவாறு அலை அலையாக ஏற்படக்கூடிய பெயர் முதலியவற்றால் சொல்லால் விசாரமும் விளக்கமும் ஆமர்சம் எனப்படும் விமர்சம். இதில் பல எண்ணங்கள் கலப்பதால் ஸவிகல்பகம்.*

प्रकाशो निर्विकल्पः स्यात् वस्तूनामविभेदतः।
विमर्शः शब्दसंभेदात् विभेदात् सविकल्पकः ॥ ६६ ॥
अयमेवंविध इति शब्दसंभेदवर्जितः।
वस्तुदर्शनरूपोऽसौ प्रकाशो निर्विकल्पकः ॥ ६७ ॥
अयमेवंविध इति वस्तुदर्शनमूलकः।
शब्दसंभिन्नरूपोऽसौ विचारात्मावभासनः ॥ ६८ ॥

பிரகாசம் என்பது உணரப்படும் பொருள் ஒரேவிதமாக –மாறுபாடில்லாமலிருப்பதால் நிர்விகல்பகம். விமர்சம் என்பது நான் இத்தகைய குடத்தைப் பார்த்தேன் என்றவாறு சொல்லால் விளக்க மும் பெறும் நிலை. இதில் சொல் முதலியவற்றால் விளக்கம் பெறுவதால் பலவற்றின் உணர்வும் ஏற்படுகிறது. அதனால் விமர்சம் ஸவிகல்பகம். பொருளை மட்டும் சொல் முதலியவற்றின் தொடர்பின்றி முதலில் உணர்வது நிர்விகல்பகமான பிரகாசம். தான் அப்படி பொருளைக் கண்டதைத் தொடர்ந்து,

அந்த பொருட்காட்சியில் காரணமாக ஏற்பட்ட இது இத்தகையது என்று ஆராய்ந்து சொல் வடிவில் விளக்கம் பெறுவது – ஆராய்ச்சி வடிவில் பொருளை விளக்குவது – விமர்சம்.

आन्तरोऽभिनवोऽन्यो वा विमर्श इति कीर्तितः।
तत्र योऽभिनवाभासः स प्रोक्तोऽनुभवात्मकः॥ ६९॥
अन्यः स्मृत्यनुसन्धानात्मकः संस्कारसंभवः।
एवं मनो द्विप्रकारशक्तियुक्तं सदा स्थितम्॥ ७०॥

இந்த மனத்தில் பிரதிபிம்பத்தை அண்டி ஏற்பட்ட விமர்சம் இரண்டுவகை, அபிநவம், புராணம் என பார்த்த பொருளைப் பற்றி அந்த க்ஷணம் ஏற்படும் விளக்கம் அபிநவம் (புதிதானது). அதனைத் தொடர்ந்து இந்த பொருளைப் பற்றிய முன் நினைவுகளைச் சிந்தித்தும் முன் அனுபவங்களால் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் எனும் வாஸனையை ஒட்டியும் ஏற்படும் விளக்கம் புராணம் (பழைய விசாரம்) எனப்படும். ஆக மனம் எப்போதும் பிரகாசம் விமர்சம் என்ற இரு சக்திகளுடன் கூடியது.

*குடத்தைப் பார்த்ததும் குடம் மட்டும் மனத்தில் பதிந்தது. அதனை மனம் ஆராயத் தொடங்கியது அழகானது, சிகப்பாக உள்ளது, நிறைய ஜலம் பிடிக்கும் என்பது போன்ற விருப்பு வெறுப்பிற்குக் காரணமாகக்கூடிய பல எண்ண அலைகள் விமர்சமாகத் தோன்றின. இவை புதிதான எண்ணங்கள். இதனை ஒட்டி இதற்குமுன் இதே மாதிரி குடத்தையோ இந்தக் குடத்தையோ பார்த்த நினைவு ஏற்பட்டது. அந்தக்குடத்தால் ஏற்பட்ட அனுபவம், விருப்பு வெறுப்பு முதலியவை மனத்தில் பதிந்தன. இது பழைய அனுபவத்தின் நினைவால் விளைந்தது. இதுவும் விமர்சமே. இந்தப் பிரகாச விமர்ச சக்தியுடைய மனம் தூக்கத்தையும் சமாதியையும் எப்படி உணர்கிறது என மேலும் விளக்குகிறார் ஜனகர்.*

निद्रा प्रकाशरूपासौ सुषुप्तिः चिरसंस्थिता।
जागराऽऽमर्शबहुला चेत्यमूढदशोच्यते॥ ७१॥
प्रकाशनिबिडा यस्मात् सुषुप्तिमूढतात्मिका।

ஆழ்ந்த தூக்கநிலை எனும் ஸுஷுப்தியானது தூக்கத்தின் பிரகாச (நிர்வகல்பக)வடிவம். அது நீண்டநேரம் தொடர்ந்து நிற்கிறது. விழிப்பு நிலை எனும் ஜாகரம் பல விமர்சங்கள் நிறைந்தது. இது அறிவு விளக்கமடையும் நிலையானதால் அமூடதசை எனப்படும். ஸுஷுப்தியில் பிரகாசம் மட்டும் நிறைந்திருந்தும் விளக்கமின்மையால் மூடதசையாகிறது.

*விழிப்பில் ஏற்படும் உணர்வுகள் பிரகாசமும் விமர்சமும் கலந்தவை. அதில் விமர்சம் மிக அதிகம். இந்த விமர்சம்தான் நான் இதனை அறிவேன் என்ற உணர்வைத்தரும். இந்த உணர் வேற்பட்டால்தான், அறிந்தவனாக - அறியாமையற்றவனாக - நடப்பதெல்லாவற்றையும் உணர்பவனாக ஆகமுடிகிறது. தூக்கத்தில் பிரகாசம் மட்டுமே உள்ளது. மனம் பேதமற்ற தூக்கமொன்றையே தொடர்ந்து வெகுநேரம் உணர்ந்து கொண்டிருக்கிறது. விழிப்பில் குடத்தைப் பார்த்ததும் கணநேரத்தில் பல விமர்சங்கள் தொடரும். அதனால் குடத்தின் பிரகாசம் ஒரு கணநேரமே உணரப்படுகிறது. தூக்கத்தில் தொடர்ந்து பிரகாசம் விமர்சத்திற்குச் சிறிதும் இடமளிக்காமல் வெகுநேரம் இருக்கிறது. அதன் விமர்சம் விழிப்பேற்பட்ட பிறகுதான் ஏற்படுகிறது. 'நன்கு தூங்கினேன்' என்ற தூக்கத்தின் புதிதானஅனுபவமும், அதனைத் தொடர்ந்து 'அந்த சமயத்தில் நான் எதனையும் அறிந்தேனில்லை' என்ற பழைய மூடத்தன்மையின் விளக்கமும் (விமர்சமும்) ஏற்படுகிறது. அதனால் தூக்கத்தில் விமர்சம் இல்லாமையால் மூட (ஜட) தசையும், விழிப்பில் விமர்சம் இருப்பதால் ஞானிதசையும் (அமூடதசையும்) உணரப்படுகிறது.*

*இந்த பிரகாசமே சித்ஸ்வரூபம். இதனையே சைதன்யம் என்பர். இந்த சித்சக்தி தூக்கத்தில் விமர்சமின்மையால் ஜடமாகி விளங்காமல் இருந்து விழித்ததும் ஸ்மரண வடிவில் அமைந்த விமர்சத்தால் தூக்கத்தில் இருந்த நிலை உணரப்படுகிறது. பிரகாசம் இருந்தும் விமர்சமில்லாதிருத்தால் ஜடநிலை. குடத்திலும் சித்சக்தி (பிரகாசம்) நிறைந்துள்ளது. அதில் விமர்சம் (சுய விளக்கம்) இல்லை. அதனால் அது ஜடமாகிறது. தீபத்தில் பிரகாசம் நிறைந்துள்ளது. அதிலும் சுயவிளக்கம் இல்லை. அதனால் அது ஜடம். தூக்கத்தில் சுயவிளக்கமின்மையால் மனிதனும் அந்த நிலையில் ஜடமே, என விளக்குகிறார் ஜனகர்.*

अत एव हि दीपादेः प्रकाशनिबिडत्वतः ॥ ७२ ॥
निश्चिता मूढता सर्वैः विद्वद्भिरपि सर्वथा ।

அதனால்தான் தீபம் முதலியவையும் பிரகாசம் மட்டும் நெருங்கி வடிவு பெற்றமையால் ஜடத்தன்மை அங்கு உள்ளதென அறிவாளிகளின் முடிவு.

निद्रा प्रथमजाऽव्यक्तं महाशून्यमिहोच्यते ॥ ७३ ॥
नास्तिसामान्यपदवी सुषुप्तिस्तत्प्रकाशनम् ।

நித்திரை என்பது படைப்பின் தொடக்கத்தில் ஏற்பட்ட நிலை . இது இன்னது இத்தகையதெந விளக்கப்பெறாத அவ்யக்த நிலை. உருத்தெரியாத நிலையனதால் மஹாசூன்யம். இல்லை என்ற பொது உணர்விற்கு இருப்பிடம். ஸுஷுப்தி என்பது அந்த நித்திரையின் பிரகாச நிலை.

*படைப்பின் தொடக்கத்தில் தோன்றிய வரிசை அவ்யக்தம் மஹத் அஹங்காரம் என்று முன் குறிப்பிட்டோம். (14 அத் 59–60) பிரிவுகளும் பிரிந்ததற்கான அடையாளங்களும் தோன்றும்போது பல பலவான உணர்வு ஏற்படுகிறது. இந்தப் பிரிவு ஏற்படாத மூலப்பொருள் நிலையில், இது இன்னதாக இத்தகையாதக வடிவடையப் போகிறதென்ற உணரமுடியாத நிலையில், காண்பது அவ்யக்தம். அதுவும் பிரகாசமயமே. இதுவுவே ஜகத்தாகிற சித்திரம் வரைவதற்கான சுவராகும். சித்திரத்திற்குமுன் சுவர் தோன்றும். உலகமனைத்திற்கும் முன்தோன்றியதாகையால் பிரதமஜா. இன்னதென விளக்காததால் அவ்யக்தம். ஒன்றுமே புலப்படாததால் மஹாசூன்யம். ஸுஷுப்தியிலும் இதே நிலைதான். அதனால் அதையும் அவ்யக்தம், மஹாசூன்யம் என்கிறோம். அவ்யக்தத்தில் என்ன இருந்தது? என்று கேட்டால் ஒன்றும் இல்லை என்று தான் சொல்லத்தோன்றும். இது இல்லை, அது இல்லை என்று இல்லாதபொருளின் தனித்தன்மையும் உணர முடியாத நிலை. தூக்கத்திலும் அப்படியே தூக்கம் எப்படி இருந்தது என்றால் விளக்கிக்கூற முடியவில்லை என்று பதில்வரும். எதனை உணரவில்லை? என்று கேட்டால், ஒன்றையுமே உணர வில்லை என்ற பதில்வரும். விழிப்பில் இதனை உணரவில்லை, அதனை உணரவில்லை என்ற விசேஷ சூன்யநிலையைக் காணலாம். தூக்கத்தில் சூன்யஸாமான்யம் (தனித்தன்மையற்றது*

*ஸாமான்யம்) உணரப்படுகிறது.*

वस्तुदर्शनकालेऽपि जाग्रत्येवंविधं मनः ॥ ७४ ॥
किन्तूत्तरक्षणोद्भूतविकल्पौधैस्तिरोहितम् ।
सुषुप्तावव्यक्तशक्तिप्रकाशनिबिडवतः ॥ ७५ ॥
मनो विलीनमित्येवं विविञ्चन्ति विवेचकाः ।
वस्तुदर्शनकालेऽपि चैवं लीनं मनो भवेत् ॥ ७६ ॥

விழிப்பிலும் பொருளைக்கண்டதும் (பிரகாச நிலையில்) மனம் சூன்யமாக – மூடமாக– அவ்யக்தமாகத்தான் உள்ளது. ஆனால் விழிப்பில் (பிரகாசநிலை க்ஷணத்தில் மாறி) அடுத்த க்ஷணத்தில் விமர்ச அலைகள் தொடர்ந்து ஏற்படுவதால் அந்த மூடநிலை மறைந்து விடுகிறது. தூக்கத்திலோ அந்த அவ்யக்த சக்தி நிலையாகிற பிரகாசநிலை நெருக்கத்துடன் (விமர்சக் கலப்பின்றி) இருப்பதால் மனம் (உன்மேஷம் எனும் விமர்சம் அடையாதிருப்பதால்) மறைந்துவிட்டதாக ஆராய்ச்சியாளர் கூறுவர். இதே மனத்தின் மறைவு பொருளைக் கண்டதும் பிரகாச நிலையில் ஏற்படுவதைக் காணலாம்.

*மனம் எப்போதும் உள்ளது. ஆனால் அது உணர வேண்டிய பொருளைப்பற்றி மனனம் (விசாரம் – விமர்சம்) செய்யும்போது தான் அது இருப்பதை உணர முடிகிறது. மனனம் ஏற்படாத பிரகாச நிலையில் மனம் இயங்காதது போலிருப்பதால் அந்த நிலையை மனோலயம் என்பர். தூக்கத்தில் மனோலயம் எல்லோராலும் உணரப்படுகிறது. விழிப்பில் பொருளைக் காணும் க்ஷணத்தில் பிரகாசம் மட்டும் ஏற்படுவது வாஸ்தவமே. எனினும் கணநேரத்தில் விமர்சம் ஏற்படுவது வாஸ்தவமே. எனினும் கணநேரத்தில் விமர்சம் ஏற்பட்டு மறைவதால், விழிப்பில் மனோலயம் ஏற்படாது என்ற கருத்து ஏற்பட்டுள்ளது. தூக்கத்தில் வெகுநேரம் தொடர்ந்து மனோலயம் இருப்பதால் அது இருப்பதை உணர்கிறோம். அதனால் பிரகாசம், ஸுஷுப்தி, நிர்விகல்பஸமாதி என்ற மூன்றும் ஒரே நிலையே. இவைகளைப் பகுத்தறிய விளக்கம் தருகிறார் ஜனகர்.*

शृणु ब्रह्मन् रहस्यं ते वक्ष्यामि स्वानुभूतितः ।
यत्र मुह्यन्ति विद्वांसोऽप्यतिसूक्ष्मविवेचकाः ॥ ७७ ॥

निर्विकल्पसमाधिश्च सुषुप्तिर्वस्तुदर्शनम् ।
त्रयमेतच्चैकविधं प्रकाशनिबिडत्वतः ।। ७८ ।।

அந்தணரே! என் சுய அனுபவத்தால் உணர்ந்த ரகசியத்தைக் கூறுகிறேன் கேளும். மிகவும் நுண்ணியதையும் ஆராயும் அறிவாளிகளும் இவ்விடத்தில் தடுமாறுகின்றனர். நிர்விகல்ப ஸமாதி, ஸுஷுப்தி, வஸ்து தர்சனம் எனும் பிரகாசம் இம்மூன்றும் பிரகாசச் செறிவால் ஒரே விதமானவையே.

विमर्शभेदाद्भेदो हि लक्ष्यते व्यावहारिकैः ।
तत्र हेतुर्भास्यभेदात् इत्येव प्रविनिश्चयः ।। ८६ ।।
समाधौ केवलचितिः सुप्तावव्यक्तमेव च ।
दर्शने भिन्नभासो हि भास्यमेवं विधा स्थितम् ।। ८० ।।

(மூன்றும் ஒன்றாயினும்) தொடர்ந்து ஏற்படுகிற விமர்சத்திலுள்ள வேற்றுமையால் வியவஹாரம் அறிந்தவர்களால் பேதம் உணரப்படுகிறது. அதற்குக் காரணம் பின் விளங்குகிற பொருளின் வேற்றுமையால் என்பதே உறுதி. ஸமாதியில் சுத்த சித்ஸ்வரூபமும், ஸுஷுப்தியில் மூலப்பொருளும், வஸ்து தர்சனம் என்ற பிரகாசத்தில் தனிப்பட்ட பொருளின் உணர்வும் என்று மூன்றுவிதமான தோற்றங்கள் உணரப்படுகின்றன.

*மூன்று நிலைகளிலும், விமர்சநிலை வெவ்வேறு. ஸமாதிக்குப் பின்வரும் விமர்சம் இதுவரை நான் செயலற்றுச் சும்மா இருந்தேன் என்றிருக்கும். தூக்கத்திற்குப்பின் நான் அந்த நிலையில் ஒன்றையும் அறியவில்லை என்றிருக்கும். பொருட்காட்சி (வஸ்துதர்சனம்) க்குப்பின் இது குடம் என்றவாறு உணர்விருக்கும். இந்த விமர்ச வேற்றுமைதான் அந்த மூன்றையும் பிரிக்கிறது. பிரகாச நிலையிலும் ஸமாதியில் சுத்தசித்ஸ்வரூபனாக இருப்பதாக உணர்வு. ஸுஷுப்தியில் அவ்யக்த உணர்வு. வஸ்துதர்சனத்தில் தனித்ததாக குடம் முதலியதன் உணர்வு. இவைதான் வேற்றுமைக்கு உரிய காரணங்கள்.*

भास्यभेदेऽपि भासस्तु केवलं निर्विकल्पकः ।
अतः प्रकाशनिबिडः इत्येव संप्रचक्षते ।। ८१ ।।

உணரப்படுவதில் வேறுபாடு இருப்பினும், உணர்வில் நிர்விகல்பகமே. அதனால் உணர்வில் ஸமாதி முதலிய நிலைகள் பிரகாசம் மட்டுமே நெருக்கமாயுள்ளவை.

समाधिश्च सुषुप्तिश्च चिरकालभवत्वतः।
अनन्तरं स्पष्टतया सर्वैरपि विमृश्यते॥ ८२॥
क्षणिकत्वात् दर्शनं तु स्पष्टं न हि विमृश्यते॥ ८३॥
एवं समाधिः सुप्तिश्च क्षणिका न विमृश्यते।
सुषुप्तिः क्षणका तद्वत् समाधिरपि विद्यते।
सुषुप्तिर्लक्ष्यते सूक्ष्मदृग्भिः परिचयात् खलु॥ ८४॥
समाधिस्त्वपरिचयात् सूक्ष्मो न हि विमृश्यते।

ஸமாதியும் ஸுஷுப்தியும் நீண்டநேரம் தொடர்ந்து பிரகாச நிலையில் இருப்பதால் அவற்றிலிருந்து விடுபட்ட பிறகு நன்கு எல்லோராலும் விமர்சம் செய்யப்படுகிறது. வஸ்து தர்சனம் என்ற விழிப்பில் உணர்வு நிலையோ ஒரு நொடியில் பிரகாச நிலையிலிருந்து விமர்ச நிலைக்கு வந்துவிடுவதால் பிரகாசநிலை ஸ்பஷ்டமாக உணரப்படுவதில்லை. அப்படியே ஸமாதியும் ஸுஷுப்தியும் ஒரு நொடிநேரம் மட்டும் இருக்குமேயானால் அந்த நிலைகளில் இருந்த பிரகாசமும் உணரப்படுவதில்லை. ஸுஷுப்தியும் ஸமாதியும் விழிப்பு நிலையிலும் ஏற்படக்கூடும். ஸுஷுப்தியை வெகுநேரம் தூங்கி விழித்தெழும்போது உணர்ந்து பழக்கமிருப்பதால் இந்த விழிப்பில் நொடியளவில் ஏர்படும் ஸுஷுப்தியைப் புரிந்து கொள்ள முடியும். ஸமாதியைப் பற்றிய முன் பரிசயமில்லாமையால் விழிப்பில் நொடியளவில் ஏற்படும் ஸமாதியை ஸௌக்ஷ்மமான படியால் உணரமுடிவதில்லை.

*பிரகாசம் விமர்சம் என்ற இருமன நிலைகள். பிரகாசம் நிர்விகல்பகம், விமர்சம் ஸவிகல்பகம். விழிப்பிலும் கனவிலும் பிரகாசநிலை நொடி நேரம் மட்டுமே. விமர்சநிலை நீண்டது. ஸுஷுப்தியிலும் ஸமாதியிலும் பிரகாசநிலை தொடர்ந்து விமர்சக்கலப்பு இல்லாமல் ஏற்படுகிறது. விழிப்பில் பிரகாசம் ஒரு நொடியில் தோன்றி மறைகிறது. விமர்சம் வெகுநேரம் நீடிக்கிறது. அதனால் விமர்சமே அதிகம் உணரப்படுகிறது. விமர்சத்தில் உணர்வு பின் நிற்கிறது. உணரப்படும் பொருள் முன் நிற்கிறது. உணரப்படும் பொருள் ,பலவகை. உணரப்படும் பொருள் பற்றிய ,அறிவு பல விதமாக வருகிறது. அதனால் ஞானம் வேறுபாடுள்ளதென்ற பிரமை ஏற்படுகிறது.*

*உண்மையில் அறிவில் வேறுபாடில்லை. அறியப்படும் பொருளிலுள்ள வேறுபாடு அறிவை வேறுபடுத்தாது. ஸமாதியிலும் ஸுஷுப்தியிலும் ஏற்பட்ட பிரகாச அறிவு பற்றிப் பின்னர் விமர்சம் ஏற்படாது. தூங்கும்போது எதனை உணர்ந்தாய்? எனில், ஒன்றையும் உணரவில்லை என்றே பதில் வரும். ஸமாதியிலும் அப்படியே. ஆனால் ஒன்றையும் உணரவில்லையா? என்று கேட்டால், எதனையோ உணர்ந்தேன், அதனைக் குறிப்பிட்டு விளக்கமுடியவில்லை. என்று பதில் வரும். பிரகாசம் வெகுநேரம் தொடர்ந்திருந்தால், அதனை விமர்சத்திற்கு உள்ளாக்க முடிவதில்லை. பிரகாசம் நொடிநேரம் மட்டும் இருந்தால் பிரகாசம் ஏற்பட்டதையே உணரமுடியாமல் வேறுபாடு நிறைந்த விமர்சம் மட்டுமே காண்கிறது. விழிப்பில் வஸ்துதர்சனம் என்ற பிரகாச நிலை ஏற்படுவதுபோல் விழிப்பிலேயே ஸுஷுப்தியும் ஸமாதி நிலையும் கூட ஏற்படக்கூடும். ஆனால் அது நொடிநேரம் மட்டுமே (க்ஷணிகம்) இருக்கும். விழிப்பில் ஏற்படும் ஸுஷுப்தியைப் புரிந்து கொள்ளலாம். ஏனெனில் ஸுஷுப்தி பற்றிய பரிசயம் பல விதமாக முன்னரே ஏற்பட்டுள்ளது. அதனால் இது விழிப்பில் ஏற்பட்ட ஸுஷுப்தி என்று இனம் கண்டுகொள்ள முடியும். விழிப்பில் ஏற்பட்ட ஸமாதியை நாம் இனம் கண்டுகொள்ள முடிவதில்லை. ஏனெனில் ஸமாதி என்றால் என்ன என்பதை நாம் இதுவரை கண்டறிந்ததில்லை. அதனால் நொடிநேரம் ஸமாதி ஏற்பட்டிருந்தும் அதனை இனம் காணமுடியவில்லை. விழிப்பு நிலையில் ஸமாதி வருமா? ஸுஷுப்தி வருமா? என்று திகைக்கலாம். இதனை ஜனகர் விளக்குகிறார்.*

सर्वेषां प्राणिनां ब्रह्मन् व्यवहारदशास्वपि ।। ८५ ।।
सूक्ष्माः समाधयः सन्ति चाव्युत्पत्त्या विभान्ति नो।
जाग्रत्यविमृशिर्या स्यात् स समाधिरूदीरितः ।। ८६ ।।
विमर्शाभावमात्रं तु समाधिरभिधीयते।
सुषुप्तौ दर्शने चापि समाधित्वमतः स्थितम् ।। ८७ ।।

ருஷியே! எல்லா பிராணிகளுக்கும் வியவஹாரநிலை (விழிப்பு)யிலும் ஸூக்ஷ்மமான ஸமாதிகள் ஏற்படுவதுண்டு. ஆனால் பிரித்து அறிய முடியாததால் அவை இனம் கண்டுகொள்ள முடிவதில்லை. விழிப்பிலும்

**விமர்சமே ஏற்படாமல் பிரகாசம் மட்டுமே உள்ளநிலை உண்டு. அதுதான் ஸமாதி. விமர்சம் தொடராத நிலை ஸமாதி. அதனால் ஸுஷுப்தியிலும் வஸ்துதர்சன நிலையிலும் (விழிப்பிலும்) ஸமாதிநிலை உண்டு.**

किन्तु मुख्यसमाधित्वं अनयोर्न हि विद्यते।
भेदामर्शनसंस्कारगर्भितत्वात् न मुख्यता॥ ८८॥

**ஆனால் விழிப்பிலும் ஸுஷுப்தி நிலையிலும் ஏற்படுவது முக்யஸமாதி நிலை அல்ல. கௌன ஸமாதி நிலையே. விழிப்பில் குடம், சிகப்பு, நல்லது என்பது போன்ற அறிவின் வேறுபாட்டின் உணர்வும், ஸுஷுப்தியில் இந்த வேறுபாட்டை உணரவில்லையே என்ற குறையும் அவற்றின் ஸம்ஸ்காரமான ஸூக்ஷ்மமான வாஸனையும் அடங்கியிருப்பதால் இது முக்கிய ஸமாதி அல்ல.**

दर्शनं जाग्रति भवेत् अविमर्शनरूपकम्।
तथापि ते प्रवक्ष्यामि मुनिपुत्रादरात् शृणु॥ ८९॥
अव्यक्तं यत्प्रथमजं नास्ति सामान्यकं हि तत्।
नास्तीत्येव हि तद्भानमत्यन्ताभावपूर्वकम्॥ ९०॥
एषा सुषुप्तिरित्युक्ता जडशक्तिर्भवे चितः।
दर्शने भासमानं च नास्त्याभासपदं यतः॥ ९१॥
अतः सुषुप्तिरेचे स्यात् जडदर्शनसङ्गता।

**விழிப்பில் ஏற்படும் ஸுஷுப்தியும் ஸமாதியும் விமர்சனமற்ற நிலையாகும். ஆனால் அவ்விரண்டைப்பற்றி மறுபடியும் விளக்குகிறேன். கவனத்துடன் கேளும். ஸ்ருஷ்டிக்கு முன் ஏற்படும் அவ்யக்த நிலையை நம்மால் பொதுவாக உணரமுடியாது. அதனால் அது இல்லை என்றே தோன்றுகிறது. அதுபோல்தான் ஸுஷுப்தியும். அது சித் ஆகிய பரம்பொருளின் ஜடசக்தி, அதுபோலவே விழிப்பில் ஏற்படும் பொருள் பற்றிய அறிவு ஸுஷுப்தியில் காணப்படாததால் அந்த ஸுஷுப்தியும் அவ்யக்தத்தில் ஏற்படும் ஜட தர்சனத்திற்கு ஒத்ததே.**

***விழிப்பு நிலையிலும் ஸுஷுப்தியும் ஸமாதியும் ஏற்படுவது உண்டு (இதனை அடுத்த அத்தியாயத்தில் விளக்குகிறார்.) விழிப்பில் ஏற்படும் மற்ற ஞானங்களுக்கு பிரகாசம் விமர்சம் என்ற நிலைகளும் உண்டு. ஆனால் விழிப்பில் ஏற்படும் ஸுஷுப்திக்கும் ஸமாதிக்கும் பிரகாசம் என்ற நிலை***

*உண்டு. விமர்சம் என்ற மனநிலை ஏற்படாது. இப்போது ஒரு சந்தேகம் தோன்றலாம். ஸுஷுப்தியிலும் ஸமாதியிலும் பிரகாசம் மட்டும் உண்டு, விமர்சம் இல்லை என்ற ஒற்றுமை இருப்பதால், இரண்டும் ஒன்றாகலாமே? என்று. ஸமாதி என்பது சித்சக்தியின் சைதன்ய அநுபவ நிலை. ஸுஷுப்தி என்பது ஜடநிலை என்ற வேறுபாட்டை விளக்குகிறார் ஜனகர்.*

*படைப்பிற்கு முன் ஏற்படும் அவ்யக்த நிலை முன்பு விளக்கப்பட்டது. சித்திலிருந்து ஜடம் தோன்று முன் இடையே உள்ள நிலை அது. சித்தாகவும் இல்லாமல் ஜடமாக வெளிப்படையாக உணர முடியாமலும் இருப்பதால் அது அவ்யக்தம். உலகம் ஜடமாக தோற்றத்திற்கு உட்படாத நிலை. (அத்ருச்யம்). திருச்யமான தோன்றும் புலப்படாத நிலை. இந்த நிலைதான் பின்னர் ஜடமான திருச்யமான – பொருளனைத்தையும் உண்டாக்க இருக்கிறது. ஜடமானது வியகக்தமாகாதிருப்பதால், ஜடமானது சக்தியாக உள்ள நிலை என, ஜட சக்தி என்று இதனைக் குறிப்பிடுவர். இதே ஜட தசைதான், ஸுஷுப்தியும், ஸுஷுப்தியில் பேத ஞானம் வராமலிருப்பதால் வேறுபட்டுள்ள வஸ்துவின் தர்சனமின்மையால் "நகிஞ்சித் அவேதிஷம்" 'நான் ஒன்றையும் உணரவில்லை' என்ற ஜட தசை உள்ளது. அதனால் ஸுஷுப்தி ஜட தர்சனத்திற்கு முன் நிலை. ஸமாதியோ ஜடப் பொருளிலிருந்து வேறுபட்ட பரம் பொருளின் உண்மை நிலையான பிரகாசம் உணரப்படும் நிலை. ஸமாதியில் பேதமற்று எல்லாமாயிருந்த நிலை, பேரறிவு, பேரொளி ஆகி நின்ற நிலை சித்வடிவம் என்கிறார்.*

समाधौ भासमाना या चितिः सा ब्रह्मरूपिणी ।। ६२ ।।
भक्षिणी कालदेशानां नास्त्याभासविनाशिनी ।
सर्वथाऽस्तिमयी देवी सुषुप्तिः सा कथं भवेत् ।। ६३ ।।
तस्मात्सुषुप्तिमात्रेण न भवेद्धि कृतार्थता ।
बोधयामास जनकः इत्यष्टावक्रमुक्तिभिः ।। ६४ ।।

इति त्रिपुरारहस्ये ज्ञानखण्डे अष्टावक्रिये षोडशोऽध्यायः

ஸமாதியில் தோன்றும் சித்தானது பரம்பொருள் வடிவானது. காலதேசவரம்பைத் தன்னுள்ளடக்கி நிற்பது. காலதேச வரம்பிற்கு

உட்படாதது, ஒன்றையும் உணரவில்லை என்று கூறமுடியாத நிலை. எப்போதும் அதனை உணர்ந்து கொண்டிருக்க முடியும். அது எப்படி ஸுஷுப்தியாக இருக்க முடியும்? அதனால் ஸுஷுப்தி அனுபவத்தால் லாபம் ஒன்றுமில்லை என ஜனகர் அஷ்டாவக்ரருக்கு விளக்குகிறார்.

*ஸுஷுப்திக்கும் ஸமாதிக்கும் உள்ள வேற்றுமை என்ன? ஸுஷுப்தி ஜடநிலை. ஒன்றையும் உணர முடியாத நிலை. ஸமாதி என்பது எல்லாவற்றையு ம் உணரும் நிலை. விழிப்பில் கால தேசவரம்பிற்குட்பட்டதையே வேறுபாட்டுடன் காண முடியும். குடத்தில் உள்ள ஆகாசத்தை உணர முடியும். மஹாகாசத்தை உணர முடியாது. இன்றிருப்பவனைப் பார்க்க முடியும். நேற்றிருந்தவனைக் காண முடியாது. விழிப்பில் ஏற்படும் அறிவு கால தேச வரம்பிற்கு உட்பட்டது. ஸமாதியில் அகண்டமான காலதேச வரம்பிற்கு உட்படாத ஞானம். பொருளால் ஏற்படும் வேறுபாடு இதில் இல்லை. வேறுபாடில்லாததால் ஸத்யமானது, எப்போதும் உள்ளது. ஜடமாக, விளங்காததொன்று என்றில்லாமல் எப்போதும் அழகாக துலங்கும் ஒன்று என்று சுருக்கமாகக் குறிப்பிட்டு வரும் அத்தியாயத்தில் இதனை விளக்குகிறார் ஜனகர்.*

***இவ்வாறு திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் அஷ்டாவக்ரர் கதையாகிய பதினாறாவது அத்தியாயம்.***

# सप्तदशोऽध्यायः

## பதினேழாவது அத்யாயம்

श्रुत्वैवं जनकेनोक्तं अष्टावक्रः पुनर्नृपम्।
पप्रच्छः यत्तद्वदामि शृणु भार्गव यत्नतः॥१॥
राजन् युदुक्तं भवता व्यवहारदशास्वपि।
सूक्ष्माः समाधयः सन्तीत्येवं तन्मे वद स्फुटम्॥२॥
दशासु कासु ते सन्ति निर्विकल्पचिदात्मकाः।
एवं तेवामुयुक्तोऽथ प्राह राजा महाशयः॥३॥

பரசுராமரே! இவ்வாறு ஜனகர் கூறியதைக் கேட்ட அஷ்டவக்ரர் மறுபடி அரசனான ஜனகரைக் கேட்டதைப் பற்றி நான் சொல்கிறேன். கருத்துடன் கேளும். " அரசரே! தாங்கள் வியவஹாரநிலையிலும் (விழிப்பிலும் கனவிலும்) கூட ஸூக்ஷ்மமான ஸமாதிகள் ஏற்படுவது உண்டு என்றீர்களே அதனை விளக்குங்கள். எந்த நிலையில் அந்த நிர்விகல்பக சித் வடிவிலுள்ள ஸமாதிகள் ஏற்படுகின்றன ! என்று கேட்கப்பட்ட அரசர் கூறினார்.

शृणु ब्रह्मन् प्रवक्ष्यामि व्यवहारे समाधयः।
प्रियया संपरिष्वक्तो नव्यया प्रथमं यदा॥४॥
तदा न वेद बाह्यं वाऽप्यन्तरं वा क्षणे नरः।
तिष्ठेन्न निद्रयाकान्तः स समाधिरुदीरितः॥५॥

அந்தணரே! விழிப்பிலும் ஏற்படும் ஸமாதிகள் பற்றிக் கூறுவேன், கேளும், புதிதாக மணம் புரிந்து கொண்ட மனைவியால் முதல் தடவையாக இறுக அணைத்துக் கொள்ளப்பட்டவன் வெளியுலக (தேசகால) உணர்வையும் உள் (சுகதுக்க) உணர்வையும் நொடிநேரம் அறியாதவனாக இருப்பானல்லவா? அப்போது அவன் ஸுஷுப்தி வசத்திலும் இல்லை. அது ஸமாதி எனப்படும்.

यच्चिराद्वाञ्छितं किञ्चिदलभ्यत्वेन निश्चितम्।
अकस्मात्तस्य संप्राप्तिर्यदा भवति वै मुने॥६॥

तदा न वेद वाह्यं वाऽप्यान्तरं वा क्षणं नरः।
तिष्ठेन्न निद्रयाकान्तः समाधिरुदाहृतः॥ ७॥

வெகு நாட்களாக ஆசைப்பட்டதொன்று ; இனி கிடைக்காது என்று தீர்மானிக்கப்பட்டது; அது எதிர் பாராத விதமாகக் கிடைக்கும்போது வெளி உணர்வும் உள்ளுணர்வும் அற்ற நொடி உள்ளதே அது ஸமாதி. அதுவும் ஸுஷுப்திக்குள் அடங்கியதல்ல அல்லவா?

अतर्कितं व्रजन् क्वापि निर्भयो हृष्टमानसः।
अकस्माद्यादि संपश्येत् व्याघ्रादि मृत्युसंमितम्॥ ८॥
तदा न वेद बाह्यं वाऽप्यान्तरं वा क्षणं नरः।
तिष्ठेन्न निद्रयाकान्तः स समाधिरुदाहृतः॥ ६॥

எங்கோ பயமின்றி மகிழ்ச்சி ததும்பும் மனத்தினனாகச் செல்பவன் எதிர் பாராதவிதமாக யமனுக்கொப்பான புலி முதலியவற்றைக் காண நேர்ந்தால் திடுமென உள்ளுணர்வும் வெளியுணர்வும் அற்றவனாக இருப்பானே, அது ஸமாதி. அதுவும் ஸுஷுப்திக்குட்பட்ட தல்ல அல்லவா?

अतिप्रियं स्वपुत्रादिं विभुञ्च गृहकर्मणि।
अरोगिणं यदाऽकसमात् संशृणोति मृतं किल॥ १०॥
तदा न वेद बाह्यं वाऽप्यान्तं वा क्षणं नरः।
तिष्ठेन्न निद्रयाक्रान्तः स समाधिरुदीरितः॥ ११॥

தன் பிள்ளை முதலியவரில் ஒருவர், மிகுந்த பிரியத்துக்கு உரித்தானவர், வீட்டுப் பணிகளில் எங்கும் வியாபகமாயிருப்பவர், நோயற்றிருந்தவர் திடிரென இறந்தாரெனக் கேள்விப்படும்போது உள்ளுணர்வும் வெளியுணர்வும் மறத்துப்போன நிலை உள்ளதே அது அந்த சமாதி. அதுவும் ஸுஷுப்திக்கு உட்பட்டதால் அல்லவா?

अथान्यथापि वक्ष्यामि समाधेः संभवं शृणु।
जाग्रत्स्वप्नसुषुप्तीनां मध्ये सन्ति समाधयः॥ १२॥

மற்றொரு ஸமாதி நிலை ஏற்படுவதைக் கூறுகிறேன் கேள். ஜாகரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று மூன்று நிலைகளின் இடையே அந்த ஸமாதி நிலைகள் ஏற்படுகின்றன.

*ஸமாதியை தூரீய நிலை – நான்காவது நிலை என்பர். ஜாகரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற நிலைகளை அது கடந்தது. ஜாகரம் என்ற வெளி நோக்கிலுள்ள பொறிகள் இயங்கும் நிலையிலிருந்து கனவு நிலைக்குச் செல்கிறோம். ஜாகரமும் கனவும் ஒரே நிலையல்ல, வெவ்வேறு நிலைகள். ஒவ்வொன்றிலும் விமர்ச நிலை மாறுபடும். ஜாகரத்திலிருந்து கனவிற்குச் செல்லும்போது ஒரு நொடி நேரம் ஜாகர விமர்சமும் இல்லாமல், கனவின் விமர்சமும் இல்லாமல் விமர்சமின்றி இருக்கும். விமர்சனமின்றி பிரகாசம் மட்டும் இருக்கும் நிலை ஸமாதி அல்லவா? அதுபோல் கனவிலிருந்து ஸுஷுப்திக்குச் செல்லும்போதும் விமர்ச நிலைகள் மாறும். இடையே ஒரு நொடி நேரமாவது ஒருவித விமர்சமின்றி இருக்கும். இதுவும் ஸமாதி நிலைதானே என்கிறார் ஜனகர்.*

दूरे किञ्चित्पश्यतस्तु बुद्ध्या चैकाग्रया मुने।
मनो दीर्घात्मतां याति जलूकेव तृणालिषु॥ १३॥
देहे देहाभासमयं भावे भावात्मकं तथा।
मध्ये तन्निर्विकल्पाख्यं मनो लक्षय सर्वदा॥ १४॥

தூரத்தில் ஒன்றைப் பார்ப்பவனுக்கு அறிவு ஒருமுனைப் பட்டிருக்கும் போது புல்வரிசையில் உடலை நீட்டிச் செல்லும் அட்டைப்புழு போல் மனமும் நீண்டு விடுகிறது. அந்நிலையில் உடலைப் பார்த்ததும் உடல்தோற்றமாகவும் தூரத்தில் கண்டபொருளைப் பார்த்ததும் அப்பொருள் தோற்றமாயும் உள்ள தர்சனம் இரண்டிற்கும் இடையெ நிர்விகல்பமாகவும் மனமிருப்பதைக் கண்டாய்.

*ஒருவன் தன் எதிரில் உள்ள மனிதனைப் பார்த்தான். மனித உடலாக பிரகாசமும் தொடர்ந்து விமரிசமும் தோன்றின. திடீரென வெகு தூரத்திற்கப்பாலுள்ள சூரியனைப் பார்த்தான். சூர்ய மண்டல வடிவில் தோற்றம் பதிந்தது. இவ்விரு தோற்றங்களிடையே இடையில் விமரிசம் ஏற்படாத நிலை உள்ளதே அது ஸமாதி. இப்படி இரு விமர்ச*

*நிலைகளிடையே ஸமாதியை காணலாம். அருகில் உள்ள பொருளைக் கண்ட பின் வெகு தூரத்தில் உள்ளதைக் காணும்போது மனம் அட்டைபோல் நீண்டு அந்த தூரத்திலுள்ள பொருளைத் தாவிப்பிடிக்கிறது. அதனால் உடலில் உள்ள மனம் ஸூர்ய மண்டலம் வரை நீள்கிறது. ஆனால் இடையே வேறு விமர்சங்கள் பல இடைவிடாமல் ஏற்படலாம். மனத்தை ஸூரிய மண்டலத்தைப் பார்ப்பதில் மட்டும் ஈடுபடுத்தி ஒருமுனைப்படுத்தினால் மற்ற விமர்சங்கள் ஏற்பட ஏதுவில்லை. ஸூர்ய மண்டலத்தை உற்று நோக்கி அது பதியும் வரை மனம் நிர்விகல்பமாக இருக்கிறது.*

बहुना किमिहोक्तेन शृणु सूक्ष्मविमर्शने।
व्यवहारे न कस्यापि ज्ञानमेकं तु भासते॥ १५॥
खण्डज्ञानसमूहात्मा व्यावहारोऽयमाततः।
अत एव वर्णयन्ति तैर्थिकाः सर्व एव हि॥ १६॥
आत्मानं बुद्धिमपि वा क्षणभेदविभेदितम्।
तदन्तरक्षणौघेषु निर्विकल्प दशा स्थिता॥ १७॥

நிறையக் கூறி என்ன? அனுபவத்தில் தனித்து ஒரே ஞானம் யாருக்கும் ஏற்படுவதில்லை. துண்டுதுண்டாக ஏற்படுபவற்றின் தொகுப்பே அறிவு என்பது. பல வேறுபட்ட உணர்வுகள் தொடர்ந்து ஏற்படுவதே ஞானம். அதனால் தான் கணாதர் முதலிய மஹரிஷிகள் ஆத்மாவையும் புத்தியையும் நொடிக்கு ஒரு மாறுதல் கொண்டதாகக் கூறுகிறார்கள். இந்த அறிவுத் தொடருக்கிடையே நொடிப் பொழுது இரு உணர்வுகள் இடையே உள்ள வெளியில் ஸமாதி நிலை ஏற்படுகிறது.

*பௌத்தர்கள் நொடிக்கொரு உணர்வு ஏற்படுவதாயும் அதன் தொடரே (தாரையே) ஆத்மா என்றும் கூறுகின்றனர். கணாதர் முதலிய தார்க்கிகர்கள் அந்த உணர்வுத் தொடரையே புத்தி என்று கூறுகின்றனர். நொடியில் ஒரு சிறு கூறு கூட ஒரு உணர்வு நிலைப்பதில்லை. சங்கிலித் தொடராக ஏற்பட்ட பல உணர்வுகளின் விளைவே 'நான் குடத்தைப் பார்க்கிறேன்' என்ற பெயரளவில் ஒன்றாக உள்ள உணர்வு. தனித்து ஏற்படும் உணர்வை உணர்வு என்றும் உணர்வுத் தொடரை ஆத்மாவென்றும் புத்தர்கள் கூறுவர். இதுதான் ஆத்மா அல்லது புத்தி என்ற வாதம் சரியா என்று நிர்ணயம் இப்போது*

*அவசியமில்லை. பற்பல உணர்வுகள் வரிசையாகத் தோன்றி ஒரு முழு உருப்பெறுகின்றன. இந்த உணர்வுகளின் இடையே ஒரு நொடிக் கூறு அளவு இடைவெளி உண்டு. இரண்டு ஒன்றாயிருந்தால் இடைவெளி இருக்கும். அதுதானே வேறுபடுத்துவது! இது தவிர்க்க முடியாதது. அது என்ன? அதுதான் ஸமாதி என்கிறார் ஜனகர்.*

कहोलात्मज जानीहि जानतां तु प्रतिक्षणम्।
समाधिरस्तिचान्यस्य समाधिः शशशृङ्गवत्॥ १८॥

கஹோலரின் புதல்வரே ! இதனை ஒவ்வொரு நொடியிலும் உணர்பவர்களுக்கு ஸமாதி ஏற்படுவதை உணரமுடியும். மற்றவர்களுக்கு ஸமாதி என்பது முதல் கொம்புபோல் எக்காலத்திலும் இல்லாத தொன்று.

जनकोक्तमिति श्रुत्वा भूयः पप्रच्छ स द्विजः।
राजन्नेवं व्यवहृतौ समाधिर्निर्विकल्पकः॥ १९॥
सर्वेषामस्ति यदि चेत्तत् कुतः संसृतिर्भवेत्।
सुषुप्तौ दर्शने चापि जडाव्यक्तविभासतः॥ २०॥
पुरुषार्थासाधनत्वं समाधिस्त्वविकल्पकः।
शुद्धसंविद्विभातात्मा तद्भूयः सं सृतिः कथम्॥ २१॥
एतदेव हि विज्ञानमज्ञानकुलनाशनम्।
निर्विकल्पसमाध्याख्यं यन्निःश्रेयसकारणम्॥ २२॥
एतन्मे शंस राजेन्द्र सर्वसंशयनाशनम्।
इत्यापृष्टो महीपालः प्राह तं मुनिपुङ्गवम्॥ २३॥

ஜனகர் இவ்வாறு கூறியதைக் கேட்ட அந்த அந்தணர் மறுபடி கேட்டார். "அரசே! அனுபவத்தில் எல்லோருக்கும் நிர்விகல்பகஸமாதி நிலை இருப்பதானால், ஸம்ஸாரச்சுழல் எப்படி நேரும்? ஸுஷுப்தியிலும் ஜாகரத்திலும் ஜடமும் அவ்யக்தமும் தோன்றுவதால் புருஷார்த்தமான முக்தியை அவை தராது. ஸமாதியோ நிர்விகல்பகம். அதில் சுத்தமான சித் மாத்திரம் தான் தோன்றும். அப்போது ஸம்ஸாரச்சுழல் எப்படி ஏற்படும்? இது பேரறிவல்லவா? அறியாமைக் கூட்டத்தையே அழிக்கவல்லது. இதுதான் மேம்பட்ட மேன்மைக்கு முக்திக்கு ஸாதனம். பல ஸம்சயங்களைப்

போக்கவல்ல இதனை விளக்க வேண்டும் " இவ்வாறு கேட்கப்பட்ட அரசர் ஜனகர் அந்த முனிவரைப் பார்த்துக் கூறினார்.

*ஜாகரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளில் ஜடமான இந்தஜகத்துடனும் அதற்கு மூல காரணமான பிரகிருதியுடனும் தொடர்பிருப்பதால் ஆத்மாவை இவைகளின் கலப்பின்றி சுத்தமானதாக உணர முடியவில்லை. சுத்த சித்தாக அதனைக் கண்டால்தான் முக்தி என்ற பரம புருஷார்த்தம் கிட்டும். ஜாகர நிலைகளில் கூட க்ஷண நேரமாவது ஸமாதி கிட்டுமானால் அந்த நொடிப்பொழுதில் ஏற்பட்ட மின்னல் போன்ற சுத்த சித்த உணர்வு முக்தியைத் தர வேண்டுமே! (பிறப்பும் இறப்பும் என்ற இந்தச் சுழல் அகல வேண்டுமே!) ஏன் அகலவில்லை? என்று கஹோலரின் கேள்வி.*

ஸமாதியில் அஞ்ஞானம் நீங்கும் என்பதை விளக்குகிறார் ஜனகர்.

शृणु ब्रह्मन् प्रवक्ष्यामि रहस्यं परमं त्विदम्।
अज्ञनात् संसृतिरियं प्रवृत्ताऽनादिकालतः ।। २४ ।।
सुखदुःखावभासानां प्रवाहात्मतया स्थिता।
स्वप्नवत् सन्तता सर्वैः सर्वदा ह्यनुभूयते।। २५ ।।

அந்தணரே! மிக ரஹஸ்யமான இதனை விளக்குகிறேன். தொடக்க தெரியாத காலவரையிலிருந்து இந்த அஞ்ஞானம் தொடர்ந்து வந்துள்ளது. ஸுகம், தூக்கம் என்ற தோற்றங்களின் பிரவாகமாக இது உள்ளது. எனினும் கனவு போல் தொடர்ந்து ஏற்படுவது. எல்லோராலும் எங்கும் உணரப்படுவது உண்மையல்லாதது.

निवृत्तिस्तस्य तु ज्ञानादेवेति प्रविभावितम्।
तज्ज्ञानं सविकल्पं स्यात् अज्ञानस्य प्रबाधनम्।। २६ ।।

அந்த அஞ்ஞானம் ஞானத்தால்தான் போகும் என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. அந்த அஞ்ஞானத்தை அழிக்கும் ஞானம் ஸவிகல்பகமாகும்.

*சிலருக்குக் கனவு பொய்யாயினும் பல நாட்களுக்குத் தொடர்ந்து வருவதால் மெய்யெனத் தோன்றும். அதுபோல் ஸம்ஸார துக்கமும் தொடர்ந்து எல்லோராலும் எல்லா வகையிலும் மெய்யென உணரப்பட்டாலும் பொய்யே. இது அஞ்ஞானத்தால் ஏற்படும். உடல் முதலியவற்றில் இதுதான் ஆத்மா என்ற புத்தி அகன்று மெய்ப் பொருளான ஆத்ம தத்துவத்தை உணர்வதால் மட்டும் இந்த அஞ்ஞானத்தை அகற்ற முடியும். எது ஆத்மா என்று தொடங்கிய விசாரம் சிரவணம் மனனம் என்ற இரு ஸாதனங்களால் விசாரம் செய்யப்பட்டு புத்தி அளவில் நிலைத்ததை நிதித்யாஸனம் என்ற ஸாதனத்தின் மூலம் சாஸ்திரத்தால் அறிந்த ஆத்ம தத்துவமும் அதன் வழியே நான் உணரும் ஆத்மாவும் ஒன்றே என்று " ஸோஹம் – அந்த ஆத்ம ஸ்வரூபம் நானே " என்று உணர்வில் முடிகிறது. அந்த உணர்வே ஞானம் 'அது' 'நான்' என்ற பேத உணர்வும் 'நான் உணர்கிறேன்' என்ற திரிபுடியும் ஏற்படுவதால் இது துவைத ஞானம் அல்லவா? என்ற ஐயம் எழும். சென்னையில் அன்று பார்த்த அவனும் இன்று திருச்சியில் பார்க்கப்பெறும் இவனும் ஒருவனே என்ற பிரத்ய பிஞ்ஞை அறிவில் 'அவனும் இவனும்' என்ற இரண்டும் தோன்றினாலும் ஒருவனே என்ற முடிவிற்கு உதவுவதால் துவைதமாகாது. ஆனாலும் அதுவும் இதுவும் ஒன்றே என்ற உணர்வில் அதுவும் இதுவும் தனித்திருப்பதைப் போலிருப்பதால் இது ஸவிகல்பகமே. இந்த ஸவிகல்பகமே அஞ்ஞானத்தைப் போக்கும். நிர்விகல்பகநிலையில் உணரப்படும் அகண்ட ஆத்ம தத்துவம் அஞ்ஞானத்தை அழிக்காது என்கிறார் ஜனகர்.*

निर्विकल्पकविज्ञानात् अज्ञानं न निवर्तते।
निर्विकल्पकविज्ञानं केनचिन्न विरुध्यते ॥ २७ ॥
निर्विकल्पकविज्ञानं सविकल्पसमाश्रयम्।
विचित्रचित्रभासानां भित्तिवत् सुव्यवस्थितम् ॥ २८ ॥

நிர்விகல்பக ஞானத்தால் அஞ்ஞானம் மறைவதில்லை. ஏனெனில் நிர்விகல்பக விஞ்ஞானம் எதனுடனும் விரோதப்படுவதில்லை. நிர்விகல்பக ஞானம்தான் வஸவிகல்பகத்திற்கு ஆதாரம். பலதரப்பட்ட சித்திரங்களுக்குச் சுவர் ஆதாரமாவதைப் போல் அது நிலைத்த ஆதாரம்.

निर्विकल्पकं ज्ञानमिति केवलं ज्ञानमुच्यते।
तत्रैव हि विकल्पानां उल्लेखात् सविकल्पकम्॥ २९॥
अज्ञानं सविकल्पाख्यज्ञानमेव न चेतरत्।
तदनेकविधं कार्यकारणात्मतया स्थितम्॥ ३०॥
कारणं स्वात्मपूर्णत्वाख्यातरूपमुदीरितम्।

நிர்விகல்பக ஞானம் என்பது (அறியப்படும் பொருளின் பிரதி பிம்பம் பிரதிபலிக்காத) சுத்த ஞானமாகும். அதில் (ஸங்கல்ப தசையில் பல்வேறு பேதங்கள் உணரப்படுவதால் அதுவே ஸவிகல்பகமாகிறது. அஞ்ஞானமும் ஸவிகல்பக ஞானமே வேறல்ல. ஸவிகல்பகம் பலவிதம் கார்ய அஞ்ஞானம், காரண அஞ்ஞானம் என்று பிரிந்து காண்பதாகும். காரண அஞ்ஞானம் என்பது ஆத்மாவின் பூர்ண நிலையை உணராமல் இருப்பதுதான்.

चिदात्मा पूर्ण एव स्यात् अवच्छेद विवर्जनात्॥ ३१॥
अवच्छेदनहेतूनां कलादीनां हि साधकः।
तथाविधात्मनः ख्यातिः अपूर्णत्वेन या स्थिता॥ ३२॥
अत्राधुनास्मीतिरूपा मूलाज्ञानं हि सा भवेत्।

சித்ஸ்வரூபனான ஆத்மா காலம் தேசம் வடிவம் என்ற பகுப்பவை மூன்றாலும் துண்டாட முடியாதவனான படியால் பூர்ணன், காலம் தேசம் வடிவம் என்ற மூன்றுவிதப் பகுப்பிற்கு உதவும் கலா முதலிய தத்துவங்களுக்கு உதவுபவன். அத்தகைய ஆத்மாவை நிறைவில்லாதவனாக அபூர்ணனாக அறிவது – 'இங்கு இப்போது இருக்கிறேன் ' என்று உணர்வது ராகண அஞ்ஞானமாகும்.

तस्यैव पल्लवप्रायं देवात्मत्वादिभासनम्॥ ३३॥
अज्ञानस्य निवृत्त्यन्तं संसारो न निवर्तते।
पूर्णात्मविज्ञानमृते त्वज्ञानं न निवर्तते॥ ३४॥

அந்த காரண அஞ்ஞாணத்தின் விளைவே தேகம்தான் ஆத்மா என்பது போன்ற உணர்வு, இந்த மூல - (காரண) அஞ்ஞானம் மறையும் வரை ஸம்ஸாரம் மறையாது. பூர்ணமான ஆத்ம ஸ்வரூபம் உணரப்பட்டாலன்றி

இந்த அஞ்ஞானம் மறையாது.

तच्च पूर्णात्मविज्ञानं द्विविधं सुव्यवस्थितम्।
परोक्षमपरोक्षं च परोक्षं गुरुशास्त्रतः॥ ३५॥
तत्साक्षात्पुरुषार्थस्य न कारणमिति स्थितम्।
यादृशं ते भवेत् ज्ञानं शास्त्रश्रुतिसमुद्भवम्॥ ३६॥
श्रद्धामात्राभ्युपगतं फलदं न प्रचक्षते।

அந்த பூர்ண ஆத்மா ஞானம் பரோக்ஷம், அபரோக்ஷ ம் என இருவகை. பரோக்ஷம் என்பது குருவிடமிருந்தும், சாஸ்திரத்திலிருந்தும் வெளிப்படையாக அறிந்தது. (அனுபவத்திற்கு வராதது). அது ஸம்ஸாரதுக்க நிவிருத்தி என்கிற புருஷார்த்தம் பெற உதவாது, சாஸ்திரங்கள் மூலம் கேள்வி ஞானமாகப் பெற்றது. சிரத்தையால் 'அப்படியே உள்ளது' என்று ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதே தவிர அப்படியே உணரப்பட்டதல்ல, அதனால் அது பயன் தராது என்பர்.

अपरोक्षं हि विज्ञानं समाधिपरिपाकजम्॥ ३७॥
सप्रपञ्चाज्ञाननाशक्षमं शुभफलावहम्।

ஸமாதியின் சிறப்பால் ஏற்படுவது அபரோக்ஷ ஞானம். அது ஜகத்தென்ற விரிவையும் வேற்றுமையையும் அதன் மூலகாரணமான அஞ்ஞானத்தையும் அழிக்கவல்லது. சுபமான முக்தி என்ற பலனைத் தரவல்லது.

*இந்திரியம் மனம் இவற்றால் உணரப்படுவது பரோக்ஷம், கல்வியறிவும் கேள்வியறிவும் இதனுள் அடங்கும். இந்த அறிவு மேல் எழுந்த வாரியாக உள்ளது. கல்கண்டு பற்றிப் பிறர் சொல்லி அறிந்தது போல். அப்படி அறிந்ததைத் தன் சுய அனுபவத்தில் உணர்வது அபரோக்ஷம். கல்கண்டின் சுவையாத் தானே சுவைத்து உணர்ந்தது போல். நூலறிவும் கேள்வியறிவும் ஸாதனமாகி ஆத்மா என்பது என்ன? என்ற விசாரத்திற்கு வித்திட, அந்த விசாரம் நல்ல விதமாக அமைந்து, தானே ஆத்மா என்பதன் பேரில் உள்ள திரைகளை அகற்றவல்லதாகி, ஸமாதி கூடி, அதில் சுத்தமான ஆத்ம ஸ்வரூபம் பேரொளியாகத் துலங்கும்போது அது அபரோக்ஷ அனுபவமாகிறது. அப்போது ஜடமான ஜகத்தும் அதனால் விளைந்த பல*

*பேதங்களும் மறைகின்றன. கணநேரம் மாத்திரம் தொடரும் ஸமாதியில் இந்த ஞானம் துலங்காது. அப்படித் துலங்கினாலும் வெகுநாட்பட்ட ஸம்ஸார வாஸனையை அழிக்க அது வலிவுள்ளதாக ஆகாது. அதனால் ஸமாதி நன்கு பக்குவமடைந்து சிறப்புள்ளதாக அமைதல் அவசியம். ஸமாதியானது ஸுஷுப்தியைப் போல் மூட நிலையாக இருக்காது. பேத ஞானத்திற்கு மூலமான அஞ்ஞானம் இன்னதெனத் துலங்கி எல்லாவற்றிற்கும் ஆதாரமான பேரறிவு துலங்கும் நிலையே ஸமாதி.*

समाधिर्ज्ञानपूर्वस्तु विज्ञानं जनयेत्खलु ।। ३८ ।।
तस्मादज्ञानिनां नार्थः समाधौ संभवत्यपि ।

சாஸ்த்ரம் மூலமும் குரு மூலமும் பெற்ற அறிவை முன்னதாகக் கொண்ட ஸமாதியே ஆத்மானுபவத்திற்கு உதவும். இந்த அறிவில்லாதவனுக்கு ஸமாதியில் யாதொரு லாபமும் கிடைக்காது.

यथाऽपिदितमाणिक्यः पश्यन् कोशगृहे मणिम् ।। ३९ ।।
न जानाति यथाऽयस्तु श्रुतज्ञानमणिः क्वचित् ।
दृष्ट्वा प्रत्यभिजानाति तत्परो मणिमञ्जसा ।। ४० ।।
अतत्परः श्रुतमपि भूयः पश्यन् मणिं कचितः ।
न विजानाति तदिह ब्रह्मन् सुनिपुणोऽपि सन् ।। ४१ ।।
तथा मूढा न विन्दन्ति फलं विज्ञानसंश्रयम् ।
अज्ञातत्वात्, पण्डितास्तु श्रुतज्ञानयुता अपि ।। ४२ ।।
अतत्परत्वहेतोस्तु न विजानन्ति सर्वथा ।

மாணிக்கம் இத்தகையது என்று அறியாதவன் பொக்கிஷத்தில் அந்த மாணிக்கத்தைக் கண்டாலும், அதனை இனம் கண்டுகொள்வது இல்லை. மாணிக்கத்தைப் பற்றி முன்னதாகக் கேட்டறிந்தவனோ அதனைக் கண்டதும் அடையாளம் கண்டுகொள்கிறான். மாணிக்கத்தைப் பற்றிக் கண்டும் கேட்டுமறிந்த நிபுணனும் கூட அதனைக் காண ஆத்மாவைப் பற்றி குரு – நூல் முகமாக அறியாதவர்கள், ஸமாதியில் நேரிடை அனுபவம் பெறும்போது அது இன்னதென உணராததால் அந்த அனுபவத்தால் பெறவேண்டிய ஆனந்தத்தைப் பெறமாட்டார்கள். கேள்வி ஞானம் மிக்க பண்டிதர்களும் கூட

ஆத்ம ஞானம் பெறும் முனைவில்லாமையால் ஆத்மாவை அறிவதில்லை.

यथा हि तारकां पश्यन् अपि जानाति न क्वचित् ॥ ४३ ॥
मूढः श्रुतज्ञानहीनः श्रुतज्ञानयुतोऽपि वै।
पश्यन्नपि च नो वेत्ति तत्परत्वविवर्जनात् ॥ ४४ ॥
यस्तु श्रुत्वा शुकतारां दिगाकारादिलक्षणैः।
मया ज्ञेयं सर्वथेति तत्परो बुद्धिमान् नरः ॥ ४५ ॥
एकाग्रमानसः पश्यन् प्रत्यभिज्ञास्यति स्फुटम्।
एवमज्ञानतो मूढा चान्ये तात्पर्यवर्जनात् ॥ ४६ ॥
न विजानन्ति स्वात्मानं ब्रह्मन् सत्सु समाधिषु।

சுக்கிர கிரகம் எப்படி இருக்கும் என்பதைக் கேட்டறியாதவன் ஆகாசத்தில் சுக்கிரனைப் பார்த்தாலும் அதுதான் என அறியமாட்டான். சுக்கிரனைப் பற்றி அறிந்தவனும் அதனைப் பார்க்கும் முனைவு இல்லாதிருந்தால் நேரில் கண்டும் புரிந்துகொள்ள மாட்டான். சுக்கிரன் இருக்கும் திசை, வடிவமைப்பு முதலிய அறிகுறிகளைக்கொண்டும் நான் சுக்கிரனைக் காணத்தான் வேண்டும் என்ற முனைவுடன் அதே நோக்குடன் அறிவாளி மனம் ஒன்றிக் காணும்போது சுக்கிரனை அடையாளம் காண முடியும். அவ்விதமே மூடர்களும், முனைவில்லாத பண்டிதர்களும் ஸமாதிகள் ஏற்பட்டும் ஆத்மாவைப் புரிந்துகொள்ளமாட்டார்கள்.

भिक्षामटति दुर्दैवात् यथा वै विस्मृताकरः ॥ ४७ ॥
तस्मादेता दशाः सर्वाः समाधीना निरर्थकाः।
अत एव शिशूनां हि सर्वदा निर्विकल्पकम् ॥ ४८ ॥
न फलं साधयेद् ब्रह्मन् अज्ञानस्यानिवृत्तितः।

தன்னிடமுள்ள பணக்குவியலை அறியாதவன் விதியால் பிச்சை எடுப்பதைப் போல், ஸமாதி நிலை ஏற்பட்டும் இவை பயனற்றுவிடுகின்றன. அதனால்தான் சிசுக்களுக்கு பேதமற்ற ஞானம் இருந்தும் அஞ்ஞான நிவிருத்திக்குப் பயன்படாததால் ஒரு பயனையும் தருவது இல்லை.

प्रत्यभिज्ञात्मकं यत्तु ज्ञानं स्यात् सविकल्पकम् ॥ ४६ ॥
तदेव संसारमूलमज्ञानं विनिवर्तयेत् ।

அதனால் பிரத்யபிக்ஞை வடிவில் அமைந்த ஸவிகல்பக ஞானமே ஸம்ஸார பந்தத்தின் மூலகாரணமான அஞ்ஞானத்தைப் போக்கும்.

अनेकजन्मसुकृतैः सन्तुष्टा स्वात्मदेवता ॥ ५० ॥
यदा तदा मुमुक्षुत्वं नान्यदा कल्पकोटिभिः ।
चेतनत्वं जन्मवत्सु परमं दुर्लभं भवेत् ॥ ५२
सुदंर्लभं तेष्वपि च मानुषं जन्म सर्वथा ।
तत्रापि सूक्ष्मबुद्धित्वं अत्यन्तं हि सुदर्लभम् ॥ ५२

பல பிறவிகளில் செய்த புண்யங்களால் இஷ்ட தேவதை திருப்தி அடைந்தால் விடுதலைபெறும் எண்ணம் ஏற்படும். இல்லாவிடில் கோடி கல்பங்கள் வாழ்ந்தாலும் விடுதலை கிட்டாது. பிறவி எடுத்தவர்களின் அறிவாளியாயிருப்பது அரிது. அறிவாளிகளிலும் மனிதப் பிறவி அரிது. அதிலும் கூர்மையான அறிவு பெறுவது மிக அரிது.

पश्य ब्रह्मन् स्थावराणां शतांशेनापि संभितम् ।
न दृश्यते जंगमं वै तेषामपि शतांशतः ॥ ५३
समं नास्ति मनुष्यत्वं तत्रापि परिभावय ।
पशुतुल्याः प्रदृश्यन्ते मनुष्याणां हि कोटयः ॥ ५४ ॥
ये न जानन्ति सदसत् पुण्यं वा पापमेव वा ।

அந்தணரே! பாரும். தாவரங்களில் நூற்றில் ஒரு பங்கே ஜங்கமங்கள் காணப்படுகின்றன. அவற்றில் நூற்றில் ஒரு பங்கே மனிதர்கள். அவர்களிலும் கோடிக்கணக்கானவர் (பிறப்பில் மனிதராயினும்) பிராணிகளுக்கு ஒப்பான— வரே. அவர்கள் நல்லது, கெட்டது, புண்ணியம், பாபம் எனப் பகுத்தறியாதவர்.

अन्येऽपि कोटिशो मर्त्याः प्रवृत्ताः कामनापराः ॥ ५५
गतागतं रोचयन्ते पाण्डित्याभासगर्विताः ।
एवंविधजनानां तु केऽप्यन्ये बुद्धिमद्विधाः ॥ ५६ ॥

मालिन्यशेषचित्तास्तेऽप्यद्वैतपदनास्तिकाः ।

பகுத்தறிபவர்களிலும் கோடிக்கணக்கான மனிதர் ஆசைப்படுவதையே பெரிதெனக்கொண்டு விஷயசுகத்தில் ஈடுபட்டவர். போலியான அறிவால் செருக்கடைந்தவர். அழியும் பலனையே விரும்புவர். அவர்களிலும் வெகு சிலரே சிறிது அறிவுள்ளவர். பாபப் பயனாக வந்த அறிவை மறைக்கும் அழுக்கால் சித்த மரைப்புள்ளவர்களாக அத்வைத நிலை இல்லை என்றே நம்புபவர்கள்.

भगवन्मायया च्छन्नं अद्वैतं परमं पदम् ॥ ५७ ॥
कथं सर्वैः समासाद्यं मायान्धैर्मन्दभाग्यकैः ।
मायान्धानां तत्पदं तु न बुद्धिमुपरोहति ॥

பேராற்றலுள்ள மாயையால் அத்வைதம் எனும் பெருநிலை மறைக்கப்பட்டுள்ளது. மாயையால் பார்வையிழந்தவர்களும் பாக்கியக் குறைவுள்ளவர்களுமான எல்லோராலும் அந்நிலை எப்படிப் பெற முடியும்? மாயையால் குருடானவர்களுக்கு அந்நிலை புத்தியில் ஏறாது:

अन्ये दुर्भागधेयास्ते बुद्ध्यारूढमपीह ये ।
वृथाभिनिविशा भूयोऽपहनुवन्ति कुकल्पनैः ॥ ५८ ॥
अहो भगवती माया पश्यन्तोऽपि महत्पदम् ।
चिन्तामणिं हस्तगतं त्यजन्ति हि कुकल्पनैः ॥ ६० ॥

வேறு சிலர் பாக்கியக் குறைவுள்ளவர், புத்தியில் துலங்கிய அத்வைத தத்துவத்தையும் வீண் பிடிவாதத்தால் குதர்க்கம் செய்து மறைப்பார்கள். அந்த பேராற்றல் படைத்த மாயை விந்தையானது. பெருநிலையை உள்ளங்கையில் உள்ள சிந்தாமணியைப்போல் நேரில் உணர்ந்தும் குதர்க்கத்தால் கைநழுவ விடுகிறார்களே!

येषां समाराधनेन तुष्टा सा स्वात्मदेवता ।
ते मायया विनिर्मुक्ता सुतर्काः श्रद्धया युताः ॥ ६१ ॥
पराद्वये समाश्वस्ताः प्राप्नुवन्ति परं पदम् ।
तत्क्रमं तेऽभिधास्यामि ब्रह्मन् संशृणु संयतः ॥ ६२ ॥

எவர்களது வழிபாட்டால் பரதேவதையான தேவி திருப்தியடைகிறாளோ, அவர்கள் நல்ல வழியில் அமைந்த சிந்தனையும் சிரத்தையும் கூடினவர்களாக மாயையிலிருந்தும் விடுபட்டு, மேலான அத்வைதநிலையில் நம்பிக்கையு ள்ளவர்களாக மேல்நிலையை அடைகின்றனர். அதற்கான முறையை விளக்குகிறேன், கேளும்.

अनन्तजन्मसुकृतैः देवताभक्तिराप्यते ।
तया संराध्य सुचिरं तत्प्रसादात् ततः परम् ॥ ६३ ॥
वैरस्यं भोगबृन्देषु तत्परत्वं च प्राप्नुयात् ।
वैराग्यतत्परत्वाभ्यां श्रद्धया चापि संगतः ॥ ६४ ॥
सद्गुरुं प्राप्य तत्प्रोक्तया वेत्त्यद्वैतं परं पदम् ।

பற்பல பிறவிகளின் புண்ணியம் காரணமாக தேவியிடம் பக்தி ஏற்படுகிறது. அந்த பக்தியுடன் தேவியை ஆராதித்து அவள் அருளால் விஷய சுகத்தைத் துறந்து ஞான ஸாதனத்தில் ஈடுபடுகிறான். வைராக்கியம் ஈடுபாடு சிரத்தை இவற்றுடன் நற்குருவையடைந்து அவர் தரும் நல் விளக்கங்களாலும் அத்வைதப் பெருநிலையை உணர்கிறான்.

एतत् ज्ञानं परोक्षं वै हयस्त्यद्वैतमितीह यत् ॥ ६५ ॥
ततो विचारयेत् सम्यक् अद्वैतं स्वात्मदैवतम् ।
उपपाद्य सुतर्कैस्तु संशयांस्तेन नाशयेत् ॥ ६६ ॥
अथ निश्चितमात्माख्यतत्त्वमद्वयमादरात् ।
अनुध्यायेदाऽपरोक्षं हठवृत्त्यापि यत्नतः ॥ ६७ ॥

இந்த அத்வைத ஞானம் நேரிடையாக உணர்ந்ததல்ல. அத்வைத நிலை என்று ஒன்று உண்டு எனக்கேட்டு உணர்ந்தது. அது பரோக்ஷம் அதனைத் தானே உணர்ந்தனுபவிக்க நன்கு யுக்திகளால்தானே தனித்து விசாரிக்க வேண்டும். அதன்மூலம் இவ்விஷயத்தில் ஏற்படும் சந்தேகங்களை விலக்கிக் கொள்ளவேண்டும். யுத்தியால் இப்படி நிர்ணயிக்கப்பெற்ற ஆத்ம தத்துவத்தை பிராணயாமம் தியானம் தாரணை முதலிய ஹடயோக முறையாலாவது பெரு முயற்சியுடன் மனத்தைக் கட்டுப்படுத்தி அது நேரிடையான உணர்வாக (அபரோக்ஷ ஞானம்) ஆகும் வரை தொடர்ந்து

தியானித்து வர வேண்டும்.

ततो विकल्पविषयीकृत्य ध्यातं परं पदम् ।
संसारमूलमज्ञानं नाशयेन्नात्र संशयः ॥ ६८ ॥
पक्वध्याने निर्विकल्पे समाध्याख्ये परं पदम् ।
आसाद्य पश्चात्संस्मृत्य प्रत्यभिज्ञानवान् भवेत् ॥ ६६ ॥
सोऽद्वैतातमाऽहमस्मीति त्वपरोक्षविकल्पतः ।
संसारमूलमज्ञानं सांगं नाशयति द्रुतम् ॥ ७० ॥

இப்படி (சிரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற மூன்று உபாயங்களால்) இடையறாத தியானத்திற்கு விஷயமாகியுள்ள பெருநிலையை அந்தப் பெருநிலையில் உணரப்பெறும் ஆத்மா தானே "ஸோஹமஸ்மி", என்ற விகல்ப உணர்விற்கு உட்படுத்தி நிற்க ஸம்ஸார மூலமான அஞ்ஞானம் விலகும். நிதித்யாஸனம் என்ற இடையறாதத் தியானத்தின் மூலம் ஆத்ம தத்துவம் நேரிடையாக உணரப்பெறின் தியானம் பக்வமடைந்ததாக உணர — லாம். அதுவே நிர்விகல்பக ஸமாதி, அந்நிலையில் அத்வைதப் பெருநிலையை உணர்ந்து மறுபடி ஸமாதி கலைந்தாலும் அதனை நினைவில் கொணர்ந்து பிரதியபிஜ்ஞானமாக ஸோஹம் என்ற பாவனையில் இருத்தல் வேண்டும். ஸமாதியில் அந்த அத்வைதமான ஆத்மா நானே என்ற நேரிடை உணர்வும் ஸமாதி கலைந்த நிலையில் அதன் நினைவுமாக நிற்கும்போது ஸம்ஸாரத்திற்கு மூலமான அஞ்ஞாநம் அழிந்துவிடும்.

*அத்வைத நிலை என்று ஒன்று உண்டு. அது எளிதில் கிடைப்பதல்ல. பெரும் புண்யத்தால் தேவியின் அருள் கிட்டினால் அது புலனாகும். தேவியின் அருள் ஸத்குருவைக் காட்டும். ஸத்குரு மாயையால் ஏற்பட்ட விபரீத ஞானம் இவனுக்கு விலக உதவுவார். தான் இதுகாறும் கொண்டுள்ள அறிவு தவறானது என்று புலப்பட்டதும், இவன் குருவின் விளக்கங்களை ஒட்டி ஆராய முற்படுவான். தனித்து குரு காட்டிய யுக்திகளைக் கொண்டு விசாரணையில் ஈடுபடுவான்.*

*விசாரணையால் தீர்மானித்து அந்த ஒரு நிலைதான் ஸத்யமானதெனத் தெளிந்து வைராக்யத்துடன் முனைவுடன் அதனை நேரிடை உணர்வாகப்*

பெற முயலுவான். பிராணாயாமம் முதல் தியானம் வரையில் உள்ள யோக அங்கங்கள் இதில் பயன்படும். தியானம் கூடி அந்த ஆத்மாதான் தான் (ஸோஹம்) என்ற உணர்வு கண நேரம் புலப்படும். அப்படிப் புலப்பட்டதை மனதில் பதியச் செய்வதற்குதியாநத்தை நீடிப்பான். மனம் சலனம் அடைவதைத் தடுப்பதற்காக ஆத்ம விஷயத்திலிருந்து அகலும் மனத்தை தாரணை எனும் யோக வழியில் நிலை நிறுத்த நீடித்த தியானத்தில் – நிதித்தியாஸனத்தில் ஈடுபடுவான். பலாத்காரமாகவோ அல்லது புதிய ஆனந்தமளிக்கும் விஷயம் என்ற ஈடுபாட்டாலோ மனம் ஒருமுனைப் பட்டு நிலைக்கும்.

இந்த நிதித்தியாஸனத்தின் வலிவில் ஸமாதி (மனத்தில் ஆழ்ந்த பதிப்பு) கைகூடும். முதலில் குருவின் வாக்கால் உணர்ந்த ஆத்மாவும் தான் ஸமாதியில் உணர்கின்ற ஆத்மாவும் ஒன்றே என்றதொரு பிரத்யபிஜ்ஞானம் ஏற்படும். இதில் உணர்கின்ற தானும் உணரப்பெறுகின்ற ஆத்மாவும், அந்த உணர்வும் கலந்து திரிபுடியாகத் தோன்றுவதால் பிரத்யபிஜ்ஞானம் – விகல்பம் இருப்பதால் இது ஸவிகல்பக ஸமாதி. ஸவிகல்ப ஸமாதி நிலையில் ஸோஹம் என்ற உணர்வு நிலைத்து அதில் ஆழ்ந்து நிற்கிறான். ஸமாதி கலைந்ததும் இந்த நினைவு அகலுவதில்லை. மறுபடி ஸமாதி கூடும்போது அது தொடர்கிறது. இந்த ஸமாதி நிலையில் பெறுகிற ஆத்ம மனம்தான் ஆத்மா என்பது போன்ற பல அஞ்ஞானங்களை நீக்கிவிடுகிறது. இந்த ஸவிகல்பக ஸமாதியால் அஞ்ஞானம் மறைந்ததும் ஞானமாக ஆனந்தமாக ஆத்மா அபரோக்ஷமாக நேரிடை உணர்வாக, திரிபுடியின்றி நிர்விகல்பமாக உணரப் பெறுகிறான். ஸமாதி நிலையிலும நிர்விகல்பக நிலை. ஸமாதியிலிருந்து எழுந்த பின்னரும் நிர்விகல்பக நிலை.

தியானமே நீடித்து நிற்க நிதித்யாஸனம் ஆகிறது. அதுவே பழுத்து ஸவிகல்பக ஸமாதியும் நிர்விகல்பகமான ஸமாதியாகவும் ஆகிறது. மனதில் பல பொருள்கள் பலவிதமாக எப்போதும் தோன்றிக்கொண்டிருக்கின்றன. பல பொருள்களின் எண்ணத்தை விலக்கி ஒரே பொருளை சிந்திப்பது தியானம். தியானம் இப்படி வேறு கலப்பில்லாமல் கூடுவதே சிரமம். கணநேரம் கலப்பில்லாமலிருக்கச் செய்யவே நல்ல அப்பியாசம் தேவை. தியானம் நீடிக்க தாரணை பயன்படுகிறது. அங்குமிங்கும் பாயும் மனத்தை தேவியின்

வடிவத்தில் பாதாதிகேசாந்தம் அல்லது அவளது குணச் சிறப்புகளில் ஓடவிட்டு, அதிலேயே ருசியுடன் ஈடுபடச் செய்வதே தாரண முறை. ஓடும் குழந்தையைக் குறிப்பிட்ட இடத்தில் அடைத்து, சுற்றவும் விட்டு அதன் சஞ்சலத்தை அடக்குவது போல, மனம் தேவியை விட்டு அகலாமல் இருக்கத் தேவியின் பல்வேறு குண சித்திரங்களில் மனத்தை ஒட்டுகிறோம். இந்தப் பழக்கத்தால் தேவியிடம் மட்டும் மனம் பதியத் தொடங்கியதும், தேவியின் ஒரு அம்சத்தில் மனத்தில் நிலைக்கப் பழகுகிறோம்.

இது போலவே ஆத்மாவைப் பற்றி குரு கூறும் வழியில் சிந்தித்து , அறிவில் உருவகப்படுத்திய சுத்த புத்த முக்தஸ்வரூபத்தை தியானிக்கிறோம். ஆத்மாவைப் பற்றிய தியானத்தில் நிலைத்து நிற்க முற்பட்டவுடன், புதிதாக ஏதோ வியக்கத்தக்க தொன்றைக் கண்டுபிடித்துவிட்ட ஆர்வத்துடன் மனம் தானே திளைக்க முற்பட்டதும் ஸமாதி கூடுகிறது. தியானத்திலேயே வெளி விஷயமாக உள்ள எண்ணங்களை விலக்கிவிட்டதால் சுத்தமான ஆத்மப் பொருள் துலங்குகிறது.

தியானம் அப்பியாசத்தால் வலிவடைந்து விரும்புமளவு நீடித்து, தியானத்திற்கு விஷயமான பொருளாக மனம் மாறி, தியானத்திற்கு விஷயமான பொருள் வடிவம் இடையறாது மனத்தின் உணர்வில் பதிவதே ஸவிகல்பக ஸமாதி. எந்த வஸ்துவை மனம் உணர்கிறதோ அந்த வஸ்துவாகவே மனம் ஆகிவிடுகிறது. இதனை விருத்தி ஞானம் என்பர். இதனை இப்படிக் காண்பேன் என்ற ஸங்கல்பத்துடன் இந்த ஆத்ம (தியேயாகார) விருத்தி ஏற்பட்டுத் தொடர்ந்து நிலைத்தால் ஸவிகல்பக ஸமாதியாகும்; ஸங்கல்பம் ஏதுமின்றி ஆத்மாகாரமாக ஆகிவிடுவது நிர்விகல்பக ஸமாதியாகும் என்று பொதுவாகக் கொள்ளலாம்.

வழியில் செல்பவன் குறிப்பிட்டுச் சிலவற்றைக் காண்கிறான். இதற்கும் அதற்கும் உள்ள வேற்றுமை புலப்படுவதால் இது அது என்று பிரித்துக் காண்கிறான்.; இது அது என்ற வேற்றுமை உணர்வே விகல்ப ஞானம். இந்த வேற்றுமை உணர்வுடன் அவன் கண்டதே அவனது நினைவிற்கு வரும். வழியில் செல்லும் போதும் இந்த விகல்பக உணர்விற்கு உட்படாத பலவற்றை அவன் கண்கள் பார்த்திருக்கக்கூடும். அவை மனத்தில் விருத்தி ஞானமாகப் பதிந்திருக்காது. அவற்றின் விகல்ப உணர்வின்மையால் அவை

*மனத்தில் பதியவில்லை. இவற்றை திரும்ப நினைவில் கொணர முடியாது. ஸவிகல்ப ஸமாதியில் கண்ட த்யான விஷயமான பொருளை மறுபடி நினைவில் கொணர முடியும். நிர்விகல்ப ஸமாதியில் வேற்றுமையற்ற ஏகாகாரமான ஆத்மாவின் தர்சனம் ஏற்படுவதால் அந்த சுத்தமான ஸ்வரூபம் மறுபடி சுத்தமான தத்துவமாகவே நினைவில் வரலாம். அதனை விளக்கிக் கூற முடியாதாகலாம். கடும் தூக்கத்திற்குப் பின் "நன்கு சுகமாகத் தூங்கினேன், அந்நிலையில் நான் எதனையும் காணவில்லை" என்று உணர்வதுபோல், ஆனந்த ஸ்வரூபம் நினைவில் வந்தாலும் அதனை விகல்பமின்மையால் விண்டுரைக்க முடிவதில்லை.*

*தியானம் பழுத்து ஏற்படும் இந்த நிலையை மேலும் விளக்குகிறார் ஜனகர்.*

ध्यानस्य परिपाको हि विकल्पपरिवर्जनम् ।
विकल्पो विविधख्यातिः एकधा निर्विकल्पकः ॥७१ ॥

தியானம் பக்வமடைவது என்பது பேத உணர்ச்சியைத் தவிர்த்து இருப்பதேயாகும். விகல்பம் என்பது பலவாறாக இருப்பதன் உணர்வு. நிர்விகல்பகம் என்பது ஒரே பொருளாக இருப்பது.

*நீல நிறமுள்ள குடம் எனும்போது குடம், நீல நிறம், நீல நிறமுள்ள குடத்தை காணுதல் என்ற மூன்று விதமாக வேறுபட்ட அறிவு இதில் அடங்குகிறது. இது விகல்ப ஞானம் ஸமாதியில் இந்த வேற்றுமைகள் அகன்று – அறிவு என்பது மட்டும் உண்டு. குடம் நீல நிறம் காணுதல் என்ற மூன்றுமின்றி ஒளிமயமான பேரறிவு மட்டும் இருக்கும். பிரகாசமான அறிவாகிற ஒளி மட்டும் உண்டு. அந்த பிரகாசமான ஒளியால் காணப்படும் பொருள்கள் அதில் துலங்காது. அதற்குக் காரணம், பொருளைக் காணும் ஸங்கல்பமின்மையே.*

अन्यानुल्लेखमात्रेण विकल्पो वर्जितो भवेत् ।
विकल्पे वर्जिते पश्चात् निर्विकल्पं स्वतः स्थितम् ॥७२ ॥

ஆத்மாவைத் தவிர வேறு பொருளைப் பற்றிய எண்ணம் இல்லாததால் மட்டுமே விகல்பம் நீங்கும். விகல்பம் நீங்கினால் நிர்விகல்பம் தானே

அமையும்.

चित्रे विमृष्टे यद्वत्तु शुद्धा भित्तिर्हि संस्थिता ।
संपादनं शुद्धभित्तेः चित्रसंमार्ष्टिरेव हि ॥ ७३ ॥
एवं विकल्पस्यापोहे निर्विकल्पं मनः स्वतः ।
निर्विकल्पात्मसंपत्तिः विकल्पापोह एव हि ॥ ७४ ॥
नातोऽधिकं किञ्चिदस्ति पदं प्राप्यं हि पावनम् ।
अत्र मुह्यन्ति विबुधाः अपि मायामहित्वतः ॥ ७५ ॥
सुबुद्धानां क्षणेनैव पदमेतद्धि लक्षितम् ।

சித்திரத்தை அழித்துத் துடைத்துவிட்டால் சுவர் சுத்தமாக இருக்கும். சுவற்றைச் சுத்தமாக்குவது என்பது சித்திரத்தை அழிப்பதே அல்லவா? அப்படியே விகல்பத்தை அகற்றினால் மனம் தானே நிர்விகல்பமாகிவிடும். நிர்விகல்பகமான ஆத்மாவை உணர்வதென்பது விகல்ப நீக்கமேதான். இதைவிட ஸாதிக்கத்தக்கது ஒன்றுமில்லை. இதுவே மிகத் தூயதான நிலை. மாயையின் பெருமையால் படித்தவர்களும் இதில் ஏமாறுகிறார்கள். ஆத்ம அறிவு பெற்றவர்கள் நொடியில் இந்நிலையைக் கண்டுபிடித்துவிடலாம்.

त्रधाऽधिकारिणो ब्रह्मन् उत्तमाधममध्यमाः ॥ ७६ ॥
उत्तमाः सकृदादेशकाले बुध्यन्ति तत्पदम् ।
विचारो ध्यानमपि च श्रुतिकालसमं भवेत् ॥ ७७ ॥
उत्तमानां न हि क्लेशः प्राप्तौ तस्य पदस्य हि ।

(ஸமாதியில்) அதிகாரிகள் மூவர். உத்தமன், மத்தியமன், அதமன் என. உத்தமன் ஒருதடவை (குருவின்) உபதேசத்தைக் கேட்டவுடனேயே ஆத்மநிலையைப் புரிந்து கொள்வான். உடனேயே அவனுக்கு அதுபற்றிய சிந்தனையும் தியானமும் கூடும். அதனால் ஸமாதியில் அந்நிலைபெற உத்தமனுக்கு யாதொரு கிலேசமும் இருக்காது.

अहं पुरा निदाघस्य रात्रौ ज्योत्स्नासुमण्डिते ॥ ७८ ॥
प्रियया संपरिष्वक्तः विकसद्वाटिकांगणे ।
परार्ध्यशयनासीनः मदिरामदघूर्णितः ॥ ७९ ॥

अश्रौषं खे सिद्धगणवचनं मधुपेशलम् ।
अद्वैततत्त्वाश्रितं वै तत्काले हयविदं पदम् ॥ ८० ॥

முன்னொருநாள் நான் நிலவுமண்டிநின்ற ஒரு கோடை இரவில் பூத்து மலர்ந்துள்ள பூந்தோட்டத்தின் இடையே அமைந்த குடிலில் உயர்ந்த படுக்கையில் அமர்ந்து மனைவியுடன் கூடி மதுவருந்தி மயக்க முற்றவனாக இருந்தேன். அப்போது ஆகாயத்தில் சென்ற சித்தர்களின் தேனிலும் இனியதான ஆத்மதத்வத்தைப் பற்றிய பேச்சைக் கேட்டேன். உடன் அந்த ஆத்மநிலை எனக்குப் புரிந்தது.

विज्ञातं तद्विचारेण ध्यानेनापि तदैव हि ।
एवमर्धमुहूर्तेन ज्ञात्वा तत्पावनं पदम् ॥ ८१ ॥
मुहूर्तमभवं भूयः तत्समाहितमानसः ।
परमानन्दवाराशिपरिमग्नो हयशेषतः ॥ ८२ ॥
अथ स्मृतिं समासाद्य विचारपरमोऽभवम् ।

உடன் அதனைப்பற்றி நன்கு சிந்தித்தும் உடன் தியானித்தும் ஒருநாழிகைப் பொழுதுக்குள் அந்தப்புனித நிலையைப்பற்றி நன்கு அறிந்த மனத்தை அதில் நன்கு பதித்தவனாக இரண்டு நாழிகையளவில் ஸமாதி கூடி இருந்தேன். பெரும் ஆனந்தக்கடலில் ஆழ்ந்த முழுவதும் மூழ்கியவனாக இருந்தேன். பின் வெளியுலக நினைவு ஏற்பட்டு அந்நிலை பற்றிய சிந்தனையிலேயே இருந்தேன்.

अहोऽद्भुतपदं हयेतदानन्दामृतनिर्भरम् ॥ ८३ ॥
अपूर्वमासादितं मे भूयस्तत्संविशाम्यहम् ।
नैतस्य लेशमात्रं स्यात् ऐन्द्रादिसुखमप्यलम् ॥ ८४ ॥
आब्रह्मसुखमेनस्य लेशतोऽपि न संमितम् ।

"ஆகா! இது மிக வியக்கத்தக்கநிலை .! ஆனந்தமாகிய அமிருதத்தால் நிரம்பியது. இதுவரை கிட்டாதது எனக்குக் கிட்டியது. மறுபடி அந்நிலைக்குள் செல்வேன். இந்திரன் முதலானோர் பெறும் சுகம் கூட இதில் ஒரு துளிக்கும் ஈடாகாது. ஏன் பிரும்மா பெறும் ஆனந்தம் கூட இதில் துளிகூட ஈடாகாது.

अद्यावधि व्यर्थ एष कालो मे हयतिवाहितः ॥ ८५ ॥
अविदित्वा स्वं निधानं चिन्तामणिगणान्वितम् ।
यथा भिक्षामटति वै मुष्टिपिष्टप्रलिप्सया ॥ ८६ ॥
अहो लोकास्तथा स्वात्मानन्दाज्ञानविमोहिताः ।
बाहयं सुखं लेशमात्रं प्राप्नुवन्ति महाश्रमैः ॥ ८७ ॥

இதுவரை எனது இந்தப் பொழுதை வீணே போக்கிவிட்டேன். தன்னிடம் நினைத்ததைத்தரும் சிந்தாமணிக்குவியல் கொண்ட பொக்கிஷத்தை அறியாமல், ஒருபிடி பிசைந்த மா உணவு கிடைப்பதற்காகப் பிச்சை எடுப்பவனைப் போல், இந்த உலகம் தனது ஆத்மசுகத்தைப் பற்றி மறந்து திவிலை அளவில் உள்ள வெளிசுகத்தை அரும்பாடுபட்டுப் பெறுகிறார்களே!

तदलं मे वृथा बाहयसुखलेशपरिश्रमात् ।
अनन्तानन्दसन्दोहतत्परः स्यां हि सर्वदा ॥ ८८ ॥
अलमेतेन बाहयेन व्यवहारेण मे किमु ।
पिष्टपेषणकल्पेन चोपालंभपदेन वै ॥ ८९ ॥

வெளியில் உள்ள சுகத்திவிலையைப் பெறுவதில் வீணே பாடுபடுவது இனிப்போதும், எல்லையற்ற ஆனந்தக்குவியலை நாடுவதிலேயே இனி எப்போதும் ஈடுபடுவேன். இனி வெளிவியவஹாரங்கள் போதும். அரைத்தமாவை மறுபடி அரைப்பதுபோல் பின் வருந்தச் செய்யும் இதனால் இனி ஆவதென்ன?

तानि भोज्यानि तान्येव माल्यानि शयनानि च ।
भूषणानि विचित्राणि योषित्संभोगकाश्च ते ॥ ९० ॥
चिरपर्युषितप्रायाण्यपि संसेव्यते पुनः ।
गतानुगतिकत्वान्मे जुगुप्सा न हि जायते ॥ ९१ ॥

அதே உணவு; அதே மாலையும் படுக்கையும் அணிகளும்; அதே பெண்ணுறவு ; நாட்பட்டவையாயினும் அவையே திரும்பத்திரும்ப விரும்பி ஏற்கப்படுகின்றன. முன் சென்றவரைப் பின்பற்றி செல்வது போல் சிந்தியாது பின்வற்றுவதால் அவற்றில் கூச்சமும் நாணமும் ஏற்படவில்லை.

इति निश्चित्य भूयोऽहं यावदन्तर्मुखोद्यतः।
तावदन्यो विमर्शो मां सुशुभः प्रत्युपस्थितः॥ ६२॥

இவ்வாறு தீர்மானித்து மறுபடியும் உள்நோக்கடைவதில் நான் ஈடுபட்டதும் வேறு ஒரு நல்ல சிந்தனை ஏற்பட்டது.

अहो मे चित्तमोहोऽयं किं मामेवमुपस्थितः।
आनन्दपरिपूर्णात्मा स एवाहं स्थितोऽपि सन्॥ ६३॥
भूयः किं कर्तुमिच्छामि प्राप्तव्यं वापि किं मया।
किमप्राप्तं मया कुत्र कदा वा प्राप्यते कथम्॥ ६४॥

அந்தோ இது என்ன சித்மயக்கம் ஏன் இது எனக்கு ஏற்பட்டது? ஆனந்த நிறைவுற்ற ஸ்வரூபம் உள்ளவனாக எல்லாம் நிறைந்தவனாக இருந்தும் மறுபடி எதைச்செய்ய விரும்புகிறேன்? இனி அடைய வேண்டியதுதான் என்ன? எது எனக்கு இதுவரை கிட்டவில்லை? எங்கே எப்படி அதைப் பெறமுடியும்?

अप्राप्तयापि संप्राप्तिः कथं सत्या हि संभवेत्।
अहोऽनन्तचिदानन्दरूपे मे स्यात् कथं क्रिया॥ ६५॥

அப்படி இதுவரை கிடைக்கப்பெறாததொன்றை அடைய தானாலும் அது நிலைத்து இருக்கக்கூடியதா? முடிவுற்ற பேரறிவும் பேரானந்தமே வடிவாக அமைந்த எனக்கு இனி ஆற்ற வேண்டிய பணி யாது?

देहेन्द्रियान्तःकरणान्यपि स्वाप्नसमानि वै।
ममैव तानि सर्वाणि त्वखण्डैकचिदात्मनः॥ ६६॥

துண்டாடமுடியாத ஒரே பொருளான ஆத்மாவான எனக்கு உலகில் உள்ள அத்தனை உடல்களும் பொறிகளும் மனங்களும் என்னுடையவைகளே. அவையே கனவில் கண்ட பொருள்கள்போல் அநித்யமானவை.

*ஜனகர் வேறுநோக்கில் சிந்திக்கிறார். மனத்தையும் பொறிகளையும் அடக்கி ஸமாதியில் இருந்தால் ஆத்மசுகம் பெறலாம் என்ற முன்பெற்ற சிந்தனை முழுவதும் சரியல்ல என்கிறார். இந்த சரீரத்தில் நான் என்ற அபிமானம்*

*மிருந்தபோது இந்த சரீரத்தைச் சார்ந்த மனமும் புத்தியும் பொறிகளும் சரீரமும் என்னை அலைக்கழித்தன. ஆத்மாவைத் தனித்தறிந்து அதுதான் நான் என அறிந்தும் ஆத்மாவற்ற (அனாத்மப்) பொருள்களிலிருந்தும் இந்த என் மனத்தையும் பொறிகளையும் திருப்ப முயன்று வெற்றிபெற்று ஜீவாத்மா என்றதனை நீக்கி பரமாத்மாவில் திளைக்க முடிந்தது. அந்த ஆத்மா நான் நீ என்ற பேதம் மறைந்தது. இந்த நிலையை உணர்ந்தபின் மனத்தைக் கட்டுப்படுத்து என்ற சொல்லும் செயலும் அர்த்தமற்றதாகிவிட்டது. அகண்ட-மான ஆத்மாவான நான் எந்த சரீரத்தையும்மனத்தையும் பொறிகளையும் எனதெனக் கொள்வேன்? எதை அடக்குவேன்? ஒரு சரீரத்தையோ மனத்தையோ அடக்கினால் போதுமானதாகுமா? என்று சிந்தித்துப்பெற்ற விளக்கத்தைக் கூறுகிறார்.*

तत्रैकमन्तःकरणं निरुध्यापि च किं भवेत्।
अन्यान्यप्यनिरुद्धानि मनांसि च ममैव हि॥ ६७॥
तथा चैकस्य मनसो निरोधे मम किं भवेत्।
निरुद्धान्यनिरुद्धानि मनांसि मयि भान्त्यलम्॥ ६८॥

அதில் ஒரு சரீரத்தைச் சார்ந்த மனத்தை அடக்கி என்ன ஆகப்போகிறது? மற்ற மனங்கள் அடக்கப்படவில்லையே அந்த மனங்களும் என்னுடையவைதானே இந்த ஒருமனத்தை அடக்கிப்பயன் என்ன? அடக்கப்பட்டதும் அடக்கப்படாததுமான எல்லா மனங்களும் என்னிடம் தானே துலங்குகின்றன.

निरोधे सर्वमनसामपि मे न निरोधनम्।
महाकाशात्सुवितते कुतो मयि निरोधनम्॥ ६६॥

உலகில் உள்ள எல்லா மனங்களையும் கட்டுப்படுத்துவதாகக் கொண்டால்கூட எனக்கு ஒரு மாறுதலும் ஏற்படுவதற்கில்லை. அகண்டப் பெருவெளியை விட அதிகப்பரப்புள்ள ஆத்மாவிடத்தில் இருந்து எதனைப் பிரித்து எப்படி அடக்குவது?

*மனத்தை அடக்குவது மனம் முதலானவற்றால் காணமுடியாத தொன்றை அறிவதற்கே. ஆகாயம் எனும் பெருவெளி எங்கும் நிரம்பியது. அதனைவிடப் பரப்பு மிக்கது அதற்கும் மூலகாரணமான ஆத்மா. அந்த ஆத்மாவை*

*மனத்தை அடக்குவதன்மூலம் காணலாம். ஆத்மாவைக் கண்டபின் உலகைவிட நான் பெரிதாகிவிட்டதை உணர்ந்தால் அவனுள் எல்லா உலகமும் அடக்கம். அவனுக்கெனத் தனி மனமில்லை. மனமென ஒன்று தனித்திருந்தால் உலகிலுள்ள அத்தனை மனமும் அவனுடையதே. அத்தனை மனங்களும் ஒருநிலைப்பட்டவை அல்ல. சிறிதும் அடங்காத மஹாயோகியின் மனம் ஒருபுறம் எனில், நன்கு அடக்கியாளப்படும் மஹாயோகியின் மனம் ஒருபுறம் உள்ளது. ஆகவே அடக்குமுறை ஒரே சீரானதல்ல. அதனால் எல்லாவற்றையும் அடக்குவது இயலாது.*

*மனத்தை அடக்குவது ஆத்ம தர்சனத்திற்காக. அதனைத் தொடர்ந்து பெறுவதற்காகவும்கூட. ஆத்மதர்சனம் பெற்றபின் அதனைக்காட்டிலும் வேறுபட்ட பொருள் ஒன்றும் காணோம். மனத்தை அடக்க, மனத்தைத் தனித்து உணர வேண்டும். அந்த உணர்வே இல்லாதபோது மனத்தை அடக்கும் செயலோ வேறு எந்தச் செயலுமோ கூடுவதில்லை.*

*ஞானி மனத்தாலும் பொறிகளாலும் காணுவதனைத்தும் ஆத்மாவே. அந்நிலையில் பொறிகளாலும் மனத்தாலும் காணும் புறக்காட்சியைத் தவிர்த்த உள்நோக்குப் பெறுவதால் லாபம் என்ன? புறக்காட்சியும் ஒன்றானால் புறக்காட்சியை எதற்காகத் தவிர்க்க வேண்டும்? என்கிறார் ஜனகர்.*

एवं पूर्णानन्दरूपे समाधिः स्यात्कथं मयि।
चिदानन्दप्रपूर्णस्य पूर्णस्य गगनादपि॥ १००॥
मम क्रिया कथं का स्यात् ययापि स्तः शुभाशुभे।

நான் பூர்ண ஆனந்த வடிவாக ஆனபின் ஸமாதி என்பது எப்படி ஏற்படும்? ஆகாயத்தைவிட பூர்ணத்துவம் மிக்கதும் சித் ஆனந்த கனமுமான எனக்கு நன்மை தீமை பயக்கும் செயல்கள் எப்படி அமையும்?

अनन्तेषु शरीरातमभासेषु मन्महित्वतः॥ १०१॥
क्रियाभासावभासेन तदभावेन वापि किम्।

எங்கும் நிரம்பிய ஆத்மாவிற்கு எண்ணமுடியாத சரீரங்களில் நிகழ்கின்ற செயல்களால் என்ன ஆகும்? செயலின்மையால்தான் என்ன ஆகும்?

*எங்கும் எதிலும் எப்போதும் ஆத்ம தர்சனம் செய்யும் ஞானிக்கு ஸமாதி தேவை இல்லை. ஞானஸாதகனுக்கு வெளியில் ஆனந்தம் கிடைக்காததால் உள்நோக்குபெற ஸமாதி தேவைப்பட்டது. ஆத்மவெள்ளத்தில் உள்ளும்பு-றமும் ஆழ்ந்திருப்பவனுக்கு ஆனந்தத்தைப் பெறுவதற்கென எதனையும் செய்ய வேண்டியதில்லை. அப்படியே அவனது உடல் பிராரப்த வசத்தால் எதையாவது செய்ய நேர்ந்தாலும் அவை வினையாகி புண்யபாபங்கள் தருவதாக ஆகமாட்டா. அவனுக்கு உள்ளத்தூய்மைக்கோ ஆத்மதர்சனத்திற்கோ எந்த செயலும் தேவைப்படாது.*

कर्तव्यं वाप्यकर्तव्यं मम नास्त्यपि लेशतः ।। १०२ ।।
तस्मान्निरोधने किं स्यात् अहमानन्दनिर्भरः ।
समाधावसमाधौ वा सत्यपूर्णस्वभावकः ।। १०३ ।।
यस्यां क्रियायां देहोऽयं स्थितः तत्रैव तिष्ठतु ।

**எனக்கு செய்யவேண்டியவையோ செய்யத் தகாதவையோ எதுவும் கிடையாது. அதனால் மனத்தை அடக்குவதால் ஆவதென்ன? நான் ஆனந்தத்தில் திளைத்திருப்பவன். ஸமாதியில் இருந்தாலும் ஸமாதியில் இல்லாவிட்டாலும் ஸத்தியமாயும் பூர்ணமாயும் உள்ள ஆத்மாவே, இந்த உடல் எந்த செயலில் ஈடுபட்டுள்ளதோ அதிலேயே அது இருக்கட்டும். (அதைத் தடுக்க வேண்டாம்)**

इत्यहं सर्वथा स्वस्थ सुमहानन्दमन्दिरः ।। १०४ ।।
अनस्तमितभारूपोऽहं सुपूर्णो निरञ्जनः।

**இப்படி நான் எப்போதும் என் சுயநிலையில் இருப்பவன், பேரானந்தத்தில் திளைப்பவன், உள்ளொளி எப்போதும் அஸ்தமித்து விடாதவன், நன்கு நிறைந்தவன், அப்பழுக்கில்லாதவன்.**

उत्तमाधिकृतस्यैवं स्थितिर्मे संप्रकीर्तिता ।। १०५ ।।
अधमानामनेकैस्तु जन्मभिर्ज्ञानजं फलम् ।
मध्यपानां तु क्रमतः श्रवणं च विचारणम् ।। १०६ ।।
अनुध्यानं च भवति ततो ज्ञानं प्रजायते ।

**உத்தமாதிகாரியான எனது நிலை விளக்கப்பட்டது. அதம அதிகாரிக்கு பல பிறவிகளில் ஞானம் தோன்றி பலிக்கும். மத்யம அதிகாரிக்கு கிரமமாக குரு உபதேசம், பிறகு அதுபற்றிய விசாரணை, பிறகு அது அஹம் ப்ரம்ஹ, ஸோஹம் என்ற தியானம், பிறகு பிரத்யபிஜ்ஞை எனும் ஞானம் ஏற்படும்.**

विज्ञानफलसंयुक्तः समाधिर्दुर्लभो भवेत् ।। १०७ ।।
विज्ञानफलहीनेन किं समाधिशतेन वा ।
तस्माद्विज्ञानहीनैस्तैः फलं नास्ति समाधिभिः ।। १०८ ।।

**ஆத்மானுபவம் எனும் பலன் தரும் ஸமாதி எளிதில் கிடைக்காது. ஆத்மானுபவம் பயக்காத நூறு ஸமாதிகள் ஏற்பட்டுப் பயன் என்ன? அதனால் ஆத்மானுபவம் இல்லாத ஸமாதிநிலையில் பயனில்லை.**

***இந்த அத்தியாயத் தொடக்கத்தில் ஸோஹம் என்ற ஞானம் ஏற்படாத பல ஸமாதி நிலைகள் விளக்கப்பட்டுள்ளன. அவற்றை நினைவுபடுத்தி அத்தகைய ஸமாதி நிலைகள் பலன் தரமாட்டா என முடிவு செய்கிறார்.***

लोकोऽपि गच्छन् मार्गेषु निर्विकल्पप्रकाशितान् ।
भावानविज्ञाय तेषां अज्ञानं न निवर्तते ।। १०९ ।।

**உலகின் வழியே செல்பவன் பலபொருள்களைக் காண்கிறான். ஆனால் ஊன்றிப் பார்க்காததால் பேத உணர்வில்லை. அவை மனத்தில் நிர்விகல்பமாகப் பட்டாலும் அவற்றைப்பற்றிய அறியாமை விலகுவதில்லை.**

***அஜ்ஞானம் விலக ஸவிகல்பக ஞானம் அவசியம் என்று முன் (5–50) கூறியதை மறுபடி நினைவூட்டுகிறார்.***

निर्विकल्पाख्यविज्ञानं ज्ञानमात्रं निजं वपुः ।
तत्सर्वदा भासमानं अप्यभातविधं ननु ।। ११० ।।
विकल्पाच्छादनादेव विकल्पानां व्यपोहने ।
भासमानमेव भूयः भातकल्पमपूर्वतः ।। १११ ।।
ज्ञानज्ञेयाविभेदेन त्वज्ञातं ज्ञातमुच्यते ।

நிர்விகல்பகமான அனுபவம் ஞானமே. அதுதான் சுயநிலை. அது எப்போதும் துலங்குவதே. (பேத உணர்விருக்கும் போதும்) விகல்பங்களால்

மறைக்கப்படுவதால் துலங்காததுபோல் உள்ளது. விகல்பங்கள் அகன்றதும் மறுபடி துலங்குகிறது. அதனால் முன்பு துலங்காதிருந்து இப்போது புதிதாகத் துலங்குவதாக ஆனது. ஞானமும் அந்த ஞானத்தால் உணரப்படும் வெளிவிஷயமும் கலந்து பிரிக்க முடியாமல் இருந்ததால் இப்போது ஸவிகல்பக ஸமாதிநிலையில் பிரித்து உணர்ந்து இதுவரை உணராதிருப்பதை உணர்ந்ததாகக் கொள்ளப்படுகிறது.

एवमेव भवेदात्मविज्ञान क्रम उत्तमः ॥ ११२ ॥
ब्रह्मन्नेवं श्रुतं भूयः विचार्य ज्ञातुमर्हसि ।
अथ विज्ञायात्मतत्वं कृतार्थस्त्वं भविष्यसि ॥ ११३ ॥

இவ்வாறு ஆத்மானுபவமுறை அமையும். அந்தணரே இந்த உபதேசத்தை நன்கு விசாரணை செய்து அனுபவத்திற்கு கொணர்வீர். ஆத்மதத்துவத்தை உணர்ந்த பேறுபெற்றவராக ஆவீர்.

जनकेनैवमादिष्टस्त्वष्टावक्रो महामुनिः ।
पूजितस्त्वभ्यनुज्ञातो गत्वा स्वस्थानमादरात् ॥ ११४ ॥
विचारानुध्यानपूर्वं विज्ञाय परमं पदम् ।
विधूय सर्वसन्देहान् जीवन्मुक्तोऽभवद् द्रुतम ॥ ११५ ॥

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे अष्टावक्रीयं नाम
सप्तदशोऽयायः ।

ஜனகரால் இவ்வாறு உபதேசிக்கப்பெற்ற அஷ்டாவக்ர முனிவர், அவரால் வழிபடப்பட்டுச் செல்ல அனுமதியளிக்கப்பட்டவராக இடமடைந்து மிகவும் சிரத்தையுடன் ஆத்ம விசாரமும் தியானமும் செய்து பெருநிலை உணர்ந்து ஸந்தேகங்கள் நீங்கி விரைவில் ஜீவமுக்தராக ஆனார்.

*இவ்வாறு ஸ்ரீ திரிபுராரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் அஷ்டாவக்ர உபாக்யானம் என்ற பதினேழாவது அத்யாயம்.*

# अष्टादशोऽध्यायः

## பதினெட்டாவது அத்தியாயம்

भार्गवैवं हि सा संवित् वेद्यवन्ध्या निरूपिता।
उपलब्धिदशास्तस्या बहुधा संश्रुता ननु॥ १॥
अव्युत्पत्त्या न जानन्ति जना मायाविमोहिताः।
सा दशा भाव्यते सूक्ष्मदृशैव नान्यथा क्वचित्॥ २॥

பரசுராமரே! ஜனகர் கூறியமுறையில் அந்த ஆத்மஸ்வரூபமான ஸமவித்சக்தி அதனால் உணரப்படும் பொருள் கலப்பில்லாதது என விளக்கப்பட்டது. அதனை உணரும் நிலைகள் பலவிதமாகக் கூறப்பட்டுள்ளனவல்லவா? அதன் ஸ்வரூபம் பற்றிய அறிவின்மையால் மாயையால் அறிவு மறைக்கப்பட்ட மக்கள் அதனை அறிவது இல்லை. அந்நிலை ஸூக்ஷ்ம நோக்கால் மட்டுமே அறியத்தக்கது.

किं बहूक्तेन तं राम शृणु सारं ब्रवीम्यहम्।
मनसा वेद्यते वेद्यं मनसोऽतो न वेद्यता॥ ३॥
तथा च वेद्यनिर्मुक्तं मनोऽप्यस्तीति संभवेत्।
तन्मनो वेद्यनिर्मुक्ता वित्तिरित्यभिधीयते॥ ४॥

பரசுராமரே! அதிகம் கூறிப்பயன் என்ன? ஸாரத்தைக் கூறுகிறேன். மனதால் வெளிப்பொருள் உணரப்படுகிறது மனம் எதனாலும் உணரப்பெறுவதில்லை. வெளிப்பொருள் தொடர்பில்லாத மனம் இருக்கத்தான் வேண்டும். அந்த மனமே அத்மாவாகும்.

उपलब्धिस्वरूपत्वात् विदितैव हि सा सदा।
अन्योपलब्ध्यपेक्षायां आन्ध्यं स्यादनवस्थितेः॥ ५॥
कच्चिद्भावं हि संपश्यन् न भासि किमु भार्गव।
न भासि चेत् न त्वमसि ततः प्रश्नस्तु ते कथम्॥ ६॥

தானே தன்னை விளக்கிக்கொள்ளும் தன்மை படைத்தமையால் அது எப்போதும் உணரப்படுகிறது. அது தானே தன்னை விளக்கிக் கொள்ளாமல் தன்னை விளக்கிக்கொள்ள மற்றொன்றை எதிர்பார்க்குமாகில் இருண்டுவிடும்.

அதனை விளக்க மற்றொன்று, அதனை விளக்க மற்றொன்று, என நிலையற்ற தன்மை ஏற்பட்டுவிடும். ஏதோ ஒரு பொருளை பார்த்துக் கொண்டிருக்கிற நீ இருப்பது உனக்குத் தெரியவில்லையா? அப்படி நீ இருப்பது உனக்குத் தெரியவில்லையானால் நீயே இல்லை, அப்போது கேள்வியே எழாதே.

अहो स्वयं खपुष्पात्मा सन् कथं हितमिच्छसि।
कथं तवात्मानमहं साधयामि विभावय॥ ७॥

(தானே இல்லை என்று கூறும்) நீ ஆகாசத் தாமரைபோல் இல்லாத ஒரு பொருள். அப்படிப்பட்ட உன் ஆத்மாவை நான் எப்படிப் பிடித்துக் கொடுப்பேன்! யோசித்துப்பார்.

सामान्येन विभान्तं मां न जानामि विशेषतः।
इति चेत् राम सामान्यमेव ते रूपमव्ययम्॥ ८॥
विशेषलेश रहितं एतावदृध्येव ते वपुः।

பொதுப்படையாக எனக்குப் புரிகின்ற ஆத்மாவை அதன் தனித் தன்மைகளுடன் அறிய விரும்புகிறேன் எனக்கூறுவாயாகில், தனித் தன்மைச் சிறப்பு ஏதுமற்ற ஸாமான்யமான வடிவமே உனது ஆத்மா. அது எங்கும் அகலாதது.

अहो जानन्नपि पुनः अलं मुह्यसि वै वृथा॥ ९॥
भासकं सर्वमपि च विशेषविषयं भवेत्।
अतः सामान्यरूपस्त्वं विभासि स्वत एव हि॥ १०॥

நீ அறிந்தும் மறுபடி வீணே குழம்புகிறாய், ஒரு பொருளைத் துலக்கும் அறிவு துலங்கும் பொருளால் தனித்தன்மை பெறுவதால் அது விசேஷ ஞானமாகிறது. (அது ஆத்மாவல்ல) தனித்தன்மை பெறாத ஸாமான்ய ஞானமே ஆத்மஸ்வருபனாக நீ விளங்குகின்றாய்.

*நமது உணர்வில் உணர்பவன் (வேத்தா) உணரும் பொருள் (வேத்யம்) உணர்வு (வேதனா) என்ற மூன்றும் புலனாகிறது. இது விசேஷ ஞானம். இதற்கு அடிப்படையாக இம்மூன்றும் புலனாகும் மூலஞானம் இருக்கவேண்டும். பிரதி பிம்பத்தைக் காட்டும் கண்ணாடிபோல், அதுவே ஸாமான்ய ஞானம். இது மனத்தை வெளியே நாடாமல் கட்டுப்படுத்தி மூல*

*ஞானத்தை நோக்கு பவனுக்கே புலப்படும். இதுவே ஆத்மா - பரஸம்வித் - வேத்ய ரஹிதஸம்வித் என்று தத்தர் 15- வது அத்யாயத்தில் விளக்கத் தொடங்கி அஷ்டாவக்ரர் கதைமூலம் நிரூபித்தார். இதனை இவ்வத்யாயத்தில் வேறுவகையில் விளக்குகிறார்.*

*மனத்தால்தான் எல்லாவற்றையும் உணர்கிறோம். அந்த மனத்தை நாம் காண்பதில்லை. மனமின்றி உணரமுடியாதாகையால் மனம் இருக்கத்தான் வேண்டும். நேரிடையாக மனத்தைக் காணாததால் மனமென்பதே கிடையாது என்று யாரும் சொல்வதில்லை. மனம் இருப்பது மனனத்தால் (உணர்வால்) தானே விளக்கப்படுகிறது. மனம் அஸ்வப்ரகாசம் - மற்றொன்றால், விளக்கப்படுவதல்ல. நினைப்பவன், நினைக்கப்படும் பொருள், நினைப்பு என்ற மூன்று உணர்வுகளுக்கும் மூலமான ஓர் நிலை இருக்கக் கூடுமே அதுதான் மனம். அந்த விசேஷ உணர்வற்ற மூலமனமே ஆத்மாதான்.*

*நான் என்ற உணர்வு பலவகையான விசேஷ உணர்வுகளுடன் பிணைந்தே உணரப்படுகிறது. பார்ப்பவன், கேட்பவன், முகர்பவன், நடப்பவன் சொல்பவன் என்றவாறு பல தனித் தன்மைகளின் தொடர்பின்றி ஆத்மாவை 'நான்' ஐ உணர முடிவதில்லை. பார்ப்பவன் என்றாலே பார்க்கப்படும் பொருளும் (வேத்யமும்) சேர்ந்தே உணரப்படுகிறது. அதனால் பார்க்கப்படும் குடம், குடத்தைக் கண்களால் பார்ப்பதும், பார்க்கும் இந்த சரீரம் என்ற இந்த மூன்றும் கலந்தே 'நான்' உணரப்படுவதால் இத்தகைய விசேஷ 'நான்' ஐ மட்டும்தான் நான் அறிவேன். பார்க்காதபோதும் கேட்காதபோதும் பார்க்கப்படுகிற அல்லது கேட்கப்படுகிற பொருளின் தொடர்பும் இல்லாத போதும் 'நான்' இருக்கத்தான் வேண்டுமல்லவா? பார்க்காத நிலையில் 'நான்' உம் இல்லை என்று நினைப்பது அறிவீனம். ஒருவித வெளிப்பொருள் தொடர்பும் இல்லாத நிலையில் ஸ்வப்ரகாசமான அந்த ஆத்மாவை - வேத்ய ரஹிதமான ஸம்வித்தை - விசேஷ ஞானமாகாத ஸாமான்ய ஞானத்தை உணர்வதே! ஆத்ம ஞானம் என்கிறார் தத்தர்.*

शरीराद्यात्मना भासि चेच्छृणु प्रब्रवीमि ते।
शरीरात्मतया भासि संकल्पेनैव नान्यथा॥ ११॥
विभावय सूक्ष्मदृशा संकल्पेऽन्यस्य देहतः।
भाति किं तव देहत्वं देहस्तच्चापि ते भवेत्॥ १२॥

**சரீரம் முதலிய வடிவுடன்தான் 'நான்' என்பதை உணர்கிறேன் என்று நினைப்பாயேயாகில் அதனை உனக்கு விளக்குகிறேன். உனது ஸங்கல்-**

பத்தினால்தான் சரீரம் ஆத்மா என்று உணர்வு ஏற்படுகிறது. நன்கு யோசித்துப்பார். சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டதொன்றின் தொடர்போடு 'நான்' என்பதை நீ உணரக்கூடும். அப்போது சரீரம் இல்லையே! அந்த நிலையில் எதன் தொடர்போடு நீ உணர்ந்தாயோ அதுதான் உனது சரீரமாக ஆகிவிடும். அப்போது உன் உடல் ஆத்மாவாக உணரப்படுகிறதா?

एवं संकल्प्यते यद्यच्छरीरं तत्तदेव हि।
तेन सर्वमयस्त्वं स्याः कथं देहात्ममात्रकः॥ १३॥
तस्माद् दृश्यं तव वपुः न हि स्यात् व्यभिचारतः।
तस्मात् दृङ्मात्ररूपोऽसि न दृग् दृश्या कदाचन॥ १४॥

இப்படி எந்த எந்த சரீரத் தொடர்பு ஸங்கல்பத்திற்கு உட்படுகிறதோ அது அது சரீரமாகிறது. அதனால் நீ எல்லாமாகிவிடுகிறாய். அதனால் ஒரு உடலை மட்டும் 'நீ' ஆக எப்படிக் கருதமுடியும்? அதனால் உன் உடலாகப் பார்க்கப்படுவது உன் உடல் அல்ல. அப்போதும் அது உனதாகக் காணப்படாமையால் அதனால் நீ கண்ணாக இருக்கிறாய். அந்தக்கண்ணை என்றும் உணரமுடியாது.

सा स्वप्रभा दृश्यरूपविशेषलेश वर्जिता।
देह देशकालभेदचित्रवैचित्र्यचित्रिता॥ १५॥
तस्मात्संकल्पमात्रस्य वर्जनात् परतः स्थितम्।
शेषं शुद्धचितेः रूपं स्वात्मानमुपलक्षय॥ १६॥

ஆத்மாவாக 'திருக்' ஆக இருக்கும் அது தானே தன்னை வெளிக்காட்டிக்கொள்ளும் தன்மை படைத்தது. உடல், இருப்பிடம், காலம் முதலிய வேற்றுமைகளாகிற சித்திரத்தில் காணும் விசித்திரங்களால் பலவித வியக்கத்தக்க தோற்றங்களுடன் கூடியதாயினும் தன்னை உருவகப்படுத்தக்கூடிய உருவம் முதலிய குறிப்பிடத்தக்க அம்சங்கள் எதுவும் சிறிதும் அற்றது. அதனால் ஸங்கல்பத்தை மட்டும் தவிர்ப்பதாலேயே அதற்கப்பால் உள்ளதும் ஸங்கல்பத்திற்கு எல்லையாகி நிற்பதும் சுத்த சித்ஸ்வரூபமாகவும் உள்ள ஆத்மாவைக் கண்டுகொள்வாய்.

एवं सकृल्लक्षिते तु यत्स्थितं तदलक्षणात्।
अज्ञानं सर्वसंसारकारणं तत् विलीयते॥ १७॥

இப்படி ஒரு தடவை ஆத்மாவைக் கண்டுகொண்டபின் எல்லா உலகியலுக்கும் காரணமான அஞ்ஞானம் அங்கு இடமின்றி மறைந்துவிடும்.

न मोक्षो नभसः पृष्ठे न पाताले न भूतले।
संकल्पवर्जनात् शुद्धस्वरूपस्य प्रथैव सः ॥ १८ ॥
स स्वरूपात्मकत्वात्तु नाप्राप्तः स्यात्कदाचन।
केवलं मोहमात्रस्य निरासेन कृतार्थता ॥ १९ ॥

மோக்ஷம் என்பது ஆகாயத்திலோ பூமியிலோ பாதாளத்திலோ ஸங்கல்பத்தைத் தவிர்த்ததும் ஏற்படும்•சுத்த ஆத்ம ஸ்வரூபத்தின் பிரகாசமே மோக்ஷம் – தனது ஸ்வரூபமாக உள்ளதொன்றானதால் பிரகாசமே மோக்ஷம் – தனது ஸ்வரூபமாக உள்ளதொன்றனதால் அது தனியே பெறத்தக்கதல்ல. இதுவரை இருந்த கலக்கத்தை விலக்குவதாலேயே நிறைவு பெறலாம்.

अन्यो मोक्षो न संभाव्यः कृतकत्वात् विनाश्यतः।
स्वरूपादतिरिक्तश्चेत् शशशृंगसमो· हि सः ॥ २० ॥

இதைத்தவிர மோக்ஷம் என்பதிருப்பதாகக் கொள்ளக்கூடாது. அப்படி இருந்தால் அது செயற்கையானது, அதனால் அது அழியக் கூடியது, ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறானதாயின் முயல்கொம்பு போல் இல்லா – தறிதொன்றே.

स्वरूपं सर्वतः पूर्णं अन्यो मोक्षः क्व संभवेत्।
स्वरूपे संभवन् मोक्षः दर्पणप्रतिबिंबवत् ॥ २१ ॥
लोकेऽपि बन्धविगमादृते मोक्षो न भावितः।
विगमोऽभाव एव स्यात् सत्योऽभावात्मकः कथम् ॥ २२ ॥

தன்னிலை (ஸ்வரூபம்) என்பது எல்லாவகையிலும் பூர்ணமானது. இதுதவிர மோக்ஷம் என்றொரு நிலை எங்கு இருக்கமுடியும்? ஸ்வரூபத்திலேயே ஏற்படும் மோக்ஷம் கண்ணாடியில் தெரியும் பிரதி பிம்பம் போலாகும். உலகிலும் மோக்ஷம் என்பது இதுகாறும் இருந்த பிடிப்பு விலகுவதேயாகும். அதைத்தவிர மோக்ஷம் என்று தனியாக அனுபவிக்கப்படவில்லை. விலகுதல் என்பது அபாவம் (இல்லாமை) ஆகும், ஸத்யமானதொன்று அபாவமாக எப்படியாகும்?

भावाभावात्मकं वस्तु न हि संभवति क्वचित्।
तथाच स्वप्नभावाश्च भावाभावोभयात्मकाः ॥ २३ ॥
सत्याः स्युः बाधहेतोस्ते त्वसत्या इति चेच्छृणु।

பாவமும் அபாவமுமாக ஒருபொருள் இராது. அப்படி இருக்கக் கூடுமாயின் கனவில் காண்பவையும் பாவமும் அபாவமுமாயிருப்பதனால் ஸத்யமாகிவிடும். அவை பிற்பாடு பாதிப்படைவதால் அஸத்யமென்றால் அதையும் பற்றிக் கூறுகிறேன்.

बाधोऽभावप्रत्ययः स्यात् प्रत्ययाभावकालिकः ॥ २४ ॥
यस्यैवं बाधयोगः स्यात् सोऽसत्यो नहि चेतरः।
अस्ति सर्वस्य दृश्यस्य बाधोऽप्रत्ययकालिकः ॥ २५ ॥
तस्मादसत्यमेव स्यात् भावाभावात्माना स्थितम्।

பாதிப்பு என்பது குறிப்பிட்ட பொருளின் இல்லாமையை உணர்வதே. அந்தப்பொருள் இல்லாதிருக்கும்போது மட்டும் உணரக் கூடியது. இப்படி பாதிப்பு ஏற்பட்டால் அது அஸத்தியமாகும். இப்படிப் பாதிப்பு ஏற்படாதது அஸத்தியமாகாது. காணப்படுகிற பொருள் அனைத்திற்கும் இப்படி பாதிப்பு அதன் இல்லாமை உணர்வு ஏற்படும்போது உண்டாகிறது. அதனால் பாவமும் அபாவமுமாக உள்ளதனைத்தும் அஸத்தியமே.

यस्याभावस्पर्शलेशः कदाचित्कुत्रचिन्नहि ॥ २६ ॥
एवंविधंतु चित्तत्वं सत्यं सर्वात्मना स्थितम्।
तस्माद्विभिन्नमोक्षस्तु न सत्यः स्यात्कथञ्चन ॥ २८ ॥

எதன் அபாவம் எப்போதும் எங்கும் எந்நிலையிலும் சிறிதுகூடக் காணமுடியாதோ அத்தகைய சித் தத்துவம் எல்லாப் பொருளாயும் இருப்பதாகையால் அது ஒன்றுதான் ஸத்யம். அதனைக்காட்டிலும் மோக்ஷம் வேறுபட்டதாயின் ஒரு போதும் ஸத்யமாயிருக்காது.

*பந்தமும் மோக்ஷமும் இங்கு விளக்கப்படுகின்றன. மனத்தின் ஸங்கல்பமே பல வடிவங்களைப் பெற்று விசித்திரமான உலகமாகிறது. தன்னைப்பற்றிய ஸங்கல்பம் ஏற்படும்போது உடல், உள்ளம், படிப்பு, அழகு முதலிய பல சித்திரங்கள் வெளியாகின்றன. வெளியில் உள்ள குடம், நாற்காலி, வீடு மனிதர் முதலியவைகளைப் பார்க்கும்போது ஸங்கல்பத்திற்கேற்ப பல வடிவங்கள் உணரப்படுகின்றன. தோன்றும் பொருள் அனைத்தும்*

*மாறக்கூடியவை. அதனால் அஸத்தியம். அவை தோன்றும் போது நிலையுள்ளதாகக் காணப்படுவதால் பாவப்பொருள். காலதேசத்தையொட்டி இல்லாமல் ஆகுமானதால் அபாவப்பொருளும் கூட . இப்படிப் பாவப்பொருளாகவும் அபாவப்பொருளாகவும் ஆவது அனைத்தும் ஸத்யப்பொருள் அல்ல. கனவில் கண்டபொருள் காண்கிறவரை பாவப்பொருள். கனவிலேயே அவை மறையும். அப்போது அபாவப்பொருள். கனவு நீங்கியதும் அதுவே அபாவப்பொருள். அப்படிக் கனவில் காணும்பொருள் அஸத்தியமாவதுபோல், விழிப்பில் காணப்படுவதும் அஸத்தியமானதே.*

*ஸங்கல்பமே இல்லாத நிலையில் ஆத்மா துலங்கும். இதன் ஒளியைக் கொண்டுதான் பாவ – அபாவ நிலையடைகின்ற அனைத்தையும் உணரமுடிந்தது. மற்றவற்றை உணர்த்தக்கூடிய அந்த ஆத்ம தத்துவத்தை மற்றவற்றை உணரச்செய்யும் மனதின் ஸங்கல்பம் இருக்கும்வரை உணரமுடியவில்லை. ஸூர்யனின் ஒளியில் மற்றவற்றைப் பார்க்க முடிகிறது. மற்றவற்றைப் பார்க்கும் ஸங்கல்பம் இருக்கும்வரை ஸூர்ய ஒளி பற்றிய சிந்தனை எழாது. மற்ற பொருளைப் பார்க்காவிடில் அந்த ஸங்கல்பம் ஏற்படாவிடில் ஸூர்ய வெளிச்சத்தை உணர்கிறோம். அதுபோல லோகதர்சன ஸங்கல்பம் ஏற்படாதிருக்கும் நிலையில் இதுவரை லோக தர்சனத்திற்கு உதவிய ஆத்ம ஒளியைக் காணமுடிகிறது. அது தன்னை பிரகாசப்படுத்த வேறொன்றை எதிர்பார்க்கவில்லை. அதனால் ஸ்வப்ரகாசம். அது லோக தர்சன நிலையிலும் லோக தர்சனமற்ற நிலையிலும் இருப்பதால் அது ஒன்றே ஸத்தியம்.*

*இந்த ஆத்மாதான் 'தான்'! தன்னைக்கண்டவன் லோக ஸம்பந்தத்திலிருந்தும் விடுபடுகிறான். லோக ஸம்பந்தம் என்பது பந்தம். இந்த பந்தம் விடுபட்டால் மோக்ஷம். பந்தம் செயற்கையானது. மோக்ஷம் இயற்கையானது. அதுதான் ஆத்மாவின் ஸ்வஸ்வரூபம். இது புதிதாக அடையப்பட்டதல்ல. தானே தன்னை தன்னைக் காட்டிலும் வேறுபட்டதாக அடையமுடியாது. அதனால் புதிதுமல்ல, வேறுபட்டதுமல்ல, பிரயத்னத்தால்அடையப்பட்டதுமல்ல. தன்னிலை உணர்வுமட்டுமே 'அது. தனிப்பட்ட பொருளல்ல. ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்ட நிலையல்ல. அதனால் மோக்ஷம் செயற்கையானதல்ல; செயற்கையல்லாததானதால் அது ஸத்தியம்.*

*பந்தத்திலிருந்து விடுபட்டுள்ளதே மோக்ஷம். பந்தம் விலகியதென்பது பந்தமில்லை என்றேயாகும். ஒருபொருள் இருந்தது, தற்போது இல்லை என்று பாவம் அபாவம் என்ற இரு உணர்வுகளுக்குட்பட்டது அஸத்தியம். பந்தம்*

*இந்த இரு உணர்வுகளுக்குட்பட்டது. அதனால் அஸத்தியம். ஆத்மாவின் பந்தமின்மை அதன் இயற்கை ஸ்வபாவம். அது பந்தமடைந்ததாகக் காணப்பட்டது. கண்ணாடி மனித உருவமாக, நகரமாக (பிரதி பிம்பமாக) காணப்பட்டது போலாகும். இந்த பிரதிபிம்பம் கண்ணாடியின் உண்மை நிலையைப் பாதிக்காது. கண்ணாடிக்கு பிரதி பிம்ப வடிவில் காணப்படுவது இயற்கை நிலை அல்ல.*

*பாதிப்படையாதது ஸத்தியம். பாதிப்படைவது அஸத்தியம். ஆத்மாவின் மோக்ஷநிலை பாதிப்படையாததொன்றே. உலகமாகக் காட்சியளித்து பந்தமடைந்தது போன்றானது பிரமையே. பிரமை நீங்கியதும் அதன் ஸத்ய நிலை உணரப்படுகிறது.*

मोक्षः पूर्णस्वरूपस्य सकृत्प्रथनमुच्यते।
चेत्यवर्जनमात्रेण चितिः पूर्णा प्रकीर्तिता॥ २८॥
चेत्याभासनमेवास्याः चितेः संकोचनं भवेत्।
चेत्याभाने चितिः पूर्णा परिच्छेदविवर्जनात्॥ २९॥

பூர்ணமான ஆத்மஸ்வரூபம் முழுவதும் பிரகாசமாவதே மோக்ஷமாகும். சித்தால் உணரப்படுவது இல்லாத போது சித்சக்தி பூர்ணமாகின்றது. சித்ஸ்வரூபத்தில் அதநால் துலங்குபவையும் உணரப்பட்டால் சித்சக்தி குறைவுள்ளதாகிறது. அவை துலங்காவிடில் அதனைக் குறுக்குபவை இல்லாததால் அது பூர்ணமாகின்றது.

*கண்ணாடியில் பிரதிபிம்பங்கள் தெரிந்தால் கண்ணாடி மறையும். பிரதி பிம்பங்கள் அளவில் கண்ணாடி குறுகி விட்டதாகத் தோன்றும். பிரதி பிம்பங்கள் அல்லாத பகுதி உணரப் படுவதில்லை. பிரதி பிம்பங்களே கண்ணாடியில் காணப்படாவிடில் கண்ணாடியின் முழு வடிவமும் உணரப்படும். அதுபோல், சித்சக்தியில் அதனால் உணரப் பெறும் உலகப் பொருள் தெரியும்போது, உலகப் பொருளளவில் உள்ள சித்சக்தியே உணரப் பெறுகின்றது. உலகப் பொருளே தெரியாதபடி சித்சக்தியை மட்டும் காணும்போது பூர்ண சித்சக்தி புலப்படும்.*

कालादिभिः परिच्छेदः यदि तस्या निरूप्यते।
अचेतितः परिच्छेदः चेतितो वा भवेद्वद॥ ३०॥
अचेतने ह्यसिद्धः स्यात् चेतने सैव व्यापिका।

**காலம் தேசம் முதலியவற்றால் அதனைப் பகுத்தறிய முடியலாம் எனில் அந்த காலம் தேசம் முதலியவற்றால் ஏற்படும் பாகுபாடு சித்தால் உணரப்படுகிறதா இல்லையா என்பதைக் கூறவேண்டும். சித்சக்தியால் உணரப்படாததாயின் அப்படி ஒரு பொருளே இருக்கமுடியாது. உணரப்படக் கூடுமாயின் உணரப்படுபவற்றைக் காட்டிலும் அந்த சித்– உணர்வு பரப்பு மிக்கதல்லவா?**

***கண்ணாடி தன்னுள் தெரியும் பிரதிபிம்பத்தை விட பரப்பு மிக்கது. தன்னுள் பிரதிபிம்பத்தை அடக்கிக் கொண்டுள்ளது. கண்ணாடி வேறுபடாது. பிரதி பிம்பங்கள் வேறுபடுபவை. எல்லாவற்றையும் காலத்தாலும் தேசத்தாலும் பகுக்கலாம். காலமும் தேசமும் விரிவுள்ளவை. மற்றவை அவற்றுள் அடங்குபவை. ஆனால் சித்சக்தி அந்தக் காலத்தையும் தேசத்தையும் தன்னுள் கொண்டுள்ளதானதால் சித்சக்தியை காலமோ தேசமோ வேறு படுத்த முடியாது.***

लोके कालपरिच्छिन्नो भावो यः कोऽपि भावितः ॥ ३१ ॥
भावकालौ परिच्छेद्यपरिच्छेदकतां गतौ ।
चिता व्याप्तौ भवेतां वै यदा तर्हि तथाविधौ ॥ ३२ ॥
अव्याप्तौ तु चिता यर्हि कथं सिध्येत्परिच्छिदिः ।
चितेर्बहिर्यदा चेत्यं अस्ति तत्स्यात् परिच्छिदिः ॥ ३३ ॥

**உலகில் அனைத்துப் பொருளும் காலத்தால் பாகுபாடடைந்ததாகவே காண்கிறோம். பொருள் பாகுபடக் கூடியதாகவும் காலம் பாகுபடுத்துவதாயுமாகின்றன. அவ்விரண்டுமே சித்தால் தன்னுள் அடக்கப்பட்டவையே. அவை சித்தினுள் ,அடங்காவிட்டால் பாகுபாட்டை உணரமுடியாது. சித்திற்கு வெளிப்பட்டதாக சித்தால் உணரப்படும் பொருள் இருக்குமாயின் அதனால் சித்தைப் பாகுபடுத்தலாம்.**

चितेर्बहिश्चेत्यसिद्धिः सर्वथा नोपपद्यते ।
यो बहिः स कथं सिध्येत् चितिसंबन्धवर्जितः ॥ ३४ ॥
संबन्धोऽपि नैकदेशः स्यादसिद्धस्तथेतरः ।
तत्संबन्धांशमात्रस्य भानादन्यन्न सिध्यति ॥ ३५ ॥
अतो बहिः पदार्थोऽपि चितिनिर्मग्न इष्यताम् ।

சித்திற்கு வெளியே சித்தால் உணரக் கூடிய பொருள் எக்காலும் இருக்க முடியாது. சித்தின் ஸம்பந்தமின்றி சித்தின் வெளியில் எதுவும் இருக்க முடியாது. காலதேசாதிகளுக்கும் சித்திற்கும் உள்ள தொடர்பு ஏதோ ஒரு பகுதியில் மட்டும் உள்ளது என்று கொள்வதும் பொருந்தாது. சித்தின் ஸம்பந்தமற்ற கால தேசப்பகுதி துலங்காது. எது வரை சித்தின் ஸம்பந்துமுள்ளதோ அந்த பகுதி மட்டுமே துலங்கும். அதனால் எந்த வெளிப் பொருளும் சித்தினுள் மூழ்கி நிற்பதே எனக் கொள்ளலாம்.

एवं च सर्वात्मनैव मग्नं चेत्यमपीष्यताम् ॥ ३६ ॥
कथं स्वान्तर्विनिर्मग्नं स्वपरिच्छेदकं भवेत्।
चेत्यमेवंविधं राम विचारय सुयुक्तितः ॥ ३७ ॥

அதனால் சித்தினுள் எல்லாப் பொருளும் முழுமையாக மூழ்கியுள்ளதாகவே கொள்ளலாம். தன்னுள் மூழ்கியது தந்னைப் பாகுபடுத்துவதாக ஆகாது. இத்தகைய சித்தால் உணரப் படுவதனைத்தையும் யுக்தியுடன் தீரச் சிந்தித்துப்பார்.

चितेरन्तर्भासमानं प्रतिबिंबात्मकं भवेत्।
न भावोदरगो भावो भवन् लोके सुदृश्यते ॥ ३८ ॥
भावानां स्याद्धि सांकर्यं तथा चेद्राम सर्वतः।
बहिः पदार्थस्ते प्रोक्तो भ्रममूलो हि सर्वथा ॥ ३६ ॥
तदाश्रयाणां भावानां कथं स्यात्सत्यता वद।

சித்தினுள் துலங்குவது பிரதிபிம்ப வடிவில் உள்ளது. ஒரு பொருளினுள்ளே மற்றொரு பொருள் இருக்காது. அப்படி இருக்குமேயானால் பாகுபடுத்த முடியாதபடி குழப்பம் ஏற்படும். வெளிப்பொருள் அனைத்தும் பிரமையால் துலங்குகின்றது என முன்னரே (12,14 அத்யாயங்களில்)உனக்கு விளக்கப்பட்டுள்ளது. பிரமையை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் பொருளுக்கு எப்படி ஸத்யத்தன்மை ஏற்படும்?

चितिस्वरूपः स्वात्मैव तत्तद्भावात्मना सदा ॥ ४० ॥
भासते स्वाच्छन्द्यशक्त्या नाधिकं विद्यते क्वचित्।
इति वाक्यं समाकर्ण्य पुनः पप्रच्छ भार्गवः ॥ ४१ ॥

சித்சக்தி வடிவினன் ஆத்மா. அந்தந்தப் பொருளாக தன் ஸ்வதந்திர சக்தியால் விளங்குகிறான் என்பதைத் தவிர அதிகம் கூறுவானேன் என்று தத்தரின் விளக்கத்தைக் கேட்ட பரசுராமர் வினாவினார்.

भगवन् भवता प्रोक्तं दुर्घटं प्रतिभाति मे।
शुद्धा चितिर्विचित्रैका भासते इत्यसंभवात्॥ ४२॥
चितिश्चेत्यमिति द्वेधा वस्तु सर्वैर्विभावितम्।
तत्र चेत्यं चिता भास्यं स्वप्रभा चितिरस्तु ते॥ ४३॥

ஆண்டவா! தங்களால் விளக்கப்பட்டது பொருத்த முடியாததாகத் தோன்றுகிறது. துண்டாட முடியாத சுத்த சித்தே பலவாறாகத் தோன்றுகிறது என்பது நேர முடியாது. சித்சக்தி, சித்சக்தியால் உணரப்படும் பொருளென பொருள்கள் இரண்டு விதமாக உலகில் உணரப்படுகிறது. சித்தால் உணரப்படுவது சேத்யம். தனித்த ஞான ஒளி சித்து.

यथाऽऽलोक भातमपि वस्तु तद्भिन्नमस्ति वै।
एवं चिता भासितं तु चेत्यमस्तु पृथग्विधम्॥ ४४॥
चेत्यं चिदात्मकमिति नानुभूतिं समारुहेत्।

வெளிச்சத்தால் துலங்கும் பொருள் வெளிச்சத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக இருக்கிறதல்லவா? அதுபோல் சித்தில் துலங்கும் பொருளும் வேறுபட்டதாக இருக்கட்டுமே! சித்தால் துலங்கும் பொருள் சித்வடிவமானதே என்பது அனுபவத்திற்கு ஒவ்வாததே.

अथ च प्रागभिहितं जनकेन महात्मना॥ ४५॥
संकल्पवर्जनादेव निर्विकल्पं मनो भवेत्।
तदेव निर्विकल्पं स्यात् ज्ञानं संसारनाशनम्॥ ४६॥
तदेव ह्यात्मनो रूपं इत्युक्तं तत्कथं भवेत्।

மேலும் முன்னர் ஜனகர் சங்கல்பத்தைத் தவிர்ப்பதால் மட்டுமே மனம் நிர்விகல்பமாக இருக்கும் என்றும் அந்த நிர்விகல்ப ஞானமே ஸம்ஸார பந்தத்தை நீக்க வல்லதெனவும் அதுதான் ஆத்மாவின் ஸ்வரூபம் என்றும் கூறினார். அது எப்படி?

आत्मनो हि मनः प्रोक्तं करणं ज्ञानकर्मणि ।। ४७ ।।
मनो यद्यात्मनो न स्यात् विशिष्येत जडात्कथम् ।
मनो जडाद् विशेषः स्यात् आत्मनो भगवन्ननु ।। ४८ ।।
मनसैव हि बन्धः स्यात् मोक्षो वाऽप्यात्मनः स्फुटम् ।
सविकल्पं मनो बन्धः मोक्षः स्यात् निर्विकल्पकम् ।। ४९ ।।
तत्कथं मन एवात्मा करणं हि मनः स्मृतम् ।

ஆத்மாவிற்கு பொருளை உணர உதவும் ஸாதனம் மனம். மனம் இல்லாவிடில் ஆத்மா ஜடமாகவே இருக்கும். ஜடத்தைக் காட்டிலும் எப்படி வேறுபடும்? ஆத்மா ஜடத்தைக் காட்டிலும் வேறுபட்டதாயிருக்க மனம் தேவை. மனத்தால் தான் பந்தமும் மோக்ஷமும், ஸவிகல்ப ஞானமுள்ள மனம் பந்தத்தைத் தரும். நிர்விகல்ப ஞான முள்ள மனம் மோக்ஷத்தைத் தரும். அதனால் மனம் எப்படி ஆத்மாவாகும்? மனம் ஸாதனமல்லவா?

निर्विकल्पस्य संसिद्धावपि द्वैतं तु शिष्यते ।। ५० ।।
अथापि लोके दृष्टोऽस्ति यस्य भ्रान्तिरसन् हि सः ।
न हि भ्रान्तिरसत्या स्यात् तदद्वैतं कथं भवेत् ।। ५१ ।।

நிர்விகல்பகம் என ஒன்று இருப்பதாகக் கொண்டாலும் மனம் வேறு ஆத்மா வேறு என்ற துவைதம் நிலைத்து விட்டதே! உலகில் பிரமை ஞானத்திற்கு உட்பட்டது அஸத்தியப் பொருளாகலாம். ஆனால் பிரமை ஞானம் அஸத்தியம் அல்லவே! அப்போது அத்வைதம் எங்கே!

अर्थक्रिया न क्वचिच्च दृष्टाऽसत्येन वस्तुना ।
सर्वं हि जागतं वस्तु स्थिरमर्थक्रियाकरम् ।। ५२ ।।
तदसत्यं कथं ब्रूहि यतोऽद्वैतं प्रसिध्यति ।

பிரயோஜனமும் செயலாற்றலும் அஸத்யமான பொருளால் எப்போதும் ஏற்படுவதற்கில்லை. ஆனால் ஜகத்தில் உள்ள பொருள் அனைத்தும் ஸ்திரம், பிரயோஜனமுள்ளது, செயல்படுவது என்றிருக்கும்போது அதனை அஸத்யம் என்பது எப்படி? அது அஸத்யமானால் அல்லவோ அத்வைதம் தேறும்?

सर्वं च भ्रान्ति विज्ञानं भ्रान्त्यभ्रान्तिभिदा कथम् ।। ५३ ।।
भ्रान्तिः सर्वसमा वापि कथं स्यात् ब्रूहि मे गुरो ।

सन्देह एष चिरतो हृदि मे परिवर्तते ॥ ५४ ॥
इत्येवं प्रश्नमाकर्ण्य दत्तात्रेयः समस्तवित् ।
साधुप्रश्नप्रहृष्टात्मा प्रवक्तुमुपचक्रमे ॥ ५५ ।

எல்லாமே பிரமையானால் பிரமை ஸத்யஞானம் என்று பிரித்து அறிவது எப்படி? எல்லோருக்கும் ஒரேவிதமான பிரமை ஏற்படுமோ? இந்த சந்தேகம் எனக்கு வெகுநாட்களாக இருக்கிறது." இவ்வாறு பரசுராமரின் கேள்வியைக் கேட்டதும் தத்தாத்ரேயர் நல்ல கேள்வியால் ஏற்பட்ட மகிழ்ச்சியுடன் விளக்கத் தொடங்கினார்.

राम साधु त्वया पृष्टं प्रोक्तप्रायमिदं पुनः ।
यावन्न मनसस्तोषः तावत् भूयो विशोधयेत् ॥ ५६ ॥
गुरुर्वापि कथं ब्रूयात् अपृष्टस्तन्मनोगतम् ।

பரசுராமரே! நீர் கேட்டது நல்ல விஷயமே. இது முன்னரே விளக்கப்பட்டுள்ளதெனினும் மனம் தெளிகிற வரை மறுபடி அதை தீர விசாரித்து அறியவேண்டும். சிஷ்யன் தன் மனத்திலுள்ளதைப் பற்றிக் கேட்காமல் இருக்க குருவும் எப்படி விளக்கமுடியும்?

प्राणिनां हि बुद्धिभेदात् तर्कः पृथगवस्थितः ॥ ५७ ॥
अपृष्ट्वा स्वस्वाभिमतं कः सन्देहाद्विमुच्यते ।
प्रष्टुर्विद्या हि सुदृढा प्रश्नो बीजं निरूपणे ॥ ५८ ॥
अप्रष्टुर्नैव विद्या स्यात् पृष्ट्वा विद्यात्ततो गुरुम् ।

மனிதனின் அறிவுக்கேற்றபடி தனித்தனியாக சந்தேகத்திற்கான வினா ஏற்படும். அதனால் தன் சந்தேகத்தைப் பற்றிக் கேட்காமல் சந்தேகத்திலிருந்து விடுபடுவது எங்ஙனம்? கேள்வி கேட்பவனுக்குத்தான் கல்வி திடப்படும். கேட்கப்படுகிற கேள்வியே விளக்கம் தரத்தூண்டும். கேள்வி கேட்காதவனுக்குக் கல்வி ஏற்படாது. அதனால் குருவைக் கேட்டே அறியவேண்டும்.

चितिरेकैव वैचित्र्यात् भासते इति संभवेत् ॥ ५९ ॥
एकरूपो यथाऽऽदर्शः प्रतिबिंबादनेकधा ।
पश्य स्वप्नविकल्पादौ मन एकं हि केवलम् ॥ ६० ॥
द्रष्टृदर्शनदृश्यात्मवैचित्र्येण विभाति हि ।

*சித்சக்தி ஒன்றே பலவிதமாகத் தோன்றுகிறது என்பது நேரக் கூடியதே. கண்ணாடி ஒன்றே பிரதிபிம்பங்களால் பலவாகக் காண்பது போல், கனவிலும் மனோரத கற்பனைகளிலும் மனம் ஒன்றே, தானே காண்பவனாகவும் காட்சியாகவும் காணப்படும் பொருளாகவும் பல நிலைகளில் காணப்படுகின்றதல்லவா?*

एवं शुद्धैव सा संवित् विचित्राकारभासिनी ।। ६१ ।।
चितिश्चेत्यमिति द्वेधा स्वप्नेऽपि हि विभासते ।
आलोकमन्तरा त्वन्धो भावं जानाति वै ननु ।। ६२ ।।

*அப்படியே சித்சக்தியும் பல வடிவங்களில் தோன்றுகிறது. அறிவும் அறிவால் உணரப்படுவதும் எனக் கனவிலும் இரண்டாகத் தெரிகிறதே. குருடனும் ஒளி இல்லாமலேயே பொருளை உணர்கிறான் அல்லவா?*

अन्धस्याभासमानं च रूपं भाति स्मृतौ किल ।
नैकं चितेरभाने किं कदा कुत्र विभासते ।। ६३ ।।
यथाऽऽदर्शं विना किञ्चित्प्रतिबिंबं न भाति वै ।
आदर्शान्नातिरिक्तोऽतः प्रतिबिंबो भवेद्यथा ।। ६४ ।।
एवं चितिमृते किञ्चिदतिरक्तं न विद्यते ।
अत एव मनोऽप्यन्यत् सर्वथा नास्ति वै चितेः ।। ६५ ।।

*குருடனுக்கும் கண்ணால் உணரமுடியாத உருவம் எண்ணத்தில் நினைவில் உணரப்படுகிறதல்லவா? ஆனால் சித்சக்தி துலங்காதபோது எது எங்கே எப்போது துலங்கியிருக்கிறது? கண்ணாடி இல்லாமல் பிரதிபிம்பம் புலப்படுவது இல்லை. அதனால் கண்ணாடியின்றி பிரதி பிம்பம் இருக்காது. அதேபோல், சித்சக்தியின்றி அதிலிருந்து வேறுபட்டதொன்று இருப்பதற்கில்லை. மனம்கூட சித்சக்தியல்லாமல் வேறொன்று அல்ல.*

यथा स्वप्ने मनस्तद्वत् जाग्रत्यपि मनो न हि ।
कल्पितं कार्यसंसिध्यै करणं केवलं मनः ।। ६६ ।।
यथा स्वाप्नः कुठारः स्यात् करणं तरुछेदने ।
राम क्रियाऽसत्यरूपा सत्यं तत्करणं कथम् ।। ६७ ।।
असता नरशृंगेण कः कदा सुविदारितः ।

तस्मान्नास्ति मनो राम चासत् कार्यस्य कारणम् ।। ६८ ।।

கனவில் மனமில்லாததுபோல் விழிப்பிலும் மனமில்லை. அங்கு போல் இங்கும் மனம் செயல் நிறைவேறத் தேவை எனக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. கனவில் உள்ள கோடரி கனவு மரத்தை வெட்டக் கருவியாகும். கனவில் மரம் வெட்டியது பொய். வெட்டக் கருவியான கோடாரி மட்டும் மெய்யாகுமா? (மனிதனுக்குக் கொம்பில்லை.) அந்த இல்லாத மனிதக் கொம்பைக் கொண்டு யாரேனும் குத்தப்படுவார்களா? அதுபோல் மனமே இல்லாதபோதும் அந்த இல்லாத மனம் செயலுக்குக் காரணமாவது எப்படி?

स्वप्ने दृशिक्रियाकार्यकरणं मन उच्यते।
यथा तथा सर्वदापि मनो नास्ति क्रियाकरम् ।। ६९ ।।
चिदात्मा केवलं स्वच्छस्वाच्छन्द्यान्मन आदिकम्।
परिकल्प्य व्यवहरेत् दृश्यद्रष्ट्रादिभेदतः ।। ७० ।।
क्वचित् क्वचित् केवलं तु निर्विकल्पात्मना स्थितः।

கனவில் நேரும் பார்த்தல் என்ற செயலுக்குக் கருவி கனவில் உள்ள மனம் என்று கூறப்படுகிறது. அது எப்படி செயல்படாமலேயே கருவி எனப்படுகிறதோ அப்படியே எப்போதும் (விழிப்பிலும்) செயல்படுவதில்லை. சித்சக்தியே தனது குறைவற்ற தன்னிஷ்டப்படி செயலாற்றும் திறத்தால் மனம் முதலியவற்றை கற்பனை செய்து பார்க்கப்பட்டதென்றும் பார்ப்பவன் என்றும் வேற்றுமையைக் காட்டி வியவஹாரம் செய்கிறது. எங்கோ சிலசமயம் தனித்து நிர்விகல்பகமாகவும் இருக்கிறது.

शृणु भार्गव चित्तत्वं परिपूर्णमपि स्वयम् ।। ७१ ।।
नाकाशतुल्यं चैतन्यात् स्वप्रकाशमतः स्थितम्।

சித்தெனும் தத்துவம் தானே எங்கும் நீக்கமற நிறைந்திருப்பதெனினும் அதை ஆகாசத்துடன் ஒப்பிட முடியாது. அது சைதன்யமாயிருப்பதால் (ஆகாசம் ஜடம்) அதனால்தானே தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது.

आकाशश्च चिदात्मा च न विलक्षणतां गतौ ।। ७२ ।।
पूर्णः सूक्ष्मो निर्मलश्चाजोऽनन्तोऽपि निराकृतिः।
सर्वाधारोऽप्यसंगात्मा सर्वान्तरबहिर्भवः ।। ७३ ।।
विशेषस्तत्र चैतन्यमाकाशे तन्न विद्यते।

ஆகாசமும் சிதாத்மாவும் – பூர்ணம் ஸூக்ஷ்மம், அப்பழுக்கில்லாதது, பிறப்பில்லாதது, முடிவில்லாதது, உருவமற்றது, எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ளது. ஒன்றிலும் பற்றாதிருப்பது, எல்லாவற்றின் உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்திருப்பது என்ற தன்மைகளால் வேற்றுமையற்றிருந்தபோதிலும், சிதாத்மாவில் சைதன்யமிருப்பதும் ஆகாசத்தில் சைதன்யமில்லாமையும் மற்றுமே வேறுபாடு.

वस्तुतश्चैतन्यपूर्ण आत्मैवाकाश उच्यते ।। ७४ ।।
न ह्यात्माकाशयोर्भेदो लेशतोऽपि हि विद्यते ।
य आकाशः स आत्मैव यश्चात्माऽऽकाश एव सः ।। ७५ ।।
अज्ञाः पश्यन्त्यात्मरूपं आकाशमिति वै भ्रमात् ।
सौरालोकं यथोलूकः तमोमात्रं प्रपश्यति ।। ७६ ।।
आकाशमेव विज्ञास्तु पश्यन्त्यात्मचिदात्मकम् ।

உண்மை நிலையை ஆராயப்புகுந்தால், சைதன்யம் நிரம்பிய ஆத்மாவே ஆகாசம் எனச் சொல்லப்படுகிறது. ஆத்மாவிற்கும் ஆகாசத்திற்கும் இடையே வேற்றுமை சிறிதும் இல்லை. ஆத்மாவே ஆகாசம், ஆகாசமே ஆத்மா. தடுமாற்றம் காரணமாக ஆத்மாவாக ஆகாசத்தை அறிவிலிகள் காண்கின்றனர். கோட்டான் சூரிய ஒளியை இருட்டாகப் பார்ப்பதுபோல், அந்த ஆகாசத்தையே அறிவாளிகள் ஆத்மாவாக சித்ஸ்வரூபமாகக் காண்கின்றனர்.

परा चितिः परेशानी स्वच्छस्वातन्त्र्यवैभवात् ।। ७७ ।।
अवभासयदात्मानं परिच्छिन्नमनेकधा ।
यथा राम स्वमात्मानं स्वप्ने बहुविधं पृथक् ।। ७८ ।।
मनुष्यादिविभेदेन भासयस्येवमेव हि ।

எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட சித்சக்தி தன்னுடைய கலப்பற்ற ஸ்வதந்திரத் தன்மையின் பெருமையால் தன்னைப் பலவகைகளில் பகுக்கப்பட்டதாக காட்டிக்கொள்கிறது. எப்படி நீர் கனவில் தன்னையே மனிதன் முதலான பல வேற்றுமைகளுடன் காட்டிக்கொள்கிறீரோ அப்படியே அதுவும்.

अनेकधावऽभासोऽपि परिच्छिन्नदृशैव हि ।। ७९ ।।
स्वयं स्वदृष्ट्या पूर्णात्मरूपिण्येव परा चितिः ।
ऐन्द्रजालिक एकोऽपि स्वमात्मानमनेकधा ।। ८० ।।

भासयंस्तत्र द्रष्टृणां स्वदृष्ट्या भासते स्वयम् ।
एक एव निर्विकारः एवं सा परमा चितिः ॥ ८१ ॥
शुद्धैकरूपभासापि परिच्छिन्ना ह्यनेकधा ।
परिच्छिन्नस्वरूपाणां भासयेत् माययावृता ॥ ८२ ॥

ஒரே பொருள் பலவாகக் காணப்படுவதும் பலவாக ஆனவனின் நோக்கினால்தான். சித்சக்தியின் நோக்கில் அவன் பூர்ணமான ஒரே ஆத்ம வடிவினனே. இந்திரஜால வித்தைக்காரன் ஒருவனே. ஆனால் அவன் தன்னையே பலவிதமாகக் காட்டிக்கொள்கிறான். பார்ப்பவர்கள் அவனிடத்தில் பலவற்றை பார்த்தாலும் அவன் நோக்கில் அவன் ஒருவனே. அவனிடத்தில் எந்த மாறுபாடும் கிடையாது. அது போல் அந்த பரசித்ஸ்வரூபத்திலும் யாதொரு மாறுபாடும் கிடையாது. தூயதும் ஒரே வடிவமுள்ளதுமான அதுதன் ஒளியால் பல-வாறாகப் பிரிந்து தோன்றுகிறது. அப்படித் தன்னை வெவ்வேறாகக் காண்பவர்களின் நோக்கில் அவள் மாயையால் மறைக்கப்பட்டவளாகப் பல பொருள்களாகத் தோன்றுகிறாள்.

मायावरणमप्येतत् परिच्छिन्नदृशो भवेत् ।
यथेन्द्रजालिको मायावृतश्चान्यदृशो भवेत् ॥ ८३ ॥

இந்திரஜாலக்காரன் மாயையால் தன்னை மறைத்துக்கொண்ட போது அவனைப் பார்ப்பவர்கள் கண்களுக்கு மட்டும் பல பொருள்களாகக் காட்சி அளிப்பதுபோல், சித்சக்தியைத் தவிர வேறுபட்டதாக, வேறு வேறு பொருள்களாகக் காண்பவருக்கு இந்த மாயையால் மறைப்பு ஏற்பட்டுள்ளதெனக் கொள்ளலாம்.

माया पराचेतोऽत्यन्तं स्वातन्त्र्यमतिदुर्घटम् ।
लोकेऽपि योगिनोऽन्येच मान्त्रिका ऐन्द्र जालिकाः ॥ ८४ ॥
आच्छादितं स्वस्वातन्त्र्यं प्राप्य किंचित् सुयुक्तितः ।
दुर्घटं घटयन्त्येव ततो नैतद्विचित्रितम् ॥ ८५ ॥

மாயை என்பது பரசித்தின் மிகவும் சிறந்தவாறு பொருந்தாததைப் பொருத்திக் காட்டக்கூடிய தன் விருப்பப்படி செயலாற்றும் திறமையாகும். உலகிலும் யோகிகளும் மாந்திரிகர்களும் இந்திரஜால வித்தைக்காரர்களும் மற்றவர்களும் பிறர் கண்களில் படாதபடி தனித்துத் தன் விருப்பப்படி செயலாற்றும் தன்மையை நல்லமுறையில் பெற்று நேரமுடியாததை நேரச்செய்கிறார்கள். அதனால் இது ஒன்றும் விசித்திரமல்ல.

एवं परचितेः स्वच्छस्वातन्त्र्यात् स्वात्मनो वपुः।
अनेकधा परिच्छिन्नं भासितं भृगुनन्दन।। ८६।।
परिच्छेदोऽभिमानस्य त्वेकदेशे सुविश्रमः।
साप्यपूर्णत्व विख्यातिः या अविद्या परिगीयते।। ८७।।

இப்படி பரசித் சக்தி தனது தனிப்பட்ட அப்பட்டமான ஸ்வதந்திர சக்தியால் தனது வடிவையே பல கூறுகளாகப் பகுத்துத்கிற்று. பகுத்தல் என்பது தனது பரமான அஹங்காரத்தைக் குறுக்கி ஒரிடத்தில் ஒதுக்குவதே. அது நிறைவற்ற தென்ற உணர்வைத் தருவதாகும். இதுவே அவித்யை எனப்படுகிறது.

*சிதாத்மா தீபம்போல் ஜடமான ஒளி வடிவினன் அல்ல. அது பேரொளி. அந்த ஒளி ஆத்மாவிடமே துலங்கும்போது அதனை பராஹம்பாவம் பூர்ண அஹம்பாவம் அல்லது பராஹந்தை என்பர். அது உலகம் முழுவதும் பரந்தும் அதற்கு அப்பாற்பட்டும் விளங்குகிறது. அது பகுக்க முடியாதது. அந்த ஒளியே ஜடமான பொருளை விளக்குவதாகக் குறுகும்போது இது அது என்ற வேற்றுமை உணர்வு ஏற்படுகிறது. இந்த ஜடப்பொருளுக்குட்பட்டதாக உணரப்படுகிற ஜீவனில் படுகிறபோது அஹம்பாவம்– அஹங்காரம் – அஹந்தை ஆகிறது. நான் எனது என்ற குறுகிய உணர்விற்கு இது காரணம். துண்டாட முடியாததும் பகுக்கப்படாததுமான ஆத்ம ஒளி தன் ஸ்வதந்திர சக்தியாகிய மாயையால் ஏகதேசத்தில் குறிப்பிட்ட இடத்தில் மட்டும் துலங்குவதாகக் காணப்படுகிறபோது அது பகுத்தலுக்கு உட்படுகிறது. பூர்ண ஆத்ம உணர்வேற்படாததால் நிறைவற்ற உணர்வாகிறது. இது உண்மை நிலையைப் புலப்படுத்தாததால் அறியாமையாகிய அவித்யை ஆகிறது.*

अत्र मुह्यन्ति बहवस्तार्किकाः पण्डिता अपि।
स्वात्मानमनुदाहृत्य बहिर्दृष्टितया स्थितेः।। ८८।।
गुरूपदिष्टं यत्किञ्चित् सद्वाप्यसदपीतरत्।
अनुदाहृत्य चात्मानं यावन्न ह्यवलोकयेत्।। ८९।।
यावन्न फलमाप्नोति परोक्षात्मतया श्रुतेः।

இவ்விஷயத்தில் பகுத்தறிவுமிக்க பண்டிதர்கள்கூட, தானாகிய ஆத்மஸ்வரூபத்தை தியானத்தின் மூலம் காணாததாலும் வெளிநோக்குடன் இருப்பதாலும் கலக்கமடைகிறார்கள். ஆத்மாவை தியானத்தின் மூலம், தானே உணராவிட்டால் குருவால் போதிக்கப்பட்ட ஸத்தையும் அஸத்தையும் பற்றிப் பூர்ண உணர்வுபெறாவிட்டால் ஆத்மாவைப் பற்றிக் கேட்பதால் மட்டும் பலன் ஏற்படாது.

*ஆத்ம ஞானத்தில் முதற்படி சிரவணம் – குருவின் உபதேசத்தின்மூலம் ஆத்ம விளக்கம் பெறுவது. இதுவே ஆத்ம ஞானத்தைத் தந்துவிடாது. அந்த உபதேசத்தின் அடிப்படையில் தானே தனித்து ஆத்மநிலை – அநாத்மாவான புற உலகநிலை என்ற இரண்டையும் மனனம் என்ற இரண்டாவது படியின்மூலம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். பின் ஆத்மநிலை பற்றித் தெளிந்தபடி ஆத்ம உணர்வில் இடையறாத தியானத்தின் மூலம் ஈடுபட்டு உள்ளொளிமூலம் அத்மாவை அபரோக்ஷமாக அனுபவித்து ஆத்மாவாகவே துலங்கவேண்டும்.*

अतो मयोक्तं राम त्वं संपश्यात्मनि सद्दृशा ॥ ६० ॥
चितिर्या परमा देवी सर्वसामान्यरूपिणी ।
सा प्रकाशमयी यस्मात् जडव्यावृत्तरूपिणी ॥ ६१ ॥
अतः स्वात्मनि विश्रान्तिस्त्वहन्ता पररूपिणी ।

ராமரே! அதனால் நான் விளக்கியதை ஒட்டி வெளிநோக்கில்லாத ஆத்ம நோக்கால் தன்னிடமே ஆத்மாவைக் காண்பீராக! சித்சக்தி காண்கிற பொருள்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது. எல்லாப் பொருள்களிலும் அவற்றின் பொதுத்தன்மை வடிவில் அமைந்தது. பேரொளி வடிவானது. ஜடப்பொருளல்லாதது. அது தன்னிடத்திலிருந்து வெளிப்பட்டுத் தன்னிடமே ஒடுங்குவதாகும். (புறப்பொருளின் உதவியை நாடாததாகும்.) அதனால் பரமான – மேம்பட்ட எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட அஹந்தையாகும்.

जडाश्चिदात्मविश्रान्ताः चिदात्मनि विभासतः ॥ ६२ ॥
न स्वरूपे स्वतो भान्ति तस्मान्न स्वात्मविश्रमः ।

ஜடப்பொருள்களோ சிதாத்மாவிடமிருந்து வெளிப்பட்டு அதிலேயே அடங்குபவை. சிதாத்மாவிலேயே அவை துலங்குவதால், தானே ஸ்வதந்திரமாகத் தன் வடிவில் துலங்க இயலாதவை. அதனால் தன்னிடமே அடங்காதவை (சித்சக்தியில் அடங்குபவை) யாகும்.

*ஆத்மா தானே புலனாகி தானே தன்னிடத்தில் ஒடுங்குமளவு பூர்ண ஸ்வதந்திரம் பெற்றது. ஜடப்பொருளோவெனில் தான் துலங்குவதற்கும் ஒடுங்குவதற்கும் ஆத்மாவின் பேரொளியை எதிர்பார்ப்பதால் பூர்ண ஸ்வதந்திரம் பெற்றதல்ல.*

चितेस्तु केवलं स्वस्मिन्ननन्यापेक्षया सदा॥ ६३॥
भासमानत्वतः स्वस्मिन् विश्रान्तिरूपपद्यते।
पूर्णाहन्ता परा सेयं या जडेषु न विद्यते॥ ६४॥
व्यावृत्तिस्पर्शनेयं परिच्छेद विवर्जनात्।
सर्वमस्यां यतः संस्थं आदर्शे नगरं यथा॥ ६५॥

சித்சக்தி மற்றொன்றின் எதிர்பார்வையின்றி ஸ்வதந்திரமாக எப்போதும் தன்னை விளக்கக்கூடுமாகையால் தன்னிடமே ஒய்வு பெறுவது பொருந்தும். அதுதான் பூர்ண அஹந்தை. அது ஜடப்பொருள்களில் கிடையாது. ஒன்றிலிருந்து மற்றொன்று வேறு படுவதாகிற வியாவ்ருத்தி என்பது பகுக்க முடியாமையால் சித்சக்தியிடம் கிடையாது. ஏனெனில் கண்ணாடியில் நகரம் புலப்படுவதுபோல் எல்லாம் இதனால் அமைந்திருக்கும்.

व्यावृत्तिर्वा परिच्छेदः कथं केन हि संभवेत्।
एवं पूर्णस्वरूपायाः पूर्ण यत्स्फुरणं स्थितम्॥ ६६॥
तदेव स्वात्मविश्रान्तिः पूर्णाहन्ता च कथ्यते।

சித்சக்தியில் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபடுவதோ பிரிப்பதோ எப்படி எதன் மூலம் ஏற்படும்? அது நிறைவே வடிவமாகக் கொண்ட சித்சக்தியின் பூர்ணமான துடிப்பாக உள்ளது. அதுவே தன்னிடத்தில்தான் ஒடுங்குவதாகும். அதுவே பூர்ண அஹந்தையாகும்.

अखण्डैकरसं ह्येतत् एतावद् राम वै भवेत्॥ ६७॥
निरूपणे बहुविधमिव तत् प्रतिभासते।
एतावदेव स्वातन्त्र्यं यतः शक्तिर्हि तन्मयी॥ ६८॥
प्रकाशस्तेजसो यद्वदौष्ण्यं चैवापृथक् स्थितम्।

துண்டாடமுடியாததும் உள்ளும் புறமும் என்ற பாகுபாடின்றி எங்கினும் ஒரேவிதமாக உள்ளதுமான சித்சக்தியும் பூர்ணாஹந்தா என்கிற அதன் ஸ்வதந்திரத்தன்மையும் விளக்கிப் பார்க்கப்படும் தனித்தனியாகத் தோன்றினாலும் ஒன்றே. ஒரே சித்சக்தியே. சித்சக்தியே ஸ்வதந்திரத் தன்மையாகவும் பூர்ண அஹந்தையாகவும் காட்சியளிக்கின்றது. எப்படி நெருப்பு தத்துவம்

சூடு ஒளி என இரண்டாகத் தோன்றினாலும் தனித்தனியாக இல்லையோ அப்படியே இது.

एवं स्वातन्त्र्यविश्रान्तिसहितैक रसात्मिका ।। ९९ ।।
इयमेव हि मायाख्या शक्तिः परमदुर्घटा।
आदर्शवद्यत्स्वरूपे चिदेक रसरूपिणी ।। १०० ।।
सत्यपि अनेक वैचित्र्य भासने य विभासते।
तथा भासन कालेऽपि स्वरूपादनिवर्तनम् ।। १०१ ।।

செயலில் ஸ்வதந்திரியமும் ஒடுக்கமும் கொண்டு தனித்து உணரமுடியாத ஒரே நிலையிலுள்ள இந்த சக்தியே மாயை. நேர முடியாததை மாயை நேரவைக்கும். ஏக ரஸமாக உள்ள சித்தே கண்ணாடிபோன்று தன் வடிவில் பல விசித்திரத் தோற்றங்களுடன் தானே பலவாகத் தோன்றுகிறான். அப்படிப் பலவாகத் தோன்றுகிற போதும் தன்னிலை மாறாதிருப்பதும் மாயாசக்தியின் தனித்தன்மையே.

परिच्छेदावभासो यः सोऽनात्माभास उच्यते।
सा अविद्या जडशक्तिः सा शून्यं प्रकृतिरेव च ।। १०२ ।।

இப்படி மாயையால் தன்னைப் பலவாகத் தோன்றச்செய்வது அனாத்மாவான ஜடத்தை விளக்குவதாகும். இந்தத் தோற்றமே அவித்யை ஜடசக்தி சூன்யம், பிரகிருதி என்று கூறப்படும்.

अत्यन्ताभाव आकाशः तमः प्रथमसर्गकः।
सर्वं तदेव संप्रोक्तं परिच्छेदनमादिमम् ।। १०३ ।।

சூன்யமென்றும் அகாசமென்றும் தமஸ் என்று முதல் படைப்பு என்றும் முதல் பாகுபாடு என்றும் கூறுவர். (அதிக விளக்கம் 14–வது அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளது).

राम यः परिपूर्णात्मा विश्रमो वै समास्थितः।
तस्यैक देशता भ्रान्तिकृतमाकाशभासनम् ।। १०४ ।।
अत आत्मप्रदेशो य आत्माभिमति वर्जितः।
आकाशः स हि संप्रोक्तः स हि संसार कारणम् ।। १०५ ।।

எல்லாப் பொருள்களும் அடங்கும் அந்த பூர்ண ஆத்மா. குறிப்பிட்ட இடத்தில் தோன்றுவதாக ஏற்படுகிற பிரமையே ஆகாசமாகும். இப்படிப் பராஹந்தையின் குறுகிய தோற்றப்பிரமையால் அது ஆத்மாவாக இருந்தும் அதில் ஆத்மா என்ற எண்ணம் ஏற்படாமல் இருக்கிறதே அது ஆகாசம். அதுவே ஸம்ஸாரத்திற்கு காரணம். இந்த வேற்றுமை பசு நிலையிலுள்ளவனின் நோக்கில் மட்டுமே புலப்படும்.

राम सूक्ष्मदृशा पश्य य आकाशस्त्वयेक्ष्यते।। १०६।।
तत्रत्यजीवराशीनामात्मा चैतन्यमेव सः।
यथाऽन्यदेहेष्वाकाशो भासते यः सदा तव।। १०७।।
स एव तेषामात्मा स्यात् चिदानन्दघनात्मकः।

பரசுராமரே – மிகவும் ஸூக்ஷ்மமான நோக்கால் இதை கவனிப்பீர். நீர் ஆகாயத்தைக் காண்கிறீர் அல்லவா? அதில் உள்ள ஜீவராசிகளின் ஆத்மாவும் சைதன்யமும் அதுவே. அப்படியே மற்ற தேகங்களில் காணப்படும் ஆகாசமும் அவை அவைகளின் ஆத்மாவே. சித் ஆனந்தம் இவற்றின் இறுகிய வடிவமே அது.

एवं स्वकल्पिताकाशग्रस्तं यत् चिद्वपुः स्थितम्।। १०८।।
तदेव मन इत्युक्तं आत्मैव न हि चेतरत्।
तत्रावरणमुख्यत्वात् प्रमाणं मन उच्यते।। १०६।।
आवृतप्राधान्यतस्तु प्रमाता जीव उच्यते।

இப்படி உன்னால் உருவகப்படுத்தப்பட்ட ஆகாசத்தின் உள் அகப்பட்ட சித்து எதுவோ அதுவே மனம். அதனால் அதுவும் ஆத்மாவே. வெறொன்றுமல்ல. (ஜடசக்தியால் சித் தத்துவம் ஆவரணம் அடைந்து இருப்பதால்)அதன் அறிவுக்கு உதவும் ஸாதனமான மனம் தனித்துக்குறிப்பிடப்படுகின்றது. அந்த அறிவைப்பெறுபவனாக ஆவரணத்திற்குட்பட்ட ஜீவன் வேறுபடுகிறான்.

एवं आकाशावृतोऽपि चिदात्मा भूय एवतु।। ११०।।
आकाशे कोमलेऽत्यन्तशिथिले निर्घनेऽमले।
कठिनश्लिष्टघनतामालिन्यानां प्रकल्पनैः।। १११।।
भूतान्याभास्य देहात्मा देहेनापि समावृतः

இப்படி (தன் தனிப்பட்ட ஸ்வாதந்திரியம் என்ற சக்தியால் உண்டாக்கப்பட்ட ஆகாசம் எனும் ஜட சக்தியால்)ஆவரணம் அடைந்த ஜீவாத்மா மறுபடி பஞ்சபூதங்களாவான உடலாலும் ஆவரணம் அடைகிறான். ஸ்பரிச உணர்ச்சிக்கு அகப்படாததும் நெருக்கமற்றதும் கனத்துப்போகாததும் அழுக்கில்லாததுமான ஆகாயத்தில் கடினத்தன்மை, நெருக்கம், கனம், அழுக்கு இவைகளை ஏற்றிப் பஞ்சபூதங்களைத் தோற்றுவித்து அதனால் ஆன தேகத்தாலும் தேக வடிவில் இந்த ஆத்மா மறைக்கப்படுகிறது.

ஆகாயம் ஸ்பர்ச உணர்ச்சிக்கு உட்படாதது. அதில் ஸ்பர்ச உணர்ச்சி ஏற்பட்டதும் வாயுவாகிறது. வாயுவில் அடர்த்தி நெருக்கம் இல்லை. அடர்த்தி ஏற்பட தேஜஸ் ஆகிறது. அதில் கனத்திற்க்கும் உணர்ச்சி கூட ஜலம் ஆகிறது. அதில் அழுக்கு சேர பிருத்வீ உண்டாகிறது. இந்த பஞ்சபூத ராசி தேகத்தால் ஆத்மாவிற்கு ஆவரணம் ஏற்பட தேகமே ஆத்மாவாகிறது. ஆகாயத்திலிருந்துதான் மற்ற பூதங்களின் தோற்றம். எனினும் மேன்மேலும் படல்களாக பாலில் ஆடை போன்று படல்களாக ஆவரணங்கள் ஏற்பட ஸ்தூலமாகிறது.

कुंभोदरगतो दीपः उदरं व्याप्य भासते ।। ११२ ।।
एवमेष शरीरान्तः अवभासनमात्रकः ।
आस्ते गूढप्रदीपात्मा तदन्तर्मात्रभासनः ।। ११३ ।।
दीपप्रभा घटच्छिद्रात् यथा निर्याति वै बहिः ।
एवमक्षद्वारमुखात् भूयो निर्याति वै चितिः ।। ११४ ।।

குடத்தினுள் வைக்கப்பெற்ற தீபத்தின் ஒளி குடத்தின் உட்புறம் முழுவதும் வியாபித்து விளக்குகிறது. அதனைப்போல் உடலினுள் மறைந்திருக்கும் விளக்குபோல், உள் முழுவதும் ஆத்மா விளக்குகிறது. தீபத்தின் ஒளி குடத்திலுள்ள துவாரம் வழியே வெளிவருவதுபோல், பொறிகளின் வழியே சித் சக்தியும் வெளிவந்து வெளி உலகத்தை விளக்குகிறது.

निर्याणं तु तितेर्नास्ति पूर्णत्वादक्रियत्वतः ।
स्वात्मावरणमाकाशं स्फूर्तिशत्तिश्चिदात्मनः ।। ११५ ।।
यावन्निवारयेत्तावत् निर्याणं प्रविभासते ।

தி வெளிவருவதென்பது உண்மையில் இல்லை. ஏனெனில் அது னது, செயலற்றது கூட., சித்தின் துடிப்பு எந்த அளவில் தன்னைச்

சூழ்ந்துள்ள பரப்பின் தடுப்பை விலக்குகிறதோ அந்த அளவு சித்சக்தி வெளிவந்ததாகத் தோன்றும்.

பரசித் ஸ்வரூபமான ஆத்மா தன் ஸ்வதந்திரசக்தியால் ஜடசக்தியால் குறுகியதுபோலாகிறது. அதனால் அதன் அறிவாற்றலும் குறுகுகிறது. அதனால் ஜீவன் அளவிடத்தக்க அறிவுள்ளவன். குடத்தினுள் துலங்கும் தீப ஒளிபோல். குடத்தினுள் இருக்கும் தீபஒளி ஒட்டைகள் மூலம் வெளிவருவதுபோல் அந்த சித்சக்தியும் கண் காது முதலிய பொறிகள் வழியே வெளியேறி அந்தந்தப் பொறிக்குப் புலப்படுமளவில் சித்சக்தி பரவி நிற்பதாகத் தோன்றுகிறது.

मनोव्यापार एषः स्यात् स्फूर्त्यापहतिरावृतेः ॥ ११६ ॥
तस्माद्राम मनो नान्यत् आत्मैव मन उच्यते ।
चला चितिर्मनोनाम्ना निश्चलाऽत्मस्वरूपिणी ॥ ११७ ॥

சித்சக்தியின் துடிப்பால் மறைப்பு விலகுவதே மனதின் செயலாகும். அதனால் மனம் என்பது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. ஆத்மாவே மனம். சலனமுள்ள சித்சக்தி மனம். சலனமற்ற சித்சக்தி ஆத்மா.

आवृत्यभिहतिः स्फूर्त्या चलनं राम वै चितेः ।
एतदेव विकल्पः स्यात् विकल्पपरिवर्जने ॥ ११८ ॥
निर्विकल्पं पूर्णरूपं विज्ञानं मुक्तिनामकम् ।

சித்தின் சலனமென்பது தன் துடிப்பால் ஆவரணத்தை அகற்றுவதேயாகும். இந்த சலனமே விகல்பம். இந்த விகல்பமல்லாத பூர்ணவடிவுள்ள பேரறிவே மோக்ஷமாகும்.

राम त्यजात्र सन्देहं विकल्पस्य विवर्जने ॥ ११६ ॥
अप्यावरणशेषः स्यादिति नास्त्येव चावृतिः ।
आवृतिर्न हि सत्याऽस्ति यतः स्वेनैव कल्पिता ॥ १२० ॥
यथा मनोरथे वद्धः केनचिच्छत्रुणा स्वयम् ।
ताड्यमानस्तर्ज्यमानः यावत् संकल्पवर्जनम् ॥ १२१ ॥
कुर्यात्तावत् ताडनं वा तर्जनं वाऽपि लीयते ।
किं तत्र शिष्यते बन्धः तथाऽत्रापि विभावय ॥ १२२ ॥

பரசுராமரே! விகல்பத்தைத் தவிர்த்த பிறகும் ஆவரணம் மீதி இருக்குமோ என்ற சந்தேகத்தை விட்டுவிடும். ஆவரணமே இருக்காது. ஆவரணமேமெய்ப்பொருளல்ல. அது நம்மால்கல்பனை செய்யப்பட்டது மனோராஜ்யம் செய்பவன் சத்ருவால் கட்டப்பட்டும், அடிக்கப்பட்டும், மிரட்டப்பட்டும் மனோரத ஸங்கல்பம் நீங்கும்வரை இருப்பான். ஸங்கல்பம் நீங்கியதும் அடியும் மிரட்டலும் மறைந்துவிடும் அங்கு ஏது பந்தம்? அதுபோல்தான் இங்கும். நீயே யோசித்துப் பார்.

अनादिकालात् रामात्र बन्धो नास्त्येव कस्यचित्।
जडात्मभ्रान्तिमुत्सृज्य कोऽयं बन्धो विचारय॥ १२३॥

ஆதியற்ற அந்தக் காலத்திலிருந்தே யாருக்கும் பந்தம் கிடையாது. ஜடமான–தொன்றை ஆத்மா என்று பிரமித்ததைத் தவிர வேறு ஏது பந்தம்? சிந்தித்துப் பார்ப்பீர்.

एष एव महाबन्धो बन्धसत्यत्वनिश्चयः।
मृषा भीतस्य बालस्य यक्षग्रह इव स्थितः॥ १२४॥
यावद्बन्धभ्रान्तिमेनां नोत्सृजेद्बुद्धिमानपि ।
न तावत्संसृतेर्मुक्तो भवेत्क्वापि महोद्यमैः॥ १२५॥

பந்தம் ஸத்யம் என்ற நிச்சயமேதான் (பெரும்) பந்தமாகிறது. இது பயந்த சிறுவனுக்கெதிரே பயத்தால் பொய்யாகக் கல்பித்த பீசாசு உண்மையாக எதிரில் நிற்பதுபோலாகும். இந்த பந்தமெனும் பிரமையை விடாவிடில் புத்திமானாயிருந்தாலும் எத்தனை பெருமுயற்சி எடுத்தாலும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட முடியாது.

कोऽयं बन्धः कथं वा स्यात् निर्मलस्य चिदात्मनः।
प्रतिबिंबात्मकैः स्वात्मदर्शान्तः प्रविभावितैः॥ १२६॥
बन्धो यदि तदादर्शप्रतिबिंवाग्निरादहेत्।
बन्धस्य सत्यताबुद्धिः मनोसोऽस्तित्वनिश्चयः॥ १२७॥
एतद् द्वयमृते नास्ति बन्धः कस्यापि कुत्रचित्।

பந்தம் என்பது என்ன? நிர்மலனான சிதாத்மாவிற்கு இந்த பந்தம் எப்படி ஏற்படும்? தனது ஆத்மாவாகிற கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்ப வடிவிலுள்ளவைகளால் பந்தம் ஏற்படக் கூடுமானால், கண்ணாடியில் பிரதிபிம்பமாகத்

தோன்றுகிற நெருப்பும் சுடவேண்டுமே? பந்தம் உண்மையானது என்ற எண்ணமும் மனமென்று ஒன்று தனித்து உள்ளது என்ற நிச்சயமும் இல்லாவிடில் யாருக்கும் பந்தம் ஏற்படாது.

यावदेतद् द्वयमलं यद्विचारमहाजलैः ॥ १२८ ॥
नोन्मार्जितं तावदिह तस्य संसारनाशने।
अहं वा ब्रह्मदेवो वा विष्णुर्वापि च शङ्करः ॥ १२९ ॥
विद्यात्मिका वा त्रिपुरा नैव शक्ताः कथञ्चन।

எதுவரை இந்த இரு மலங்களும் நல்ல ஆத்மவிசாரம் என்ற பெருநீர்ப் பெருக்கால் அலம்பப்படவில்லையோ அதுவரை அவனது ஸம்ஸார பந்தத்தை தத்தராகிய நானே பிரும்மதேவனோ, விஷ்ணுவோ, சங்கரனோ போக்க இயலாது.

तस्माद्राम द्वयं चैतत् परित्यज्य सुखीभव ॥ १३० ॥
तस्माद्राम निर्विकल्परूपे मनसि संस्थिते।
आत्मामात्रत्वतस्तस्य द्वैतं न परिशिष्यते ॥ १३१ ॥

அதனால் பந்தம் உண்மையானது என்ற எண்ணத்தையும் ஆத்மாவிலிருந்து வேறுபட்ட மனம் உண்டு என்ற எண்ணத்தையும் விட்டு நிம்மதி அடைவீர். நிர்விகல்ப நிலையில் மனம் ஆத்மாவாகவே இருப்பதால் அங்கு தனிப்பட்டு துவைதம் காணப்படவில்லை.

इदं तदिति रूपेण भासनाद्यन्मनो न हि।
इदमादिपरित्यागे भासनात्मैव शिष्यते ॥ १३२ ॥

இது அது என்று ஒன்றைத் துலக்குவதால் தனித்து உணரப் பட்ட மனமானது நிர்விகல்ப நிலையில் அது இது என்ற தனது விருத்தியை விட்டவுடன் இல்லாமல் போய்விட்டது. எல்லாவற்றையும் விளக்குகின்ற ஒளியான ஆத்மா மட்டும் மீதமாகிவிட்டது. (ஒளியால் துலங்குபவை ஒன்றுமில்லை.)

रज्जुसर्पपरिभ्रान्तिः सत्याभिमतवस्तुनि।
रज्जुरूपे हि सर्पस्य भासिनीति विनिश्चयः ॥ १३३ ॥
तत्र सर्पस्य बाधेऽपि रज्ज्वालंबनहेतुतः।

चिद्रूपादात्मनोऽन्यत्तु रज्जुज्ञानं स्थितं भवेत् ।। १३४ ।।
रापि रज्जुश्चिति यदा स्वप्नदृष्टान्तकल्पिता ।
रज्जुबाधे हि तज्ज्ञानं कथं शिष्येत् किमाश्रयम् ।। १३५ ।।

கயிற்றில் பாம்பு என்ற பிரமை, உண்மையாக இருப்பதாகக் கொள்ளப்பட்ட கயிற்றின் வடிவில் பாம்பைத் தோற்றுவிக்கிறது. அதில் தெளிவு ஏற்பட்டு (பாம்பு என்று கொண்டது தவறென உணர்ந்ததால்) பாம்பு மறைந்தாலும் ஞானத்திற்கும் ஆசிரயமான கயிற்றை ஆதாரமாகக் கொண்டு கயிறு என்ற அறிவு நிலைத்திருக்க வாய்ப்பு இருக்கலாம். ஆனால் கனவு பற்றிய உதாரணத்தை ஒட்டி (சு. 66–67) அந்தக் கயிறும் சித்தின்மேல் கல்பனையால் உட்கார்ந்ததே என்று புரிந்துகொண்டால் அந்த கயிறு இருக்கிறதென்ற ஸத்யஞானம் எப்படி மீதியிருக்கும்? எதனை ஆசிரயித்து இருக்கும்?

तस्माद् दृश्यस्य बाधे तु तज्ज्ञानं केवला हि दृक् ।
चिदात्मानतिरिक्तत्वात् द्वैतं तेन कथं भवेत् ।। १३६ ।।

காணப்படும் பொருளானது இல்லை என உணரப்படும்போது மீதமுள்ளதாகக் காணப்படும் அறிவும் ஆத்மாவே. ஆத்மாவைத் தவிர அந்த நிலையில் வேறுபொருள் இல்லையே. அதனால் துவைதம் எப்படி ஏற்படும்?

अर्थक्रिया हि सन्दृष्टा स्वाप्नवस्तुषु सुस्थिरा ।
स्वाप्नवस्तु स्थिरमिति स्वप्ने सर्वैर्विभावितम् ।। १३७ ।।
एतावानेव भेदः स्यात् स्वप्नजाग्रद्विभासयोः ।
जाग्रिति स्वप्नमिथ्यात्वनिश्चयो भवति ध्रुवम् ।। १३८ ।।
स्वप्ने न जायते जाग्रन्मिथ्यात्वस्य विनिर्णयः ।

கனவில் காண்கிற பொருள்களிலும் காரணகாரியத் தொடர்பு நிலைத்துக் காணப்படுகிறது. கனவில் உணர்ந்த பொருள் நிலைத்திருப்பதாகவே எல்லோராலும் கனவில் நினைக்கப்படுகிறது. கனவில் கண்டதற்கும் விழிப்பு நிலையில் கண்டதற்கும் வேற்றுமை இந்த அளவில்தான் – அதாவது – கனவில் கண்டவை பொய்யென்ற நிச்சயம் விழிப்பில் கட்டாயம் ஏற்படும். ஆனால் விழிப்பில் கண்டவை பொய்யென்று தீர்மானம் கனவில் ஏற்படுவதில்லை.

नैतावतैव सत्यत्वं जाग्रद्व्यवहृतेर्भवेत् ।। १३९ ।।
यथा जाग्रति वस्तूनां स्थिरताऽर्थक्रियापि च ।

दृश्यते किं तथा स्वप्ने दृश्यते न हि वा वद।। १४०।।
न स्वप्ने जागरा भावाः स्वाप्ना वा नैव जागरे।
अर्थक्रियाकरा वापि स्थिरा वा भान्ति तत्समम्।। १४१।।

விழிப்பு நிலையில் உணரப்படும் நிலைப்பும் காரணகாரியத் தொடர்பும் கனவு நிலையில் அப்படியே காணப்படவில்லையா என்ன? கனவில் விழிப்பிலுள்ள பொருள்கள் இல்லை. விழிப்பில் கனவில் கண்ட பொருள் இல்லை. அவைகளின் காரணகாரியத் தொடர்பும் நிலைப்பும் விழிப்பு நிலையில் உள்ளது கனவில் தொடர்வதில்லை. கனவு நிலையில் உள்ளது விழிப்பில் தொடர்வதில்லை.

विचारय सूक्ष्मदृशा को भेदोऽतीतस्वप्नयोः।
पश्यैन्द्रजालिककृते स्थैर्यमक्रियामपि।। १४२।।
किं तावतैव तत्सत्यं ऐन्द्रजालिक निर्मितम्।
सत्यासत्यविभागो वै प्राकृतैर्विदितो न हि।। १४३।।

விழிப்பிற்கும் கனவிற்கும் ஏது வேற்றுமை? நன்கு யோசித்துப் பார்ப்பீர். இந்திர ஜாலக்காரன் செய்த பொருளில் காரியகாரணத்தொடர்பில்லையா? அது அந்த அளவில் நிலைத்தில்லையா? அதனால் இந்திர ஜாலக்காரன் செய்தது உண்மையானதா? பாமர மனிதர்களுக்கு (தத்துவ அறிவு இல்லாதவர்களுக்கு) ஸத்தியம் அஸத்தியம் என்ற வேற்றுமை புரியாதல்லவா?

अत एव मोहितास्ते प्रोचुः सत्यं हि जागतम्।
कदाप्यभावासंस्पृष्टं सत्यं राम प्रचक्षते।। १४४।।
अभावः स्यादभानाद्वै त्वभानं न चितेः क्वचित्।
अभानमचितामस्ति ह्यनेकत्वावभासतः।। १४५।।

தத்துவ அறிவில்லாத பாமரர்கள் உண்மையில் தெளிவின்மையால் உலகில் காணும் பொருள் ஸத்தியம் என்றனர். ஸத்தியம் என்பது இல்லை என்ற வழக்குடன் எப்போதும் ஒட்டாதது. ஒரு பொருள் இல்லை என்பதே அது புலப்படாததால்தான். சித்சக்திக்கு எங்கும் என்றும் புலப்படாதிருத்தல் என்பதே கிடையாது. சித்தல்லாதவைகளுக்கு மட்டுமே புலப்படாமை உண்டு. அவை பலவாகத் தோன்றுவதால்.

परस्पराभावभासा अचिद्भावा हि सर्वथा।
चिदभनां कदा कुत्र स्याद्राम प्रविचारय।। १४६।।
यदा चितिर्न भायाद्वै तदा भायात् कथं वद।

இது அது அல்ல. அது இது அல்ல என்று மற்றொன்றின் அபாவமாகத் தோன்றுபவையே சித்தல்லாதவை. சிதாத்மாவில் இந்த அபாவத்தன்மை எப்போது எங்கு உணரப்பட்டது? யோசித்துப் பார்ப்பீர். சித்து எப்போது உணரப்படவில்லையோ அந்த " அப்போது" எப்படி உணரப்பட்டது?

न भायाद्वै कथं भायात् अभाने यदि तद्द्वयोः।। १४७।।
राम भायादेव चितिः तस्मात्सत्यैव सा चितिः।

சித் உணரப்படவில்லை என்பதும் இப்போது உணரப்படவில்லை என்பதும் எதனால் உணரப்பட்டது? (அது சித் சக்தியால் அல்லவா?) அதனால் சித்து எப்போதும் உணரப்படக்கூடியதே. அதனால் சித்து ஸத்தியமானதே.

राम सत्यासत्यभेदं शृणु सम्क्षेपतो ब्रुवे ।। १४८।।
अन्यानपेक्षभासं स्यात् सत्यमन्यदसत्यकम् ।
अन्यथा रज्जुसर्पाद्यमपि सत्यं भवेत्रनु ।। १४६।।

ராமரே! ஸத்யத்திற்கும் அஸத்தியத்திற்கும் உள்ள வேற்றுமையை சுருக்கமாகக் கூறுகிறேன். மற்றொன்றை எதிர்பாராமல் தானே தன்னை விளக்கிக்கொள்ளும் பொருள் ஸத்தியம். இதற்கு மாறுபட்டது அஸத்தியம். இல்லாவிடில் கயிற்றில் தோன்றுகிற பாம்பும் ஸத்தியமாகிவிடுமல்லவா?

बाधो ह्यभावविज्ञानं तद् भावेऽपि हि संभवेत् ।
अभावे भावविज्ञानमपि संभवति स्फुटम् ।। १५० ।।

பாதிப்பு என்பது எது தோன்றுகிறதோ அது இல்லாதது என்ற உணர்வாகும். இது ஸத்யம் என்று உணர்ந்ததிலும் அது இல்லை என்ற பாதிப்பு ஏற்படலாம். இல்லாத பொருளிலும் இருப்பதாக உணர்வு ஏற்படலாம்.

ततो न बाधितं सत्यं असत्यं बाधितं भवेत्
इति पक्षो न युक्तः स्यातु सर्वथा व्यभिचारतः ।। १५१।।
चितोऽभाने न किञ्चित् स्यात् न स्यातदपि सर्वथा ।

तस्माद्यच्चिन्न भातीति वदेत् तार्किकसत्खरः ॥ १५२॥

அதனால் பாதிப்படையாதது ஸத்தியமென்றோ பாதிப்படைவது அஸத்தியமென்றோ கட்சி கூறுவது யுக்திக்குப் பொருந்தாது. அந்த கட்சி எப்போதும் தவறெனப் பின்னர் உணரக்கூடும். அதனால் சித் சக்தி விளங்காவிடில் ஒன்றுமே விளங்காது. ஒன்றுமே விளங்காது என்பதும்கூட சித்சக்தியால் விளக்கப்பெறுவதே. அதனால் சித்சக்தி என ஒன்றுமில்லை என்பவன் வரட்டுத் தார்க்கிகன்.

स ब्रूयान्नाहमस्मीति तत्र केन किमुच्यते ।
यस्यात्मति स्यात्सन्देहो भानाभावेन सर्वदा ॥ १५३॥
सोऽन्येषां नाशयेन्मोहं निपुणैस्तर्कगुम्भनैः ।
तदा गण्डशिलाऽप्येषाप्यन्यमोह विनाशयेत् ॥ १५४ ॥

வரட்டுத் தார்க்கிகன்; நான் என ஒன்றில்லை' என்றே கூறுவான். அப்போது என்னதான் பதில் கூற முடியும்? எவனுக்குத் தன் ஆத்மாவே எப்போதும் தனித்துத் தனக்கு விளங்காததால் ஆத்மா இருக்கிறதென்பதில் ஸந்தேஹம் ஏற்படுகிறதோ அவன் தர்க்க வாதக்கொத்துகளால் பிறரது மோஹத்தைத் தெளியை வைப்பான் எனில் இந்த பாராங்கல்லும் பிறரது மோஹத்தைத் தெளியவைக்கக்கூடும்.

तस्मादर्थक्रियाभासमात्रेण न हि सत्यता ।
सर्वमेव हि विज्ञानं भ्रान्तिरेव न संशयः ॥ १५५ ॥
अपरेयं महाभ्रान्तिः तेष्वभ्रान्तत्वनिश्चयः ।
यथा हि बाधविज्ञानात् पूर्वं भ्रान्तिर्भवेत्तथा ॥ १५६ ॥

அதனால் பொறிகளுக்குப் புலனாவதும் செயல்புரிவதும் காரணமாக உண்மையானதென்று கூறமுடியாது. தோற்ற அளவில் உணர்வ தனைத்தும் பிரமையே. இதில் ஸந்தேகம் கிடையாது. தோற்ற அளவில் மெய்யெனக் கண்டது பிற்பாடு பாதிப்படைவதால் பிரமையாகிறது. அப்படியிருக்க இது பிரமையில்லாத ஸத்ய உணர்வு என ஒன்றைக் கொள்வதே பெரும் பிரமை.

सर्वं जागतविज्ञानं अभ्रान्तिरिव हि स्थितम् ।
यथा च रजतज्ञानं शुक्तिज्ञानाद् भ्रमात्मकम् ॥ १५७॥
एवं चिदात्मविज्ञानात् सर्वं ज्ञानं भ्रमात्मकम् ।

எப்படி பின்னர் ஒன்றின் பாதிப்பு ஏற்படுவதை உணர்வதால் முன்னால் கூண்ட தோற்றம் பிரமை என்று உணரப்படுகிறதோ அப்படியே எல்லா உலகப் பொருள்களின் உணர்வும் பிரமையல்லாத ஸத்ய ஞானமாகத் தோன்றினாலும் பிரமையே. அதிஷ்டானமான சிப்பியின் அறிவால் அதன்மேல் ஏற்பட்ட வெள்ளி என்ற ஞானம் எப்படிப் பிரமையாகிறதோ அதுபோல் அதிஷ்டானமான சிதாத்மாவின் அறிவால் மற்றதனைத்து ஞானமும் பிரமையாகிவிடும்.

नभोनीलभ्रमः सर्वसमानो भासते तथा ॥ १५८॥
जागतो भ्रम एष स्यात्सर्वेषां दोषहेतुतः ।
अभ्रान्तिः शुद्ध विज्ञानं यच्चिदात्मतया स्थितम् ॥ १५९

ஆகாயம் நீலமானது என்ற பிரமை எல்லோருக்கும் பொதுவாக ஏற்படுகிறது. அது எப்படி பிரமையோ அப்படி உலகப்பொருளின் தோற்றமனைத்தும் பிரமையே. ஏனென்றால் எல்லா உணர்வுகளிலும் பாதிப்பு ஏற்படுகிறது. சிதாத்மாவாக உள்ள சுத்த அறிவே பிரமையற்றது.

एवमेतत्तवया पृष्टं प्रोक्तं युक्त्यनुसङ्गतम् ।
सन्देमत्रम सन्त्यज्य राम प्रोक्तं विनिश्चनु ॥ १६०॥
कथं मुक्ते व्यवहृतिरितिपृष्टं पुरा तु यत् ।
तत्ते प्रवक्ष्यामि राम शृणु सम्यक् समाहितः ॥ १६१॥

ராமரே! நீ கேட்டதனைத்தும் விளக்கப்பட்டுள்ளது. இதில் ஸந்தேகமின்றி புத்தியால் சிந்தித்து முடிவை அறிந்துகொள்வீர். முக்தியடைந்தவன் உலக வியவஹாரத்தில் ஈடுபடுவது எங்ஙனம்? என நீர் முன் (15 – அத்) கேட்டதற்கு விளக்கம் தருகிறேன். கவனத்துடன் கேளும்.

मुक्ता हि ज्ञानिनो लोके ह्युत्तुमाघममध्यमाः ।
प्रारब्धोपनतैर्भोगैः खिद्यमानाः क्षणे क्षणे ॥ १६२
स्वरूपज्ञास्तु ये राम ते मन्दज्ञानिनः स्मृताः ।

முக்தர்களான ஞானிகள் மூன்றுவகை. கீழ்த்தரம், நடுத்தரம், மேல்தரம் என. ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவர்களாக இருந்தும் பிராரப்தத்தால் தானே நேருகின்ற அனுபவங்களால் ஒவ்வொரு நொடியிலும் வேதனையுறுபவர்கள் கீழ்த்தரமானவர்கள்.

ये ते प्रारब्धसंप्राप्तान् भुञ्जाना अपि नो विदुः ।। १६३ ।।
मधुक्षीबा रसमिव मध्यास्ते ज्ञानिनः स्मृताः ।

பிராரப்தத்தால் தானே நேருகின்றவற்றை அனுபவிப்பவர்களாக இருந்தும் கள்ளால் மயங்கியவர்கள் போதையால் சுவை உணர்ச்சி பெறாததுபோல் துக்கத்தை உணராதவர்கள் நடுத்தர ஞானிகள்.

ये तु प्रारब्धकोटीनां फलैरपि विचित्रितैः ।। १६४ ।।
न स्वस्थितेः प्रच्यवन्ते नोद्विजन्त्यापदां गणैः ।
न विस्मयन्ति चाश्चर्यैः न हृष्यन्ति महासुखैः ।। १६५ ।।
अन्तः शान्ता बहिर्लोकसमास्ते ज्ञानिषूत्तमाः ।

பிராரப்தங்கள் கோடிக்கணக்கில் விசித்திரமான பலனைக் கொடுக்கும்போது தன்னிலையிலிருந்து நழுவாமலும் ஆபத்து கூட்டமாக வந்தபோது கலங்காமலும், வியக்கத்தக்கதைக் கண்டு வியப்படையாமலும், பெருசுகம் கிட்டும்போது களிப்படையாமலும், உள்ளே அமைதியுடனும் வெளியில் உலகத்தார் போலவும் நடப்பவன் ஞானிகளில் சிறந்தவன்.

एवं बुद्धिविभेदेन ज्ञानपाकविभेदतः ।। १६६ ।।
प्रारब्धशेषमाहात्म्यात् व्यवहारा विचित्रिताः ।
मधुमत्तादिवत्तेषां व्यवहारोऽपि सम्भवेत् ।। १६७ ।।

।। इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
मुक्तिविचारो नाम अष्टादशोऽध्यायः ।।

இந்த மேலான ஞானிகள் பிராப்த மிகுதியின் பெருமையால் அறிவின் வேறுபட்டாலும், ஞானம் பக்குவமடைந்ததை ஒட்டியும் அவர்களிடம் விந்தையான பல வியவஹாரங்கள் மதுபானத்தால் போதை யடைந்தவர்களுடையதைப்போல் ஏற்படும்.

*இவ்வாறு திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் முக்தி பற்றி விகாரம் பதினெட்டாவது அத்தியாயம்.*

# एकोनविंशोऽध्यायः ।

## பத்தொன்பதாவது அத்யாயம்

इति दत्तात्रेयमुखात् श्रुत्वा भार्गवनन्दनः ।
भूयः पप्रच्छ मुक्तानां व्यवहारक्रमं क्रमात् ॥ १ ॥
भगवन्भूय एतन्मे विस्तरेण निरूपय ।
यथा बुद्धिविभेदेन ज्ञानपाकविचित्रता ॥ २ ॥

இவ்வாறு தத்தாத்திரேயர் வாயிலாக முக்தி பெற்றவர்களின் நடைமுறை பற்றிக்கேட்ட பிருகுகுலத் தோன்றலான பரசுராமர் மறுபடியும் கேட்டார். "பகவானே! அறிவின் ஏற்றத்தாழ்வு காரணமாக ஞானம் பக்குவமடைவதில் வேற்றுமைகள் எப்படி ஏற்படும் என்பது பற்றி மறுபடியும் விரிவாக விளக்க வேண்டும்.

ज्ञानं त्वेकविधं स्वात्ममात्रभावात्मकं ननु ।
उपेयं च तदेव स्यात् यन्मोक्षः तत्प्रथात्मकः ॥ ३ ॥
तत्कथं बुद्धिभेदेन पाकभेदसमाश्रयम् ।
साधनान्यपि भिद्यन्तेऽथवा नेति तदीरय ॥ ४ ॥

தன் ஆத்மா மட்டும் துலங்குவது என்ற நிலையாகிய ஞானம் ஒரே விதமாகத்தான் இருக்க வேண்டும். ஞானமும் ஆத்மாவும் ஒன்றாக உணர்வதொன்றுதான் அடைய வேண்டிய குறிக்கோள். அப்போது, புத்தியின் தீவிரம் மந்தம் என்ற தாரதம்யத்தால், ஞானம் பக்வம் அடைவது பல விதமாவது எப்படி? ஞானத்தின் ஸாதனங்கள் பலவிதமா? அல்லது ஒரே விதமா? இதனை விளக்க வேண்டும்."

इति पृष्टः पुनस्तेन दत्तात्रेयो दयानिधिः ।
विस्तरेण तमेवार्थं प्रवक्तुमुपचक्रमे ॥ ५ ॥
शृणु राम प्रवक्ष्यामि रहस्यं ह्येतदुत्तमम् ।

இவ்வாறு மறுபடி வினவப்பட்ட கருணையின் இருப்பிடமான தத்தாத்ரேயர் அதே பொருளைப் பற்றி விரிவாகக் கூற முற்பட்டார். "ராமரே! இது சிறந்த

ரஹஸ்யம், கூறுகிறேன் கேளும்.

साधने न विभेदोऽस्ति ज्ञानं न चित्रसाधनम् ॥ ६ ॥
तारतम्यात्साधनानां फलप्राप्तिर्विभेदिता ।
पूर्णे तु साधने ज्ञानमनायासेन सिध्यति ॥ ७ ॥
अपूर्तितारतम्येन त्वायासापेक्षणाद्भवेत् ।

ஞானம் நிறைவுறுவதில் வேற்றுமை கிடையாது. ஞானம் பல தரப்பட்ட ஸாதனங்களால் நிறைவுறுவதுமல்ல. ஞான ஸாதனமானவற்றின் குறைவு – நிறைவால் பலனடைவதும் மாறுபடுகிறது. ஸாதனம் பூர்ணமானதாயின் ஞானம் சிரமமின்றி சித்திக்கிறது. ஸாதனம் குறையுள்ளதாயின் அந்தக் குறைக்கேற்ப அதனையடையத் தக்க உழைப்பை எதிர் பார்ப்பதால் வேறுபாடு ஏற்படுகிறது.

वस्तुतः साधनं किञ्चित् ज्ञानेनैवोपयुज्यते ॥ ८ ॥
ज्ञानं क्वचिन्नैव साध्यं सिद्धत्वात् तु स्वभावतः ।
चैतन्यमेव विज्ञानं तत् सदा स्वप्रकाशकम् ॥ ९ ॥
तत्र का साधनापेक्षा नित्यभानस्वरूपके ।

உண்மை கூறுமிடத்தில் இதுவரை அடையாத ஞானத்தை அடைவது என்பதோ, அதற்குரிய ஸாதனங்கள் இவை என்பதோ பொருந்தாது. ஞானம் என்பது இயற்கையாக அமைந்த தன்னிலை, அதனை ஸாதிக்கத் தேவையில்லை. எப்போதும் தன்னைத்தானே விளக்கிக்கொள்கிற சைதன்யமே ஞானம். எப்போதும் துலங்குகிற நிலையிலுள்ளதை விளக்க எந்த சாதனம் தேவை?

चैतन्यं निहितं चित्तकरण्डेऽतिसुनिर्मले ॥ १० ॥
अनन्त वासनापङ्कमग्नं नैवोपलक्ष्यते ।
निरोधसलिलैः सम्यक् वासनापङ्कमार्जने ॥ ११ ॥
विचारशितयन्त्रेण यत्नाच्चित्तकरण्डके ।
चिरात्सङ्घटिते राम सुयुक्त्यो य़ोद्घाटिते ततः ॥ १२ ॥
भासमानं तु मणिवत् चैतन्यमुपलभ्यते ।

சித்தமாகிற சுத்தமான சிறு பெட்டியில் சைதன்யமெனும் ரத்னம் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. அந்தப்பெட்டி எல்லையற்ற வாஸனையெனும் புழுதியில் அமிழ்ந்து புலப்படாமல் இருக்கிறது. வாஸனை வழி செல்லாமல் சித்தத்தைக் கட்டுப் படுத்துவது என்ற நீர் விட்டு, நன்கு வாஸனைப் புழுதியை அலம்பிவிட்டு வெகுநாட்களாக இறுக மூடியிருக்க அந்த சித்தப்பெட்டியை ஆத்மவிசாரம் என்ற கூறிய முனைகொண்ட கத்தியால் கவனத்துடன் நெம்பித் திறந்ததும் உள்ளே ஒளிவிடுகிற சைதன்யமெனும் ரத்தினத்தைக் காணலாம்.

*சைதன்யம் ஞானம் ஆத்மா என்று பல பெயர்களில் உள்ள ஆத்மா ஸ்வரூபம் சித்தமெனும் சிறுபெட்டியினுள் மூடப்பட்டு மறைந்துள்ளது. தேகத்துடனும் பொறிகளுடனும் மனத்துடனும் இரண்டறக்கலந்து பிசறி நிற்கும் சைதன்யமே சித்தமெனும் பெட்டி. உடலே நான், மனமே நான் என்று பல பிறவிகளில் தொடர்ந்து ஏற்பட்டுள்ள எண்ணப்பதிவே அந்தப் பெட்டியை இறுக மூடி வைத்துள்ளது. உடலே நான், மனமே நான் என்ற எண்ணத்துடன், செய்த பல செயல்களின் வாஸனை எனும் புழுதி அந்த சித்தத்தின் மேல் படிந்து மேலும் அதன் உண்மை வடிவைப் புரிந்து கொள்ள முடியாமல் செய்துள்ளது. மனச்சஞ்சலத்தைப் போக்கி வைராக்யத்துடன் தன் கடமைகளைச் செய்யும்போது வாஸனைகள் வலிவிழந்து கரைகின்றன. வாஸனைகளின் அழுத்தம் குறைந்ததும் ஆத்ம விசாரமானது சிரவணம் மனனம் என்ற இரு உபாயங்களால் திடப்படுகிறது. இது நிதித்யாஸனம் ஸமாதி என்ற நிலைகளுக்கு வழிவிட, சித்தப்பெட்டி உடலே நான் மனமே நான் என்ற கட்டுகள் நீங்கி எளிதில் திறக்கத்தக்கதாகிறது. ஸமாதியில் நிர்மலமான சித்தத்தினுள் ஆத்ம ரத்தினம் ஒளிவிட்டுப் பிரகாசிப்பதை உணர முடிகிறது. ஆத்ம ஒளி என்றும் குன்றாதது. வாஸனையால் மூடப்பட்ட சித்த பெட்டியினுள் இருப்பதால் இதுவரை அனுபவத்திற்கு வரவில்லை. பெட்டியைத் திறப்பதற்குத்தான் ஸாதனங்கள் தேவை. ஞான ரத்தினத்தை புதிதாகப் பெறப் போவதில்லை. அதற்கு ஸாதனங்கள் தேவையில்லை. அடையப்போகும் ஆத்மா ஒரே விதமானதே. பெட்டியைத் திறக்கப் பயன்படும் ஸாதனம் பூர்ணமாக இருந்தால் ஞானம் துலங்கும். ஸாதனக் குறைவு இருந்தால் திறப்பதில் தாமதமும் ஆயாஸமும் ஏற்படலாம். திறக்க முடியாமல் போகலாம். ஸாதகனது மனநிலைக்கும் வைராக்யத்திற்கும் ஏற்பப்பலனை அடைவதில் தாமதம் முதலிய வேறுபாடுகள் ஏற்படலாம்.*

राम तस्माद् वासनानां निरासे साधनं स्मृतम् ।। १३ ।।
वासनाल्पाधिक्यभावात् बुद्धिस्तु विविधा भवेत् ।

यस्य यावद् वासनौघो बुद्धिमाच्छाद्य संस्थितः ।।१४।।
साधनापेक्षणं तस्य तावदेव भृगूद्वह ।

அதனால் ஞான ஸாதனங்கள் என்பவை வாஸனைகளை அகற்றுவதில் மட்டுமே பயன்படுபவை. (இல்லாத ஞானம் ஒன்றை ஸாதிப்பதற்கு அல்ல) வாஸனை கொஞ்சமாயிருப்பது, நிறைய இருப்பது என்ற பலதரப்பட்ட நிலைகளுக்கேற்ப புத்தியும் வேறுபடுகிறது. புத்தியை வாஸனைக் கூட்டம் எந்த அளவு மறைத்துள்ளதோ அந்த அளவு வாஸனைக் கூட்டத்தை அகற்றும் ஸாதனங்கள் தேவைப்படுகின்றன.

वासना विविधाः प्रोक्ताः तत्र मुख्या वदामि ते ।। १५ ।।
अपराधकर्मकामभेदेन त्रिविधा हि सा ।

வாஸனைகள் பலவகைகளாகக் குறிப்பிடப்படுகின்றன. அவற்றில் முக்கியமான வகைகளைப்பற்றிக் கூறுகிறேன். வாஸனை அபராத வாஸனை, கர்ம வாஸனை, காம வாஸனை என்ற மூன்று வகைப்படும்.

अश्रद्धैवापराधः स्यात् मुख्यः स्वात्मविनाशनः ।। १६ ।।
विपरीतग्रहश्चापि ह्यपराधस्तु पौरुषः ।

அபராத வாஸனை இருவகை. அசிரத்தை, விபரீத ஞானம் என. இவற்றில் அசிரத்தை ஆத்மஞானத்தை அடைய முடியாமல் செய்வதில் முதன்மை-யானது. விபரீத ஞானம் மனித இயற்கையால் ஏற்படக் கூடியது.

प्रायः कलासु कुशलाः अपराधवशान्ननु ।। १७ ।।
सत्सङ्गशास्त्रयोगैश्च परं तत्वं हि नो विदुः ।
निर्विशेषं परं तत्वं नास्ति नैव च सम्भवेत् ।। १८ ।।
अस्ति तन्नैव विज्ञातुं शक्यते केनचित्क्वचित् ।
ज्ञात्वाऽपि परमं तत्वं नैतत्तत्वं परं भवेत् ।। १९ ।।
एतद् ज्ञानात् कथं मोक्षः इत्यादि बहुधास्थितः ।
विपरीतग्रहो वापि चैतत्संशय एव वा ।। २० ।।
अपराधः पौरुषस्तु वासनाद्या प्रकीर्तिता ।

அறிவாற்றல் நிரம்பியவர்களும் கூட இந்த அபராதம் எனும் வாஸனை காரணமாக ஸத்ஸங்கம் சாஸ்திரஞானம் என்ற ஸாதனங்கள்

நிறைவற்றிருந்தும் பரதத்துவத்தை அறிவதில்லை. நிர்விசேஷமாக பரதத்துவம் என ஒன்றில்லை; இருக்க முடியாது; என்பர். (இருக்கிறது என நிரூபித்தாலும்) இருந்தாலும் யாராலும் எங்கும் அறியவும் முடியாது என்பர். (நிதித்யாஸன் வரை பழக்கி ஆத்ம தத்துவத்தை) உணர்த்தினாலும் இது பரதத்துவம் எப்படி ஆகும்? என்பர். (இதுதான் பரதத்துவம் என விளக்கினாலும்) இதனை உணர்வதால் மோக்ஷம் எப்படி ஏற்படும்? என்பர். இப்படிப் பலவகைகளில் விபரீதஞானமோ விபரீத ஸம்சயமோ ஏற்படுவதுதான் இப்பிறவியில் ஏற்பட்ட மனித இயற்கையால் அமைந்த அபராதம் எனும் முதல் வாஸனை ஆகும்.

शास्त्रविद्यासु कुशलाः शतशोऽथ सहस्रशः ॥२१॥
अनया विहता राम संसृतिं समुपागताः ।

சாஸ்திரப் பயிற்சியில் மிகத் தேர்ந்தவர்கள், நூற்றுக் கணக்கில் ஆயிரக்கணக்கில் இந்த அபராதம் எனும் வாஸனையால் அடிபட்டவர்களாக ஸம்ஸாரச் சுழலில் சிக்கியுள்ளார்கள்.

पुरा दुष्कृतसंस्कारवशात् बुद्धौ तु यत् स्थितम् ॥२२॥
मालिन्यमुपदेशस्य ग्रहण प्रतिबन्धकम् ।
येनाचार्यैः सम्यगुक्तमपि नो गृह्यते खलु ॥२३॥
सा कर्मवासना प्रोक्ता दुर्जेयापि निरोधतः ।

முற்பிறவியில் செய்த பாபச் செயலால் மனப்பாதிப்பு விளைகிறது. அதன் காரணமாக ஆசாரியரின் உபதேசத்தைக் கிரகிப்பதில் புத்தியின் திறமைக்குக் குறைவேற்படுகிறது. கர்ம வாஸனையாகும். ஆசாரியர்கள் எவ்வளவு தெளிவாக விளக்கினாலும் மனதில் ஏறாதபடி இது செய்யும். வைராக்யத்தால் இதனை வெல்ல முடியாது.

कामः कर्तव्यशेषः स्यात् अनन्तो बहुशाखकः ॥२४॥
रामाम्भोधौ तरंगाणां संख्यां कुर्याद्धि कश्चन ।
पार्थिवानामणूनां वा तथा तारागणस्य वा ॥२५॥
एकस्यापि हि कामानां संख्यातुं नैव शक्यते ।
इयं राम तृतीयां ते संप्रोक्ता कामवासना ॥२६॥

காமம் என்பது இதனைச் செய்வது பாக்கியுள்ளது என்ற எண்ணமேயாகும். இது முடிவற்றது. பல கிளைகளுள்ளது. கடலில் உள்ள அலைகளை ஒருவன்

எண்ணிவிடலாம். மண்ணின் அணுக்களையோ நக்ஷத்திரக் கூட்டங்களையோ கூட எண்ணிவிடலாம். ஆனால் காமங்களில் ஒன்றைக்கூட எண்ண முடியாது. இதுதான் மூன்றாவதான காமவாஸனை.

आकाशादपि विस्तीर्णा ह्यचला भूधरादपि ।
आशापिशाची प्रोक्तेयं राम या कामवासना ॥ २७॥
अनयैव हि सर्वोऽयं लोक उन्मत्तवत् स्थितः ।
येन दन्दह्यमानोऽयं लोक आक्रन्दते सदा ॥ २८॥

ஆகாயத்தைவிட விரிவானது. மலையைவிட அழுத்தமானது. காமவாஸனை (ஆசை) எனும் பிசாசாகும். இதனால்தான் உலகம் பித்துப்பிடித்து வெந்து எப்போதும் புலம்பிக்கொண்டே இருக்கிறது.

केऽपि लोके धन्यतमा महामन्त्र समाश्रयात्
विनिर्मुक्तास्तया भान्ति नराः सर्वाङ्गशीतलाः ॥ २९॥

வெகுசிலரே பெருவைராக்கியமென்ற மஹாமந்திரத்தைச் சரணமாக அடைந்து இந்த காமவாஸனையிடமிருந்து விடுபட்டவர்களாக எல்லாம் குளிர்ந்தவர்களாக நிம்மதியுடன் வாழ்கிறார்கள்.

एताभिस्तिसृभी राम वासनाभिर्यतो मनः ।
समाक्रान्तमतो नूनं तत्त्वं नावभासते ॥ ३०॥
अतः सर्वसाधनस्य वासनानाशनं फलम् ।
तत्राद्या ह्यपराधनिश्चयात् विनिवर्तते ॥ ३१॥

இந்த மூன்று வாசனைகளால் மனம் பாதிப்படைந்திருப்பதால் அந்த ஆத்மதத்துவம் துலங்குவதில்லை. அதனால் ஆத்மஞான ஸாதனமான எல்லாவற்றிற்கும் இந்த வாஸனை அழிப்பே முக்கிய பலன்.

द्वितीया जन्मनैकेन निवर्तेतापि जन्मभिः ।
ऐश्वरेण प्रसादेन नान्यथा कोटियुक्तिभिः ॥ ३२॥
तृतीया विनिवर्तेत वैराग्यादिसुसाधनैः ।
दोषदृष्टयैव वैराग्य भवेन्नैवान्यथा कचित् ॥ ३३॥

இவற்றில் முதலான வாஸனை (ஆசிரத்தை முதலியது)யானது அபராதம் எது என்பதைத் தீர்மானித்து விலக்குவதால் நீங்கும். இரண்டாவதான கர்மவாஸனை இறைவனின் அருளால் ஒரு பிறப்பிலோ பல பிறப்புகளிலோ நீங்கும். கோடி யுக்திகளாலும் இது நீங்காது. மூன்றாவதான காமவாஸனை வைராக்கியம் முதலிய நல்ல ஸாதனங்களால் விலகும். எப்போதும் மனத்தை ஈர்க்கின்ற விஷயங்களில் தோஷமுள்ளதென்ற நோக்கு ஏற்பட்டால்தான் வைராக்கியம் ஏற்படும்.

प्रोक्तानां वासनानां वै स्वल्पानल्पविभेदतः ।
तस्याश्चाल्पानल्पभावापेक्षा भवति भार्गव ॥ ३४ ॥

முன்கூறிய வாஸனைகளின் அல்பநிலை, வலிவுள்ள நிலை இவைகளைப்பொறுத்தே தோஷநோக்கு சிறிதளவோ பெருமளவோ தேவைப்படுகின்றது.

तत्राधं सर्वमूलं स्यात् मुमुक्षुत्वं न चेतरत् ।
मुमुक्षामन्तरा यत्तु श्रवणं मननादिकम् ॥ ३५ ॥
न मुख्यफलसंयुक्तं केवलं शिल्पवद्भवेत् ।
न शिल्पज्ञानमात्रेण प्राप्यते परमं पदम् ॥ ३६ ॥

இவை அனைத்திற்கும் அடிப்படையானது மோக்ஷம் அடைவதற்கான தீவிரமுயற்சியே ஆகும். மற்றவை அத்தனை அடிப்படையானது அல்ல. மோக்ஷமடைவதில் முயற்சியின்றி சிரவணம் மனனம் முதலியவை சில்பம் செய்முறை அறிவுபோன்று அத்தனை பலன் தராது. சில்ப ஞானத்தால் பெருநிலையாகிய ஆத்மஸாக்ஷாத்காரம் பெறமுடியாது.

मुमुक्षामन्तरा यैस्तु श्रुतं सम्यक् विचारितम् ।
शवालङ्कारवत् सर्वं तेषां व्यर्थ भवेत्खलु ॥ ३७ ॥
व्यर्था साऽपि भवेन्मन्दा मुमुक्षा राम सर्वथा ।
यथा फलश्रुतेरिच्छा सामान्या न फलावहा ॥३८ ॥
फलश्रुत्यत्तरोद्भूता नेच्छा कर्मफलावहा
फलश्रुत्या कस्य नाम न स्यात् सा जीवधर्मिणः ॥ ३९ ॥

மோக்ஷம் அடைவதில் விருப்பமின்றி ஆத்மவிசார உரைகளைக் கேட்பதோ அதுபற்றித் தீரவிசாரிப்பதோ சவத்திற்குச் செய்கிற அலங்காரம் போன்று

பயனற்றதே. மோக்ஷமடைவதில் விருப்பம் தீவிரமடையாமல் மந்தமாக இருந்தாலும் பலனளிப்பதில்லை. பொதுவாக ஒரு பணிபற்றிய பலனைக்கேட்பதிலிருந்தும் தீவிரமான ஈடுபாடு இல்லாமல் பொதுவான விருப்பமேற்பட்டாலும் அதுவும் பலன் தாரது. பலனைப் பற்றித் பலசுருதியைக் கேட்டதால் பலன் ஏற்படுமாயின் எல்லோருக்கும் பலன் ஏற்படவேண்டுமே?

तस्मादापातरूपाया मुमुक्षाया न वै फलम् ।
यथा मुमुक्षा तीव्रा स्यात् तथा तस्याचिरं फलम् ॥ ४० ॥

அதனால் மேல் எழுந்தவாரியாக ஏற்படும் மோக்ஷ ஆசை பயன் தராது. அது தீவிரப்படின் அதுசீக்கிரமே பலன் தரும்.

मुमुक्षा या मुख्यतमा सा साधनगणेष्वलम् ।
प्रवृत्तिमुत्पादयेद्वै सा हि तत्परतोच्यते ॥ ४१ ॥
यथा सुदग्धसर्वाङ्गः न शीतान्यदपेक्षते ।
तथा यदा विमुक्त्यन्यन्नापेक्षेत हि सर्वथा ॥ ४२ ॥
सा मुमुक्षा भवेत्तीव्रा समर्था फलसाधने ।

தீவிரமான மோக்ஷவிருப்பமே ஸாதனங்களில் மிகமுக்கியம். தீவிரமான முயற்சியை எடுக்கச்செய்வது அந்த தீவிரவிருப்பமே. அதுதவிர வேறுஎதிலும் நாட்டமில்லாத நிலை அது. உடல் முழுவதும் வெந்த நிலையிலுள்ளவன் குளிர்ச்சியைத்தவிர வேறொன்றை எப்படி நாடாதிருப்பானோ அப்படி மோக்ஷத்தைத் தவிர வேறொன்றையும் நாடாதிருப்பதே தீவிர மோக்ஷ ஆசை. அதுபலனைத்தர முடியும்.

एषा विमुक्तेरन्यत्र दोषदृष्टयैव जायते ॥ ४३ ॥
तीव्रवैराग्यमुखतः क्रमेण तीव्रतामियात् ।
दोषदृष्टया हि वैराग्यं विषयप्रीतिनाशनम् ॥ ४४ ॥
वैराग्येण मुमुक्षत्वं तीव्रं तत्परतोदयम् ।
तत्परत्वं साधनेषु प्रवृत्तिरतितीव्रतः ॥ ४५ ॥
अतितीव्रप्रवृत्त्यैव द्रुतं फलमवाप्नुयात् ।
इति दत्तात्रेयवचो निशम्य भार्गवः पुनः ॥ ४६ ॥

पप्रच्छ सन्दिग्धमनाः सम्शयं सुमहत्तरम् ।

மோக்ஷத்தைத் தவிர வேறு எதிலும் குற்றம் காண்பதால்தான் தீவிர மோக்ஷ ஆசைஏற்படும். தீவிரமான வைராக்கியத்தின் மூலமாகவே அது தீவிரமடையும். குற்றம் காண்பதால் வைராக்கியம் விஷயயாசையை அழிக்கும். வைராக்யத்தால் மோக்ஷ ஆசை வலுப்படும். மோக்ஷ ஸாதனங்களில் தீவிரப்பற்றை ஏற்படுத்தி கடும் முயற்ச்சியை ஏற்படுத்தும். இந்தக்கடுமையான முயற்சியால்தான் சீக்கிரம் பயன் கிட்டும்.

இவ்வாறு தத்தாத்ரேயர் கூறியதைக்கேட்ட பரசுராமர் மறுபடி ஐயம் கொண்டவராக மற்றொரு பெருங் கேள்வியைக் கேட்டார்.

भगवन् भवता प्रोक्तं सत्सङ्गो मूलकारणम् ॥ ४७॥
ईश्वरानुग्रहश्चापि दोषदृष्टिरपीति च ।
किमादिकारणं मुख्यं तत्प्राप्तिर्वा कथं भवेत् ॥ ४८॥
न हि निष्कारणं किञ्चित् भवेदिति हि निश्चयः ।
तत्कथं स्याद्विना हेतोरेतन्मे वद विस्तरात् ॥ ४६॥
इति पृष्टः प्राह रामं दत्तात्रेयो दयानिधिः ।

"ஐயா! நல்லோரிணக்கமும் இறைவனின் திருவருளும் ஆத்ம சிந்தனத்திற்கு உதவாதவற்றில் குற்றம் காண்பதும் மூலகாரணமென்றீர்கள். இவற்றுள் எது முக்கிய காரணம்? அதனை அடைவது எப்படி? காரணமின்றி காரியம் எதுவும் ஏற்படாதென்பது நிச்சயமே. காரணம் இன்றி இது எப்படி ஏற்படும்? இதனை விளக்கிக் கூறுவீர்" என்று கேட்கப் பெற்ற தயாநிதியான தத்தாத்ரேயர் ராமனைப் பார்த்துக் கூறினார்.

भार्गवं शृणु ते वक्ष्ये श्रेयसः परमोद्भवम् ॥ ५०॥
परा सा या चितिर्देवी स्वस्वातन्त्र्यस्य वैभवात् ।
स्वात्मन्येव जगच्चित्रं दर्पणप्रतिबिंबवत् ॥ ५१॥

பரசுராமரே! மேன்மைக்கு முக்கியமான காரணத்தைக் கூறுகிறேன். கேளும். அந்த பரசித்தே தனது தனித்த தன்னிஷ்டப்படி இயங்கும் சக்தியின் பெருமையால் தன்னிடத்திலேயே இந்த உலகமாகிற சித்திரத்தை கண்ணாடியில் பிரதிபிம்பம்போல் தோற்றுவிக்கிறாள்.

सैव हैरण्यगर्भाख्यां तनुमास्थाय वै परा ।

अनाद्यज्ञानसंछन्नजीवानां हितकाम्यया ॥ ५२॥
उन्मेषयदागमाब्धिं सर्वकामप्रपूरणम् ।

அந்த பரசித்தே ஹிரண்யகர்ப்ப வடிவை ஏற்று ஆதியற்ற அஞ்ஞானத்தால் அறிவு மறைக்கப்பட்ட ஜீவர்களின் ஹிதத்திற்காக எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றவல்ல வேதக்கடலை வெளிப்படுத்தினாள்.

तत्र जीवाः स्वभावेन विचित्रकामवासनाः ॥ ५३॥
कथं तेषां शुभं भूयादेवं चिन्तापरायणः ।
असृजत्काम्यकर्माणि फलचित्राणि सर्वशः ॥ ५४॥
सदसद्वापि हि जनः करोत्येव स्वभावतः ।

அப்படித் தோன்றிய ஜீவர்கள் இயற்கையில் பலதரப்பட்ட காமவாஸனைகளுடன் கூடியவர்கள். அவர்களுக்கு எப்படி நன்மை ஏற்படும் என்று கவனிப்பதில் ஈடுபட்ட ஹிரண்யகர்ப்பன் (வேதம் மூலமாக) விதவிதமான பலன்களுள்ள (வேள்வி முதலிய) கர்மங்களையு ம் ஏற்படுத்தினான். இயற்கையாகவே மனிதன் நல்லதையோ கெட்டதையோ செய்துகொண்டே இருப்பவன்.

तथा च केनापि कर्मपरिपाकवशेन तु ॥ ५५॥
भ्रमन् योनिविभेदेषु मानुष्यमुपसङ्गतः ।
कामनावशतः काम्ये कर्मण्यभिमुखो भवेत् ॥ ५६ ॥
कामनाया विशेषेण यदेश्वरपरो भवेत् ।
तदैश्वराणि शास्त्राणि प्रसङ्गादवलोकयेत् ॥ ५७॥

பற்பல பிறவிகளில் சுழன்றவன் ஏதேனும் ஒரு நல்வினையின் பரிபாகம் காரணமாக மனிதப் பிறவியை அடைகிறான். பல்வேறு விருப்பங்களுக்கு உட்பட்டு காம்மியமான நற்பணிகளில் ஈடுபடுவான். காமிய கர்மம் நன்கு நிறைவேற இறைவனை வழிபடுவதில் முனைவான். அப்போது இறைவனின் வழிபாட்டிற்கான நூல்களைப் பார்ப்பான்.

काम्यकर्मफलश्रुत्या प्रवृत्तः काम्यकर्मणि ।
विहतस्तत्फलाप्राप्त्या वैगुण्यात् सूक्ष्मकर्मणः ॥ ५८॥
कर्तव्यजिज्ञासयैव कञ्चित्सत्पुरुषं व्रजेत् ।

தனது விருப்பத்தை நிறைவேற்றும் நற்பணி இது என்று பலனைக் கேட்டதனால் அதனைச் செய்ய முனைந்தவன், ஸூக்ஷ்மமான செயல் முறையில் ஏற்பட்ட பிழையால் அந்த குறிப்பிட்ட பயன் கிட்டாததால் மனவருத்தமடைந்தவனாக, இதற்கு என்ன செய்யவேண்டும் என்று அறிய விரும்பி ஒரு நல்ல மனிதனை நாடுவான்.

तत्प्रसङ्गवशात् क्वापि माहात्म्यं शृणुयात् क्वचित् ॥६६॥
महेश्वरस्य च ततः प्राक्पुण्यपरिपाकतः ।
तस्य प्रसादने भूयात् प्रवृत्तिरपि भार्गव ॥६०॥
तस्मात् प्राक्पुण्यपाकेन सत्सङ्गमभिगम्य तु ।
प्राप्नोति श्रेयस्सोपानपंक्तिमत्यन्तदुर्लभाम् ॥६१॥

அவரது கூட்டுறவில் இறைவனின் பெருமையை ஒரு சமயம் கேட்கக்கூடும். முன் செய்த நல்வினைப் பயனாக இறைவனின் வழிபாட்டில் அவனுக்கு ஈடுபாடு ஏற்படலாம். அதனால் முன் செய்த நல்வினைப் பயனாக நல்லோரிணக்கம் ஏற்பட்டு மிகவும் கஷ்டப்பட்டுப் பெறக்கூடிய சிரேயஸ் அடையும் படிகளில் ஏறுகிறான்.

प्रायः सत्सङ्गमूलैव श्रेयःप्राप्तिरुदीरिता ।
क्वचिदुत्कृष्टपुण्येन चोत्कृष्टतपसापि वा ॥६२॥
श्रेयः प्राप्नोति सहसा ह्याकाशफलपातवत् ।

அனேகமான ஸத்ஸங்கம் மூலமாகவே சிரேயஸ்ஸை அடைய முடியும் என்பர். சில சமயத்தில் மிகச் சிறப்புள்ள முன் செய்த நல்வினைப் பயனாகவோ, இந்தப் பிறவியில் செய்த மிகச் சிறப்புள்ள தவத்தாலோ (நல்வினையாலோ) விண்ணிலிருந்து திடீரென எதிர்பாராதபடி பழம் விழுந்து கைக்குக் கிட்டுவதுபோல் சிரேயஸ்ஸை அடைவதும் உண்டு.

तस्मात्कारणवैचित्र्यात् श्रेयःप्राप्तिविचित्रता ॥६३॥
तथा च बुद्धिभेदेन वासनातारतम्यतः ।
साधनानां तारतम्यात् विचित्रा ज्ञानिनां स्थितिः ॥६४॥

அதனால் விதவிதமான காரணம் அமைவதால் சிரேயஸ்ஸை அடைவதும் பலவிதமாகும். அதனால் அறிவு வேறுபாட்டாலும், வாஸனை தாரதம்மியத்தாலும், ஸாதனங்களின் தாரதம்மியத்தாலும் விதவிதமான ஞான நிலை ஏற்படும்.

स्वभावाद्यस्य वै बुद्धेः वासना विरला भवेत् ।
तस्याल्पसाधनेनैच ज्ञानसिद्धिर्भवेदलम् ॥ ६५ ॥
यस्य स्वभावात् संशुद्धं वासना न हि लेशतः ।
तस्य स्वल्पनिमित्तेन भवेत् ज्ञानं महत्तरम् ॥ ६६ ॥

எவனுக்கு இயற்கையாகவே புத்தியை மறைக்கிற முன் வினை வாஸனை குறைவாக உள்ளதோ, அவனுக்கு குறைந்த ஸாதனம் கொண்டே ஞானம் பூர்ணமாக ஸித்திக்கும். இயற்கையிலேயே எவனுக்கு ஞானம் சுத்தமாக இருந்து முன்வினை வாஸனை சிறிதும் இல்லையோ அவனுக்கும் ஸ்வல்பமான காரணத்தாலேயே பேரறிவு ஸித்திக்கும்.

यस्य स्वभावादत्यन्तवासनानिबिडं मनः ।
तस्य ज्ञानं जातमपि समाच्छादितकल्पकम् ॥ ६७ ॥
तेनैव साधितं भूयः चिरादभ्येति पूर्णताम् ।

எவனுக்கு இயற்கையாகவே அதிக வாஸனையால் அடைபட்டுள்ள மனம் உள்ளதோ அவனுக்கு ஞானம் ஏற்பட்டாலும் மறைவுள்ளதாகவே இருக்கும். ஆனாலும் அவன் மேற்கொண்டு தொடர்ந்து ஞானஸாதனை செய்து வந்தால் வெகு நாட்களுக்குப் பிறகு ஞானம் ஸித்திக்கும்.

अत एव ज्ञानिनां तु दृश्यते विविधा स्थितिः ॥ ६८ ॥
चित्तपाकविभेदेन स्थितिभेदो भृगूद्वह ।

பரசுராமரே அதனால்தான் ஞானிகளிடம் பல நிலைகள் காணப்படுகின்றன. சித்த பரிபாகத்திற்கேற்ப நிலை மாறுபாடுகள் ஏற்படும்.

तस्मात् बुद्धो वासनाभिः त्वावृत्तेस्तारतम्यतः ॥ ६९ ॥
ज्ञानं भिन्नं लक्ष्यते हि स्थितिभेदस्तयैव हि ।
राम पश्य स्थितेर्भेदं ज्ञानिनां तु परस्परम् ॥ ७० ॥

ब्रह्मविष्णु महेशानां स्वभावज्ञानिनस्तु ते ।
तेषां पश्य स्थितेर्भेदं स्वभावप्रभवैर्गुणैः ॥ ७१ ॥
नैषां ज्ञानस्य मालिन्यं वक्तुं शक्यं कथञ्चन ।
स्वभावगुण माहात्म्यं भिन्नमेव तथापि हि ॥ ७२ ॥

அதனால் புத்தியில் வாஸனையால் ஏற்படும் மறைப்பில் உள்ள ஏற்றத்தாழ்வினால் ஞானமும் வேறுபட்டுள்ளது; அப்படியே அவர்களது நிலைகளில் வேறுபாடும் உள்ளது. பரசுராமரே! ஞானிகளுக்குள்ளே ஒருவருக்கொருவர் வேறுபட்ட நிலையைக் காண்பாய். பிரும்மா, விஷ்ணு, பரமசிவன் இம்மூவரும் இயற்கையாகவே ஞானிகள், இயற்கையாகவே அமைந்த குணச்சிறப்பால் ஏற்பட்ட அவர்களது நிலை வேறுபாடுகளைக் காண்பீர். இவர்களது ஞானத்தில் மறைப்போ அப்பழுக்கோ கூறமுடியாது. எனினும் இயற்கையான குணச்சிறப்பு வேறுபட்டதே.

यथा ज्ञानिशरीरं तु गौरं न श्यामतां व्रजेत् ।
एवं चित्तस्वभावोऽपि नान्यभावं प्रपद्यते ॥ ७३ ॥
अस्मान् राम तथा पश्य ज्ञानिनोऽत्रिसुतान् स्थितान् ।
दुर्वाससं चन्द्रमसं मां च भिन्नस्थितिं गतम् ॥ ७४ ॥
क्रोधिनं कामिनं त्यक्तसर्वलिङ्गपरिग्रहम् ।

ஞானியின் வெண்மையான உடல் எப்படி கருப்பாக ஆகாதோ, அப்படியே மனநிலையும் வேறுநிலையை அடையாது. அத்திரியின் பிள்ளைகளும் ஞானிகளுமான எங்கள் மூவரையும் பார். துர்வாஸர் கோபம் மிகுந்தவர். சந்திரன் காமம் மிகுந்தவர், நான் எல்லா வர்ண ஆசிரம அடையாளங்களையும் உடைமைகளையும் விட்டவன்.

वसिष्टं पश्य कर्मिष्ठं सनकादींश्च न्यासिनः ॥ ७५ ॥
नारदं भक्तिसंमग्नं कवयन्तं च भार्गवम् ।
दैत्यपक्षसंश्रयिणं गुरुं देवसमाश्रयम् ॥ ७६ ॥
वाग्मिनं च व्यासमपि शास्त्रनिर्माणतत्परम् ।
जनकं पश्य राजानं भरतं त्यागिनं तथा ॥ ७७ ॥
भिन्नस्थितीन् स्वभावेन ज्ञानिनः पश्य चापरान् ।

வஸிஷ்டர் கர்ம வழியில் நிலைத்திருப்பவர். ஸநகாதிகள் எல்லாம் துறந்தவர்கள். நாரதர் பக்திமான், நல்ல கற்பனை வளமுள்ள சுக்ரர் அஸுரர் கட்சியைக் சார்ந்துள்ளவர். பிருஹஸ்பதி தேவர்களைச் சார்ந்தவர், வியாஸர் நல்ல வாக்கு வன்மை உள்ளவர். சாஸ்திரம் எழுதுவதில் ஈடுபாடுள்ளவர். ஜனகர் அரசர். பரதர் தியாகி, இப்படி வேறுபட்ட நிலைகளிலுள்ள ஞானிகளையும் பார்.

रहस्यं ते प्रवक्ष्यामि शृणु भार्गवनन्दन ॥ ७८ ॥
त्रिविधा या वासनोक्ता द्वितीया तत्र या भवेत् ।
कर्मणा मूढतारूपा सा सर्वेभ्योऽपि महत्तरा ॥ ७९ ॥

பிருகு குலம் குதூகலிக்கப் பிறந்தவரே! ஒரு ரஹஸ்யத்தைச் சொல்கிறேன், கேட்பீர். மூன்று வாஸனைகளைப் பற்றி கூறினேன் அல்லவா? அதில் இரண்டாவது வாஸனை கர்ம வாஸனை. அது அறியாமை வடிவமே. அது மற்ற இரண்டைவிடப் பெரிது.

येषां तल्लेशकश्चित्ते नास्ति मेधाविनस्तु ते ।
अपराधविहीनानां तेषां कामादिवासनाः ॥ ८० ॥
अभ्यासेनाविलीनाश्च ज्ञानस्याप्रतिबन्धिकाः ।
ततो वैराग्यादिकं तु न तेषामुपयुज्यते ॥ ८१ ॥

எவர்களுக்கு கர்ம வாஸனையின் வேசமும் ஞான ஸாதனத்தால் அழிந்துவிட்டதோ அவர்கள் அறிவாளிகள். அபராத வாஸனை நீங்கிய அவர்களுக்கு காமவாஸனை பயிற்சியால் க்ஷயாவிட்டாலும் ஞானமடையத் தடையாயிருக்காது. அதனால் வைராக்யம் முதலியவை அவர்களுக்குத் தேவை இல்லை.

न वा भूयोऽपि मननं समाधिश्चोपयुज्यते ।
सकृच्छ्रवणमात्रेण मननं ध्यानमेव च ॥ ८२ ॥
तत्काल ईषत् सम्प्राप्य ज्ञातसन्दिग्धतत्पदाः
भवन्ति जीवन्मुक्तास्ते जनकप्रमुखा इव ॥ ८३ ॥

அவர்களுக்கு அடிக்கடி மனனமோ, தியானமோ, தேவைப்படுவதில்லை. ஒருதடவை சிரவணம் செய்ததுமே முன்னர் இருந்த ஐயம் நீங்கி உடன் ஞானத்தைப் பெற்று ஜனகர் முதலானோர்போல் ஜீவன் முக்தர்கள்

ஆகினார்கள்.

विपरीताभ्यासवशात् नैव तैः क्षपिताः खलु।
कामादिवासनाः सम्यक् सूक्ष्मा निर्मलबुद्धिभिः ॥ ८४॥
अतस्तैस्तत्पदे ज्ञाते चापि पूर्वस्थितास्तु ताः ।
कामादिवासनाः प्राग्वत् प्रवर्तन्ते निरन्तरम् ॥ ८५ ॥

அப்பழுக்கற்ற அறிவுள்ள அவர்களால் (முன்னர் உள்ள காமாதி வாஸனைகளுக்கு) எதிரான பயிற்சிகளின் மூலம் காமாதி வாஸனைகள் அழிக்கப் பெறாததால் ஆத்மநிலை அறிந்தபின்னரும் முன்னிருந்த காமாதி வாஸனைகள் தொடர்ந்து வெளிப்படும்.

न ताभिरीषद्वा बुद्धेः तेषां लोपाभवेत् कचित् ।
विद्वद्भिस्ते हि सम्प्रोक्ताः मुक्ताश्च बहुमानसाः ॥ ८६॥

அவர்களுக்கு அந்த வாஸனைகளால் அறிவு மறைப்பு சிறிதும் ஏற்படுவதில்லை. அவர்கள் பல மனமுள்ள முக்தர்கள் என அறிவாளிகள் கூறுவர்.

*காமம், குரோதம் முதலியதன் வாஸனைகளை வைராக்யம் முதலான ஸாதனைகளால் வெல்லவேண்டும். இவை முன்வினைப் பயனாக ஏற்பட்டவை. ஆனால் ஞானத்திற்கு இவை நேரிடையாக இடையூறு விளைவிப்பவை அல்ல. வைராக்யம் முதலியவற்றால் காமாதி வாஸனைகள் அடக்கப்படாமலிருக்கிற நிலையிலும், ஜீவன் முக்தர்களான இவர்கள் காமியும் கோபியும் ஆக இருந்தாலும் ஞானிகளாகவே இருப்பார்கள். மனநிலை பலதரப்பட்டதென்று ஒரு குறையுள்ளவர்களானதால் பஹுமானஸமுக்தன் என்று குறிப்பிடப்படுவர்.*

राम कर्मवासनाभिः अतिमूढं तु यन्मनः ।
तस्य ज्ञानं नैव भवेत् शिवोदितमपि क्वचित् ॥ ८७॥

கர்ம வாஸனைகளால் மிகவும் அறிவு மறைப்புள்ளவர்களுக்குச் சிவன் உபதேசித்தாலும் அறிவு வராது.

दृढापराधयुक्तानामपि न स्यात्कथञ्चन ।
यस्यापराधयुक्ताऽपि कर्मरूपापि वासना ॥ ८८॥

स्वल्पा कामात्मकाश्चापि बहुलास्तस्य भार्गव ।
बहुलश्रवणैस्तद्वत् मननैश्च समाधिभिः ॥ ८६॥
चिरकालेन विज्ञानं बहुक्लेशेन जायते ।

அபராதவாஸனை திடமாக இருந்தாலும் ஞானம் ஏற்படாது. அபராதவாஸனையும் கர்ம வாஸனையும் ஸ்வல்பமாக இருந்து காமவாஸனை மிகுந்திருந்தால், அதிக அளவில் சிரவணம், மனனம், ஸமாதி இவைகளால் மிகச் சிரமப்பட்டு வெகுநாட்களுக்குப். பின் ஞானம் ஏற்படலாம்.

तस्य व्यवहृतिः स्वल्पा तत्राभ्यासप्रकर्षतः ॥ ९०॥
मनो यदि भवेन्नष्टप्रायं निर्वासनत्वतः।
ज्ञानिनस्त्वीदृशाः प्रोक्ता मध्यमा नष्टमानसाः ॥ ९१॥

அந்நிலை அடைந்தவனுக்கு உடல் வாழ்வதற்கான நடவடிக்கைகள் மிகுவும் குறைவாக இருக்கும். வாஸனை அழிந்ததால் மனம் அனேகமாக அழிந்துவிடும். இத்தகைய ஞானிகள் நஷ்டமானஸர்கள் எனப்படுவர்.

तेषामेव तु केषाञ्चित् अभ्यासस्याप्रकर्षतः ।
वासनाविरलं यस्मात् अनष्टं मानसं भवेत् ॥ ९२॥
समनस्कास्तु ते प्रोक्ताः मन्दज्ञानयुतास्तु वै ।
केवलज्ञानिनस्त्वेते जीवन्मुक्तास्तथेतरे ॥ ९३॥

அவர்களில் சிலருக்கு அப்பியாசம் சிறப்படையாததால் வாஸனையால் அமைதிப்படாத மனம் தன்னை இழக்காது. அதனால் ஞானம் மந்தநிலையில் உள்ளவர்களாகி (மந்த ஞானிகளாகி) ஸமனஸ்கர்களான – மனநிலை இழக்காதவர்களான அவர்கள் கேவல ஞானிகள் – அஜ்ஞானிகள். (ஜீவன் முக்தர்களல்ல) பூர்ண ஞானம் பெற்ற மற்றவர்களே (மத்யம – உத்தம ஞானிகள் மட்டுமே ) ஜீவன் முக்தர்களாவர்.

இந்த மூன்று நிலைகளில் உள்ள ஞானிகளுக்கு கர்மபந்தம் எப்படி அமையும் என்பதை இனி விளக்குகிறார் ஸ்ரீ தத்தர்.

केवलज्ञानिनो दृष्टदुःखभाजो भवन्ति हि ।
प्रारब्धतन्त्रास्ते प्रोक्ताः देहान्ते मुक्तिभागिनः ॥ ९४॥

கேவல ஞானிகள் உலக அனுபவத்தில் உள்ள துக்கத்தை உணர்பவர்களாக இருப்பார்கள். பிராரப்தத்தின் வசப்பட்டவர்களாக வாழ்ந்து உடல் அழியும்போது முக்தி அடைவர்.

ये नष्टमानसाः प्रोक्ताः तैः प्रारब्धं पराकृतम् ।
मनोभूमौ तु प्रारब्धबीजं भोगाङ्कुरं भवेत् ॥ ६५ ॥
मनोभूमेरभावेन तत्प्रारब्धं तु कालतः ।
कुसूलस्थं बीजमिव विनश्येन्नष्टशक्तिकम् ॥ ६६ ॥

நஷ்டமானஸர்கள் என முன் குறிப்பிடப்பட்டவர்களால் பிராரப்தவினை வெல்லப்பட்டுவிட்டது. மனம் என்ற நிலத்தில் தான் பிராரப்தம் என்ற வினை விதை விதைக்கப்பட்டு போகம் எனும் முளையாக முளைக்கிறது. மனம் எனும் நிலம் இல்லாததால் பிராரப்த வினை, குதிரினுள் சேமித்துவைக்கப்பட்ட விதைநெல் வெகுகாலம் இருந்ததால் சக்தி இழந்துவிடுவதுபோல், சக்தி இழந்துவிடும்.

பஹுமானஸர்கள் என்று முன் குறிப்பிட்டவர்களை விளக்குகிறார்.

यथाऽत्यन्तसुमेधावी युगपद् दश पञ्च च ।
कार्याणि कुरुते क्वापि भवेदस्खलितोऽपि च ॥ ६७ ॥
भूय एवंविधा दृष्टाः क्रियानैपुण्यसंश्रयाः ।
यथा गच्छन् वदन् कुर्वन् युगपल्लक्ष्यते जनः ॥ ६८ ॥
तत्र चैकेन मनसा कथं स्यात् त्रिविधा क्रिया ।
अध्येतृणां बहूनां च युगपल्लक्षयेद्गुरुः ॥ ६६ ॥
अपभ्रंशानुच्चरितं वर्णभेदव्यवस्थितम् ।

மிகவும் அறிவாளியானவன் ஒரேசமயத்தில் 5–10 காரியங்களை ஒரு செயலிலும் தவறின்றி செய்கிறான் அல்லவா? எப்படி செயல் திறனை ஒட்டியவை பல ஒரே கனத்தில் காணப்படுகின்றன? நடந்துகொண்டிருக்கிற போதே பேசிக்கொண்டும் வேறு செலாற்றிக்கொண்டும் மக்கள் காணப்படுகின்றனர். ஒரே மனத்தால் எப்படி மூன்று செய்கைகள் நிகழும்? பலர் தன்னிடம் கற்கும்போது, ஒவ்வொருவரின் தனிப்பட்ட உச்சரிப்பு, உச்சரிப்பில் விடப்பட்ட எழுத்து, எழுத்து மாறுபாடு முதலிய பிழைகளை ஆசிரியர் கண்டு கொள்கிறாரல்லவா?

राम यस्ते हतः शत्रुरर्जुनो हैहयाधिभः ।।१००।।
सहस्रबाहुर्युगपत् हेतिभिः बहुभिः पृथक् ।
अयुध्यदस्खलन् क्वापि मेधावी दृष्ट एव ते ।। १०१।।

ராமரே! உம்மால் கொல்லப்பட்ட ஆயிரம் கைகள் படைத்த ஹேஹய தேசத்தரசன் அர்ஜுனன் ஒரேசமயத்தில் பல ஆயுதங்களுடன் எங்கும் தட்டிக்கெடாமல் பலருடன் சண்டையிட்டான். அந்த மேதாவி உனக்கு அறிமுகமானவனே. தத்தரின் சீடன் அர்ஜுனன். அர்ஜுனனைக் கொன்ற பரசுராமர் தத்தரின் சீடராகியுள்ளார். ஞானிகளின் போக்கு விசித்திரமானது.

तेषां मनो बहुविधं भूत्वा तत्तत्क्रमानुगम् ।
यथाकार्यं बहुविधं साधयेत्तद्वदेव हि ।। १०२।।
उत्तमज्ञानिनां आत्मदृष्टिः बाह्यगतापि च ।
अविरुद्धा सर्वदा स्यात् येषां ते बहुमानसाः ।। १०३।।

அர்ஜுனன் முதலானோரது மனம் அவர்கள் ஈடுபடுகிற செயல் நிறைவேறு-வதற்கு உதவக்கூடிய செயல்புரிவதாக ஆகி பலவிதச் செயல்களை சாதிக்கிறது. அதுபோல், உத்தமஞானிகளது ஆத்ம வடிவில் அமைந்த மனம் வெளியிலுள்ள விஷயங்களை அடைந்த போதும் முரண்படாதபடி எப்போதும் அமைந்திருக்கும். அதனால் அவர்கள் பலமனம் கொண்டவர்களாகவும் இருப்பார்கள்.

तत्प्रारब्धं मनोभूमौ भवेदङ्कुरितं पृथक् ।
भवेत् ज्ञानाग्निा दग्धं भूतं भूतं पुनः पुनः ।। १०४।।
प्रारब्धबीजांकुरः स्यात् सुखदुःखसमागमः ।
तद्विमर्शः फलं प्रोक्तं कुतो दग्धांकुरे फलम् ।। १०५।।

அவர்களது பிராரப்த வினையும் மனமாகிய விளைநிலத்தில் முளைவிடும். ஆனால் அது முளையாக வெளிவர வெளிவர ஞானம் எனும் தியால் எரிக்கப்பட்டுவிடும். பிராரப்த வினையின் முளையே ஸுகதுக்கங்களை இணைக்கும். அந்த ஸுகதுக்கங்களை உணர்ந்து வேதனைப்படுவதே அதன் காய் ஆகும். முளையே வறுபட்டபின் காய் எப்படித் தோன்றும்?

आहृतैरनुसन्धानैस्तेषां व्यवहृतिर्भवेत् ।
यथा प्रौढो हि बालेन सह खेलन् हि दृश्यते ।। १०३।।

हृष्टो विषण्णश्च शिलागजादीनां विनाशने ।
एवं हृष्यन्ति सीदन्ति कार्येषु बहुमानसाः ॥ १०७ ॥

செயற்கையாக வரவழைக்கப்பெற்ற உணர்வுகளால் அவர்களுடைய நடவடிக்கைகள் உருவாகும். வயதால் முதிர்ந்தவன் சிறுவனுடன் விளை–யாடுகிறபோது அதனால் மகிழ்பவனாகவும் யானை பொம்மை முதலியவற்றின் அழிவில் வருந்துபவனாகவும் காணப்படுவான். அப்படி செயற்கையாக பஹுமானஸர்கள் மகிழ்ச்சியையும் வருத்தத்தையும் அடைகிறார்கள்.

यथाऽन्यकार्यसक्तस्य हर्षोद्वेगौ न चान्तरौ ।
एवं तेषां व्यवहृतौ समा सर्वत्र संस्थितिः ॥ १०८ ॥

வேறொருவனது காரியத்தில் ஈடுபட்டவன் அதனது வெற்றி தோல்விகளால் மகிழ்ச்சியையோ பரபரப்பையோ மனத்தளவில் அடையமாட்டான். அப்படியே ஞானிகளின் நடவடிக்கையில் எல்லாவற்றிலும் மகிழ்ச்சி – வருத்தம் இல்லாத ஸமநிலை காணப்படும்.

मेधाविनां ज्ञानिनां तु वासनानाशहेतवे ।
विरुद्धवासनाभ्यासनिरोधादेरभावतः ॥ १०९ ॥
अनुवृत्तिर्भवेत् पूर्ववासनाऽनाशहेतुतः ।
अतः केचित्कर्मनिष्ठाः कामिनः क्रोधिनोऽपरे ॥ ११० ॥
उत्तमज्ञानिनो भान्ति विविधाचारतत्पराः ।

அறிவாளிகளான ஞானிகள் வாஸனை அழிவதற்காக, அழிக்க வேண்டியதற்கு எதிரான வாஸனைகளை அப்பியசித்தல், ஸமாதி முதலியவைகளைக் கடைப்பிடிக்காதிருந்தால், முன் வாஸனை அழியாமல் தொடர்ந்து காணும். அதனால்தான் ஞானிகளும் கர்ம நிஷ்டர்களாகவும், காமிகளாகவும், கோபிகளாகவும், காணப்படுகிறார்கள்.

समनस्कस्तत्र यो वै मन्दज्ञानी निरूपितः ॥ १११ ॥
तेनापि वेद्यमखिलं असत्यत्वेन निश्चितम् ।
स्वरूपवित्तौ नो किञ्चिद्भासते हि समाधिषु ॥ ११२ ॥

மந்த ஞானிகள் ஸமனஸகர்களாக இருந்தாலும் அறிவால் காணப்படும் பொருள்கள் அனைத்தும் உண்மையல்ல என்று நிச்சயித்து உணர்ந்துள்ளபடியால் அவர்களது ஸமாதி நிலையில் ஆத்ம ஸ்வருப ஞானம் ஏற்பட்டதும் அதில் மற்றதெதுவும் புலப்படுவதில்லை.

*மந்தஞானிக்கு மனஅழிவு இன்னவும் ஏற்படாததால் வியவஹார தசையில் வேத்ய (அறிவால் உணரப்படுவது) ஞானம் இருக்கும். ஆனால் வேத்யம் அனைத்தும் அஸத்தியம் என்ற நிச்சயம் ஏற்பட்டுள்ளது. ஆகாயத்தில் காண்கிற நிறம் ஆகாயத்துடைய நிறம் அல்ல. அது தோற்றத்தளவில்தான் உண்மை. உண்மையில் ஆகாயத்திற்கு நிறமே கிடையாது என்று நிச்சயமாக உணர்ந்த ஒருவன் ஆகாயத்தைக் காணும்போது நீல நிறத்தை அவன் கண்டாலும் அது உண்மையல்ல என்ற எண்ணத்தோடு பார்ப்பதால் அது ஒரு பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லை. அது போல் மனநாசம் ஏற்படாதிருந்தாலும் மந்தஞானி வேத்தியம் அனைத்தும் அஸத்தியம் என்ற நிச்சய ஞானம் கொண்டவன். அதனால் ஸமாதியில் அவன் ஆத்மாவை உணரும்போது வேறு எதுவும் வேத்யமாகப் புலப்படாது.*

समाधिर्वै स्वरूपस्य विमर्शो नान्य उच्यते ।
निर्विकल्पस्वरूपं तु सर्वाश्रयतया सदा ॥ ११३॥
स्फुरत्येव हि सर्वेषां तदस्फूर्तौ न किञ्चन ।
तथा विकल्पविकलं स्फुरेत्प्रोक्तदशासु च ॥ ११४॥

ஸமாதி என்பது ஆத்மஸ்வரூபத்தின் இடைவிடாத அனுஸந்தானமாகும். (ஒன்றுமே துலங்காத ஜடஸமாதி அல்ல). எல்லாவற்றிற்கும் ஆசிரயமாக ஆத்மாவின் நிர்விகல்பஸ்வரூபம் எப்போதும் எல்லோருக்கும் பிரகாசித்துக்கொண்டுதான் இருக்கிறது. அது விளங்காவிடில் ஒன்றுமே இல்லை. விகல்பமற்ற நிர்விகல்ப வடிவம் இரு ஞானங்களின் இடையே எப்போதும் பிரகாசித்துக்கொண்டு தான் இருக்கும்.

तावता न हि सर्वेषां समाधिः स्याद्धि भार्गव ।
ये तद्विमर्शसंयुक्ताः स तेषामेव संस्मृतः ॥ ११५॥

நிர்விகல்பக ஆத்மஸ்வரூபம் இருந்தால் மட்டும் எல்லோருக்கும் ஸமாதி நிலை கூடிவராது. ஆத்மஞானத்தின் விமரிச ரூபமான இடையறாத அனுஸந்தானமிருந்தால் ஸமாதி ஏற்படும்.

*ஸமாதியை இருவகையில் அடையலாம். முதலாவது – சிரவணம் மனனம் இவைகளால் ஆத்மாவல்லாத பொருள்களைப் பற்றி எண்ணங்களை அகற்றி சிறிது சிறிதாக விகல்ப ஞானங்களிலிருந்தும் விடுபட்டு அஷ்டாங்க யோக ஸாதனையால் விகல்பமற்ற ஆத்மஸ்வரூப ஸாக்ஷாத்காரம் கிடைத்ததும் நிர்விகல்பகம் என்ற எண்ணத்தையும் விட்டு ஆத்மாவாகவே இருப்பதை ஸமாதி என்பர். இரண்டாவது ஹடயோக முறையில் பிராணயாமாப்பியாஸத்தால் பிராணவாயு இடை பிங்களை நாடிகளில் ஸஞ்சரிப்பதைக் கட்டுப்படுத்தி ஸுஷும்னையில் புகுத்தி பாரம் நீங்கிய உணர்ச்சியுடன் மூர்ச்சையுற்றவன் மனத்தை இழப்பதுபோல், மனத்தை இழந்து விகல்பமற்ற ஆனந்தமாக ஸமாதிநிலை அடைகிறான். ஹடயோகத்தால் ஏற்படும் ஸமாதியில் ஞானத்தால் அஜ்ஞானத்தின் ஆவரணத்தை விளக்குவது என்ற நிலையில்லை. மனவிக்ஷேபம் நின்றுவிடுவது மட்டுமே, ஆவரணம் விலகாததால் ஸமாதியிலிருந்து எழுந்ததும் அஜ்ஞானத்தின் ஆவரணம் தலைப்பட்டு, ஆத்மாவற்றதை ஆத்மாவாக நினைக்கிற வாஸனை அவனைச் சூழ்ந்துவிடும். ஸமாதி நிலையிலும் ஆத்மஸ்வரூப அனுஸந்தானம் இராததால் ஞானிக்கு ஏற்படும் ஒளிமயமான ஞானஸுகம் போன்றிராமல், கள் குடித்தவனுக்கு ஏற்படுவது தாமோகுணத்தால் போன்ற இருள்படிந்த அஜ்ஞானஸுகமே ஏற்படும். இது ஜட ஸமாதி – அதனால் ஆத்மானுஸந்தானம் என்கிற விமர்சமில்லாத ஸமாதி ஜடஸமாதி என்கிறார் தத்தர். ஜட ஸமாதியிலும் மனம் ஜடமாகி விகல்பத்திற்கு வழி இல்லாதபடியால் நிர்விகல்பக ஆத்மா தோன்றுவான் எனில் அந்தத் தோற்றத்தை உணர்வது – அனு ஸந்தானம் என்பது ஏற்படாததால் ஆத்மானுபவம் ஏற்படாது.*

व्यवहारपरा वित्तिरपि वेद्यविवर्जिता ।
विदितं नाभसं नैल्यं यथा भूयोऽवलोकने ॥ ११६ ॥
असत्यत्वेन विज्ञातं न वित्तिस्तेन संयुता ।

(உத்தம ஞானிகள்) வியவஹாரத்தில் ஈடுபட்டிருந்தாலும் அவர்களது ஞானத்தில் உணரத்தக்க விஷயம் காணாது. ஆகாயத்தில் உண்மையில் அதன் குணமாக இராத நீல நிறம் மறுபடியும் (நீல நிறத்துடன் ஆகாயத்தைப்) பார்க்கப்படும்போது உண்மையானதல்ல என்று உணரப்படும். அதுபோலவே ஞானியின் ஞானத்தில் ஞேயம் கலந்திராது.

अन्यथा नैव भेदःस्यात् तत्त्वतत्त्वविभासयोः ॥ ११७ ॥
तथाऽसत्यगृहीतस्य वेद्यस्य न हि वेदने ।

संबन्धः कुत्रचिद्वा स्यात् ज्ञानिनामत एव हि ॥ ११८ ॥
वेद्यहीना भवेद्वित्तिः बाधितस्य विभासनात् ।

இப்படி இல்லாமலிருந்தால் தத்துவ ஞானத்திற்கும் தத்துவ ஞானமின்மைக்கும் வேற்றுமையே ஏற்படாது. பொய்யென உணர்ந்த விஷயத்தை வியவஹார தசையில் காண்கிறபோது, மெய்யான பொருளுடன் அந்தப் பொய் எப்படி ஒட்டும்? அதனால் ஞானிக்கு , ஞானமானது ஞானத்தால் உணரப்படும் பொருளின்றியே துலங்கும். உணரப்படும் பொருள் பொய்யென முன்னதாகவே உணரப்பட்டுவிட்டபடியால் இது.

ஆகாயத்திற்கு இயற்கையாக நீல நிறம் கிடையாது. ஆனால் தோற்றத்தில் நீல நிறம் காண்கிறது. வியவஹாரத்தில் நீலமான ஆகாயம் என்றே குறிப்பிடுகிறோம். இப்படிக் குறிப்பிடுகிற போது நீல நிறம் பொய்யென்ற எண்ணமும் கூட இருப்பதால் ஆகாயத்தின் நீலம் பாதிப்படைந்தது. நீலம் சிகப்பானாலோ, நீலமாகவே இருந்தாலோ, நீலமற்றதாகக் காணப்பட்டாலோ – ஞானம் பாதிப்படைவதில்லை.

*நாடகத்தில் நடிப்பவனை இன்னார் என்று அறிந்திருப்பவன், அவன் போட்டிருக்கும் வேஷத்தையும், நடிப்பிற்காக அவன் சிரிப்பதையும், அழுவதையும் பொருட்படுத்தமாட்டான். அவன் அழுவதற்காகத் தான் அழமாட்டான். இது நடிப்பு என்று அறிந்தவன் நடிப்பினால் பாதிப்படைய மாட்டான். அதுபோல் ஞானி கண்ணால் ஒன்றை உணர்ந்தாலும் உணர்ந்தது பொய், அது அதன் மெய்த் தோற்றமல்ல. சித் ஒன்றே ஸத்யம் என்ற உணர்வுடனேயே பார்ப்பதால் அதிலுள்ள வேத்யத்தின் விகல்பம் அவனிடம் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது.*

*நடிப்பு என்று உணராமல் நாடகமே ஸத்தியம் என்று உணர்பவனும், இது நடிப்பு என்று உணர்ந்து இது ஸத்யமல்ல என்று உணர்பவனும், ஒரே பொருளைப் பார்த்தாலும் அதனால் ஏற்படும் தத்துவ ஞானத்தில் வேறுபாடு இருப்பது நியாயம்தானே!*

अमनस्कस्य सुतरां यतः सा चोन्मनी दशा ॥ ११९ ॥
मनो वै निश्चलं तत्र तदुक्तं चोन्मनी दशा ।
मनसश्चलनं तत्स्यात् सत्यवेद्यस्य सङ्गतिः ॥ १२० ॥
उत्तमज्ञानिनश्चैते दशे युगपदास्थिते ।
स सर्वथा व्युत्थितश्च समाधिस्थश्च भार्गव ॥ १२१ ॥

மத்திய ஞானியாகிய நிர்மனஸ்கனுக்கு மன வியாபாரம் ஏற்படும் நிலைக்கு மேம்பட்ட உன் மனீ நிலை ஏற்பட்டுவிட்டதால், ஞானத்தில் ஞானத்தால் உணரப்படும் வேத்தியத்தின் ஸம்பந்தமே இராது. அவனுக்கு மனம் சலனமற்றிருக்கும். அதுவே உன்மனீ எனும் நிலை. அஸத்யமானதை ஸத்தியமானதென உணர்ந்து தொடர்புகொள்வதால் மனத்திற்குச் சலனம் எனப்படும். உத்தம ஞானிக்கு ஸமாதியில் இருப்பதெனும் நிலையும், ஸமாதியிலிருந்து எழுந்த உலகத்தோடு இருப்பதும் ஒரே சமயத்தில் இருக்கும்.

*உத்தம ஞானிகள் ஸமாதி நிலையில் எந்த ஆத்மானு ஸந்தானத்தில் திளைக்கிறார்களோ அதே ஆத்மானுஸந்தானத்தில் ஸமாதியிலிருந்து எழுந்து உலகத் தொடர்புகொள்ளும்போதும் இருப்பர்.*

तस्मात्तस्यापि वेद्येन रहिता वित्तिरास्थिता ।
एवमेतद्धि संप्रोक्तं पृष्टं यद्यत्पुरा त्वया ॥ १२२ ॥

इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
ज्ञानिस्थितिविभेदकथनं नाम एकोनविंशोऽध्यायः ।

உத்தம ஞானிக்கு முன் கூறிய இரு நிலைகளும் வேத்தியத் தொடர்பில்லாத ஞானமாகவே நிலைத்திருக்கும். உம்மால் கேட்கப்பட்டவற்றிற்கு உரிய சமாதானம் இப்போது சொல்லப்பட்டது.

***இவ்வாறு திரிபுரா ரஹஸ்யம் ஞான கண்டத்தில் ஞானியின் நிலை வேறுபாடுகள் பற்றிய பத்தொன்பதாவது அத்தியாயம்.***

# विंशोऽध्यायः

## இருபதாவது அத்தியாயம்

अत्र ते वर्तयिष्यामि पुरा वृत्तं शृणुत्व तत् ।
पुरा ब्रह्मसभामध्ये सत्यलोकेऽतिपावने ॥ १
ज्ञानप्रसङ्गः समभूत् सूक्ष्मविमर्शनः ।

**இங்கு உமக்கு முன் நடந்தநொன்றை விளக்குகிறேன். கேளும். முன் மிகப்புனிதமான ஸத்யலோகத்தில் பிரும்ம ஸபையில் நுட்பமான தத்துவ விளக்கத்திற்கு உதவும் ஞானக் கருத்துரை நடந்தது.**

सनकाद्या वसिष्ठश्च पुलस्त्यः पुलहः क्रतुः ॥ २॥
भृगुरत्रिरंगिराश्च प्रचेता नारदस्तथा ।
च्यवनो वामदेवश्च विश्वामित्रोऽथ गौतमः ॥ ३॥
शुकः पाराशरो व्यासः कण्वः काश्यप एव च ।
दक्षः सुमन्तुः शङ्खश्च लिखितो देवलोऽपि च ॥ ४॥
एवमन्ये ऋषिगणाः राजर्षिप्रवरा अपि ।
सर्वे समुदितास्त्र ब्रह्मसत्रे महत्तरे ॥ ५॥
मीमासां चक्रुरत्युच्चैः सूक्ष्मात्सूक्ष्मनिरूपणैः ।
ब्रह्माणं तत्र पप्रच्छुः ऋषयः सर्व एव ते ॥ ६॥

***ஸனகர் முதலான நால்வர், வஸிஷ்டர், புலஸ்தியர், புலஹர், கிரது, பிருகு, அத்ரி, அங்கிரஸ், பிரசேதஸ், நாரதர், சியவனர், வாமதேவர், விச்வாமித்ரா, கௌதமர், சுகர், பராசரர், வ்யாஸர், கண்வர், காசியபர், தக்ஷர், ஸுமந்து, சங்கர், லிகிதர், தேவலர், மற்றும் பல ரிஷிகள், ராஜ ரிஷிகள், மிகப் பெரிய ஞான வேள்வி நடக்கையில் கூடி நுட்பமான விளக்கத்துடன் தத்துவ விசாரம் செய்தார்கள். அவர்கள் அனைவரும் பிரும்மாவைக் கேட்டனர்.***

भगवन् ज्ञानिनो लोके वयं ज्ञातपरावराः ।
तेषां नो विविधा भाति स्थितिः प्रकृतिभेदतः ॥ ७॥
केचित्सदा समाधिस्थाः केचिन्मीमांसने रताः ।
अपरे भक्तिनिर्मग्नाः चान्ये कर्मसमाश्रयाः ॥ ८॥

व्यवहारपरास्त्वेके बहिर्मुखनरा इव ।
तेषु श्रेयान् हि कतमः एतन्नो वक्तुमर्हसि ॥ ६ ॥
स्वस्वपक्षं वयं विद्मः श्रेयांसमिति वै विधे ।

இறைவ! நாங்கள் ஞானிகளே. மேலானதையும் கீழானதையும் அறிந்தவர்களே. இருந்தும் எங்கள் நிலை இயற்கை அமைப்பின் வேற்றுமையால் பல்வேறு விதமாக அமைந்துள்ளது. சிலர் எப்போதும் ஸமாதியில் நிலைத்துள்ளவர்கள். சிலர் தத்துவ விசாரத்தில் ஈடுபட்டவர். சிலர் பக்தியில் மூழ்கியவர், சிலர் கர்மாக்களையே நம்பியிருப்பர். சிலர் பாமரர்களைப்போல் உலக வியவஹாரத்தில் ஈடுபட்டவர். இவர்களில் எவர் சிறந்தவர்? நாங்கள் தம் தம் வழியையே சிறந்ததாகக் காண்கிறோம்.

इति पृष्टोऽवदद् ब्रह्मा मत्वाऽनाश्वस्तमानसान् ॥ १० ॥
मुनीन्द्रा नाहमप्येतद् वेद्मि सर्वात्मना ततः ।
जानीयादिममर्थं तु सर्वज्ञः परमेश्वरः ॥ ११ ॥
तत्र यामोऽथ सम्प्रष्टुं इत्युक्त्वा तत्र तैर्ययौ ।

இவ்வாறு கேட்கப்பட்ட பிரும்மா, அவர்கள் நம்பிக்கையை இழந்தவர்கள் எனக் கண்டு, கூறினார் – முனிவர்களே! நானும் இதனைப் பூர்ணமாக அறிந்தேனில்லை. இதனை எல்லாமறிந்த பரமேச்வரன்தான் அறியக்கூடும். அவரைக் கண்டு கேட்டுத்தெரிந்து கொள்ளச் செல்வோம் என்று கூறி அவர்களுடன் அங்கு சென்றார்.

सङ्गम्य देवदेवेशं विष्णुनाभिसमागतम् ॥ १२ ॥
पप्रच्छ ऋषिमुख्यानां प्रश्नं तं लोकसृड् विधिः ।
प्रश्नं निशम्य च शिवो ज्ञात्वा विधिमनोगतम् ॥ १३ ॥
मत्वाऽनाश्वस्तमनसः ऋषीन् देवो व्यचिन्तयत् ।

விஷ்ணுவுடன் இணைந்து நிற்கும் பரமேச்வரனை அடைந்து உலகத்தைப் படைப்பவரான பிரும்மா ருஷித் தலைவர்களின் பிரச்சனைகளைப் பற்றிக் கேட்டார். பிரும்மாவின் மனத்திலுள்ள கேள்வியை நன்கு அறிந்துகொண்ட சிவன், ருஷிகள் நம்பிக்கையடையாதவர்களாக இருப்பதை உணர்ந்து யோசித்தார்.

किञ्चिदुक्तं मयाऽत्रापि व्यर्थमेव भवेन्ननु ।। १४ ।।
स्वपक्षत्वेन जानीयुः ऋषयोऽश्रद्धया युताः ।
इति मत्वा प्रत्युवाच देवदेवो महेश्वरः ।। १५ ।।

நான் இவ்விஷயத்தில் எது கூறினாலும் அத்தனையும் வீணே. ருஷிகள் நம்பிக்கையற்றவர்களாயிருப்பதால் அதை என் கருத்தென்றே கொள்வர் என்று கருதிய தேவர்கள் தலைவனான சிவன் சொன்னார்.

शृणुध्वं मुनयो नाहमप्येतद्वेद्मि सुस्फुटम् ।
अतो विद्या भगवतीं व्यायामः परमेश्वरीम् ।। १६ ।।
तत्प्रसादान्निगूढार्थमपि विद्मस्ततः परम् ।
इत्युक्ता मुनयः सर्वे विधिविष्णुशिवैः सह ।। १७ ।।
दध्युर्विद्यां महेशानीं त्रिपुरां चिच्छरीरिणीम् ।
एवं सर्वैरभिध्याता त्रिपुरा चिच्छरीरिणी ।।१८ ।।
आविरासीच्चिदाकाशमयी शब्दमयी परा ।
अभवद् मेघगंभीरनिःस्वनो गगनांगणे ।। १९ ।।

மஹரிஷிகளே! கேளுங்கள். நானும் இதனை தெளிவாக அறிந்தேனில்லை. அதனால் நாம் பேரறிவு வடிவினளான பகவதியான பரமேசுவரியைத் தியானம் செய்வோம். அவளருளால் மிகவும் மறை பொருளாயிருப்பதான பரதத்துவத்தை அறிவோம். இவ்வாறு கூறப்பட்ட முனிவர் அனைவரும் பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களுடன் மஹேச்வரியும் திரிபுரையும் பேரறிவையே வடிவாகக் கொண்டவளுமான ஸ்ரீ வித்யா தேவியை தியானம் செய்தனர். இப்படி எல்லோராலும் தியானம் செய்யப்பட்ட பேரறிவு கொண்ட திரிபுரா தேவி எல்லோருடைய முன்னர் தோன்றினாள். அவள் பரதேவதை. சித்தாகிய பெருவெளியாக உள்ளவள். எல்லாவற்றிற்கும் முற்பட்ட பேரொளி வடிவினள், அப்போது ஆகாயவெளியில் மேகத்தின் இடி போன்ற தெளிவான ஒலி ஏற்பட்டது.

वदन्त्वृषिगणाः किं वो ध्याता तद् द्रुतमीहितम् ।
मत्पराणां हि केषांचिन्न हीयेताभिवाच्छितम् ।। २० ।।
इति श्रुत्वा परां वाणीं प्रणेमुर्मुनिपुङ्गवाः ।
ब्रह्मादयोऽपि तदनु तुष्टुवुर्विविधैः स्तवैः ।। २१ ।।
अथ प्रोचुः ऋषिगणाः विद्यां तां त्रिपुरेश्वरीम् ।

"ருஷிகளே! எதற்காக நான் தியானிக்கப்பட்டேன்? உங்கள் விருப்பத்தை வேகமாகச் சொல்லுங்கள். என்னை நம்பியவர்களுக்கு விரும்பியதெதுவும் அளவில் குறையாது." இப்படி வந்த அசரீரி சொல்லைக் கேட்டு ருஷிகள் வணங்கினார்கள். பிரும்மா முதலானோரும் அவளைத் தொடர்ந்து பல துதிகளில் வணங்கினார்கள் பின்னர் ருஷிகள் அந்த ஸ்ரீவித்யா திரிபுரேச்வரியிடம் சொன்னார்கள்.

नमस्तुभ्यं महेशानि श्रीविद्ये त्रिपुरेश्वरि ॥ २२॥
अशेषोत्पादयित्री त्वं स्थापयित्री निजात्मनि ।
विलापयित्री सर्वस्य परमेश्वरि ते नमः ॥ २३।

மகேசி! ஸ்ரீ வித்யா திரிபுரேச்வரி! உனக்கு நமஸ்காரம், நீயே எல்லாவற்றையும் படைத்தவள். தன்னை ஆசிரயமாக்கிக் கொண்டு அதில் உலகை நிலைபெறச் செய்தவள். எல்லாவற்றையும் கரைந்து மறைப்பவள். உனக்கு வணக்கம்.

अनूतना सर्वदासि यतो नास्ति जनिस्तव ।
नवात्मिका सदा त्वं वै यतो नास्ति जरा तव ॥ २४॥

எப்போதும் நீ புதியவளல்ல. ஏனெனில் உனக்கு பிறப்பு கிடையாது. உனக்கு மூப்பு இல்லாமையால் எப்போதும் புதியவளாக காணப்படுகிறாய்.

सर्वाऽसि सर्वसारासि सर्वज्ञा सर्वहर्षिणी ।
असर्वाऽसर्वगाऽसाराऽसर्वज्ञाऽसर्वहर्षिणी ॥ २५॥

நீயே எல்லாமாயிருக்கிறாய் எல்லாவற்றின் ஸாரமாயிருக்கிறாய். எல்லாம் அறிந்தவள். எல்லா மகிழ்ச்சிகளையும் கொண்டவள். அதே சமயத்தில் எல்லாமாயும் இல்லாதவள். எதனிலும் இல்லாதவள். எல்லாவற்றின் ஸாரமுமல்ல. எதையும் அறிந்தவளுமல்ல. எந்த மகிழ்ச்சியும் கொண்டவளுமல்ல.

*தேவியின் பெருமையை விளக்குகிறார்கள். கண்ணாடி தன்னுள் தோற்றுவ–தனைத்து வடிவத்திலும் இருப்பதுபோல் தேவி தன்னுள் தோன்றும் உலகமனைத்தின் வடிவமாக இருக்கிறாள். உண்மையில் அவள் அவற்றுள் எதுவாயும் இல்லை. எல்லாவற்றையும் ஆட்டிப்படைப்பவளானதால் அவளே ஸாரம். மற்றவை பதர். ஆனால் எல்லாவற்றிலும் எங்கோ இருந்தாலல்லவா*

*இது ஸாரம் இது பதர் என்று விளக்க. இவளே எல்லாமானதால் ஸாரமெனத் தனித்துக் குறிப்பிட இயலாது. தன்னைவிட வேறுபட்டதொன்றுமில்லாததால் எதனையும் தனித்து அறியமாட்டாள். ஸ்வாதந்திரியம் எவ்வளவு உள்ளதோ அவ்வளவு ஆனந்தம் உண்டு. பரவ்சமாயின் துக்கமே. அவள் வசத்தில் உலகமனைத்தும். அதனால் எல்லாவற்றின் ஆனந்தத்தையும் எல்லா ஆனந்தத்தையும் அவளே அனுபவிப்பவள். பூர்ண ஆனந்த ஸ்வரூபமானதால் சில்லரை ஆனந்த வடிவில் அவள் இல்லை. இப்படி முரண்பட்டதுபோன்ற தோற்றமுள்ளவள் தேவி.*

देवि भूयो नमस्तुभ्यं पुरस्तात्पृष्ठतोऽपि च ।
अधस्तादूर्ध्वतः पार्श्वे सर्वतस्ते नमो नमः ॥ २६ ॥
ब्रूहि यत्ते परं रूपमैश्वर्यं ज्ञानमेव च ।
फलं तत्साधनं मुख्यं साधकं सिद्धमेव च ॥ २७ ॥
सिद्धेस्तु परमां काष्ठां सिद्धेषूत्तममेव च ।
देव्येतत्क्रमतो ब्रूहि भूयस्तुभ्यं नमो नमः ॥ २८ ॥

தேவி! உங்களுக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம். உங்கள் முன்புறத்திலும் பின்புறத்திலும் மேலும் கீழும் இருபக்கங்களிலும் எல்லாவிடத்திலும் நமஸ்காரம். உங்கள் பரமான ரூபம், அபரமான ரூபம், பெருமை, உம்மைப்பற்றிய ஞானம், அதன்பலன், அதற்கான முக்கிய ஸாதனம், ஞானத்தால் ஸித்தமாகக் கூடியது, ஸித்தியின் பேரெல்லை, ஸித்தி பெற்றவர்களில் மிகச் சிறந்தவர், இவைகளைப் பற்றி வரிசையாகக் கூறுங்கள் ! மறுபடியும் உங்களுக்கு வணக்கம்.

इत्यापृष्टा महाविद्या प्रवक्तुमुपचक्रमे ।
दयमाना ऋषिगणे स्पष्टार्थं परमं वचः ॥ २६ ॥

இவ்வாறு கேட்கப்பட்ட மஹாவித்யை ருஷிகளிடம் பரிவுள்ளவளாக நன்கு புரியும்படி உயர்ந்த கருத்துக்களைச் சொல்லத் தொடங்கினாள்.

शृणुध्वमृषयः सर्वं प्रवक्ष्यामि क्रमेण तत् ।
अमृतं ह्यागमांभोधेः समुद्धृत्य ददामि वः ॥ ३० ॥

ருஷிகளே! அவைகளை வரிசையாகக் கூறுகிறேன். கேளுங்கள். வேதமெனும் கடலிலிருந்து அமுதம் எடுத்துத் தருகிறேன்.

यत्र सर्वं जगदिदं दर्पणप्रतिबिंबवत् ।
उत्पन्नं च स्थितं लीनं सर्वेषां भासते सदा ॥ ३१ ॥
यदेव जगदाकारं भासतेऽविदितात्मनाम् ।
यद्योगिनां निर्विकल्पं विभात्यात्मनि केवलम् ॥ ३२ ॥
गभीरस्तिमितांभोधिरिव निश्चलभासनम् ।

(எனது பரமான வடிவம் இது) எங்கு இந்த உலகம் கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பம்போல் உண்டாகி இருந்து மறைவதாக எல்லோருக்கும் புலப்படுகிறதோ அந்த புலனுக்கு ஆதாரமாயுள்ளது என் வடிவம். எது உலக வடிவில் ஆத்மஞானமற்றவர்களுக்குப் புலப்படுகிறதோ, எது யோகிகளுக்கு ஒருவித விகல்ப பேதபாவனையின்றி நன்றாகத் தனித்து காணப்படுகிறதோ அது என் வடிவம். ஆழ்ந்த அசையாத கடல்போன்று சலனமற்ற புலப்படுவது அது.

*தேவி தன் பரமான வடிவம் எது என்ற முனிவர்களின் கேள்விக்கு விடை தருகிறாள். அது இது என்று நாம் உணர்கிற பொருளனைத்தும் பற்பல தோற்றங்கள் உள்ளன. அத்தனையும் நமது ஞானம் எனும் கண்ணாடியில் பதிந்து அது இது என்ற அறிவைத்தருகின்றன. இதனைப் பிரதிபை என்றாள் தேவி. இந்த பிரதிபையே அவள் வடிவம். இந்த பிரதிபை இரண்டு விதம். பரம், அபரம் என. இந்த ஞானமின்றி உலகில் ஒன்றுமே இல்லை. இந்த ஞானமில்லையேல் கேள்வியும் இல்லை, விடையும் இல்லை. இந்த ஞானம் ஒரு பொருளைப் பார்த்து அது இது என்று உணர்ந்ததும் மறைவதில்லை. பொருளைப் பார்த்தது கணநேரம் மட்டில். ஆனால் அந்த அறிவு பார்த்த உடன் மறைவதில்லை. பொருளும் பொருள் காட்சியும் மறைந்த பின்னரும் ஞானம் தொடர்கிறது. இல்லாவிடில் நினைவில் வர இயலாது. பார்த்த பொருளொன்றைப்பற்றி வெகு நேரம் சிந்திக்க இயலாது. இந்த ஞானம் தொடர்கிறது. அது இது என்று பார்க்கப்படுகிற பொருள் பற்றிய உணர்வு கண்ணாடியில் பொருள் தெரிவது போன்றது. உலகம் தோன்றுவதும் மறைவதும் ஞானமாகிய கண்ணாடியில் தோன்றி மறையும் பிரதி பிம்பம் போன்றதே. இந்த ஞானத்தைத் தவிர உலகம் என்று வேறொன்றில்லை. அது இது என்று உணர்வது பிரதிபிம்ப திருஷ்டியால் மாயையின் மறைப்பால் ஏற்படுவது. யோகி இந்த மாயைத்திரையை அகற்றி ஞானமாக – கண்ணாடியாக உலகத்தை – பிரதி பிம்பத்தைப் பார்ப்பான். அவனது யோக திருஷ்டியில் காலபரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்று பேதபாவனை தரும் முப்பரிமாணங்கள் மறைந்து, ஞானம் என்ற ஒரே வடிவம் புலப்படும். அதுவே தேவியின் பரா – பிரதிபா.*

यत्सुभक्तैरतिशयप्रीत्या कैतववर्जनात् ॥ ३३ ॥
स्वभावस्य स्वरसतो ज्ञात्वापि स्वाद्वयं पदम् ।
विभेदं भावमाहृत्य सेव्यतेऽत्यन्ततत्परैः ॥ ३४ ॥

நல்ல பக்தர்களாலும் எதிர்பார்த்தலின்மையால் மேம்பட்ட எல்லையற்ற அன்புடன் தான் வேறு ஈசுவரன் வேறு என்ற பேதபாவனையை நீக்கி முழு ஈடுபாட்டுடன் ஆத்மஸ்வரூபமாக, தன்னைக் காட்டிலும் வேறுபடாத ஸாதனமாக, உணர்ந்து வழிபடப் பெறுகிறதே அதுதான் பரவடிவம்.

अक्षान्तःकरणादीनां प्राणसूत्रं यदान्तरम् ।
यदभाने न किञ्चित् स्यात् यत् शास्त्रैभिलक्षितम् ॥ ३५ ॥
परा सा प्रतिभा देव्याः परं रूपं ममेरितम् ।

எது கண் முதலிய பொறிகளையும் மனத்தையும் புத்தியையும் அவைகளின் உள்ளிருந்து ஆட்டிவைக்கும் சூத்திரக்கயிறோ, எந்த ஒன்றின் ஒளியின்றி மற்றதனைத்தும் ஒன்றுக்கும் உதவாததாக ஆகிவிடுமோ, எதனிருப்பை வேதம் முதலிய சாஸ்திரங்கள் கண்டு கூறியுள்ளனவோ, அதுவே தேவியான எனது பரபிரதிபா, எனும் பரமான வடிவம்.

*இவ்வாறு தனது பரரூபத்தை விளக்கிய தேவி தனது அபரரூபத்தை விளக்குவதற்காகத் திரிபுரா எனும் தனது முக்கியமான நிர்குண வடிவை முன் விளக்கித் தன் மற்ற ஸகுண வடிவங்களை விளக்குகிறாள்.*

ब्रह्माण्डानां अनेकानां बहिरूर्ध्वे सुधांबुधौ ॥ ३६ ॥
मणिद्वीपे नीपवने चिन्तामणिसुमन्दिरे ।
पञ्चब्रह्ममये मञ्चे रूपं त्रैपुरसुन्दरम् ॥ ३७ ॥
अनादिमिथुनं यत्तदपराख्यं ऋषीश्वराः ।
तथा सदाशिवेशानौ विधिविष्णुत्रिलोचनाः ॥ ३८ ॥
गणेशस्कन्ददिक्पालाः शक्तयो गणदेवताः ।
यातुधानाः सुरा नागाः यक्षकिंपुरुषादयः ॥ ३९ ॥
पूज्याः सर्वा मम तनूरपराः परिकीर्तिताः ।

எண்ணற்ற பிரும்மாண்டங்களின் வெளியே உள்ள அமிருதக் கடலில் அமைந்த மணித்வீபத்தில் கடம்புக்காட்டில் சிந்தாமணி மந்திரத்தில் ஐந்து பிரும்ம வடிவங்களாலான மஞ்சத்தில் திரிபுரஸுந்திரியாக காமேசுவர

காமேசுவரியாக அநாதியான தம்பதியாக விளங்குகிற என் வடிவம் அபர ரூபம். மற்றும் ஸதாசிவன், ஈசுவரன், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், கணேசன், ஸ்கந்தன், திக்பாலர்கள், சக்திகள் (குமாரீ, லக்ஷ்மி, திரிபுரா என மாகாத்மய கண்டத்தில் குறிப்பிடப் பெற்றவர்கள்) கணதேவதைகள், ராக்ஷஸர்கள், தேவர்கள், நாகர்கள், யாக்ஷர்கள், கிம்புருஷர்கள் இவர்களனைவரும் எனது அபர ரூபங்கள்.

मम मायाविमूढास्तु मां न जानन्ति सर्वतः ॥४०॥
पूजिताऽहमेव सर्वैः ददामि फलमीहितम् ।
न मत्तोऽन्या काचिदस्ति पूज्या वा फलदायिनी ॥४१॥
यथा यो मां भावयति फलं मत् प्राप्नुयात्तथा ।

என் மாயையால் அறிவிழந்தவர்கள் என்னை முழுவதுமாக அறிவதில்லை. நானே எல்லோராலும் வழிபடப்படுகிறேன். நானே கோரியதை எல்லாம் தருகிறேன். என்னைத் தவிர வேறு வழிபாட்டிற்குரியவளோ, பலன் தருபவளோ கிடையாது என்னை யார் எப்படி வழிபடுகிறார்களோ, அதற்கேற்ப பலனைப் பெறுகிறார்கள்.

*தேவி தனது பெருமை எத்தகையது என்ற மூன்றாவது விஷயத்தை விளக்குகிறாள்.*

ममैश्वर्यमृषिगणाः अपरिच्छिन्नमीरितम् ॥४२॥
अनपेक्षयैव यत्किञ्चित् अहमद्वयचिन्मयी ।
स्फुराम्यनन्तजगदाकारण ऋषि पुङ्गवाः ॥४३॥

எனது பெருமை எல்லையற்றது, தன்னைக்காட்டிலும் வேறுபட்டது எதனையும் எதிர்பாராமல் நானே இரண்டாம் பொருளற்றவளாக சித்ஸ்வரூபிணியாக இருந்துகொண்டு இந்த எல்லையற்ற உலக வடிவில் விளங்குகிறேன்.

तथा स्फुरन्त्यपि सदा नात्येम्यद्वैतचिद्वपुः ।
एतन्मे मुख्यमैश्वर्यं दुर्घटार्थविभावनम् ॥४४॥

அப்படி உலக வடிவில் விளங்கிக்கொண்டிருந்தாலும் நான் எனது அத்வைதமான சித்ஸ்வரூபத்தை விட்டகலுவதில்லை. பொருந்தாததொன்றைப் பொருந்தச் செய்வது என்பது எனது முக்கியமான பெருமை.

*ஈசுவரி தனது ஈசுவரத்தன்மையை விளக்குகிறாள். தான் ஒருவளே உலகமாகிறாள். ஆனால் உலகத்தின் பலவாயிருத்தலும் ஜடமாயிருத்தலும் தேவியிடம் ஒட்டுவதில்லை. அவள் அத்வைதமாக சித் ஸ்வரூபமாகவே இருக்கிறாள். காட்சியில் பலவாகவும் ஜடமாகவும் தோன்றுவது ஒவ்வாததை ஒட்டவைக்கும் மாயையின் திறனால், அத்வைதமாயிருக்கும் நிலையிலேயே பலவாகவும் காட்சி தருகிறாள்.*

ममैश्वर्यं तु ऋषयः पश्यध्वं सूक्ष्मया दृशा ।
सर्वाश्रया सर्वगता चाप्यहं केवला स्थिता ॥ ४५ ॥
स्वमायया स्वमज्ञात्वा सम्सरन्ती चिरादहम् ।
भूयो विदित्वा स्वात्मानं गुरोः शिष्यपदं गता ॥ ४६ ॥
नित्यमुक्ता पुनर्मुक्ता भूयो भूयो भवाम्यहम् ।

தோன்றும் பொருளனைத்திற்கும் ஆசிரயமானவள், எல்லாவற்றிலும் ஊடுறுவி அங்கிங்கெனாதபடி எங்கும் பரவி நிற்பவள், அதே சமயத்தில் கேவலமான ஆத்மாவாகவும் இருப்பவள், இந்த என் பெருமையைக் காணுங்கள். என் மாயைக்கு நானே கட்டுப்பட்டு என்னையே அறிந்துகொள்ளாமல் (ஜீவனாகி) பல பிறவிகளை எடுத்து ஸம்ஸார பந்தத்தை அடைந்து மறுபடி குருவிற்குச் சிஷ்யனாகி என் சுய ரூபத்தை அறிந்துகொண்டு ஸம்ஸார பந்தத்திலிருந்தும் முழுவதும் விடுபட்டவளாக அடிக்கடி ஆகிறேன்.

निरुपादानसम्भारं सृजामि जगदीदृशम ॥ ४७ ॥
इत्यादि सन्ति बहुधा ममैश्वर्यं परं पराः ।
न तद्गुणयितुं शक्यं सहस्रवदनेन वा ॥ ४८ ॥
शृण्वन्तु संग्रहाद् वक्ष्ये मदैश्वर्यस्य लेशतः ।
जगद्यात्रा विचित्रेयं सर्वतः सम्प्रसारिता ॥ ४९ ॥

இந்த உலகை ஒருவித ஸாதனக்குவிப்பின்றி இவ்வாறு படைக்கிறேன். இப்படி பல பெருமை வரிசைகள் எனக்கு உண்டு. அதை ஆயிரம் நா படைத்த சேஷனும் எண்ண முடியாது. என் பெருமையின் லேசான விளக்கம் – இப்படிப் பல தோற்றங்களுடன் எங்கும் உண்மையாகச் செயலாற்றுகிற உலகின் விசித்திரமான நடவடிக்கையே

मम ज्ञानं बहुविधं द्वैताद्वैतादिभेदतः ।

परापरविभेदाच्च बहुधा चापि तत्फलम् ॥५०॥

என்னை உணர்வது பலவகைப்பட்டது. துவைதம், அத்வைதம் முதலிய பல பேதங்கள் உள்ளது. பொறிகளுக்குப் புலனாவது (பரம் அபரோக்ஷம்) பொறிகளுக்கு அப்பாற்பட்டது (அபரம் – பரோக்ஷம்) என்றும் இரண்டு வகைப்பட்டது. பலவாறாயிருப்பதால் பலனும் பலவகைப்பட்டதே.

द्वैतज्ञानं तु विविधं द्वितीयालम्बनं यतः ।
ध्यानमेव तु तत्प्रोक्तं स्वप्नराज्यादि सम्मितम् ॥५१॥
तच्चापि सफलं ज्ञेयं नियत्या नियतं यतः ।

துவைத பாவனையால் ஏற்படுகிற ஞானம் மற்றொன்றை ஆசிரயிப்பதால் பலவகைப்படும். கனவு, மனோரதம் போன்ற அதுவும் மனதில் கொள்ளும் நினைவே ஆனாலும் அது பலனுள்ளதே. ஏனெனில் அது முறைப்படி வகுக்கப்பட்டது.

*தேவீ தன் பெருமைகளை தேவீ கீதை ஸ்ரீ வித்யா கீதை எனப் பெறும் இந்த அத்தியாயத்தில் ருஷிகளுக்கு விளக்குகிறாள். தேவியைத் தன்னைக்காட்டிலும் வேறுபட்டவளாகப் பெருமாட்டியாகப் பாவனை செய்து அவளது யந்திரங்கள், மந்திரங்கள், பூஜாவிதிகள் முதலிய பலதரப்பட்ட உபாயங்களால் வழிபட்டுப் பெறும் ஞானம் துவைதம் ஆகும். ஆத்ம வடிவிலும் சைதன்ய வடிவிலும் அபேத ஸாக்ஷாத்காரத்துடன் உணர்வது அத்துவைத ஞானம். அனுபவ வடிவில் உள்ளது. இவை இரண்டும் ஒரே பலனுள்ளதாகக் கூறமுடியாது. உபாஸனை வழிகளிலும் சுத்த ஸாத்விகமான பர– உபாஸனையிலிருந்து ராஜஸ – தாமஸ வழிபாடுகளான அபர உபாஸனை வரை உண்டு.*

*துவைத உபாஸனையில் மூர்த்தி–யந்திரம்–மந்திரம் தந்திரம் இவைகளை ஸாதனமாகக் கொண்டே ஞானம் ஏற்படுவதால் அது ஸாலம்பன ஞானம் – மற்றொன்றை எதிர்பார்க்கிற ஞானம். அதில் ஏற்படும் ஞானமும் முன்னறிந்ததை நினைவுப்படுத்திக்கொள்வது (ஸ்மிருதி) போன்றும் பொருளே இல்லாமல் மனோராஜ்ஜியத்தில் கற்பனை செய்து (மனோரதம்) போன்றும் கனவுநிலையில் உணர்வது போன்றும் அநித்தியமான ஆதாரத்தின் மீது தோன்றுவதே. ஆனால் அதனால் லாபமிருக்காது என்று எண்ணத் தேவையில்லை. இறைவியின் அருளின்றி இந்த துவைத ஞானமும் ஏற்பட வாய்ப்பில்லை. அந்த அருள் ஒரு நியதியுடன் இயங்குமாகையால் தானே சித்த சுத்தி ஏற்படுத்தி அத்வைதமான தேவீ ஸாக்ஷாத்காரம் எனும் நேரிடை அனுபவம்*

*(அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம்) வரை கொண்டுவிடும்.*

अपरं चापि विविधं तत्र मुख्यं तदेव हि ॥ ५२ ॥
प्रोक्तमुख्यापरमयध्यानं मुख्यफलक्रमम् ।
अद्वैतविज्ञानमेव परविज्ञानमीरितम् ॥ ५३ ॥

துவைத உபாஸனை என்ற அபர உபாஸனை பலவகைப்படும். அதில் முக்கியமானது முன் கூறிய (அத்யா 20– சுலோ 36–40) எனது அபர வடிவத்தைத் தியானம் செய்வதே. அதுவே முக்யமான (சித்த சுத்தி முதலான) பலனை வரிசையாகத் தரவல்லது. இதைவிட எனது பரவடிவை உணர்வதாகிய அத்துவைத விஜ்ஞானமே சிறந்தது. (31–36 சுலோகங்கள்)

मामनाराध्य परमां चिरं विद्यां तु श्रीमतीम् ।
कथं प्राप्येत परमां विद्यामद्वैतसंज्ञिकाम् ॥ ५४ ॥

ஆனால் ஸ்ரீ வித்யை என்ற எனது பரவடிவை உபாஸனை செய்யாமல் அத்வைத ஞானம் எப்படி அடையமுடியும்?

तदेवाद्वैतविज्ञानं केवला या परा चितिः ।
तस्याः शुद्धदशामर्शः द्वैतमर्शाभिभावकः ॥ ५५ ॥

அத்வைத விஜ்ஞானம் என்பது இதுவே – வேறாக உணரும் பொருளொன்றும் புலப்படாத கேவல ஆத்ம உணர்வு எதுவோ காலம் பரா உணர்வு எதுவோ அதுவே அத்வைத ஞானம். அந்த பரசித் என்கிற பரஞானத்தின் சுத்தநிலை (புலப்படும் பொருளாக வேறு ஒன்று கவ்வாதநிலை – புலப்படும் பொருளற்ற புலன்)யை சுத்தமான அபரோக்ஷ ஸாக்ஷத்காரமாக – நேரிடை அனுபவமாகப் பெறுவதே அது. துவைத உணர்வை அது மறையச் செய்யக்கூடியது.

चित्तं यदा स्वमात्मानं केवलं ह्यभिसम्पतेत् ।
तदेवानुविभातं स्यात् विज्ञानमृषिसत्तमाः ॥ ५६ ॥

மனம் (ஸமாதியில்) எப்படி தன் ஆத்மஸ்வரூபத்தை – வேறு புலப்படும் பொருளுணர்வின்றி கேவலமாக உணர்ந்து மூழ்கி நிற்குமோ, அதனையே (ஸமாதி கலைந்த நிலையிலும்) தொடர்ந்து உணர்ந்து அதில் மூழ்கி நிற்குமானால் அதுவே பரஞானம் – அத்வைத ஞானமாகும்.

ஆத்மாவைப் பற்றிக் குருவின் உபதேசமும் நூல்களும் விளக்கியுள்ளபடி ஆத்மாவை சிந்தித்து மனத்தில் பதித்துக்கொள்வதால் ஆத்ம பரோக்ஷ ஞானம் ஏற்படுகிறது. அதில் வேறு பொருளுணர்வு என்ற அழுக்கின்றி சுத்தமான மனம் ஸமாதியில் அடங்கி இப்போது வேறு பொருள் தோற்றமின்றி ஆத்மாவையே அனுஸந்தானம் செய்பவனாகி உள்ளேன் என்ற ஸவிகல்பக ஞானம் பெறுகிறது. இதுவும் அடங்கி திரிபுடியும் மறைந்து ஏகாகாரமான ஞானம் நிர்விகல்பகமாக ஏற்படுகின்றதே அதுவே பர ஞானம் என்கிறாள் தேவி.

श्रुतितो युक्तितो वापि केवलात्मविभासनम् ।
देहाद्यात्मावभासस्य नाशनं ज्ञानमुच्यते ॥ ५७॥

வேதாந்த சிரவணத்தாலும் யுக்திகளைக்கொண்டு தீர்மானிப்பதாலும் உடல் முதலியதன் சேர்க்கை இராத ஆத்மா தனியாக உணரப்பெறுவதும், அக்காலத்தில் இதுகாறும் தேகம் முதலியதை ஆத்மா என்று நினைத்துவந்தது மறைவதும் பரோக்ஷஞானம் எனும் அபரஞானம் ஆகும்.

तदेव भवति ज्ञानं यज्ज्ञानेन तु किंचन ।
भासमानमपि क्वापि न विभायात् कथंचन ॥ ५८॥

பரஞானம் என்பது இது. தோன்றும் பொருளனைத்தும் புலப்பட்டாலும் எந்நிலையிலும் எங்கும் தனிப்பட்ட பொருளாகத் தோன்றாதிருப்பதே.

*கண்ணாடியில் வேறு பொருளின் பிரதிபிம்பம் தெரிகிறது. கண்ணாடி என்று நினைவின்றி பிரதிபிம்பம் தனி இருப்புள்ளதென்ற நினைவுடன் பிரதிபிம்பம் தெரிவதாக இருந்த காட்சி மாறி கண்ணாடி தான் பிரதிபிம்பமாகத் தெரிகிறது என்ற உணர்வுடன் வேறு காட்சியால் பாதிக்கப் பெறாதபடி கண்ணாடி மட்டும் புலப்படுவது எப்படி உண்மை நிலையோ அப்படி ஞானத்தில் தோன்றும் உலகம் அனைத்தும் ஸத்யம் என்ற நிலை மாறி ஞானம் மட்டுமே அனுபவத்திற்கு வருவது பர ஞானமாகும். இதனை மேலும் 4 சுலோகங்களில் விளக்குகிறாள் தேவி.*

तदेवाद्वैतविज्ञानं यद्विज्ञानेन किञ्चन ।
अविज्ञातं नैव भवेत् कदाचिल्लेशतोऽपि च ॥ ५९॥

எதனை நன்கு உணர்ந்தபிறகு அதில் புலப்படுவதனைத்தும் எப்போதும் சிறிதுகூட அறியாததாக ஆகாதோ அதுவே பரஞானம்.

*கண்ணாடி என்ற உண்மை நிலை அனுபவத்திற்கு வந்ததால் அதில் பிரதிபிம்பமாகத் தோன்றும் பொருள் பிரதிபிம்பமென்று உணரப்படும். இந்த பிரதிபிம்பம் என்ற உணர்வு தடைபடுவது இல்லை. பிரதிபிம்பம் ஸத்யம் என்ற உணர்வும் பிம்பம் தனித்து உணரப்பெறாததும் தான் பாதிப் படைகின்றன. பர ஞான அனுபவம் வந்த பிறகும் உலகப் பொருளாகிய இரண்டாம் வஸ்து இருப்பது தெரியும். அது இரண்டாம் வஸ்துவாகத் தெரியாது.*

सर्वविज्ञानात्मरूपं यद्विज्ञानं भवेत्खलु ।
तदेवाद्वैतविज्ञानं परमं तापसोत्तमाः ॥ ६० ॥

தனிப்பட்ட எல்லாப் பொருள்களின் தனித்தனி ஞானத்தின் மூல வடிவமான ஞானவடிவம் அனுபவத்திற்கு வருவதே பரமான அத்வைத ஞானம்.

*இது குடம், இது துணி, இது மரம் என்றவாறு தனித்தனிப் பொருளின் ஞானம் தோன்றும்போதே இவை ஞானமே என்ற தொரு அனுபவம் கூட வருவதே பர ஞானம். கண்ணாடியினுள் பல கண்ணாடிகளின் பிரதிபிம்பம் தெரிகிறது. பல கண்ணாடிகள் தனித்துத் தெரிவதான பிரதிபிம்ப ஞானமும் பிம்பமாக இருப்பதே என்ற உணர்வு ஏற்படின் அது பரம்.*

जाते यादृशविज्ञाने सम्शयाश्चिरसम्भूताः ।
वायुनेवाभ्रजालानि विलीयन्ते परं हि तत् ॥ ६१ ॥

எந்த ஞானானுபவம் ஏற்பட்டதும் வெகுநாட்களாகத் தேங்கியிருந்த ஸம்சயங்கள் காற்றில் மேகம் கலைவதுபோல் நொடியில் கரைந்து மறையுமோ அதுவே பரஞானம்.

*கண்ணாடியின் உண்மை நிலை புரிந்தும் அதில் தோன்றுகிற பொருள்களில் அதுவா இதுவா, கருப்பா சிகப்பா என்பது போன்ற ஸம்சயங்கள் ஆதாரமின்மையால் விலகுகின்றன. அதுபோல் நான் உடலா பிராணனா மனமா என்று தன்னைப் பற்றி ஏற்பட்ட ஸம்சயங்கள் நான் ஆத்மா என்ற உணர்வு வந்ததும் தானே மறைந்துவிடுகின்றன. எப்படி இந்த ஸந்தேகம் வந்தது என்று ஆச்சரியப்படுகிறான். தூரத்தில் பட்ட மரத்தைக் கண்டு திருடனா பிசாசா என்று சந்தேகப்பட்டு நெருங்கி வந்து மரத்தைப் பார்த்து மரம் என்று உணர்ந்த பிறகு திருடன் பிசாசு என்ற எண்ணம் தானே மறைவது போல் ஆத்மாவைத் தவிர வேறு ஒன்றாக அனாதி காலமாக ஏற்பட்டிருந்த பாவனை*

*வாஸனை எல்லாம் தானே மறைந்துவிடுகின்றன.*

कामादिवासनाः सर्वाः यस्मिन् सन्ति न किञ्चन ।
स्युर्भग्नदंष्ट्राहिरिव तद्विज्ञानं परं स्मृतम् ॥ ६२ ॥

காமம் முதலிய வாஸனைகள் அனைத்தும் எந்த அனுபவத்திற்குப் பிறகு தோன்றவே தோன்றாதோ, தோன்றினாலும் பல் பிடுங்கப்பட்ட பாம்புபோல் பயத்தை விளைவிக்காதோ அது பரஞானம்.

विज्ञानस्य फलं सर्वदुःखानां विलयो भवेत् ।
अत्यन्ताभयसम्प्राप्तिर्मोक्ष इत्युच्यते फलम् ॥ ६३ ॥

இந்த ஞானானுபவத்தால் ஏற்படும் பயன் எல்லா துக்கங்களும் நீங்குவதும் சிறிதும் பயமற்ற நிலையும்தான். மோக்ஷம் என்பது இதுதான்.

भयं द्वितीयसङ्कल्पात् अद्वैते विदिते दृढम् ।
कुतः स्यात् द्वैतसङ्कल्पः तमः सूर्योदये यथा ॥ ६४ ॥
ऋषयो न भयं क्वापि द्वैतसङ्कल्पवर्जने ।
अतो यत्फलमन्यत्स्यात् तद्भयं सर्वथा भवेत् ॥ ६५ ॥

ருஷிகளே ! மற்றொன்று இருக்கின்றது என்ற எண்ணத்தால் தான் பயம் ஏற்படுகிறது. அத்வைதநிலை நன்கு புரிந்துவிட்டால் மறுபடி மற்றொன்று இருக்கிறதென்ற எண்ணம் எப்படி ஏற்படும்? சூரியன் உதித்தபிறகு இருள் எங்கே! துவைத ஸங்கல்பம் நீங்கினால் எங்கும் பயம் இல்லை. துவைத ஸங்கல்பமில்லாத ஆத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறொன்று பலனாக இருந்தால் எப்போதும் பயம்தான்.

अन्तवत्तु द्वितीयं स्यात् भूयो लोके समीक्षणात् ।
सान्ते भयं सर्वथैवाभयं तस्मात्कुतो भवेत् ॥ ६६ ॥
संयोगो विप्रयोगान्तः सर्वथैव विभावितः ।
फलयोगोऽपि तस्माद्धि विनश्येदिति निश्चयः ॥ ६७ ॥

இரண்டாவதாயிருப்பது (வேறுபடுவது) அனைத்தும் முடிவுள்ளதே, அப்படிப் பலதடவை உலகில் காணப்பட்டிருப்பதால். எது முடிவுள்ளதோ அதில் பயம் எப்போதும் உண்டு. பயமின்மை எப்படி ஏற்படமுடியும்? கூடுவது பிரியும்,

எப்போதும் அப்படியே. அதனால் பலன் வேறுபட்டிருந்தால் அத்துடன் கூட்டும் அழிவுறும், சந்தேகம் வேண்டாம்.

यावदन्यत्फलं प्रोक्तं भयं तावत्प्रकीर्तितम् ।
तदेवाभयरूपं तु फलं सर्वे प्रचक्षते ॥ ६८॥
यदात्मनोऽनन्यदेव फलं मोक्षः प्रकीर्तितः ।
ज्ञाता ज्ञानं ज्ञेयमपि फलं चैकं यदा भवेत् ॥ ६९॥
तदा हि परमो मोक्षः सर्वभीतिविवर्जितः ।

ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்ட பலன் என்று சொன்னால் அது பயம் தருவதே. ஆத்மஸ்வரூபமே பலனெனில் அது அபய வடிவே என்று அறிவாளிகள் அனைவரும் கூறுகிறார்கள். ஆத்மாவைக் காட்டிலும் வேறுபடாத பலனே மோக்ஷம் என்பர். அறிபவன், அறிவு அறியும்பொருள், ஞானத்தின் பலன் இவை நான்கும் எங்கு ஒன்றாக இருக்குமோ அப்போதே எல்லாப் பயமும் நீங்கிய பெருமோக்ஷம்.

ज्ञानं विकल्पसङ्कल्पहानं मौढ्ययंविवर्जितम् ॥ ७०॥
ज्ञातुः स्वच्छात्मरूपं तदादावनुपलक्षितम् ।
उपलक्षक एवातो गुरुः शास्त्रं च नेतरत् ॥ ७१॥

ஆத்ம விஷயமான விகல்ப எண்ணங்கள் அழிந்து, அறியாமையில்லாமல் அறிபவனின் சுத்தமான ஆத்மஸ்வரூபம் இது. இது முன்னர் உணரப்படாதது. அப்படி இதனைக் கூட்டுவிப்பவர் குருவும் அவர்மூலம் அறிந்த சாஸ்திரமும் தான். வேறு எதுவும் இல்லை.

*எத்தனை சிறந்த அறிவாளியாயினும் அவனது அறிவு தன்னை உணரப் பயன்படாமல் உலகை வேற்றுப்பொருளாகக் காணப் பயன்படுமேயானால் அதனால் ஏற்படும் ஸுக துக்கப் பாதிப்புகளும் வாஸனைத் தொடர்பும் தவிர்க்கமுடியாதவை. அந்த ஞானத்தில் தன் ஸ்வரூபமான ஆத்மாவே பிரதிபலிக்குமானால், ஆத்மா ஆனந்தமானவனானபடியால் அந்த அறிவால் ஸுக துக்கப்பாதிப்பு இல்லை. பயமில்லை. மனச்சலனம் இல்லாததால் ஆனந்தம் முடிவற்றதாகிறது. வாஸனைத்தொடர்பு தானே அழிந்துவிடுகிறது. அந்த அத்வைத அத்மஞானத்தில் ஜ்ஞாதா, ஜ்ஞானம், ஜ்ஞேயம் என்ற திரிபுடியில்லை, ஞானத்தில் ஏற்படும் பலன் ஞானமே. அதனால் பலன்என ஒன்று தனித்தில்லை. ஸுஷுப்தியில்கூட இத்தகைய பேத உணர்வின்மை*

*காணப்படுகிறதென்றால் அது அறியாமையால் ஏற்படும் பேத உணர்வின்மை. இங்கு ஞானத்தால் ஏற்படும் பேத உணர்வின்மை. இந்த பேதமின்மை எப்போதும் இருப்பதே. ஆனால் இதுவரை கண்டுகொள்ளப்படாதது. இப்போது கண்டுகொள்ளப்படுகின்றது. இதற்கு வழிகாட்டுகிறார் ஆசாரியர் நூல்கள் மூலம்.*

एतदेव हि विज्ञेयस्वरूपमभिधीयते ।
ज्ञातृज्ञानज्ञेयगतो यावद भेदोऽवभासने ॥ ७२ ॥
तावज्ज्ञाता ज्ञानमपि ज्ञेयं वा न भवेत्क्वचित् ।

இப்படி (ஸங்கல்பமும் அஜ்ஞானமும் இல்லாத) சித்ரூபமே ஆத்மா. (ஸங்கல்பம் தவிர்க்கப் பெறாததால்) அறிபவன். அறிவு, அறியப்படும் பொருள் இவற்றில் பேத உணர்வு இருக்கும்வரை (அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் இவற்றின் உண்மை நிலையில் இவை அறியப்படாததால்) அறிபவனும் அறிவும் அறியப்படும் பொருளும் (தோற்ற அளவில்) இருக்கும் (உண்மையில் இருக்காது).

यदा भेदो विगलितो ज्ञात्रादीनां मिथः स्थितः ॥ ७३ ॥
तदा ज्ञात्रादिसम्पत्तिरेतदेव फलं स्मृतम् ।

இவைகளின் இடையே உள்ள வேற்றுமை எப்போது விலகுகிறதோ அப்போதுதான் அறிபவனும் அறிவும் அறியப்படும் பொருளும் உண்மை நிலை அடைந்ததாகும். இதுதான் ஞானத்தின் பலன்.

ज्ञात्रादिफलपर्यन्तं न भेदो वस्तुतो भवेत् ॥ ७४ ॥
व्यवहारप्रसिद्ध्यर्थं भेदस्तत्र प्रकल्पितः ।
अतोऽपूर्व लयमत्र फलं नास्त्येव किञ्चन ॥ ७५ ॥

அறிபவன் முதல் பலன்வரை இந்த நான்கினுள் வேற்றுமை உண்மையில் இல்லை. விளக்கத்திற்கு எளிதாகும்படி வேற்றுமை கற்பனையால் உருவாக்கப்பட்டது. அதனால் தனித்த புதிதான பலன் ஒன்றும் இனி ஏற்படுவதிற்கில்லை.

*வேற்றுமையையோ ஒற்றுமையையோ உணரும் சித்தம் என்பது என்ன? சுத்தசைதன்யத்தின்மேல் ஜடசக்தியால் ஏற்பட்ட ஆவரணத்தால் சைதன்யம் மறைந்து மனமாகக் காட்சியளிப்பதே. குருவின் உபதேசத்தால் அஜ்ஞானம்*

*விலக விலக ஜடசக்தியால் சைதன்யத்தின்மேல் ஏற்பட்ட ஆவரணம் விலகுகிறது. பூர்ண சைதன்யம் ஒளிவிடுகிறது. ஆவரண நிலையில் ஏற்பட்ட அறிபவன் அறிவு அறியப்படும் பொருள் அதனால் ஏற்பட்ட ஸுக துக்கப் பாதிப்பு இவை ஆவரணம் நீங்கிய நிலையில் தானே மறைகின்றன. அதனால் ஐக்யம் என்பது இங்கு செயற்கையாக ஏற்படுத்தப்பட்டதல்ல. இயற்கையாக அமைந்த ஸ்வஸ்வரூபமான அது இதுவரை மறைந்திருந்தது. இப்போதுதானே காட்சியளிக்கின்றது.*

आत्मैव मायया ज्ञातृज्ञानज्ञेयफलात्मना ।
यावद्भाति भवेतावत् सम्सारो ह्यचलोपमः ॥७६॥
यदा कथञ्चिदेततु भायाद्भेदविवर्जितम् ।
सन्सारो विलयं यायात् छिन्नाभ्रमिव वायुना ॥७७॥

அஜ்ஞானத்தால் அறிபவன் அறிவு அறியப்படும் பொருள் என்ற திரிபுடியும், பலனும் வெவ்வேறாகத் தோன்றும்வரை ஸம்ஸாரம் (பிறப்பு இறப்புத் தொடர்) மலைபோல் அசைக்கமுடியாததாயிருக்கும். எப்படியோ (தெய்வ அருளால் குரு கடாக்ஷத்தால்) இந்த பேத உணர்வு நீங்கி அத்வைத உணர்வு ஏற்பட்டால், பிறப்பிறப்புத்தொடர் தானே காற்றால் சிறு மேகம் கலைவதுபோல் உருவற்றுப்போகும்.

एवंविधमहामोक्षे तत्परत्वं हि साधनम् ।
तत्परत्वे तु सम्पूर्णे नान्यत्साधनमिष्यते ॥७८॥
अपूर्णे तत्परत्वे तु किं सहस्रसुसाधनैः ।
तस्मातात्पर्यमेव स्यात् मुख्यं मोक्षस्य साधनम् ॥७९॥
तात्पर्य सर्वथैतत्तु साधयामीति संस्थितिः ।
यस्तात्पर्येणे सम्युक्तः सर्वथा मुक्त एव सः ॥८०॥

இந்தப் பெரிய புருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனம் அதனை அடைவதில் உள்ள முனைவு ஒன்றேயாகும். அந்த முனைவு முழு அளவில் இருந்தால் வேறு ஸாதனம் தேவையில்லை. அந்த முனைவு முழு அளவில் இல்லாதிருந்தால் வேறு ஆயிரம் நற்சாதனங்கள் இருந்தும் பலனில்லை. அதனால் முழு முனைவே முக்கிய ஸாதனம். முனைவு என்பது இதனை இப்பிறவியிலேயே அடைந்தே தீருவேன் என்ற உறுதியுடன் செயல்படுவதாகும். இந்த முனைவுள்ளவன் எப்படியும் முக்தி பெற்றுவிடுவான்.

दिनैर्मासैर्वत्सरैर्वा मुक्तः स्याद्वाऽन्यजन्मनि ।
बुद्धिनैर्मल्यभेदेन चिरशीघ्रव्यवस्थितिः ॥८१॥

*சில தினங்களிலோ மாதங்களிலோ ஆண்டுகளிலோ மறு பிறவியிலோ முக்தனாகிவிடுவான். புத்தியின் தூய்மையைப் பொறுத்தது நாட்படுவதும் சீக்கிரம் நிறைவேறுவதும்.*

बुद्धौ तु बहवो दोषाः सन्ति सर्वार्थनाशनाः ।
यैर्जनाः सततं त्वेवं पच्यन्ते घोरसम्सृतौ ॥८२॥
तत्राद्यः स्यादनाश्वासः द्वितीयः कामवासना ।
तृतीयो जाड्यता प्रोक्ता त्रिधैवं दोषसंग्रहः ॥८३॥

புத்தியில் பல தோஷங்கள் ஏற்படும். அவை எல்லா புருஷார்த்தங்களையும் கெடுத்துவிடும். அவற்றால்தான் மக்கள் கோரமான ஸம்ஸாரத்தில் எப்போதும் வாட்டி வதைக்கப்படுகிறார்கள். முதலாவது நம்பிக்கையின்மை, இரண்டாவது காம வாஸனை, மூன்றாவது புத்திமந்தம் என்று தோஷங்களைச் சுருக்கிக் கூறலாம்.

द्विविधः स्यादनाश्वासः सम्शयश्च विपर्ययः ।
मोक्षोऽस्ति नास्ति वेत्याद्यः सम्शयः समुदाहृतः ॥८४॥
नास्त्येव मोक्ष इत्याद्यः भवेदत्र विपर्ययः ।
एतद्द्वयं तु तात्पर्ये मुख्यं स्यात्प्रतिबन्धकम् ॥८५॥

நம்பிக்கையின்மை இரு வகை. ஸம்சயம், விபர்யயம் என. மோக்ஷம் என ஒன்று உண்டா இல்லையா என்பது ஸம்சயம். மோக்ஷமே இல்லை என்பது விபர்யயம். இது இரண்டும் தீவிர முயற்சிக்கு இடையூறு.

विपरीतनिश्चयेन नश्येदेतद् द्वयं क्रमात् ।
अत्रोपायो मुख्यतमो मूलच्छेदो न चापरः ॥८६॥
अनाश्वासस्य मूलं तु विरुद्धतर्कचिन्तनम् ।
तत्परित्यज्य सत्तर्कावर्तनस्य प्रसाधने ॥८७॥
विपरीतो निश्चयः स्यात् मूलच्छेदनपूर्वकः ।
तत्र श्रद्धासमुदयात् अनाश्वासः प्रणश्यति ॥८८॥

நம்பிக்கையின்மையின் இரு வகைகளும் அவற்றிற்கு விபரீதமான மோக்ஷம் இருக்கிறது என்ற நிச்சய அறிவால் சிறிது சிறிதாக அழியும். அதற்கு உபாயம் நமபிக்கையின்மையை வேருடன் களைவதே. நம்பிக்கையின்மைக்கு வேர், நம்பிக்கைக்கு விரோதமான யுக்திகளைக் கொண்டு சிந்திப்பதே. அந்த சிந்தனையைத் தவிர்த்து நம்பிக்கைக்கு ஏற்ற நல்ல யுக்திகளைத் திரும்பத் திரும்ப சிந்தனை செய்யும்போது நம்பிக்கையின்மைக்கு எதிரான நிச்சயம் ஏற்படும் அது நம்பிக்கையின்மையின் வேரைக் களைந்து ஏற்படும். கிரமமாக சிரத்தை ஏற்பட அநாச்வாஸம் என்ற நம்பிக்கையின்மை அகலும்.

कामादिवासना बुद्धेः श्रवणे प्रतिबन्धिका ।
कामादिवासनानिष्ठा बुद्धिर्नैव प्रवर्तते ॥ ८९ ॥
लोकेऽपि कामी काम्यस्य सदा ध्यानैकतत्परः ।
पुरःस्थितं न पश्येच्च श्रोत्रोक्तं शृणुयान्न च ॥ ९० ॥

காமம் முதலியவற்றின் வாஸனையானது தத்வங்களை புத்தி கேட்டறிவதில் தடை உண்டாக்கும். காமம் முதலிய வாஸனை உள் நுழைந்த பின் அறிவு வேலை செய்யாது. உலகில் காமம் கொண்டவன் தன் விருப்பத்தையே எப்போதும் நினைப்பதில் ஈடுபட்டவனாக முன்னுள்ளதைக் கூட காண மாட்டான், காதில் விழுவதைக் கூடக் கேட்க மாட்டான்.

कामादिवासितस्यैवं श्रुतं चाश्रुतसम्मितम् ।
कामादिवासनां तस्माज्जयेत् वैराग्यसम्पदा ॥ ९१ ॥
सन्ति कामक्रोधमुखाः वासनास्तु सहस्रशः ।
तत्र कामोमूलभूतः तन्नाशे न हि किञ्चन ॥ ९२ ॥
ततो वैराग्यसंयोगात् नाशयेत् कामवासनाम् ।

காமம் முதலியவை உட்புகுந்தவனுக்குக் கேட்டதும் கேட்காததாகிவிடும். வைராக்யம் நிறையப் பெறுவதால் காமம் முதலியவற்றின் வாஸனையை வெல்லலாம். காமம் கோபம் முதலிய வாஸனைகள் ஆயிரக்கணக்கில் உண்டு. அவற்றில் எல்லாவற்றிற்கும் காமமே வேர். அது அழிந்தால் வேறு எதுவும் இருக்காது. அதனால் வைராக்யத்தின் கூட்டுறவால் காம வாஸனையை வெல்ல வேண்டும்.

आशा हि कामः सम्प्रोक्तः एतन्मे स्यादिति स्थिता ॥ ९३ ॥
शक्येषु स्थूलभूता सा सूक्ष्माऽशक्येषु संस्थिता ।
दृढवैराग्ययोगेन सर्वां तां प्रविनाशयेत् ॥ ९४ ॥
तत्र मूलं काम्यदोषपरामर्शः प्रतिक्षणम् ।
वैमुख्यं विषयेभ्यश्च वासना नाशयेदिति ॥ ९५ ॥

இது எனக்கு கிடைக்கட்டும் என்ற எதிர்பார்த்தலே காமம். நிறைவேறத்தக்கவற்றில் அது வெளிப்படையாகவும், நிறைவேற முடியாதவற்றில் ஆழ்ந்த எண்ணமாகவும் இருக்கும். திடமான வைராக்கியத்தின் மூலம் அந்த எண்ணம் எல்லாவற்றையும் அழித்துவிட வேண்டும். அதற்குத் தேவை ஒவ்வொரு நொடியிலும் விரும்பும் பொருளில் உள்ள தோஷங்களைப் பற்றி ஆராய்வதே. இந்த வாஸனை என்னை அழித்துவிடும் என்ற உறுதியுடன் பொருள்நாட்டத்திலிருந்து திரும்புவதும் உதவும்.

यस्तृतीयो बुद्धिदोषः जाड्यरूपो व्यवस्थितः ।
असाध्यः सोऽभ्यासमुखैः सर्वथा ऋषिसत्तमाः ॥ ९६ ॥
येन तात्पर्यतश्चापि श्रुतं बुद्धिमनारुहेत् ।
तज्जाड्यं हि महान् दोषः पुरुषार्थविनाशनः ॥ ९७ ॥
तत्रात्मदेवतासेवामृते नान्यद्धि कारणम् ।
सेवायास्तारतम्येन जाड्यं तस्य हराम्यहम् ॥ ९८ ॥

மூன்றாவது புத்தி மந்தம். இதனைப் பயிற்சியால் போக்க முடியாது. இவன் முழு முனைவுடன் கேட்டாலும் அது புத்தியில் ஏறாது. இந்த ஜடத் தன்மை பெருங்கேடு. எல்லா புருஷார்த்தங்களையும் கெடுத்துவிடும். இது தன் உபாஸனை தெய்வத்தை உபாசிப்பதால் மட்டுமே தீரும். அவனது உபாஸனைக்கேற்ப ஜாட்யத்தை நான் போக்குவேன்.

जाड्याल्पभावेन सद्यो वा परजन्मनि ।
भवेत्तस्य फलप्राप्तिः जाड्यसंयुक्तचेतसः ॥ ९९ ॥
सर्वसाधनसम्पत्तिर्ममैव प्रणिधानतः ।
उपयाति च यो भक्तया सर्वदा मामकैतवात् ॥ १०० ॥
स साधनप्रत्यनीकं विधूयाशु कृती भवेत् ।

புத்தி மந்தம் குறைவானது - அதிகமானது என்பதற்கேற்ப புத்தி மந்தமுள்ளவனுக்கு உடனேயோ அடுத்த பிறவியிலேயோ பலன் கிட்டும். அவனுக்கு எல்லா ஸாதனங்களும் கிட்டுவது எனது உபாஸனையால்தான். என்னை வேறு எதிர்பார்த்தலின்றி பக்தியுடன் எவன் அணுகுகிறானோ அவன் தனது சாதனங்களில் தடை ஏற்படாமல் சீக்கிரம் பலனடைவான்.

यस्तु मामीश्वरीं सर्वबुद्धिप्रसरकारिणीम् ॥ १०१ ॥
अनादृत्य साधनैकपरः स्यान्मूढभावतः ।
पदे पदे विहन्येत फलं प्राप्येत वा न वा ॥ १०२ ॥
तस्मात्तु ऋषियो मुख्यं तात्पर्यं साधनं भवेत् ।
एवं तात्पर्यवानेव साधकः परमः स्मृतः ॥ १०३ ॥
तत्र मद्भक्तियुक्तस्तु साधकः सर्वपूजितः ।

புத்தியின் தெளிவான ஓட்டம் அனைத்தையும் செய்கின்ற ஈசுவரியான என்னைப் புறக்கணித்துவிட்டு வேறு ஸாதனங்களை நம்பி முட்டாள் தனத்துடன் ஈடுபடுபவன் அடிக்கு அடி தடைபடுவான். பலனடைவது சந்தேகமே. அதனால் தெய்வ உபாஸனை முக்கியமான ஸாதனம். முக்கிய மான ஆத்ம தத்துவத்தை அறிவதில் முனைவுள்ளவன் சிறந்தவன். அவர்களில் என்னிடம் பக்தியுள்ளவன் மிகச் சிறந்தவன்.

सिद्धिरात्मव्यवसितिः देहानात्मत्वभावना ॥ १०४ ॥
आत्मत्वभावनं नूनं शरीरादिषु संस्थितम् ।
तदभावन मात्रं तु सिद्धिर्मौढ्यविवर्जितम् ॥ १०५ ॥

ஆத்மாவைப் பற்றிய தெளிந்த தீர்ந்த அறிவு, உடலில் ஆத்மா என்ற நினைப்பின்மை, ஏற்பட இதுவே ஸித்தி, உடலில் ஆத்மா என்ற உணர்வு, பல பிரிவுகளாகத் தொடர்ந்து நிலைத்திருக்கும் அறிவின்மை இவை விலகிய நிலையே ஸித்தி.

आत्मा व्यवसितः सर्वैरपि नो केवलात्मना ।
अत एव तु संप्राप्ता महानर्थपरंपरा ॥ १०६ ॥
तस्मात्केवलचिन्मात्रं यद्देहाद्यवभासकम् ।
तन्मात्रात्मव्यवसितिः सर्वसंशयनाशिनी ॥ १०७ ॥
सिद्धिरित्युच्यते प्राज्ञैर्नातः सिद्धिरनन्तरा ।

ஆத்மா எவராலும் தனித்துத் தீர்மானமாக உணரப்பட்டதில்லை. அதனால் தான் இத்தனைக் கேடுகளின் தொடரும் ஏற்பட்டுள்ளது. தேகம் முதலியவற்றை விளக்கிக்கொண்டிருப்பது அந்த தனித்த பேரறிவே. அதனைமட்டும் ஆத்மாவாக நிச்சயித்து உணர்வது எல்லாறை ஐங்களையும் அழித்துவிடும். அதனைத்தான் அறிவாளிகள் ஸித்தி என்கின்றனர். அதைத்தவிர வேறு ஸித்தியில்லை.

सिद्धयः खेचरत्वाद्या अणिमाद्यास्तथैव च ॥ १०८ ॥
आत्मविज्ञानसिद्धेस्तु कलां नार्हन्ति षोडशीम् ।
ताः सर्वास्तु परिच्छिन्नाः सिद्धयो देशकालतः ॥ १०६ ॥
इयं स्यादपरिच्छिन्ना स्वात्मविद्या शिवात्मिका ।

ஆகாயத்தில் செல்வது முதலியதும் அணிமா முதலியதும் ஸித்திகளாயினும் ஆத்மாஞானம் என்ற ஸித்தியின் வீசம் பங்குகூட அவை பெறாது. அவை காலத்தாலும் தேசத்தாலும் அளவில் அடங்குபவை. ஆத்மஞானம் தேசகால அளவிற்கடங்காதது.

स्वात्मविद्यासाधनेषु ताः सर्वाः सुप्रतिष्ठिताः ॥ ११० ॥
आत्मविद्याविद्यावेतास्त्वन्तराय प्रयोजकाः ।
किं ताभिरिन्द्रजालात्मसिद्धितुल्याभिरीहितम् ॥ १११ ॥
यस्य साक्षाद्ब्रह्मपदं अपि स्यात्तृणसम्मितम् ।
कियन्त्येताः सिद्धयो वै कालक्षपणहेतवः ॥ ११२ ॥

ஆத்ம ஞானத்தால் பெறக்கூடியவற்றில் இந்த சித்திகளும் அடங்கும். ஆத்மாஞானத்தால் இவை நன்கு அமையக்கூடும். ஆனால் ஆத்மஞானம் பெற இவை இடையூறுகள். இவை இந்திரஜால வித்தை போன்று பொய்–யானவை. இவற்றால் ஆவதென்ன? பிரும்மாவின் பதவியும் ஆத்ம ஞானிக்குப் புல்லுக்குச் சமம். இவை அவனுக்கு எதற்கு? பொழுதை வீணடிக்க மாத்திரம் பயன்படுபவை.

तस्मात्सिद्धिर्नेतरा स्यादात्मविज्ञानसिद्धितः ।
ययात्यन्तं शोकनाशो भवेदानन्दसान्द्रता ॥ ११३ ॥
सैव सिद्धिर्नेतरा तु मृत्युग्रासविमोचिनी ।

அதனால் ஆத்மஞானம் எனும் சித்தியைக் காட்டிலும் வேறு சித்தி இல்லை, அதனால் சோகம் முழுவதும் விலகும். ஆனந்தம் கனத்து இருக்கும். மரணத்தின் வாயிலிருந்து மீட்க வேறு எதுவும் உதவாது.

इयमात्मज्ञानसिद्धिर्विविधाभ्यासभेदतः ॥ ११४ ॥
बुद्धिनैर्मल्यभेदाच्च परिपाकविभेदतः ।
संक्षेपतस्तु त्रिविधा चोत्तमा मध्यमाऽधमा ॥ ११५ ॥

இந்த ஆத்மஞானசித்தி பயிற்சியின் வேறுபாட்டாலும் புத்தித் தெளிவின் வேறுபாட்டாலும், பலனடைவதன் வேறுபாட்டாலும் பல வகைப்படும். சுருக்கமாகக் கூறின் உத்தமா மத்யமா அதமா என மூன்று வகைப்படும்.

लोके द्विजानामृषयः पठितश्रुतिसंमिता ।
मेधया च महाभ्यासात् व्यापारशतसंकुला ॥ ११६ ॥
अप्यस्खलितवर्णा या पठिता श्रुतिरुत्तमा ।

அறிவுக்கூர்மையாலும் திடமான பயிற்சியாலும் நூறு வேலைகள் குறுக்கிடனும் எழுத்தோ ஸ்வரமோ பிழைபடாதபடி வேதத்தைக் கூறுவதே உத்தமமான வேதாத்யயனமாகும். இந்த சித்தியானது அந்தணர்களின் உத்தம வேதாத்தியயனத்திற்கு ஒப்பானது.

समाहितस्य व्यापारेऽसमाहितस्य चान्यदा ॥ ११७ ॥
पूर्ववद्याऽप्यस्खलिता पठिता मध्यमा श्रुतिः ।
या सदा ह्यनुसन्धानयोगादेव भवेत्तथा ॥ ११८ ॥
पठिता श्रुतिरत्यन्तास्खलिता त्वधमा हि सा ।

பல வேலைகள் குறுக்கிடும்போது கவனத்துடனும், வேலையற்ற நிலையில் கவனமில்லாமலும், தடையின்றி வேதம் ஓதப்படின் அது மத்தியமம். எப்போதும் முழு கவனத்துடன் சொன்னால் தான் பிழையின்றி ஓதக்கூடுமானால் அது அதமம்.

ऐवंमेवात्मविज्ञानसिद्धिरुक्ता त्रिधर्षयः ॥ ११९ ॥
या महाव्यवहारेषु प्रतिसन्धानवर्जने ।
अन्यदा तद्वर्जने वा सर्वदा प्रतिसन्धितः ॥ १२० ॥

अन्यूनाधिकभावा स्यात्सोत्तमा मध्यमाऽधमा ।

ஆத்மஞான சித்தியும் அவ்வாறே மூன்று வகைப்படும். பெருத்த பல பணிகளிடையேகூட, கவனமில்லாத நிலையிலும் கூடத் தொடர்ந்திருக்கிற பூர்ணமான ஆத்மஞானம் உத்தமம். வேறு பணிகளில் ஈடுபடும்போது கவனத்துடன் மனத்தைச் செலுத்தியும் வேலையற்றபோது இயற்கையாகவும் ஏற்படுகின்ற ஞானசித்தி மத்தியமம். எப்போதும் கவனமும் பயிற்சியும் கூடினால் மட்டுமே ஏற்படுவது அதமம்.

अत्रोत्तमेव संसिद्धेःपरा काष्ठा निरूपिता ॥ १२१॥
स्वप्नादिष्वप्यवस्थासु यदा स्यात्परमा स्थितिः ।
विचारक्षणतुल्येव सिद्धिः सा परमोत्तमा ॥ १२२॥

இங்கு உத்தமமான சித்தியே மேலான எல்லையெனக் கூறப்பட்டுள்ளது. கவனத்துடன் ஆத்மவிசாரம் செய்யும்போது இருப்பதுபோல் கனவிலும் வெளிப்பணிகளில் ஈடுபடும்போது மேலான ஆத்மஞானம் இருக்குமேயாகில் அது மிக உத்தமமானது.

सर्वत्र व्यवहारेषु यत्नात्संस्कारबोधतः ।
यदा प्रवृत्तिः सिद्धेः सा परा काष्ठा समीरिता ॥ १२३॥
अयत्नेनैव परमे स्थितिः संवेदनात्मनि ।
अव्याहता यदा सिद्धिस्तदा काष्ठां समागता ॥ १२४॥

ஆத்மஞானம், உட்பதிந்து வெளி வியவஹாரங்களில் கடு முயற்சியுடன் ஈடுபடும்படி நேர்வதே சித்தியின் மேலான எல்லை. ஞான வடிவான ஆத்மாவில் முயற்சியின்றி நிலைத்திருப்பதும் அந்நிலை தடைபடாதிருப்பதும் எல்லைக்கு வந்ததன் அடையாளம்.

व्यवहारपरो भावात्पश्यन्नपि न पश्यति ।
द्वैतं तदा हि सा सिद्धिः पूर्णतामभिसङ्गता ॥ १२५॥
जागरादौ व्यवहरन्नपि निद्रितवद्यदा ।
स्थितिदा हि सा सिद्धिः पूर्णतामभिसङ्गता ॥ १२६॥

வெளி வியவஹாரத்தில் ஈடுபட்டும் பேதத்தை உணர்ந்தும் அதனைப் பொருட்படுத்தாதிருப்பானேயானால் சித்தி நிறைவே அடைந்துவிட்டது. விழித்துக்கொண்டிருக்கும்போது வெளி வியவஹாரத்தில் ஈடுபட்ட பின்னரும்

தூங்கினவன்போல் முன்பின் தொடர்பின்றி இருப்பானேயாகில் ஞானம் நிறைவே அடைந்துவிட்டது.

एवं सिद्धिमनुप्राप्तः सिद्धेषूत्तम उच्यते ।
व्यवहारपरो नित्यं न समाधिं विमुञ्चति ॥ १२७॥
कदाचिदपि मेधावी स सिद्धेषूत्तमो मतः ।
ज्ञानिनां विविधानां च स्थितिं जानाति सर्वदा ॥ १२८॥
स्वानुभूत्या स्वान्तरेव स सिद्धषूत्तमा मतः ।

இத்தகைய சித்தி பெற்றவன் சித்தி பெற்றவர்களில் சிறந்தவன். வெளி வியவஹாரத்தில் ஈடுபட்டவனாயிருந்தும் எப்போதும் சமாதி நிலையை விடாதிருப்பவனும், தன்னுள்ளே தான் பெற்ற அனுபவத்தைக்கொண்டு பலதரப்பட்ட ஞானிகளின் நிலையை நன்கு உணர்பவனும் சித்தர்களில் சிறந்தவன்.

संशयो वापि कामो वा यस्य नास्त्येव लेशतः ॥ १२९॥
निर्भयो व्यवहारेषु स सिद्धेषूत्तमो मतः ।
सर्वं सुखं च दुःखञ्च व्यवहारञ्च जागतम् ॥ १३०॥
स्वात्मन्येवाभिजानाति स सिद्धेषूत्तमो मतः ।
अत्यन्तं बद्धमात्मानं मुक्तञ्चापि प्रपश्यति ॥ १३१॥
यः स्वात्मनि स सर्वात्मा स सिद्धेषूत्तमो मतः ।

ஆத்ம ஞானத்தில் ஐயமோ அடையவேண்டியதென்று வெளிப்பொருளில் ஆசையோ வியவஹாரங்களில் பயமோ இல்லாதவனும் சுகத்தையும் தூக்கத்தையும் அதுபோன்ற உலக வியவஹாரத்தையும் கண்ணாடி போன்ற தன் ஆத்மாவில் பிரதிபிம்பமாகக் கண்டு அதனால் விகாரமடையாதிருப்பவனும் தனது ஆத்ம ஞானனுபவத்தின் அடிப்படையில் கட்டுப்பட்டுள்ள ஜீவனையும் கட்டுப்பெறாத ஆத்மாவையும் எங்கும் காண்பவனும் சித்தி பெற்றவர்களில் சிறந்தவன்.

यः पश्यन्बन्धजालानि सर्वदा स्वात्मनि स्फुटम् ॥ १३२॥
मोक्षं नापेक्षते क्वापि स सिद्धेषूत्तमो मतः ।

ஆத்மாவாகிய தானே எல்லாமாக எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாக உணர்ந்ததால் எல்லா ஜீவர்களும் கட்டுப்பட்டிருப்பதைக் கண்டாலும் அது பொய்யான கட்டென உணர்ந்து அதிலிருந்து விடுபடுவதை அவசியம் எனக் கருதாதிருக்கிறனோ அவனே உத்தமன்.

*(ஆத்ம ஞானியின் முக்கியமான அடையாளம், ஆத்மா, நித்ய முக்தன் என்ற உணர்வும் எல்லாரிடமும் எங்கும் ஆத்மாவைக் காண்பதும்தான். ஆத்மாவாகக் கண்டால் அதற்குப் பந்தம் கிடையாது. கட்டுப்பட்ட ஜீவனாகக் கண்டால் ஆத்ம ஞானம் ஏற்படவில்லை என்றாகும். அதனால் அவனளவில் எல்லோரும் முக்தர்களே. மற்றவர் கட்டுண்டதாக உணர்வது அவர்களது அறியாமையின் விளைவு. அறியாமை அகல அகலப் போலியாயிருந்த பந்தம் விலகும். அதற்கு முயற்சி தேவை இல்லை. அதனை விரும்பிப் பெற அவசியமில்லை. ஞானம் ஏற்படாதவரை ஞானத்திற்கான முயற்சியே மோக்ஷத்திற்கான முயற்சியுமாகும்.)*

सिद्धोत्तमोऽहमेवेह न भेदस्त्वावयोः क्वचित् ॥ १३३ ।
एतद्व ऋषयः प्रोक्तं सुस्पष्टमनुयुक्तया ।
एतन्मयोक्तं विज्ञाय न क्वचित्परिमुह्यति ॥ १३४ ॥
इत्युक्त्वा सा परा विद्या विरराम भृगूद्वह ।
श्रुत्वैतदृषयः सर्वं सन्देहमपहाय च ॥ १३५ ॥
नत्वा शिवादीन् लोकेशान् जग्मुः स्वं स्वं निवेशनम् ।

ருஷிகளே! அந்த சிறந்த சித்தன் நானே. எனக்கும் அவனுக்கும் இடையே வேற்றுமை இல்லை. தாங்கள் கேட்டபடி நான் வெளிப்படையாகக் கூறிவிட்டேன். நான் கூறியுள்ளதை அறிந்தவன் எங்கும் கலக்கமடையமாட்டான்" எனக் கூறி அந்த பரவித்யையாகிய தேவி மௌனமானாள். பரசுராமரே, ருஷிகளும் இதனைக் கேட்டு ஐயந் தெளிந்தவர்களாக சிவபெருமான் முதலானோரை வணங்கித் தம் தமது இடம் சென்றனர்.

विद्यागीता मयैषा ते प्रोक्ता पापौघनाशिनी ॥ १३६ ॥
श्रुत्वा विचारिता सम्यक् स्वात्मसाम्राज्यदायिनी ।
विद्यागीताऽनुत्तमेयं साक्षाद्विद्यानिरूपिता ॥ १३७ ॥
पठतां प्रत्यहं प्रीता ज्ञानं दिशति सा स्वयम् ।

सम्सारतिमिरांभोधौ मज्जतां तरणिर्भवेत् ।। १३८ ।।

इति त्रिपुरारहस्ये ज्ञानखण्डे
श्रीविद्यागीता नाम विंशोऽध्यायः ।

நான் கூறியுள்ள வித்யாகீதை எல்லாப் பாபங்களையும் போக்க வல்லது. நன்கு கேட்டு விசாரித்துப் பொருளுணர்ந்தால் ஆத்மா எனும் பேரரசையே தரவல்லது. நேரிடையாக வித்யாதேவி உபதேசித்தது. தினமும் படித்துவர தானே ஞானத்தைத் தரும். ஸம்ஸாரம் என்ற இருண்ட கடலில் மூழ்குபவர்களுக்கு ஓடமாக அமையும்.

*இவ்வாறு திரிபுரா ரஹஸ்யம் ஞானக்ண்டத்தில் ஸ்ரீவித்யாகீதையாகிய இருபதாவது அத்யாயம் முற்றிற்று.*

# एकाविंशोऽध्यायः

## இருபத்தோராவது அத்தியாயம்

श्रुत्वेत्थं भार्गवो रामः दत्तात्रेयमुनीरितम् ।
अविद्याजालविभ्रान्तेः मुक्तप्रायो बभूव ह ॥१॥
पुनः पप्रच्छत्रिपुरसुतं किंचिन्नत्वा सुभक्तितः ।

இவ்வாறு ஸ்ரீ தத்தாத்ரேயர் கூறியதைக் கேட்டு பரசுராமர் அறியாமைக்குவியலால் ஏற்பட்ட மதிமயக்கத்திலிருந்தும் வெகுவாக விடுபட்டவரானார். மறுபடியும் பக்தியுடன் ஸ்ரீ தத்தரை வணங்கி ஒரு சிறு சந்தேகம் பற்றிக் கேட்டார்.

भगवन्ब्रूहि विज्ञानसाधनं सुविनिश्चितम् ॥२॥
सारभूतं च सुलभं यतसाक्षात्फलदायकम् ।
ज्ञानिनां लक्षणं चापि येन ज्ञास्यामि तान्द्रुतम् ॥३॥
ज्ञानिनां देहसम्योगे वियोगे च स्थितिं तथा ।
व्यवहारे कुर्वतां चाप्यनासक्तंमनः कथम् ॥४॥
एतत्सर्वं सुकृपया स्पष्टं मे वक्तुमर्हसि ।

பகவானே! ஞானத்திற்கான நிச்சயமான சாதனம் எது? எது சாரமானது? எது எளிதானது? எது நேரிடையாக பலன் அளிக்கவல்லது? ஞான-மடைந்தவனின் அடையாளம் எது? ஞானிகளை சீக்கிரமாக அறிந்துகொள்ள எவ்வாறு இயலும்? ஞானிக்குத் தேகத்துடன் கூடி வியவஹாரம் செய்யும்போது உடல் தொடர்பற்ற ஸமாதியிலும் உள்ள நிலை எது? உலகோடு பழகும்போது அவர்கள் மனம் மட்டும் பற்றற்று எப்படி இருக்கமுடியும்? இவற்றைப் பரிவுடன் கூறுவீர்களாக" என்று கேட்டார்.

एवमत्रिसुतः पृष्टः जमदग्निसुतेन वै ॥५॥
सन्तुष्टः प्राहकरुणासिन्धुः संबोध्य भार्गवम् ।

இவ்வாறு பரசுராமனால் கேட்கப்பட்ட தத்தகுரு மனமகிழ்ந்து கருணைக்கடலாகி இளகி பரசுராமனைக் கூப்பிட்டுச் சொன்னார்.

शृणु राम प्रवक्ष्यामि रहस्यं ज्ञानसाधनम् ॥ ६ ॥
ज्ञानस्य साधनं मुख्यं देवतानुग्रहः परः ।
यः सर्वभावतः स्वात्मदेवतामुपसङ्गतः ॥ ७ ॥
तस्य ज्ञानं सुसुलभं भवतीति विनिश्चयः ।

ராமரே! ஞானத்திற்கு ஸாதனம் மிகவும் ரஹஸ்யமானது. அதனைக் கூறுகிறேன். தைவ அருளே முக்யமான ஞானஸாதனம், எவன் எல்லா எண்ணங்களாலும் தான் வழிபடுகின்ற தேவதையைச் சரணடைகிறனோ அவனுக்கு ஞானம் எளிதில் கிடைக்கும் என்பது தீர்மானம்.

एतत्सर्वोत्तमं राम प्रोक्तं ज्ञानस्य साधनम् ॥ ८ ॥
अन्यानपेक्षमेतत्तु फलसंसाधने क्षमम् ।
एतद्विहायान्यदत्र न सम्यक्फलदं भवेत् ॥ ९ ॥
शृण्वत्र कारणं राम सकारणमिदं भवेत् ।

தைவ அருளே மிக்க சிறந்த ஸாதனம். இதுவே வேறொன்றையும் எதிர்பாராமல் பயன்தரவல்லது. இதனைத் தவிர வேறொன்றும் முழுப்பலனைத் தராது. அதற்கொரு காரணம் உண்டு. அதனைக் கூறுகிறேன்.

विज्ञानं केवलचितिर्या सर्वस्यावभासिका ॥ १० ॥
तस्यावभासरूपायाः कल्पितावरणं तु यत् ।
विचारात्तद्व्यपोहेन तत्स्वरुपोपलक्षणम् ॥ ११ ॥
तच्चान्येषां बहिर्भावतत्पराणां सुदुर्लभम् ।

ஆத்ம ஞானம் என்பது எல்லாவற்றையும் துலக்குகின்ற பேரறிவு. அது தானே தன்னை விளக்கிக் கொள்கின்ற ஆத்மாவேயாகும். அதன்மேல் மனம் கல்பனையால் அமைத்த மறைப்பை சிரவணம் மனனம் நிதித்தியாஸனம் என்ற ஆத்மவிசார முறையால் அகற்ற ஸோஹம் "ஆத்மாவே நான்" என்ற அனுபவம் கிட்டும். வெளிப்பொருள் நாட்டமுள்ளவருக்கு இந்த அனுபவம் கிட்டாது.

भक्तानामन्यपरताहानेन तत्परत्वतः ॥ १२ ॥
सुलभं शीघ्रसम्प्राप्यं भवत्येव सुनिश्चितम् ।
देवतातत्परस्त्वेवं भूत्वा स्वल्पान्यसाधनः ॥ १३ ॥
ज्ञात्वा कथञ्चिदात्मानं अन्यान्प्रति निरूपयेत् ।
निरूपयन्सदा राम समावेशं समाप्नुयात् ॥ १४ ॥

பக்தர்களுக்கு வேறுபொருளில் நாட்டம் குன்றிவிடுவதால் தேவதையிடத்திலேயே ஈடுபாடுகொண்டிருப்பதால் அது எளிதில் கட்டாயம் கிட்டுகின்றது. தேவதையிடத்தில் முழு ஈடுபாடுள்ளவன் வேறு சாதனங்கள் குறைவாக இருந்தாலும் சிரமப்பட்டுத் தன்னை உணர்வான். பிறருக்கு உணர்த்துவான். பிறகு தானே தேவதையிடம் தன்மயப்பட்டுவிடுவான்.

एवं निरूपणाद्यैस्तु समावेशे दृढे सति ।
शिवातामाप्य तच्चित्तं हर्षोद्वेगविवर्जितम् ॥ १५ ॥
यत्र तत्र व्रजति तत् सर्वं तच्छिवसात्कृतम् ।
करोत्युत्तमविज्ञानी जीवन्मुक्तपदस्थितः ॥ १६ ॥

இவ்வாறு தான் உணர்ந்து பிறருக்கு உணர்த்தி அதிலேயே ஈடுபடுவதால் மனம் திடமாக ஒன்றிப்போனதும் மனம் சுத்த ஞான வடிவமேயாகி எக்களிப்பும் கொதிப்பும் நீங்கினவனாக, எதெதனை உணர்கின்றானோ அதனை சிவார்ப்பணமாக்கிச் சிவமாகக்கண்டு உயர்ந்த ஞானியாகி ஜீவன் முக்தனாகிறான்.

तस्मात्सुभक्तियोगेनान्येभ्यो भूयो निरूपणम् ।
श्रेष्ठं साधनमेतत्तु नान्यदेतत्समं भवेत् ॥ १७ ॥
भक्त्या निरूपणसमं न भवेदन्यसाधनम् ।

அதனால் பக்தியால் இறைவனிடம் ஒன்றி ஆத்மதத்வ விளக்கம் பெற்றுப் பிறருக்கும் அதனை விளக்குவதுதான் மேலான வழி, இதற்குஈடாக வேறொரு ஸாதனமில்லை.

ज्ञानिनां लक्षणं राम दुर्विज्ञेयं भवेत्खलु ॥ १८ ॥
यतः सर्वान्तरं तत्तु नेत्रवागाद्यगोचरम् ।
न निरूपयितुं शक्यं लक्षितुं वाऽपरैः क्वचित् ॥ १९ ॥

ஞானிகளைக் கண்டுபிடிப்பது மிகக்கடினம். ஞானம் எல்லாவற்றின் உள்ளுறைந்திருப்பது. வெளிப்படையாகக் கண்ணால்காண முடியாது. பேசி உணர்த்த முடியாது. அதனை இனம் காட்டவோ விளக்கிச் சொல்லவோ இயலாது.

यथा शास्त्रज्ञता लोके त्वन्यैर्न ज्ञायते क्वचित् ।
देहवस्त्रभूषाद्यैरेवमन्यैर्न वेद्यते ॥ २० ॥
विद्वत्ता हि स्वसंवितिमात्रवेद्या न चान्यथा ।
यथा संस्वादितरसरसज्ञत्वं हि भार्गवम् ॥ २१ ॥
तथाऽपि चतुरैर्विद्यावद्भिस्तद्भाषणादिभिः ।
वेद्यते हि यथा स्वस्य मार्गः सूक्ष्मपिपीलिकैः ॥ २२ ॥

உலகில் உடலமைப்பைக் கொண்டோ, ஆடையணிகளைக் கொண்டோ மற்றவையாலோ எப்படி ஒருவன் பெற்றுள்ள நூலறிவை உணர முடியாதோ அப்படியே ஞானியே ஞானத்தையும் உணர முடியாது. அறிவு என்பது தான் மாத்திரம் உணரக்கூடியது. பிறருக்கு விளக்கத்தக்கதல்ல. அறிவாளியே அறிவாளியுடன் கூடிப்பழகி எறும்பின் வழியை எறும்பு அறிவதுபோல் உணரலாம்.

सन्ति स्थूललक्षणानि त्वनेकान्तानि तानि तु ।
सूक्ष्मलक्ष्माणि चान्यानि दुर्विज्ञेयानि वै परैः ॥ २३ ॥
निरूपणं भाषणं च साधनाभिनयस्तथा ।
ज्ञानिनामिव चान्यैस्तु कर्तुं शक्यो हि लक्ष्यते ॥ २४ ॥

வெளிப்படையாகச் சில அடையாளங்கள் உண்டு. அவை திட்டமானவை அல்ல. ஸூக்ஷ்மமான அடையாளங்கள் எளிதில் அறிய முடியாதவை. ஞானிபோன்று வேஷம் போடுபவனும் ஞானியைப் போல் பேசமுடியும். ஆத்மாவைப்பற்றி விளக்க முடியும். ஞான ஸாதனங்களைப் பெற்றுள்ளதாகக் காட்டிக்கொள்ள முடியும்.

अनिर्मलान्तःकरणैरभ्यस्तं ज्ञानसाधनम् ।
स्थिरीभवति यत्तेषां लक्षणं तत्प्रकीर्तितम् ॥ २५ ॥

மனத்தெளிவற்றவர்கள் ஞான ஸாதனங்களைத் திரும்பத் திரும்பப் பயின்று வர ஞானம் திடப்படும். அதனால் அதற்குரிய அறிகுறிகள் சொல்லப்படுகின்றன.

यस्य मानावमानौ च लाभालाभौ जयाजयौ ।
नेषद्विशेषितुं शक्यौ विद्यात्तं ज्ञानिषूत्तमम् ॥ २६ ॥
स्वात्मानुभववार्तासु पृष्टो गूढार्थमप्युत ।
असन्दिग्धः प्रतिवदेत् झटिति ज्ञानिषूत्तमः ॥ २७ ॥

எவனுக்கு மதிப்பும் அவமதிப்பும், விரும்பியது கிட்டுவதும் கிட்டாததும், வெற்றியும் தோல்வியும் சிறிதும் வேறுபாட்டை காட்டுவதில்லையோ அவன் சிறந்தஞானி, தன் ஆத்மானுபவத்தைப் பற்றிப் பேசும்போது ரகசியத்தைக் கேட்டாலும் தெளிவாக ஐயமின்றி பதில் கூறுவானேயானால் அவன் சிறந்த ஞானி.

यस्योत्साहो भवेत् ज्ञानवार्तास्वतितरां किल ।
निरूपणे ह्यवैमुख्यं ज्ञानिनो लक्षणं हि तत् ॥ २८ ॥
अनारम्भः स्वभावेन सन्तोषः शुचिचित्तता ।
महापत्स्वपि शान्तात्मा स भवेज्ज्ञानिषूत्तमः ॥ २९ ॥

ஞானத்தைப்பற்றிப் பேசுவதில்மிகுந்த உற்சாகமும், ஞானத்தை விளக்குவதில் சிறிதும் முகம் சுளிக்காமல் மகிழ்ச்சியுடன் ஈடுபடுவதும் ஞானியின் அடையாளம். உலக வியவஹாரத்தில் தானே ஈடுபடாதிருத்தல், மகிழ்ச்சி, தூய எண்ணங்கள், பெரும் துயரம் ஏற்பட்டபோதும் அமைதி இவை பெற்றவன் சிறந்த ஞானி.

एतदादीनि लक्ष्माणि भार्गवोत्तम ज्ञानिनाम् ।
स्वात्मनस्तु परीक्षायां सुस्थिराणि न संशयः ॥ ३० ॥
साधकस्तु सदा स्वात्मपरीक्षातत्परो भवेत् ।
यथा परीक्षणेऽन्यस्य निपुणः संप्रवर्तते ॥ ३१ ॥

இதுபோன்று உத்தம ஞானிகளின் அடையாளங்கள். தன்னைத் தானே சோதித்துக்கொள்ள ஏற்றவை. சோதனையின் பிழையின்றி நிலைத்தவை. ஸாதகன் எப்போதும் தன்னைச் சோதித்துக்கொண்டே இருக்க வேண்டும். பிறரை பரீக்ஷை செய்யும்போது ஸூக்ஷ்மமாக பரீக்ஷை செய்வதுபோல் தன்நிலை சோதனையிலும் ஈடுபடவேண்டும்.

तथा परीक्षन् स्वात्मानं सिद्धिं न कथमाप्नुयात् ।
यदाऽन्यगुणदोषाणामविचारणतत्परः ॥ ३२ ॥
स्वीयानां गुणदोषाणां विचारपरमो भवेत् ।
सदा सर्वसाधनानां प्राप्त्या सिद्धिमुपैष्यति ॥ ३३ ॥

அப்படித் தன்னைப் பரிசோதித்துக் கொள்பவன் சித்தியைக் கட்டாயம் பெறுவான். பிறரது குண தோஷங்களைப் பற்றி ஆராய்வதில் ஈடுபடாமல் தனது குண தோஷங்களை ஆராய்வதில் ஈடுபடும் போது எல்லா சாதனங்களும் நிரம்பப்பெற்று சித்தி அடைவான்.

एवं प्रोक्तानि लक्ष्माणि ज्ञानिनां भृगुनन्दन ।
स्वात्मनस्तु परीक्षायामुपयुक्तानि सर्वथा ॥ ३४ ॥
अन्येषां तु परीक्षायामनेकान्तान्यमूनि तु ।

பரசுராமரே! இவ்வாறு ஞானியின் அடையாளங்கள் கூறப்பட்டுள்ளன. இவை எப்போதும் தன்னைப் பரிசோதித்துக்கொள்ளப் பயன்படுபவை; பிறரைப் பரிசோதனை செய்வதில் இவை பிழை உள்ளதாகக்கூடும்.

यतो ये ज्ञानिनोऽत्यन्तशुद्धस्वान्ता भृगुद्वह ॥ ३५ ॥
तेषामापातसंसद्धसाधनैः सिद्धिरास्थिता ।
अतः पूर्ववासनानुरोधव्यापारतत्पराः ॥ ३६ ॥
कथं परीक्षणीयास्ते सामान्यव्यवहारिणः ।

இயற்கையாகவே முன் கூறப்பட்ட அபராத – கர்மவாஸனை களற்றுத் தூய உள்ளம் பெற்றவர்கள் மேலெழுந்த வாரியான சாதனங்களால் சித்தி பெறக்கூடும். ஆனால் முன்னிருந்த வாஸனையையொட்டி உலக வியவஹாரத்தில் (அஜ்ஞானியைப்போல்) ஈடுபடுவர். அதனால் ஸாமான்யமான உலக வியவஹாரத்திலுள்ள அஜ்ஞானி அவர்களை எப்படி சோதனை செய்ய முடியும்?

ज्ञानिनस्तु तत्परीक्षां कुर्युरभ्यासवैभवात् ॥ ३७ ॥
आपातदर्शनादेव यथा रत्नपरीक्षकाः ।

ரத்ன சோதனையில் தேர்ந்தவன் மேலெழுந்தவாரியாகப் பார்த்தே புரிந்து கொள்வதுபோல் ஞானிகளும் ஞானியின் சோதனையைக் பழக்கத்தால் எளிதில் செய்வர்.

मन्दज्ञानवतां देहसंस्था मूढसमैव हि ॥ ३८ ॥
यतो न तेषां सहजस्वमाधिप्राप्तिरस्ति हि ।
यावद्विमर्शनपरास्तावत्ते पूर्णरूपिणः ॥ ३९ ॥
यदा विचारविमुखाः तदा देहमयत्वतः ।
सुखदुःखजुषोत्यन्तं पशुतुल्यतया स्थिताः ॥ ४० ॥

ஞானம் மந்தநிலையிலிருக்கும்போது உடலபிமானமும் நடைமுறைகளும் அஜ்ஞானியினுடையதைப் போன்றதே. அவர்களுக்கு இயற்கையாக ஸமாதி நிலை ஏற்படுவதில்லை. ஆத்மநிலை அனுஸந்தானத்தில் ஈடுபட்டுள்ள வரையில் அவர்கள் முழுமை அடைந்தவர்களே, அனுஸந்தானமில்லாத நிலையில் தேஹமே ஆத்மாவாகக் கொண்டுள்ளபடியால் ஸுகதுக்கப்பாதிப் புள்ளவர்களாகவும் (பசு கால்நடை) போலவும் இருப்பார்கள்.

मध्ये मध्ये पूर्णदशासादनान्निर्वृत्ता अपि ।
तेषां या सा पशुदशा सद्विमर्शान्तरालगा ॥ ४१ ॥
न बन्धनाय भवति दग्धरज्जुरिव स्थिता ।

நடுநடுவே பூர்ண நிலையை அடைவதால் அமைதியுற்றிருந்த போதிலும் விட்டுவிட்டுவரும் ஆத்ம அனுஸந்தானங்களின் இடையே தோன்றுகிற பசு நிலை அவர்களுக்கு மோக்ஷத்திற்கு இடையூறாக பந்தத்திற்குக் காரணமாக ஆவதில்லை. தீயால் எரிக்கப்பட்ட கயிறு கயிற்றின் வடிவில் இருந்தாலும் எப்படிக் கட்டப்பயன்படாதோ அப்படி பசுநிலை பந்தம்தராது.

लाक्षारसैर्यदा वस्त्रप्रान्तयुग्मं सुरञ्जितम् ॥ ४२ ॥
व्याप्त्या वासोमध्यमपि सर्वं लाक्षारुणं भवेत् ।
एवं तस्य व्यवहृतिः चिदामर्शनमध्यगा ॥ ४३ ॥
चिद्रूपात्मैकतां याता न ततो बन्धनाय सा ।

துணியின் இரு ஓரங்களிலும் கொம்பரக்கின் சிகப்பால் செந்நிறம் பெற்றதும் தானே பரவி துணியின் நடுவிலும் கொம்பரக்கின் சிகப்பு ஏற்படுமோ அப்படி விட்டுவிட்டு வரும் ஆத்மானுஸந்தான நிலைகளின் இடையில் வரும் உலக

வியவஹாரமும் சித் எனும் பேரறிவாக ஆகி பந்தனத்தைத் தராது.

मध्यविज्ञानिनां देहसंयोगो नास्ति सर्वथा ॥ ४४ ॥
देहात्मत्वग्रहो देहसंयोगः प्रोच्यते बुधैः ।
स नास्ति मध्यविज्ञानवतो राम कदाचन ॥ ४५ ॥

மந்த நிலை தாண்டிய மத்திய ஞான நிலையில் உடல் பற்று சிறிதும் இருக்காது. உடல்ல ஆத்மா எனக் கொள்வதே உடல் பற்றாகும். அது மத்திய ஞானிக்கு ஒருக்காலும் ஏற்படாது.

अभ्यासातिशयात्तस्य मनो लीनं हि सर्वदा ।
सदा समाहितस्वन्तो व्यवहारो न तस्य हि ॥ ४६ ॥
यो देहयात्रानिर्वाहः सोऽपि तस्य सुषुप्तिवत् ।

சிறந்த பழக்கத்தால் (ஸங்கல்பமே ஏற்படாதவாறு மனத்தைக் கட்டுப்படுத்துவதால்) மனம் ஆத்மாவில் லயமடைந்தே இருக்கும். மனமடங்கிவிடுவதால் உலக வியவஹாரம் நின்றுவிடும். பசி தாகம் நீக்குவது போன்ற உடல் பராமரிப்பு, நல்ல தூக்கத்தில் இருப்பதைப் போல் உணர்வின்றி அமைந்துவிடும்.

यथा कश्चित्सुषुप्तिस्थो वासनामात्रतः क्वचित् ॥ ४७ ॥
किञ्चिदुक्त्वा च कृत्वा च न पश्चाद्वेद किञ्चन ।
यथा च मदिरामत्तो वदन्कुर्वन्न वेद वै ॥ ४८ ॥
एवमेष महायोगी लोक यात्राबहिर्गतः ।
किञ्चित्कदाचित्कुर्वंश्च न विजानाति तत्पुनः ॥ ४६ ॥
प्रारब्धवासनाभ्यां तु स देहो निर्वहेत्सदा ।

ஆழ்ந்து தூங்குபவன் இயல்பால் பேசுவான். செயல்புரிவான். பின்னர் விழித்துக்கொண்டதும் முன் பேசியதையோ செயலாற்றியதையோ உணரமாட்டான். கள்ளால் மயங்கியவனும் பேசுவான், எதையேனும் செய்வான். ஆனால் தான் செய்ததையும் பின்னர் உணரமாட்டான். அப்படியே யோகியும் உலக வியவஹாரத்திலிருந்து வெளிப்பட்டவனாக எதையோ எப்போதோ செய்தாலும் அதனைப் பின்னர் உணர்வதில்லை. இப்பிறவியில் பலனைத் தொடங்கிய வினைகளும் அதற்கேற்ற இயல்பாக

அமைந்த வாசனைகளும் தூண்ட உடல் உலக வியவஹாரத்தை நடத்திச் செல்லும்.

यस्तूत्तमः सुविज्ञानी देहस्तस्यापि नास्ति हि ॥ ५० ॥
व्यवहारं करोत्येष रथसारथिवत् स्थितः ।
यथा रथेन व्यापारं कुर्वन्न रथदेहकः ॥ ५१ ॥
सारथिः स्यादेवमेव देहव्यापारतत्परः ।

உயர்ந்த ஞானநிலை பெற்றவனுக்கு உடலபிமானமே இல்லை. தேரோட்டி போன்றது அவனது உலகியல். தேரோட்டி தேரால் தனது காரியங்களை நடத்திக்கொண்டாலும் தேரே தான் எனக் கொள்வதில்லை. அதுபோல் உடலைக்கொண்டு எல்லாவற்றையும் ஞானி நடத்திக்கொண்டாலும் தேஹமே தான்எனக் கொள்வதில்லை.

न देही नापि व्यापारी शुद्धसंवेदनात्मकः ॥ ५२ ॥
अन्तरत्यच्छसुस्वान्तो बहिर्व्यवहरत्यसौ ।

உடலிலும் உடற்செயல்களிலும் தனதென்று அபிமானமின்றி சுத்த ஞான வடிவில் நின்றவனாக, மனம் தெளிந்தவனாக வாழ்வான்.

यथा स्त्रीवेषितो नाट्ये द्वैरूप्यमुपसङ्गतः ॥ ५३ ॥
यथा क्रीडन्कुमारेण प्रौढस्तद्दोषवर्जितः ।
एवमेष जगत्क्रीडातत्परो निर्मलाशयः ॥ ५४ ॥

ஒரு நாடகத்தில் பெண்வேஷம் போட்ட ஆண்மகன் தான் ஆண் என்பதை மறவாமலே பெண்ணாகவும் பழகுகிறானோ, எப்படி குழந்தையுடன் சரிசமமாக விளையாடுகிற கிழவன் சிறுமையடைவதில்லையோ அப்படியே மனம் தெளிந்தவனாக உலகுடன் விளையாடுகிறான்.

मध्यज्ञानी निरोधस्य प्रकर्षेणाचलस्थितिः ।
अचलस्थितिरेतस्य विचारस्य प्रकर्षतः ॥ ५५ ॥
बुद्धेस्तु परिपाकेन मध्यमोत्तमयोर्भिदा ।
अत्र ते शृणु वक्ष्यामि सम्वाद ज्ञानिनोर्मिथः ॥ ५६ ॥

மத்தியம ஞானிக்கு மன அடக்கத்தின் வலிவால் சலனமில்லாத நிலை. உத்தம ஞானிக்கு ஆழ்ந்த ஆத்ம விசாரத்தின் வலிவால் மனவடக்கமும்

ஸமாதியும். அபாரதம் முதலிய தோஷங்களற்ற புத்தியின் தெளிவை யொட்டி மத்தியம ஜ்ஞானி உத்தமஜ்ஞானி என்ற வேற்றுமை. இது பற்றி இரு ஞானிகளிடையே ஏற்பட்ட ஸம்வாதத்தைக் கூறுகிறேன்.

पुरा हि पर्वतेशोऽभूत् राजा रत्नाङ्गदाह्वयः ।
स विपाशामनु पुरीमध्यासीदमृताभिधाम् ॥ ५७॥
तस्य पुत्रौ महात्मानौ स्थिताघतिमनीषिणौ ।
रुक्माङ्गदहेमांगदौ जनकसयातिवल्लभौ ॥ ५८॥

முன்பு மலைநாட்டரசன் ரத்நாங்கதன் என்றொருவன் இருந்தான். விபாசா நதியின் கரையில் அமைந்த அமிருத நாட்டை ஆண்டான். அவனுக்கு இரு மேதை மிக்க பிள்ளைகள். ருக்மாங்கதன், ஹேமாங்கதன் என. தந்தைக்குப் பிரியமானவர்கள்.

तत्र रुक्मांगदो ह्यासीच्छास्त्राणां पारदर्शनः ।
हेमांगदोऽतिविज्ञानी ज्ञानिनामुत्तमौऽभवत् ॥ ५९॥
तावुभौ निर्गतौ सर्वसेनाभिः परिवारितौ ।
मृगयार्थं वसन्तेषु ययतुर्गहनं वनम् ॥ ६०॥
तत्रानेकान्मृगान्व्याघ्रान्शशकान्महिषानपि ।
हत्वाऽत्यन्तपरिश्रान्तावासाद्य ह्रदमास्थितौ ॥ ६१॥

அவர்களில் ருக்மாங்கதன் சாஸ்திர நூல்களின் எல்லை அறிந்த அறிவாளி. ஹேமாங்கதன் பகுத்தறிவு மிக்கவன். ஞானிகளுக்குள் சிறந்தவன். இருவரும் சேனைகள் சூழ வஸந்த ருதுநாட்களில் வேட்டையாட அடர்ந்த காட்டை அடைந்தார்கள். அங்கு பல மான்கள், புலிகள், முயல்கள், எருமைகள் இவைகளைக் கொன்றுவிட்டுக் களைப்படைந்தவர்களாக ஒரு நீர்த்தேக்கத்தை அடைந்தனர்.

तदधदस्य परे पारे नयग्रोधे ब्रह्मराक्षसः ।
समस्तशास्त्रसारज्ञो विद्वद्भिर्विवदत्यलम् ॥ ६२॥
निर्जितान्भक्षयन्नास्ते चिरकालाध्दि भार्गव ।
रुक्मांगदश्चारमुखान्निशम्य वादकौतुकी ॥ ६३॥
गत्वा तत्र भ्रातृयुतस्तेन वादपरोऽभवत् ।
निर्जितस्तेन वादेषु गृहीतो ब्रह्मराक्षसा ॥ ६४॥

रुक्मांगदोऽथं तद्दृष्ट्वा प्राह हेमांगदस्तु तम् ।

அந்த நீர்த்தேக்கத்தின் அக்கரையில் ஆலமரத்தில் ஒரு பிரும்ம ராக்ஷஸன் இருந்தான். அவன் எல்லா சாஸ்திர நுணுக்கங்களையும் அறிந்தவன். அறிவாளிகளுடன் வாதத்தில் ஈடுபடுவான். தோற்றவர்களைத் தின்றுவிடுவான். வெகு நாட்களாக இவ்விதம் நடைபெற்று வந்தது. ருக்மாங்கதன் வேவுகாரர்கள் மூலம் இதனை அறிந்து வாதத்தில் நாட்டமுடையவனாக அங்கு சகோதரனுடன் சென்று வாதத்தில் ஈடுபட்டான். பிரும்ம ராக்ஷஸனால் வாத்த்தில் வெல்லப்பட்டவனாகப் பிடிபட்டான். ஹேமாங்கதன் அதனைக் கண்டு அந்த பிரும்ம ராக்ஷஸனைக் கேட்டான்?

यो ब्रह्मराक्षसैनं त्वं न भक्षयितुमर्हसि ॥ ६५ ॥
मां जित्वाऽवरजं ह्यस्य ततो नौ सह भक्षयं ।

ஏ பிரும்ம ராக்ஷஸனே! இவரை நீ சாப்பிடக்கூடாது. இவரது தம்பியான என்னை வென்று இருவரையும் சேர்த்து சாப்பிடுவாய்.

हेमांगदवचः श्रुत्वाः प्रोवाच ब्रह्मराक्षसः ॥ ६६ ॥
चिराय लब्धो ह्याहारो बुभुक्षा मां प्रबाधते ।
एतेन पारणां कृत्वा बिवदामि त्वया सह ॥ ६७ ॥
ततस्त्वामपि निर्जित्य भक्षितेन त्वया सह ।
अत्यन्तं तर्पिता भूयामिति मे नृप निश्चयः ॥ ६८ ॥

ஹேமாங்கதனின் வார்த்தையைக் கேட்டு பிரும்ம ராக்ஷஸன் கூறினான். வெகுநாட்கள் கழித்து உணவு கிட்டியுள்ளது. பசி என்னை மிகவும் துன்புறுத்துகிறது. இவனைக்கொண்டு உபவாஸத்தை முடித்துக்கொண்டு உன்னுடன் விவாதிக்கிறேன். அதன் பின் உன்னையும் வென்று உன்னையும் உண்டு மிகவும் திருப்தி அடைவேன் என்று என் தீர்மானம்.

चिरादेष वरः प्राप्तो वसिष्ठात्तु महात्मनः ।
कदाचिदागतः शिष्यो वसिष्ठस्य तु भक्षितः ॥ ६९ ॥
देवराताभिधस्तेन शप्तस्तेन महात्मना ।
इतः परं भक्षयित्वा मनुष्यं ब्रह्मराक्षस ॥ ७० ॥
दग्धं भवेत्तव मखमिति पश्चान्मया मुनिः ।
भूयः संप्रार्थितो मह्यं प्रायच्छद्वरमुत्तमम् ॥ ७१ ॥

वादेषु निर्जितान्मतर्यान् भक्षय त्वं समन्ततः ।

வெகுநாட்களுக்கு முன் மஹானான வசிஷ்டரிடமிருந்து இந்த வரம் பெறப்பட்டது. ஒருநாள் தேவராதன் என்ற வசிஷ்டரின் சிஷ்யரை நான் தின்றுவிட்டேன். அதனால் அவரால் "இதன் பிறகு மனிதனைச் சாப்பிட்டால் உனது வாய் வெந்து விடும்" என்று சபிக்கப்பட்டேன். மறுபடி என்னால் நன்கு வேண்டப்பட்ட அவர் வாதத்தில் வென்றவர்களைச் சாப்பிடு என்று உயர்ந்த வரத்தைத் தந்தார்.

इति तद्वादविजितान् भक्षयामि ततस्त्वहम् ॥ ७२ ॥
चिरायैष मया प्राप्त आहारः सर्वतोऽधिकः ।
भक्षयित्वा ततो वादे त्वां विजेष्यामि भूमिप ॥ ७३ ॥
इत्युक्त्वा भक्षणोद्युक्तं पुनर्हेमांगदोऽब्रवीत् ।

இவ்வாறு வாதத்தில் வென்றவர்களை அது முதற்கொண்டு உண்டுவருகிறேன். வெகுநாட்கள் கழித்து முன்பு கிடைத்தவற்றைவிடச் சிறந்த உணவு கிட்டியுள்ளது. அதை உண்டபின் உன்னையும் வாதத்தில் வெல்லுவேன் என்று கூறிச் சாப்பிடத் தொடங்கிய பிரும்ம ராக்ஷஸனிடம் மறுபடி ஹேமாங்கதன் கூறினான்.

ब्रह्मराक्षस मद्वाक्यं किञ्चित् शृणु सुयाचितः ॥ ७४ ॥
अपि किञ्चित्प्राप्य चैनं परित्यजसि तद्वद ।
दत्वा तुभ्यं तदेन तु मोचममि सहोदरम् ॥ ७५ ॥
इत्युक्तः प्राह भूयस्तं नृपं स ब्रह्मराक्षसः ।

"பிரும்ம ராக்ஷஸனே! உன்னை மிகவும் கெஞ்சிக் கேட்கிறேன். என் வார்த்தையைக் கேள். ஏதேனும் ஒன்றை என்னிடமிருந்து பெற்று அதற்கு ஈடாக இவரை விடுவிப்பாயா! அதனைச் சொல். அதனைத் தருகிறேன். அதன்பின் இவரை விடுவித்துக்கொள்கிறேன்" என்று கூறுகின்ற அரசனிடம் பிரும்ம ராக்ஷஸன் கூறினான்.

शृणु राजन्नास्ति तद्वै किञ्चिद्येनैनमुत्सृजे ॥ ७६ ॥
कः प्राणप्रियमाहारं त्यजेत्कालोपसङ्गतम् ।
किन्त्वेकः समयो मेऽस्ति प्रश्ना पे हृदि संस्थिताः ॥ ७७ ॥
तान्मे यदि प्रतिब्रूयाः तत्ते भ्रातरमुत्सृजे ।

ततो हेमांगदः प्राह पृच्छ तान्संवदामि ते ॥७८॥
इत्युक्तो नृपपुत्रं तं पप्रच्छ ब्रह्मराक्षसः ।
गूढप्रश्नान्क्रमेणैव तद्वक्ष्ये शृणु भार्गव ॥७९॥

"அரசே! இவனை விடுவிக்கக் கூடியதொன்றும் இல்லை. உரிய நேரத்தில் கிட்டிய உயிருக்கு உயிரான உணவை எவன் விடுவான்? ஆனால் எனக்கு ஒரு நியமம் உள்ளது. என் உள்ளத்தில் சில கேள்விகள் உள்ளன. அவற்றிற்கு விடையளிப்பாயேயாகில் உன் அண்ணனை விடுவிப்பேன்." ஹேமாங்கதன் 'அதனைக் கேள், விடையளிக்கிறேன்' என்று கூறினான். இதனை கேட்டதும் பிரும்ம ராக்ஷஸன் மறைபொருளுள்ள கேள்விகளைக் கேட்டான். பரசுராமரே அவற்றை உமக்குக் கூறுகிறேன், கேளும்.

आकाशाद्वितता का स्यात् सूक्ष्मा च परमाणुतः ।
सा किंरूपा स्थिता कुत्र वदैतन्मुनिपुत्रकः ॥८०॥
वितता चितिराकाशात् सूक्ष्मा च परमाणुतः ।
स्फुरद्रूपा स्वात्मसंस्था शृणु त्वं ब्रह्मराक्षस ॥८१॥

கேள்வி: ஆகாயத்தை விட விரிந்ததும், அணுவை விட நுண்ணியதும் எது? அதன் வடிவம் என்ன? எங்கு உள்ளது?

விடை : சித்தாகிய பேரறிவே ஆகாயத்தை விட விரிவானது. அணுவை விடச் சிறியது. ஒளி வடிவமுள்ளது. ஆத்மாவாகிய தன்னிலையில் உள்ளது.

एकापि साऽतिवितता कथं सूक्ष्मतरा भवेत् ।
स्फुरत्त्वं किं किमात्मा च वदैतन्नृपसत्तम ॥८२॥
कारणत्वाद्धि वितता सूक्ष्माऽग्राह्यत्वतोऽपि च ।
स्फुरत्त्वमात्मा च चितिः शृणु त्वं ब्रह्मराक्षस ॥८३॥

கேள்வி: அத்தனை விரிவுள்ளது ஒன்றாக இருப்பது எப்படி? விரிவானது நுண்ணியதாக எப்படியாகும்? ஒளி என்பது என்ன? ஆத்மா என்பது என்ன?

விடை : அது காரணப்பொருளானதால் காரியமான உலகை விட அது விரிந்தது, பொறிகளுக்கு அகப்படாமையால் நுண்ணியது. ஆத்மா, ஒளி, பேரறிவு மூன்றும் ஒன்றே.

स्थानं तदुपलब्धौ किं कथं वा सोपलभ्यते ।
उपलब्ध्या च किं वा स्यात् वदैतन्नृमनन्दन ॥८४॥
धीः स्थानमुपलब्धौ तु स्वैकाग्र्यात् सोपलभ्यते ।
उपलब्ध्या जनिर्न स्यात् शृणु त्वं ब्रह्मराक्षस ॥८५॥

கேள்வி: அந்த சித்தைக் காண எது இடம்? சித்து எப்படிக் காணப் பெறுகிறது? அதனைக் கண்டால் என்ன பலன்?

விடை : புத்தியே அதனைக் காணுமிடம். பார்க்கப்படுகிற பொருள் முதலிய இது அது என்ற உணர்வற்றதும் கலக்கமற்றதுமான ஒரே குறியுள்ள முனைவால் பெறலாம். அதனை உணர்ந்தால் பிறப்பில்லை.

धीः केयं ते समाख्याता तदैकाग्र्यं च कीदृशम् ।
जनिर्वापि भवेत्का सा वदैतन्नृपनन्दन ॥८६॥
चितिर्जाड्यावृता धीः स्यादैकाग्र्यं स्वात्मविश्रमः ।
जनिर्देहात्मताबुद्धिः शृणु त्वं ब्रह्मराक्षस ॥८७॥

கேள்வி : புத்தி என்பது என்ன? ஒரே குறியுள்ள முனைவு என்பது என்ன? பிறப்பு என்பது என்ன?

விடை : அவ்யக்தமென்று முன் விளக்கப்பெற்ற ஜடத்தன்மையால் மறைக்கப்பட்ட பேரறிவே புத்தி. ஞான ஒளியில் மற்றது துலங்காமல் அந்தப் பேரொளியிலேயே ஒடுங்கி அமைதியுறுவதுதான் ஒரு முனைப்படுதல் ஆகும். உடலில் தான் என்று எண்ணப்பதிவே பிறப்பு.

कस्माच्चितेर्नोपलब्धिः केन वा सोपलभ्यते ।
जनिः कथं वा सम्प्राप्ता वदैतन्नृपनन्दन ॥ ८८॥
अविवेकान्नोपलब्धि आत्मना सोपलभ्यते ।
जनिः कर्तृत्वाभिमानात् शृणु त्वं ब्रह्मराक्षस ॥८९॥

கேள்வி : சித் சக்தி ஏன் புலனாவதில்லை? யாரால் அதனைக் காண முடியும்? பிறப்பு ஏன் வந்தது?

விடை: ஆத்மாவையும் அது அல்லாததையும் பகுத்தறியாததால் சித் சக்தி புலனாகவில்லை. வேறு சாதன உதவியின்றி ஆத்மாவாகிய தானே தான் தன்னை உணர முடியும். இதனை நான் செய்கிறேன் என்ற அஹங்காரத்தால்

பிறப்பு வருகிறது.

कोऽविवेकस्त्वया प्रोक्तस्थात्मा वापि को भवेत् ।
को वा कर्तृत्वाभिमानो वदैतन्नृपनन्दन ॥ ६० ॥
अविवेकोऽपृथग्ज्ञानमात्मानं पृच्छ स्वात्मनि ।
तद्वासनाभिमानः स्याच्छृणु त्वं ब्रह्मराक्षस ॥ ६१ ॥

கேள்வி: பகுத்தறிவின்மை என்றால் என்ன? ஆத்மா என்பது என்ன? நான் செய்கிறேன் என்ற அகங்காரம் என்பது என்ன?

விடை : ஆத்மாவையும் மற்றதையும் ஒன்றாகக் கருதுவதே பகுத்தறிவின்மை. ஆத்மா என்பது என்னவென்று உன்னையே கேட்டுப்பார். (பிறர் கூறி அறியப்படுவதல்ல. நான் இல்லை என்றும் சொல்ல முடியாது. உள்நோக்கால் அறியத்தக்கது. அதனால் பிறரால் விளக்க இயலாதது). நான் செய்கிறேன் என்ற எண்ணத்தின் ஆழ்ந்த பதிவே அஹங்காரம்.

अविवेकः केन नश्येत्तस्य किं वा हि कारणम् ।
तस्यापि किं कारणं स्यात् वदैतन्नृपनन्दन ॥ ६२ ॥
विचारेण स नश्येद्वै वैराग्यं तस्य कारणम् ।
तत्कारणं दोषदृष्टिः शृणु त्वं ब्रह्मराक्षस ॥ ६३ ॥

கேள்வி : பகுத்தறிவின்மை எப்படி அழியும்? அதற்கு எது காரணம்? அதற்கும் எது காரணம்?

விடை: ஆத்ம – அநாத்ம விசாரத்தால் அது அழியும். அதற்கு பற்றின்மை காரணம். அதற்கு பொருளில் குற்றம் காணுதல் காரணம்.

को विचारो भवेत्किं वा वैराग्यं परिचक्षते ।
दोषदृष्टिश्च का प्रोक्त वदैतन्नृपसत्तम ॥ ६४ ॥
दृग्दृश्ययोः परीक्षातः दृश्ये तत्परिवर्जनम् ।
दुःखबुद्धिः सा हि दृश्ये शृणु त्वं ब्रह्मराक्षस ॥ ६५ ॥

கேள்வி : விசாரம் வைராக்யம் குற்றம் காணுதல் என்பது என்ன?

விடை : பார்ப்பது எது, பார்க்கப்பெறுவது எது? என்று சிந்தித்துப் பார்க்கப்பெறுவது சித்தல்ல என்று ஒதுக்குவதே விசாரமும் வைராக்யமும். காண்பதில் துக்கத்திற்கு அது காரணமாவதை உணர்வது குற்றப்பார்வை.

एतत्सर्वं केन भवेत् स वा कस्मादवाप्यते ।
तत्र वा किं निदानं स्यात् वदैतन्नृपनन्दन ॥ ९६ ।
देवतानुग्रहात् सर्वं भक्त्या स हि समाप्यते ।
निदानं सत्सङ्ग एव शृणु त्वं ब्रह्मराक्षस ॥ ९७ ॥

கேள்வி : விவேகம் வைராக்யம் தோஷதிருஷ்டி மூன்றும் எப்படி கிட்டும்? அதற்கு ஸாதனம் என்ன? அதற்கு எது ஸாதனம்?

விடை : தெய்வ அருளால் அது கிட்டும். பக்தியால் தெய்வ அருளும், நல்லோரிணக்கத்தால் பக்தியும் கிட்டும்.

का देवता च सम्प्रोक्ता का च सा भक्तिरिष्यते ।
सन्तश्च कीदृशाः प्रोक्ता वदैतन्नृपनन्दन ॥ ९८ ॥
देवता स्याज्जगद्धात्री भक्तिस्तत्परतोच्यते ।
सन्तः शान्ता दयावन्तः शृणु त्वं ब्रह्मराक्षस ॥ ९९ ॥

கேள்வி : தேவதை, பக்தி, நல்லோர் என்பவை எவை?

விடை : உலகின் அன்னையான தேவியே தேவதை. அவள்பால் நிலைத்த எண்ணமே பக்தி. அமைதியும் பரிவும் உள்ளவர்களே நல்லோர்.

सदा बिभेति को लोके सदा दुःखपरोऽपि कः ।
सदा दैन्ययुतः को वा वदैतन्नृपनन्दन ॥ १०० ॥
महाधनी सदाभीतः दुःखी बहुकुटुम्बवान् ।
आशाग्रस्तः सदा दीनः शृणु त्वं ब्रह्मराक्षस ॥ १०१ ॥

கேள்வி : உலகில் பயந்தவன் எவன்? எப்போதும் துன்புறுபவன் எவன்? எப்போதும் இரக்கத்துக்குரியவன் எவன்?

விடை : பெரும் செல்வமுள்ளவன் பயப்படுவான். பெருத்த குடும்பமுள்ளவன் துன்புறுவான். எப்போதும் அது தேவை – இது தேவை

என்றலைபவன் இரக்கத்துக்குரியவன்.

निर्भयः को भवेल्लोके निर्दुःखश्चापि को भवेत् ।
अदीनः सर्वदा कः स्यात् वदैतन्नृपनन्दन ॥१०२॥
निर्भयः सङ्गरहितो निर्दुःखो जितमानसः ।
ज्ञातज्ञेयस्त्वदीनात्मा शृणु त्वं ब्रह्मराक्षस ॥ १०३॥

கேள்வி : பயமற்றவன் எவன்? துன்பமற்றவன் எவன்? ஏழ்மையற்றவன் எவன்?

விடை : பற்றற்றவனே பயமில்லாதவன். மனத்தை அடக்கினவனே துன்பமற்றவன். அறியவேண்டியதை அறிந்தவனே ஏழ்மையற்றவன்.

दुर्लक्ष्यः स्यात्को हि लोके विदेहो दृश्यते च कः ।
निष्क्रियस्य क्रिया का स्यात् वदैतन्नृपनन्दन ॥१०४॥
जीवन्मुक्तो हि दुर्लक्ष्यो विदेहो देहवानपि ।
तत्क्रिया निष्क्रियस्योक्ता शृणु त्वं ब्रह्मराक्षस ॥ १०५॥

கேள்வி : உலகில் காண அரிதானவன் எவன்? உடலில்லாதவன் எவன்? செயலற்றவன் புரியும் செயல் எது?

விடை : ஜீவன் முக்தன் காண்பதற்கு அரிதானவன். அவனே உடலுடன் கூடியிருந்தும் அதில் பற்றில்லாமையால் தேகமற்றவன். அவனது செயலே செயலற்ற நிலையாகும்.

किमस्ति किं नास्ति लोके कोऽत्यन्तासम्भवी भवेत् ।
एतावदुक्त्वा नृपते मोचय द्रुतमग्रजम् ॥१०६॥
दृगस्ति नास्ति वै दृश्यं व्यवहारो ह्यसंभवी ।
उक्तमेतद्ब्रह्मरक्षो मुञ्च मद्भ्रातरं द्रुतम् ॥१०७॥

கேள்வி : எது உள்ளது ? எது இல்லாதது? எது எக்காலும் நடைபெற முடியாதது? இதற்கு விடை கூறி உன் அண்ணனை விடுவித்துக் கொள்வாய்.

விடை : உணரும் அறிவு உள்ளது. உணரப்பெறும் பொருள் இல்லாதது. அதனால் அதன் தொடர்பான வியவஹாரம் இருக்க முடியாது. நான்

எல்லாவற்றிற்கும் விடை கூறிவிட்டேன். என் அண்ணனை உடன் விடுவிப்பாயாக.

இந்தக் கதையின் முன்னுரை சிறிது கவனத்திற்குரியது. மூத்தவன் சாஸ்திர அறிவு மிக்கவன். இளையவன் பகுத்தறிவுமிக்கவன். சாஸ்திர அறிவு வெளி அறிவாகும். அதனைச் சிந்தனையால் சுய அறிவாக்கிக் கொண்டவனே அறிவாளி. சாஸ்திர அறிவு பிரும்மராக்ஷஸனுடன் வாதிப்பதில் பலனற்றதாக நிரூபிக்கப்பெற்றது. சாஸ்திரத்தின் மூலம் அறிந்ததைச்சுய அறிவில் ஏற்றித் தன் அறிவாக்கிக் கொண்டவன் வாதத்தில் வெற்றி பெறுகிறான். ஏட்டுச்சுரைக்காய் அவையில் உதவுவதில்லை.

श्रुत्वैतदथ सन्तुष्टो मुमोच ब्रह्मराक्षसः ।
रुक्माङ्गदं ततः पश्चादथ स ब्राह्मणो हि सः ॥ १०८ ॥
तेजस्विनं तपोमूर्तिं दृष्ट्वा ब्राह्मणरूपिणम् ।
पप्रच्छत् राजसुतौ को भवानिति शङ्कितौ ॥ १०६ ॥

இதனைக் கேட்டதும் மகிழ்ந்த பிரம்ம ராக்ஷஸன் ருக்மாய்கதனை விடுவித்தான். அதன் பிறகு அவன் அந்தணனாக ஆனான். ஒளி மிக்க தவமே வடிவுடைந்தது போன்ற பிராமண வடிவம் கொண்ட அவரை அரச குமாரர்கள் நீர் யார் என்று ஐயத்துடன் கேட்டனர்.

अथ प्राह ब्राह्मणाग्र्यः स्वं वृत्तं वै यथातथम् ।
अहं पुरा ब्राह्मणस्तु मगधेष्वभिविश्रुतः ॥ ११० ॥
वसुमानिति विख्यातः सर्वशास्त्रविशारदः ।
सभासु निर्जिता भूयो मया विद्याभिमानिना ॥ १११ ॥
विद्वांसः शतशो विप्रास्ततोऽत्यन्तसुगर्वितः ।

அதன்பின் அந்த அந்தணர்களுள் சிறந்தவர் கூறினார். "மகததேசத்தில் மிகவும் புகழ் பெற்ற வஸுமான் என்ற பிராம்மணனாக முன் இருந்தேன். எல்லா சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்றவன். ஸபையில் கல்வியில் மதிக்கத்தக்கவர்களான பல பிராம்மணவித்வான்கள் என்னால் வெல்லப்பெற்றனர். அதனால் மிகவும் செருக்குற்றவன் ஆனேன்.

कदाचिन्मगधेशस्य सभायामष्टकं मुनिम् ॥ ११२ ॥
परावरज्ञं संशान्तं चादार्थी सङ्गतोऽभवम् ।

शुष्कतर्केकनिपुण आत्मविद्याविचारणे ॥ ११३ ॥
ततो मया स आक्षिप्तः केवलं तर्कयुक्तिभिः ।
समाधानवचस्तस्य बह्वागमसुबृंहितम् ॥ ११४ ॥
दूषयित्वा तर्कजालैरधिक्षेपपरोऽभवम् ।

ஒரு நாள் மகத அரசனின் ஸபையில் கல்வியின் கரைகண்ட சாந்தரான அஷ்டக முனிவருடன் வாதத்தில் பொருதினேன். வரட்டு யுக்தி வாதத்தில் கைதேர்ந்த நான் ஆத்ம தத்துவ விளக்கத்தில் அவரை வரட்டு வாதத்தால் எதிர்த்தேன். அவரது பல கோட்பாடுகள் செறிந்த விடைகளை மறுபடி யுக்திகளால் கண்டித்து அவரைப் பற்றி அவதூறு கூறுவதில் இறங்கினேன்.

अधिक्षिप्तोऽपि बहुधा मया राजसभागतः ॥ ११५ ॥
शान्तस्तूष्णीं बभूवाथ शिष्यस्तस्य महात्मनः ।
काश्यपो मां क्रोधवशाच्छशाप नृपसंसदि ॥ ११६ ॥
आचार्य मेऽधिक्षिपसि त्वमस्थाने द्विजाधम ।
यतस्तस्माच्चिरं कालं ब्रह्मरक्षो भविष्यसि ॥ ११७ ॥

பலவாறு என்னால் அவமதிக்கப்பட்டும் அவர் அமைதியுடன் மௌனமாக இருந்தார். அந்தப் பெரியவரது சீடர் காசியபர் என்பவர் ஆத்திரமடைந்து ராஜ ஸபையில் " என் குருவை வீணே நிந்திப்பதால் நீ பிரும்ம ராக்ஷஸனாக வெகு காலம் இருப்பாய்" என சபித்தார்.

शप्त एवमहं तेन भीतोऽत्यन्तं तदा मुनिम् ।
वेपमानः प्रणम्याशु चाष्टकं शरणं गतः ॥ ११८ ॥
मयि सोऽथ दयां चक्रे विरोधिन्यपि शान्तधीः ।
शापस्यान्तं ददौ मह्यं तन्मे निगदतः शृणु ॥ ११९ ॥

இவ்வாறு அவரால் சபிக்கப்பட்ட நான் மிகவும் பயந்தவனாக நடுங்கிக்கொண்டு அஷ்டகரை உடன் வணங்கிச் சரணடைந்தேன். விரோதியான என்னிடமும் அமைதியுடன் அவர் கருணை காட்டினார். சாபத்தின் முடிவையும் எனக்கு அளித்தார். அதனைக் கூறுகிறேன் கேள்.

प्रश्नांस्त्वया मयि कृतान्प्रत्युक्तांश्च मया हि तान् ।
स्थापितान् केवलैस्तर्कैः यदेकः प्रतिवक्ष्यति ॥ १२० ॥

कश्चिद्विद्वांस्तदा शापाद्विमुक्तस्त्वं भविष्यसि ।
तच्छापादद्य ते मुक्तः चिराय नृपनन्दन ॥ १२१॥
तन्त्वां मन्ये महात्मानं ज्ञातज्ञेयं नृषूत्तमम् ।

"நீ என்னிடம் எழுப்பிய அதே கேள்விகளுக்கும் என்னால் விடை அளிக்கப்பட்டதற்கும் மறுபடி உன்னால் யுக்தியால் நிலை நிறுத்தப்பட்டதற்கும் எந்த வித்வான் விடை கூறுவானோ, அப்போது சாபத்தில் இருந்து நீ விடுபடுவாய்" என்றார். அதன்படி இன்று உம்மால் சாபத்திலிருந்து விடுவிக்கப்பட்டேன். அரச குமாரா! மஹாத்மாவாக அறியத்தக்கதனைத்தையும் அறிந்தவராக மனிதர்களுக்குள்ளே சிறந்தவராக உம்மை உணர்கிறேன்.

इत्युक्तस्तेन विप्रेण विस्मितोऽभून्नृपात्मजः ॥ १२२॥
ततो भूयो नृपसुतोऽनुयुक्तस्तेन सर्वशः ।
वसुमन्तं बोधयित्वा सम्यक्प्रागात्पुरं स्वकम् ॥ १२३॥
प्रणम्य वसुमन्तं तं सहितो भ्रातृसैनिकैः ।
एतत्ते सर्वमाख्यातं यत्पृष्टं भार्गव त्वया ॥ १२४॥
इति श्रीत्रिपुरारहस्ये ज्ञानखण्डे
राक्षसोपाख्यानं नाम एकविंशोध्यायः ।

இவ்வாறு அந்த அந்தணனால் கூறப்பட்ட அரசகுமாரன் மிகவும் வியப்படைந்தான். அந்தணனால் மேலும் விளக்கக்கோரப்பட்டதும் அரச குமாரன் வஸுமானுக்கு எல்லாவற்றையும் விளக்கி விட்டுத் தன் சகோதரனுடனும் சேனையுடனும் வஸுமானை வணங்கி விட்டுத் தன் நகரம் நோக்கிச் சென்றான். பரசுராமரே! நீர் கேட்டதனைத்திற்கும் விடையளித்துவிட்டேன்.

***இவ்வாறு திரிபுரா ரஹஸ்யத்தில் ஞானகண்டத்தில் ராக்ஷஸ வரலாறு அடங்கிய இருபத்தோறாவது அத்தியாயம்.***

# द्वाविंशोऽधयायः

## இருபத்திரண்டாவது அத்யாயம்

श्रुत्वैवं राक्षसकथां रामो भृगुकुलोद्वहः ।
पुनः पप्रच्छावधूतकुलेशं प्रश्रयाश्रयः ॥ १ ॥
भगवन् किं तेन पृष्टं शापमुक्ता द्विजेन वै ।
हेमांगदेन किं प्रोक्तम् एतन्मे कृपया वद ॥ २ ॥
कौतुक्यत्यन्तमत्राहं न तदल्पं भवेत्क्वचित् ॥

இவ்வாறு ராக்ஷஸனின் வரலாற்றை பிருகுகுலத்தோன்றலான பரசுராமர் கேட்டு மறுபடியும் வணக்கத்துடன் அவதூதர்களின் குலபதியான தத்தரை கேட்டார். "பகவானே! சாபத்திலிருந்து விடுபட்ட அந்தணர் என்ன கேட்டார்? ஹேமாங்கதர் அதற்கு என்ன விளக்கம் தந்தார்? இதனைப் பரிவுடன் கூறுக! நான் அதனைக் கேட்க மிகவும் ஆவலுள்ளவன். அது சிறிய விஷயமாய் இராது."

इति पृष्टः पुनः प्राह दत्तात्रेयो दयापरः ॥ ३ ॥
राम तत्ते प्रवक्ष्यामि महार्थं तत्प्रभाषितम् ।
ततः पप्रच्छ वसुमान् हेमांगदमुपस्थितम् ॥ ४ ॥

இவ்வாறு கேட்கப்பட்ட தத்தாத்ரேயர் பரிவுமிக்கவராக மறுபடி கூறினார். பரசுராமரே! பெரும் பொருளடங்கிய அந்தப் பேச்சைக் கூறுவேன். வஸுமான் ஹேமாங்கதனைக் கேட்டார்.

राजपुत्र किञ्चिदहं पृच्छामि त्वं समीरय ।
अहमष्टकयोगीशात् तदज्ञासिषमादितः ॥ ५ ॥
भूयस्त्वदुक्त्या च सम्यक् विदितं परमं पदम् ।
किन्तु ते ज्ञाततात्वस्य कथं स्थितिरियं भवेत् ॥ ६ ॥
कथं ज्ञातसुविज्ञेयो व्यवहारपरायणः ।
ध्वान्तप्रकाशयोर्यद्वत्स्थितिरेकत्र सम्भवेत् ॥ ७ ॥
एतन्मे राजतनय ब्रूहि सम्यग्यथास्थितम् ।

அரச குமாரா! ஒரு சிறு கேள்வி கேட்பேன் ! விடை தருவீர். நான் அஷ்டக யோகியிடமிருந்து எல்லாவற்றையும் தொடக்கத்தில் இருந்து அறிந்தேன். மேலும் உமது விடையிலிருந்தும் அந்தப் பரதத்துவத்தை நன்கு உணர்ந்தேன். இவ்வாறு தத்துவ அறிவு பெற்ற உமக்கு இந்நிலை எப்படிப் பொருந்தும்! அறியத்தக்கது அனைத்தையும் நன்கு உணர்ந்த நீர் உலகியலில் நன்கு ஈடுபட்டிருப்பது எவ்வாறு இருளும் ஒளியும்போல் ஒரே இடத்தில் அமைவது எங்ஙனம்? இதனை. உள்ளது உள்ளவாறு விளக்குவீராக!

इत्यापृष्टः प्राह हेमांगदस्तं ब्रह्मणोत्तमम् ।। ८ ।।
ब्रह्मंस्ते भ्रान्तिरद्यापि न सम्यक् प्रविनाशिता।
व्यवहारेण किं ज्ञानं बाध्यते स्वात्मसम्भवम् ।। ९ ।।
व्यवहारवशाज्ज्ञानं बाध्यते चेततः कथम्।
पुरुषार्थस्य लाभः स्यात्स्वप्नज्ञानसमेन वै ।। १० ।।

இவ்வாறு கேட்கப் பெற்ற ஹேமாங்கதன் பிராமணரைப் பார்த்துக் கூறினார். "அந்தணரே! உமது கலக்கம் இன்னும் தெளிய வில்லை. தனது ஆத்மாவின் விளக்கம் எவ்வாறு வெளி வியவஹாரத்தால் பாதிக்கப்பெறும்? கனவில் ஏற்படும் ஞானம் போன்ற அந்த வியவஹார உணர்வால் ஸ்வரூப ஞானமாகிய ஆத்ம ஞானம் பாதிக்கப்படுமேயாயின் மோக்ஷம் என்ற புருஷார்த்தமே கிடைக்காது.

सर्वोऽपि व्यवहारोऽयं ज्ञानमाश्रित्य सम्भवेत्।
तज्ज्ञानं बाध्यते तेन कथं तन्मे समीरय ।। ११ ।।
ज्ञानं तदेव हि भवेद्यत्रेदं भासते जगत्।
सङ्कल्पाद्व्यवहारो हि ज्ञाने सर्वं प्रकाशते। १२ ।।

உலகின் நடப்பனைத்தும் அறிவை ஆதாரமாகக்கொண்டு ஏற்படுகிறது. அந்த (ஆதாரமான) அறிவை நடப்பு எப்படி பாதிக்கும்? இந்த உலகம் எதனை ஆதாரமாகக்கொண்டு தோற்றம் பெறுகிறதோ அதுதான் அறிவு. அறிவால் ஏற்பட்ட ஸங்கல்பத்தால்தான் உலக நடப்பு. ஆக அறிவில்தான் எல்லாம் துலங்குகிறது.

असङ्कल्पेन तद्रूपमनुलक्ष्य धिया सकृत्।
कृतार्थो बन्धनिर्मुक्तो भवतीति सुनिश्चयः ।। १३ ।।

तस्माद्ब्रह्मन्न ते प्रश्नः संमतोऽयं सुबुद्धिभिः।
पुनरस्तं प्राह वसुमान्नृपसूनवं महाशयम्॥ १४॥

இது அது என்ற எண்ண அலைகளுக்கு இடம் கொடாமல் அந்த ஞானத்தை சிறிது நேரம் ஆழ்ந்து நிதித்யாஸன முறையில் சிந்தித்து நிம்மதிபெற்று கட்டிலிருந்து விடுபடுவான் என்பது நிச்சயம். அதனால் உமது கேள்வி அறிவாளிகளுக்கு உடன்பாடானதல்ல என்று கூறிய பெருமனம் படைத்த அரசகுமாரனை மறுபடி வஸு"மான் கேட்டான்.

सत्यं राजकुमारैतन्मयापीत्थं सुनिश्चितम्।
स्वरूपं निर्विकल्पं हि सम्वेदनमिहोच्यते॥ १५॥
सविकल्पत्वमात्रे पुनर्भ्रान्तिः कुतो न हि।
विकल्प एव हि भ्रान्तिर्यथा रज्जौ भुजङ्गमः॥ १६॥

அரச குமாரனே! நீர் கூறுவது சரியே. எனக்கும் அதே தீர்மானம்தான். அது இது என்ற விகல்பங்கள் தோன்றாத பேரறிவே அறிவு. ஆனால் அதில் அது இது என்ற எண்ண வரிசைகள் தோன்றுகிற வியவஹார நிலையில் பிரமை ஏற்படத்தான் செய்யும். கயிற்றில் பாம்பு உணர்வுபோல் மா பட்ட எண்ணங்கள் தோன்றுவது தானே பிரமை?

शृणु ब्रह्मन्न जानासि भ्रमाभ्रमविनिर्णयम्।
गगनं नीलमाभाति गगनं जानतामपि॥ १७॥
व्यवहारं च कुर्वन्ति नीलं नभ इति क्वचित्।
तावतैव तु तज्ज्ञानं न भ्रान्तिरभिधीयते॥ १८॥

(வஸு"மானுக்கு ஹேமாங்கதன் பதில் அளிக்கிறான்) அந்தணரே கேளும். பிரமை பிரமையின்மை என்றதனை நிர்ணயிக்கும் முறையை நீர் அறியவில்லை. ஆகாயத்தை (நிறமற்றதாக) நன்கு அறிந்தவர்களுக்கும் ஆகாயம் நீலமாகத்தான் தோன்றுகிறது. அவர்களே சில சமயம் நீல நிறமுள்ள ஆகாயமெனக் கூறுவர். அப்படி அவர்கள் கூறுவதாலேயே அந்த அறிவு பிரமை எனக் கூறப்படுவதில்லை.

अतत्त्वज्ञे हि सा भ्रान्तिस्तत्त्वज्ञे सा प्रमैव हि।
हत प्रामाण्यजीवं तज्ज्ञानं मृतमहाहिवत्॥ १६॥
दर्पणप्रतिबिंबस्य व्यवहारः समो भवेत्।

अभिज्ञस्यानभिज्ञस्य चाप्यतोऽस्ति भिदा तयोः ॥ २० ॥

தத்வமறியாதவனைப் பொறுத்தமட்டில் அது பிரமையே. தத்வமுணர்ந்தவன் விஷயத்தில் அது உண்மையறிவே. செத்த பாம்பு போல் அந்த பிரமை அறிவிலுள்ள நம்பிக்கை தன் உயிரை இழந்துவிட்டது. (பாம்பு என்று பிரமையால் அந்த பிரமையிலுள்ல பிரமாண புத்தியால் பயம் முதலியவை தோன்றுகின்றன. கயிற்றில் காண்கிற பாம்பில் அறிவாளிக்கு இது பாம்பு என்ற பிரமாண புத்தியில்லை. அதனால் அது பயம் தருவதில்லை.) கண்ணாடியில் பிரதிபலிக்கும் பொருள் பற்றிய அறிவில் அறிவாளிக்கும் அறிவிலிக்கும் உள்ள வேற்றுமையை இதனுடன் ஒப்பிடலாம்.

ज्ञस्य प्रमैव तज्ज्ञानं अज्ञस्य तु भ्रमात्मकम् ।
ज्ञानिनां ज्ञानमेव स्यात् सर्वोऽपि व्यवहारकः ॥ २१ ॥
दर्पणप्रतिबिंबानां व्यवहारेण संमितः ।
अभिज्ञानामतो भूयो न हि भ्रान्तेः समुद्भवः ॥ २२ ॥

ஞானிக்கு ஆகாயம் நீலமானது என்ற அறிவு ஸத்யமானதே. அறிவிலிக்கோ அது பிரமை. அதனால் ஞானிக்கு எல்லா வியவஹாரமும் பாதிப்பு ஏற்படுத்தாது. கண்ணாடியிலுள்ள பிரதிபிம்ப உணர்வுபோல் வேறுபட்ட இரண்டின் உணர்வு ஞானிக்கு ஏற்படாததால் பிரமை ஏற்படுவதில்லை.

*(கயிற்றில் பாம்பு என்ற உணர்வு பிரமையால் ஏற்படுகிறது. கயிற்றில் பாம்பைக் கண்டவன் மிரண்டு ஓடுகிறான். கயிறாக உள்ளதே தான் பாம்பாகத் தோன்றுகிறது என்று உணர்ந்தவன் பாம்பாகத் தோன்றும்போதும் கயிற்றை உணர்ந்தவனானதால் மிரள்வதில்லை. ஓடுவதில்லை. கண்ணாடியில் பிரதிபிம்பமாகப் பார்த்த பொருள் தெரியும்போது, கண்ணாடிதான் அப்படித் தெரிகிறது; கண்ணாடியைத் தவிர அங்கு வேறொன்றுமில்லை என்ற உணர்வும் ஏற்பட்ட பின் பிரமைக்கு வழியில்லை. பிரதிபிம்பம் தோன்றுகிறபோதே கண்ணாடி என்ற ஞானமும் ஏற்படுவதில் நடையொன்றுமில்லை இப்படி பிரதி பிம்பமும் கண்ணாடியும் வெவ்வேறென்ற உணர்வும், கண்ணாடிதான் பிரதிபிம்பமாக உள்ளதென்ற உணர்வும் சேர்ந்தே ஏற்படுவதால் அறிவாளிக்குக் கலக்கமில்லை. பிரதிபிம்பம் அவனிடம் யாதொரு பாதிப்பையும் விளைவிப்பதில்லை.*

*கயிற்றையே பாம்பாகப் பார்த்தவனுக்கு கயிறு ஒரு பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. உண்மையல்லாத பாம்பு எல்லா பாதிப்பையும் தருகிறது. கண்ணாடி என்ற உணர்வின்றி பிரதிபிம்பத்தை மட்டும் பார்த்துப் பாதிப்–*

*படைபவன் போல் அவன் கலங்குகிறான். பிரதி பிம்பமும் பாம்பும் ஞானியிடம் பாதிப்பைத் தரவில்லை. அறிவற்றவனிடம் பாதிப்பைத் தருகிறது. இதுதான் இங்குள்ள வேற்றுமை.)*

केवलाज्ञानजनितं ज्ञानेन विनिवर्तते।
दोषेण जनितं कस्माद्विलीयेद्ज्ञानमात्रतः ॥ २३ ॥
अत एव तैमिरिकः पश्येत् जानन्नपि द्वयम्।

தனித்த அஜ்ஞானத்தால் ஏற்பட்ட உணர்வு ஞானம் ஏற்பட்டதும் அகன்றுவிடும். பார்க்கின்ற தன் தோஷத்தால் ஏற்பட்ட அஜ்ஞானம் ஞானத்தால் எப்படி அகலும்? கண்ணில் பூவிழுந்து மறைப்பு ஏற்பட்டவனுக்கு பார்க்கும் பொருளனைத்தும் அவன் தான் பார்ப்பதும் ஒன்றுதான் என்று உணரும்போதே இரண்டாகத் தெரியும்.

*(கண்ணாடிதான் பிரதிபிம்பமாகத் தெரிகிறது என்று உணர்ந்த பின்னரும் பிரதிபிம்பம் தெரிவதை அகற்ற முடியாது. பாம்பல்ல கயிறுதான் என்று உணர்ந்த பிறகும் பாம்பு என்ற தோற்றத்தை அகற்ற முடியவில்லை. ஆனால் பிரதிபிம்பமும் பாம்பும் பாதிக்காமல் இருக்கச் செய்யலாம். அதுபோல் ஞானிக்கும் வியவஹார தசையில் இரண்டின் உணர்வை அகற்ற முடிவதில்லை. ஆகாயத்தில் சந்திரன் ஒருவன்தான் உண்டு என்ற நிச்சய புத்தி இருந்தும் திமிர (கண் படல மறைப்பு) நோயால் வருந்துபவன் ஆகாயத்தில் இரு சந்திர பிம்பங்களைப் பார்ப்பதைத் தவிர்க்க முடிவதில்லை ஒன்றுதான் இரண்டாகக் காட்சி தருகிறதென்ற உணர்வால் இரண்டு சந்திரன்களைப் பார்த்ததில் வியப்பேற்படுவதில்லை. அதுபோல் ஞானியானவன் அஜ்ஞானத்தால் வரும் காட்சிகளைத் தவிர்க்க முடிவதில்லை. ஆனால் ஆஜ்ஞானத்தால் காண்கிற காட்சி உண்மையல்ல என்று உணர்வதால் பாதிப்புறாமல் கலக்கமுறாமல் நிற்கிறான்).*

जगदाभास एषस्तु कर्मदोषसमुद्भवः ॥ २४ ॥
तस्मादाकर्मविलयं व्यवहारो न लीयते।
समाप्ते कर्मणि ततः शिष्येदद्वयचिन्मयम् ॥ २५ ॥
तस्मान्नास्तयेव विज्ञानां कदापि भ्रान्तिसम्भवः।
इति श्रुत्वाः पुनर्विप्रः पप्रच्छ नृपनन्दनम् ॥ २६ ॥

ஞானிக்கு உலகின் தோற்றம் வினைப்பயனாக வந்தது. வினை கரையும் வரை உலக வியவஹாரம் மறையாது. வினை தீர்ந்ததும் இரண்டற்ற பேரறிவு மட்டுமே மீதமாகி நிற்கும். அதனால் ஞானிக்குப் பிரமை எப்போதும் ஏற்படுவதில்லை. இதனைக் கேட்ட அந்தணர் மறுபடி அரச குமாரனைக் கேட்டார்.

अहो नृपात्मज कथं ज्ञानिनां कर्म सम्भवेत्।
ज्ञानाग्निसंस्पर्शनेऽपि कर्मतूलः कथं स्थितः॥ २७॥
अथाह हेमांगदोऽपि विप्रं तं नृपनन्दनः।

அரசகுமாரனே! ஞானிக்கு வினை எப்படி செயலாற்றும்? ஞானம் எனும் நெருப்பு தீண்டிய பின்னும் வினையெனும் பஞ்சு எப்படி அழியாதிருக்கும்? இவ்வாறு கேட்கப்பட்ட அரசகுமாரன் அந்தணனை நோக்கிக் கூறினான்.

ब्रह्मन् शृणु प्रवक्ष्यामि विविधं कर्मज्ञानिनाम्॥ २८॥
सर्वेषां च समानं स्यादपक्वं पक्वमेव च।
हतोदितं चेति तत्र नश्येद्ज्ञानादमध्यमम्॥ २९॥
कर्मणां पाचकः कालो नियत्या नियतः स्थितः।
कालेन पाचितप्रायं पक्वं कर्म समीरितम्॥ ३०॥
अपाचितमपक्वं स्याद् ज्ञानेत्पत्तेरनन्तरम्।
कृतं हतोदितं विद्धि ज्ञानाद्धतसमुद्भवात्॥ ३१॥

அபக்வம், பக்வம், ஹதோதிதம் என வினை மூவகைப்படும். எல்லோருக்கும் இவை பொதுவானவை. பக்வம் என்ற வினையைத் தவிர மற்ற இரண்டும் ஞானத்தால் அழியும். காலம் வினையைப் பழுக்கவைக்கிறது. அது ஈச்வர ஸங்கல்பம் என்கிற நியதிக்கு உட்பட்டது. காலத்தால் பலன் தருவதற்கேற்ப அனேகமாகப் பழுத்துள்ள வினை பக்வமாகும். பழுக்காதது அபக்வமாகும். ஞானம் ஏற்பட்டபின் தோன்றிய வினை ஹதோதிதம். தோன்றும் போதே அது ஞானத்தால் அழிந்துவிடுவதால் அழிந்தே தோன்றியது ஹத – உதிதம்.

तत्र पक्वं तु यत्कर्म तदारब्धमितीर्यते।
आवेगं मुक्तशरवत्तिष्ठत्येव फलप्रदम्॥ ३२॥

பலன்கொடுக்கத் தொடங்கிய பழுத்தவினை பிராரப்தம் எனப்படும். அது முழுவேகத்துடன் வில்லிலிருந்து விடுபட்ட அம்புபோல் தடைபடாமல்

பலனைத் தருவதாக நிலைத்திருக்கும். (ஞானத்தால் அழியாது.)

तन्मूलको जगद्भासो ज्ञानस्य तारतम्यतः ।
स्थितोऽपि भ्रान्तितुल्योऽपि न भ्रान्तिः फलभेदतः ॥ ३३ ॥
जनयेतत्कालफलं मन्दज्ञानवतां स्फुटम् ।
मध्यानामस्फुटं तच्च ज्ञानिनां फलभासनम् ॥ ३४ ॥
उत्तमानां तु तत्कालफलं च स्पष्टभासनम् ।
शशशृङ्गसमं ब्रह्मन्न हि तत्फलमुच्यते ॥ ३५ ॥

அந்த பிராரப்த வினையின் விளைவாக ஞானியின் பக்வநிலைக்கேற்ப உலக அனுபவம் மாறுபடும். அதுவும் புத்திமாறாட்டம் போன்றதாயினும் உலக வியவஹாரத்தில் பாதிப்புகளில் வேறுபாடுகள் ஏற்படுத்துவதால் உண்மையாகக் காணும். மந்தமான ஞானமுள்ளவனிடம் வினைப்பயன் உடன் ஸுகதுக்காதிகளைத் தரும். மத்யம ஞானியிடம் விளக்கமுடியாதபடி சிறிது உலக வியவஹார பாதிப்பு ஏற்படும். ஞானியிடம் பிறரது நோக்கில் நல்ல பாதிப்பு ஏற்படுத்துவதுபோலிருந்தாலும், ஞானியளவில் முயல் கொம்புபோல் ஒரு பாதிப்பையும் தராது.

अज्ञानिनां कर्मफलं पुष्टं पूर्वानुसन्धितः ।
पूर्वापरानुसन्धानात् पोषितं तत्फलं तु तैः ॥ ३६ ॥
ज्ञानिनां फलसन्धानां छिन्नमात्मानुसन्धितः ।
अतो न पुष्टं मन्दानां आरब्धजनितं फलम् ॥ ३७ ॥
मध्यानां ज्ञानिनां तच्च फलं मन्दसुषुप्तिषु ।
मशकादिकृतं दुःखमिव तत्सक्ष्मतां गतम् ॥ ३८ ॥

அஜ்ஞானிக்கோ ஒரு வினை பலன் தருவதற்கு முன்னரே இது இப்படி இவ்வளவு சுகத்தையோ துக்கத்தையோ தருமென்கிற எதிர் பார்வை சிறுகச் சிறுக வந்து திடப்படுவதால் அது உள் வாஸனையாகி நிலைத்த பலனைத் தருகிறது. மந்த ஞானிக்கோ நடு நடுவே ஆத்மானுஸந்தானம் ஏற்பட்டு அந்த பிராரப்த வினைப்பற்றிய எதிர்பார்வை மூலமான வாஸனை தடைபடுவதால் வாஸனை போஷிப்பு அடைவதில்லை. மத்யம ஞானிக்கோ ஸமாதி நீங்கிய நிலைகளில் சிறிது உணரப்படும். அது லேசான தூக்கத்தில் கொசு கடித்ததால் ஏற்படும் வேதனைபோல் உணர்ந்தும் உணராமலும் இருக்கும்.

उत्तमज्ञानिनां तत्तु फलं पूर्णमपि स्थितम् ।

दग्धरज्जुरिव भवेत् स्थितात्मज्ञानवैभवात् ॥ ३९ ॥
यथा नाटक वृत्तेषु नरो वेषान्तरं गतः।
हृष्यन्तिषीदंश्च भूयो नान्तर्विकृतिमाप्नुयात् ॥ ४० ॥

உத்தம ஞானிக்கோ பூர்ணமாக வினைப்பயன் அனுபவிக்கப்பட்ட போதிலும் ஆத்மஞானத்தால் ஏற்பட்ட நித்ய ஸமாதியால் பொசுங்கிய கயிறுபோல் ஒருபலனையும் விளைவிக்காது. வேஷம் போட்டு ஆடுபவன் வேஷத்திற்காகச் சிரித்தாலும் அழுதாலும் தன்னளவில் உள்ளத்தில் சுகதுக்க பாதிப்படையாதது போலாகும்.

एवमेष स्थितज्ञानी सुपूर्णफलसंगतः।
न फलैः स्पृश्यते तस्मात्तत्फलं शशशङ्गवत् ॥ ४१ ॥
अज्ञानिभिस्तु शुद्धात्मा नोपलक्षित एव हि।
अतो देहात्मभूतास्ते दृश्यसत्यविमर्शनाः ॥ ४२ ॥

நிலைத்த ஞானி உலக நோக்கில் லாபநஷ்டங்களால் சிரிப்பவனாகவும் அழுபவனாகவும் காணப்பட்டாலும் உள்வேதனையால் பாதிப்படைவதில்லை. வினைப்பயன் முயல் கொம்புபோல் சொல்லளவில் இருப்பதுபோல் தோன்றினாலும் உண்மையில் இல்லை. அஞ்ஞானிக்கோ சுத்தமான ஆத்மஸ்வரூபம் உணரப்படாததொன்று. உடலையே ஆத்மாவாகக் கொண்டவர்களானதால் புலப்படுவதனைத்தையும் ஸத்யமாகக் கொள்வார்கள்.

मन्दज्ञानिभिरात्मा तु विदितः शुद्धचिन्मयः।
जगच्चासत्यतो दृष्टं तथाऽप्यभ्यासमान्द्यतः ॥ ४३ ॥
प्राग्वासनाहृतज्ञानास्ते देहात्मप्रभासनम्।
जगतः सत्यताभासं मध्ये मध्ये समाययुः ॥ ४४ ॥
भूयो ज्ञानवासनया विधून्वत्त्यसतीं दृशम्।

மந்தஞானி ஆத்மாவை சுத்த சித்ஸ்வரூபமாக உணர்ந்திருக்கிறான். உலகத்தோற்றம் மெய்யல்ல என்றும் உணர்ந்திருக்கிறான். இருந்தாலும் பயிற்சிக் குறைவால் நடு நடுவே முன் வாஸனைகள் அறிவை மறைக்க உடலையே ஆத்மாவாகவும் உலகத்தை மெய்யாகவும் உணர்வான். மறுபடி ஞானம் மேலிட இந்த பொய்யான நோக்கை உதறிவிடுவான்.

वासनैवं सत्यमिथ्याज्ञानयोश्च परस्परम्॥ ४५॥
मिलिता मन्दज्ञानिनामतो मध्ये फलं स्फुटम्।
समेऽपि वासने चैते न हि तुल्ये महीसुर॥ ४६॥

உலகம் ஸத்யமென்றும் ஸத்யமல்லவென்றும் ஏற்படுகின்ற வாஸனை மாறி மாறி வருவதால் மந்தஞானிக்கு நடு நடுவே உலகப் பாதிப்பு நன்கு புலப்படும். ஆனாலும் இந்த இரு வாஸனைகளும் ஸமபலமுள்ளவையல்ல.

सत्यज्ञान वासनया बाध्यते वासनाऽपरा।
न च मिथ्यावासनया बाध्यते सत्यवासना॥ ४७॥
मिथ्यावासनयाविष्टो विस्मृतः केवलां पराम्।
ततो मिथ्यावासनां तु विनिश्चित्य भ्रमात्मिकाम्॥ ४८॥
विधूय वासनां सत्यामुपैति ब्राह्मणोत्तम।
ततो न बाधिता सत्यवासना भवति क्वचित्॥ ४९॥

ஆத்மஞான வாஸனை ஸத்யமானதால் வலிவுமிக்கது. அது உலகம் ஸத்யம் என்ற உண்மையல்லாத வாஸனையைப் பாதிக்கும். உண்மையல்லாத வாஸனை ஸத்ய வாஸனையைப் பாதிக்காது. பல பிறவிகளில் தொடர்ந்துவரும் பொய்யான உலக வாஸனை ஆத்மஞானத்தை மூடுவதால் தன் நிலை மறந்துவிடக்கூடும். உலகம் மெய்யென்ற வாஸனையைப் பிரமை என நிச்சயத்தால் உதறி ஸத்யமான ஆத்மவாஸனையை அடைகிறான். அதனால் ஆத்மவாஸனை பாதிப்படைவதில்லை.

मध्यमस्य विस्मृतिर्नो न मिथ्याज्ञानमेव च।
अविस्मृतस्येच्छयैव मिथ्याज्ञानं क्वचिद्भवेत्॥ ५०॥
सिद्धस्यैषा स्थितिः प्रोक्ता साधकस्योच्यते शृणु।

மத்தியம நிலையிலுள்ள ஞானிக்கு ஸத்யமான பரம்பொருள் பற்றிய வாஸனை மறக்காது. அதுபற்றி அவன் தவறாக புரிந்து கொள்வதுமில்லை. மறக்காத அதைப்பற்றி அவனே விரும்பினால் மட்டும் உலகியல்புக்கேற்ற போலியான தவறான ஞானம் ஏற்படக்கூடும். இது ஸித்தனான ஞானியின் நிலை. இந்த நிலையை அடைய முயன்று கொண்டிருக்கிற ஸாதகனின் நிலைபற்றிக் கூறுகிறேன். கேட்பீராக.

यथा यथा तत्परः स्यात्तथाऽविस्मृतिरुच्छ्रिता॥ ५१॥
पूर्णस्य विस्मृतिर्नास्ति मिथ्याज्ञानं प्रयत्नतः।

उत्तमस्य पुनर्ब्रह्मन् समाधिव्यवहारयोः ।। ५२ ।।
न भेदो लेशतोऽप्यस्ति यतोऽविस्मरणं सदा ।

எந்த அளவில் ஈடுபாடு அதிகமாகிறதோ அந்த அளவிற்கு இடையிடையே ஆத்மஸ்வரூபம் பற்றி மறதியின்மை – ஆழ்ந்தஞாபகம் தீவிரமாகும். ஸமாதி அப்பியாசத்தில் தீவிரமாக முயல்பவனுக்கு மறதியே ஏற்படாது. உலக இயல்பால் உலக உணர்வு செயற்கையாகத்தான் நேரும். உத்தம நிலை பெற்றவனுக்கு ஸமாதி நிலைக்கு உலக வியவஹாரத்திற்கும் வேற்றுமை தெரியாது. ஏனெனில் உண்மை நிலை அவனுக்கு எப்போதும் மறப்பதில்லை.

यः समाधिपरो मध्यस्तस्य याऽविस्मृतिः स्थिता ।। ५३ ।।
सेषन्म्लाना भवेन्मिथ्याज्ञानभूमिषु भूसुर ।
यस्तूत्तमोऽपि स्वाच्छन्द्यात् प्रारब्धवशतोऽपि वा ।। ५४ ।।
समाध्यतत्परो भूयात्तस्याम्लानेव चास्मृतिः ।

மத்திய நிலையிலுள்ள ஞானிக்கு ஏற்படும் ஆத்மஸ்வரூப நினைவு உலக வியவஹாரத்தின்போது சிறிதுமங்கும். உத்தம ஞானிக்கோ அந்த் மறதி–யின்மை அவர் விரும்புவதாலோ, பிராரப்த வினைகாரணமாகவோ, உலக வியவஹாரத்தில் ஈடுபட்டு ஸமாதியில் ஈடுபாடற்றிருந்தாலும் ஆத்மஸ்வரூப நினைவு மங்காது எப்போதும் ஆத்ம அனுஸந்தானம் தெளிவாகத் தொடர்ந்து கொண்டுதானிருக்கும்.

वस्तुतः शृणु भूदेव मध्यमोत्तमज्ञानिनाम् ।। ५५ ।।
कर्म नैवास्ति यत्किञ्चिद्यतस्ते पूर्णतां गताः ।
संविदात्मातिरिक्तं यन्न ते पश्यन्ति किञ्चन ।। ५६ ।।

உண்மையில் மத்தியம ஞானிக்கும் உத்தம ஞானிக்கும் ஒருவித வினைத்தொடர்பும் இல்லை. அவர்கள் பூர்ண நிலை அடைந்தவர்கள். சித்ஸ்வரூபமான ஆத்மாவைத் தவிர வேறொன்றையும் அவர்கள் காண்பதில்லை.

कर्म शेषं कथं शिष्येद्यतः सर्वं चिदग्निना ।
भस्मीकृतमतस्तेषां न किञ्चित्परिशिष्यते ।। ५७ ।।
ऐन्द्रजालिककर्मेव त्वितरैरेव दृश्यते ।

ஞானம் எனும் தீயால் மிகுந்துள்ள வினைகள் அனைத்தும் எரிந்து விட்டதால் வினை ஒன்றும் மீதமாக இல்லை; இந்திர ஜாலக்காரனின் பணிகள் போல் மற்றவர் கண்களுக்கு மட்டும் புலப்படுமே தவிர ஞானியால் உணரப் பெறுவதில்லை.

शृणु ब्रह्मन् रहस्यं ते प्रवक्ष्यामि समासतः ॥ ५८ ॥
शिवस्य यादृशी सैव ज्ञानिनां दृष्टिरूच्यते ।
नास्ति भेदो लेशतोऽपि सत्यमेतन्न सम्शयः ॥ ५९ ॥
तस्मान्न किञ्चित्कर्मापि ज्ञानिनामनुवर्तते ।

ரகசியத்தைச் சுருக்கமாகச் சொல்கிறேன். கேட்பீராக! சிவனுக்கு எப்படி ஆத்மா புலப்படுமோ அப்படியே ஞானிக்கும் புலப்படும். வேறுபாடு இருக்காது, இது உண்மை. ஞானியிடம் வினை தொடராது.

इति श्रुत्वा स वसुमान् हेमाङ्गदनिरूपितम् ॥ ६० ॥
सर्वसन्देहनिर्मुक्तो विज्ञानविशदाशयः ।
पूजितो राजपुत्राद्यैः स्वं स्थानं प्रत्यपद्यत ॥ ६१ ॥
प्राप्तौ स्वनगरं राजपुत्रावपि ततः परम् ।

இவ்வாறு ஹேமாங்கதன் விளக்கிச் சொன்னதைக் கேட்ட வஸுமான் எல்லா ஐயங்களும் நீங்கியவராக பேரறிவு மனத்தில் துலங்குபவராக அரசகுமாரர்களால் வணங்கப்பெற்றவராகத் தன் இடம் போய்ச் சேர்ந்தார். அரச குமாரர்களும் தன்னிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

एवं श्रुत्वा पुना रामः पप्रच्छात्रिसुतं मुनिम् ॥ ६२ ॥
श्रुतमेतद्धि विज्ञानं गुरो त्वन्मुखानर्गतम् ।
विनष्टो मम सन्देहो विदितं तन्महत्पदम् ॥ ६३ ॥
सर्वानुस्यूतसम्वित्तिमात्रात्मा भाति सर्वतः ।
तथापि भवता प्रोक्तमादितः सर्वमेव तु ॥ ६४ ॥
सम्क्षेपेण पुनः ब्रहि विज्ञानं सारवत्तरम् ।
यावद्धारयितव्यं वै गुरो सर्वात्मना त्वया ॥ ६५ ॥

இவ்வாறு கேட்டபின் பரசுரமார் தத்தாத்ரேய ருஷியைக் கேட்டார். "குருவே உமது பேச்சிலிருந்து வெளிப்பட்ட அறிவைப் புரிந்துகொண்டேன். என் ஐயம்

நீங்கியது. அந்த பரம்பொருளை உணர்ந்தேன். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் சித்ஸ்வரூபமான ஆத்மா எங்கும் விளங்குகிறது. இருந்தாலும் அந்த மிகுந்த ஸாரமான பேரறிவைப்பற்றிய முன் கூறியதையே மனத்தில் பதித்துக்கொள்ளுமளவில் சுருக்கமாகக் கூறுவீர்களாக.

इत्यापृष्टः स रामेण पुनः प्राहात्रिनन्दनः ।
शृणु राम प्रवक्ष्यामि सर्वसारतमं पुनः ।। ६६ ।।
या चितिः परमेशानी पूर्णाहन्तामायी परा ।
सा स्वातन्त्र्याभिधा मायाशक्तिमाहात्म्यतः सदा ।। ६७ ।।

இப்படி ராமரால் வினவப்பட்ட தத்தாத்ரேயர் மறுபடி கூறுகிறார் " ராமரே! எல்லாவற்றிலும் ஸாரமானதைக் கூறுகிறேன். சித் என்பது பேராண்மை படைத்தது. பூர்ண அஹங்கார ஸ்வரூபம், தன்னிடமுள்ள ஸ்வதந்திரசக்தி என்கிற மாயா சக்தியின் பெருமையால் எப்போதும் மேம்பட்டது.

*(சித் என்பது ஜடத்திலிருந்து வேறுபட்டது. சித் என்பது தன் நிலை உணர்வே. அந்த உணர்வு நான் இது என்று இருவிதமாக ஏற்படலாம். இது என்ற உணர்வில் பரதந்த்ரநிலை உண்டு. நான் என்ற உணர்வில் ஸ்வதந்திர நிலை உண்டு. நான் என்ற உணர்வு தேகம் முதலியவற்றில் நிறைவுறுவ- தில்லை. அதனால் நான் என்ற – தேகம் முதலியவற்றிலும் அப்பாற்பட்ட சுயநிலையாகும். இதுவே பூர்ண அஹங்காரம். தேகம் முதலியவற்றால் குறை இதில் ஏற்படவில்லை.)*

जगदाभासयेन्नूनं दुर्घटैक विधायिनः ।
प्रतिबिम्बवदादर्शे तत्प्रकारं शृणु कमात् ।। ६८ ।।

பொருந்தாததைப் பொருந்தவைக்கும் தன் தனிப்பெருமையால் கண்ணாடியில் பிரதிபிம்பத்தைப்போல் தன்னிடத்தில் உலகை விளக்கிக் காட்டும். அதன் முறையை விளக்குவேன்.

या सा परा चितिः पूर्णा पूर्णाहं भावबृंहिता ।
स्वातन्त्र्यवशतः स्वात्मरूपं द्वेधाऽवभासयत् ।। ६९ ।।
तत्रैकांशोऽप्यहंभावोऽपूर्ण आभासितो यदा ।
तदा द्वितीयभागस्तदहंभावविनिर्गतः ।। ७० ।।

बाह्यमव्यक्तमभवत् तद्दृष्ट्यैव भृगूद्वह।
अपूर्णाहंभावयुत एष प्रोक्तः सदाशिवः ॥ ७१ ॥

அந்த பரசித்தானது நிறைவுற்றது, நிறைவுற்ற தன்நிலை உணர்வாகிய அஹங்காரத்தால் பூரித்து நிற்பது. அதன் இயற்கையான ஸ்வதந்திரத் தன்மை காரணமாக தன்னை இரு வகைகளில் காட்டுகிறது. அதில் ஒன்றில் நிறைவுறாத குறையுள்ள அஹங்காரம் – தன் நிலை உணர்வு வெளிப்பட்டது. மற்றொன்றில் அந்த தன்னிலை உணர்விலிருந்தும் வெளிப்பட்டதான புறத்தோற்றம் – இன்னதென விளக்கமாகப் புலப்படாத நிலையில் அவ்யக்தமாக வெளிப்பட்டது. அபூர்ணமான – குறையுள்ள அஹங்காரமுள்ளதே ஸதாசிவன் ஆவார்.

स तं अव्यक्तभागं तु पश्यन् भिन्नमपि स्वतः।
अहमेतदित्यभेदादनुसन्धिपरः सदा ॥ ७२ ॥
स एव भूयः स्वातन्त्र्यात्सिसृक्षुर्विविधं जगत्।
अव्यक्तमात्मनो देहमेतदेवाहमास्थितः ॥ ७३ ॥

அந்த ஸதாசிவன் தன்னைக்காட்டிலும் வேறுபட்டதாகத் தோன்றுகிற அவ்யக்தத்தைக் கண்டு நான்தான் இது என்று எப்போதும் எண்ணத் தொடங்கினார். பின் ஸதாசிவர் தனது ஸ்வதந்திர சக்தியைக்கொண்டு பல வடிவங்கள் அமைந்த உலகைப் படைக்க விரும்பி அவ்யகக்தத்தை தனது உடலாக்கி அதில் தான் 'நான்' என்ற உணர்வை அடைந்தார்.

इत्येवमनुसन्धानपर ईश्वर आबभौ।
अव्यक्तमभिमानेनाविष्ट ईश्वर एव तु ॥ ७४ ॥
त्रिधा समभवद्रुद्रहरिद्रहिणरूपतः।

இப்படி உணரத் தொடங்கிய ஈச்வரன் அவ்யக்கத்தில் தனது என்ற அபிமானத்துடன் நுழைந்து ருத்திரன் ஹரி பிரும்மா என்று மூன்றாக ஆனார்.

द्रष्टृदृश्य महाराशि समुदायावभासकाः ॥ ७५ ॥
विधयो विविधा आसन् तथा तद्रूपसंस्थिताः।

பார்ப்பவன் பார்க்கப்படும் பொருள் என்றவற்றின் தொகையமைப்பாகிய பிரும்மாண்டத்தை வெளிப்படுத்துகின்ற பல பிரும்மாக்கள் அந்த பிரும்மாவின் வடிவிலேயே தோன்றினார்கள்.

बहवो हरयोऽप्यासन् तत्संहारपरायणाः ॥ ७६ ॥
अनेकशोऽभवन् रुद्राः एवमेष जगद्विधिः ।

அப்படியே பல நாராயணர்களும் ஒடுக்குவதில் ஈடுபட்ட ருத்திரர்களும் தோன்றினார்கள். இப்படி உலகப் படைப்பு தொடங்கிற்று.

एवंविधं जगत्तत्वं दर्पणप्रतिबिम्बवत् ॥ ७७ ॥
भासते केवलं राम न हि जातं तु किञ्चन ।
परा चितिः प्रपूर्णाहंभावरूपैव सर्वदा ॥ ७८ ॥
स्थिताप्यनेका संपूर्णाहंभावपरिबृंहिता ।

இப்படிப் பலவிதமாகக் காணப்பெறுகிற ஜகத்தெனும் தத்துவம் கண்ணாடியில் பிரதிபிம்பம்போல் தோற்ற அளவில் மட்டும் தனித்து உள்ளது. புதிதாக எதுவும் உற்பத்தியாகவில்லை. பரசித் எப்போதும் பூர்ண அஹம்பாவ ரூபமே. ஸதாசிவன் முதல் புழு பூச்சி வரை பல்வேறாக தனித்தனியான அஹம்பாவமுடன் இருந்தாலும் அவளே ஆதலால் பூர்ணத்தன்மையில் வேறுபடு இல்லை.

यथा त्वं राम सर्वस्मिन्देहेऽहंभावबृंहितः ॥ ७९ ॥
पृथग्नेत्राद्यहंभावैरपि तत्तत्क्रियापरैः ।
एवमेव परा संवित् पूर्णाहन्तासमाश्रया ॥ ८० ॥
सदाशिवादिस्तंबान्ता पूर्णाहन्ताश्रयापि वै ।

நீர் எவ்வாறு உடல் முழுவதிலும் பூர்ணமான நான் என்ற உணர்வுடன் இருந்தும் தனித்தனியே செயலாற்றிவரும் கண் முதலியவற்றின் தனித்தனி உணர்வுகளுடன் கூடியிருக்கிறீரோ அதேபோல் பரசித்தும் ஸதாசிவர் தொடங்கி புழுவரைத் தனித் தனியாக உள்ள அபூர்ணமான 'தான்' உணர்வு கொண்டபோதிலும் பூர்ண அஹம் உணர்வு கொண்டதே.

वस्तुतः सैव परमा चितिरेवं हि भासिनी ॥ ८१ ॥
देहाहंभावरूपस्त्वं स्वतो रूपरसादिकम् ।
ग्रहीतुमसमर्थोऽपि चाक्षतादात्म्यमेत्य तु ॥ ८२ ॥
सवं गृह्णासि सततमेवं देवः सदाशिवः ।
स्वतः सर्वाभेदमयः ब्रह्मादिस्तम्बराशिषु ॥ ८३ ॥

अन्तस्तादात्म्यामापन्नो जानाति च करोति च।

உண்மையில் அந்த பரசித்தேதான் இத்தனை வடிவங்களில் தோன்றுவது. தேகத்தில் தான் என்ற உணர்வு கொண்ட நீர் எப்படி தானே உருவத்தையோ சுவையையோ மற்றதையோ காண இயலராவிட்டாலும் பொறிகளுடன் இணங்கி ஒன்றாகி எல்லாவற்றையும் தீண்டி அனுபவிக்கிறீரோ, அப்படி தேவனான ஸதாசிவரும் எல்லாவற்றுடன் வேறுபாடில்லாதவராயினும், அவரால் பிரும்மா முதல் புழு வரையிலுள்ள ஜீவராசிகளில் உள்ளூர ஒன்றாகி இனைந்து தனித்தனியே அறியவும் செயலாற்றவும் முடிகிறது.

यथा ते निर्विकल्पं तु रूपं सर्वाश्रयं हि सत्॥ ८४॥
न किञ्चिदपि ज़ानाति करोति च भृगूद्वह।
एवमेव परा संवित् सर्वलोकसमाश्रया॥ ८५॥
भेदलेशमपि क्वापि न जानाति करोति च।

(கண்ணாடி போன்று) வேறுபாடற்ற உன் தூய சித் வடிவமானது உடல் பொறி முதலியவற்றின் ஆதாரமாகியிருந்தும் உடல் முதலியவற்றால் நடக்கின்றதெத்தனையும் உணர்வதும் செய்வதுமில்லை. அதுபோல எல்லா உலகிற்கும் ஆதாரமான பரசித்தும் வேற்றுமையை எதிலும் உணர்வதுமில்லை. ஒன்றையும் செய்வதுமில்லை.

एतावज्जागतं सर्वं तस्यामेवावभासते॥ ८६॥
ततस्वातन्त्र्यात्प्रभूतं च दर्पणप्रतिबिम्बवत्।

இப்படி உலகப் பொருளனைத்தும் அந்த சித்தில்தான் துலங்குகின்றன. கண்ணாடியின் பெருமையால் பிரதிபிம்பம் இருப்பதும் தெரிவதும் போல், சித்தின் ஸ்வதந்திர சக்தியால்தான் பலவாறான தோற்றமும் விளக்கமும்.

जगतो भासनं सर्वं तस्या एवावभासनम्॥ ८७॥
यथाऽऽदर्शाभास एव प्रतिबिम्बावभासनम्।
अत्र त्वहमन्ये च द्रष्टारो दृङ्ग्याः खलु॥ ८८॥
दृश्यासंमेलने शुद्धचितिरेव न चेतरत्।
घटादिदर्पणो यद्वत् घटादीनामसङ्गमे॥ ८९॥
सुद्धदर्पणमात्रः स्याद्विभेदः प्रतिबिम्बतः।

கண்ணாடியின் தோற்றமே பிரதிபிம்பத் தோற்றமாக ஆவது போல் சித்தின் தோற்றமே உலகத் தோற்றமாகிறது. உலகில் நீரும் நானும் மற்றவரும் உலகைக் காண்பவர்கள். அவர்களும் பரசித்தே. பார்க்கப்பெரும் பொருள் தொடர்பில்லாதபோது சுத்த சித்தே மீறும். வேறொன்றுமிருக்காது, குடம் முதலியவற்றைக் காட்டுகின்ற கண்ணாடி குடம் முதலியவற்றின் தொடர்பில்லாதபோது வெறும் கண்ணாடியாகவே இருக்கும். வேறுபாடு அதில் புலப்படுகின்ற பிரதிபிம்பத்தையொட்டியே.

एवं विकल्पसंभूतदृश्याभास प्रमार्जने।। ६०।।
शेषिता परमा संविदद्वितीयस्वरूपिणी।
महानन्दघना चैषा दुःखलेशविवर्जनात्।। ६१।।
सर्वानन्दघानाकारा यतः सर्वैरभीप्सिता।

இவ்வாறு வேற்றுமையுணர்வால் ஏற்பட்ட போலித் தோற்றங்களை அழித்துப்பின் மீதமுள்ள பரசித் வேற்றுமையற்றது. பேரானந்தம் செறிந்தது. துக்கம் சிறிதும் கலக்காததால் ஆனந்தச் செறிவே வடிவமானது. எல்லோராலும் விரும்பப்படுகிறது.

सुखमात्मस्वरूपं स्यात्सर्वैर्यस्मादभीप्सितम्।। ६२।।
यदर्थो देहादिभावो यन्न कस्यापि नेप्सितम्।
यस्यैव लेशी विषयानन्द इत्यभिधीयते।। ६३।।
स एव भारहानादौ सुषुप्तौ चावभासते।
चिदेव स्पृहणीयत्वादानन्द इति चोच्यते।। ६४।।

எல்லோராலும் விரும்பப்பெறுகிற ஸுகம்தான் ஆத்மாவாக உள்ளது. எவராலும் விரும்பப்படாததென அதைக் கூறமுடியாது. அதனை அடைவ-தற்கே உடல் முதலியவை பெறப்படுகிறது. அதன் ஒரு சிறு அம்சமே சிற்றின்பமாகும். தூக்கிய சுமையை இறக்கியதும் பெறும் ஆனந்தம் அதுவே. நல்ல தூக்கத்தில் பெறும் சுகம் அதுவே. பரசித்துத்தான் விரும்பத்தக்கது. அதுவே ஆனந்தம்.

मूढा न हि विजानन्ति स्वात्मभूतं महासुखम्।
विभिन्नमभिजानन्ति व्यञ्जकानां विभेदतः।। ६५।।
यथा हि दर्पणे भावा भासमाना निमित्ततः।

यावद्दर्पणविज्ञानं भिन्ना एव विभान्ति वै ॥ ९६ ॥
विदिते प्रतिबिम्बत्वे भासमानं च पूर्ववत् ।
न दर्पणाद्भिन्नमस्ति त्वादर्शः शुद्ध एव हि ॥ ९७ ॥
एवं विदिततत्वस्य जगदेतावदीदृशम् ।
भासमानमपि स्वात्ममात्रमेव न चेतरत् ॥ ९८ ॥

ஆத்மாவான பெரும் சுகத்தை அறிவிலிகள் அறியார். அதனை வெளிப்படுத்துகிற பொருளையொட்டி வேறுபாடுள்ளதாகவே அவர்கள் உணர்கிறார்கள். கண்ணாடி என்று உணரும் வரை கண்ணாடியில் தெரியும் பொருள்கள் தனித் தனியே தெரிவது போலும், அவை பிரதிபிம்பமே என உணர்ந்ததும் முன்போல் பல பொருள்கள் தெரிந்தாலும் அவை கண்ணாடியே – கண்ணாடியைத் தவிர வேறல்ல என்ற உணர்வு ஏற்படுவது போலும், உண்மை அறிந்தவனுக்கு உலகம் இவ்வகையில் விரிந்ததாகத் தோன்றி–னாலும் அவை ஆத்ம ஸ்வரூபமே : வேறல்ல என்று தோன்றும்.

घटादिकं मृदि यथा हेम्नि यद्वद्विभूषणम् ।
प्रतिमाश्च यथा शैले जगदेवं चिदात्मनि ॥ ९९ ॥

மண்ணில் குடம் முதலியன போலும் தங்கத்தில் ஆபாரணங்கள் போலும் கல்லில் பல சிற்பங்கள் போலும் சித் எனும் ஆத்மாவில் உலகம் காண்கிறது.

जगन्नास्त्येवेति दृष्टिरपूर्णैव भृगूद्वह ।
नास्तीति विपरीतो हि निश्चयो नैव सिध्यति ॥ १०० ॥

உலகமே இல்லை என்ற நோக்கும் பூர்ணமானதல்ல. உலகம் இல்லை என்று சூன்ய வாதமும் தேறாது.

*(கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பம் போல் என்றால் உண்மையில் இல்லாததென்று பொருள் இல்லை. குடம் முதலியவை குடம் முதலியவையாகத் தோன்றுவதுதான் ஏமாற்றம் தருகிறது. குடம் என்பது இல்லாத பொருளல்ல. அது ஸத்தாக உள்ளது. குடம் எனும் அளவில்தான் அது உண்மையானதல்ல. மண் என்ற அளவில் அது உண்மையானதே. அதுபோல் உலகமும் அதன் விரிவான வேற்றுமைகளும்தான் உண்மையானதல்ல. ஆனால் சித் வடிவில் அது உண்மையானதே இந்தக் கொள்கை, இல்லாததிலிருந்து இந்த உலகம் தோன்றியது என்ற அஸத்கியாதியை மறுக்கிறது.)*

साधकात्मजगद्दृष्टेः भूयः सम्भवतः स्पुटम्।
नास्तीति शापमात्रेण कथं स्याज्जगतो लयः।। १०१।।
आदर्शनगरं सर्वमस्त्यादर्शस्वभावतः।
एवं जगच्चिदात्मैकरूपं सत्यमुदीरितम्।। १०२।।

*சித் எனும் ஆத்மாவின் வடிவில் உலகம் மெய்யாகக் காணப்படுவதால், உலகம் மெய்யல்ல சூனியமே என்று சாபமிடுவதுபோல் சொல்வதால் உலகம் மறையுமா? கண்ணாடியில் தோன்றும் நகரம் கண்ணாடியின் பெருமையில் இருக்கவே செய்யும், அதுபோல் சித் வடிவில் காணும் உலகம் மெய்யே.*

पूर्णाविज्ञानमेतत्स्यात्सङ्कोचपरिवर्जनात्।
दृगेव दृश्यतां प्राप्तं स्वमाहात्मयप्रकर्षतः।। १०३।।
यथाऽऽदर्शो नगरतामेष शास्त्रार्थसंग्रहः।

*உணரப்பெறும் பொருளனைத்தும் உணர்வின் வடிவமே என்றவாறு அறிவைக் குறுக்குகின்ற இயல்பைத் தவிர்ப்பதால் இது பூர்ணமான அறிவாகிறது. பார்ப்பது எதுவோ அதுவே பார்க்கப்படும் பொருளாக உணரப்படுகிறது. கண்ணாடியே நகரமாகத் தோன்றுவது போல். இது இந்த சாஸ்திரப் பொருட்சுருக்கம்.*

न बन्धोऽस्ति न मोक्षोऽस्ति साधकः साधनं च न।। १०४।।
अखण्डाद्वयचिच्छक्तिः त्रिपुरैवावभासिनी।
सैवाविद्या च विद्या च बन्धो मोक्षश्च साधनम्।। १०५।।
एतावदेव विज्ञेयं नान्यद्भार्गव विद्यते।

*இந்த உணர்வேற்பட்டதும் கட்டுமில்லை. கட்டை விலக்குவதுமில்லை. இதனை சாதிப்பவனோ சாதிக்க உதவும் சாதனமோ இல்லை. துண்டாட முடியா இரண்டற்ற சித் சக்தியான திரிபுரஸுந்தரியே உலகை விளக்குகிறாள். அவளே அவித்தையும் வித்தையும். அவளே பந்தமும் மோக்ஷமும் மோக்ஷஸாதனமுமாவாள். அறியவேண்டியது இவ்வளவே. வேறில்லை.*

एतत्तेऽभिहितं राम विज्ञानाक्रममादितः।। १०६।।
एतत्सुविज्ञाय जनो भूयः क्वापि न शोचति।

பரசுராமரே, ஆரம்பத்திலிருந்து ஆத்மஞானம் பற்றிய முறைவிளக்கப் பெற்றுள்ளது. இதனை உணர்ந்தவன் என்றும் கலக்கமடைய மாட்டான்.

नारदैष ज्ञानखण्डः सूपपत्युपलब्धिकः ॥ १०७ ॥
श्रुतो न नाशयेत्कस्य मोहमज्ञानसम्भवम् ।
श्रुत्वाऽप्येतद्यस्य मोहो न शान्तिं प्राप्नुयात्कवचित् ॥ १०८ ॥

(ஹாரிதாயனர் முடிவுரைக்கிறார்)

நாரதரே ! ஞானகண்டம் காரண காரிய விளக்கத்துடன் தத்துவ விளக்கமாக அமைந்துள்ளது. இதனைக் கேட்டால் அறியாமையால் ஏற்பட்ட கலக்கம் தீரும். இதனைக் கேட்டும் தெளிவு பெற முடியாவிடில் வேறெங்கும் அமைதி பெற முடியாது.

स शैलपुरुषो लोके केन ज्ञानं पुनर्भवेत् ।
सकृदेव श्रुतं ह्येतत् विज्ञानं जनयेद्दृढम् ॥ १०९ ॥
द्विधा त्रिधा चा मन्दस्य ज्ञानं न जनयेत्कथम् ।

இதனைக் கேட்டும் தெளியாதவன் கல்லாலானவன். ஒரு தடவை கேட்டால் தெளிந்த அறிவு உண்டாகும். மந்தனாயின் 2-3 தடவைகளில் தெளிவைத் தரும்.

एतत्पापौघशमनं श्रुतं विज्ञानदं मतम् ॥ ११० ॥
लिखितं दृष्टिदोषघ्नं पूजितं चित्तशोधनम् ॥
मूढतानाशनं चैतत् सर्वदा परिशीलितम् ॥ १११ ॥
सर्वात्मभूतं यद्रूपं विचार्यावगतं स्फुटम् ।
मुक्तिः स्यादन्यथा बन्धः सा भवेत्त्रिपुरैव ह्रीम् ॥ ११२ ॥

இந்த திரிபுரா ரஹஸ்யத்தைக் கேட்பதால் பாபச்சுமை நீங்கும். அறிவு வளரும். எழுதுவதால் பார்வை தோஷம் விலகும். வழிபடுவதால் மனம் தூயதாகும். எப்போதும் இதனைப் படித்து வர அறியாமை விலகும். மிகுந்த ஆராய்ச்சியால் அறிந்தது - எல்லாவற்றின் ஆத்மாவாக இருப்பது சித்தே என்பது. அதனை அறிவதால் விடுதலை. அறியாவிடில் கட்டு. அந்த பரசித்தே திரிபுரா தேவி. அவள் ஹ்ரீம் என்ற சக்திப் பிரணவத்தின் உட்பொருள்.

इति श्रीमदितिहासोत्तमे त्रिपुरारहस्ये
द्वादशसाहस्त्रयां संहितायां ज्ञानखण्डे
सारकथनं नाम द्वाविंशोऽध्यायः ।

*இவ்வாறு இதிஹாஸங்களுள் சிறந்ததும் 12 ஆயிரம் சுலோகங்களின் தொகுப்புமான திரிபுரா ரஹஸ்யத்தில் ஞான கண்டத்தில் 22_வது அத்யாயம். சாரவிளக்கம் என்ற திரிபுரா ரகஸ்யம் முற்றிற்று*

## ।। समर्पणम् ।।

अहो भाग्यमहं रामोऽहमात्रे यश्चितिः परा ।
भावनैषा व्यधात्तत्त्वविवृतिं स्फुरणाच्चितः ।।
वन्दे तामद्वयानन्दोदधितीरचरं च माम् ।
व्यधात्करुणया देवीं सच्चिदानन्दरूपिणीम् ।।

உரை எழுதியவரின் ஸமர்ப்பணம். " என்னே என் பாக்கியம். எப்படியோ இருந்த நான் பரசுராமரானேன். தத்தாத்ரேயரிடம் விளக்கம் கேட்டேன். தத்தாத்ரேயரானேன். பரசுராமருக்கு விளக்கம் தந்தேன். பரசித் ஸ்வரூபிணியான தேவியானேன். பேரறிவாக எல்லாவற்றையும் விளக்கினேன். அவள் உள்ளே அறிவுத் துடிப்பாக இதனைத்தையும் செய்தாள்" என்ற பாவனையே இந்த நூலின் தத்துவ விளக்கத்தை என் மூலம் நடத்திக் கொடுத்தது. தன் கருணையால் இரண்டற்ற ஆத்மானந்தமெனும் கடலின் கரையில் என்னை உலாவவிட்ட ஸத்–சித்– ஆனந்த வடிவினளான தேவியை வணங்குகிறேன்.

முற்றிற்று

---

